உ

ஓம்.

வேதபுருஷாய நம:

# The Rig-Veda-Samhita.

(in Tamil.)

## Second Ashtaka.

BY

**Maharshi Sivadhyanananda, Anandasrama,**

COONOOR, NILGIRIS.

'*As long as man continues to take an interest in the history of his race, and as long as we collect in libraries and museums the relics of former ages, the first place in that long row of books which contains the records of the Aryan branch of mankind, will belong for ever to the Rig-Veda.*'—MAX MULLER.

# இருக்கு வேத சங்கிதை.

இரண்டாவது அஷ்டகம்.

(தமிழ்ச்செய்யுள்)

மூலமும்

நவநீதம் என்னும் உரையும்

இது

குன்னூர் ஆநந்தாச்ரமத்து சிவத்தியாநாநந்த மஹரிஷி

மொழிபெயர்த் தியற்றியது.




PRINTED AT THE

FRASER PRESS, COONOOR.



---

புத்தகம் வேண்டுவோர், மானேஜர், வேதபிரோ,

ஆநந்தாச்ரமம் குன்னூர், நீலகிரி, என்று எழுதிக் கேட்கவும்.

# NOTICE.

---

The Rig-Veda-Samhita, Ashtaka I in Tamil verse with an elaborate and useful commentary can be had in calico marble bindin for Rs. 10. For Subscribers Rs. 8. postage Extra. As only 50 copie are available, those that indent for the book are requested to orde for it early.

Please apply to :—

THE MANAGER,

**The Vedic Bureau, Anandasrama,**

Coonoor, Nilgiris.

ரிக்வேதம் (தமிழ்ச்செய்யுள்) மூலமும், 'நவநீதம்' என் உரையும், மாத ஸஞ்சிகையாக வெளிவருவது. வருஷ சந்தா ரூபாய் 6. பெரியார்களுடைய முகவுரை யபிப்பிராயங்களுடனே கூடிய முதலஷ்டகம தயாராய் விட்டது.

காலிகோ மார்பில் கட்டடம் விலை ரூபாய் ... 10—0—0

வருஷ சந்தாதாரர்களுக்கு விலை ரூபாய் ... 8—0—0

50 காப்பிகளே யிருப்பதால் உடனே யார்டர் செய்யவும்.

மேல்விலாசம்:—மானேஜர்,

வேதபீரோ, ஆனந்தாச்ரமம்,

குன்னூர், நீலகிரி.

# சௌநகர்காலமும் காத்தியாயனர்காலமும்.

## Ages of Sounaka and Katyayana.

---

சௌநகரது காலத்தைப்பற்றிச் சொல்லுமுன்பு ஸம்ஸ்கிருத பாஷா காலங்களை எத்தனை பிரிவுகளாகப் பிரித்துள்ளார்களென்பதை யறிவது அவசியம். அக்காலத்தை மோட்சமூலர், திலகர், நாராயண சாஸ்திரியார் இம்மூவரும் பிரித்துள்ளவண்ணம் சுருக்கிக் கூறுவோம்.

**மோட்சமூலர்மதப்படி கி.மு.**

1. சந்தஸ்காலம். 1200–1000
2. மந்திரகாலம். 1000–800
3. பிராஹ்மண காலம் 800–600
4. ஸூத்ரகாலம். 600–200

**திலகர் மதப்படி கி.மு.**

1. உத்தரமகாசமுத்திரபனிக்காலம். 10,000–8000.
2. ஆரியர் அங்கிருந்து வந்து திரிந்தகாலம். 8000–5000.
3. வேதஸூக்தகாலம். 5000–3000.
4. ஸம்ஹிதாகாலம். 3000–1400.
5. ஸூத்ரகாலம். 1400–500.

**T. S. நாராயண சாஸ்திரியார் மதப்படி.**

| | | | |
|---|---|---|---|
| 1. | சந்தஸ்காலம் ... ... | கி. மு. 4,000,000 | ஞு வரையில் |
| 2. | ஸம்ஹிதைகாலம் (கிருதயுகம்) | 3029015 | ,, |
| 3. | பிராஹ்மணகாலம் (திரேதாயுகம்.) | 1517015 | ,, |
| 4. | ஆரண்யககாலம் (துவாபரயுக முற்பாதி) | 653015 | ,, |
| 5. | உபநிஷதகாலம் (துவாபரயுகப் பிற்பாதி.) | 221015 | ,, |
| 6. | இதிஹாஸகாலம். | 3 02 | ,, |
| 7. | ஸூத்ரகாலம் (கலியுகம்.) | 2602 | ,, |

தயானந்த ஸரஸ்வதிஸ்வாமிகள் வேதங்கள் கிருதயுகத்திலேயே யேற்பட்டனவென்பார்.

இக்காலவரைகள் ஒன்றுக்கொன்று சற்று மொவ்வாதுள. இவற்றைக் கொண்டு வேதத்தை ரிஷிகள் எவ்வளவுகாலத்துக்கு முன்கண்டார்களென்று அறிய முயலுவது இப்பொழுதும் சற்றும் அசாத்தியமாம். மேற்கண்டபடி காலம் பிரித்த மூவரில் மோட்சமூலர் வேதாபிமானம் முழுதுமுள்ளவர். அவருடைய சந்தஸ்காலம், மந்திரகாலம், பிராஹ்மணகாலம், ஸூத்ரகாலம் என்பன நியாயப்பொருத்தமுள்ள காலப் பாகுபாடுகளாம். ஆனல் அப்பாகுபாடுகளின் காலம் எவ்வளவு என்ற விஷயத்தில் அவரை நம்புவது நமக்குச் சரிவராது. என்? அவரும் ஏனைய ஐரோப்பியர்களைப்போலக் குப்தவம்சத்துச் சந்திர குப்தனை மௌரியவம்சத்துச் சந்திரகுப்தனெனக் கணித்து இவனை அலெக்சாந்தர் காலத்தவனாகக் கருதுவர். அவ்விஷயத்தைப்பற்றி நாராயண சாஸ்திரியார் அவர்கள் காட்டியுள்ள நியாயங்கள் மிகவும் பொருத்தமாயுள்ளவை. மேனாட்டுச் சரித்திரக்காரர் சாககாலமென்பதைச் சாலிவாகன சகமென்றெண்ணி முட்டுப்பட்டு இந்துதேசசரித்திரத்தின்வருஷமுறைகளைக் கெடுத்துவிட்டார்களென்றும், சாககாலமென்பதுகைரஸுக்கு இந்திய சேனைகள் உதவிசெய்தகாலமாகிய கி. மு. 550ம் ஞுத்தில் தொடங்கிய சாகநரபதி காலத்தைக்குறிக்குமென்றும், இந்நாட்டிற் பண்டுதொட்டு வழங்கிவந்த சகாப்தங்கள், இற்றைக்கு 5020வருஷத்துக்கு முன்தொடங்கிய கலியப்தமும்(கி. மு. 3102 என்க), யுதிஷ்டிரர் பட்டாபிஷேகஞ் செய்துகொண்ட ஞுமான 3139 கி. மு.விலிருந்து தொடங்கும் யுதிஷ்டிர

விருந்து தொடர்ந்த சாகாபதியப்தமுமென்றும், ஏனையவை பிற்பட்டன வென்றும், இவை தவிர ஸப்தரிஷிசகாப்தமென்றொரு லௌகிகாப்தமுமுண் டென்றுங் காட்டி, தம்புராணங்களிலுள்ள ஆதாரநியாயங்களுடன்மகதவரசர் களது பரம்பரையை யெழுதியுள்ளார் அவர். அவருடைய அபிப்பிராயப்படி சந்திரகுப்த மௌரியனது காலம் சமார் கி. மு. 1500 வருஷங்களுக்கு முன்னும். அவரது காலத்தவர் காத்தியாயனவரருசி. இவரோரிக்வேதஸர்வாநு க்கிரமணி யெழுதியவர். இவர் தனது அநுக்கிரமணி யெழுதியபோது சௌனகரது பத்துக்கல்பஸூத்ரங்களையும் அவனது சிஷ்யராகிய ஆச்வலாய னரது மூன்று புத்தகங்களையும் படித்த பிறகுதான் தமது ஸர்வாநுக்கிர மணி யெழுதியதாக ஷட்குருசிஷ்யர் சொல்லுகிறார். மேலும் சௌனகர் பாஷ்கலசாகை சாகலசாகை யிரண்டும் கலந்த ரிக்வேத ஸம்ஹிதைக்கு அநுக்கிரமணி யெழுதியது போலவே இவரும் செய்துள்ளார். இக்காத் யாயநரதுகாலம் கி. மு. பதினைந்தாம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாயின் ஆசுவலாயனர் காலம் அதற்கும் முற்பட்டிருத்தல் வேண்டும். ஆனால் ஆசுவலாயனராவது சௌனகராவதுகாத்தியாயநர் காலத்துக்குச் சற்றுமுந்தி னவர்களென்று சொல்ல ஆதாரமொன்றுமில்லை. இக்காத்தியாயந வரருசியின்காலமே பாணினி, காத்தியாயநர் குருவாகிய வர்ஷாச் சாரியார் முதலியவர்களது காலமாம். ஈண்டு வர்ஷர் காத்தியாயநர் குருவென் பதும் கவனிக்கத்தக்கது. ஆனால் காத்தியாயனருக்கும் ஆசுவலாயநருக்குமி டையே எவ்வளவுகால மாயிருந்திருக்குமென்று வேறொரு வழியிற் பார்க்க லாம். அதற்குமுன் ஆசுவலாயநர் ஸூத்திரப்படியுள்ள கோத்திர வகை களைச் சற்று விவரிப்பாம். இக்கோத்திரங்களே இப்போது பிராஹ்மணருக் குள் கல்யாணத்திற்கும் நித்திய நைமித்திக கர்மாநுஷ்டானங்களுக்கும் உப யோகப்படுவதெனவறிக.

ஆசுவலாயனப்படி 49 கோத்திரங்களுண்டு. இக்கோத்திரங்க ளெல்லாம் ஸப்தரிஷிகளிலிருந்து தோன்றியவை. ஸப்தரிஷிகளாவார் பிருகு அங்கிரஸர், விச்வாமித்திரர் வஸிஷ்டர், காச்யபர், அத்திரி, அகஸ்தியர் என்பவர்களாம். ஆனால் பிருகுவுக்குப்பின் வந்த ஜமதக்னியும், அங்கிரஸ னுக்குப்பின் வந்த கௌதம, பாரத்துவாஜர்களும், ஏனைய ஐவரும் ஆகிய எண்மருமே கோத்திராதிபர்களானார்கள். இவ்வெட்டுக்கோத்திரங்களும் பின் னர் 49 கோத்திரங்களாகப் பிரிந்தன. ஒவ்வொரு கோத்திரத்திலும் எண் ணிறந்த குடும்பங்களேற்பட்டன. இக்குடும்பத்தாரெல்லாரும் ஸகோத்திர தாயாதிகளாம். இவர்களுக்குள் கொள்வினை கொடுப்பினை செய்து கொள் ளக்கூடாது. இக்காலத்தும் ஸ்மார்த்த வைஷ்ணவ, மாத்துவக் குடும்பங்களில் ஸகோத்திர தாயாதிகளைப்பார்க்கலாம்.

நிற்க அந்நாற்பத்தொன்பது கோத்திரங்களையும் கூறுவோம்.

I பிருகுக்கள்.

| கோத்திரப்பெயர். | ரிஷிஸங்கியை | ரிஷிகளின் அபிவாதனம். |
|---|---|---|
| 1 ஜாமதக்ந வத்ஸாற் | 5 | பார்க்கவ, ச்யாவந, ஆப்நவாந, ஔர்வ, ஜாமதக்ந இதி. |
| 2 ஜாமதக்நிய அல்லது ஜாமதக்நாற் | 5 | பார்க்கவ, ச்யாவந, ஆப்நவாந, ஆர்ஷ்டிஷேண, அநூபேதி. |
| 3 பிதாஹ் (Bidah) | 5 | பார்க்கவ, ச் (ch) யாவந, ஆப்நவாந, ஔர்வ, பைதேதி. |
| 4 யாஸ்கர், பாதௌவர், மவுனர், மவுகர், | | |

| | கோத்திரப்பெயர், | ரிஷிஸங்கியை. | ரிஷிகளின் அபிவாதனம். |
|---|---|---|---|
| | சார்க்கராட்சி, ஸார்ஷடி, ஸாவர்ணி, சாலங்காயனர், ஜைமினி, தேவந்த்யாயனாஹ். | 3 | பார்க்கவ, வைதஹவ்ய, ஸாவேதஸ இதி. |
| 5 | ச்யைதாஹ் | 3 | பார்க்கவ வைங்ய, பார்த்தஇதி. |
| 6 | மித்ரயுவஹ் | 1 அல்லது 3 | பாத்ர்யஸ்வஇதி. பார்க்கவ, தைவோதாஸ, பாத்ர்யஸ்வ இதி. |
| 7 | சுநகாஹ் | 1 அல்லது 3 | கார்த்ஸமத இதி. பார்க்கவ, சௌநஹோத்ர, கார்த்ஸமத இதி. |

## II ஆங்கிரஸர்கள்.

### II (a) கோதமர்கள்.

| | | | |
|---|---|---|---|
| 8 | கோதமாஹ் | 3 | ஆங்கிரஸ, ஆயாஸ்ய, கௌதமஇதி. |
| 9 | உச்சத்த்யாஹ் | 3 | ஆங்கிரஸ, ஔ(ச்)சத்த்ய, கௌதம இதி. |
| 10 | ரஹூகணாஹ் | 3 | ஆங்கிரஸ, ராஹூகண்ய, கௌதம இதி. |
| 11 | ஸோமராஜகயஹ் | 3 | ஆங்கிரஸ, ஸோமராஜ்ய, கௌதமஇதி. |
| 12 | வாமதேவாஹ் | 3 | ஆங்கிரஸ, வாமதேவ்ய, கௌதமஇதி. |
| 13 | ப்ரிஹதுக்த்தாஹ் | 3 | ஆங்கிரஸ, பார்ஹதுக்த்ய, கௌதமஇதி. |
| 14 | ப்ரிஷதச்வாஹ் | 3 அல்லது 3 | ஆங்கிரஸ, பார்ஷதச்வ, வைரூப இதி. அஷ்டாதம்ஷ்ட்ர, பார்ஷவதச்வ. வைரூபஇதி. |
| 15 | ரிக்ஷாஹ் | 5 | ஆங்கிரஸ, பார்ஹஸ்பத்ய, பாரத்வஜ, வாந்தன, மாத(t)வச்சேதஸஇதி. |
| 16 | கக்ஷீவந்தஹ் | 5 | ஆங்கிரஸ, ஔ (ச்) சத்த்ய, கௌதம, ஔசிஜ, காக்ஷீவதஇதி. |
| 17 | தீர்க்கதமஸஹ் | 3 | ஆங்கிரஸ, ஔ(ச்)சத்திய, தீர்க்கதமஸஇதி. |

### II (b) பாரத்வாஜர்கள்.

| | | | |
|---|---|---|---|
| 18 | பாரத்வாஜாக்நிவேச்யாஹ் | 3 | ஆங்கிரஸ, பார்ஹஸ்பத்ய, பாரத்வாஜ இதி |
| 19 | முத்க (ṛ) லாஹ் | 3 அல்லது 3 | ஆங்கிரஸ, பார்ம்யச்வ, மௌத்கலஇதி. தார்க்ஷ்ய, பார்ம்யச்வ, மௌத்கலஇதி, |
| 20 | விஷ்ணுவ்ரித்தாஹ் | 3 | ஆங்கிரஸ, பௌருகுத்ஸ்ய, த்ராஸதஸ்யஇதி. |
| 21 | கர்காஹ் | 5 அல்லது 3 | ஆங்கிரஸ, பார்ஹஸ்பத்ய, பாரத்வாஜ, கார்க்ய, சைந்யஇதி. ஆங்கிரஸ, சைந்ய, கார்கஇதி. |
| 22 | ஹரித-குத்ஸ-பிங்க-சங்க(ḳ)-தர்ப்ய-பைமகவாஹ் | 3 அல்லது 3 | ஆங்கிரஸ, ஆம்பரீஷ, யௌவநாச்வ இதி. மாந்தாத்ர, ஆம்பரீஷ, யௌவநாச்வ இதி. |

இக்கதையை நம்பத்தகாத கதையாக மோட்சமூலர் கருதுவர். ஆனால் நமக்குவேண்டிய சௌநகர் காலத்தை யறிய இதைக்காட்டிலும் பெரியஆதாரம் கிடைக்காது. இச்சௌநகரது கல்பஸூத்திரங்களையும், ஆசுவலாயநரது ஸூத்திரங்களையும் நன்றாகப்படித்தே காத்தியாயநர் தனது அநுக்கிரமணியெழுதினதால் அவருடைய அநுக்கிரமணிக்கு ஸர்வாநுக்கிரமணி யென்று பெயர்வந்தது என்பார் ஷட்குருசிஷ்யர். சௌநகரது அநுக்கிரமணிக்கு ரிஷ்யாநுக்கிரமணியென்று பெயர். மேலும் சௌநகரது நடை காத்தியாயநரது நடையைப்போல முழுதுமொத்த விருத்த நடையாயிராமல் பத்ய கத்யநடையாய் ஒரொழுங்கின்றி யிருப்பதே சௌநகருக்குப்பிந்தியவர் காத்தியாயநரென்பதை வெளிப்படுத்துமென்பார் மோட்சமூலர். ஒருமாதிரி பாஷைநடை வேறுவிதமாக மாறுவதற்குப் பலநூறுவருஷங்களாகும்என்பது சொல்லாமலே பொருந்தும். அதனால் சௌநகர் காத்தியாயநருக்கு வெகு காலத்துக்கு முந்தியவரென்பது பெறப்படுகிறது. அவரும் சதாநீகனுக்கு விஷ்ணுதர்மத்தை யுபதேசித்தார் என்பதால் அவர்காலமும் சதாநீகனுடைய காலமும் ஒன்றெனப் பெறப்படும். இச்சதாநீகன், ஜநமேஜயனது புத்திரன். இச்சநமேஜயன் பரீட்சித்தின் புத்திரன் இப்பரீட்சித்து, அபிமன்யுவின் புத்திரனென்பது யாரும் அறிந்தது. அதனாலும், உக்கிரசிரவஸினின்றும் சௌநகர் மகாபாரதத்தையும், ஹரிவம்சத்தையும் கேட்டாரென்பதனாலும், இச்சௌநகர் காலம் மகாபாரதயுத்தகாலத்துக்கு ஒருநூற்றாண்டு பிற்பட்ட காலமாயிருந்திருத்தல் வேண்டுமென்பது பெறப்படுகிறது. அம்மகாபாரதகாலம் யாது? அது கி. மு. 3139 வென்பது இந்துமதநூல்களெல்லாம் ஒத்துக்கொண்ட விஷயமாம்; அதாவது கலியுகம் பிறப்பதற்கு சுமார் நாற்பது வருஷத்துக்கு முன்னராம். ஆதலிற் சௌநகருடைய காலமும் கி.மு. 3000 வருஷங்களுக்குமுன் அல்லது இற்றைக்குச் சுமார் 5000 வருஷங்களுக்குமுன் என்பது பெறப்படுகிறது. ஆகவே காத்தியாயனர் காலத்துக்கும் சௌநகர்காலத்துக்கும் (5000 — 3500) சுமார் 1500 வருஷபேதமேற்படுகிறது. இச்சௌநகரே கடைசியாக ரிக்வேதத்திற் சூக்தஞ் சேர்த்தவரென்று மேற்சொல்லப்பட்ட கதையாற்றெரிகிறது. அதனால் ரிக்வேத ஆசிரியர்களது காலம் இற்றைக்கு ஐயாயிரவருஷங்களுக்குக் குறைவில்லை யென்பது நிச்சயமாகத் துணியப்படும். தயாநந்த ஸரஸ்வதி ஸ்வாமிகளின் அபிப்பிராயப்படி ரிக்வேதத்தின் பழைய ஸூக்தங்கள் க்ருதயுகத்தில் எழுதப்பெற்றனவானால், ரிக்வேதகாலமானது இற்றைக்கு முப்பதுலட்ச வருஷங்களுக்குமுன் றொடங்கி இற்றைக்கு ஐயாயிரவருஷங்களுக்குமுன் வரையிலிருந்த ரிஷிகளால் அப்போதைக்கப்போது பாடப்பெற்றன வென்று கொள்ளுதல் தகுதியாகும். எனினும் மிகப்பழையனவாயுள்ள சூக்தங்கள் மிகச்சிலவே யானதுபற்றி அவ்வேத சூக்தங்கள் பெருகத் தொடங்கினகாலம் சௌநககாலத்துக்குச் சில்லாயிர வருஷங்கட்குமுன்பாகத்தா னிருந்திருக்க வேண்டும். பலநூதன சூக்தங்கள் இடைப்புகுத்தப் படுவதைக்கண்டவர்கள் பழையனவற்றைத் தொகுக்கத் தொடங்கி அவற்றை ஒரு ஸம்ஹிதையாகத் தொடுத்து அதற்குக் கேடுவாராதபடி பதாநுக்கிரமணி, சந்தஸநுக்கிரமணி முதலிய பலவித அட்டவணைகள் சேர்த்து அத்தொகைநூலைப் பாதுகாக்கத் தொடங்கினரென்க. அவருட் சிறந்தவர் சௌநகரென்பதே சரி. அவ்வேலை முற்றுப்பெறுவதற்குக் காத்தியாயநர் காலம் வரையி லாயிற்றென்க. இவ்வகையாகக் கிறிஸ்துபிறப்பதற்கு மூவாயிரம் வருஷங்களுக்குக் குறையாமல் முன்னெழுதியசூக்தங்களை நிஷ்கம் என்ற பதத்தைக் கநிஷ்கனின் சிதைவென மாற்றி யக்கனிஷ்கனிருந்த

காலம் கி.பி. இரண்டாவது நூற்றுண்டினுதலின் வேதமும் இரண்டாயிர வருஷங்கட் குட்பட்டது என்று கூறுவார் மதத்தை யா மென்னென்று சொல்வது! அவர்களுக்கு மோட்சமூலரது கூற்றுலேயே மறுப்பு எழுதவோ மென்க. அம்மோட்சமூலர் (Max muller) கூறிவதாவது:—

"இந்திய ஆரியர்களைப் போன்ற விசேஷச்சிறப்போடுகூடியஒரு ஜாதியாரின் புராதன பத்தியங்களின் சுபாவத்தன்மையையும், முதன்மையையும் பகுத்தறிந்து தீர்மானிப்பதற்கு நமக்கு அதிக உதவிகளில்லை. வேதகாலத்துக் கவிச்சேஷங்களோடு நாம் எதையும் ஒப்பிடல் தகாது. ஏனெனில், யூதர், கிரேக்கர், ரோமர் முதலியோரின் காவியங்களில் நவீனமானவை யென்று கருதும் பல கருத்துக்களும், சொற்களும் இவ்வேத சூக்தங்களிற் காணுவதால், இந்தியருக்கும் அவை புதியவைதாம் என்றெண்ணுதல் பொருந்தாது. சரித்திரகாலத்துக்கு வெகுகாலத்துக்குமுன் ஆரியஜாதியார் கடந்தொழித்த மனப்பண்பாகிய சுற்றுவளையத்திலுள்ள ஒரு அறையை இவ்வேதம் நமக்குத் திறந்து காட்டுகிறது. வேதகாலம் எதுவாயினும் ஒருவழியில் வேதம் உலகத்திலுள்ள மகாபுராதந புஸ்தகமாம். இச் சங்கிதை நவீன நாகரீகமே கலவாத தூரமான ஒரு தனிப்பிரதேசத்தில் 50 வருஷங்களுக்குமுன் எழுதப்பட்ட தென்னினும், மனித வுணர்ச்சிகளில் முற்பட்ட தோற்றத்தைக் காட்டுவதனுல் அது ஹோமரது காவியங்களுக்குப் பெரிதும் முற்பட்டதென்று நாம் சொல்லுதல் தகும். ஹோமரது காவியத்தில் உறுதிப்பட்ட நிலையை யடைந்து தமக்கெனச் சில புராணகதைகளை யடைந்த் பெயர்கள் வேதத்தில் இன்னும் ஒருநிலைப்படாது அமைந்திருக்கின்றன. அப்படி யமைந்தவைபொதுப்பெயர்களாக வந்துள்ளனவேயொழியச் சிறப்புப்பெயர்களாகவரவில்லை. அவை மனிதரது கைபட்டுச்சீர்ப்படுத்தப்படாது கருத்தறிவிக்கும் பதங்களாகவேகாணப்படுகின்றன. வேதத்திற் காணப்படும் புராதனமானதும், நீழ்த்தரமானதும், அநாகரீகமானதுமான மனநிலையின் காட்சியைக்கூடக், காட்டுமனிதர்களான ஆப்பிரிக்காவிலுள்ள நீகிரோவாது மனநிலைக்கும், அமெரிக்காவி னிந்தியரின் மனநிலைக்கும் ஒப்பிட்டுப் பார்த்தல் பெருந்தவறு. ஏனெனில், ஹோமர் வர்ணிக்கும் கிரேக்கர்ளுக்கும், மோசேயினது யூதர்களுக்கும் மிகத்தாழ்ந்தவர்களாகக்கருதப்படினும்,இச்சப்தநதிகளின் கரையிலுள்ள ஆரியர் இச்சாதியார்களுக்குப் பெரிதும் மேற்போனவர்கள்; திவப்பதி முதலிய இயற்கையிலுள்ள சோதிக்கடவுளரை வணங்கியவிவர்கள்,தன்னை யறியாது புலப்படும் மிலேச்சத்தன்மையை வெகுகாலத்துக்குமுன் கடந்தவர்களாவர்.

"ஒரு விஷயத்தை மாத்திரங் கருதுவோம். பலதெய்வ வணக்கத்தினின்று கிரேக்கர்கள் கரையேறின கடைசிநிலையாக, ஏகதெய்வ வணக்கத்தைப்பற்றி நினைப்பது நமது வழக்கம். பிளாற்றோ, அரிஸ்தோதல் முதலியவர்களின் சிஷ்யர்களாயிருந்த அவர்கள், ஆதென்ஸில் பால் என்னும் முனி பிரஸங்கஞ்செய்யக் கேட்டபின்புதான் அறிவுக் கமையாத ஏகதெய்வத்தைப் பற்றி முடிவிற் கருதத்தலைப்பட்டார்கள் இம்மாதிரி யுணர்ச்சிதான் இந்தியாவி லேற்பட்டதென்று எப்படிச் சொல்ல வியலும்? பலதெய்வங்களை வர்ணிக்கும் மொழிநடைகளினிடையில் ஒருதெய்வ வுணர்ச்சி மேகத்தின் மின்னுப்போல வொளிர்வதைக் கண்டபின்னர், இச்சூக்தங்கள் நவீனமானவை யென்று நாம் எப்படிக் கூறலாம்? பலதெய்வங்களிலும் சிறந்த ஒருகடவுளின் நம்பிக்கை பலதெய்வ வணக்கத்துக்குப் பிற்பட்டதுதானென்று காரியத்தளவில் காணப்படலாம். என்றாலும் ஒருகவி, பிதாவினிடத்துப் புத்திர னிழுக்கப்படுவதுபோலத் தெய்வத்தினிடத்துத்தா

னிழுக்கப்படுவன்தைக் கண்டு, அத்தெய்வத்தை 'என்றந்தையே!' என்று ஒரு முறை கருத்தின்றிக் கூறிப் புகழுவானாயின், வேதாந்தம் படிப்படியாகக் கடக்கவிரும்பும் பயனற்ற பாலைநிலம் ஒரேதாண்டாய்த் தாண்டப்பெற்றதாகும். ஆரியரையும், செமற்றிக் ஜாதியாரையும் நாம் ஒருபோதும் ஒத்துப் பார்க்கக்கூடாது செமற்றிக் ஜாதியார் அடிக்கடி பலதெய்வ வணக்கத்தில் விழுந்து கெட்டவர்கள். ஆனால் இந்தியஆரியர்கள் எப்பொழுதும் ஒரு தெய்வ வணக்கத்திலேயே தவறி விழுந்தவர்கள். இவ்விருகட்சியிலும் இம் மாறுதல்கள் நானாவட்டத்தில் ஒழுங்காக விளைந்துவந்தன வல்ல; ஆனால் தனித்தனி மனிதர்களும், சிறப்புச்சூணிலைகளும் கொண்டுவந்தனவாம். ஆகையால், இம்மறைகளில் ஆண்டாண்டு காணப்படும் ஏகதேவவுணர்ச்சியும் மற்றும் சில வேதாந்தக் கருத்துக்களும் இம்மறைகளை நவீனகாலத்தன வென்று கூறுவதற்குத் தக்க ஆதாரங்க ளாகமாட்டா." என்றுள்ளார்.

இவ்வளவு தானோ? பின்னரும் ஓரிடத்தில், வேதகாலத்திலும் பிராஹ்மணகாலத்திலும் எழுத்திருந்ததாகச் சொல்ல ஒரு அத்தாட்சியும் காணப்படவில்லை யென்பதைப் பதவமைப்புக்களா லெடுத்துக்கூறி வேதம் புராதநமானதென்றும் நிலைநாட்டுவார். இவ்வளவு அருமைகளைப் படித்த றிந்து எழுதிய அவர் வேதம் மூவாயிரவருஷங்களுக்கு முன்புதான் ஏற் பட்டன வென்பது வென்னையோ வெனிற் கூறுவம்.

அவர் தமது காலத்திருந்த கிழைத்தேசக் கல்விவல்லவர்களின் கூற்றைப் பரிசீலியாது எடுத்துத் தம்நூலிற் பொருத்தியதே காரணம்என்க. இக் கிழைத்தேசக்கல்வியாளர்களான நிபுணர்களும் குப்தவம்சத்துச் சந்திரகுப்தன் அலெக்சாந்தர்காலத்தவனாக விருக்க, அவ்வுண்மை யறியாமல் வார்த்தையொற்றுமையின் மதிமயங்கி அவனை மௌரியவம்சத்துச் சந்திரகுப்தனென மதிக்கொண்டு சுமார் ஆயிரத்திருநூறு வருஷங்களுக்குக் குறையாமல் தடுமாறிவிட்டார்க ளென்க. சந்திரகுப்தமௌரியன் காலம் கி. மு. 1535 ஆக, அதனை அலெக்ஸாண்டர் படையெடுப்பின் காலமும் குப்தராஜ வம்சத்தின் முதலரசனாகிய சந்திரகுப்தன் காலமுமாகிய கி. மு. 327ற் கொண்டார்களென்க. இப்பிறழ்வுணர்ச்சிவிஷயம், சாககாலமென்பதன் பொருளைப் பாரஸிகமன்னனாகிய கைரஸென்னும் சாகநபதியின் காலமென அறியவொண்ணாது சாலிவாகனசகமென மயக்கியுணர்ந்ததால் வந்ததாகக், காலஞ்சென்ற நாராயணசாஸ்திரியா ரெடுத்துக்காட்டியதினின்றும் அறியவாம். அவரது 'மகதராஜ வம்சங்கள்' 'இந்துதேச சரித்திரத்திற் றோன்றும் ஏககாலக் கிரேக்கஸம்பவப் பிறழ்வுணர்ச்சி' யென்னும் நூல்களைப் பார்க்க. இச்சாஸ்திரியார், எழுத்தறியப்பட்ட காலமாகிய ஸூத்திர காலத்தைவேத காலத்திற் சேர்க்காது லௌகிக காலத்திற் சேர்த்திருப்பதை யுமறிக.

இத்துணையுங் கூறியவாற்றால் வேதகாலமாகிய சந்தஸ்காலமும் மந்திரகாலமும்பிராஹ்மணகாலமும் இற்றைக்கு ஐயாயிர வருஷங்களுக்கு முற்பட்டவையென்பதும், ஸூத்திரகாலம் இற்றைக்கு மூவாயிர வருஷத்துக்குமுற்பட்டதென்பதும் வெள்ளிடைமலைபோற் றெள்ளிதின் விளங்கும். அதாவது சௌநகர்காலம் சுமார் கி.மு. 3000ஞூத்திற்கு முன்பும் காத்தியாயனர் காலம் சுமார் கி.மு.1500ஞூத்திற்கு முன்பு மென்க.

# ரிக் வேத ஸம்ஹிதை.

---

## 2-வது அஷ்டகம்.

---

### தந்துரை.

1. இத்துணையு மென்னை யியக்கிப் பணிகொண்ட
வித்தகனு மென்குருவை வேண்டினேன்——னித்தரையிற்
றீராதன வெல்லாந் தீர்த்துத் தொழின்முயக்கி
வாராத சீர்வழுத்து வான்.

2. அட்டகமொன் ருயிற்ருல் மண்டலமு மாகவில்லை
யிட்டமுடன் றேசிகனை யேத்தியே—மட்டொழுகும்
பூப்போ லிரண்டா வதும்புகல்வே னுவலர்க
ளார்ப்போ டேலங்களிக்க வாய்ந்து.

இதுவரையில் என்னை யித்தொழிற்கண் ஊக்கித் தன்னருளையும் ஞானத்தையும் ஒருசிறை தந்தருளிய எனது ஆத்மகுருவின் உபயதிருவடிகளையும் வணங்கியிரண்டாவது அஷ்டகத்தையுங் கூறுவேன். முதலஷ்டகம் முற்றுப் பெற்றதாயினும் முதல் மண்டலம் இன்னும் முடியவில்லை யென்றுணர்க. —(எ-று.) இம்முதல் மண்டலத்துக்குச் சதர்ச்சி மண்டல மெனப்பெயரென்றும் அது 191 சூக்தங்களையுடைய தென்றும் முதலஷ்டகத்துவக்கத்திற் சொன்னுர். அவற்றுள் 121 சூக்தங்கள் கழிந்தன. மிக்கிருப்பன 70 ஆம். இம் முதன் மண்டலம், இவ்வஷ்டகம் ஐந்தாவது அத்தியாயத்தின் இடையில் முடிவு பெறும். பின்னர் கார்த்ஸமத மண்டலம் என்னும் இரண்டாவது மண்டலந் தொடங்கும். இது 4 அநுவாகங்களையும் 43 சூக்தங்களையும் உடையது. இம் மண்டலம் இவ்விரண்டாவது அஷ்டகம் முடிவதற்குள் தீர்ந்துவிட 3 வதாகிய விசுவாமித்திர மண்டலம் தொடங்கிவிடுகிறது. இம் மூன்றுவது மண்டலத்தில் 5 அநுவாகமும் 62 சூக்தங்களு முண்டு. முதலஷ்டகத்தைப் போலவே இவ்வஷ்டகத்திலும் 8 அத்தியாயங்களுண்டு. அவற்றின் வருக்க, சூக்த, இருக்கு அட்டவணை இறுதியிற் சேர்க்கப்படும்.

---

### முதலத்தியாயம்.

இவ்வத்தியாயத்தில் 15 சூக்தமும், 26 வருக்கமும், 137 இருக்குக்களு முள்ளன.

### 122. மண்டலம் 1. அநுவாகம் 18 சூக்தம் 2.

### 15 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கக்ஷீவான்; வடமொழிச் சந்தம்: த்ருஷ்டுப்; தேவதை: விச்வ தேவர்கள்.

1. விரைவினுறுஞ் சினத்தீர், மிகவு நீங்கள் குடிக்குந்
தரை மகச் சோமஞ், சாரும் பலன்றா வுருத்திரற்கா

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

விரை இயது; எப் போல, விண்ணின் றசுரரை வீட்டும் வீரர்
நிரை செறி தேவற்கும் வான் புவி மருதர்க்கும் போற்றி.

(இ-ள்.) இலகுவான கோப முள்ளவர்களே! (மருத்துக்களே!) நீங்கள் அதிகமாகக் குடிக்கும் யக்ஞஸாதனமாகிய ஸோமமானது, பலனை வர்ஷிப்பதற்காக உருத்திரனையுத்தேசித்து நன்றாகச் சம்பாதிக்கப்பட்டது அம்பு சத்துருக்களையடிப்பதுபோல, விண்ணுலகத்தினின்றும் அசுரர்களையடித் தோட்டும் வீரர்களாகிய (மருத்துக்கள் முதலிய) தேவர்கள் நிறைந்த ருத்திர தேவனையும், வானம் பூமிகளுக் கிடையிற் சஞ்சரிக்கும் மருத்துக்களையும் நாளும் வணங்கித்துதித்தேன்—(எ-று.) விண்ணின்று என்பதற்கு இனத்தால் மூவுலகங்களையுங் கொள்ளுக வென்பார் ஸாயணர். ஏ, அம்பு. எப் போல, தொழிலுவமை. வான் புவி மருதர், வானுக்குப் பூமிக்கும் இடையிற் சஞ்சரிக்கும் மருதர் என்ற படி. உருத்திரனுக்கும், கோப முள்ளவர்களாயினும் அதிகவிரைவில் சாந்தப்படுத்தக்கூடிய மருத்துக்களாகிய அவனது புத்திரர்களுக்கும், சோம மளிக்கப்பட்டதெனக் கூறி அம் மருத்துக்களை நித்தியமான தேவனின் வீரர்க ளென்று உபசரித்தது மல்லாமல் அவர்களோடு தியாவாப் பிருதுவிகளையும் கவி ஆராதித்தார் என்பார் மேனாட்டாசிரியர் (Griffith.).

2. வெருவிதத் துதியோ டோங்கி விளங்கிரா வைகல்கள், முற்
பகலினுவுதி வளர்க்கும் பன்னியின் விரைவி னேகல்;
பகை வறக்கின்ற தேசிற் பொன்னிற வுரு பரந்தாள்
சக மொளிர்ப்பிப்பா ளென்றாழ் சாரு முன் சோபை கொள்வாள்.

(இ-ள்.) பூர்வாஹ்நத்தில் (முற் பகலில்) வளர்க்கப்படும் ஆஹ்வாநத்திற்கு (யக்ஞாஹூதிக்கு)ப் பத்தினி வந்துதவுவது போல, வெகு விதமான துதிகளாலறியப்படும் இரவும் உஷஸும் அவ் வாவுதியை வளர்க்க வேகமாக வரட்டும். சத்துருக்களை யிம்சிக்கின்ற தேஜஸோடும் பொன் வர்ணமான உருவோடுங் கூடியவளும், ஜகத்தைப் பிரகாசிப்பிப்பவளும், சூரியோதயத்துக்குமுன் (அச்சூரியனிடத்து வரும் கண்ணுக்கினிய) காந்தியைக்கொள் பவளும், (ஆகிய உஷஸ் அம் முற்பகலிற் செய்யும் ஆவுதியைக் காக்கட்டும்)—(எ-று.) மேனாட்டாசிரியர் வேறு விதமாகப் பொருள் கூறுவர். அது வருமாறு:—

விவிதமா ருருவின் வைக விரவிவர் விடியற் போற்றிக்
குவிகையாரழைப்பின் மேன்மை கூட்டுற வலியா நிற்பார்;
நிவர்தரு முழைக் குடையைப் பயனிலா நிசியு மீய
வவளுஞ் சூரியன்றன் பொன்மை யார்தர விளங்குகின்றாள்.

(இ-ள்.) வேறு பட்டவுருவத்தோடு கூடிய உஷஸும் இரவுமாகிய இவர்கள், விடியிற் காலத்திற் போற்றும் ஸ்துதிகளைப் பெருமைப்படுத்தும் வலிமை கொண்டுள்ளார்கள். அழகிய உஷைக்கு, ஒரு பயனுமில்லாத வறட்டிரவு ஆடையையளித்தாக, அவ்வுஷையும் சூரியனது பொன்னிறத்தோடு விளங்குகின்றனள்—(எ-று).

3. காளியையமைப்போன் சூழ்ந்து நடப்பவ னெமை மகிழ்வித்
தாளுக; மழையை யேய்ப்போன் வாதனு மெமக்கஃ தாற்றல்;
சோவிலி யெம் மதியைக் கூர்ப்பிப்பீ,ரரியே, வெள்ள
மாளுவீர்; தேவர் யாரு மமைக்கவ் பேர்வள மெமக்கே.

## மண்டலம் 1 சூக்தம் 122.

(இ-ள்.) நாட்களை வருவிப்பவனும், சூழ்ந்து செல்லுபவனும் ஆகிய சூரியன் எங்களை மகிழ்விக்கட்டும். மழையைக் கொண்டுவருபவனுகிய வாதனும் (காற்றும்) எமக்கதையே செய்யட்டும். இந்திர பர்ஜன்யர்களே! எமது புத்தியைக் கூர்மைப்படுத்துவீர்களாக. விசுவ தேவர்கள் எங்களுக்குப் பெருஞ் செல்வங்களை யளிக்கட்டும்—(எ-று.) வஸர்ஹா வென்பதற்கு வஸரஸ்ய கமயிதா (நாளைக் கொண்டுவருவோன்) என்றுரு. வாஸகாநாம் ஆச்சாதகாநாம் வ்ருக்ஷாதீநாம் ஹந்தா (உடைபோல் மூடிக்கொண்டிருக்கும் மரமுதலியவற்றைக் கொல்பவன்) எனப்பொருள் கொண்டு அக்கினிக் கேற்றி, அக்கினி சூரியர்கள் எங்களுக்கு ஸந்தோஷத்தை யூட்டுக வெனப் பொருள் கொள்ளலும் ஒன்று. அர்யே, வெள்ள மாளுவீர் என்றதற்கு இந்திரனே மழை வெள்ளத்தைத் தரும் பர்ஜந்யனே ஆகிய விருவர்களேயென்க. ஏகாரம் எண்ணுப் பொருளில் வந்தது.

4. உன்பவர் பருகு வோரை வெளுப்புற வுறுவோர் தம்மைப்
பண்பெற வழைக்கல், கீர்த்தி பாவிரட்டையரை யெற்கா
வெண்பெறு மௌசிஜன்ருன்; னீரினின் றியைந்தோன் றன்னைக்
கண்பெற வமைக்கல்; போற்றைக் கருது மெந்தாயர்ச் சேர்க்கல்.

(இ-ள்.) (சருபுரோடாசாதிகளை) யுண்ணுவோரும், (ஆஜ்ய ஸோமாதிகளைக்) குடிப்போரும், வெண்மை நிறத்தோடு வருபவர்களும், கீர்த்தி பரந்தவிரட்டையர்களுமாகிய அசுவினிகளை, எனக்காக உசிஜ புத்திரனுகிய கட்சீவான் சிறப்பாக வணங்கி யழைக்கட்டும். தண்ணீரிலிருந்து தோன்றியவனுகிய அக்கினியையும், அமைக்கட்டும். ஸ்தோத்திரஞ் செய்யும் மனிதர்களாகிய வெமது தாய்மார்களாகிய பகலிரவுகளையுஞ் சேர்க்கட்டும்—(எ-று.). வைகறை யாமத்தில் வருவதால் அசுவினியர்களை வெளுப்புற வருவோரென்ருர். கட்சீவான் கதையை மண். 1 சூக். 51 செய், 13ற் பார்க்க. இச் செய்யுள் கட்சீவான் தன்னையே படர்க்கைப் படுத்திக்கொண்டு துதித்ததாம்.

5. கோடையுங் குட்டந்தீரக் கூப்பிய வண மூமக்கா
நாடி யௌசிஜன்யான் போற்றைச் சத்தமாய் நயந்து சொல்வேன்;
பூடன், நும்மவரி லீகை பூண்டு மிச் சிறந்தோன் றன்னை
நாடுவேன், செல்வ மீயு நலத்தி னங்கியையு மின்றே.

(இ-ள்.) (தேவர்களே!) கோஷாவென்பவள் தன் (தோல் வெளுப்பாகிய) குஷ்ட நோயைத் தீர்ப்பதற்காக உம்மை வணங்கினது போல, உசிஜபுத்திரனுகிய யான் உமது ஸ்தோத்திரங்களை யுரக்கக் கூறி யும்மை யழைப்பேன். உங்களில் ஈகையிற் சிறந்த போஷக கர்த்தாவாகிய பூஷனையும், செல்வத்தைத் தரும் அக்கினியும் துதிப்பேன்—(எ-று.) ஔசிஜன், தத்திதம்) கட்சீவான். கோஷா அவனது மகள், மண். 1 சூக். 117 செய். 7 பார்க்க. அர்ஜுநஸ்ய நம்சே யென்பதற்கு அர்ஜுநனை யடைவதற்காவென்று பொருள் கூறி யர்ஜுநன் அவளது புருஷனுயிருக்கலா மென்பர் மேனுட்டாசிரியர். ஆனல் வெண்மையின் அழிவு அல்லது நாசத்திற்காக வென்பது ஸாயனருரை.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

6. மித்திரா வருணர் காளே ளித்துதி விரும்பிக் கேட்க;
நத்தியே மகச் சாலைக்க ணாரந்துதி யாவுங் கேட்க;
றத்திய மன்பிற் கேட்போன், றுதிபெறு தானம் வாய்ந்தோன்,
மெத்திய நீரிற் பூமி மேவிடுஞ் சிந்து கேட்க.

(இ-ள்.) மித்திராவருணர்களே! என்னுடைய இந்த ஸ்தோத்திரத்தைக் கேட்பீர்களாக. அன்றியும்யாகசாலைக்கணுள்ள இதர உத்காதாமுதலியவர்களின் ஸ்தோத்திரங்களையும் கேட்பீர்களாக. அன்போடு ஸ்தோத்திரங்களைக் கேட்பவனும், ஸ்தோத்திரஞ் செய்யத்தக்க தானத்தோடு கூடியவனும், மழை நீராற் பூமியை நிறைவித்துப் பயிர்களை வளர்க்க வருபவனுமாகிய சிந்து அந்த ஸ்தோத்திரங்களைக் கேட்கட்டும்—(எ-று.) மித்திரன் பகலுக்கும், வருணன் இராவிற்கும், சிந்து ஜலத்திற்கும் அபிமான தேவதைகள்.

7. மித்திர வருணீரும்மை யான்றுதித்தேன் பதிற்றுப்
பத்தெனும் பசுக்களீயும் பகர்ச்சி சால் கொடையும் பஜ்ரன்
றத்தியஞ் செயு மகத்திற் றேய்க; எவ்விடத்துங் கீர்த்தி
மெத்திய தேரிற் சார்க தேர்விழை யவற்கே யன்பின்.

(இ-ள்.) மித்திரனே! வருணனே! உங்களை யான் துதித்தேன் பஜ்ரனாகிய யான் ஸ்துதித்து வணங்கும் யக்ஞத்தில் நூறு பசுக்களைத் தரும் உமது தானஞ் சிறந்து பொருந்தட்டும் பிரியரதனாகிய (தேரிற் பிரியமுள்ள பஜ்ரனாகிய) வெனக்கே யன்புகாட்டு மவர்கள், கீர்த்தி பரந்த தேரின் மேலேறிவருவார்களாக—(எ-று.) மேனுட்டாசிரியர் ப்ருகூயாமன், பிரியரதன், பஜ்ர னென்று மூன்றும் தனித்தனிச் சிறப்புப் பெயர்களாகச் கொள்வர். பருகூயாமன் யாரென்று தெரியவில்லை யென்பர். ஆனல் ஸாயணரோ ப்ருகூயாமேஷு என்பதற்கு அன்னங்களை நியமனஞ்செய்யும் ஸ்தோத்திரத்தில் அல்லது யக்ஞத்திலென வுரைகூறுவர்.

8. பச்சிரர்க்காக வுண்டி பகர்பரி யிரதமியு
முச்சிதச் சூரியாகு முயர் தனத் தோனைச் செல்வ
நச்சியே யடைவான் போற்றி நண்பினிற் பொருந்து நாங்கள்
மெச்சுறப்புசிப்போ முன்னுன் மேவும் பொன், வீரரோடே.

(இ-ள்.) பஜ்ர அல்லது ஆங்கிரஸ கோத்திரத்தார்களாகிய கட்சீவந்தர்களுக்காக, உணவும், குதிரையும், தேரும் தரும் ஸூரியாகிய மிக்க செல்வத் தோடு கூடிய தேவனைத் தனம் பெறுமாறு ஸ்தோத்திரஞ் செய்து, நண்பிற் பொருந்திய மனிதர்களாகிய யாங்கள், நீதருஞ் செல்வத்தை யெங்களுடைய புத்திரர் முதலிய வீரர்களோடு ஒற்றுமையாய் அநுபவிப்போம் —(எ-று.) ஸூரி, யாக கார்த்தா, செல்வ நிறைந்தவன்.

9. மித்திராவருணர்கா, ளுந்தம்மை விண்ணிற் பகைத்தே
யுத்தமச் சோம மியா தொழுகு வான்றனே யுள்ளம்
பொத்திய நோய்க் கோட் பட்டுப் பொருமுவான்; மகத்தை யாற்றித்
துத்தியஞ் செய்வோன் சோம மாதிய தோய்கு வானே.

## மண்டலம் 1 சூக்தம் 122.

(இ-ள்.) மித்திராவருணர்களே! உம்மைக் காரண மின்றிப் பகைத்து உமக்காக, ஸோமாபிஷவஞ் செய்யாதவன் மன நோயான் வருந்தித் துக்கிப்பான். உங்களுக்காக வேண்டிய ஸோமத்தைப் பிழிந்து யாகஞ் செய்து துதிப்பவன், ஸோமபான முதலிய எல்லாப் போகங்களையும் அடைவான்—(எ-று) அயஷ்டா விருவகைப் படுவன் யாகமே செய்யாதவன், மித்திராவருணரன்றிப் பிற தேவர்களுக்குச் செய்பவனென. அவனுக்கேற்படுந் துக்கமு மிருவகைத்து. தான் செய்யவில்லையே யென்ற தொருவகை. பிறர் செய்து போக மநுபவிக்கிறார்களே யென்பது மற்றொரு வகையாம்.

10. உத்தமவலியன் வீரர் மத்தியிற் கீர்த்தி யுற்றோன்
றத்துறு பரிமாத் தூண்டச் சார்பவன் கொடையின் மிக்கோன்
இத்தரை யெப் போர்க்கண்ணு மொய்ம்பு ளோன்றனையுஞ் செற்றுச்
சற்றுமே துளங்காச் சூரனென வவன் றயங்கு வானே.

(இ-ள்.) (மித்திரா வருணர்களே! உங்களை வணங்கும்) அவன், சிறந்த வலிமை யோடு கூடியவனும், வீரர்களுக்கு மத்தியிற் கீர்த்தி வாய்ந்தவனும், குதிரை மேலேறி வருபவனும், வள்ளலும், நேர்ந்த யுத்தங்களி லெல்லாம் வலிமை மிகுந்த பகைவனையுங் கொன்று கொஞ்சமு நடுக்க மடையாத சூரனுமாக விளங்குவான்—(எ-று.)

வருக்கம். 2.

11 உயிர்க் கெலா மிறைவ ராவீ,ருத்தம வின் பளிப்பீர்!
அயர்த்துமே மரண மெய்தாச் சூரியினுளாம் யானுஞ்
செயிர்ப்பறக் கூவல் கேட்டுச் சேர்குவீர் தேரு ளோர்க்குச்,
குயிற்று பேர் துதியினிச்சை கொண்டு நீர் நபஞ் செல் போதே.

(இ-ள்.) எல்லாவற்றிற்கும் அரசர்களே! நல்ல உற்சாகத்தைத் தருபவர்களே! (விச்வதேவர்களே!) மறந்தும் மரணத்தை யடையாத யாககர்த்தாவின் மனிதனாகிய யான் கூவுவதைக் கேட்டு ரதத்தோடு கூடிய அவ்யஜமானனுக்கு மகிமை பொருந்திய அவனது துதியில் (அல்லது அவித் தனத்தி லென்றும் சொல்லலா மென்பர் ஸாயணர்.) ஆசைப்பட்டு நபப்பிர தேசத்திற் செல்லும்போது இங்கு வாருங்கள்—(எ-று.) மேனாட்டாசிரியர் அம்ருதஸ்யராஜாந: என்று எடுத்துக் கொண்டு அமரர்க் கரசர்களே யென்று பொருள் கூறி, அவர்கள் மித்திராவருணர்க ளென்பார். ஆனால் ராஜாந: என்பதும் மந்த்ரா: என்பதும் துவிவசனம் (இருமை) அன்மை யுணர்க. வடமொழியில் ஒருமை, இருமை, பன்மை என மூன்றுண்மை யுணர்க.

12. ஈரைந்து சமச மார்ந்த வுண்டியை யடைய வெண்ணிச்
சாரும் யாங் கூவும் சூரிக் குயர்பலந் தருவோமென்று
நேருற வுரைத்தா ரஃதா னிறை யொளியோடு செல்வ
வேருறு மிம்மகத்தே யெய்துக வுண்டி யாரும்.

(இ-ள்.) பத்துச் சமசங்களிலும் நிறைந்த ஸோம வுணவை யடைவதற்காக யாங்கள் எந்தஸூரியின் (யாககர்த்தாவின்) பொருட்டுக் கூவிகிறோமோ அந்த யஜமானனுக்கு உயர்ந்த (அன்ன புஷ்டி யோடு கூடிய) பலத்

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

தைத் தருவதாக வெல்லாத் தேவர்களுங் கூறியதால் அவ் வெல்லாத் தேவரும் ஒளி பொருந்திய செல்வ மிக்க இந்த யாகத்தில் அளிக்கப்படும் ஸோம வுணவைப் பெறட்டும்—(எ-று.) சமஸம், சிறுமரப் பாத்திரம். தசதயஸ்ய என்பதற்கு பத்து இந்திரியங்களையும் வளர்க்கு மெனப் பொருள் கொள்ளலும் ஒன்று. அற்றேல், ஈரைந்து புலன்க ளூட்டு முண்டியை எனமாற்றிப் படிக்க. மேல் அடுத்த செய்யுளை நோக்குக.

13. ஐயிரண்டாகும் வள்ள மழகுற வுணவை யேந்திப்
பையெனத் தருதும் போது புலன் பத்தும் பெருக வுண்டே
யையென மகிழ்வோம்; இங்ங னடையு மீசானர் தாமே
மையினர்த் தெறுவார்; இச்சைக் கலின மாநர ரென் செய்வார்?

(இ-ள்.) (அசுவமேதயாகம் முதலியவற்றில் நெய் ஸோமம் முதலாகிய பத்து வித வுணவுகள் அளிக்கப்படும் என்று சொல்லப்படுகின்றது.) பத்துச் சமஸங்களும் (பத்து விதமான) அழகிய ஆகாரத்தை யேந்தித்தரும் போது அவற்றைப் பத்து இந்திரியங்களும் வளரும் வண்ணம் உண்டு மகிழ்வோம். இவ்விடத்து வரும் விச்வ தேவர்கள் எங்கள் சத்துருக்களை யோட்டிக் கொல்லுவதற் கிருக்க, இஷ்டாச்மி, இஷ்டாசுவன் என்னும் ராஜாக்களாகிய மனிதர்கள் எங்களை யென்ன செய்ய முடியும்? (அநுக்கிர கிக்கவும் முடியாது; உபத்திரவிக்கவும் முடியாது.)—(எ-று.). மையினர் குற்றம் வாய்ந்தவர் ஈண்டு பகைவர் மேல் நின்றது. இச்சைக் கலினமாநரர் என்றதை இச்சைக் கலினநரன். இச்சை மாநரன் எனப் பிரித்துப் பொருள் கொள்ளுக. என்? ஸாயணர் இஷ்டாச்வன், இஷ்டாச்மி எனச் சிறப்புப் பெயராகக் கொள்ளுவதால்.

14. பொற்குழைக் காதினோடு பொருந் தாதனக்கழுத்து
முற்படு மெமதுருவை மொய்ம்புற விசுவதேவர்
சொற்பெற வளிக்கல்; சான்ற தோத்திர வவியோர் பாலுற்
றற்புறல் துதியினான்ற வவியி னெம்மிருவர் மாட்டே.

(இ-ள்.) பொன்னாலான குண்டலங்களோடு கூடிய காதையும், ரத்நாபரணமணிந்த கழுத்தையு முடைய எம்முடைய ரூபத்தை (அல்லது புத்திர பவுத்திரர்களை யென்று சொல்லலாம் என்பர் ஸாயணர்.) விச்வ தேவர்கள் தரட்டும். ஸ்தோதா, ஹோதா என்னும் இருவர்களிடத்திலும் சென்று ஸ்தோத்திரங்களிலும், நெய் முதலிய அவிப்பொருள்களிலும் மகிழட்டும்—(எ-று.). அன்புறல், அற்புறல் எனவலித்தல் விகாரம் பெற்றது. இருவர், ஸ்தோத்திரம் செய்வோனும், பால் முதலிய அவிப்பொருளை யளித்து யக்ஞஞ் செய்பவனுமாம். காதுங் கழுத்துஞ் சொன்னதால் மற்ற அவயவங்களையும் இனத்தாற் கூட்டுக வென்பார் ஸாயணர்.

15. மசரி சாரன்றன் மக்க ணால்வரும் யவஸ்ய னென்னு
நிசவட லரசன் மக்கண் மூவரு மிவர்தம் வாதை
விசையுற நின்றது; எவ்வின், மித்திராவருணிர் நீண்டே
யிசைவுறு முருவத் தூர்தேர் சுகமுற வொளிர்ந்த நன்றே.

## மண்டலம் 1 சூக்தம் 123.

(இ ள்.) மசர்சாரன் புத்திரன் நால்வரும், யவஸ்யன் என்னும் வெற்றி பொருந்திய வரசன் மக்கள் மூவரும் செய்யும் உபத்திரவம் சகிக்க முடியவில்லை. மித்திராவருணர்களே! நீண்ட ரூபத்தோடு கூடிய உமது தேர் சுகத்தை யமைத்துச் சூரியனைப் போலப் பிரகாசித்தது—(எ-று.) மசரிசாரன், மசர்சாரன், ஓரரசன். யவஸ்யன் மற்றோரரசன், இவர் மக்கள் எழுவரது உபாதையும் தோன்றிய போது உமது தேர் சுகந்தந்து பிரகாசித்தது என்றதனால் இப்பொழுது எங்களது விரோதிகளுக்கும் பயத்தை யூட்டி விளங்கட்டு மென்பது பொருள்.

வருக்கம். 3.

## 123. மண்டலம். 1. அநுவாகம். 8. சூக்தம். 3.

13 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கட்சிவான்; வடமொழிச் சந்தம்: த்ருஷ்டுப்; தேவதை: உஷஸ்.

1. தயாளுவின் பரந்த வான்றேர் பூட்டியே சார்ந்து நின்ற,
தூயாவறு மமரத் தேவ ரதி னுவந்தேறினரால்;
கியாதியார் பெரியாள், மாந்த ரகமெலாஞ் சிகிச்சை செய்வாள்,
தயாவொடு கிருட்டினத்தின் வெளிவந்து தயங்கினளே.

(இ-ள்.) தட்சிணையினது விசாலமான பெருமைவாய்ந்த தேர் பூட்டப் பட்டு நின்றது. அமரத்தன்மை வாய்ந்த தேவர்கள் அதில் வந்து ஏறினார்கள். கீர்த்தி பெற்ற பெரியவளும், மனிதர்களது வீடுகள் தோறும் (இருட்டையோட்டுவதாகிய) சிகிச்சையைச் செய்பவளும் ஆகிய உஷை இருட்டைக் கிழித்துக் கொண்டு வெளித்தோன்றினள்—(எ-று.) தட்சிணை வென்பதற்கு வளர்பவள், தன்வேலையிற் றிறமை வாய்ந்தவள் என்ற வேறு பொருள்களு முண்டு. ஆனல் ஈண்டு தாட்சிண்யமுள்ளவ ளென்ற பொருளில் வந்தது. தட்சிணை, அதாவது மகவான் (யஜமானன் அல்லது இந்திரன்) தரும் யாகவேதன மென்பார் (Bergaigne) பெர்கேன் என்பவர்.

2. புவனங்க ளெவைக்கு முன்ன ருஷை துயிலுணர்ந்தாள்; உண்டி
யுவமையி லளவு கூட்டும் பெரியவ, ளொளியை யீவா,
ளவமுற நிதமுந் தோன்று நலிவிலா யுவதி, யுச்சி
நிவமுற நோக்கிப் பூர்வ வாவுதி முதனின்றளே.

(இ-ள்.) உஷஸ் என்னும் தேவி எல்லாப் புவனங்களுக்கும் (அல்லது எல்லா வுலகத்திலும் தூங்கும் பிராணிக் கூட்டங்களுக்கும்) முன்னர் நித்திரை தெளிந் தெழுந்தாள். கணக்கில்லாத உணவைக் கூட்டுபவளும், பெரியவளும், (எவ்வுலகத்தும்) ஒளியைத் தருபவளும், நாள் தோறும் மீண்டு மீண்டுந் தோன்றும் நித்திய யௌவன முள்ளவளுமான வவள், உன்னதமான விடத்திற் காணப்பட்டுப் பூர்வ வாவுதிக் கண் தேவயஜநப் பிரதேசத்தில் எல்லாத் தேவர்களுக்கும் முதலில் வந்து நின்றாள்—(எ-று.).

3. நற்பிறப் புஷையாந் தேவீ! நாடியே மர்த்தியர்க்க
ணுற்று நேதாக்கட்காக வுயரவீ தேவர்க் கீயின்,
நற்சுவாந்தத்துத் தேவனுஞ் சவிதா யாம் பாப
மற்றவ ரென்றுரைக்கல் சூரிய னனையு மாறே.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

(இ-ள்.) நல்லபிறப்போடு கூடிய உஷைத் தேவியே! மர்த்தியர்களுக்கு மத்தியில் வந்து நேதாக்களுக்காக (யக்ஞஞ் செய்வோருக்காக) அவிப் பாகங்களைத் தேவர்களுக்குத் தரும்போது, நன்மனத்தோடு (அல்லது யாஸ்கர் உரைப்படி தானசெய்யுஞ் மனத்தோடு) கூடிய தேவனாகிய ஸவிதா, சூரியனது வரவை யெதிர்பார்த்து யாங்கள் பாப மற்றவர்கள் (அல்லது யாகயோக்கியர்கள்) என்று சொல்லட்டும்—(எ-று.) உஷற் காலத்தில் தேவர்களுக்கு அவியளிக்கப்படுவதால் உஷையே அவ்வவியை வாங்கித் தேவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுப்பதாக வுபசரித்தார் என்பார் ஸாயணர்.

4. அகனையு மில்லந் தோறு மணுகுவா ளுளுங்; காந்தி
மிகு மொளி தாங்கி வெற்றி மேம்படு மெண்ணத் தோடு
தகவுறு பிரகாசத்திற் சாருவ ளிலக்க வென்றும்;
உகவுறக் கொள்வா டந்த வவியினிற் சிறந்த பங்கே.

(இ-ள்.) உஷை ஒவ்வொரு கிரஹத்துக்கும் வருவாள். பிரகாசம் மிகுந்த கிரணங்களைத் தாங்கி ஜயம் பெறு மெண்ணங் கொண்டு சாசுவதமாகத் (தினந்தோறு மென்றபடி) முதன்முதலில் வருவாள். அளிக்கப்படும் அவியாகிய செல்வத்திற் சிறந்த பாகங்களைப் பெறுவாள்—(எ-று.). அஹநா (த்யோதநா) அகனை, உஷஸுக்கோர் பெயராயிற்று.

5. பகனுக்கும் வருணனுக்கும் பக ருடன்பிறப் புஷையே!
புனைநர் நாயகி, நீ முதற்புகழ் புகல நிற்க;
அகம் புரி யவனகல்க; தக்கிணையா முன்னோடு
தகவுறு மெந் தேர் கொண்டு சயிக்க யாமவனை யின்றே.

(இ-ள்.) பகனோடு கூடப் பிறந்தவளே! வருணனோ டொரிடத்தி லுதித்தவளே! உஷையே! மனிதர்களை நடத்துபவளே! மனிதர்கள் உன்னை முதலிற் றுதிக்கும் வண்ணம் நிற்பாயாக (அதாவது நீ முதன் முதல் மனிதராற் றுதிக்கப்படுவாயாக.). பாபத்தைச் செய்யு மவன் தூரத் தொலையட்டும். தட்சிணையாகிய உன்னோடு எங்களது தேர் முதலிய ஸாதனங்களால் அப்பாபியை யாங்கள் ஜயிக் கட்டும்—(எ-று.). மேனாட்டாசிரியர் தட்சிணையாகிய தேரினுதவியால் நாங்கள் அவனை ஜயிக்கட்டும் என்பார். தட்சிணை யாகவேதனம் என்று கொள்ளுவார் (Bergaigne) பெர் கேன் என்று மேல் முதற் பாட்டிற் சொன்னார். பகன், ஆதித்தியன். வருணன், தமோநிவாரிகன், ஸவிதா. அகம், பாபம். தக்கிணை உஷைக்கும், யாகவே தனத்துக்கும் பெயர். ஸூந்ருதே ஈண்டு ஸுஷ்டு மனுஷ்யாணாம் நேத்ரீ யென்பார் ஸாயணர்.

6. அன்புசார் வாக்கு ஞானக் கன்மமு மெழுக; வங்கி
பொன்பெறு மொளியின் மேனோக்குற் றெழுந்தூறல்; பொலிவிற்
கொன்பெறு காந்தியைகல், தமத்தினான் மறைந்து கூடு
மன்புறு பொருளை யெல்லாங் கண்ணுற வமைத்ததாலே.

(இ-ள்.) (ரித்விஜர்களே!) அன்பும் ஸத்தியமும் நிறைந்த ஸ்துதி வாக்கியங்களைக் கூறுங்கள். சரித்தை வளர்க்கும் ஞானகர்மங்களைப் புரியுங்கள். இருட்டினால் மறைந்து கிடக்கும் வஸ்துக்களை யெல்லாம் பிரகாசிக்கும் ஒளியோடு கூடிய உஷஸ் தெரியும்படி செய்ததால் ஆஹவநீயாதி அக்கினிகள் மேனோக்கி யெழுந்தவாலையோடு எரியட்டும்—(எ-று.)

## மண்டலம் 1 சூக்தம் 123.

7. செல்லுறு மொன்று, மற்றொன் றெதிருறுந் திருக்குருவோ
டல்லொடு பகலு மாறி யணைவுறுந்; தொட ரிவற்று
ளல்லுறு மிருளா மொன்று பொருள்களை மறைத் தணுகு,
மெல்லுறு முஷை விளக்க மியைந்த தேரினிற் பிறங்கும்.

(இ-ள்.) இரவாகிய ஒன்று போகப் பகலாகிய மற்றொன்று மாறுபட்ட ரூபத்தோடு எதிர்தோன்றும். இவ்வகை இரவும் பகலும் மாறி மாறி வரும். இப்படி யொன்றன்பி னொன்றாய் வரும் இவற்றுள் இருளாகிய வொன்று வஸ்துக்களை மறைக்கும்; வெளிச்சம் பொருந்திய உஷஸ் பிரகாசம் பொருந்திய தேரில் விளங்கும்—(எ-று.) இரவையும் பகலையும் சொல்லி யுஷையைத் துதித்தவாறு என்பார் ஸாயணர். பக லிரவு இரண்டற்குமாக அஹநீ, யென வடமொழி மூலத்திலுள்ளது. மேல் மண். 6 சூக். 9 செய்1 ல் அஹச்ச க்ருஷ்ண மஹரார்ஜுநஞ்ச விவர்த்தேதே ரஜஸீ வேத்யாபி: என்றுபகலிர வெனு மிரண்டிற்கும் அஹஸ் என்ற பத முபயோகப்படுகிறது.

8. இன்றைக் கோருருவின், அஃதே யினிவரு நாளும் கொண்டு
சென்று நல்வருணன் சேரு மிடத்தைச் சேவிக்கும்; குற்ற
மின்றி முன் மூன்று பத்து யோசனை யெண்ணி வேறாய்த்
துன்றிய வுதயத்தானந் தோறுஞ் சூழ்ந் தொழுகு மன்றே.

(இ-ள்.) தினந் தோறும் ஒரேயுருவத் தோடு (வருணன்) தமோநிவாரகனாகிய சூரிய னுதயமாகு மிடத்தை (உஷஸுக்கள்) ஸேவித்து நிற்பார்கள். குற்ற மின்றிச் சூரியனிருக்கு மிடத்துக்கு முப்பது யோஜனை தூர முன் சென்று அவன் உதிக்கும் அக்ஷாந்தரங்களிலெல்லாம் சூழ்ந்து செல்வார்கள்—(எ-று.) தினந் தோறும் ஒரேயுரு வென்றது நட்சத்திர வொளிமழுக்கம், சூரி யோதய மின்மை, 21 கடிகை 26 பரையுண்மை ஆதியகாட்சி என்றும் ஒரே விதமாக விருக்கும் இவ்விடியற் காலத்து என்பார் ஸாயணர். மேனாட்டாசிரியர் வருணனது நியதிகளை அல்லது விதிகளை உஷை யென்றும் அநுஷ்டிப்பா ளென்பர். ஆனால் ஸாயணரோ, இருட்டை யோட்டுபவனாகிய (வருணன்) ஸூர்யனது மேரு ஸ்தானத்தை வலமாகச் சுற்றுமென்பார். உஷஸ் ஒன்றே யெனினும் லங்கை முதலிய அட்ச பாகங்கள் தோறும் பலகாலத்திலும் பலவிடத்திலும் காணப் படுவதாற் பன்மையாகக் கூறின னென்பார். சூரியன் 5059 யோஜனை தூரம் சுற்றுகிற தென்றும் அது உதிக்கு மிடங்களி லெல்லாம் உஷஸ் அதற்கு முன் 30 யோஜனை தூரத்திற் காணப்படுகிற தென்றும் கூறுவர். ஜோதிஷ சாஸ்திரத்தில் லங்கையில் உதய மென்றும், ஸித்த புரத்தில் அஸ்தமன மென்றும், நடுப்பகல் யமகோடியி லென்றும் பாதி ராத்திரி ரோமகத்தில் என்றும் சொல்லப் படுகிறது.

9. முதற்பக லொழுக்கினுண்மை யுணர்ந்தவள் தனது வெண்மை
யுதிப்புற விருட்டினின்று முதித்தன ளொளி விளங்கக்
கதிப்புறு மகத் தலத்தைக் கலைத்தழிக் காது கூடி
மதிப்புற நாள்க டோறு மவியை மங்கலஞ் செய்வாளே.

(இ-ள்.) யக்ஞ நடக்கும் இடத்தைக் கெடுக்காது அவ்விடத்துச் சேர்ந்து தினந்தோறும் அளிக்கப்படும் அவிப் பொருள்களை மங்கலப் படுத்துபவ

ளும், முதலிற் பகல் வந்ததை யுணர்ந்து பிராணிகளை யெழுப்பின வளுமான உஷை தனது சொந்த வெண்ணிறத்தோடு பிரகாசந் தோன்ற இருட்டி னின்று (அல்லது இருட்டு முடிந்த பின்னர்) உதயமானாள்—(எ-று.) பின் னிரண்டடிகளை வேறு மாதிரியுங் கூறலாம். 'கதிப்புறு முன்மைத் தானங் கலந்துள கன்னி யாண்டு; மதிப்புறு மொளியைச் சிக்கா தொழுகுவள் தின முஞ் சீரின்.' அதாவது சூரியனது ஒளிநிலைத்துள்ள உண்மையான விடத்தை யடைந்துள்ள கன்னியாகிய உஷை அவ்விடத்து ஒளியைக் கெடுக்காது நாள்தோறும் அலங்காரப் படுத்திக் கொண்டு ஒழுகுவாள் என் பது பொருள்.

10 கன்னிபோ லியு முன்றன் மெய்யழ கதனைக் காட்டித்
தன்னுவாயுன்னை வேட்குந் தேவன் பாற் சுவைக்கத் தேவி!
கன்னிமைப் பருவத்தோடு குறுநகை காட்டி யன்னான்
முன்னருன் மார்பு தோன்ற முடுக்கொடு மியங்கு வாயே.

(இ-ள்.) உஷைத் தேவியே! உன்னை விரும்பும் ஸூர்யனாகிய தேவன் முன்பு உனது மெய்யழகினைக் காட்டிக் கன்னியைப் போலச் சேர் வாய். இளமைப் பருவத்தோடு கூடி மந்தஹாஸத்தோடும் உன்னுடைய மர்மஸ்தானங்களெல்லாம் வெளித் தெரியப் பிரகாசிக்கிறாய்—(எ-று.) கன்னிகையைப் போல் என்றது குறையுவமை. துணிவுள்ள யுவதிகள் தாம் விரும்பும் புருஷருக்கு முன் வாகுமூலம் தனம் முதலிய மறைவிடங் களைக் காட்டிக் கொண்டு நிற்பது போல நீயும் நிற்கிறாய் எனவிரிக்க வென் பார் ஸாயணர்.

வருக்கம் 5.

11. தாயர் மெய் மண்ணுறுத்தத் தழைத்த தையலினைப் போல
மேய யாவருமே பார்க்க நல்லொளி யுருவ மேவிப்
பாயினை; சுகம் பரந்த வுஷை நனி பரவல் சீரின்;
ஏயு மற்றுஷைக ளுன்போ லொளிபெறல் தானு மின்றே.

(இ-ள்.) உஷையே! தாய் முதலியோர் சரீரத்தை யலங்காரப்ப டுத்தி விடத் தன்னழகு பொருந்திய சரீர முழுவதுந் தெரியும் வண்ணம் திரியும் யுவதியைப் போல, எல்லாரும் பார்க்கும் வண்ணம் நல்ல காந்தியோ டுகூடிய உருவத்தோடு பரவி நின்றாய். சுகத்தை யளிக்கும் நீ கல்யாண கர மாக வின்னும் பரவுவாயாக. இதர உஷஸ்ஸுக்கள் (வைகல்கள்) உன் னைப் போல ஒளி பெற்றதில்லை—(எ-று.) அம்மாதிரி நீ யொளிர்க என் பது கருத்து என்பார் ஸாயணர்.

12. ஆவொடு மாவு மெல்லா வரும் பொருடாமு முள்ளார்
மேவுறு மினன்கரத்தோடுறுதொழின் முயற்சி மேவிச்
சேவைச் சுகத்தை யீயும் பொருளெலாஞ் சிறக்கத் தாங்கிக்
காயலினீங்கிப் பின்னுங் கடுகுவார் வைகலுமே.

(இ-ள்.) பசுக்களும், குதிரைகளும், மற்றெல்லா அரிய வஸ்துக்களு முள்ள வைகல்கள், சூரியகிரணங்களோடு இருட்டையோட்டும் தொழிலில்

முயற்சியைப்பெருந்தி ஸாதுஜனங்களுக்கு அநுகூலஞ் செய்யும் ஸுகப்ரித மான பொருள்களை யேந்தித் தினந்தோறும் போவதும் வருவதுமாயிருக்கி றார்கள்—(எ-று.)

13. உண்மையாரொளிபின்பற்றிச்சுகத்தினையுவந்தளிக்கு
மொண்மையார்கருமந்தம்மை,யுஷை,யெமக்களிக்க;இன்று
திண்மையார்துதியைக்கேட்டுத்திகழுகவெம்முற்செல்வம்,
வண்மையார்யஜமானர்க்குமெமக்குமாவளருமாறே.

(இ-ள்.) உஷையே! ஸத்திய பூதனுகிய ஆதித்தியனின் ஒளியோடு வந்து சுகத்தினை யளிக்கும் ஒளிபொருந்திய வைதிக லௌகிக கர்மங்களை யெங்களுக்குத்தருக. இன்றைக்கு எங்களது ஸ்தோத்திரங்களைக்கேட்டு, யஜமானர்களுக்கும் எங்களுக்குமாகப் பலவித செல்வங்களுமோங்கும் வண் ணம் எங்களுக்குமுன் றோன்றுவாயாக—(எ-று.) 'ரிதஸ்ய ரச்மிம் அநுயச் சமாஞு'என்பதற்கு ஒழுங்கின் சாசுவதமான ஒழுங்குகளின் கட்டுக்குள்டங்கி யென்று பொருள் கூறுவார் மேனுட்டாசிரியர். ஆனுல் ஆதித்தியனது கிர ணங்களோடு கூடவந்து என்பார் ஸாயணர். கவியில் உண்மையார் ஒளி பின் பற்றியென்றார்.

வருக்கம் 6.

## 124 மண்டலம் 1. அநுவாகம் 18. சூக்தம் 4.

### 13 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கட்சீவான்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப்; தேவதை: உஷஸ்.

1. மூட்டிய வோமத்தீயு முஷையுஞ் சூரியன் மதிப்ப
நீட்டிய வொளியின் வீசா நின்றன; சவிதாத்தேவ
ஞேட்டியெந் தொழினிமித்த மோரிருகாற் பிராணி
யீட்டிய நாற்காற் சீவ னின்னவையியைத்தானன்றே.

(இ-ள்.) ஸூர்யனைப்போல, ஆஹவநீயாதி அக்கினிகளும் உஷை யும் வெகுதூரந்தெரியும்படி பிரகாசிக்கின்றன. ஸவிதாவாகிய தேவன் எங்களது காரியங்களுக்காக இரண்டுகாற் பிராணிகளாகிய மனிதரையும் நாற்காற் பிராணிகளாகிய மிருகங்களையும் எங்களுக்குச் சிறப்பிற் கூட்டி ஞன்—(எ-று.)

2. தேவர் தம் விரதஞ் செம்மை யோங்குவான் றடை செய்யாது
பாவுறு மனித ராயுள் பறிக்கிறுள்; கழிந்த வுஷைகற்
கோவுறு சுட்டாய்ப் பின்னருறு மவற்றின் முதன்மை
மேவுறு முஷை விசேடவிளக்க மார்ந்துள்ளா ளன்றே.

(இ-ள்.) தேவ (விரதங்கள்) கார்யங்களாகிய அக்கினி ஹோத்திரம் முதலியவை நன்ருக நடப்பதைத் தடுப்பதில்லை. ஆனுல் மனிதரது ஆயுட்கா லத்தை மாத்திரம் குறைக்கிறுள். முன்னர் முடிந்துபோப் நித்தியமான உஷ ஸுக்களுக்கு உவமையாகச் சொல்லத்தக்கவளும், பின்வரா நிற்பவைகளுக்கு

# அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

முதன்மை வாய்ந்தவளும் அல்லது முற்பட்டவளுமான வுஷை நன்றாகத் தோன்றிப் பிரகாசிக்கிறாள்—(எ-று.) கழிந்த வைகல்களுக்கு உவமை யென்றது, மேல் மண். 1 சூத். 123 செய். 8ல் கூறப்பெற்ற விஷயங்களுக்கு ஒரு சட்டாவாளெனக. வடமொழி ரிக்குக்கு கழிந்த வைகல்களுக்குச் சுட்டாயும் இனிவருபவற்றிற்கு முதலாயும் என உரைகூறுவது, செல்லக்கூடிய பசுவாதிகளுக்கும் நித்தியமாயுள்ளவற்றிற்கும் உவமையாய் இரவின் முடிவுக்காலத்திற்றோன்றிப், பிரக்ஞை யடைபவற்றில் முதன்மைவாய்ந்தவளாய் அவற்றையநுக்கிரஹிக்கும் புத்தியோடு பிரகாசிக்கிறாளெனப் பொருள் கொள்ளுவதுமுண்டு.

3. வான்றரு மகளா மன்னாள் வளரொளி யாடை தாங்கி
மேன்படு கீழைத் திக்கின் மிளிருவா டனியே யென்றாழ்
தான்புகு பாதைக் கண்ணே தயங் குடன்போக்கை யெண்ணி
வான்றட முணர்ந்தாள் மான வழங்குவாள்; திசை கெடாளே.

(இ-ள்.) விண்ணின் புத்திரியாகிய வுஷை பிரகாசமான ஆடையையணிந்துகொண்டு கிழக்குத்திசையிற் றனியே காணப்படுவாள் சூரியன் செல்லும் (மேருவட்டத்தில்) பாதையில் அச்சூரியனோடுகூடச் செல்லும் மனத்தளாய், ஆகாச மார்க்கத்தை யறிந்தவள்போலச் செல்லுவாள். கிழக்கு முதலிய திக்குக்களைக் கெடுக்கமாட்டாள்-- (எ-று.) வான்றட முணர்ந்தாள் மான வென்பதற்கு உண்மைபன்பு வாய்ந்த மனைவி புருஷனது ஸர்வாவஸ்தைகளிலும் புருஷனோடு கூடவே செல்லுவது போலவெனப் பொருள் கொள்ளவு மொன்று. உஷையுதிக்கும் திசைகிழக்கானதாலும் அவள் எப்போதும் அத்திசையிலேயே தோன்றுவதாலும் அத்திசையை யுணர்ந்த பினனர் இதரத்திசைகளை யிலகுவாய்க் கண்டுபிடிக்கமுடியும் ஆதலாலும்திசைபொழுங்குகளைக் கெடுக்கமாட்டாள் என்றபடி. ரிதம், ஒழுங்கென்பார் மேனுட்டாசிரியர். ஆனல் சூரியன் என்றார் ஸாயணர்.

4. சோதியா ரெல்லுரத்தி னருகினிற் சுலவித் தோன்றும்;
நூதனகவியி னின்ப நடங்கு நற்பொருள் விளக்கும்;
ஓதுறு மகாரை யில்லாளெனப் புவி துயிலுணர்த்தும்;
பேதையர் மீளுவோரிற் சிறந்து நித்தம் பிறங்கும்.

(இ-ள்.) உஷை சோதி நிறைந்த சூரியனது வக்ஷஸ்தலத்தைப்போல அருகிற் சூழ்ந்துதோன்றுவாள். நூதனமாய்ப்பாடுங் கவியைப்போல அடங்கிக்கிடக்கும் பலபொருள்களையும் எடுத்துக்காட்டுவாள்.கிரஹணி புத்திரர் முதலியோரையெழுப்புவதுபோலப் பூமியிலுள்ள பிராணிக் கூட்டங்களை யெழுப்பி விடுவாள். பிராதக்காலத்தில் மீண்டும் மீண்டும் ஒழுங்காக வரும் உத்தமமான ஸ்திரீகளுக்கு மத்தியில் நித்தியம் முதன்மையாக வந்து பிரகாசிப்பாள்— (எ-று.) கவியென்ற சொல்லுக்கு நோதாவென்று வடமொழிமூலத்திலுள்ளது. அதனைநோதாவென்னும் ரிஷியைப்போல வென்று பொருள் கூறுவர் ஸாயணர். இவன் 59 முதல் 64முடியவுள்ள ஸூக்தங்களைக் கண்டவன். சுந்த்யுவென்பது நீரில் நடக்கும் வெள்ளை நிறப்பட்சி விசேஷமென்றும் அதனைப்போலவென்றும் கூறுதலுமொன்று. ஆனல் கவியிற் சுந்த்யு சூரியனெனக் கூறியுள்ளார். பேதையரென்றது பதிவிருதைகளை. உஷை சூரிய பத்தினி, அவள் பேதையரில் உத்தமியானுள் அச்சூரியனோடு கூடவே யொழுகுதலின். மீளும் பேதையரில் எனமாற்றிப் பொருள் கொள்ளுக.

## மண்டலம் 1 சூக்தம் 124.

5. அந்தரக் கீழ்ப்பாதிக்க ணுக்களின் றாய் கொடியை
நந்துவித்தனள் மேன்மேலும் நாடியே பரந்து செல்வான்
முந்துறப் படர்ந்தாள், பெற்றோ ரிருவர்தங் குறங்கு முற்றுஞ்
சுந்தரமாகத் தோன்றச் சோதியை நிரப்பினளே.

(இ-ள்.) விரிவான அந்தரிக்ஷத்தின் கீழ்ப்பாதியில் பசுக்களின் தாயாகிய உஷை தனது துவசத்தை விளங்கவிட்டாள். மேலும் பரந்து செல்லும் வண்ணம் ஓங்கிச்சென்றாள். தனது பெற்றோர்களாகிய தியாவாப் பிருதுவிகளின் மத்தியபாகமெல்லாம் அழகாகத்தெரியும்படி தன்சோதியை விரித்தாள்—(எ-று.) ஆக்க ளென்பதற்கு ஒளிக்கற்றை யென்பார் மே ளுட்டாசிரியர். ஆனால் வாக்கு என்பார் ஸாயணர். காலையில் பட்சி முதலிய பிராணிகள் செய்யும் சத்தத்தை யுண்டுபண்ணுபவளான துபற்றி உஷஸ் வாக்குக்குத்தாயானாள். பெற்றோர் வானம் பூமிகள். குறங்கு துடை ஈண்டு மத்திய பாகத்தைக்குறித்தது. கொடி, கேது இதற்குகர்மமென்றும் ஞான மென்றும் பொருள் கூறுவார் ஸாயணர்.

வருக்கம் 7.

6. இவ்வகை மிகவிரிந்தே யெழிலுறத் தோன்றுமின்னு
ளௌவ்வுறு முறவோ ரன்றி யேதிலர் தமை யொழிக்கா
தெவ்வ மில்வகை விளங்கக் கறையிற வுருவத் தேமாந்
திவ்வயி னனுவே மேரு வென்றிகழா தொளிர்வாள்.

(இ-ள்.) இம்மாதிரியாக மிகவும் பரந்து விளங்கும் இவ்வுஷை பந்துக்களோடு பந்துக்களல்லாதவர்களையும் விட்டுவிடாமல் நன்றாய்க்காணப் படும்வண்ணம் களங்கமற்ற தன்ரூபத்திற் களித்து இவ்வுலகத்தின் கண் அற்பமென்றும் மகத்தென்றுந் தள்ளிவிடாதபடி எங்கும் நன்றாய்ப் பிரகாசிப்பாள்—(எ-று.) மேற் பாட்டில் இரண்டு உலகங்களிலும் பிரகாசிக்கிறாள் என்று கூறி,மீண்டு பரமாணு முதற் பர்வதம் வரையில் நன்றாய்த்தெரியும் படி பிரகாசிக்கிறாள் என்று சொன்னவாறு என்பார் ஸாயணர்.

7. சோதரனிலாதாளொப்பத்தந்தைபாற்றோய்வாள்;சோதி
மாதனம்பெறுவாள்மன்றமேறினளென்னச்சேர்வாள்;
காதலியென்னக்காந்தன்வயிறுடைநலத்தணிந்து
சோதியார்நகையினந்துலங்கமுற்செல்லுவாளே.

(இ-ள்.) ஸஹோதரனில்லாத பெண் தனக்கு வேண்டிய வாடையாபரணங்களைப்பெறத் தன்றந்தையினிடத்துப் போவதுபோல உஷை ஸூர்யனாகிய பிதாவினிடத்துச் செல்லுவாள். பிரகாசமான பெருந்தனத்தைப் பெறுவதற்காகப் புருஷனை யிழந்த ஸ்திரீ அரசனுடைய நியாயஸ் தலத்துக் குச்சென்று அதனைப் பெறுவதுபோலஇவ்வுஷை ஸூர்யனாகிய வரசனிருக் குமிடத்துச் சென்று தன்காந்தியாகிய செல்வத்தைப்பெறுவாள். பூப்புக்கா லத்து மலின வஸ்திரத்தைத் தரித்திருந்து பூப்பு நீங்கி நீராடிய பின்னர் யுவதி ஆடையாபரணாலங்கிருதையாய்த் தனது சிரித்த முகத்துடன் தனது கணவன் முன்செல்லுவதுபோல, இருட்டினாற் சூழப்பட்டிருந்த வுஷை எல்லாப்பொருள்களையுந் தெரியும்படி செய்துகொண்டு பலவாணங்களுமுன்

ள தோ[illegible]றத்தோடு அழகுபெறச் சூரியனாகிய புருஷனுக்கு முன்செல்லு வான்—[illegible]-று.) மன்றம், அரசனது நியாயசபை, ராஜாக்கிரகமெனினும் ஒக்கும்.

8. சுவசையுந்தன்னின்மூத்தசோதரிக்கிடத்தைபீந்தாள்,
அவள்வரவுணர்ந்தாள்போலவவ்விடநின்றகன்றாள்;
திவமணிக்கதிரிற்சிரினெழுந்தனள்சகமொளிர்ப்பித்
தவமையின்மின்னற்கூட்டமோருங்குறலென்னமாதோ.

(இ-ள்.) ஸ்வஸாவாகிய இரவு தன்னின் மூத்தவளாகிய உஷஸென்னும் ஸஹோதரிக்குத் தனது பிற்பாகமாகிய விடத்தைக் கொடுத்தாள். அவ்வுஷையினது வரவை யுணர்ந்தவள் போல அவ்விடத்தை விட்டு நீங்கினாள். சூரிய கிரணங்களின் உதவியைக் கொண்டு உஷை யழகாக வெழுந்து ஸமமாக ஒரே காலத்தில் வரும் மின்னற் கூட்டத்தைப் போலச் சகத்தைப் பிரகாசிப்பிக்கிறாள்—(எ-று.) ஸ்வஸா தானே நடப்பவளாதலின் இரவு என்பார் ஸாயணர். ஸமநகா இவ்ரா: என்பதற்கு ஒருமிக்கச் செல்லும் மின்னற் கூட்டத்தைப் போல அல்லது சூரியனது கதிர்களைப் போல வென்று பொருள் கூறுவர் ஸாயணர். வ்ராதா: என்னுஞ் சொல் வேதத்தில் வ்ரா: எனக் கடைக்குறையாக நின்றது என்பார். ஆனால் மேனாட்டாசிரியரோ உத்ஸவம் பார்க்கக் கூட்டமாகச் சேர்ந்து செல்லும் ஸ்திரீகளைப்போல என்று உரை கூறுவர். பகலின் முதன் முதல் ஒளியோடு விளங்குபவள் உஷையாதலின் மூத்தா ளென்றார். ஸ்வஸா சுவசை யென வாயது.

9. முன்னுறு பகலிற் றோன்றி முடிந்தவச் சுவசை கட்குப்
பின்னுறு மொன்று நாளும் பிறங்கிய முறையின்; நவ்ய
மன்னுறு முஷையுந் தொன்மை மருவிய வவற்றைப் போலத்
துன்னுறல், நன்னா ளோடு வெகுதனந் தொகுத்து மெய்யே.

(இ-ள்.) முன் சென்ற பகல்களில் உதித்து முடிந்த அச்சகோதரிகளாகிய உஷைகளுக்குப் பின்னால் தினந்தோறும் ஒரு உஷை அவ்வண்ணமாகவே தோன்றும். நூதனமாகத் தோன்றும் இவ்வுஷை பழைமையாகிய அவ்வைகல்களைப் போலவே சோபனகர்மங்களோடு கூடிய நாளோடும், வெகுவித செல்வத்தோடும் நிச்சயமாக உதித்துப் பிரகாசிக்கட்டும்—(எ-று.) தாமே வருவதாலும் ஒன்றுக் கொன்று ஸஹோதர பாவத்திலிருப்பதினாலும் பல நாளும் தோன்றும் வைகல்களை ஒருவர்க்கொருவர் ஸஹோதரிகள் என்றார்.

10. மகோனியா முஷையே யச்ஞ மனிதரை யெழுப்பாய் நன்கே;
அகோரராம் வணிகர் தூக்க நீங்கலா தழுந்திச் சாகல்;
மகோனியே, யவிச்செல்வத்தின் மருவுவோர் பக்கல் பூர்த்தி
தகோதயமாகத் தோன்றல், சுரைப்பிக்கு மெய்வாக் கோயே!

(இ-ள்) தனம் பொருந்திய உஷைத் தேவியே! யச்ஞஞ் செய்யும் தனகர்த்தாக்களாகிய யஜமானரை நன்றாய் எழுப்பி விடுவாயாக. லோபிகளாகிய கோரமிகுந்த வியாபாரிகள் தீர்க்க நித்திரையி லழுந்திச் சாகட்டும். மகோனி! உலகத்துப் பிராணிகளைக் கெழப்பிநித்தும் ஸூந்ருதா தேவியே!

## மண்டலம் 1. சூக்தம் 125.

அவியாகிய செல்வத்தோடு உன்னை யடைபவர்களிடத்து ஏராளமானது தோன்றும் வண்ணம் உதித்துப் பிரகாசிப்பாயாக—(எ-று.) மகோனி, செல்வவதி. ஸூந்ருதா, பிரிய ஸத்திய வாக்குள்ளவள், மனிதர்களை நன்றாகநடத்துபவள் என்றும் பொருள் படும். இவ்விரு மொழிகளும் உஷையைக் குறித்து நின்றன.

வருக்கம். 8.

11. யுவதியா மிவளுங் கீழைத் திக்கினின் றுதித் தொளிர்ந்தாள்;
கவனமா யருண மாவின் குழுவினைப் பூட்டா நின்றாள்;
தவள நல்லொளி விரித்தே சார்குவா ளிருளைச் சீத்தே;
தவனனும் வீடு தோறுஞ் சார்ந்தொளி தயங்கு வானே.

(இ-ள்.) யௌவனவதியாகிய இவ்வுஷை கிழக்குத் திக்கினின்று உதித்து விளங்கினாள். செந் நிறமான குதிரைகளை (கிரணக் கற்றைகளை)த் தனது தேரிற் பூட்டுகிறாள். நல்ல காந்தியை வீசி இருட்டை யோட்டி விடுவாள். அச்சமயத்தில் அக்கினியும் அக்கினி ஹோத்ராதி காரியங்களுக்காக வீடுகடோறும் அமர்ந்து பிரகாசிப்பான்—(எ-று.) தவனன், அக்கினி.

12. உனதொளி தோன்றப் பட்சி தாமுந் தங்கூட்டி னீங்கும்;
மனிதரு முணவு தேட வழங்குவார் தந்தொழிற்கண்;
கனிதரு முஷையாந் தேவீ, கண்ட தன்னகத் துறைந்தே
யினிதவி யீயு மர்த்யற் கெண்ணரும் பொருள் சேர்ப்பாயே.

(இ-ள்.) உஷைத்தேவியே! உனது பிரகாசமானது தோன்றப் பறவைகளும் தம் கூட்டை விட்டெழுந்து மேலே பறந்து செல்லும். மாந்தரும் பொருள் தேடுவான் தமது கிருஷி வாணிஜ்யம் முதலிய தொழில்களைச் செய்யச் செல்லுவர். தமது வீட்டின் கண்ணிருந்து யக்ஞம் புரியும் தாசுஷனாகிய மர்த்தியனுக்கு அளவற்ற செல்வத்தை (அல்லது மேனாட்டாசிரியருரைப்படி நன்மையை) நீ சேர்ப்பாய்—(எ-று)

13. புகழ் பெறத் தக்கீ, ரென்றன் மறையினாற் புகழ்ந் தீராகல்;
அகமுற வெமை யுகப்பீ,ரெம்பொருள் வளர்த்தீர்; உந்தந்
தகவுறு காப்பாற், றேவிமா ரெனு முஷைகாள், யாங்கள்
மிகவுற னூற்றோ டாயிரம்பெற மேவும் பொன்னே.

(இ-ள்.) புகழத் தக்கவர்களே! எனது இவ்விரண்டு சூக்த ரூபமான மறையினாலும் புகழப் பட்டவர்களாவீர்களாக. எமது அன்பு நிறைந்தவர்களே! எமது பொருளை விருத்தி செய்தீர்கள். உம்முடைய ரட்சணையினால் யாங்கள் நூற்றுக்கணக்கான செல்வத்தையும் ஆயிரக்கணக்கான தனத்தையும் பெறுவேமாக—(.று-எ) புகழ்ந்தீர் செயப்பாட்டு வினைப் பொருளில் வந்தது.

வருக்கம். 9.

## 125. மண்டலம். 1. அநுவாகம். 18 சூக்தம். 5.

7 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கட்சிவான்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப் 4, 5, ஜகதி; தேவதை ஸ்வநயன்.

# அஷ்டகம் 2. அத்தியாயம்1.

1. காலையி லுயிரி னிஷ்டி யாதரங் களிப்பினிய
.வேலுறு மவற்றை யோர்ந்தே யேற்றன னியைத்தான் றந்தை
பாலுற; அவற்றா லாயுள் பல்குற மாந்த ரோங்க
மேலுறு வீரர்ப் பெற்று வேண்டினன் பொரு ளோங்கற்கே.

(இ-ள்.) (பாவயவ்யனது புத்திரனாகிய ஸ்வநயன் என்னும் அரசன்) அதிகாலையில் உயிர்போல வந்து நிஷ்கம் முதலிய பொன்னையும் மணியையும் கட்சிவானுக்குக்கொடுத்தான். அவைதீங்கற்றவை 'யென்றுணர்ந்து கட்சிவான் அவற்றை வாங்கிக் கொண்டுபோய்த் தந்தையினிடத்துத் தந்தான். அப்பொருள்களால் ஆயுளும் வேலைக்காரரும் விருத்தியாக வீரர்களாகிய புத்திரரைப் பெற்று அச் செல்வம் பின்னும் விருத்தியாகும் வண்ணம் ஸ்வநயனது கொடையைப் புகழ்ந்தான்—(எ-று.) ஈண்டு ஒரு இதிஹாஸம் சொல்லப்படுகிறது. தீர்க்கதமஸன் புத்திரனாகிய கட்சிவான் என்னும் பெயர் கொண்ட ரிஷி பிரமசரியம் அநுஷ்டித்து வேதாப்பியாஸத்திற்காகக் குருகுல வாஸம் செய்து வேதங்களை நன்றாய் அத்தியயநஞ்செய்து விரதங்களையு மநுஷ்டித்து மீண்டும் வீட்டிற்குத் திரும்பி வரும் வழியில் இரவில் படுத்துக்களைப்பாறினான். விடியற் காலத்து பாவயவ்யனுடைய புத்திரன் ஸ்வநயன் என்னும் அரசன் அநுசரர்களோடுகூட வந்தவன் கட்சிவானைப் பார்த்து அவனருகில் உட்கார்ந்தான். அவனது முகக்காந்தியில் மயங்கி அவ்வரசன் அவனது கையைப் பற்றிக் கொண்டு தனது கன்னிகையையவனுக்குக் கொடுக்கும் எண்ணத்துடன், 'பகவானே! தேவ, நீர் யாருடையபிள்ளை? தமது பேரென்ன? தங்கள் தாய்தந்தையர்கள் யார்?' என்று அவனது விருத்தாந்தத்தைக் கேட்டான். அவனது விருத்தாந்தத்தைத் தெரிந்து அவ்வரசன் அவனுக்கு ஸம்பாவனை செய்யவேண்டுமென வெண்ணி, ஸந்தோஷசித்தனாய், தன்வீட்டுக்குக் கூட்டிக்கொண்டுபோய் மதுபர்க்கம் வழங்கி, ஆடையாபரணங்கள் ஈந்து பூஜித்து, தேரோடுகூடிய 10 கன்னிகைகளும், நூறுநிஷ்கமும், நூறுகுதிரைகளும், நூறுகாளைகளும், பின்னும் அறுபதினாயிரம்(?)பசுக்களும் 11 தேரும் தந்தான். அவையெல்லாவற்றையும் வரிசையாய் வாங்கிக்கொண்டு தீர்க்கதமஸனிடத்து வந்து அவற்றைக் காட்டினான். கட்சையென்னுங் கடிவாளத்தோடு' கூடினதாலன்றோ கட்சீவான் என்ற பெயர் அவனுக்கு வந்தது! குதிரைக் கடிவாளம் ராஜாக்களுக்கே உசிதமானது. அதை ராஜாக்களிடத்திலிருந்து வாங்கக்கூடாது. வேட்பித்தற்காகவும், ஓதுவித்தற்காகவும் விசுத்தத்திற்காகவும், பொருள்பெறலாமென்பதும், அவனிடத்திலிருந்து பெறப் பிராம்மணனுக் கதிகாரமுண்டே யொழியக் க்ஷத்திரியனுக்கில்லை யென்பதும் ஸ்மிருதி. ஆனால் இதில் தோஷமில்லை. ஏன்? கலிங்கவரசனது புத்திரன் கிழத்தன்மையால் தனக்குப் புத்திரோற்பத்தி செய்யுஞ் சக்தியின்மையை யெண்ணி, புத்திரோற்பத்திக்காகத் தீர்க்கதமஸன் என்னும் ரிஷியைக்கேட்டான். அவனது மனைவி உசிஜ் என்பாள் கிழத்தன்மையால் மஹாரிஷியையணுகுவதற்கு வெட்கித் தனது வேலைக்காரியாகிய உசிஜைக்குத் தன்னுடுப்பை யுடுத்தியனுப்ப, ரிஷி அதனையுணர்ந்து அவளை மந்திரித்த நீரால் புரோக்ஷித்துப் பரிசுத்தமுள்ளவளாக்கி ரிஷி புத்திரியாக மாற்றி அவளோடு ரமித்தான். அப்பொழுது பிறந்தவன் கட்சிவான். இக்கதை மேல் மண். 1 சூக். 51 செய். 13ல் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அங்கே அங்க தேசவரச னென்றார். அவன் பெயர்தெரியவில்லை. அவனது பிதாவின் பெயர்

## மண்டலம் 1. சூக்தம் 125.

கலிங்கன் போலும், க்ஷத்திரிய சம்பந்தத்தால் அவனுக்கு கட்சீவானென்ற பெயரேற்பட்டது. தீர்க்கதமஸன் என்ற ரிஷிக்கு பிறந்ததால் பிராஹ்மணத்துவம் வந்தது. அதனால்தான் இவன் தானம்பெற்றதில் தோஷமில்லையென்க. மதுபர்க்கம், தயிர், நெய், தேன், கலந்து ஒருவனது கிரகத்துக்குக் வந்தகவுரவமான அதிதிக்கு அளிப்பது. அப்படி அளிப்பதற்கு மதுபர்க்கவழக்கமென்று பெயர். கட்சீவான் தன்னைப் படர்க்கைப்படுத்திக்கொண்டான். தந்தைபாலுறவென்பது ஸாயணருரையைநோக்கிச் சேர்த்தது. மேனாட்டாசிரியர். 'அதிகாலையில் வந்து அவன் தன் யாகதனத்தையளிக்கிறான். விவேகியான அரசன் அவனையேற்று அதிதிஸத்காரஞ் செய்கிறான். அதனால் தன் ஆயுளையும் ஸந்ததியையும் விருத்திசெய்துகொண்டு அவன்வீரர்களாகிய புத்திரர்களோடு ஏராளமான செல்வத்தைப் பெறுகிறான்.' என்று மொழிபெயர்த்துக் கட்சீவான் பேசுவது என்பார்.

2. வலையுறும் வேட்டை போல வழியி லுன்றனை மறித்துத்
தலையுறு தனத்தை யிந்தோன் றனக்கரி மிகு செல்வத்தை
நிலையுற வீகல்; காலைவருபவ, கணக்கி னன்மா
விலையுறு பொன்னொடாவு மேவிபோ னவனே யாகல்.

(இ-ள்.) காலையில் வருபவனே! வலையிற்படும் மிருகபட்சிகளைப் போல உன்னை வழிமறித்து உனக்குப் பசு, குதிரை முதலிய உத்தமமான செல்வத்தை யளித்தவனுக்கு பரமேசுவரனாகிய இந்திரன் மிக்க செல்வத்தை யளிக்கட்டும். அவனே கணக்கில்லாத நல்ல பசுக்களையும், நல்ல தங்கத்தையும், நல்ல குதிரைகளையும் பெற்றவனாகட்டும்—(எ-று.) இது கட்சிவான் செல்வத்தோடு வந்ததைக் கண்ட இவனது பிதா அரசனைப் புகழ்ந்தது. அரி, இந்திரன். வேட்டை ஈண்டு இலக்கணையாற் வேட்டையிற் பட்ட மிருகம் பட்சிகளைக்குறித்தது. மேனாட்டாசிரியர் ஸ்வநயன் பேசுவது இச்செய்யுளென்பார். அதுபொருந்தாமை காண்க.

3. இட்டியின் புதல்வ னன்மைக் கன்மனைக் காணு மிச்சை
யொட்டியா னின்றுகாலை யிரும்பொருள் வயங்குந்தேரிற்
கிட்டினேன்; மதபார் வல்லி கிளர்ச்சாறஞ்சா றவனுக்கீகல்;
மட்டிலா வீரநாதன் வளம்பெறத் துதிப்பாய் நன்கே.

(இ-ள்.) இஷ்டியின் புத்திரனாகிய (யக்ஞஞ் செய்வோனாகிய வென்பது பொருள்) நற்கர்மவானைக்காணும் ஆசையோடு யான் இன்று பிராதக்காலத்திற் செல்வம் நிறைந்த தேரோடு வந்தேன் மதத்தைத்தரும் ஸோமவல்லியின் சாற்றை யவனுக்களிப்பாயாக (அதாவது ஸோமயாகம் புரிக என்றபடி.) வீரர்களுக்குத் தலைவனாகிய அவனைப் பிரியஸத்தியவாக்குக்களாகிய ஸ்தோத்திரங்களால் வளம்பெற வாழ்த்துக—(எ-று.) இச்செய்யுள் கட்சீவான் கூறுவது. அவனுக்கு இந்திரனுக்கென்பார் மேனாட்டாசிரியர். வீரநாதனும் அவனே. ஆனால் ஸாயணர் புத்திர பிருத்யாதி செல்வங்களைத்தருபவனை யென்று பொதுவாக உரைகூறியுள்ளார்.

# அஷ்டகம் 2. அத்தியாயம் 1.

(ஷை வேறு.)

4. சுகமதனைவிளைப்பவனுமொழுகும்பான்மடியாக்கள்
தோயும்யாக
மகமதனிமுற்றியவனினியாற்றுநிற்பவனென்றமைந்து
ளோர்க்குத்
தகைமையுறவொழுகுவவால்;ஈகையுளோன்வள்ளலெனச்
சார்ந்துளோருக்
ககமதனிற்சீர்நிறைக்குநெய்த்தாரையெவ்விடத்துமார்ந்து
செல்லும்.

(இ-ள்.) சுகத்தை விளைப்பனவான பாலொழுகும் மடியோடு கூடிய பசுக்கள், யாகத்தைச்செய்து முடித்தவனுக்கும், இனிச்செய்யப் புகுபவனுக்கும் நிறைந்து நிற்கும். தானத்தின் மகிழச் செய்பவனுக்கும், எப்பொழுதும் வரையாது கொடுத்து நிரப்புவோனுக்குமாகிய விருவர்களுக்கும் இல்லத்திற் சீர்த்தியை அல்லது உணவுப்பொருள்களை நிறையச்செய்யும் நெய்த்தாரை (பூரணவளம் என்றபடி) யெல்லாப்பக்கத்திலும் நிறைந்து ஓடும் —(எ-று.) மகஞ்செய்தோன் செய்வோனென விருவர். தானம் கொடுப்போன், வரையாது தந்து பூரிக்கும் வள்ளலென விருவர்.இச்செய்யுள் ஸோமயாகஞ் செய்வோன் பெறும் பலனைக் கூறியது.

5. நாகத்தினுபர்தலத்தேதேவர்களுளொருவனெனநண்ணிக்
கீர்த்தி
யாகத்தினுறுவான்அக்கொடைசிறந்தயஜமானன்; அணைந்த
சாரம்
வேகத்தினுறநீரோட்டங்களவற்கெனவொழுகுமிகுந்த
செல்வந்
தாகத்தினவன்பெறுவானிப்பூமிப்பயனிறைந்துதழைக்கு
மென்றும்.

(இ-ள்.) தானமிருந்த அந்த யாககர்த்தா விண்ணுலகத்தில் உன்னதத்தானத்தையடைந்து தன் சரீரங்கீர்த்திபெற வாழ்வதேயன்றித் தேவர்களுள் ஒருவனாக ஆண்டு விளங்குவான். ஸாரபுஷ்டியுள்ள நீரோட்டங்கள் அவனுக்கென ஓடும். ஆசையோடு அவன் செல்வம்பெறும் வண்ணம் எல்லாக்காலத்திலும் இப்பூமி ஸஸ்யாதி பலன்கள் நிறைந்து விளங்கும்—(எ-று.) மேனாட்டாசிரியர் இந்தத்தட்சிணை யவனுக்கு எப்பொழுதும் ஸம்ருத்தியைத் தரும் என்று பொருள்கூறுவர். ஆனால் ஸாயணரோ இயம் என்பதற்கு இப்பூமி தட்சிணை ஸஸ்யாதி பல ஸம்பாதன சக்தியுள்ளதாய் ஸதாஸர்வகாலம் பிரீதே ஸந்தோஷப்படுத்துகிறது என்று பொருள் கூறுவர்.

## மண்டலம் 1 சூக்தம் 126.

(ஷை வேறு.)

6. தக்கணை யளிப்பார்க் கென்றே தாங்கிய விச் சிறப்பு;
தக்கணை யளிப்பார்க் கென்றே சூரியன் வான் றயங்கும்;
தக்கணை யளிப்பார் தாமே மரணமில் தன்மை சேர்வர்;
தக்கணை யளிப்பார் தாமே யாயுளைப் பெருக்கிக் கொள்வர்.

(இ-ள்.) தட்சிணை கொடுக்கின்றவர்களுக்காகவே இவ்வுலகத்தில் தோன்றும் சித்திரவர்ணமான மணிமுத்தாதி திரவியங்கள் தாங்கப்பெற்றன. தட்சிணைதருபவர்களுக்காகவே சூரியன் ஆகாசத்தில் பிரகாசிக்கிருன். தக்ஷிணை யளிப்பவர்களே அமிர்தத்தை யடைகிறார்கள். தக்ஷிணை யளிப்பவர்களே தமது ஆயுளை விருத்திசெய்துகொள்ளுகிறார்கள்—(எ-று.)

7. ஆற்றுவோர்பாவதுக்கமடைந்துறுதொழுகல்;நோன்பை
யாற்றுவோர்கல்வியாளர்சரையுறுதணைக;மற்று
மேற்றமாரன்னியன்றுனவர்கடிக்காவலார்க;
ஆற்றலான்றன்னைச்சோகமடைந்துநன்கழிக்கமாதோ.

(இ-ள்.) அவி முதலிய தானங்களை யாற்றி ஸந்தோஷிப்பிப்பவர் பாபத்தையும் துக்கத்தையும் அடையாது ஒழுகட்டும். விருதங்களை யாற்றுபவரும், கல்வியாளர்களும் ஆகிய ஸூரிகள் கிழத்தன்மையை யடையாதிருக்கட்டும். இவர்களன்றித் தகுதிவாய்ந்த பிறமனிதர் இவர்களது பாதுகாப்பிலமைக. அவிமுதலிய தானங்களைச் செய்யாதவனைத் துக்கம் நன்ருகச் சூழ்ந்தழிக்கட்டும்—(எ-று.)

வருக்கம் 10.

## 126. மண்டலம் 1. அநுவாகம் 18 சூக்தம் 16.

### 7 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: 1–5 கட்சீவான், 6 பாவயவ்யன் 7 ரோமசாவென்னும் பிரஹ்மவாதினி; வடமொழிச்சந்தம்: 1-5 த்ருஷ்டுப், 6, 7 அநுஷ்டுப். தேவதை: பாவயவ்யன், ரோமசா.

ஈண்டு பாவயவ்யனென்பது ஸ்வநயனையே குறிக்குமென்றும் ரோமசா (உரோமசை) ஸ்வநயனது மனைவியென்றும்அநுக்கிரமணிகைக்காரர்சொல்லுவர். கடைசி 2 ரிக்குக்கள் ஸ்வநயனுக்கும்அவன் மனைவியாகியரோமசைக்கும் ஸம்வாதரூபமாயுள்ளது. ரோமசா பிரஹ்மவாதினியானதுபற்றி ரிஷியையானுள். 6ம், 7ம், வேறு சந்தவிலிருப்பதினுலும், முன்னைந்து ரிக்குக்களுக்கும் இவற்றிற்கும் ஸம்பந்த மில்லாததனுலும் இவையிண்டப்புகுத்தியனபோலுமெனவும் இவையக்காலத்திலிருந்த ஜந ரஞ்சகப்பாட்டுக்களின் பாகங்கள் எனவும் மேனுட்டாசிரியர் கூறுவர்.

1. நந்துமாயிரத்த சோம யாகங்கள், கீர்த்தி நாடி
முந்துற வெனக்களித்த மொய்ம்பினிற்றேலா மன்னன்

# அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

சிந்துவின் கரையின் வாழுந் திரனும் பாவியற்குத்
தந்தனன் பெருமை சார்ந்த தோமங்க ளன்பி னன்கே.

(இ-ள்.) கீர்த்தியை யிச்சித்து ஆயிரஞ் ஸோமயாகங்கள் செய்யும் படி (யெனக்குப்பொன்) தந்த தோல்வியே யடையாத வரசனும், ஸிந்துவின் கரையில் வாழ்பவனுமாகிய பாவ்யன் அல்லது பாவயவ்யன் புத்திரன் ஸ்வயனுக்காகப் பெருமை வாய்ந்த இந்தஸ்தோமங்களை மிகுந்த அன்பு கூடிய மனத்தோடும் நன்றாகச்செய்து கூறுகிறேன்—(எ-று) பாவியற்கு என்றது ஈண்டு பாவ்யன் அல்லது பாவயவ்யன்மகன் ஸ்வநயனைக்குறித்து நின்றது. ஸிந்து, நதியென்பார் மேனுட்டாசிரியர்; ஸமுத்திரமென்பார் ஸாயனர். எதையேனுங்கொள்க.

2. பெறுகவென் றளிக்குந்தானப்பெரியவன்மன்னனின்று
மறுவிலாவசுவநூறுமாலைகணூறுபெற்றேன்;
நிறுவுசாசுவதக்கீர்த்தியின் னுறவிரித்தான்; ஆக்கள்
குறைவறநூறுகொண்டேன் கட்சிவான்யானும்வல்லே.

(இ-ள்.) கட்சிவானாகிய யான் உத்தமதானசில மன்னனாகிய ஸ்வநய னிடத்தினின்றும் நூறு கதியிற் சிறந்த குதிரைகளையும், நூறு மாலைகளை களையும், நூறு பசுக்களையும் ஸ்தோத்திரஞ்செய்த தட்சணமேயடைந்தேன். அவனும் சாசுவதமான கீர்த்தியை விண்ணுலகமட்டும் பாவவித்தான்— (எ-று.) நிஷ்காந் என்பதற்கு ஆபரண விசேஷமென்பார் ஸாயனர் அது பொன்னுலானது. அசுவம், நடையிற் சிறந்தது என்பது பொருள். மன்னன் ஸ்வநயனும்.

நிஷ்கம் ஒருவகை நாணய மென்றும் அதுவும் கனிஷ்கன் காலத்ததென் றும், நிஷ்கமே கனிஷ்கமென்னுஞ் சொல்லின் தலைக்குறையென்றுங்கூறி வேதம் அவ்வளவு புராதன நூலல்லவென்று ஸாதிக்கத்தொடங்குவார் ஒரு சாரார். இதைப்பற்றிச் சௌநகாது காலவரையறையைக் கூறுமிடத்துக் கூறுவர் இந்நூலாசிரியர்.

3. வதுக்களேறியதேர்பத்துஞ்சுவநயனிந்தமாக்கள்
பதித்தநற்றிறங்கறுத்தவவையுஞ்சார்மருவிநின்ற;
பதிற்றறுபத்துநூறுபசுக்களும்பின்னருற்ற;
வதித்தநாளோயுங்காலையுற்றனன்கட்சிவானே.

(இ-ள்.) வதூக்களேறிய பத்துத் தேர்களும், ஸ்வநயனளித்த கறுப்புநிறமுள்ள குதிரைகளும் கட்சிவான் பக்கத்தில் வந்து நின்றன. 60000 பசுக்களும் அவனுக்குப்பின் வந்தன. நாள்முடியு மக்காலத்தில் (அல்லது பொழுதுபடுங்காலத்தில்) கட்சிவான் அவற்றைப்பெற்றான்— (எ-று.) வதுக்கள். கன்னிகைகள் கன்னிகையென்றது பெட்டைக் குதிரையாலிழுக்கப்பெற்ற வென்றுவது அல்லதுதாஸீஜனங்களோடுகூடிய வென்றுவது பொருள்கொள்ளுகவென்பார் மேனுட்டாசிரியர் (Griffith.) அவரே மண். 6 சூக். 27. செய். 8 ஐ உதாரணமாகக்காட்டுவர்.

## மண்டலம் 1 சூக்தம் 126

4. சோணமார்நாலுபத்துத்தூசகதம்பத்தாத்தேரோ
ணுணையிற்பந்தியாகவாயிரர்தொடரவீர்ப்ப;
பூணுறுகலினத்தோர்கள்,பச்சிரன்புதல்வர்,மத்த
வாணர்பொன்னணியார்மாக்களைடைமலிந்தனமத்தித்தார்.

(இ-ள்.) (தேருக்கு நான்கு குதிரைகளாகப்பூண்ட) நாற்பது சிவப்புக் குதிரைகளும் பத்துத்தேரோடு கூடியவணுகிய கட்சிவானுடைய ஆக்ஞையினால் ஆயிரம்பேர் பின்தொடர்ந்து வர முன்னே யிழுத்துச்செல்லும். (கட்சீவந்தர்களாகிய) கடிவாளந்தாங்கியவர்களாகிய பஜ்ர கோத்திரத்து மக்கள் களிக்கடலில் மூழ்கினவர்களாய்ப் பொன்னுபரணங்களணிந்து வேகமாகச் செல்லும் அக்குதிரைகளை (நடையலுப்புத்தீர நன்றாக) த்தேய்த்தார்கள்—(எ-று.) கட்சீவான் பஜ்ஜிர கோத்திரத்தான் அல்லது அங்கிரஸ வம்சத்தான். இக்கோத்திரத்தவர்கள் யாவரும் கட்சிவந்தர்கள் என்று சொல்லுவது மரபு. என்? இவர்களுக்கும் குதிரைக்கடிவாளம் பிடிக்கும்அதிகாரமுண்டுஆதலின். மண் 1 சூக்.125 செய்.1 உரையிற்காண்க.சோணம், சிவப்பு.

5. பச்சிரர்காள்!உங்கீர்த்திபழகுறச்சகடத்தோடு
மிச்சையினன்பிற்றேயுமேற்றமார்சுற்றத்தோடும்
நச்சியகுடியினீட்டநந்துவீ,ருமக்காமுன்னர்
மெச்சுமூவெட்டுச்சேணப்பரியுபாற்பசுவுமேற்றேன்.

(இ-ள்.) பச்சிரர்களே! கீர்த்தி பரவவேண்டுமென்று விரும்பி, வண்டிகளோடும் (பரஸ்பர அநுராகத்தோடு கூடிய) அன்பிற் சிறந்த பந்துவர்க்கங்களோடும் பிரஜாஸமூகத்தைப்போல விளங்குபவர்களே! உங்களுக்காகச் சேணத்தோடுகூடிய சில குதிரைகளையும், பல பால்தரும் பசுக்களையும் முன்னரே யடைந்தேன்—(எ-று.) வண்டியென்றதால் ஸோமயாகத்தை இலக்கணையாற் கொள்ளுகவென்பார் ஸாயணர். நந்துவீர் உவமைப்பொருளில் வந்தது. மூவெட்டு என்பது குறிப்பிட்ட ஸங்கியைக்காட்டாது சில பலவென்று பொதுப்படக் கூறுமென்பார் ஸாயணர். ஆனால் மேனாட்டாசிரியர் மூன்று குதிரைகளையும் எட்டுப்பசுக்களையுமென மொழிபெயர்ப்பர். பச்சிரர் அங்கிரஸ கோத்திரத்துக் கட்சிவானது சுற்றத்தார். மேல் 11 தேர், 60000 பசு முதலியவற்றைத் தந்தைக்களித்து விட்டான். அவற்றையே மீண்டும் சுற்றத்தாருக்குத் தருவதாகச் சொல்வது அஸம்பவம் ஆதலால் 'அக்கொடைகளைப் பெறுவதன்முன் உங்களுக்காகவும் சில குதிரைகளையும் பசுக்களையும் தானமாக வாங்கியிருக்கிறேன்' என்று கட்சிவான் சொன்னபடி.

(வேறு.)

6. அகப்புறத்தவாங்கலல்கட்கணைந்தவள்சுரத
மிகப்பெருக்குவாள்கசிகையினிரந்தரங்கிரீடித்
துகப்புறச்சதப்புணர்ச்சிகளளித்தனளெனக்குத்
தகப்புரிபவள்மதசுகந்தவிவொமுகிவளே.

(இ-ள்.) பொருள் வெளிப்படை-(எ-று.) பாவயவ்யனாகிய ஸ்வநயன் தன் மனைவி யின்னுஞ் சமையாதவளென உட்கொண்டு பரிஹாஸமாகப் பேசிய திச்செய்யுளென்பார் ஸாயணர். இச்செய்யுளும் இதற்கடுத்த செய்யுளும் வேறுசந்தத்திலிருப்பதாலும், இச்சூக்தத்துக்குச் சம்பந்தமில்லாததாகக் காணப்படுவதினாலும் பிற்காலத்து உலக வழக்கிற் சாதாரணமாக விருந்த விச் செய்யுட்களை யாரோ விடைப்புகுத்தினர்போலும் என்பார் மேனாட்டாசிரியர். கசினையின் கசிகாவைப்போல 'காசிகா நாமஸாதவத் ஸாநுகூலீ, ஸாயதாப் பத்யா ஸஹ(ச்)சிரகாலம் க்ரீடதி நகதாசித்தபி விமுஞ்சதி ததா ஏஷாஅபி' என்பது ஸாயணருரை. ஆனால் மேனாட்டாசிரியர் தமது அநுபந்தத்தில் 'illa quae musteiae similis' என்று மொழிபெயர்த் தெழுதியிருக்கிறார். ஈண்டு(Weasei)ராஜகீரிப்பேட்டைப் போலவெனப் பொருள்படுகிறது. யாதுரீயென்பதற்கு வெகு ரேதோ யுக்தா வென்று ஸாயணர் கூறினும் அது ஒரு அடிமைப் பெண்ணின் பெயராயிருக்கலாம் என்பார் (Ludwig) லுட்விக்கென்பவர். இப்பாட்டு உரையின்றியே வெளிப்படையாம். நிரந்தரம் எப்போதும் என்க. சதம் மிகுதியைக்குறித்துநிற்குமெண். இதனடுத்த பாட்டு முன்னரும் இது பின்னரும் இருக்கவேண்டுமென்பது மேனாட்டாசிரியது கோள்.

7. அருகினுற்றெனதிராசியமறிகுவாய்தைவந்
தருகித்தோன்றிடுமற்பகேசத்ததென்றுளத்தின்
மறுகிடல்; முழுவளர்ச்சிசா ரவயவத்தினள்யான்
பெருகுரோமசை பேசுகாந்தாரத்துமறியின்.

(இ-ள்.) இது பிரஹஸ்பதி புத்திரியும் பிரஹ்ம வாதினியுமாகிய ரோமசா தன்னை யிகழ்ந்த கணவன் ஸ்வநயனை நோக்கிக் கூறியது.உரைவெளிப்படை—(எ-று.) இராசியம், ரஹஸ்யம் அந்தரங்காங்க மென்க. தைவரல் தடவல். தைவந்தறிகுவாயெனக்கூட்டுக. அற்பகேசம் புன் மயிரென்ப. ரோமசை ரோமநிறைந்தாள். காந்தாரம் இப்பொழுது காண்டஹார் என்று சொல்லப்படும் பிரதேசம். மறி ஆட்டுக்குட்டி மாதர் பிரஸவ நேருங்காலும் மழிப்பது சாஸ்திர நிஷித்தமான தப்பற்றி ரோமசாவென்றாள் என்பார் ஸாயணர் 'பெருகுமின்பளிமயிரள் காந்தார நாட்டணங்கின்.'என்றும் கடையடியைப் படிக்கலாம் காந்தார தேச ஸ்திரீகளைப்போலவென்பது தொழிலுவமை. இவ்விரண்டு செய்யுட்களையும் மொழிப்பெயர்க்காதிருந்திருப்பதே நலமாயிருந்திருக்குமாயினும் நான்முழுமையு முண்மைக்காக மொழிபெயர்த்தாரென்க.

வருக்கம். 11

## 127 மண்டலம். 1. அநுவாகம். 19 சூக்தம் 1.

11 இருக்குக்கள் கொண்டது.

*ரிஷி: திவோதாஸன் புத்திரன் பருச்சேபன்; வடமொழிச் சந்தம்; 1-5 அத்யஷ்டி(3-ம் சீரும் 7-ம்சீருங்காய்ச்சீர் வந்த எண்சீர்க்கழிநெடில்.),6அதி (Dhriti)த்ருதி (1.2,3,5,6,7 சீர்கள் காய்ச்சீர்வந்த எண்சீர்க்கழி நெடில்.); தேவதை: அக்கினி.*

தசராத்திரத்தில் 6ம் பகலில் அக்நீத் (Dh) ரனாற் சொல்லப்படுவது.

## மண்டலம் 1. சூக்தம் 127.

1. வெகு தனக்கொடை வசு மொய்ம் புதித்தவன்
விரி யுயிர்க்கண மிகவுற் றறிந்தவன்
தகவு விச்சைக டெரிதந்த விப்பிரன்
தகைய வங்கியை யவி யீகுவோனென
மிகவு மென்னுவன்; மகரன் கியற்றுவோன்
விறை நிமிர்ச்சியிற் சுரர்மாட் டளியொடு
முகு மிழுதுகொண் டொளிர் தேச் சுவாலையி
னுருகுமவ்விழு துணுவான் விரும்புவான்.

(இ-ள்.) மிக்க தனத்தைத் தரும் வள்ளலும், வஸுவும் (செல்வ காரணனும்) (அரணிக் கட்டைகளைத் தேய்க்கும்) பலத்தினாலுற்பவிப்பவனும், ஜாத வேதஸனும், வித்தைகளை யறிந்த மேதாவியாகிய விப்பிரனை யொத்தவனும், ஆகிய அக்கினியை ஹோதாவாக வெண்ணுவேன். (துதிப்பேன்என் பார்ஸாயணர்.) நல்ல யாகத்தோடு கூடியவனும், நிமிர்ந்து நின்று தேவர்களிடத்து அவியைச் சுமந்துதரும் கிருபையோடுகூடி, ஒழுகும் நெய்யினால் பிரகாசமுற்றுநிற்கும் தேவனுமாகிய அக்கினி தனது சுவாலையினால் அந்நெய்யைத்தானே உண்ண விரும்புவான்—(எ-று) தே, தேவன். இழுது, நெய்.

2. யாக வுத்தம, னுயரங்கிரர்த்தலை
யாக வுற்றவன், மறைவிப்பிரர் நினை
வாருமம் மறையொடு, சுக்கிரன், றக
வாக வட்ட முலவு விண்மணிப்புரை
யாக மக்களு ளவியோத, னிச்சைக
ளாளும் விப்பிர, னொளிர்நிக் கசத்தினன்,
போக விச்சையி னெறிபோற்று மக்களும்
புகழுவோ, னுனை மகவோ, ரழைப்பமே.

(இ-ள்.) யாகவுத்தமனும், அங்கிரர்களிற் சிறந்தவனும்; வெளுத்த சோதியோடு கூடியவனும், சூழ்ந்துவரும் சூரியனைப் போல யாக மாந்தருள் உயர்வான ஹோதாவும், இச்சைகளை யளிக்குங்காலையும், சுவாலையாகிய செங்குஞ்சியையுடையவனும், ஸ்வர்க்க முதலியசாமிய பலன்களை விரும்புவோராற் போற்றப்படுபவனும் மேதாவியுமான வுன்னை, மந்திரங்களை நன்குணர்ந்த விப்பிரர்கள் கருதுகின்ற மந்திரங்களால் யஜமானர்களாகிய யாங்கள் அழைப்போம்—(எ-று.). விப்பிரன், மேதாவி; வடமொழி மூலத்தில் இப்பதம் விளியாக நிற்கிறது. புகழுவோன் செயப்பாட்டுவினைப் பொருளில் வந்த செய்வினை. மகவோர் யாகஞ் செய்வோர். போக விச்சைகள் ஸ்வர்க்காதி போக வாசைகள். ஓதன், ஹோதா.

3. பரவு மொய்ம்பொளி முழுதும் பரந்தவன்
பரசு வேயெனப் பதகர்த் துடைத்திடும்;
விரவு வல்லமை செறிநற் றிடப்பொருள்
வெம்மையின்நெறு தொடவும் வனமெனக்
கரவுகொள்ள விரைவினிற் பொடிப்பனல்;

# அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

கருதலரினை யறவுங்களைபவன்
உரவின் முன்னடைந் தொருசி றிதும்பின
ருறுகலான்றனுவினையேந்து வோனென.

(இ-ள்.) தன்தேஜஸாகிய பலத்தினால் எல்லாவிடங்களிலும் பரந்தவனாகிய வவ்வக்கினி, கோடாலியைப்போல நன்றாகத் துரோஹ சிந்தையுள்ள சத்துருக்களை யழிப்பான். பலத்தோடு கூடிய திடப்பொருள்களையும் தான் தொட்ட மாத்திரத்தினால் வனமழிவதுபோல் அழியச் செய்வான். சத்துருக்களை முற்று மழிப்பவனாகிய வவன் பலத்தோடு எல்லாவற்றையும் முன்னிட்டுச் செல்லுவான். விற்கை வீரனைப்போல முன்வைத்த காலைப்பின்னெடுத்து வைக்கமாட்டான்—(எ-று.) இச்சூக்தச்செய்யுட்களிலெல்லாம் வடமொழியில் மடக்கணியுண்டு. மேனாட்டாசிரியர் அம்மடக்குச் சொற்களை இருமுறையும் ஒரே பொருளிற் கூறிவிடுவர். ஆனால் ஸாயணரோ அம்மடக்குச் சொற்களுக்கு இருபொருள் கூறுவர். இந்நூலாசிரியர் ஸாயணருரையைப் பின்பற்றி மொழி பெயர்ப்பவராதலின் அம்மடக்கணியைத் தமிழ்ச் செய்யுட்களிற் பொருத்துதலிலர். வனமென என்னும் உவமைக்கு மேனாட்டாசிரியர் காடழிவது போல் என்பர். ஸாயணர் நீர்வற்றுவதுபோல வெனப் பொருளுரைப்பர். மேனாட்டாசிரியர் தநுவேந்துவோனைப் போல வென்றாது, தநுவேந்தி யெதிர்ப் போனையும் லக்ஷியஞ் செய்யாது முன்னிடுவான் எனப் பொருளுரைப்பர்.

4. திடமுளவவை யெனினுந் தெரிந்தவன்
சிவணவக்கினிக் கெனநன் முறைதெரிந்
திடுவன்; வெஞ்சுடர் நெறியைத் தெரிந்துத
விடுவன் மற்றைய கடவுட் கிடுபவை;
வடுவிறன்னிரும் வலிமொய்க்க வெப்பொருள்
வலியு முன்னுவ னெரிமொய்த்த வக்கட
மடைய; வெவ்வலி மிகுமவ்வுனவையு
மளிய விட்டிடு, மகமுற்றழிப்பனே.

(இ-ள்.) திடமுள்ள பதார்த்தங்களாயினும், தெரிந்தவனைப் போல அக்கினியின் பொருட்டுக் கிரமமாய் (யஜமானன் அவிப்பொருள்களை) அளிப்பான். அவ்வக்கினி சோதியோடு தோன்றும் நெறியை யறிந்து மற்றைய தேவர்களுக்கிடும் அவிப்பொருள்களை ப்ரயாஜ ரூபமாக அவ்வக்கினியிடத்துத் தன்ரட்சணார்த்தம் உதவுவான். குற்றமற்ற தனது ஜுவாலா ரூபமான பலம் நிறையப் பலவிதமான வஸ்துவினையும் மரக்காட்டை யழிப்பது போல அவ்வக்கினி அழித்து விடுவான். மேலும் திடம் பொருந்திய வுணவுப் பதார்த்தங்களைப் பக்குவப்படுத்துவது மாத்திரமேயன்றி, பாபத்தையும் முற்றவும் நாசஞ் செய்வான்-(எ-று).அகம் முற்றும் அழிப்பன் எனவிரிக்க. அகம், பாபம். விட்டிடும் பால்வழுவமைதி.

5. பகலினு மிர வதிகக் கிளர்ச்சியிற்
பகலினு மிகவுயிர் நற்கொளிர்த்திட
வகவெரிக் கிவணவியைப் பெருக்குவம்;
அவனருமுயிர், மகவுக்களித்திடுஞ்



## மண்டலம் 1 சூக்தம் 127.

சுகவகமெனத், திட முற் றுவத்திடும்;
தொடுசரையறு மெரியைப் பணித்திலர்
தகவனங்குவரிருவர்க் கறுக்ரகந்
தழுவுவிக்குமம் மகருங் கிழப்படார்.

(இ-ள்.) பகலைக்காட்டிலும் இரவில் அதிகப்பிரகாசத்தோடு ஒளிர்ந்து பகலைக்காட்டிலுமதிகமாக ஜீவசக்தியோடுகூடியுற அக்கினிக்கு இங்கே வேதிக்கைக்கருகில் அவியுணவுகளை மிகுதியுந் தருவோம். புத்திரனுக்குச் சுகத்தைத்தரும் வீட்டைப்போல அவ்வக்கினியினது ஜீவசக்தி (பிராணிகளுக்கு) உறுதியாகவுறும். கிழத்தன்மையை யடையாத (அல்லது நித்ய யௌவனமுள்ள) அவ்வக்கினிகளை வணங்காதவர் வணங்குபவர் ஆகிய விருவருக்கும் அநுக்கிரஹ புத்தியோடிருக்கும் அவ்வக்கினிகளுக்கு அவியளிப்பவர்களும் கிழத்தன்மையையடைவதில்லை—(எ-று.) உவத்திடும், பணித்திலர், செய்யுள் விகாரத்தால் வலித்து நின்றன.

வருக்கம். 8.

(ஷை வேறு.)

6. மருத்துவர்தங் குழுவெனப்பே ரொலியிழைத்துக் கொண்டு
மன்னு விரிவொடு பெருமை யிட்டிநிலைப் பழமைப்
பெருத்தபலன் பெறப்புவியிற் றருப்வர்தம் மவியைப்
பெற்றுமகக் கொடியாகிப் பின்பவற்றை யுண்பான்
கருத்துறப்பல் வணக்கமுறத் தக்கவனுய்க் களியிற்
கனவிழுது கொள்பவனை யாருமுவப் பிக்கல்,
வருத்தமிலாப் பெருநெறியென் றெண்ணிநரர் செல்லு
மார்க்கமென விவ்வெரியின் பாதையினையுற்றே.

(இ-ள்.) மருத்துவர் கூட்டத்தைப்போலப் பேரொலிசெய்துகொண்டு, விஸ்தீரணமும் பெருமையும் வாய்ந்து, யாகஞ்செய்யத்தக்க பூமினியிடத்துப் பழைமையாகவரும் பெரும்பயன்களை யடையப் பூமியிலுள்ளோர் தரும் அவியுணவையேற்று, யக்ஞ கேதுவாய், அவ்வவியை(அக்கினி) யுண்பான். பூஜிக்கத்தக்கவனுய்ப் பலன்தருஞ் ஸந்தோஷத்தில் நெய்யாவுதியை யுண்டு மகிழ்பவனை யாரும் ஸந்தோஷிப்பிக்கட்டும், உலகத்துமனிதர் பயமில்லாத நெறியென்று ராஜபாட்டையிற் செல்லுவதுபோல இவ்வெரிவளர்க்கு நெறியிற்றலைப்பட்டு,— (எ-று.)

(ஷை வேறு.)

7. இருவிதத்துமிவ் வெரியைப் புகழ்பவ
ரிருமை விண்ணுற வருகிற் றுதிப்பவர்
பிருகு நற்குடி யவியைத்தரத் தரு
பெருகுதம்மற மறுகக்கடைபவ

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

சருகழைத்தனர்; வசுவிற்கிறையுரத்
தமருமக்கினி யொளிமிக்கியைந்தவன்;
பெருமகத்தவன் பெறுகப்ரியத்தொடும்
பெறுக முற்றுநெய் முதலத்தருபவே.

(இ-ள்.) ச்ரௌதம், ஸ்மார்த்தம் என்னும் இரண்டு வகைகளினுலும் இவ்வக்கினியைப்புகல்பவர்களும், விண்ணூறும்வண்ணம் அருகி லமர்ந்து துதிப்பவர்களும், அரணிக்கட்டைகளும் தமது பாபங்களும் மறுகும்படி கடைபவர்களுமான பிருகு வம்சத்தவர்கள் அவியைத் தருவதற்காக அவ்வக்கினியைச் சமீபத்திற் கூட்டினர். மணிமுத்தாதி செல்வங்களுக்கு நாயகனும் பலம்பொருந்தியவனுமான அக்கினி மிகுந்த ஜோதியோடு கூடியவனும். யக்ஞத்தோடு கூடிய வவன் யஜமானர்கள் தரும் நெய்முதலிய பொருள்களைப் பிரியத்தோடும் பெற்றுக்கொள்ளட்டும்—(எ-று.) அபித்யுவ: என்பதற்கு விண்ணூறுந்துதியென்றது, முற்றவும் பிரகாசத்தோடு கூடியவர்களும் என்று உரை கூறிப் பிருகுக்களுக்கு ஏற்றுவர்ஸாயணர். தரு ஈண்டு அரணிகளாம். தருவும் மறமும் மறுகவென்க.

8. மகமியற்று மெவ்வெ வருக்கு நற்பதி
மனிதருக்கெலாஞ் சமமுற்ற விற்பதி
தகவுறும் புசிப்படைதற் கெனத்தருந்
தகைய மெய்ம்மறை தமைமிக்குறச் சுமந்
தகவுமுன்றனை விளிவுற்றழைப்ப மக்
களின் விருந்தனையமரர்க் குழுவியே
முகமுறப் பெறுமவியைத் தகப்பனின்
முழுதுறுங் கடவுளருண்டி கொள்ளுனை.

(இ-ள்.) எல்லா யஜமானர்க்கும் இஷ்டப்பட்ட பலன்களை யளிக்கும் பதியும், மனிதர்களுக்கெல்லாம் சமானமான (எரிதல், சமைத்தல் முதலிய உபகாரங்களைச்செய்யும்) கார்ஹபத்யரூபமான நாயகனும், போக போக்யங்களை யுத்தேசித்துக் கூறப்படும் ஸத்திய வாக்குக்களான மந்திரங்களைத் தாங்குவோனும், மனிதர்களில் அதிதியைப்போலப் பூஜிக்கத்தக்கவனும், அமரர்கள் கூட்டமாகக்கூடி மகன் தகப்பனிடத்துப் பெறுவதுபோல அக்கினிச் சுவாலையேவாயாகத் தமது அவியைப்பெறும் பெருமை வாய்ந்தவனும், தேவர்களது உணவைக் கொள்ளுபவனுமாகிய உன்னைக்கூவியழைப்போம்—(எ-று.)

9. வலிமையிற் பகைமடியத் தொடக்குநீ
மலியொளிப் பிறந்தனை யக்கினிக்கட
வுளர்மகத்தினுக் குறுமெக்கியத்தன
முறமு; வுத்தமப் பலமிக்கவப், புகழ்
மலியு முக்தம, க்ருதுவின் மதத்தெலெ
வரையவற்றதாற் கிழமற்றவத், தொண்டர்
கிழமுறத்தடைக் குயில்விப்பவக்,குடிக்
கிளருமொற்றரி னுன்னமுற்பணிகுவர்.

## மண்டலம் 1 சூக்தம் 127

(இ-ள்) அக்கினியே! உனது வல்லமையினாற் பகைவரையடக்கும் நீ யக்ஞதனத்தைப்போல தேவ யாஜநத்துக்காகவே தேஜஸ்வியாய்ப்பிறந்தாய். உத்தமப்பலவானே! உத்தமப்புகழாளனே! யாக கார்யங்களில் (நெய்யை யேற்கும்போது உனக்குண்டாகும்) ஆநந்தம் கணக்கில்லாதது. கிழத்தன்மை யற்றவனே! பக்தர்களைக் கிழப்படுத்தாதவனே! அதனாற்றான் குடிப்பிறந்த தூதர்கள் அரசனைச்சேவிப்பதுபோல, உன்னை யஜமானர்கள் (விசுவாசத்துடன்) ஸேவிக்கிறார்கள்—(எ-று.) தொண்டர் ணகரம் ஒலிபெறாது நிற்க நிரையசைபோற் படிக்க.

10. வலிமையிற் பகைபடையச் சயிப்பவன்,
வைகலிற்று யிலெழுகிற்பவன், பசு
மலியுறத்தரும் பெரியற்கு, நுந்துதி
வளருமக்கினிக் கினிமைத்தரல்; அவிப்
பொலிபவன் மிகக்குரல் விட்டெவெப் புவிப்
புடையுமுற் படக்கினியைத் துதித்தனன்;
பல கடவுளர்க் கொருவன் றனமகப்
பயனுறுவன் கட்டியனிற் கிளத்தினன்.

(இ-ள்.) (உத்காதா முதலிய ஸ்தோதாக்களே!) தனது வல்லபத்தினாற் பகைவரை முழுதுஞ் சயிப்பவனும், உஷற்காலத்திற் றூக்கத்தினின்றெழுபவனும், பசுக்களை யளிப்பவனும், பெரியவனுமான அக்கினிக்கு உமது துதிகள் இன்பத்தைத்தரட்டும். (ஹவிஷ்மான்) நெய் முதலிய வவிப்பொருள்களை யேந்திய யஜமானன் எல்லாவேதி பூமிகளுக்கும் சென்று அங்கே முன்னர்த்தோன்றுமக்கினியை யுரக்கத் துதித்தான். வருந்தேவர்களில் முதல்வனான அக்கினியின் பெருமையைக் கட்டியக்காரனைப்போலத், துதிப்பதில் வல்லஹோதா பலமாய்ப்புகழ்ந்து பேசினான்—(எ-று.) துதித்தானாதலின் உங்கள் ஸ்தோமங்களும் அவ்வக்கினியை ஸந்தோஷிப்பிக்கட்டும் எனக்கூட்டுக. இத்தகைய செய்யுட்கள் பல மொழிபெயர்த்தற்கரியனவாயுள்ளன. இவைபோன்றவற்றிற் றமிழ்ச்சந்தத்தை யநுஸரித்து வடமொழி ரிக்குக்களைப்பாடுவதிலுள்ள சிரமத்தை வடமொழி தென்மொழி பயின்ற கல்வியாளர்கள் உணர்ந்து பிழைகளிருப்பின் இந்நூலாசிரியர்க்கெடுத்துக் காட்டுவார்களாயின் அவற்றை யுடனே இந்நூலாசிரியர் பதிப்பிப்பாரென்க.

11. அருகினிற் றெரிந்திதரக் கடவுளர்க்
கணையு மன்னமொத் தடையக்கினிச்சுபத்
தருமனத்தரெம் மருளுற்ற நன்மனத்
தரிய பொற்குவை யருளச் சுமத்தியால்;
முரண் மிகுத்தவ, புவி கண்ணுறச் சுக
முழுதுதுய்த்திடத் துதியர்க்கு மேன்மைதாத்
தரதனத்தின்; மகவ, வுக்கிரத்தன் மெய்த்
திறலினற்பகை சிதையக் கடைகவே.

## அஷ்டகம் 2. அத்தியாயம் 1.

(இ-ள்.) ஸமீபத்தில் (வேதிகையிலென்றபடி) நன்றாய்க்காணப் பட்டு இதரதேவர்களுக்குச் சமானமாக அன்னத்தைப்பெறும் அக்கினியே! உன்னாலளிக்கப்பட்ட சுப மனத்தோடு கூடிய வெங்களுக்கு அருளும் நல் லுள்ளத்தோடு கூடி, மிகுந்த செல்வத்தை யெங்களுக்காக வேந்தி வருவா யாக. வலி மிகுந்த உத்தமனே! பூமியிற்றோன்றியவைகளைப் பார்க்கவும் புசிக்கவும், மகிமை பொருந்தியவற்றை எங்களுக்கும் இதர ஸ்தோதாக்களுக் குந் தருக. சற்புத்திரரும், வேலைக்காரருங்கூடிச் சிறந்த தனத்தை யீவா யாக. மகவானே, (தனம்பொருந்திய அக்கினியே,) உக்கிரமுற்றவன் தன் சரீர பலத்தினாற் பகைவர்களை யழிப்பதுபோல எங்களது விரோதிகளை யழிப்பாயாக—(எ-று.) தாதனத்தின் என்பதற்கு வடமொழி மூலத்தில் ஸுவீர்யம் என்றுள்ளது. அதற்கு 'சோபன புத்ர ப்ருத்யோபேதம் தனம்.' என்பார் ஸாயணர். தாதனத்தோடு மேன்மையைத்தருவாயாக வெனக் கூட்டுக.

### வருக்கம் 13.

### 128. மண்டலம். 1. அநுவாகம். 19 சூக்தம். 2.

8 இருக்குக்கள் கொண்டது.

*ரிஷி: ஷி பருச்சேபன்; வடமொழிச்சந்தம்: அத்யஷ்டி; தேவதை: அக்கினி.*

1. *மகமியற்றுமித் தொழுதற் குயர்ந்தவன்*
*மருவுநற் பலன் பெறுவர்க் கணைந்திடும்*
*தகையுறத் தனதவியும் பிறர்க்குறுந்*
*தனமு முற்பெறத் தருவன் பிறந்தனன்;*
*அகமுறப் பெருமுணவுஞ் சகித்வமு*
*மரி பெனத் தரு, முழுமைக்கருமவான்;*
*பகைவர் வெல்லுறு மகவன் மனத்தணை*
*யிளையினற்பத நரர்சுற்ற நிற்பனே.*

(இ-ள்.) ஹோதாவும், வணங்கத்தக்கவனும், நல்ல பலன்களைப்பெற விரும்பும் யஜமானர்களுக்காகத் தன்பாகமாகிய வவியையும் பிறதேவு ளர்க்குத்தரும் அவியையும் எற்கவுந் தக்க வுத்தமனுமாகிய வக்கினி (அரணி களினின்றும்) பிறந்தான். கீர்த்தி வாய்ந்த வுணவுப்பொருள்களையும், தோழ மையையும் தரும்செல்வத்தைப்போல எல்லாக் கருமங்களும் நிறைந்த அவ் வக்கினி, பிரவித்திபெற்ற அன்னத்தையும் தோழமையையும் ரித்விக்குக் களுக்களிப்பான். பகைவரால் வெல்லமுடியாத அவ்ஹோதா மானஸபுத்திரி யாகிய இளைதங்கும் யாக பூமியினிடத்து ரித்விக்குக்கள் சூழ அமர்ந்திருப் பான்—(எ-று.) இளையை மண். 1 சூக். 40 செய். 4லும், மண். 1 சூக்.31 செய். 11லும் பார்க்க. இளாப்பதம் வேதிபூமியென்க.

2. *மகமுடிப் பவன்றனையம் மகத்துறை*
*மகவவிப் பொருணிறையும் மகத்தினில்*
*மிகுமவிப் பொருளினொடும் வணக் கொடும்*
*வெகு நயத் தொடுசீர் தொழுவம்; அவற்கியாம்*

## மண்டலம் 1. சூக்தம் 128

அசுமுறத்தரு முனைவைத் திறமைபி
னடைவதிற் கிழ மடைகிற்றிலன் மனுச்
சுகமுறத் தொலையுறுயாதரிச் சுவான்
றொலையினின்றரு கினைவித்த தேவனே.

(இ-ள்.) யக்ஞத்தைப் பூர்த்திசெய்யு மக்கினியை, யக்ஞபாதை வழியாக, நெய்புரோடாசம்முதலிய யக்ஞ வஸ்துக்கள் நிறைந்துள்ள யக்ஞத்தில், மிகுந்த வவிப்பொருள்களோடும், நமஸ்காரங்களோடும், அவனுக்கு ஸந்தோஷமுண்டாகும் வண்ணம் வணங்குவோம். மநு ஸுகமடையும்படி வெகு தூரத்தில் வீசும் (மாதரிச்வான்) காற்று வெகு தூரதேசமாகிய ஸூரியனிடத்தினின்றுங்கொண்டுவந்து பூமியில் ஸ்தாபித்த அந்த ஒளிபொருந்திய அக்கினிதேவன், நாங்கள் அவனுக்கு அளிக்கும் அவிப்பொருளையேற்றுக் கிழமடைவதில்லை—(எ-று.) யாகம் முடியும்வரையில் அணைந்துபோவதில்லையென்பது பொருள். மாதரிச்வான் மண். 1 சூக். 31 செய். 3 பார்க்க. மண். 1 சூக். 60 செய். 1ஐயும் பார்க்க.

3. அவி விழுங்கிடு மொலிமிக் கடிக்கடி
யணையிடப மொழுகிடும் புவித்தலம்
விவித சத்தமுற் றெதிரப் பொரியவி
மிகவெடுத் தொழுகிடும்; அக்கநூறொடு
தவவழிக்குவன் வனமக்கடவுளன்;
தலைபெறங்கி யுன்னத வத்தலத்தினி
னிவமுறப்புரி மகவன் னகத்தினி
னிலவுமற்றைய மலையுச்சி யினுமே.

(இ-ள்.) அவிப்பொருள்களை விழுங்கும் சப்தமானது மிக, அடிக்கடி வரும் காளையாகிய அக்கினி பலவித சத்தத்தோடும் பொரி முதலிய அவியுணவுகளை விழுங்கிக்கொண்டு பூமியில் நடக்கும். அவ்வக்கினிதேவன் நூறு கண்களோடும் (பல சுவாலைகளோடும் என்றபடி) வனத்தை யழிப்பான். அவ்வக்கினி, உன்னதமான விடங்களில் வேதியமைத்துச்செய்யும் யக்ஞகர்த்தாக்களின் வீடுகளிலும், தூரத்திலுள்ள மலை யுச்சிகளிலும் பொருந்துவான்—(எ-று.) இச்செய்யுள் சாயணருரையை ஒருசிறிது தழுவியும் மேனாட்டாசிரியருரையை ஒருசிறுது தழுவியும் எழுதியதாம்

4. கருமநற்புரோகித னிற்றொறும்மகக்
கருமநற் பலன்றர வெண்ணுவன்மகக்
கருமனும் மகத்தமை பெக்கியப் பொருள்
கருதுவன் னெரியனு நற்பயத்தனுய்
வருமுனைவினுக் கினையெப்பொருள்களும்
வரவழைத்தவைக் கொளுவன்; இழுதினுற்
பெருகுநல் விருந்தினையப்பிறந்தனன்;
பெருமகன் பலன்றரும் வன்னியொத்தனன்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

(இ-ள்.) சோபன கர்மங்களுக்குப் புரோகிதனாகிய அக்கினி யாக வில்லங்கடோறும் யக்ஞபலனைத்தர வெண்ணுவான். யக்ஞநடத்தும் யஜ மானனும் யாகத்துக்கு வேண்டிய பொருள்களைத்தேடிச் சேர்க்க விரும்பு வான். அக்கினியும் சற்பலனைத் தருபவனாய் உணவுப்பொருள்களின் வர வை யெண்ணி யெல்லாப் பொருள்களையும் வரவழைத்துச் சேர்ப்பான். வி ருந்தினனைப் போல அக்கினி நெய்யூற்றுவதினால் வளர்ந்து தோன்றினான். அப்பொழுது யாககர்த்தாவும் அவிசுமப்பவனாய் யஜமானர்களுக்குப் பலன் தருபவனாகத் தோன்றினான்—(எ-று.) வஹ்நி, வன்னி, ஹவிஷாம்வோடா, அவியேந்துபவ னென்பது பொருள்.

வருக்கம். 14.

5. மகவர் நற்க்ரியை யதனிற் பொருட்களை
மருதர் நெற்பயிர் வளர்விப்பதிற் பொருள்
தகவுறப்பெறு மிரவர்க் கொடையெனத்
தகையுறச் சுடரதனிற் கலத்தலின்
மிகுமவற் சுடர்க்கொடை மிக்குயர்ந்ததால்;
விரிபவத்தினைக் கவர்தந்தெமைத் தொடர்ந்
தகமுருக்கிடுந் துரிதத்தினைத் துனி
யடையு மின்னலைத் தணிவிப்பனிம்சையின்.

(இ-ள்.) விரும்பிக் கேட்கும் யாசகர்களுக்குப் பொருள்களைத் தரு வது போல யக்ஞம் செய்பவர்கள் விளக்கம் பொருந்திய யாககார்மத்தில் அவிப்பொருட்களைத் தந்து, மருத்துக்கள் மழையினால் பயிர்களை வளர்த் துத் தானியங்களை யப்பயிர்களோடுசேர்ப்பதுபோல அக்கினியின் பிரபல மான சுவாலைகளோடு அவ் வவிப்பொருள்களைக் கலப்பதால், அவ்வக்கினி தனது ஜ்வாலாபலத்தினால் அவர்களுக்குத் தருங் கொடையானது விருத்தி யாகிப் பரவுகிறது. அவ்வக்கினியும் விரிந்தபாபங்களை யபகரித்துக் கொண்டு எம்மைப் பாபங்களினின்றும், துக்கத்தைத் தரும் துன்பங்களினின்றும், இம்சைகளினின்றும் விலக்கிக் காப்பான்—(எ-று.)

6. விசுவனன்மகா னிறைவன் வலக்கரம்
வசுவெடுத்தனன் வெயில்விற் றரணியை
யிசைய விட்டடா னருகிற் பரிப்பனல்;
எரிபிறக் கட வுளரொத் தவியென்றும்
மிசை வகிக்கிறாய்; மகநன் கியற்றுவோர்
மிளிரெவர்க்கு மக்கினி நற்சிறப்புண
விசைகுவிப்பதோடொழுகும் துறக்கவா
யியைய முற்றினும் விரியத்திறப்பனே.

(இ-ள்.) ஸர்வாத்மகனும், மகானும், ஈச்வரனுமான அக்கினி, தனது வலக்கரத்தில் செல்வத்தைச் சுமந்து, காந்தி வீசும் உஷ்ண கிரணங்களோடு கூடிய (தரணியை) சூரியனைப் போல அவ்வவியை யேற்று, யஜமானர்க ளுக் கருக்கிரஞ் செய்வான். (அவியேற்பது அநுக்கிரகத்திற்கு ஒருவியாஜ மென்க.) எரியே! (அக்கினியே!) மற்றக் கடவுளரிற் சிறந்தவி பிறதேவதைக

## மண்டலம் 1 சூக்தம் 129.

ளைப் போலவே யிருந்து புரோடாச முதலியவற்றை யெப்போதும் தாங்குகிறாய். மகத்தை நன்றாகச் செய்யும் எல்லா யஜமானர்க்கும் அக்கினியானவன் நல்ல சிறப்புப் பொருந்தியவுணவைத்தந்து, (அவர்களது பாபங்களைத் கெடுத்து) அவர்கள் செல்ல விரும்பும் ஸ்வர்க்கத்தின் வாயிலையும் நன்றாய்த் திறக்கிறான்—(எ-று.)

7. அவன் மனிதர்தம் பவமற்ற நன்மகத்
தது சுகத்தம னனிவெற்றி யுற்றிடு
மவனிபன் புரைமகமக் களின்பதி;
யவன்மனிதர்க ளிளையிற்குவிக்குறு
மவியை நத்தி யிங்குறுவன்; வருணனின்
அடையிடுக்கணை யகல்விப்ப னெங்களைத்
தவவினைப்பெருங் கடவுள் புணர்த்திடுந்
தகையழிவினின் றகலப் பரிப்பனே.

(இ-ள்.) அவ்வக்கினி (மகஞ் செய்யும்) மனிதரது பாவமற்ற நல்ல யக்ஞத்திற் சுகோத்தமனும் மிகுந்த வெற்றியைப் பெறும் ஜநபதியைப்போல அவன் யக்ஞநடத்தும்பிரஜைகளுக்குப் பதியாம்.அவ்வக்கினி யாகவேதியினிடத்தில் யஜமானர்கள் குவித்துவைக்கும் அவிப்பொருள்களுக் காசைப்பட்டு வருவான். வருணனுடைய இம்சைகளினின்றும் எங்களை விலக்கிக் காப்பான். (யாகஞ் செய்யாதவர்களை அக்கினி தண்டிப்பது பிரஸித்தம் என்பார் ஸாயணர்.) பெரியதேவன்றரும் இம்சைகளினின்றும் அவ்வக்கினி யெங்களைக் காப்பான்—(எ-று.) இளை ஈண்டு வேதி யென்ற பொருளில் வந்தது. பெரியதேவன் வருணனென்க.

8. எரி வசுப்பரித் திடுகின்ற வோதனை
யிறையறிவனை ப்ரியனைத் துதிப்பரால்;
தருமவி வகித்திடும் வண்ண முற்றவுந்
றடையறப் பெறுகுவ, ரெவ்வுயிர்க்குயி,
ரரியநற்கவி, பெவையுந் தெரிந்தவ
னவி யமைப்பவன், ஒருமுதற்குரியவன்,
பருகவன் றுணைக்கென நற்றுதியிழைத்
திருதுவிக்கர் பொன்னவிபெண் ணும் நண்பனை.

(இ-ள்.) செல்வத்தைத் தாங்குபவனும், ஹோதாவும், ஈச்வரனும், அறிவாளனும், பிரியப்படத்தக்கவனுமான அக்கினியை ரித்விஜர்கள் துதிப்பார்கள். எல்லாப் பிராணிகளுக்கும் ஆயுளும், கவியும், ஸர்வக்ஞனும், ஹோம நிஷ்பாதகனும், யஜிஷ்டனும், அவனது துணையை விரும்பித்துதிகளால் ஊக்கக் கூவும் ரித்விஜர்கள் விரும்பும் பொன்னையும் அவியையும் பெறுவதற்காக நினைக்கும் நண்பனும், ஆன அக்கினியை, அவியைச் சுமந்து செல்லுமாறு சற்றுந்தடையின்றி யடைவார்கள்—(எ-று.) இருதுவிக்கர் என்றது ரித்விக்குக்களை. இதுஸாயணர் தேவாஸ: என்னுஞ் சொற்குக் கூறியுள்ள உரையாம்.ஆனல் தேவர்க ளென்றே மேனாட்டாசிரியர் உரை கூறுவர். ஓதன்,ஹோதா வென்னும் சொல்லின் சிதைவு.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

### 129 மண்டலம். 1. அநுவாகம். 19. சூக்தம். 3

11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: பருச்சேபன்; வடமொழிச்சந்தம் 1—7 அத்யஷ்டி, 8,9, அதிசக்வரி, (இடையிற் காய்ச்சீர்வரும் எழுசீர்க்கழிநெடில்.) 10 அத்யஷ்டி, 11 அஷ்டி (இயற்சீரானமைந்த எண்சீர்க் கழிநெடில்.); தேவதை: இந்திரன், 6, இந்து.

1. மகமணை வதிற் றனைதந்த விந்திர
மருவுநிந்தை யற்றவ வெம்மகத்தரு
கெவயிற் றுப வலைதந்து பண்டித
னெவனை யெய்தி நற்றிற முற்றுவிப்பைநீ
தகவுணவுள வவனுற்றளித் திடுந்
தகையவிபினைப் பலனிந் தெடுத்திபால்;
மகவரிற் சிறந் தொளி ரெம்மவிப் பொருள்
மறையெனக் கொளல் கறைபற் றருள்பவ.

(இ-ள்.) யாகத்துக்குவர விரையும் இந்திரனே! நிந்தை யற்றவனே! எந்தயாகத்தினருகில் உனது தேரினைச் சேர்த்து எப்பண்டிதனை யடைந்து அவனையாக ஸாமர்த்திய முள்ளவனாக வாக்குகிறாயோ அந்த நல்ல வலியுடனேயோடு கூடிய யக்ஞகர்த்தா தருமவிலை அவனுக்குப் பலனை யளித்துப் பெறுவாய். குற்றமற்றவனே! எங்களுக்கருளுவதற்கு விரைவாகவருபவனே! மேதாவிகளிற் சிறந்த யஜமானர்களாகிய வெங்களுடைய அவிப் பொருள்களை எங்களது ஸ்துதி ரூபமான மந்திரங்களை யேற்பது போல வேற்பாயாக—(எ-று.)

2. நரர்களாகிய நரர்கள் தனைக்கென,
நவியும் வெய்ய போரதினுற், 'றடித்திட
விரைக தோற்றுக வலியைச் சயம் பெற
விழைக'வென்ற நல்விளி பெற்ற விந்திர,
இரை செவிக் கொளல்; தனியுற்றுரத் தொளி
இயைபவன் சூரி னனம் விப்பிரர் தமின்;
இறைமை பெற்றவ ரிரையுற்ற நற்சதி
யியைபு மச்சுவ மியையச் செவிப்பரே,

(இ-ள்.) முதலில் மனிதராயிருந்து பின் தேவத்தன்மை பெற்ற நரர்களாகிய மருத்துக்கள் உன்தனைக்காகப் பெரிய யுத்தத்தில் (சூரோபவ, ப்ரஹர) 'அடிப்பாயாக. வல்லமையைக் காட்டுவாயாக, ஜயத்தை யடைய விழைவாயாக.' என்று கூச்சலிடும் பெருமை வாய்ந்த விந்திரனே! அக்கூச்சலைக்கேட்பாயாக. அவன் தனியாண்மையுற்ற சூரர்களோடுசேர்ந்து வெற்றியாகிய கீர்த்திப் பிரகாசத்தைப் பெறுவான்; விப்பிரர்களோடு கூடி அன்னத்தைப் பெறுவான். செல்வவான்களாகிய ரித்விஜர்கள் ஜீவியோடு கூடிய வேகமான நடையுள்ள அசுவத்தைச் செலுத்துவது போல அவனைச்

## மண்டலம் 1 சூக்தம் 129.

சேவிப்பார்கள்—(எ-று.) செவிப்பர், சேவிப்பரென்னுஞ் சொல் சந்தத்துக்காக நெடில் குறுகியது. முதலஷ்டகத்தில் 'ப்ராஹர பகவோஜஹி வீரயஸ்வ' என்பது மருத்துக்களின் கூற்றாகச் சொல்லப் பெற்றது. இதனை நோக்கு மிடத்தும், இவ்வஷ்டக உரையில் இலக்கணக் குறிப்புக்களை முதலஷ்டகத்திற் போலல்லாமல் உரையி னிடையிடையே புகுத்தியுள்ளதைப் பார்க்கு மிடத்தும், மேனாட்டுப் பதிப்பாளராகிய மோட்சமூலரது கூற்றைக் கருது மிடத்தும், இச்சாயணருரை ஸாயணரே செய்ததல்ல வென்றும் பல வித்வான்களைக் கொண்டு எழுதுவித்து அவர் ஏவுதற் கர்த்தாவாக மாத்திரம் இருந்தா ரென்றும் நன்கு புலப்படுகிறது. இரைசெவிக்கொளல் என்ற சொற்றொடரில் இரை இரைச்சல் என்னும் பொருட்டு.

3. பகை வதைப் பவன்மதி,நீ மழைக்கருப்
பலமுகில் களின் புரையைக் கிழித்து நீர்
உகுகுவிப் பவன் மழையில் முகில்களை
யுன துரத்தினின் விலகப் புரிபவன்;
மிகுபுகழ்ச்சி யினுலவுஞ் சவுரிய,
வுனைவிழை பிறக் கடவு ளுருத்திரன்
பகலின் மித்திரன் வருணை னலம்புரி
பவனையும் புகழ்ந்தறைவென் புரந்தர.

(இ-ள்.) இந்திரனே! நீபகைவரை யடக்குபவன். மழைநீர் நிறைந்த பல மேகங்களின் மேற்றோலைக் கிழித்து நீர் விழும்படி செய்வாய். மழையில்லா மேகங்களை உனது பலத்தினால் விலக்கி விடுவாய். மிகுந்த யசஸோடு உலவும் சூரனே! உன்னை விரும்பும் பிறதேவதைகளையும், ருத்திரனையும் மித்திரனையும், வருணனையும், நன்மைபுரியும் தேவனையும் புகழ்ந்து பேசுவேன்—(எ-று.) மதி, அசை, கு சாரியை. உருத்திரன் மண். 1 சூக். 114 செய். 1 பார்க்க. மித்திரன், வருணன், மண். 1 சூக். 89 செய். 3 நோக்குக. புரந்தரன், இந்திரன்.

4. துணைபுரி பவன் பலரும் விரும்பு வோன்
துறு களரியிற் பகையை வதைப் பவன்
அணைமக விரோ திகளையடக்குவோன்
அருமகப் பலனடை விக்கு மிந்திரன்
இணைவினிங்குவந் துமைவர்த்தனஞ்செய
வெணுவம்; எம்மறை வனுவிக்க வெச்சமத்
திணையி லெப்பகை யையுமிக் கடர்ப்பவ,
வெதிரி லெப்பகை வருமற் றொளிர்குவாய்.

(இ-ள்.) யாகத்தின்பொருட்டுத் துணைசெய்பவனும், எல்லாராலும் விரும்பப்படுபவனும், யுத்தத்திற் பகையை வாட்டுபவனும், யாகத்தில் விரோதஞ் செய்பவர்களை யடக்குபவனும், யக்ஞபலனை யடைவிப்பவனுமான விந்திரன் இங்குவந்து உம்மை விருத்தி செய்வதற்காகக் கூவுவோம் அல்லது விழைகுவோம். இந்திரனே! எல்லாச்சமத்திலும் (போரிலும்)

எமது பிரஹ்மத்தை அல்லது மந்திரத்தைப் பலமுறச் செய்க எவ்வகைய பகைவரையும் அடக்கி அஜாதசத்துருவாய் விளங்குவாய்—(எ-று) விச்வாயும் என்பதற்கு எல்லா யாகத்துக்கும் போகிறவனே யென்பார் ஸாயணர். ஆனால் எல்லாராலும் விரும்பப் படுபவனென்பது மேனுட்டாசிரியர் உரை.

5. மிகுவலியினுக்கிர, வுக்கிரத்துணை
மிகவு நன்னுறப் பகைவன் றுடிகதமே
யுகவொளி நிறை மகமென்னு முன்றுணை
யொடு வணக்குறப் புரிகல், சவுரிய;
வகமுறச் செலுத்துக வெம்மை; முன்னரி
னகமறும் புனிதவ னென்ன வெண்ணுவம்;
தகமகம் வகிப்பவனின் மனிதர்தந்
தகையளித் தொலாததனை விலக்குவை.

(இ-ள்) மிகுந்த வலிமையோடு கூடிய உக்கிரனே! உக்கிரம் பொருந்திய உன்னுதவி யெங்களை யடையவும் பகைவனது துடிக்குத் தனமானது சிந்தும் வண்ணமும், ஒளிநிறைந்த யாகநெறியென்னுந் துணையோடு அப்பகைவன் எங்களுக்கு நமஸ்காரஞ் செய்யும்படி புரிவாயாக.சூரனே! எம்மை(மனப்பூர்வமாக)நடத்துக.முற்காலத்தில் எமது முன்னோர்களெண்ணியது போலவே உன்னைக் குற்றமற்ற புனிதவா னென்றே இன்னும் எண்ணுகிறோம். யாகத்தை நடத்துவிப்பவனைப் போல யஜமானர்களாகிய மக்களிற்கு வேண்டியவற்றை யளித்து வேண்டாதவற்றை விலக்கிவிடுவாய் —(எ-று.)

வருக்கம். 16.

6. செழித்துறு பவன்றிட மிக்க விந்துவைத்
திகழ்த்துவென் றுதிதனின்; மிக்கிடர்களாற்
பழிக்கொளு மரக்கரை வெட்டு மிந்திரன்
பரபெனத் துதிவிழைவுற் றெதிர்வனல்;
பழிப்பவர் தமைக் கொலைவல் பகழியாற்
பகைத்த துன்மதித் தமைகெட்டுகத்திருட்
டிழைப்பவன்றுகட் கணக்கின் னழிவுற
விழித்தகலுக வெலைபற்ற தூரமே.

(இ-ள்.) செழித்தோங்குபவனும் பலம் பொருந்தியவனுமான இந்துவை (ஸோமனை) த்துதியினுற்புகழ்ந்து.கூறுவேன். மிகுந்த இடர்களால் யாகத்தைக் கெடுத்துப் பழியைப் பெறும் ராட்சஸர்களைக் கொல்லும் (ஹவ்யன்) இந்திரன் விரைந்து செல்லுவது போலத் துதிவிரும்பி அவ்விந்து செல்லுவான். நிந்தை கூறுமவர்களையும் பகைக்கும் துன்மதிகளையும் கொலைக்கருவிகளால் அவன் கெட்டி விரட்டட்டும். திருடன், துகளழிவதுபோல வழிந்து கணக்கில்லாத தூரம் நீங்கிக் கழியட்டும்—(எ-று.) இழிந்து வலித்தல் விகாரம் பெற்றது. பரப்பு, பரபரப்பு, பரவுதல் என்பது பொருள். இச்செய்யுளுக்கு அதிதேவதை இந்துவாம். இந்து வானத்திற் சந்திரனுக்கும் பூமியில் சோமக் கொடிக்கும் அபிமானி தேவதை.

## மண்டலம் 1. சூக்தம் 129.

7. தனமிகுத்தவ, புதல்வர்ச் சிறந்துநற்
றகைமிகுத்து வீரியமிக்கருத்தியி
னுனுமவர்க்கணுற்றிடு செல்வமெய்துக;
வுனதருங்குண நினைவிக்கு நல்லிசை
யினின்வணங்குவம்; உணவிற் புகழ்ச்சியி
னெழினுறத் துயவனைத்தணிக்குவ
மினிமையின் மக மணவிக்கு மிந்திரன்
றனையிசை விழை நிலையுற்ற கேதலின்.

(இ-ள்.) தனமிகுந்த விந்திரனே! புத்திர பிருத்தியாதிகளோடு கூடி, ரமணீயமாய், வீரியம் பொருந்தி, ஆசைப் படுபவர்களுக்குக் கிடைக்கும் செல்வத்தை யாங்களடைவோமாக. உனது அரியகுணங்களை நினைப்பூட்டும் பண்களைப் பாடி யுன்னைத்துதிப்போம். துக்கத்தோடு கூடியுள்ளவனும், யாகவிஷ்பாதகனுமான விந்திரனை அவியுணவினாலும், புகழ்வாய்ந்த ஸ்தோத்திரங்களினாலும் கீர்த்தியை விரும்பும் உண்மை வாய்ந்த அழைப்பினாலும் கூவி அவனைச் சாந்தப் படுத்துவோம்—(எ-று.). துயருளனை யென்னுது சினமுளனை யென்னலும் உண்டு. கேதல் அழைத்தல் மேதாதிதி மேஷமே யென்று அழைத்தது போன்ற அழைப்புக்களா வென்பர் ஸாயணர். இதனை மண். 1 சூக். 51 செய் 1 உரையிற் காண்க.

(வேறு.)

8. உமது நன்மைக் கெனவு மெமையென் ணியும்முன
ருறுவனு விந்திரன்முன்
குமதியோர் தமைவாட்டு நற்றிடந் தன்னேடு
கொலையுளத் தோரை வீட்டு
மமைதிகொண்டே; யெமை யுன் னுமடை யலர்சேனை
யாயுத மழிந்து தேயு,
மெமையுரு; திடையிட்ட வரிமொய்ம்பி னென்னலர்க
ளீண்டு மீண்டுறுவ தின்றே.

(இ-ள்.) (இருத்துவிஜர்களே!) உங்களது நன்மைக்காகவும், துன்மதிகளை வாட்டும் திடத்தினேடும், கொலைக்காரர்களை வீட்டும் தன்மையோடும் இந்திரன் முன்னேக்கி வருகிறுன். எம்மை விழுங்கும் விரோதிகளின் சேனைகள் எவும் ஆயுதங்கள் அழிந்து கெடும். எம்மை யடையமாட்டா. (அரி) இந்திரனுடைய சாமர்த்தியத்தினுல் சத்ருக்கள் மீளவும் எம்மை நோக்கித் திரும்பி யெதிர்க்க வருவதில்லை—(எ-று.) அரி, இந்திரன்.

9. இந்திரா நீபாப மற்றரக் கர்களிலா
நெறியினேராள செல்வம்
தந்திடத் தாங்கியே வந்திடுக; சேய்மையிற்
சார் சம்பத்து நிற்க;

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

வுந்திரன்னெத்தாசை யெம்முறல் சேய்மைக்க
ணந்திகத் தேசமேனும்;
முந்துமுன் னற்றுணை மொய்க்கவெம் மிட்டியின்
முற்றவெந் நாளு மாதோ.

(இ-ள்.) இந்திரனே! நீபாபமற்று ராக்ஷஸர்களில்லாப் பாதைவழியாக ஏராளமான செல்வத்தை எங்களுக்குத் தருமாறு தாங்கிக்கொண்டு வருவாயாக. நாங்கள் தூரதேசத்திற் றிரியினும் சமீபத்திலிருக்கினும் எமக்குத் துணையா யிருப்பாயாக. நீ தூரதேசமாகிய ஸ்வர்க்கத்திலிருப்பினும், அந்திகப் பிரதேச மாகிய பூமிக்கணிருப்பினும் உனது துணை எங்களை யடையட்டும். எப்பொழுதும் எல்லா விடங்களிலும் எங்களது யாகங்களில் உனது துணை நிறைந்திருக்கட்டும்—(எ-று.) அந்திகம், சமீபம்.

(வேறு.)

10. பகைகடந்திடுந் தனமுற்ற விந்திர
பரிவி னெம்மவ னுணைமொய்ம் படுத்துறல்;
மிகுவலிமைகொள்பவ, வெந் துணையுறல்;
மிகுமொளியின் மித்திரனின் னுதவுக;
தகையிரட்சக, மரணம்முறுதவ,
சருவவிரர்தம் மிரதம் புரப்பவ,
உகளுமத்திரிப் படையிற் பகையுணு
மொருவ, வெம்மலாப் பிறரை வருத்தவே.

(இ-ள்.) பகைவரைக் கடக்கக்கூடிய செல்வத்தோடுகூடிய விந்திரனே! எம்முடையவனுகிய உன்னைப் பலமானது பொருந்திநிற் கட்டும். மிக்கவலிமை யுள்ளவனே எமக்குத் துணையாக வுறுவாயாக. மிகுந்த பிரகாசத்தோடு கூடிய மித்திரனை அல்லது சூரியனைப் போல எங்களுக்கு உதவுவாயாக. உத்தமரக்ஷகனே! அமரனே! வீரர்களது தேரைப் பாதுகாப்பவனே! அத்திரிப் படையினுல் (வச்சிராயுதத்தினுல்) பகைவர்களை யுண்பவனே! எம்மை யொழிந்த பிறரைத் துன்பப்படுத்துவாயாக—(எ-று.)

(வேறு.)

11. துதிமிகுந்த விந்திரவெ மல்லலைத்
துடைக்கல் துன்மதித் தியரெம்மகம்
வதிபரக்கரைத் தேவ வோட்டுக
மகவிரோதியர் தம்மை வாட்டுவோய்!
அதியுவப்பி னென்னனைய விப்பிர
னவனை நன்கிரட்சிப்பை; நற்றனக்
கதிப,ரட்சரைக் கொல்ல வென்றுனை
யுலகமைத்தவன் பெற்றனன், வஸோ!

(இ-ள்.) நன்முய்த்துதிக்கப்பெறுமிந்திரனே! எமது துன்பத்தைத் துடைப்பாயாக. யக்ஞவிகாதஞ்செய்பவர்களை வாட்டுபவனே! எமது யாக சாலைக்கண்வந்து தங்கும் துன்மதிகளாகிய வரக்கரை விரட்டுக. மிக்க ஸந்தோஷத்தோடு என்னுடைத்த விப்பிரனை நன்முகக் காப்பாய், தன நாயகனே! வஸுவே! உலகைச் சிருஷ்டித்த பரமேசுவரன் உன்னை ராட்சஸர்களைக் கொல்லவென்றே பிறப்பித்தான்—(எ-று.)

வருக்கம் 17.

## 130. மண்டலம். 1. அநுவாகம். 19 சூக்தம். 4.

10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷி பருச்சேபன்; வடமொழிச்சந்தம்: அத்யஷ்டி, 10 த்ருஷ்டுப்; தேவதை: இந்திரன்.

(வேறு.)

1. தொலைவினின்று சற்பதியின் னெனக்கரு
குறுக விந்திர மகமென்ன வெம்மிலங்
கொலைவல் வீரரின்னிறையென்ன; வுன்னையாங்
கூவுகின்றனஞ் சுதையோ டவியொடும்;
மலியுண வினைப் பெறுமாறு தந்தையை
மருவிடும் புதல்வர்களென்ன வெற்றியைத்
தலைமை யின்னுறக் கொடைமிக்க வுன்றனைத்
தழுவி யெம்மவி கொளவென் றழைப்பமே.

(இ-ள்.) இந்திரனே! தூரதேசமாகிய ஸ்வர்க்கத்தினின்று, சத்துருக்களின் பதியைப் போலவும், கொல்லுதல் வல்ல வீரர்களுக்குப்பதியாகிய ராஜாவைப்போலவும் யாகதலத்துக்கு வருவதுபோல எமது கிரகத்தைநோக்கி வருவாயாக. ஸோமச்சுதையோடும் அவியுணவோடும் உன்னை யாங்கள்கூவுகின்றோம். நிறைந்த வுணவைப்பெறப் பிதாவையடைந்தழைக்கும் புத்திரர்களைப்போல வெற்றியைப்பெறுமாறு கொடையிற் சிறந்த வுன்னை அவியோடு கூவியழைப்போம்—(எ-று.)

2. விரைவி னெய்து மரியிங்கு கல்லினிற்
பிழியுறும்மதுக் கலசத் திழிந்ததைத்
தரையி னுதரத்தொடு வேட்கை யுற்றமாச்
சருவியே குடிப்பதனிற் பருகுக;
பொருவி னற்றிடம் புணர்விக்க வுன்றனைப்
புரையி னன்மதத் துறுவிக்க நற்குடிக்
கருகியைத்திட லரிநற் பரிதியை
யறுதினத்தினு மணைவிப்ப தென்னவே.

(இ-ள்.) வேகமாகச்செல்லும் இந்திரனே! இவ்விடத்துக் கல்லிற் பிழிந்து மதுக்கோசத்திலிருந்து வடிந்த மதுவை(ஸோமத்தை) ஆவலோடும் தாகமெடுத்த காளைமாடு குடிப்பதுபோலக் குடிப்பாயாக. உனக்கு உவமை

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

யற்றிடத்தை யுண்டுபண்ணவும், உன்னைக் குற்றமற்ற ஸந்தோஷத்தி லமர்த்தவும், நீ நன்றாய்க்குடிக்கும்வண்ணம் குதிரைகளுன்னைத் தினந்தோறும் சூரியனைக் கொண்டுவருவதுபோலக் கொண்டுவரட்டும்—(எ-று.)

3. குகைநிலத்த நன்னிதி யொத்ததைக் கெடாக்
கோடி படர்ந்தகன் மலைமத்தி யிற்றரத்
திகிரி யுச்சியில் அள கூட்டுறும் புளின்
சிசுவை யொத்து வாலுளவல்லியை யெய்தினன்;
பகை மறைத்த வப் பசுவைத் திறத்தலிற்
பழுவச்சிரப்பதி யங்கிரத்தமன்
தகையு மேகநீர் நெறியைத் திறந்தரி
சருவ விட்டனன் பலதானி யத்தையே.

(இ-ள்.) குகையினிடத்து மறைவாக நிலத்துள்ளதும், நிதியை யொத்ததும், கெடாதகோடி முதலிய படர்ந்த கன்மலைகளுக்கு மத்தியிலுள்ள மலையுச்சியில் வைக்கப்பட்ட கூட்டின்கணுள்ள பறவைக்குஞ்சைப்போல வழியாத தன்மை வாய்ந்ததும், விண்ணுலகத்திலிருந்து கொண்டுவரப்பட்டது மான ஸோமத்தை இவ்விந்திரனடைந்தான். பகைவனாகிய பணியென்னு மசுரன் மறைத்துவைத்த பசுக்களைத்திறந்து விடுவதுபோல்தானியாதிகளுக்குக் காரணமான மழைநீரையடைத்து வைத்திருக்கும் வழியைத்திறந்து விட்டு நெல் முதலிய தானியங்கள் நன்றாய் வளரும்படி செய்தான்-(எ-று.) புளின் சிசுவென்றது பறவைக்குஞ்சை.

4. காமதிற் றிறத் தகியைக் கொலற் கெனக்
கடிமிகும் படை யிறுகப் பிடித்தரி
மருவு மேம்பகை வயினுற் றெறிந்திட
வசிமிகப் பெற வுதகம் மெனப்புரிந்
தருவவைத் தனன்; உடல் கோள் பலத்தொடு
முயர் படைப் பலத் தொடுதன் மகத்துவந்
தருவ நல்வனத் தருவைப் பரசுவிற்
றுணியுறுத்துவா, யரி, தச்ச னென்னவே.

(இ-ள்.) இந்திரன் அகியை (விருத்திரனை)க் கொல்லுவதற்காக மிக்க கூர்மைபொருந்திய வச்சிரப்படையைத் தனது கைகளாலிறுகப்பிடித்துக்கொண்டு, அதனைப் பகைவன் மேலெறிய, அபிமந்திரித்தல் முதலிய ஸம்ஸ்காரத்தினால் நீரானது சத்துருவைச் சங்கரிக்கும் வேகமுறுவது போல, அவ்வச்சிராயுதமானது பகைவனை உருவிச்செல்லுஞ் சக்தியைப்பெறுமாறு அதனைப்பின்னும் கூர்மைப்படுத்தினன். இந்திரனே! உனது சரீர பலம், ஸேனாபலம், மகத்துவபலம் ஆகிய மூன்றும்பொருந்தத் தச்சன்காட்டிலுள்ள மரங்களைக் கோடாலியாற் றன் வேலைக்காகத் துண்டுபோடுவது போல, நீயும் எங்களிடத்துப் பகைகொண்டு நடக்கும் பகைவர்களைவெட்டி வீழ்த்துவாய்-(எ-று.) ஷத்ம என்னுஞ் சொற்கு உதகம் என்பர் ஸாயனர். நகாசவேலைசெய்யவுதவுங் கத்தியென்பார் மேனாட்டாசிரியர், இவரே 'எங்கள் பகைவரை வெட்டி வீழ்த்துவாய்.' என்றது மரங்களை வெட்டி வீழ்த்துவாய் எனப்பின்னடிகளை முடிப்பர். படர்க்கைமுன்னிலை மாற்றம். அரி, இந்திரன்.

## மண்டலம் 1 சூக்தம் 130.

5. அரிமுயற்சியின் றருவிக் கடலுற,
வருமகத்து றுன்குயவிற், பொருந்திடத்
திரியரசர்தந் திகிரித் தகையினிற்,
றிகழு வித்தனை; இவையும் பொதுறப் பயன்
தருக வெண்ணி நல்லுதகம் மனுத்தலைத்
தழுவுநற் கறவையினின் மனிதர்வாய்ப்
பெருகி முற்றவும் பயனீத் திடுபவாய்ப்
பெருகி யோடுவ பெரிதும் பிறங்கவே.

(இ-ள்.) இந்திரனே! சிரமமில்லாமல் மேகநீரருவிகள், யாகதலத்து வரும் உன்னுடைய தேரைப்போலவும், யுத்தத்துக்கு விரும்பிச்செல்லும் ராஜாக்களின் றேரைப்போலவும், சமுத்திரத்தை நோக்கியோடுமாறு செய்தனை. அந்த ஆறுகள் பொதுப்பயனைத்தரக்கருதி மநுவினிடத்துப் பொருந்தும் கறவைப் பசுக்களைப்போல மனிதர்களுக்குப் பெரிதும் பலன்றருபவை யாய் மிகச்சிறந்து ஓடும்—(எ-று.) மநு, மானவர்முதல்வருள் ஒருவன்.

வருக்கம் 18.

6. தனமுறுங் நசை யினி, னிந்திர, நரர்,
தகை கொள் கம்மிய னிரதம் புரிவதின்,
உனதரும் புகழ்த் துதியைச் சுகம்பெற
வுருவமைத்துனைத் திகழத் துதித்தனர்;
தன்முறக்கதி மிகு நற்பரியினைச்
சயமகன் றனை முழுமைத் தனம் பெறப்
புனைவதிற் செருக் கதியுற்றவ வுனைப்
புகழினு லுவப் படைவிப்பர் விப்பிர.

(இ-ள்.) இந்திரனே! திரணனகம்மியன் தேரைச்செய்வதுபோலத் தனவிச்சையுள்ள மனிதர்கள், தாங்கள் சுகத்தை யடையும்பொருட்டு உனது அருமையான கீர்த்தியைத் தோற்றும் ஸ்தோத்திரங்களை யுருப்படுத்தி யுன்னைப் புகழ்ந்தார்கள். விப்பிரனே! யுத்தத்திற் கதியோடு செல்பவனே! குறித்தசெல்வத்தைப் பெறுமாறும், எல்லாத் தனத்தையும் பெறுமாறும், வேகம்பொருந்திய குதிரையையும், ஜயசிலனான வீரனையும் அலங்கரித்துப் புகழ்வதுபோல உன்னைப் புகழ்ச்சியினூற் சந்தோஷமடையச் செய்வார்கள் —(எ-று.)

7. பூரு வுய்ந்திடப் புரமூன்று முப்பதைப்
புழுதி செய்தனை, செருவி னடிப்பவ,
ஆரு நல்லவித் திவதாசனுக் கென
வரிமிதிப்பவ குலிசத் தடையலர்
பேரவாட்டினை; யதிதிக்குவற் கவன்
பெயர வீழ்த்தினன் மலைநின்று சம்பரன்
நேருமுக்கிரனிலை யிற்பெருந்தன
நேடியாவையும் வழியிற் பகிர்ந்துமே.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

(இ-ள்.) யுத்தத்தில் நடிப்பவனே! பூருவுக்காகத் தொண்ணூறு புரங்களைப் பொடித்தனை. பகைவர்களை மிதிப்பவனே! தாசுஷனாகிய திவோதாஸனென்னும் அரசனுக்காக வச்சிராயுதத்தினாற் சத்துருக்களழியும் வண்ணம் இம்சித்தாய். அதிதிக்குவனாகிய திவோதாஸனுக்காக உக்கிரனாகிய அவ்விந்திரன் நிலைபெற்ற பெருந்தனங்களெல்லாவற்றையுந் தேடித் தனது பலத்தினாற் பங்கிட்டுச் சம்பராசுரனைக் கிரியினின்றுங் கீழேவிழும்படி செய்தான்—(எ-று.) பூரு, மனிதர்க்கு முதல்வன்பெயர். திவோதாசன் திவதாசன் எனச் செய்யுளில் நின்றது. அதிதிக்குவன் அதிதி ஸத்காரத்திற் சிறந்தவன்; திவோதாஸனுடைய மற்றொருபெயர். மண். 1 சூக். 51 செய். 6 பார்க்க. சம்பரனைப் பற்றியும் ஆண்டுப் பார்க்க.

8. மகமிழைக்கு மாரியனைச் சமத்தினில்
மருவுநூறுத விகளிற் றுறக்கநற்
சுகமளிக்கு மெவ்வமருஞ் சிறப்புறத்
துணையளிப்ப னிந்திரன்; மானவர்க்கென
மகமியற்றிடா வசுரன் கறுப்பதன்
வகையுறக்கெடுத்தவனைத் தொடர்ந்துளோர்
தொகுதி யல்லலுற்றழியத் தகித்தலிற்
றுருவிபாரையு நனிசுட்டெரிப்பனே.

(இ-ள்) யாகஞ்செய்யும் ஆரியனைக்காக்க யுத்தத்திற் பலவுதவிகளோடே ஸ்வர்க்கஸுகத்தைத்தரும் பெரும்போரெல்லாவற்றிலுஞ் சிறப்பாக இந்திரன் துணைசெய்வான். மனிதர்களைக் காப்பாற்றி மகம்புரியாத கிருஷ்ணன் என்னும் அசுரனின்கறுப்புத்தோலைக்கிழித்து அவனைக்கொன்று அவனுடைய பரிவாரங்கள் ஒருவனையும் விடாமல் அழித்துச், சுட்டுச் சாம்பலாக்குவது போல எரித்து விடுவான்—(எ-று.) 'பரிதிபேதிப்போர் களம்பட்டோர் போகப், பரிவ்ராஜகரென்பவர்' சூரியனைப் பேதித்து ஸ்வர்க்கத்துக்குப் போகுபவர் யுத்தகளத்திற் பிராணனை விட்டவரும், பரிவிராஜரும் என்றுமிருவர்களாமென்று பராசர ஸ்மிருதிகூறும். ஆனது பற்றியே துறக்க ஸுகமளிக்கும் அமரென்றார். பின்னிரண்டடிகளுக்கும் ஒருகதையுண்டு. அம்சுமதி யென்றவொருநதியின் கரையில கறுப்பு வர்ணமுள்ள கிருஷ்ணன் என்று மகாரௌத்ரனொருவன் பதினாயிரம் அநுசார்களோடு கூடி அவ்விடத்துச் சென்றும் ஜீவன்களை யழித்துக்கொண்டிருந்தான். இவ்கே இந்திரன் பிருஹஸ்பதியினாற் பிரேரேபிக்கப்பட்டு .மருத்துக்களோடு சென்று அக்கிருஷ்ணனின் றோலையுரித்து அவனது பரிவாரங்களையுங் கொன்றான். இக்கதை மண். 8 சூக். 85 செய். 13 இல் மறுபடியும் வருகிறது. அங்கு இக்கதை வேறொரு வகையாகக் கூறப்படுவதையும் நோக்குக. அம்சுமதி குருக்ஷேத்திரத்திலுள்ள தென்பார் ஸாயணர். யமுனை யென்று ஸாயணர் சொல்வதாக மேனாட்டாசிரியர் கூறுவர். இக்கிருஷ்ணன் பிருஷேஷாதாவெனவும் அவனது அநுசார்களும் அத்தகையரே யெனவும் ஆண்டுப் புலப்படுகிறது.

9. பகல்வன் றனதுருளைப் பலத்தினிற்
பரிவொடுஞ் சுமங்கெறிதந்து செந்நிற

## மண்டலம் 1. சூக்தம் 130

மிகவுமன்னவ ரருகுற் றவர்மொழி
விளிதரக் கவர்ந்தனன் முற்றவும் வலி
புகலுமன்னவன்; கவி, மக்களின்னெலாப்
பொழுதுநற் சுகத்தனமேந்தி யாயுளிற்
றகவினிற்றரல்; உசனன் வயின்விரை
தகவிழைந்து சேய்மையினிற் புரந்தனே.

(இ-ள்.) இங்கு ஒருகதையுண்டு. (முன்பு ஒருகாலத்துச் சிலவசுரர் கள், இந்திரனுற் றங்களைக் கொல்ல முடியாதென்ற வரத்தைப் பிரஹ்மாவி னிடத்திற் பெற்று இந்திரனை மதிக்காமற்றிரிந்தார்கள். அப்போது இந்தி ரன் ஸூர்யனது சக்கரத்தைத்தனது பலத்தினுல் எடுத்து அவர்கள் மீது வீசிக் கொன்ருனென்பது.) சூரியனது தேருருளைப் பலத்தினுற் றூக்கி யெறிந்து, வலிமைபொருந்திய ஈசானனுகிய இந்திரன் செங்நிறத்தை யடைந்து அவ்வசுரர்களை யணுகி அவர்களது பேசுஞ் சக்தியை முற்றிலுங் கவர்ந்தான். (அ[illegible]களைக் கொன்ருனென்றபடி.) கவியே! (தனவந்தர்களி டத்துச் சென்று பொருள் சேகரித்துவரும்) மனிதரைப் போல ஒருநாளைப் போலப் பலநாளும் நல்ல சுகங்களை யளிக்கும் செல்வங்களைத்தாங்கி, ஆயுளை விருத்தி செய்வதுபோல வெங்களுக்களிப்பாய். உசனனென்னும் மஹரிஷி யினுக்கு உதவச் சேய்மையினின்றும்(ஸ்வர்க்கத்தினின்று மென்றபடி)வந்து அவனைக் காத்தனே—(எ-று.) முதலிரண்டடிக்கும் ஸூர்யபரமாய்ப் பொ ருள் கூறுவது முண்டு. "இந்திர ரூபமான ஸூர்யன் உதயமாய்த் தன் பலத்தினு லிருளையோட்ட அல்லது அசுரரை ஜயிக்கத் தனது சக்கரத்தை (ஈண்டு இலக்கணை யாற்றேரை யென்க.)க் கடாவுகிறுன். முற்பக்கத்தி லுள்ள ஸாரதியாகிய அருணன் மந்தேஹர் முதலிய அசுரர்களின் சமீபத் திற் சென்று, 'கொல்லுக, வெட்டுக;' என்னும் அவர்களது சத்தங்களைக் கவ ருகிறுன். ஈசானனுய் முற்றுங் கவர்கிறுன்." என்பது. உசனு வென்பதற்கு உசன னென்னுது ஆவலோடு வேகமா யென்று பொருளுரைப்பது மொன்று; உசனன் மண். 1 சூக். 51 செய். 10 பார்க்க. கவியே யென்றது இந்திரனைக் குறித்தது.

(வேறு.)

10. புரங்களைப்பொடிப்போ,யிச்சைபொருத்திடுங்கரும்வேந்தே!
உரம்பெறப்புதிதின்யாங்களுரைக்குமுக்தப்போற்றெய்தித்
தரம்பெறுசுகத்திற்காப்பாய்;சாற்றுமித்திவதாசன்றன்
வரம்பெறுகுடி-துதிக்கவளருக, பகலென்றாழின்.

(இ-ள்.) புரங்களைப் பொடியாக்குபவனே! இச்சைகளை வர்ஷிக்குங் கர்மத்தோடு கூடியவனே! இந்திரனே! புதிதாக யாங்கள் செய்து கூறும் உக்தங்களால் ஸ்தோத்திரஞ் செய்யப்பெற்று எங்களுக்கு ஐஹிக ஆமுஷ்மிக சுகத்தை யளித்துக் காப்பாயாக. இத்திவோதாஸன் வம்சஸ்தர்களாகிய யாங்கள் புகழுவதினுல், பகலிற் சூரியன் விருத்தியை யடைவது போல விருத்தியடைவாயாக—(எ-று.) வேந்து, இந்திரன் தரம் பெறு சுகமென் றது இடபரசுகங்களை. இச்சுக்தரிஷியாகிய பருச்சேபன் திவோதாஸனது குடியில் வந்தவன். திவோதாஸன், திவதாச னெனவாயது.

வருக்கம். 19.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

### 131. மண்டலம். 1. அநுவாகம். 19 சூக்தம். 5.

7 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: திவோதாஸ பருச்சேபன்; வடமொழிச்சந்தம்: அத்யஷ்டி; தேவதை: இந்திரன்.

1. அசுரனிந்திரன் றனைவிண் ணுலகுடன்
அகலவனியும் பணியுந் துதியொடு
மிசையுறச் சிறந்திடுமவ் வவியொடும்;
இசையு மன்பினொத் தொழுகெக்கடவுளும்
வசையிலன்னவன் றனை முன்னிறுத்தினர்;
மனிதராற்று மெச்சவனங்களும் மவர்
நசையுறத்தரு மவிநற் பொருள்களு
நணுகலிந்திரன் பெருமைக் கெனவுமே.

(இ-ள்) பகையடர்ப்பவனாகிய விந்திரனைத் தேவலோகத்தவரும் விரிவான பூமியிலுள்ளவரும் துதிகளோடும் கீர்த்தி பொருந்தும் வண்ணம் தரப்படும் அவிப் பொருள்களோடும் பணிவார்கள். எல்லாத் தேவர்களும் ஒருமனப்பட்டு அவ்விந்திரனை முன்னணியில் முதல்வனாக நிறுத்தினார்கள். மனிதர்கள் செய்யும் எல்லா ஸவனங்களும் அம்மனிதர்கள் தரும் புரோடாசம் முதலிய அவிப்பொருள்களும் அவ்விந்திரனது பெருமையைத் தோற்றுவதற்காகவே பொருந்தும்—(எ-று.) அசுரன் அஸுரன், பகைவர்களையடக்குபவன், இந்திர னென்க. மண். 1 சுக்- 24 செய். 14 பார்க்க.

2. அகிலமெங்கணுந் தனியுற்ற வுன்னையே
யனையுமெம்மக மதிலும் விரைவுறப்
புகலுமிச்சைகள்பெற வெண்ணுவோர் தனித்
தனியுறப்பரச் சுகமுன்னை வேண்டுவோர்
புகலுவர்; கரைதனிலுற்ற கப்பலிற்
புகலுமெம்பலத் துனைமிக் கியைப்பமால்
மகமியற்றுமாயுள ரிந்திரன்மகத்
துவமதனையே துதிசொற் றணைவினே.

(இ-ள்.) இந்திரனே! அகில மெல்லாம் தனித்து நிற்குமுன்னை, இச்சைகளை யுன்னிடத்திருந்து பெற விரும்புபவரும், சுவர்க்க லோகங்களைத் தனித் தனித்தாமே பெற விரும்பிக் கூவுவோருமாகிய யஜமானர்கள் எல்லா ஸவனங்களிலும் விரைவின் வரப்புகலுவர். ஆயுளோடு கூடிய மனிதர்களாகிய யஜமானர்கள் இந்திரனே பரமேசுவரனென்று அவனது மகத்துவத்தைத் தோமங்களாற் புகழ்ந்து அவனை யெண்ணியடைவது போல யாகமக்களாகிய யாங்கள் கரையோரத்தில் நிறுத்தப் பட்டுள்ள கப்பலிற்சாமான் நிரப்புவதொப்ப உன்னை எமது பலத்தோடு கூட்டுவோம்—(எ-று.) உன்னை யென்பது இந்திரனையே.

## மண்டலம் 1 சூக்தம் 131.

3. உனதுதவியை விழையுஞ் சதிபதி
யுறுமவியெலா முதவிப் பசுநிரை
மனநிறைவுறப் பெறநோன் பியற்றுவார்;
மருவிருவரும் பசுவைப் பெறுவதற்
கினலரும் பரச்சுக மெய்துறத் திறத்
தியைகுவிப்பை; யிந்திர விச்சையைத்தரும்
மனமொடும் பிறந்தனை யுன்பகை தெறும்
வயிர வாயுதந் தனின்மிக் கொளிர்குவை.

(இ-ள்.) இந்திரனே! உனது உதவிகளைவிரும்பும் பத்தினியோடுகூடிய யஜமானர்கள் தங்கள் அவிப்பொருள்களையெல்லாம் முழுவதுமுதவிப் பசுக்கூட்டத்தை நிறைவிற்பெற மகநோன்பாற்றுவார்கள். பசுவைப்பெறவேணும், சுவர்க்கத்தையெய்தவேணும் இருவரும் அடையும் வண்ணம் அவர்களைச் சேர்ப்பாய். இந்திரனே! காமியவஸ்துக்களையளிக்கும் மனத்தோடு கூடப்பிறந்த நீ உனது பகைவரை வாட்டும் வச்சிராயுதத்தைக் கையிலேந்தி விளங்குவாய்—(எ-று.) அவ்வச்சிரம் எல்லாருக்குந் தெரியச்செய்வாயென்க. மேனாட்டாசிரியர், பசுவைப் பெறவேணும் ஸ்வர்க்கத்தைப் பெறவேணும் இரண்டு மனிதர்களை நேர்நேராக யுத்தஞ்செய்யக் கொண்டுவந்து நிறுத்துவாய் என்பர். சதிபதியென்பதற்குப் பத்தினியோடு கூடிய யஜமானர்களென்று கூறியது ஸ்திரீகள் அத்யயனஞ் செய்யாதவர்களானாலும் அவர்களுக்குப் புருஷனின்றிக்கர்மஙடத்தயோக்கிதை யில்லாததனாலுமென்பார் ஸாயணர். அதற்குப்பூர்வமீமாம்ஸை 6-ம் அதிகாரம் 3-வது அத்தியாயம் 4வது அதிகாணத்தைமேற்கோளாகக் காட்டுவர். ஆண்டு 'ஸ்திரியா அதிகார: ஸச்சபத்யாஸஹ' என்றுள்ளது. ஆதானவிதானத்தில் 'ஜாயாபதீ அக்நிமாததியாதாம்' என்றுளது ஸ்மிருதியிலும் நாஸ்திஸ்த்ரீணாம் ப்ருதக் யக்ஞோநவ்ரதம்,' என்றுகூறப்பட்டுள்ளது.

4. வருடமுன்னியே வனைதந்த நற்புரம்
வளருமெப்பொருள் தனையும் பறித்திடப்
பரிவினன்னவை தமைவெட்டும் வீரியம்
பழையரோர்ந் தரியுனையே துதிப்பரால்;
அரி, வலிப்பதி, மகமற்ற மர்த்திய
னழிய வெட்டினை; யசுரர்ப்பறித்தனை
பெரியவிப்புவி யதனைப் புனலினைப்
பெருகறலனைப் பொருளைக் களியினே.

(இ-ள்.) இந்திரனே! வருஷாகாலத்தை நினைத்து மதில் அகிழ்முதலிய வற்றாற் சூழக்கட்டிய பகைவரது கோட்டைகளை யவற்றிலுள்ள பொருள்களைப் பறிக்கவேண்டி யுடைத்தவுனது வீரியத்தையறிந்து பழையவர்கள் உன்னையே துதித்தார்கள். இந்திரனே! வலிமைக்கு நாயகனே; மகவிரோதியான மர்த்தியனைக் கொன்றனை. ஸந்தோஷமஸ்கனாய் இப்பெரிய பூமியையும், அப்பூமியிலுள்ள நீர்நிலைகளையும், அந்நீரின் காரியப்பாடாகிய உணவுப்பொருள்களையும் அசுரர்களாகிய பகைவர்களினின்றும்

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

பிடிக்கிறாய்—(எ-று.) கோட்டைகள் என்பதற்கு மழைகாலத்திற் காணப்படும் மேகங்களாகிய கோட்டைகளை யென்றும் பொருள்கூறலாம் என்பர் (Muir) மூர் என்னும் மேனாட்டுரையாளர்.

5. வலிநிறைந்தவ வனலே யசகித்துவம்
வளருநன்பனு படையக் கருதிய
பொலிவுளோர் மதுக்களியிற் புரிபுநின்
றுதவியுள்ள விவ்வலியைப் புகன்றனர்;
மலிசெருவினிற் புகலும் மலர்த்தொனி
மருவுவெற்றியிற் புணர் வித்தனை; புகழ்
மலியவொவ்வொரு நதியும் விழைந்தவர்
வலிதினுன்னருகினி னின்றடைந்தனர்.

(இ-ள்,) வலிமை நிறைந்த காலேயே! உனது தோழமையை விரும்பியவர்கள் சோமத்தையுண்ட மதத்தினால் நீ புரியும் உதவியோடுகூடிய விவ்வல்லமையைச் சவனந்தோறும் புகழ்ந்தனர். நெருங்கிய யுத்தத்தில் அவர்கள் செய்யும் பேரொலியை வெற்றியுள்ளதாக்குகிறாய். கீர்த்திமலியும் படி (அல்லது ஸாயணருரைப்படி அன்னம்மலிய) விரும்பிய வவர்கள் ஒவ்வொன்றாக வெல்லா நதிகளையும் உன்னிடத்திலிருந்து பெற்றனர்—(எ-று.). ச்ரவஸ்யந்த: புகழ் விரும்புபவர் அல்லது அன்னம் விரும்புபவர்.

6. விடியலிற் புரி மகமுற் றுளம்விழைந்
தொழுகுக; வெமதவியை விளிப்பினைப்
படியினெந்துதி தமையும் பரச்சுகம்
பழகுறப்புரி மகவா யுரைமலே;
இடியெனும்படை யியையிந்திரப், பகை
யிரியவெட்டிடும் வலிநின்ற காலேயே,
தொடையுறப் புதுநடை யுற்ற விச்சைபன்
சொலுமறை யெனதினை யுன்செவிக்கொளல்.

(இ-ள்.) (அவ்விந்திரன்) விடியற்காலத்திற் செய்யும் யக்ஞத்தினிடத்து வந்து அதனை விரும்பி நடப்பானாக. ஸ்வர்க்க சுகத்தினை விரும்பிச் செய்யும் எமது யக்ஞத்திற் றரும் அவிப்பொருள்களையும், ஸ்தோத்திரங்களையுங் கேட்டறிவானாக. வச்சிராயுதந்தரித்த இந்திரனே! பகைவர்களைக் கொல்லும் வலிமைபொருந்திய காலேயே! புதுஸம்ஸ்காரங்களோடு கூடியுள்ள மேதாவியாகிய யான் புதிதாக விழைத்துக் கூறும் மந்திரங்களைக் கேட்பாயாக—(எ-று.)

7. துதிபொருந்தி யோங்கிய சூர, விந்திர
தொடுபகைவன் மர்த்தியனைப் படையினின்
வதைபுரிக; வெம்மழிவைக் கருதிடு
மனிதனைக்கொலல்; சிரவச்சுனைத்தம,

## மண்டலம் 1. சூக்தம் 132.

துதைகுரோதமோ டெமை யொக்க வாட்டிடுஞ்
 சுகமி றுன்மதிதனை வென்றழித்திடல
பதிகனைக் கர வடமுற்றவர்கொளும்
 படியெனச் சொலுமொழியுன் செவிக்கொளல்.

(இ-ள்) ஸ்தோத்திரங்களால் மேன்மையுற்ற சூரனே! இந்திரனே எங்களது பகைவனுகிய மர்த்தியனை வச்சிராயுதத்தால் மடிப்பாயாக. எமது அழிவைவிரும்பும் மனிதனையும் கொல்லுக. காதுகொடுத்து கேட்பதிற் சிறந்த வுத்தமனே! குரோத புத்தியோடு எமது கேட்டையெண்ணி யெங்களைத் துன்பப்படுத்தும் துஷ்டபுத்தியை, வழிப்போக்கனைத்திருடர் இம்சிக்கும் விதமாக, விம்சித்துகொல்லுவாயாக வென்று சொல்லும் எம்மொழிகளை உன்காதிற் கொள்ளுவாயாக-(எ-று.) 'மதியினின் மகத்திடைநிற்கு மின்னலை வதைபுரிவதிற் புரிகென்ன லேற்கவே.' என்றும் கடையடியைப் படிக்கலாம். 'நன்னெறியென்று செய்யும் எங்கள் யாகத்துக்கு இடையில்வரும் அசுரபீடைகளை யழிப்பதுபோல அழிப்பாயாக வென்று சொல்வதைக் கேட்பாயாக.' வென்பதுபொருள்.

வருக்கம். 20.

## 132· மண்டலம் 1. அநுவாகம் 19 சூக்தம் 6.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷிடபருச்சேபன்; வடமொழிச்சந்தம்; அத்யஷ்டி; தேவதை: இந்திரன், 6 இந்திரனும் பர்வதமும்.

1. மகசவுக்கிய, வுனதார் பழந்துணை
 மருவியுள்ளயா மதிசி ரரிப்பலக்
தகமருவியோ ரெமைவெற்றி கொள்ளுறத்
 தளமொடும் முறும்பகைவர்ச் செயித்துறல்;
மிகவுமின் றருகினை யிம்மகத்தினிற்
 பிழிமதுவனைப் பரிவின்விதந்துகூ
றுக; வவிப்பொருள் தருமெம் சயம்பெற
 வுதவுமுன்வயிற் பொருள்பங்குறப்பெறல்.

(இ-ள்) (மகவானே) மகத்தின் ஸௌக்கியத்தோடு கூடியவனே! உனது பழையதுணையைப் பொருந்தியுள்ள யாங்கள், இந்திரனுகிய உனது சிறந்தபலம் பொருந்திய வெம்மைச் சமிக்கச் சேனையோடு வரும் பகைவர்களைச் சயித்துப்பொருந்தட்டும். இன்று சமீபத்தில் நடக்கும் இவ்யாகத்திற் சோமம் பிழியும் யஜமானனுக்காகப்பரிந்து பேசுவாயாக. அவிப்பொருளைத்தரும் யாங்கள், யுத்தத்திற்செயம்பெற வுதவுகின்ற உன்னிடத்திலிருந்தும் யுத்தத்திற் கிடைக்கும் பொருள்களைப் பங்காகப்பெறட்டும் (எ-று.)

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

,2 பாமுறத்தருஞ் செருவிற் பரந்தவன்
பலிதரச்சிறு பொழுதிற் றுயிலுணர்ந்
தாமுறக்குது புரியும் மவன்விழைந்
தாருகுமவ்வயிற் கொலையைப் புரிந்தனன்
அரியு,மெம்மவர் அறியச், சிரத்தினி
லணையவிட்டெவ ரெனினும் புகழ்த்தகன்;
பெறுக வற்றிட றுதியாரு முன்றனம்
பெரிது மன்னுக வெமகட்டிரத்தினே.

(இ-ள்.) ஸ்வர்க்கபலனைத்தரும் யுத்தகளத்தில் விரைந்து சென்றவன் அழைக்குமிடத்தும், பலிதரும் யக்ஞங்களைப்புரிய அதிகாலையிற் றுயிலெழுந்து யாகஞ் செய்பவன் உருகியழைக்குமிடத்தும், எல்லாரும் தமது சிரத்திற் பொருத்திப் புகழத்தக்கவனாகிய இந்திரனும் எம்மவர்பார்த்துக்கொண்டிருக்கப் பகைவரைக் கொன்றான். (இந்திரனே!) துதிக்கத்தக்க உன்னுடைய செல்வமானது எங்களிடத்து ஸ்திரமாக வந்து ஏராளமாகக்குவியட்டும்— எ-று.)

3. கிழமையின்மகத் தலமெய்தி யுண்மையிற்
கிளருமெவ்வவிக்கணி னீமகிழ்வையப்
பழமையுற்றநன்மகவா யவிபபொருள்
பழுது நல்லொளி யொளிர்வித் ததுன்றனக்,
கழறினன்ன செய்கையினையறைகுவம;
அதனினீருல கிடையிற்கதிர்கொடு
பழுகநோக்குவார்; அறல்தேடரி மகர்
பசுநிரை பெற வுறவிற் றெரிகுவான்.

(இ-ள்.) (இந்திரனே!) பழமை போல யக்ஞதலத்தையடைந்து ஸத்தியபலன்களோடு விளங்கும் எந்த அவியுணவின்கண் நீமகிழ்வாயோ அந்த வுணவுகூடிய யாக அவிப்பொருள்கள் உனக்காக வொளியை வீசிநிற்கும். இந்தச்செய்கையை ரித்விஜர்களாகிய யாங்கள் எடுத்துக் கூறுவோம். ஆதலால் வானம் பூமி என்னும் இரண்டு உலகங்களுக்கு மத்தியிலுள்ள அந்தரிட்சத்தில் தங்கும் மேகங்களின் மழை பெய்தபின்பு தோன்றும் சூரியகிரணங்கள்துவாரா நீயருளின விஷயத்தைப்பார்த்து அறிவார்கள் மழைநீரைத்தேடியளிக்கும் இந்திரன், அவிசம்பந்தமான பந்துத்துவத்தில் யஜமானர்கள் பசுக்கூட்டத்தைப்பெறுமாறு எண்ணியறிவான்—(எ-று.) பலன் அளிக்க வெண்ணிய யாகத்தலத்துக்கே இந்திரன் செல்லுவானென்பதும், அவன் பலன்றந்தானென்பதை மழைபெய்து ஓய்ந்தபின்னர்த் தோன்றுஞ் சூரியகிரணங்களைப் பார்த்தவுடன் அறியலாமென்பதும், அத்தகைய யஜமானர்கள் இந்திரனுக்கு அவியளிப்பதனால் அவனோடு உறவு கொண்டாடும் பாத்தியதையைப் பெறுகிறார்களென்பதும் கருத்து.

4. பசுவினோடு விண்ணெழுகும் முகில்களைப்
பரவுமங்கிரர்க் கொருதன்மை யின்னளித்
திசையு முன்றெழில், அரிமுன்புபோலிறை
பெழிலினைத்துதற் கியையுற்றதால்; பகை

## மண்டலம் 1 சூக்தம் 132.

வசுவையெங்களுக்கெனவாய்ந்து வெற்றியை
மருவிடா, யுனக்கழுவின் மதுப்பிழி
நசையினெம்மவர்க் குரோசம் விளைத்திடும்
நன்னலர் தொகைமுழுதும் நலிக்கவே.

(இ-ள்) இந்திரனே! பசுக்கூட்டத்தையும், அந்தரத்திற் செல்லும் மழை முகில்களையும், உன்னை வணங்கும் அங்கிரஸர்களுக்காக ஒருதன்மையினளித்துப் பொருந்தும் உனது செய்கை பழைமை போல விரைவாகப் புகழதற்குற்றது. சத்துருவினது தனத்தை யெங்களுக்காக யுத்தஞ் செய்து பெற்று மேன்மையை யடைக. உனக்காகச் சோமம்பிழியும் எமக்கு ரோஷத்தை (கோபத்தை) யூட்டும் பகைவர்களது கூட்டத்தை முற்றவும் வருத்துக—(எ-று). எங்கட்குக் கீழ்ப்படியுமாறு செய்க என்பது பொருள். பகைவரது பசுக் கூட்ட மெனினும், பணி யென்னும் அசுரன்டைத்து வைத்த பசுக்கூட்டமெனினும்பொருந்தும். யாகஞ் செய்வோர் ஆரிய ரென்றும் நண்ணலர்கள் இந்நாட்டு அநாரியகுடிகளென்றும்கூறுவர் மேனாட்டாசிரியர்.

5. கிருதுகொண்டு சௌரியனற் சநங்களைக்
கிழமையிற் றொழில் புரிவிக்கு மவ்வயிற்
பொருது வெல்குவர் தனவுண்டியிச்சையர்
புகல்மகம் புரிந்தவி கொள்ள நாடுவார்;
பெரிது மன்னவன் றனையே வணங்குவர்
பிரிய மைந்தரும் பலமாயுளும்பெற;
அரியினவ்வுலகணைவர் மகத்தின
ரழிவிறெய்வதத் தருகின்னனைவதின்.

(இ-ள்.) சூரனுகிய இந்திரன் ஞானமார்க்கங்களால் எல்லா ஜனங்களையும் தத்தந் தொழில்களைப் புரியுமாறு தூண்டுகையில் பசுவாதி தனத்துக்கும் உணவுக்கும் ஆசைப்பட்டவர்கள் சண்டைசெய்து பகைவரை வென்று அவற்றையடைவார்கள்; யக்ஞங்களைச் செய்து அவிப்பொருள்களை யடைவார்கள். பிரியமுள்ள புத்திரர்களும் பலமும் பொருந்திய ஆயுளைப்பெறுவதற்காக அவ்விந்திரனையே அர்ச்சிப்பார்கள். எண்ணின தெய்வங்களை வணங்கினவர்கள் அழிவில்லாத வவ்வத் தெய்வலோகங்களை யடைவது போல, யக்ஞகர்மங்களைச்செய்பவர்கள் இந்திரஸாமீப்யத்தை(அல்லது லோகத்தை) யடைவார்கள்—(எ-று.)

6. பருவதம் மரி,யிருவீர் முதற் செருப்
பழகுவீரெமைக் கொலவென் றுநேரலர்
அருவியாரையுங் கொலும் வச்சிரத்திறுற்
றெறிவிலோட்டுக, தொகையின் வருத்துக;
கருவியாமதுாரத் தொளிபவர்
கடுமனத் தையுங் கருவிக் குலைத்திடும்;
தரிலர்க்கிழித் தெறிகுர வெம்பகை
யதனை யெவனு மெப் புறமுங் கெடுக்கவே.

## அஷ்டகம் 2. அத்தியாயம் 1.

(இ-ள்.) பர்வதம், இந்திரன் என்னும் மிருவர்களே! யுத்தத்தில் முன்னணியில் நிற்பவர்களே! எம்மைக்கொல்லவென்னும் பகைவர்களை, யாரையுங்கொல்லும் வச்சிராயுதத்தினாற் றூரத்திலோட்டி அப்பகைவர் கூட்டமுழுவதையு மழிப்பீர்களாக. கருவியாகிய அக்குலிசம் தூரத்தோடியொளித்துக்கொள்பவர்களது கடினமான மனத்தையும் பிளக்கும். பகைவரைக்கிழித்தெறியுஞ் சூரனாகிய விந்திரனே! எம்முடைய சத்துருக்களை எல்லாவிடத்திலும் எப்பக்கத்திலும் சூழ்ந்து கெடுப்பாயாக—(எ-று.) பர்வதம் ஈண்டு மலை அல்லது மேகத்தின் அபிமானி தேவதையைக் குறித்து நின்றது. இப்பர்வதம் என்னும் சொல்லுக்குப் பர்ஜன்யன் என்று பொருளுள்ளதை மண். 1 சூக். 122 செய் 3ற். பார்க்க. அத்ரி பர்வதம் இரண்டும் ஒருபொருளனவென்றும் இவற்றிற்கு மேகம், மலையென்னும் இரண்டுபொருள்களும் வருவது சகஜமென்றும் மண். 1 சூக். 7 செய்3ன் உரையில் மேனாட்டாசிரியர் கூறுவர்.

### வருக்கம். 21.

### 133. மண்டலம். 1. அநுவாகம். 19 சூக்தம். 7

7 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷி பருச்சேபன்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப், 2-4 அநுஷ்டுப், 5 காயத்ரி, 6 த்ருதி (1,2,5,6, காய்ச்சீர் வந்த எண்சீர்க்கழி நெடில்.) 7 அத்யஷ்டி; தேவதை: இந்திரன்.

இச்சூக்தத்தை ஜபிப்பதாற் பகைவர்களது அழிவு, இஷ்டப்ராப்தி, ராட்சசர்கள் முதலிய பூதபிசாசுகளின் உபத்திரவ நீக்கம், முதலியன வேற்படுமென்ப.

(வேறு.)

1. மகத்தினை அரோதசியைத் தூய்மையின் மருவுவிப்பல்;
இகத்தினிந்திரனை யெண்ணாப் பெருந்துரோகரை நன்றாகப்,
பகைத்தவர்தமைச்சூழ்ந்தாவி பறித்திடுமிடத்தே மெய்யிற்
செருத்த காயத்தி னீமக்குழியினிற் சுட்டெரிப்பல்.

(இ-ள்) யக்ஞகாரியங்களினால் வானம் பூமி இரண்டையும் பரிசுத்தப்படுத்துவேன். இவ்வுலகத்து இந்திரனை வணங்காத பெரிய துரோகிகளை, விரோதிகளைச் சூழ்ந்து உயிரைவாங்குமிடமும், சரீரம் முற்றிலும் நிறைந்த காயத்தோடிருக்கு மிடமுமாகிய சுடுகாட்டில் நன்றாகச் சுட்டெரிப்பேன்—(எ-று.) துரோஹரை என்பதைப் பெண்பாலாகக் கொண்டு பெண்பிசாசுகளை யென்பார் மேனாட்டாசிரியர்.

(வேறு.)

2. கல்லெறிபவ யாதுதானிகடஞ் சிரத்தைப்
பல்லிடத்திலும் பரந்துறா முனது பாதத்தாற்
சொல்லுற வவர்தவற்றினைத் துகளுற வுடைத்தே
பொல்லென வளைதமையிவட் பொடிப்படுத்துகவே,

## மண்டலம் 1 சூக்தம் 133.

(இ-ள்.) கல்லாகிய வச்சிராயுதத்தை யோச்சுபவனே! யாதுதான விகளின் சிரங்களைப் பலவிடங்களிலும் பரவிநிற்கும் உனது கால்களினால் வளைந்து சூழ்ந்து, அச்சிரங்களை யுடைத்து விரைவிற் சூர்ணஞ்செய்வாயாக —(எ-று.) யாதுமதீநாம் என்பது வடமொழி மூலப்பதம், இதற்குப் பில்லி சூன்யக்காரிகளின் என்று உரைகூறுவர் மேனாட்டாசிரியர். ஆனால் ஆயுதத்தோடு கூடிய சேனை அல்லது ரட்சர்களோடு கூடிய ஸ்திரீகளின் சேனையென்பார் ஸாயணர் அடுத்தசெய்யுளில் யாதுதானவிப்படைகளென்றவர்கள் இவர்களே. அத்ரிவ: கல்லெறிபவனென்பார் ஸாயணர். வடேரிணாவென்பதற்கு உனது யானையாகிய ஐராவதத்தின் பரந்த பாதத்தால் என்றும் உரை கூறுவர் ஸாயணர்.

3. யாது தானவிப்படைகளின் பலத்தினை, மகவான்,
ஓது நற்பொடியாக்குக; ஒடுக்கமா ராழத்
தீது சார்சவக்குழிநிறை யிமசேயத்திற்
காது மன்னவர் சவங்களை யாழுறப்புதைக்கல்.

(இ-ள்.) மகவானே! யாதுதானவிகளின் சேனையினது பலத்தைக் கெடுப்பாயாக. ஒடுங்கி யாழமாயுள்ள பிரேதக்குழிகள் நிறைந்த சுடுகாட்டில், நீ கொல்லும் அவரது பிரேதங்களையாழமாகப் புதைப்பாயாக—எ-று.

4. அவர்களிற் பலர் தம்மையுஞ் சூழ்ந்து மும்மடிசார்
தவலரும் பதிற்றைவரை வதைத்த சற்கரும,
நுவலுதற்குப் பேரெழிலினிற் பொருந்துறும்; நினது
கவனமார்திறற் கற்பமா மெனக்கருதுவரே.

(இ-ள்.) அந்த யாதுதானவிகளிற் பலரையுஞ் சூழ்ந்து 150 பேர்களைக்கொன்றஅச்செய்கை சொல்லுவதற்குக் கீர்த்திப்பொருந்தியதாம். ஆனால் உனது வல்லமைக்கு அது அற்பமெனவுங் கருதுவர்—(எ-று.)

(வேறு.)

5. வெடி குரற்ற செய்த்தோரின் மிளிர்நிறத்
தண்டயு மந்தப் பிசாசத்தை, யிந்திர,
யிடியி னெற்றுக வெல்லாவரக்கரும்
மடிய, வாட்டுக மண்ணின் விழுத்தவே.

(இ-ள்.) இந்திரனே! பயங்கரமான குரலோடும் ரக்த நிறத்தோடுங் கூடிய அப்பிசாசை யிடித்துக்கொல்லுக. எல்லா ரட்சர்களும் சாகும்படி வாட்டுவாயாக. அவர்களை மண்ணில் வீழ்த்துவாயாக—(எ-று.)

(வேறு.)

6. கிழித்தெறிக வலியோரைக்; கேட்கமெலஞ்சொல்;
கிளர்பயத்திற் புலிபினடுங் கிற்று வானம்,
தழைத்த பகைவரை யுண்போய், சம்பர்தாங்குந்

சால்புள விந்திரவெரியிற் புவிவான் முன்பு
செழிப்பறவே பயந்ததுபோற்; றிறலோர் தம்மிற்
றிறத்தமனே, சத்தியுளோர் சயிக்கலர்தாய்!
பழிச்சுறு மூவெழுவருடன்றொடருஞ் சூர,
பண்பினரைக் கொலாதுறுவாய் கொலைவேலோடே

(இ-ள்.) இந்திரனே! வச்சிராயுதத்தைத் தாங்குபவனே! சத்துருக்களைத் தின்பவனே! வலியவர்களாகிய பகைவரைக் கிழித்தெறிவாயாக எமது வார்த்தைகளைக் கேட்பாயாக. முன்பு துவஷ்டு ரூபமான அக்கினி வெளிப்பட்டபோது வானம் பூமிகள் நடுங்கினதுபோல இப்பொழுதும் பூமியைப்போல விண்ணும் பயந்தது. சாமர்த்தியவான்களிற் சிறந்த சாமர்த்தியவானே! மிகுந்த சக்தியுள்ளவர்களும் ஜயிக்க முடியாதவனே! மூன்றுவகைப்பட்ட எழுவீரர்களும் தொடர்ந்துசெல்லும் சூரனே! கொல்லுதல் வல்ல ஆயுதங்களோடு யாகஞ் செய்யும் பண்புள்ளோரைக்கொல்லாது வருகிறாய்—(எ-று.) "ஒருகாலத்து உலகம்பெரிய அந்தகாரத்தில் மூழ்கியிருந்தபோது தேவர்கள் யோசித்து அக்கினியை வேண்டினார்கள். அவன் துவஷ்டு (ஒளி)ரூபமாய் வானம் பூமிகளிற் சூழ்ந்திருந்த இருட்டைக்கிழித்துக்கொண்டு கிளம்பினான். அப்பொழுது வானம் பூமிகள் பயமடைந்தன." என்பது இங்கு அறியத்தக்க கதை.மண். 1 சூக். 95 செய். 5லும் பார்க்க. மூவெழுவரென்பது மருத்துக்களென்பார் ஸாயணர் இத்தொகை பலவேழென்ற பொருளில் வந்தது மருத்துக்கள் எழெழுவரென்பது மண் 1சூக். 88 செய் 1ற் கூறப்பட்டது. சம்பம் வச்சிராயுதம். பண்பினரைக் கொல்லாது என்பதாற் பண்பிலரைக்கொல்லுதல் பொருந்தும்.

(வேறு.)

7. சுதை பிழிபவன் றனமிக்க வில்வினைச்
சுகமுறப் பெறும்; மதுவைப் பிழிவதின்
வதை புரிகிறான் பகைவர் தமைக்கட
வுளரையும் பகைத் திடுமத் துவேஷரைச்;
சுதை பிழிபவன் பிறராற்றடுக்கலான்
றுதையுறப் பெறுந் தசநாறு பொன்னனம்;
சுதைபிழிபவற் கரியும் பொருள்களைத்
துதைகுவிப்ப வின்பொழுதார் தனங்களே.

(இ-ள்.) ஸோமம் பிழியும் யஜமானன் தனமிகுந்த வீட்டைப் பெறுவான். மதுவைப் பிழிவதினால் தனது மகவிரோதிகளையும், தேவர்களைப்பகைக்கும் துவேஷிகளையும் கொல்லுகிறான். ஸோமம்பிழிபவனும் பிறரால் தடுக்க முடியாதவனும் ஆயிரக்கணக்கான பொன்னையும் அன்னப்பொருள்களையும் அடைகிறான். ஸோமாபிஷவஞ் செய்பவனுக்கு இந்திரன் நெடுங்காலம் நிலைத்துநிற்கும் பசுமுதலிய நிறைந்த செல்வத்தை நிரம்பத் தருகிறான்—(எ-று.)

## மண்டலம் 1 சூக்தம் 134.

## 134. மண்டலம் 1. அநுவாகம் 20 சூக்தம் 1.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷெ பருச்சேபன்; வடமொழிச் சந்தம்: அத்யஷ்டி; 6அஷ்டி; தேவதை: வாயு.

1. விரைகதிப்பரி யுனைமுற்பழமையின்
விழவினேனைய கடவுட்கெனப்பிழிந்
தருகினேற்றிய மதுவுன்னை, வாயுவே,
வணைகுளிக்க லெம்மக மாரவியெணி;
பெருகெமன்பு மெய்ம்மறை யுன் னுயர்குணம்
பெரியுவாக்க, நின்மனம ங்கமருக;
தருகுமெம்மவி தமையேற்க, வாயுவெஞ்
சார்வை யிய மாநிறைதேரி னேகலே.

(இ-ள்.) வாயுவே! பழமைபோல் இதரதேவர்களுக்குப் பிழியும் ஸோமத்தை விழாக்காலத்தில் முன்னர்க் குடிக்குமாறு, எமது யக்ஞத்தி லளிக்கும் அவிப்பொருள்களை யெண்ணி உனது வேகமான நடைபொருந் திய குதிரைகள் உன்னை யிங்கு கொண்டுவரட்டும். எம்முடைய பிரிய ஸத்திய வாக்கோடு கூடிய மறைகள் உனது உயர்ந்த குணங்களை பெரியவை யாகச் செய்யட்டும். உனது உள்ளமும் அம்மந்திரத்தினிடத்து ஸந்தோஷத் தோடு தங்கட்டும். வாயுவே! யாங்கள் தரும் அவிப்பொருளை யேற்கவும், எமது ஆசைகளைத் தரவும் குதிரைப் பந்திகள் நிறைந்த தேரோடு நீ வருவாயாக—(எ-று.)

2. மதமளிப்பவை, விரைவின்மெருளிர்பவை,
மறையழைப்பவை, வடிபெற்றெழின்றவை,
யிதமுறுத்தநின்றனை, வாயு,விந்துக,
ளிரதமீர்க்குமுன்பரி யுன்றுணையினுன்
னெதிரொழுகியெம் மகசேதச மெம்மவி
யெதிர வெங்கொழி லெணி நண்ணியின்புற;
மதியினற்றெழில் புரிவோரடைந்துதம்
மதியினிச்சைகள் தமை வேண்டுகின்றனர்.

(இ-ள்.) வாயுவே! உனது தேரை யிழுக்கும் உனது குதிரைகள் உன் துணைகளை யடைந்து உனக்கு முன்னர்ச் சென்று எங்களுடைய யக்ஞதலத்திற் றரும்மவியை யேற்க வென்றும், எமது யக்ஞ கார்யங்களை யெண்ணி அங்கு வந்து களிக்கவும், மதத்தைத் தருபவையும் விரைவாக எப் பக்கத்தும் விளங்குபவையும் மந்திரங்க ளழைக்க நிற்பவையும் (பத்துத் தரம் சுத்தமாக) வடிக்கப் பெற்று எழிலை யடைந்தவையுமான ஸோமத்துளிகள் உனக்கு மதத்தை யூட்டட்டும். தமது புத்தியினால் யாககர்மங்களைப் புரியும் ரித்விக் யஜமானர்கள் இம்மகத்தை யடைந்து தமது ஆசைக்கேற்ற விஷயங்களைச் சொல்லி வேண்டிக் கொள்ளுகிறார்கள்—(எ-று.)

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

3. சிவப்புறும் பரிதமை வாயு தாமிரந்
திகழு மிரண்டினை வாயுவேகமோ
டுவப்புறச் சுமையினை நன்கிழுக்கவல்
லுரம்பொருந்து மாவினைவைப நன்னுகந்
தவிர்ப்பன்; வாயு மூதறிஞன் றனைத்தெளி
வடைவி, சார னன்பின டுக்க நீக்கலின்;
நிவப்புறும் மொளியினை வான்புவி யுஷை
நிறைய வூட்டுவா யவியுண்டி யேற்கவே.

(இ-ள்) வாயுதேவன் சிவந்த குதிரைகளைத் தேர்நுகத்திற் கட்டுவான் சுமையிழுக்கவல்ல தாமிரவர்ணமான இரண்டு குதிரைகளையும் வாயுகட்டுவான் (கட்டி-வேகமாகவந்து சேருவா னென்பது பொரு ளென்பார் ஸாயணர்) வாயுவே! ஜாரன் தூங்கிக்கொண்டிருக்கும் தனது அன்பிற்குரியமாதை யெழுப்புவதுபோல, நல்ல ஞானவான் (கர்மமத்தியிற்) றூங்கும்போது அவனை யடிக்கடி (எச்சரித்து)எழுப்பிவிடுக.வானமும்,பூமியும் பிரகாசிக்கும்படி செய்க. அவியுணவை யேற்கு மாறு வைகறைக்காலத்தையும் நன்றாய்ப் பிரகாசிக்கும்படி செய்க.—(எ-று.) ஜாரன் மண் 1 சுக். 66 செய்.4 பார்க்க. ஆனால் ஈண்டு,தற்காலம் அச்சொல் உபயோகமாகும்வண்ணமே உரை யெழுதியுள்ளார் ஸாயணருரையில், இதுவும் இவ்வஷ்டகம் வேறொருவகைப்பாடு என்பதையுணர்த்தும். பின்னடி வாயுவை முன்னிலைப்படுத்தியது. வாயு, அண்மைவிளி.

4. ஒளி மிகும் முஷை யுப ரந்தரத்தினின்
றொழுகு தம்புதுப் பலவர்ணவெற்றுகில்
அளிமிகமகப்பிரதேச மோங்கிட
வளிபெற விரித்தனை பெண்ணியோட்டுமால்;
களிதரும்மமிழ்தளி தேனு வும்முனைக்
கருதி யாவையார் தனமும் கறந்திடும்;
அளகமாரு நன்னதி வானிழிந்துற
வளியின் மாருதர் தமைநீ படைத்தனை.

(இ-ள்.) (வாயுவே!) பிரகாசம் மிகுந்த உஷஸுக்கள், உயர்ந்த அந்தரிட்சத்திலிருந்து ஒழுகுகின்ற தமது சித்திர வர்ணமானவையும் புதிதாய்த் தோன்றியவையுமான கிரணங்களாகிய வஸ்திரத்தை தேவயஜநதேசங்களில் ஒக்குமாறு உனக்காக விரித்து நீட்டும். அமிர்தத்தைத்தரும் பசுக்கள் உனக்காகத் தங்களுடைய நெய் முதலிய எல்லாத் தனங்களையும் அளிக்கும். தண்ணீர் நிறைந்து ஓடும் ஆறுகள் வானத்தினின்று மிழிந்து பெருகுமாறு உனதம்சங்களாகிய மருத்துக்களை அந்தரத்தில் சிருஷ்டித்தாய்—(எ-று.). ஸாயணர் முதலடியை அக்கினி பரமாகவும் பொருட் படுத்துவர் 'யாகக்கிரகங்களில் ஓமத்துக்காகப் பிரகாசிக்கும் காளி, கராளி முதலிய தகிக்கத்தக்கவையும் புதியவையுமான சுவாலைகளோடு கூடிய தேவயஜனப்பிரதேசங்களில் வரும் உனக்காக, அவ்வக்கினிச் சுவாலைகளாகிய வஸ்திரங்களை உஷஸுக்கள், விரிக்கின்றன.' அதாவது அதிகாலையில் அக்

## மண்டலம் 1. சூக்தம் 134.

கினி சுவாலை யோடு எரியும், என்பார். வக்ஷணப்ய: என்பதற்கு பிரவாஹ ஜலமென்றும் நதியென்றும் ஸாயணர் உரை கூற மேனாட்டாசிரியர் ஜனஸ்தானம் அல்லது கர்ப்பம் என்று பொருளுரைத்து, 'மருத்துக்களை கருப்பத்தினின்று தோற்றுவித்தனை; மருத்துக்களை விண்ணின் கருப்பத்தினின்றும் தோற்றுவித்தனை. என்று கடைசி யடிக்குப் பொருள்கூறுவர். அளகம், நீர்.

5. விரைவினன் மதம் பழகுக்கிரத்தன,
மிளிரும் வெண்மைதூய்மை யினோடுறுபவை
பெருகு மேக நீர்விழைவின் மகத்தினைப்
பிணையவெண்ணி யோடுவவால்; அயர்ச்சியி
னுருகு கோழை தஸ்கரனிற் பிழைத்துய
வுருகி வேண்டுவன் பகவா னுனையுனி;
பெருகுமெய் புவனமதா ருயிர்களிற்
பெருகசூரரிற் பெரிதும் பரிக்கிறாய்.

(இ-ள்) (வாயுவே!) விரைவாக மதம் பழகு முக்கிரத்தோடு கூடிய வையும், வெண்மை சுத்த மிவற் றோடுறுபவையு மான சோமத்துளிகள் மேகநீராசையின் யாகதலத்தை யடைய வெண்ணி யோடுகின்றன. களைப் போடு வருந்தும் பயங்காளி, திருடன் கையிலகப்படாமற் றப்பிப் பிழைக்கப் பகவானாகிய வுன்னையே பிரார்த்திப்பான். எல்லாப் புவனங்களிலு முள்ள பிராணிகளின் பயத்தினின்றும், அசுரர்களுடைய பயத்தினின்றும் (எமதவியை யேற்று எம்மைத் தாங்கி) ரட்சிக்கிறாய்—(எ-று.). மேனாட்டாசிரியர் மேக நீரை யிச்சித்து யாகத்திற் சேர வெண்ணியோடுகின்றன வென்னாது, தண்ணீ ரோடு கலக்க விரைகின்றன வென்பார். பகம் த்வாம், துதிக்கத்தக்க பகவானாகிய வுன்னை யென்பார் ஸாயணர்; ஆனால் செல்வத்துக்காக வுன்னை யென்பார் மேனாட்டாசிரியர். அஸுர்யாத் என்பதற்குத் தேவவுலகினின்றும் எனப் பொருள் கூறுவார் அவரே.

(வேறு.)

6. தேரி னேம மாற்று தலினன் டுறுஞ்
செடியினைக் கெடுத்து றுபவர் பிழிந்
தேரினீந்துறும் மதுவை, வாயுவே
யெம் மகர்த மில்லத்திலும் மடைந்
தியாரு முன்னுறக் காணுறுதநீ
யாவருக்கு முன் பருக வாய்ந்தவன்;
சீரினுன்றனக் கென்ன வேதருஞ்,
செய்ய நெய்ய பாலதனை யாக்களே.

(இ-ள்.) வாயுவே! எல்லாருக்கு முற்பட்டவ (அபூர்வ்ய) னனீ ஸோமம் பிழிந்து ஹோம மாற்றி யவியைத்தரு மிடங்களி லெல்லாஞ் சென்று, அவ்ஹோதாக்களும் பாபத்தைக் கருதி யொழிப்பவர்களுமான யஜமானர்கள் தரும் ஸோமத்தினை முன்னர்க் குடிப்பதற்கு நீ யருகன். அவ் யஜமானர்களது பசுக்கள் நெய்யோடு கூடித்தம்மிடத்திருக்கும் பாலை உனக்காகவேகறந்து கொடுக்கும்—(எ-று.).

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

## 135. மண்டலம்: 1. அநுவாகம். 20 சூக்தம். 2.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: தெய் பருச்சேபன்; வடமொழிச் சந்தம்: அத்யஷ்டி, 7, 8 அஷ்டி; தேவதை : 1—3 வாயு, 4—8 இந்திர வாயுக்கள், 9 வாயு.

1. குசைபரப்பி யுள்ளன; வாயு, வாயிரங்
குதிரை நூறுடன் குழுவிப், பரிக்குழு
விசைபவ, விருந்து தேமதுன்ன வந்துநல்
இயைந்து, தேவர் முற்பருகத்; தளிச்சுவை
யிசையு நன்மதுச் சோமம் மொளி யுனக்
கியைய விட்டனர் கடவுட்டுதிபினர்,
விசையி னுன்றனக் கியை யுன்மதத்தினை
மேவுவிக்க நன் மகவாய் நிறுத்தினர்.

(இ-ள்.) (வாயுவே!) தருப்பைகள் (எங்கள் யாகத்துக்காக) விரிக்கப் பட்டுள்ளன. பரிக்கூட்ட முள்ள வாயுவே! ஆயிரம், நூறு என்னுங் கணக்குள்ள குதிரைகளோடு கூடி யாமளிக்கும் விருந்தைத் தேவர்களுக்கு முதலிற் குடிக்க வருக. மாதுரியமான ஸோமத்துளிகளைத் தேவன் அல்லது ஒளியோடு கூடியவனுன வுனக்காக (தேவர்கள்) ரித்விக் யஜமானர்கள் பிழிந்து வைத்துள்ளார்கள். உனக்கு விரைவாக உன்மதத்தைத் தருவதற்காக யாகத்தினிடத்துப் பிழிந்து வைத்திருக்கிறார்கள்—(எ-று.) நியுதம் வாயுவின் குதிரைக்குப் பெயர் என்பார் யாஸ்கர். நியுதம் என்ற சொல்லுக்கே நூறாயிரம் அல்லது லட்ச மென்னும் பொருளுமுண்டு. தேவா: என்னும் வடமொழிப் பதத்தை ஸோமாஸ: என்னும் பெயரோடு கூட்டித் தெய்வத் தன்மை பொருந்திய ஸோமத்துளிக ளென்பார் மேறுட்டாசிரியர். ஆனல் ஸாயணர் தேவா: என்பதற்கு ரித்விக் யஜமானர்களென்று பொருளுரைப்பார். இதை யொட்டியே கடவுட் டுதியினர் என்று செய்யுளிற் கூறினர். மண். 1 சூக். 23 செய். 19 பார்க்க.

2. கவரு நல் வனப் பொளி மிக்க வாடையிற்
கற்பிழிந்து தூய்மை யினின் வடித்தகள்
எவரு மென் னுனக் கெனவிற் கலசவா
பெய்து; மானிடர் கடவுட்கள் வாயுவே!
விவர மெய்து முன் பகுதிக்கள் முன்னுனை
வேண்டுவம்; உனதரியைச் செலுத்துக;
இவரு மன்பி னெம்மிட நன்கரு ளொடு
மெய்த லெம்வயிற் பிரியத்தி னேடுமே.

(இ-ள்.) வாயுவே! கண்கவரும் வனப்பும் வெள்ளிய ஒளியுங் கூடிய ஆடையோடு கல்லிற் பிழிந்து (பத்துத்தரம்) வடிக்கட்டி யெடுத்த ஸோமமானது, எல்லாரும் விரும்பும் உனக்காக யாகக் கிரகத்திலுள்ள கலசத்தினிடத்தே விழுந்து நிறைந்தது. மனிதர்களுக் குள்ளும் தேவர்களுக்குள்ளும்

## மண்டலம் 1 சூக்தம் 135.

முதலில் வந்து உனது பாகத்தைக் குடிக்கவென எங்களால் வேண்டப்படுகிறது. உனது நியுத மென்னுங் குதிரைகளைத் தூண்டுக. எங்களிடத்து அன்போடும், அநுக்கிரகபுத்தியோடும், ஸந்தோஷத்தோடும் வருக—(எ-று.) ஆடை, வஸ்திரம், போர்வை, ஈண்டு பாலினது ஆடை போல்வது.கள்,ஸோமம். உஸபரி. பன்மைப் பெயர், நியுதம் லட்ச மெனினும் ஒக்கும். கலசம் சோமத் தொட்டி அல்லது துரோண கும்பம்.

3. சதுசகத்திரப் பரியின் விரை வுறல்,
தழுவு மெம்மகந் தனிலிச்சை பெய்துவா
னதிலளிக்கு மெம்மவி யுண்டி யுண் ணுவான்;
அணையு மிம் மதுப் பரிதிக் கிரணமோ
டுதய காந்தியிற் சமயத் தளிக்கதா
லுனது பங்கிதைப் பருகல், சமீரண!
விதி யினத்வரர் தமினிங் கொளிபெற
மிளிர விட்டநிப் பரிசுத்த ஸோமமே.

(இ-ள்.) நூறாயிரம் குதிரைகளோடும், எமது யாகத்தினிடத்து உனது இச்சைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும் வண்ணமும், எம் யாகத்திலளிக்கும் அவியுணவை யுண்ணும் வண்ணமும் விரைவாக வருவாயாக. வாயுவே! இம்மதுவானது சூரியகிரணங்களின் உதய காந்தியோடு கூடியது; உனக்குக் காலத்திலளிக்கப் பெற்றது.உன்பங்காகிய இச்சோமத்தைக் குடிப்பாயாக. சமஸ அத்வர்யுக்கள் பதின்மராற் சுமந்து கொண்டு வந்து பரிசுத்தமாக்கப்பட்ட இச்சோமம் இங்கே நியதிப்படியமைக்கப்பட்டுள்ளது-(எ-று.) அத்வரர்: அத்வர்யுக்கள். ஈண்டு ஸோமசமஸந் தாங்கிய அத்வர்யுக்களைக் குறித்தது, அவர்கள் ஸங்கியை பத்தாம். சமஸம், மரப்பாத்திர விசேஷம், ஸோம கோசம் அல்லது ஸோம கலசத்தினின்றும் எடுத்து ஆவுதிக் கூற்ற உபயோகப்படும் சிறுபாத்திரமாம்.

4. வாயுவே யரி பரி கூடு முங்க டேர்,
மன்னு மெங்களைப் பரிவின் வளர்த்திடத்
தோயு நல்லனஞ் சுளுவிற் கொளற் கெனத்
துதையு மவ்வியந் தனையுண்ண வேய்க்கவே;
வாயுவே, மதுத்துளி யுண்டி யுண்ணுக;
மருவுமுன் குடிக் கென முன் னிபைந்ததால்;
ஏயு மெங்களுக் கினியுங் களிப்பினை
யேய்க்கு நற்றனத் தொடு நீர் வருகுவீர்.

(இ-ள்.) வாயு வீந்திரர்களே! குதிரைகள் பூண்டவுமது தேரானது எங்களைக் காப்பாற்றுவதற்காகவும், எளிதிற் கிரமிக்கக்கூடியதாய் அளிக்கும் நல்ல அன்னமாகிய ஹவ்யத்தை நீங்களுண்ணுவதற் காகவும், உங்களிருவரையுங்கொண்டுவரட்டும். வாயுவே! நீ மாதுர்யத்தோடு கூடிய ஸோமரஸமாகிய வுணவை யுண்பாயாக. அவ்வுணவு நீ முன்னர்க் குடிக்கவென்றே யிசைந்தது. வாயுவிந்திரர்களே! எங்களுக்கு ஆஹ்லாதத்தைத்தரும் செல்வத்தோடு வருவீர்களாக—(எ-று.) வடமொழி மூலத்தில் வாயுவிந்திரர்

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

களே என்னும் விளியைக் கடைசியடியோடு சேர்த்துள்ளார். பொருள் ஒன்றே. அவ்வியம், ஹவ்யம் என்பதன் தற்பவம்: மூன்றடியென்றது மண். 4. சூக். 46 செய் 1லும் சொல்லப்படுகிறது. இச்சூக்தம் முதற் செய்யுள் நோக்குக.

5. தோயு மெம்மறை யுமையத்வரத்திளிற்
றேய மூட்டும்; இத்தளியைச், சுதகமும்
பாயு நற்பரி தமை மத்திருஞ் செயல்
பொருவ பார்ச்சனம பதின்மர் குயிற்றினர்;
ஏயு மெம்மகத் தெதிருப மிவை குடித்
தெக்கனாற்றுணை யென விக்கிலைகவே;
வாயுசேவ யரி, புனைவைத் தருகுவீர்!
மாக்களெச்சுறிபிழி சுதையை மதம்பெற.

(இ-ள்) எங்கள் மந்திரங்கள் உங்களை யாகத்திற் பொருந்தச்செய்யும். எப்போதும் வேகமாயோடும் குதிரைகளை வியர்வை முதலியவை நீங்க நன்றாகத்துடைப்பதுபோல, சமஸாத்வர்யுக்கள் பதின்மரும் இச்சோமத்துளிகளைப் பத்தப்பாத்திரங்களில் வடிக்கட்டினர். எமது யாகத்துள்ள இத்துளிகளைக் குடியுங்கள். எங்களுக்கு நல்ல துணையாக விருக்கவாருங்கள். வாயுவிந்திரர்களே! உண்டியை (அல்லது மேனாட்டாசிரியருரைப்படி பலத்தை) தருபவர்களே! கற்களிற் பிழிந்தெடுத்த ஸோமத்தை மதம்பெறுமாறு குடிப்பீர்களாக—(எ-று.) மேல் இச்சூக்தம் 3ம் செய்யுளில் சமஸாத்வர்யுக்கள் பதின்மரென்ற விஷயத்தை நோக்குக. பதின்மர் குயிற்றினரென்பது வடமொழி மூலத்திலில்லை. ஸாயணருரை நோக்கிச் சேர்த்தது.

### வருக்கம். 24.

6. சுதைய மத்வரர்தமி லுற்றமக்கெனச்
சமர்த்தமினின் வடிபெற் றிவைத்தன;
சுதைகளினுப்புற வடிபெற்ற. வாயுவே,
தோயு முக்கலசக் கனிவி னமர்த்தவே;
விஞ்சிவினில் வடிக்கனின் றொழுகியே
மேவி நின்ற வும்மிருவர்க் கெனவவை;
அதிபுவப்பினிர் விழைவு மதுக்களு
மதிவிளைவினி னண்ணாயு மமிர்ப்புறம்

(இ-ள்.) உங்களுக்காகச் சோமங்கள் சமஸாத்வர்யுக்களாற் [illegible] வடிக்கட்டி வைக்கப்பட்டுள்ளன. வாயுவே! உங்களைச் சந்தோஷத்திலமர்த்த வெண்மையாக வடிக்கட்டி வைக்கப்பட்டுள்ளன. உங்களிருவருக்காகவும் வடிகட்டியினின்றும் அவை வடிந்துள்ளன. மிகவாசையோடு ஈர்த்திருக்கும் அச்சோமங்கள் கம்பளி மயிராலான வடிகட்டிக்கு வெளியே பெருகி வடிந்துள்ளன-(எ-று.) ஸோமத்தை மயிர்க்கம்பளத்தில் வடிகட்டுவதை ஸுத்ரமும் மண் 1 சூக் 28 செய். 9ல் இவ்வடிகட்டைப் பற்றிச் சொல்லியுள்ளார்.

## மண்டலம் 1. சூக்தம் 135

(அடி வேறு.)

7. வாயு, சோம்பலிற் றுயில்வளர் பலோர்
 வாயினீத்துடன் சோமபட்டடை
மேய நல்லொலி மேவு மில்லெணி
 வேகமார்ந் துறல் வேந்தனும்முறல்;
தூயமெய்ம்மை வாக்கொலிமிகுத்திடுந்
 தோயிழுதெவணுறுமவ்வாயுறல்;
பாயுநற்பரிக்குழுவொடும்மகப்
 பாடணைந்திட, லரியும் வந்துறல்.

(இ-ள்.) வாயுவே! சோம்பித்தூங்கும் பல யஜமானர்களது வாசஸ்களைக்கடந்து சோமக்கல் நன்றாகச் சப்திக்குமவ்வீட்டைநோக்கி விரைவின் வருக. உன்னோடு இந்திரனும் வருக. தூய்மைவாய்ந்த ஸத்திய வாக்குக்களாகிய மந்திரங்கள் அதிகமாகச் சப்திக்கும் இடமெதுவோ, நெய்யொழுகு மிடமெதுவோ, அவ்விடத்துவருவீர்களாக. குதிரைக்கூட்டத்தோடு யாகசாலைக்கண்வருக. இந்திரனும் வரட்டும்—(எ-று.) ஸூந்ரிதாவென்பதற்கு ஸந்தோஷ சித்தமுள்ள ஸ்திரீ யெனப் பொருள் கொண்டு அச்சொல் உஷஸைக் குறிக்கலா மென்பர் மேனாட்டாசிரியர். ஆனால் ஸ்துதிரூபா வாக்கென்பர் ஸாயணர்.

8 வெற்றி கொள்மகர், விழைவிற் சூழுறு
 மிகவிரிந்த வள்ளத்துறும்மது
வற்றமின்றி யாவுதியி னீந்திடு
 மவ்வயிற்றரல் ;அவரெமக்கினும்
வெற்றியோடுறல்; தேனுவும் உடன்
 வேண்டுகீர மீந்திடும்; யவஞ்சமைத்
துற்றதாற்; பசு, வாயுவே, யுனக்
 கொழுகு,நோய்கர வாதியின்றியே.

(இ-ள்.) ஜயம் பொருந்திய யஜமானர்கள் ஆசாத்தோடு சூழ்ந்து நிற்கும் மிகவும் விசாலமான (அரச மரத்தாலான) துரோணத்திலுள்ள மதுவை (அத்வர்யுக்கள்) ஆஹுதி செய்யுமிடத்திற் கொண்டு வந்து தரட்டும். அவ்யஜமானர்களும் எங்களுக்காக இன்னும் வெற்றியோடிருக்கட்டும். பசுவும்உடனே வேண்டிய பாலை உனக்காகக் கறந்தளிக்கிறது. யவமாதி தானியங்கள் புரோடாசத்துக்காகச் சமைக்கப்பட்டன. வாயுவே! உனக்காகவே இங்குள்ள பசுக்கள் நோயினாலிளைக்காமலும் திருடரால் அபகரிக்கப்படாமலும் வளர்கின்றன—(எ-று.) பர்அச்வத்தம் என்பதற்குப்' பர்வதாதி வ்யாப்தி ப்ரதேச ஸ்திதம் ஸோமம்' 'பர்வதம் முதலிய விசாலமான விடங்களிலுள்ள ஸோம'மென்பார் ஸாயணர். ஆனால் அச்வத்த (அரச) மரத்தினாற்செய்த துரோணத்தில் அல்லது கோசத்தில் வைத்துள்ள ஸோமம் என்பார் மேனாட்டாசிரியர். இச்செய்யுள் இந்திர வாயுக்களைக் குறிக்குமென்று அநுக்கிரமணிக்காரர் கூறினும், ஸாயணருரையிலும் அதற்கேற்ப உரை கூறினும், மூலம் ஏகவசனமான பிரதிபெயர்ச் சொற்களோடு வாயுவையே குறித்திருக்கிறது.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

9. புயபலத்துளோய், பயனீயும் வாயுவே!
பரவியுன்னவை, யிளமை மிகுந்துகண்
ணயமுறத்தெரிந்திடு காளே, வல்லமை
நலக்க வோங்குவ, வொருபற்று மின்றிநீ
ரியைய மந்தரத் தழிவின்றி வேகமா
வெளிதினிற் குரற்கமையாதவா யினன்
வெயிலினிற் பரந்திருகை களின்மடக்
கரியவாயுறு மவை, யிங்கு மேவிடும்.

(இ-ள்.) வாகுப்பலமுள்ளவனே! கர்மபலனைத்தரும் வாயுவே! இளமை மிகுந்தவையும், பார்க்க வழகாய்த் தெரியும் காளை போன்றவையும், வலிமை யோங்குபவையும், ஒருவித பற்றுக்கோடுமின்றி அழிவு இல்லாமல் மழைக் காரமான வந்தரப்பிரதேசத்தில் வேகமாகச் செல்லு பவையும், எளிதின் அதட்டி நிறுத்த முடியாதவையும், இரண்டு கைகளினாலு மடக்கமுடியாதவையுமான உன்குதிரைகள் உன்னோடு இந்த யஞ்ஞத்தலத் திற்கு வந்துசேரும்—(எ-று.) குதிரைகள் ஈண்டு பிரசண்ட மாருதத்தைக் குறித்தன வென்பார் மேனாட்டாசிரியர். வாகு வலிமை யென்றதனால் ஸர்வாங்க வலிமையையு மினத்தாற் கொள்ளுக—ஸாயணர்.

வருக்கம். 25.

### 136. மண்டலம். 1. அநுவாகம். 20. சூக்தம். 3.

7 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: தை பருச் சேபன்; வடமொழிச்சந்தம்: அச்யஷ்டி, 7 த்ருஷ்டுப்; தேவதை: மைத்ராவருணர்கள்.

1. நிதமுமுள்ளவர் துதியிற் சுகிப்பவர்
நிலவுமுண்டியின்பதனிற் களிப்பவர்க்
கிதமுறப்புகழ் மிகுமத்துதிகளை
யெதிரு மவ்வியங்களை யெண்ணி யேய்த்திடல்;
உதக செய்யினை யுதவும் மரசர்க
ளொழுகு மோவ்வொரு மகமுந்துதியுளோர்
எதிரிலா வவர்பலமுந் தெய்வத்வமு
மெவருமாற்றொணு வகைப்பின் னியைந்தவே.

(இ-ள்) (ரித்விஜர்களே!) நித்தியமாக வுள்ளவர்களும், ஸ்துதியில் சுகத்தை யடைபவர்களும், உணவினது மாதுரியத்தில் ஸந்தோஷிப்பவருமாகிய மைத்திராவருணர்களுக்குக் கீர்த்தி மிகுந்த பெரிய ஸ்தோத்திரங்களையும் ஹவ்யங்களையும் கொடுக்க வேண்டு மென்ற புத்தியோடு மெண்ணித் தருவீர்களாக. மழையாகிய செய்யை யுதவுகின்றவரும், ஒவ்வொரு யக்ஞத்திலும் ஸ்துதிக்கப்படுபவருமான அவ்வரசர்களது வலிமையும், தெய்வத்தன்மையும் ஒருவராலும் மாற்ற முடியாத தன்மையினமைந்தன—(எ-று.)

## அஷ்டகம் 2. அத்தியாயம் 1.

மித்திராவருணர்கள் பகலிரவுகளுக்கு முறையே நாயகர்க ளென்றும் அஹோ ராத்திரிதுவாரா அவர்கள் மழைபெய்விப்பதால் அவர்கள் தேவர்க ளானார்க ளென்றும் சுருதி கூறு மென்பார் ஸாயணர்.

2. விரைகதிப் பரப்புயரும் முறைமைமகம்
விரியுகம் நெறிமிற் கெதிருற்றது; ஆதவன்
நெறிபொளியினிற் றுதைவுற்றதாற்; பகன்
நிலவுமெற்கணுங் கூடிற்று; மித்திரன்
புரையிலாவகம், வருணன் அரியமான்
புகலிவர் பதமொளியிற் பொருந்திய:
உரையுயி ருணவொழுகுத் துதியுண
வுயர் பெருந்தகை யளவிற் றரித்தனர்.

(இ-ள்.) வேகமானகதியோடுகூடிய விஸ்தார மிகுந்த உஷஸ், யக்ஞகருமங்கள் விசேஷமாக நடக்கும் வண்ணம் தோன்றிற்று. ஆதித்தியனது ஆகாச வீதியும் பிரகாசத்தோடு கூடிற்று. பகனது காந்தி பொருந்திய கண்ணும் தோற்றியது. மித்திரனுடைய குற்றமற்ற கிரகமும், வருணன் அர்யமனன் இவர்களது பதங்களும் ஒளியோடு கூடிநின்றன. மேற்சொன்ன இவர்கள், எடுத்துரைக்கத்தக்க உயிர்க்காதாரமான வுணவையும், ஸ்தோமம் பாடத்தக்க உணவையும் மிகவும் பெரியவளவிற் றாங்கிநின்றார்கள்-(எ-று.) ஆதவன், ஆதித்ய னென்னும் பதங்களுக்கு வடமொழி மூலத்தில் ரிதஸ்ய வென்றுள்ளது; அதனால் தர்ம நெறிகள் ஒளிபொருந்தி விளங்கின வென்பார் மேனாட்டாசிரியர். பகன், வருணன், மித்திரன் அர்யமான் காரியப் பாட்டி லொருவரே யென்றாலும் உபாதி பேதத்தா லிவர்களைத் தனித்தனியே துதித்தனா மென்பார் ஸாயணர். இவற்றின் பொருள்களை மண். 1 சூக். 89 செய். 3 ற்பார்க்க. பகன் எல்லாராலும் வணங்கப்படும் தேவன் என்பார் ஸாயணர். இது ஆதி ஆரியர்கள் ஸூரிய நமஸ்காரஞ் செய்து வந்தார்க ளென்பதைக் காட்டு மென்றும், இச்சொல் தேவ னென்ற பொருளில் ஜெண்ட் அவெஸ்தாவிலும் வந்துள்ளதென்றும், தற்காலம் ஸ்லவானிக் பாஷைகளி லெல்லாம் இச்சொல் இப்பொருளைத் தருகிறதென்றும் (Wallis) வாலிஸ் என்பவர்தமது ரிக்வேத அண்டசாஸ்திரம் என்னும் நூலிற் காட்டியுள்ளார்.

3. ஒளிபொருந்திடு மதிதித் துறக்கவா
யொழுகுவாள் புவியதனைத் தரிப்பவள்
அளியினன்னவ ளொடு நித்தமும் விழிப்
பதனோடும் மனைந்தனர்; மிக்கொளிவலி
வாழுறுங் கொடைப்பதிகள் அதித்தியர்
மருவினர்; மனிதரினை முயக்குவோ
செளிகின் மித்திராவருணரிவர் நடு
வினையுமர்யமா னரசரை முயக்குவான்.

(இ-ள்.) ஜ்யோதிஷ்மதியும், ஸவர்க்கவதியும், பூமியைத்தாங்குபவளுமான அதிதியோடு தினந்தோறும் ஜாக்கிரதையில் மித்திராவருணர்கள்

## மண்டலம் 1 சூக்தம் 136.

கூடினூர்கள். தானபதிகளாகிய ‘ஆதித்தியர் மிகுந்த ஒளிபொருந்திய பலத்தை யடைந்தார்கள்.’ மனிதர்களைத் தொழிற்கண் முயக்குவிக்கும் மித்திராவருணர்களுக்கு மத்தியில் அர்யமானும் நாங்களைத் தர்சம் வியாபாரங்களைச் செய்யும்படி தூண்டுகிறான்—(எ-று) ‘இந்த யஜமானன் ஆறாவதியாக்கினியினுல் பிரகாசிக்கும் ஸம்பூர்ண லட்சணத்தோடுகூடிய உத்தரவேதிரூபமாயுள்ள பூமியை அக்கினி தங்குவதற்கு யோக்கியமுள்ளதாகச் செய்கிறான். யக்ஞ நிஷ்பத்தித் தவாராஸ்வர்க்கத்துக்குச்செல்லும்இவ்வதிதியாகிய பூமியை மித்திரா வருணர்கள் கூடினூர்கள்’ என்பார் ஸாயணர். அர்யமன் அர்யமான், அர்யமனன் எல்லாம் ஒன்றே. ஆதித்யர் செய்யுள் விகாரத்தால் அதித்தியரென நின்றது. ஆதித்தியர் பன்னிருவராயினும் ஈண்டு மித்திராவருணரையே கொள்க.

4. வருணமித்திர ரிவர்கட் குபர்சுகம்
    வழங்கிடுங் குணத்ததுவாகவிம்மது;
பெரும் விழவினிற் பிறவாங் கடவுளிற்
    பிறங்கு மின்னமுத வொருபாக மெய்துறல்;
ஒருமனத்தொ டெல்லவராங் கடவுளு
    மொழுகவிந் தினத்தி லவனொ டுவப்பினே;
விரதவந்த ரவ்வரச ரிருவரும்
    வேண்டுமா றெமைக்கெவையும் புரிகவே.

(இ-ள்.) இச்சோமம் வருணன் மித்திரனுகிய இவர்கட்கு உத்தமஸுகத்வத யளிக்கும் குணத்தோடு பொருந்தட்டும். பெரியஉற்சவத்தில் அல்லது சோமவிழாவில் மற்றக்கடவுளைப்போல இச்சோமபிமானிதேவனும் ஒருபாகம் பெறட்டும் எல்லாத்தேவரும் ஒருமனத்தோடு இவனேடு (ஸோமத்தோடு) ஸந்தோஷமாக இத்தினத்தில் நடக்கட்டும். விரதவந்தர்களாகிய மித்திராவருணரென்னும் அவ்விராஜாக்கள் யாங்கள் பிரார்த்திக்கிற மாதிரியெல்லாம் எங்களுக்கு எவற்றையும் நிறைவேற்றித்தரட்டும் . (எ-று.) இன்னதேவ என்றது ஸோமாபிமானி தேவதையாகிய சந்திரனை. இவனேடு என்பதும் சந்திரனையே குறித்தது.

5. வருணமித்திரர் தமையேத்து மர்த்தியன்
    வளருநல்லவி தருகின்ற மானிடன்
அரியவெப்பகை யணையா தகங்கடந்
    தழகி னெய்துவா னவனைப் பரித்திடல்;
அரியமானமல் விரதம் புரிந்துநேர்
    மையி னொழுகுமிவன் றனை. நன்கிரட்சனை
புரிவ, ரன்னவர் விரதங்களை மிகப்
    பொலிவினுற் றமத் துதி செய்வானையே.

(இ-ள்.) வருணனையும் மித்திரனையும் வணங்கும் மர்த்தியனும், அவர்களுக்கு அவிப்பொருள்களைத்தருகின்ற மானிடனுமான யஜமானன் பகையற்றிருக்கும் வண்ணமும், பாபங்களைக்கடக்கும் வண்ணமும் அவனை

## அஷ்டகம் 2 அத்தியாயம் 1.

அம்மித்திராவருணர் காப்பாற்றட்டும். விரதாநுஷ்டானரும் ஸத்திய நெறியிலொழுகி அம்மித்திராவருணர்களது விரதங்களை உக்தங்களாலும் ஸ்தோமங்களாலும் நன்றாகப்போற்றி யலங்கரிக்கும் யஜமானனை யர்யமானும் காப்பாற்றுகிறான்—(எ-று.)

6. பெருநமந்திவற் கறைவென் றுதியினைப்
 பேசுவென்புவிநப மித்திரன் பலன்
 றருமுருத்திரன் வருணன் னிவர்க்குமே
 சீருவநற் சுகந்தரு பவ்வுருத்திரற்கு;
 அரியை யங்கியைப் பகனை யொளிசெறி
 யரியனைத்துதி புரிகல்; பிருத்தியர்
 மருவு தீர்க்கவாயுளினோ டரும்பெறல்
 மகவடைகுவ மருள் சோமனுதியின்.

(இ-ள்.) இவனுக்கு அல்லது சூரியனுக்கு நமஸ்கார ரூபமான ஸ்தோத்திரங்களைச் சொல்லுவேன். பூமிக்கும், வானத்துக்கும், மித்திரனுக்கும் வருணனுக்கும், பலன் தருபவனும் சுகப்படுத்துபவனுமாகிய உருத்திரனுக்கும் துதிகூறுவேன். (ஹோதாவே! அல்லது மனமே!) இந்திரனையும் அக்கினியையும் பகனையும் பிரகாச நிறைந்த அரியமானையும் துதிப்பாயாக. வேலையாட்களும் தீர்க்காயுளும் பெற்று யாம் ஸோமனுடைய உதவியினால் புத்திரர்களையும் பெற்று நெடுங் காலஞ் சீவிப்போமாக—(எ-று.) நமம், நமஸ்காரரூபமான துதி. நபம், புவியென்பன அவற்றின் அபிமான தேவதைகளைக் குறித்துநின்றன. மீற்றுஷே என்பதற்கு நினைத்த பலனைத்தரும் உருத்திரன் என்பார் ஸாயணர். அர்யமணன் அர்யமான் அர்யன் எனக்குறைந்து நின்றது. ஊதி வடசொல், உதவி என்பதுபொருள்.

7. தேவர்தம் முதவிகொண்டே யிந்திரப் பிரியர் யாங்கள்
 மேவுநன் மருதரோர்தி மேவுக சுயமாங் கீர்த்தி;
 தாவுமித்திர வருணரங்கி யாதரவு சார்த்தல்;
 ஓவறு செல்வரோடியா முறுக வவ் வுறுதிதானே.

(இ-ள்.) இந்திரப்பிரீதியை யடைந்த யாங்கள் தேவர்களுடைய வுதவியைக்கொண்டு மருத்துக்களினால் அநுக்கிரகிக்கப்பெற்றவர்களாய் ஸ்வயமான கீர்த்தியை யடையட்டும். மித்திரனும், வருணனும், அக்கினியும், எங்களுக்குப் புகலிடத்தை யளிக்கட்டும். செல்வவான்களாகிய யஜமானர்களோடு யாங்கள் அவ்வுறுதியை யடையட்டும்—(எ-று.)

வருக்கம். 26.

ஆகச்செய்யுள். 137.

முதலத்தியாயம் முற்றும்.

---

## மண்டலம் 1. சூக்தம் 137.

### பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| VI | 5 | அநுக்கிரமணிக்கு, | அநுக்கிரமணிகளில் |
| ,, | 6 | யென்றபெயர். | யொன்று. |
| 20 | 27 | கூறுவர் | கூறினர். |
| 22 | 8 | ஏமஸஙிதவத் ஸாநகுலீ | ஏம ஸஙிதவத்ஸா நகுலீ |
| 46 | 20 | பழுடு | பழுநு |
| 47 | 39 | தரியர். | தரியலர் |
| ,, | 40 | யதமை | தமை |
| 48 | 28 | வீமக்குழி | எிமக்குழி |
| 53 | 40 | நீயருகன். | அருகன். |
| 54 | 8 | விருந்து | விருக் |

## 2வது அத்தியாயம்.

இவ்வத்தியாயத்தில் 27 வருக்கமும், 21 ஸூக்தங்களும், 143 இருக்குக்களுமுள்ளன.

## 137. மண்டலம்: 1. அநுவாகம் 20. சூக்தம். 4.

3 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: பருச்சேபன்; வடமொழிச்சந்தம்: அதிசக்வரி(காய்ச்சீர்வரும் எழுசீர்)
தேவதை: மித்திராவருணர்.

(வேறு.)

1. கல்லினால் யாமும் பிழிந்தெடுத்தோ மிதைக்
கடிதுறல்; மத்த முட்டுந்
தில்லியச் சோம, முங்களைபின்பி னெய்ந்திடுந்
துளி, பால் கலந்து நின்ற;
எல்லொளிரும் விண்டைவு மரசர் நீரெம்மகத்
தேய்கவின் கெங்களுந்தே;
சொல்லு மிவ் வெள்ளொளிச் சோம மித்திர வருண
தோய்ந்த பாலொடு கலந்தே.

(இ-ள்.) யாங்கள் இச்சோமத்தினைக் கற்களால் நசுக்கிப் பிழிந்தெடுத்தோம். வேகமாக வருக. ஸந்தோஷத்தைத்தருபவையும் உங்களுக்கின்பத்தைத்தருபவையுமான ஸோம மதுத்துளிகள் பசுவின் பாலோடு கலக்கப் பெற்றுள்ளன. ஒளிபொருந்திய ஆகாயத்தைத்தொடும் அரசராகிய நீர் இவ்விடத்து எம்மை நோக்கி வந்து எமது யக்ஞத்தைச் சேருவீர்களாக. மித்திராவருணர்களே! இந்த வெளுத்த சோதியோடு கூடிய ஸோமங்கள் பசுவின் பாலோடுகொண்டு சிறப் பெய்தின—(எ-று.)

2. சோமத்தி னற்றுளிகள் தயிரோடு சேர்ந்திவட்
டோய்ந் தொழுகு கின்ற, வருக;
ஏமத்தினிற் கல்லினிற் பிழிந் தொளிர் சோம
மேய்ந்து தயிரொடு செறிந்த;
வாமத்தி னும் முஷை விண்மணிக்கதி ரோடு
மருவுதய மெய்த, யாகத்
தோமத்துறப், பான மித்திரா வருணர் பெற
வுற்றதிச் சுதை யணியினே.

(இ-ள்.) (மித்திராவருணர்களே!) சோமத்தினது துளிகள் தயிரோடு கலந்து ஈண்டு பொருந்தியுள; நீங்கள் வருவீர்களாக. மந்திர முதலிய காவலோடு கல்லிற் பிழிந்தெடுத்த ஸோமங்கள் தயிரோடு கலந்து நின்றன. அது காகவுமது விடியலும் சூரியகிரணங்களும் உதிக்கு மாறு, யாகத்தினிடத்து ஹோமத்திற்காவும், மித்திரா வருணர்களது பானத்திற்காகவும், இவ்வபிஷுத ஸோமமானது அழகாகப் பொருந்தியது—(எ-று.)

3. உடலெலாம் பாலாக வொளிர்கின்ற பசுவினி
னுயர் சோம வல்லி நாடித்
திடமுறுங் கற்கொண் டுமக்கென் றவற்றினைச்
சிரிற் கறந்திருப்பார்;
அடைக வெம்மருகிங்ங னிறை சோமமதுவுண்ண,
வன்பி னெந்தமை யளிப்பீர்;
மிடையு மிம்மதுவைப் பிழிந்தார் நரர், வருண,
மித்ர, நீர் மாந்துதற்கே.

(இ-ள்.) மித்திரா வருணர்களே! தனது சரீரமுழுதும் பால் மயமாகத் தோன்றும் பசுவைப்போல விளங்குகின்ற ஸாரநிறைந்த சோமக் கொடியைத் தேடியெடுத்துக் கல்லினல் நசுக்கி உமக்காக அக்கொடிகளைப் பிழிந்து பால் கறப்பது போலக் கறந்து வடித்தனர். அன்பினோ டெம்மை யிரட்சிப்பவர்களே! எமக்கருகில் இம்மகதலத்திலுள்ள ஸோமத்தைக் குடிக்கவாருங்கள். மனிதர்கள் (யஜமானர்கள்) உங்களுடைய ஸம்பூர்ணமான குடிக்காகவே இச்சோம மதுவைப் பிழிந்தெடுத்தார்கள்—(எ-று.).

வருக்கம். 1.

## 138 மண்டலம் 1. அநுவாகம் 20 சூக்தம் 5.

4 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷி பருச்சேபன்; வடமொழிச்சந்தம்; அத்யஷ்டி; தேவதை பூஷன்.

1. பலமிகர்க் கெழும் பூடன் மகித்துவம்
பலரு மெண்ணிடும் பெருமை சிறந்தது;

## மண்டலம் 1 சூக்தம் 138.

நலமுளவவன் றுதியும் வலிமையு
நலிவடைந்து சோர்வுறுத லிலையரோ;
பலனுருகுத வுவனைச் சுகம்விழை
பவனியான்சுக முதலைத் துதிப்பெனல்;
நிலவுமெக்கிய னெவருள்ள முங்கலந்
தொழுகுவான்மக மிசிரித்ததேவனே.

(இ-ள்.) பல யஜமானர்களுக்காகவும் தோன்றும் பூஷனது பல பராக்கிரமப் பெருமை யாரும் அறியும் சிறப்புப்பொருந்தியது. அவனைக் குறித்துச்செய்யும் ஸ்தோத்திரங்களும் அவனது பலமும் ஒருநாளும் நலிவையடைந்து சோர்வதில்லை. அருகிலடைந்து ரட்சிப்பவனும், சுகத்துக்கு மூலகாரணனுமாகிய அப்பூஷனைச் சுகத்தை விரும்பும் யான் துதிப்பேன். யக்ஞநிர்வாஹகனாய் யக்ஞத்தோடு கலந்த அத்தேவன் (யக்ஞம்)பூர்த்தியாகும் வரையில்) எல்லா யஜமானர்களுடைய உள்ளத்திலுங் கலந்தொழுகுவான்—(எ-று.) பூஷன் மண். 1 சூக். 14 செய். 3பார்க்க.

2. நெறிவிரைகுபாவென வுன்னையெம்மக
நெடிவேக மார்க்கலைவிக்க, வொட்டக
முறழ நோவலர் தமைவென்றகற்ற வென்
னுயர்துதிகளாற் றிகழ்விப்பல், பூடனே;
இறவுளோனியான் சுககாரணத்தன
மியவுனுன் றொடர் படைவான் விளிக்குவென்;
அறவொலியெம துதியைப் புகழுற
வடுசெருவினி லரி வென்றுறச் செயல்.

(இ-ள்.) பூடனே! மார்க்கத்தில் வேகமாகத் தூக்கிச் செல்லும் குதிரையைப் போல வுன்னை எமது யக்ஞத்தினிடத்து விரைவிற் கொண்டுவரவும், ஒட்டகம்பாரஞ்சுமந்து பாலையைத் தாண்டுவது போலச் சத்துருக்களைக் கடந்து செல்லவும், எனது (உத்கிருஷ்டமான) ஸ்தோத்திரங்களால் உன்னை விளங்கச் செய்வேன். மர்த்தியனுகிய யான், சுககாரணனான தேவனுகிய வுன்னுடைய ஸ்நேகத்தை யடையுமாறு கூவுகிறேன். மிகுந்தசப்தத்தோடு கூடிய எங்கள் ஸ்தோத்திரங்கள் கீர்த்தியையடையுமாறும், யுத்தத்திற் சத்துருக்களைச் சயிக்குமாறும் புரிவாயாக—(எ-று.)

3. துதிசிறந்தவர் கருமத்தி னுந்துனை
துதைந் துனது நட்பினை யெய்ந்து, பூடனே,
யதி சிறந்தன ரறிவின்; நவம்பெறு
மவை தொடர்ந்த பினுன்னையன்டினஞ் சத
நிதி சதச்சதத் தளிபென்று வேண்டினம்;
நெடிதுசார் புகழ் நிலைபெற்றவ, சினம்
வதியி லாதவ, வரலெம் பருகினின்
மருவு போரெலாம் வரலெம் பருகினே.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

(இ-ள்.) பூஷனே! ஸ்தோத்திர சீலர்களான மேதாவிகள் தங்கள் கர்மங்களிலும் உனது உதவியை யடைந்து உனது தோழமையில் ஞானமிகுந்து விளங்கினர். புதிதான அந்த ஸ்தோத்திர முறைகளை யநுஸரித்த பின் உன்னையாங்களடுத்து, லட்சக்கணக்கான திரவியங்களைத் தருமாறு பிரார்த்தித்தோம். நீண்ட கீர்த்திவாய்ந்தவனே! கோபமற்றவனே! எமது அருகே வருக; ஒவ்வொருயுத்தத்திலும் எமக்குச் சமீபத்தில் வருவாயாக——(எ-று.)

4. தகாரிச்சினஞ் சருவாதவ, கொடை
தழுவியோ யெமதவியின் கொடைபெற
வகமதிற் புகழுடையக் கருதுமெம்
மதனையேற்க வெம்,மசவூர்தியோ, யரு
கிகவயின்வரல்; பகைவர்த் தெறுப்பவ,
வினைகுவிப்ப மிங்குனை யெம்பலிதமார்
புகழ்தலின்; உனை, யொளியோ, யுனட்பையோர்
பொழுது மெள்ளலே, னெழியேன் கொல்பூடனே.

(இ-ள்) பூஷனே! ஆடாகிய குதிரை யுடையவனே! கோபங் கொள்ளாதவனே! தானத்தோடு கூடியவனே! அஜஊர்தியுள்ளவனே! எங்களுடைய அவிக்கொடையைப் பெறவும், கீர்த்தியை (ஸாயணருரைப்படி உணவை)ப் பெறவிரும்பும் எங்களுடைய அத்தானத்தை யேற்கவும், இங்கு எங்களருகே வருவாயாக. சத்துருக்களை யடக்குபவனே! எங்களது காரிய சித்திக் குரிய ஸ்தோத்திரங்களால் உன்னை இங்கு வரச்செய்வோம். ஒளி நிறைந்தவனே! (அல்லது ஸாயணருரைப்படி மழையொழுகுவிப்பவனே, அவியேற்பவனே!) உன்னையொருபொழுதும் அவமதித்து இகழ்வாக வெண்ணமாட்டேன். உனது சினேகத்தையும் ஒருபொழுதும் விடமாட்டேன்—(எ-று.) கொல், அசை. தகாரி, தகராகிய குதிரை.

வருக்கம், 2.

## 139. மண்டலம். 1. அநுவாகம. 20 சூக்தம். 6.

11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷி பருச்சேபன்; வடமொழிச்சந்தம்: 1-8, 10 அத்யஷ்டி, 9 ப்ரஹதி, 11 தருஷ்டுப்; தேவதை: விச்வ தேவர்கள், 2 மித்திராவருணர், 3-5 அசுவினிகள், 6 இந்திரன், 7 அக்கினி, 8 மருத்துக்கள், 9 இந்திராக்கினிகள், 10 பிரஹஸ்பதி, 11 விச்வதேவர்கள்.

1. நமதருந்துதி செவியுற்ற தாகுக;
நானு முன்னரக்கினியைத் துதித்தனென்;
தமது திவ்வியப் பலமார்குழுவினைச்
சரியெனத் தெரிந்தறிவாய வேண்டுவம்;

## மண்டலம் 1. சூக்தம் 139.

நமது நவ்வியத் துதிநாபி சேர்ந்தொளி
நலமுளவெரி தனைநன் கடைந்ததுந்
தமது நன்னெறி யதனை யடைந்துநந்
தவமடைகளுந்தமை யண்ட ரெய்தலின்.

(இ-ள்.) நம்முடைய ஸ்தோத்திரங்கள் உங்களது (ஒவ்வொரு தேவனையும் தனித்தனியாகக் கொள்ளின் உனது என்க) காதில் விழட்டும். நானும் முன்னர் (உத்தர வேதியில் ஆகவநீய மென்றபெய ரோடுள்ள) அக்கினியைத் துதித்தேன் அல்லது மனத்தில்தரித்தேன். நமதுதெய்வபலநிறைந்த (மருத்துக்களினது)கூட்டத்தைத் தெரிந்தெடுத்துப் பின் இந்திர வாயுக்களை வேண்டுவோம். நம்முடைய புதிய ஸ்தோத்திரங்கள் யக்ஞதலமாகிய பூமியின் நாபிஸ்தானத்தை யடைந்து பிரகாசத்தோடு கூடிய அக்கினியைச் சேர்ந்தபின்னர், நமது அத்துதிரூபமான கர்மங்கள் தங்களது நல்லமார்க்கங்களை யறிந்து அவற்றிற் சேர்ந்து தேவர்களை யடைவது போல உங்களுக் கருகில் வரட்டும்—(எ-று). 'யக்ஞ மாஹுர் புவநஸ்ய நாபிம்; 'யாகவேதிதான் பூமியின் நாபிஸ் தான மென்று சொல்லுகிறார்கள்.' என்பது சுருதி. குழு,மருத்துக்கூட்ட மென்பார் ஸாயணர். அரி, இந்திரன். அண்டர், தேவர்.

2. வருணமித்திர பரிதிப் புறமெலாம்
வளரு நிரையுந்தேசிற் றிறமனத்
தருகணைத் தளித்திடுகை யறிந்தநொன்;
றவ்வகைமகச் சதனத்தலே யுமு
தரிமய வுருவதனைக் கணுற்றனம்;
அரிய வெம்மகக் கருமத்தி, னுந்தமை
மருவவெண்ணு மெம்மனதிற், றிருட்டியின்
மதுதருங்குண மருவுற்ற கண்களின்.

(இ-ள்.) வருணமித்திர்களே! சூரியனுடைய எல்லாப்பக்கத்தினின்றும், நாசத்தை யடையும் அல்லது வற்றிப் போகுந் தண்ணீரை யுமது தேஜஸினாலும், திறமை பொருந்திய மனத்தினாலும் வெளிக் கொண்டுவந்து எங்களருகிற் சேர்த்து அதனை யெங்களுக் களித்தல் உலகப் பிரஸித்தமாம். அத்தகைய உமது ஹிரண்யமய ரூபத்தை, எங்களுடைய ஞான கர்மங்களினாலும் உம்மை யடைய விச்சிக்கும் மனவறிவினாலும், ஸோமமானது தரும் குணங்களோடு கூடிய கண்களின் பார்வையினாலும், யக்ஞ வீட்டிற்குமேல் பார்க்கிறோம்-(எ-று.) மேனாட்டாசிரியர்'மித்திராவருணர்களே! உங்கள் புத்தி பூர்வமாக உங்களதுஞானசக்தியினால் மெய்க்கு மேலாக அநிர்தத்தை உங்களுக்கென நீங்களக்கெடுத்துக் கொண்டதனால், நீங்கள் குடியிருக்கு மிடங்களில் ஒருபொன் மயத்தை, எங்கள் நினைப்பினாலும் ஞானத்தினாலுமன்றி இவ்வெங்கண்களாலேயே,ஸோமன் தந்த இந்த எங்கள் கண்களாலேயே கண்டோம்.' என்ற மொழி பெயர்ப்பர். அநிர்தம், பொய்,அந்ருதம் என்பதன் தற்பவம். அந்ருதம் சூரிய னென்றும், ரிதம் அவனது தெய்வத் தன்மையாகிய ஸத்து என்றும் குறிப்புரை கூறுவர். 'எங்கள் ஸ்தூலக்கண்களால் சூரியனைக் கண்டோம்; ஆனால் ஸோமரஸங்கொடுத்தஅறிவினால் அது(மித்திராவருணர் களாகிய) உமது பிரதிபிம்பமே யென்பதைத் தெரிந்து கொண்டோம்.' என்பது

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

கருத்து என்றும் விரித்துரைப்பர். ஸாயணரோரிதாத் ஆதித்யாந், அர்ருதம் சோஷண ஸ்வபாவ முதகம் எனப் பொருள் கொண்டு ஒற ப்ரவிர்த்திப் பொருள தென்பார். மித்திராவருணர் மழைக்குக் காரணர்க ளென்பதை மண். 1 சுக். 136 செய். 1ற் பார்க்க.

3. அசுவினிக்களே! துதியின் னுமைவிரும்
பாயுளுள்ள வருமதப்புகழினே,
விசுவதிக்கினுஞ் செவிமாட்டலின் அவி
விழைவி னேந்துமாயுளர்கள் புகலுவர்;
விசுவவேத சீருமதெத் தனங்களும்
மிகுதியாகவே யடைவா ரனத்தொடும்;
தசியு வாட்டுவீர் மதுவை யொழுக்குமுந்
தமனியரதத் துருள்பொன் மயத்தினே.

(இ-ள்.) அசுவினிகளே! ஸ்தோமங்களால் உம்மை மனதில் நினைக்கும் ஆயுளரும், அவிப் பொருளை ஆதராதிசயத்தோடு உமக்காக வேந்தும் ஆயுளருமாகிய யஜமானர்கள் உமது புகழ் வசனங்களை எல்லாப்பக்கத்திலுங் காதிற்படும்படிசெய்வதுபோல வுரக்கக் கூறுவார்கள். எல்லாவிதமான செல்வத்தையு முடையவர்களே! உமது மதுநிறைந்த பொன்மய தேரின் உருளைகள் பொன்மயமாக விளங்கி மதுவைத் தெளிக்கின்றன —(எ-று.). அசுவினிகளது தேருருள்களை 'மதுச்சகடச்சக்கரங்'களென மண். 1 சுக். 34 செய் 2ற் கூறியுள்ளதைப்பார்க்க. தசியு வாட்டுவீர், தஸ்ரா, கள்வனை அல்லது ஈண்டு பகைவனை ஹிம்ஸிப்பவர்களே யென்பது பொருள். விசுவ வேதசீர், எல்லாவித செல்வங்களையு முடையவர்களே யென்பது பொருள்.

4. வலிமிகுத்துளீர் நாகத் தொழுகுமும்
மலிபுகழ்ச் செய லறியக் கிடந்தது;
பொலிவினும் மரிவலவர் துறக்க வாய்ப்
போகவந்தர நெறிசேர் பரிகளைக்
கலவுவித்தனர்; வலியீ, ரிரணியக்
கவரிமீது தேர்வலவன் றலத்துமைக்
குலவுவித்தனம்; நெறியின் ரஜம்பணிக்
கொள்ளுவீ ரணி யறலைப் பெய்விப்பிரே.

(இ-ள்.) வலிமை மிகுந்த வசுவினிகளே! (யாகம் முடிந்தபின்) ஸ்வர்க்கத்துக்குச் செல்லும் உங்கள் கீர்த்தி பொருந்திய செய்கை எல்லாராலும் அறியக்கிடந்தது. உங்களுடைய ஸாரதிகள் ஸ்வர்க்கத்துக்குச் செல்ல அந்தரமார்க்கத்திற் பொருந்தும் குதிரைகளைத் தேரிற் பூட்டினார்கள். வலவர்களே! பொன்மயமான தேரின்மேல் ஸாரதி ஸ்தானத்திற் உம்மை அமர்வித்தோம். மார்க்கத்தைப்போல அந்தரிட்ச வுலகத்தை உங்களுக்குப் பணிவாய் நடக்கும்படி செய்வீர்கள். அங்கு அழகுறுத்தும் தண்ணீரைப் பெய்விப்பீர்கள்—(எ-று.) ரஜம் என்னும் பதத்துக்கு உலகமென்னும் பொருளை மண். 1 சுக் 90 செய். 7ற் பார்க்க. அதன் மற்றொருபொருள்

## மண்டலம் 1. சூக்தம் 139.

உதகம் என்பதாம். தஸ்ரா, வலிமையுள்ளவர்கள், மேல் 3வது பாட்டிற் றசியுவை வாட்டுபவர் என்று கூறினர், அற்புதமாற்றுவீர் என்று ஒருபொருளு மிதற்குண்டு. 'நாகம், அகம் துக்கம் தத்ரஹிதம் யக்ஞம்' துக்கமற்றது, அதாவது யக்ஞம் என்ற பொருளிலும் ஸாயணர் உபயோகிப்பர். அற்றேல் யக்ஞமுடிந்தபின் ஸ்வர்க்கத்துக்குச் செல்லுமென்னுது யக்ஞத்திற்குச் செல்லும்புகழ்ச் செயலென்றே பொருள்கொள்ளுக.

(வேறு.)

5. கருமநிறைந்த செல்வத்திர் கருமபலனை யெங்கட்குத்
தருவீ ரிரவும் பகலுமே; தடையற் றெல்லாக் காலத்துஞ்
சருவல், நீங்க ளெங்கட்காச் சார்த்துந்தான வகையெல்லாம்;
மருவு மெங்களவிக் கொடையு மன்னவுங்கட் கவ்வகையே.

(இ-ள்.) கருமம் நிறைந்த செல்வத்தோடு கூடியவர்களே! எங்களுக்குக் கருமபலன்களை இரவும் பகலும் தருவீர்களாக. நீங்கள் எங்களை யுத்தேசித்துத்தரும் எல்லாத் தானப்பொருள்களும் யாககாலம் யாகமியற்றாத காலமாகியவிரண்டுகாலத்திலும் குறைவின்றிப் பொருந்தட்டும். யுங்கள் உங்களுக்கு அளிக்கும் அவிக்கொடையும் அப்படியே குறைவின்றி யமையட்டும் —(எ-று.) சச்சீவஸூ என்பதற்கு பலத்திற் பெருத்தவர்களே யென்றுபொருள் கூறுவர் மேனுட்டாசிரியர்.

### வருக்கம். 3.

6. வலிபவிந்திர, வலியோர் குடிப்பவை
மருவுமிச் சுதைத்துளிகள் கலிற்பிழிந்
துலவுசோமநிற் கெனவே பிழிந்தவை;
பொழுகு செல்லினை மலையைப் பிளப்பவை
பலவிசித்திரப் பெருமைத் தனத்தினைப்
பரிவின் மகத்துதவக்களிப்பினை
நலமுறத்தால்; துதியேற்பவ வெமைச்
சுகநலத் தமைத்தியைகல் துதியினே.

(இ-ள்.) வலிமை மிகுந்த விந்திரனே! பலமுள்ளவர்கள் குடிப்பவையான இச்சோமத்துளிகள், கல்விற் பிழிந்து பெருகுகின்ற சோமங்கள் உனக்காகவே பிழியப்பட்டன. மேகத்தையும் மலையையும் பிளக்க வல்லவிவை, பலவிதமான பெரிய செல்வத்தை நீ யாகத்தினிடத்துத் தருமாறு உனக்கு மதத்தைத் தாட்டும். ஸ்தோத்திரங்களை யேற்பவனே! எம்மால்துதிக்கப் பெற்றவனாய் எம்மைச் சுகத்திருத்துவாயாக.—(எ-று.)

7. விரைவினங்கி யெந்துதியைச் செவிக் கொளல்;
விழைவினல்வி கொளுதற் குரியவர்,
அரைசடைந்தவர், கடவுட் குணத்தினர்,
அருகமத்தினர்க் கறைவா யெமைக்குறித்து;

# அஷ்டகம் 2. அத்தியாயம் 2.

அரிய தேவர்காள், கறவை யளித்தபோ
தததனையங்கிரர் வெருவாய்க் கறந்தனர்;
அரியமானவர்க்குதவி புரிந்தனன்;
அவனறிவெ னப்பசு யானறிவனே.

(இ-ள்.) அக்கினியே! எங்களது ஸ்தோத்திரங்களை விரைவாகக் கேட்பாயாக. கேட்டு அவியேற்கத்தக்கவர்களும் ராஜாக்களும் கடவுட் குணத்தினரும், யக்ஞ நமஸ்காரங்களுக்கு யோக்கியருமான அத்தேவர்களிடத்து எம்மைப்பற்றிக் கூறுவாயாக. (பின்னிரண்டடி தேவர்களை யெதிர்முக மாக்கியன) தேவர்களே! அங்கிரஸ வம்சத்து ரிஷிகள் வேண்ட அவர்களுக்குக் காமதேனுவை நீங்களளித்தபோது அவர்கள் அதனைப் பலவிதத்திலும் கறந்து பார்த்தார்கள். (அவர்களால் முடியாததால்) அரியமான் அவர்களுக்குதவியாக நின்று அப்பசுவைக் கறந்து காட்டினான். அதனால் அப்பசுவை அவன் அறிவான் யானுமறிவேன்—(எ-று) 'அப்பசு அக்கினி கார்யங்களுக்கே யுபயோகப்பட்டது என்றொரு வாக்கியங் கூட்டுக. அதனால் இது அக்கினியைப் பரோட்சமாய் துதித்ததாகும்.' என்பார் ஸாயணர். அங்கிரஸர்கள் வேண்டத் தேவர்கள் பாற்பசு வொன்றை யவர்களுக்களித்தார்களென்றும் அதனைக் கறக்கமுடியாமல் அவர்கள் வருந்தின போது அரியமான் அவர்களுக்கு அதனைக் கறந்து காட்டினனென்றும் ஒரு இதிஹாஸமுண்டு.

8. மருதரே, யுமதாண்மை வலிநித
மங்குறாதெ மக்காகப் பொருந்துக;
பெருகொளிப் புகழ், புரமாரு யிர்களும்
பீடை யெய்தாுதாுக; யுகந்தொறும்,
மரணமெய்துவோர்க் கரிய நவப்பல
வருண கோடமாரெவையு மெமக்குறல்;
தரமுற வெமக்கரிதைப் பகைவர்க
டன்னமும் மழிக்கரிதைத் தருகவே.

(இ-ள்.) மருத்துக்களே! உமது ஆண்மையும் பலமும் நித்தியமுங் குறையாது எங்களுக்காகப் பொருந்தட்டும். பிரகாசம் மிகுந்த கீர்த்தியும் எங்களது கிராமத்திலுள்ள பிராணிகளும் பீடையுறாது வளரட்டும். மர்த்தியர்களுக்குக் கிடைக்கரிய புதுமையும் பலநிறங்களுங்கூடி முக்காரஞ்செய்கின்ற பசுக்கள் நிறைந்த தொழுக்களிற் பொருந்திய ஸர்வமும் எல்லாக் காலத்திலும் எங்களுக்கேபொருந்தட்டும். எங்களுக் கரியதும், பகைவரால் கொஞ்சமும் அழிக்க முடியாததுமான தனத்தைஎங்களுக்குத் தருவீர்களாக-(எ-று.) கோஷம் இடைச்சேரி போன்றது.'கங்கையிற் கோடமென்றும், என்றவைவல் யளவநீதவாக்கை நோக்குக.

9. அங்கிரன் பழையவனுந் ததீசியோ
டத்திரி மனுகணுவன் மகப்ரியன்
மங்கலில் லிவர், மருமென் பிறப்பினை
மன்னுமென் குடிப் பழையோரை யோருவர்;

## மண்டலம் 1 சூக்தம் 139.

அங்க மாயிவர் வமிசக் கடவுள
ரருகு செல்லு, மக்குடியிற் பிறந்தனம்;
தங்கமா மிவர்பத மெண்ணி யேத்துவேன்
தோயரி யெரி யிவரைத்துதிப் பெனே.

(இ-ள்.) அங்கிரனும், பழைய அதர்வ கோத்திரோற் பன்னனாகிய ததீசியும், அத்திரியும், கண்ணுவனும், பிரியமேதனும், என்னுமிவர்கள் எனது பிறப்பையும் எனது முன்னோராகிய மனுக்களையும் அறிவார்கள். இவர்களது வம்சமானது தேவர்கள் வரையி லெட்டியிருக்கும். அக்குடியிலேயே யாங்களும் பிறந்தோம். இவர்களது பதவுயர்வையெண்ணி என்னுடைய பாட்டுக்களால் வணங்குவேன்—(எ-று) இவர் வமிசங்கடவுளலருகுசெல்லுமென்றது, இவர்களது வம்சாவளிநீண்டதென்பதையும் அவ்வம்சத்தின் ஆதி புருஷன் தெய்வமாய் விளங்குந் தன்மையையுங் காட்டும்.

10. மகமமைத்திடும் மறை கூறலோதனும்;
வளவவித்தரல் மாநீய வேதியர்;
உகவினிற் பலவுயர்வின் மழைத்தணி
ருதவு நன்மது வதனன் மறைப்பதி
தகவனங்குவன்; கிராவத் தொலித்திடுந்
தமரமுஞ் செவிப்படும்; நன்மகன்பல
வகமடைந்தன னுதகம் மடைந்தன
னன்னவன் றனக்கெனவே யழகினே.

(இ-ள்.) ஹோதா யக்ஞத்தை யமைப்பதற்கு வேண்டிய மந்திரங்களைக் கூறட்டும். வந்திக்கத்தக்க வேதியர் வளமிகுந்த அவிப்பொருளைக் கொண்டு வரட்டும். பிரஹஸ்பதி, மழைநீரை யாகத்துவாரா தரும் ஸோமத்தால் யக்ஞம்செய்கிறான். தூரத்திற்கேட்கும் ஸோமக்கல்லின் சத்தமானது எங்கள் காதிற்படும்.நல்லவேகத்தோடு கூடிய யஜாமனன் பல சுகங்களையுந் தரும் வீட்டை யடைந்தான். தண்ணீரையும் அழகாகத் தன்பொருட்டே யடைந்தான்-(எ-று.)பிரஹஸ்பதி மண்.1 சூக் 14 செய் 3 நோக்குக. கிராவம், ஸோமம் நசுக்குங்கல். தமரம்,பேரொலி.

(வேறு)

11. விண்ணுறும்பத் தோடொன்று மேவிய கடவுளர்காள்
எண்ணுறப் புவியினில்ல மேய்ந்த வேகாதசததிர்,
நண்ணுமந்தரத்தை நாடி மகிமையினுறையு மொன்றோ
டெண்ணுறுந் தசத்திரேங்கள் மகத்தினை களிப்பினேற்கல்.

(இ-ள்.) விண்ணுலகத்து வசிக்கும் தேவர்கள் பதினொருவரே! பூமியின் மேல் உறையுள் பொருந்திய பதினொருவரே! (மழைநீர் தங்குமிடமாகிய) அந்தரத்தில் வசிக்கும் பதினொருவரே! ஆக முப்பத்து மூவர்களாகிய நீங்கள் எங்களது யக்ஞத்திலளிக்கும் அவிவிசேஷங்களிற் திருப்தியடைந்து எம் மகத்தை யேற்றுக்கொள்வீர்களாக—(எ-று.) வானம் பூமியந்தரங்களி

ஙுள்ள தேவர் மூவரே யெனினும் மகத்துவத்தினால் அல்லது தங்கள் விபூதிகளினால் முப்பத்து மூவராயினர் என்பார் ஸாயனர்; 'ஒவ்வோரிடங்களிலும் அவனது அங்கமான விபூதியாவிர்ப்பவ முண்மையின்.' என்றவாக்கிய முளதாலென்பர்.

வருக்கம் 4.

## 140. மண்டலம் 1. அநுவாகம். 20. சூக்தம். 7.

13 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: உ(ச்)சத்தியன் புத்திரன் தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: 1-9, 11 ஜகதி, 10 திருஷ்டுப் அல்லது ஜகதி, 12, 13 த்ருஷ்டுப்; தேவதை: அக்கினி.

(வேறு.)

1. வேதிக்க ணமர்ந்ததன திடத்தைவிரும்
பக்கினிக்கு, வேண்டுமாறு
சோதிக்க ணூர்ந்தொளிரு மவனுக்கா
வில்லுமதிற் றேய்வித் துண்டி
சாதிக்கல்; சுத்தமுளோன் சோதிரதத் தோன்
வெளுப்பன் றமத்தைக் கொல்லு
நீதிக்க ணெழுவோற் காடையென
வெரிதுரும்பை நேடிப் போர்க்கல்.

(இ-ள்.) (அத்வர்யுக்களே!) உத்தரவேதி யென்னும் இடத்திலமர்ந்து அதனிடத்துப்பிரியமிகுந்து, வேண்டிய வண்ணம் பிரகாசிக்கும் சோதிக்கண் நிறைந்து விளங்கும் அவ்வக்கினிக்காக வேதிருபமாகிய ஸ்தானத்தில் அவியுணவுகளைச் சம்பாதித்து அவனுக்களிப்பீர்களாக. சுத்தமான விடத்திலுள்ளவனும், சோதியோடு கூடிய தேரை யடைந்தவனும், வெண்மை நிறத்தை யடைந்தவனும், இருட்டை யோட்டுபவனுமான வ்வக்கினிக்கு வஸ்திரத்தைப் போர்ப்பது போல ஸமித்துமுதலிய காஷ்டங்களைத் தேடி யடுக்குவீர்களாக—(எ-று.) மேனாட்டாசிரியர் இச்செய்யுளைத் தன்மை யொருமையிற் கூறியுள்ளார். மங்மநா என்னும் வடமொழிப் பதத்திற்கு மந்திரங்களை யெனவுரை கூறுவர். ஆனால் மநநீயமான ஹ்ருதயம் போன்ற மெல்லிய வெரிதுரும்புகளை யென்பார் ஸாயனர்.

2. இருபிறப்போன் மூவ்வகைய வுண்டியினை
யினிதேற்பன்; இன்பி னன்றுண்
மருவியொரு வருடம்தி றுண்டவவை
மறுபடியும் வளர்வ; ஓகாத்
திருமருவு முழைகொடு மனிக்யற்பன்
வள்ளலவன் றேரின்மேவேறு
ருருவுகொடு வடவையாய் வனமழித்துத்
தருவெரித்தே பொழுதவானே.

## மண்டலம் 1 சூக்தம் 140.

(இ-ள்.) இருபிறப்பாளனாகிய அக்கினி, சரு, புரோடாசம், ஆஜ்யம் என்னும் மூவித வுணவுகளை யேற்றுக்கொள்ளுவான். அவன் ஒருவருஷத்திலுண்டவை மீண்டு வளரும். ஹோதாவினது சுருக்கினால் அவன் அவிப்பொருள்களை யேற்பான். வள்ளலாகிய அவன் வேறொரு உருவமாகிய் வடவைத் தீயாகிக் காட்டை யழிப்பவனாய் அதிலுள்ளமரங்களைச் சுட்டெரிப்பான்—(எ-று.) அரணிக்கட்டைகளிற் றோன்றுவதும், ஆதான மந்திரங்களினால் அமைக்கப்படுவதுமான இரண்டுபிறப்புகளுண்மையின் இருபிறப்போனென்றார். ஒருவருடம் அக்கினிகார்யங்கள்செய்யும் யஜமானனை யக்ஞ சமர்த்தனாக்குகிறான் என்பதைச்சுட்டி அவன் ஒருவருஷத்துண்டவை மீண்டும் விருத்தியாகுமென்று சொன்பர் ஸாயணர். மூன்றுவகையுணவாவன, சரு, புரோடாசம், ஆஜ்யமென்பன. சருபுரோடாசங்களைப்பற்றி 1-94-4 பார்க்க. ஆஜ்யம் உருக்கினநெய். அதுவே கட்டிப்பட்டால் க்ருதமாம்; பாதி இளகியுள்ளது ஆயுதம்; பதமாயுள்ளது ஸுரபி. ஐதரேயப்பிராஹ்மணத்தில் ஆஜ்யம் தேவர்களுக்கென்றும், ஸுரபி க்ருதம், மனிதனுக்கென்றும், ஆயுதம் பிதிர்க்களுக்கென்றும், நவநீதம் கர்ப்பங்களுக்கென்றும், சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் தைத்திரீயத்தில், க்ருதம் தேவர்களுக்கென்றும், அஸ்து அல்லது ஆயுதம் பிதிர்க்களுக் கென்றும் நிஷ்பக்வ அதாவது. குடில்லாமல் ஸுரபிபோல் நீர்த்திருப்பது மனிதர்களுக்கென்றும் சொல்லப்படுகிறது.

3. உடலுறைந்தோர் தொழிலினையே புளுற்றுபவர்
கறுப்புநிற முற்றோ ரன்னான்
றிட்டுறையு மிருதாயா சலித்திட்டார்;
மேன்மையுறுந் தேசார் சுவாலைப்
படபடவென் றுட னெதிர்ந்து துகள்கதுவி
யிருட்டோடடும் பண்பின்யாரு
மிடனறிந்து சீராட்டும் பெருமைகொடு
பிதிரோம்புஞ் சிசுவேய்ந்தாரே.

(இ-ள்.) கூடவுறைந்து (நெருப்பு வரவழைத்தலாகிய) ஒரு தொழிலையே செய்பவர்களும், கறுப்பு நிறத்தை யடைந்தவர்களும், அரணிக் கட்டைகளுமான அவ்வக்கினியி னிருதாய்மாரும் சலித்தார்கள். முக்கியப் பிரதேசத்திற்றோன்றும் சுவாலையோடு படபடவென்று எதிர்தோன்றி, ஸமீபத்திலுள்ள எரிதுரும்புகளைப் பிடித்துக்கொண்டு இருட்டையோட்டிஎல்லாராலும் இடமறிந்து சீராட்டப்படும் பெருமைவாய்ந்து, தன்னை வளர்ப்பவர்களாகிய (பிதாக்களை) யக்ஞ கர்த்தாக்களை விருத்திக்குக் கொண்டுவரும் தன்மைவாய்ந்த குழந்தையாகிய வக்கினியை யடைந்தார்கள்—(எ-று.)

4. விண்ணளிக்குந் தகைமையொடு விரைகதியிற்
கரும்பாதை விழைந்து வேகத்
தொன்றுபவை, தந்தொழிற்க ணடையின்கட்
சிறந்திறைபி னெழுகுந் தன்மை
பண்ணியவை, காறண்டக் கடிதினிற் செல்

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

பலவைவிழ மடையுள்ளத்த,
என்னுருவாய், மானவருக் கெனவேயுன்
சுடர்மூட்டி யேய்ந்தவன்றே.

(இ-ள்.) மனிதரது உள்ளத்தில் நினைக்க நிற்கும் அக்கினியே மோட்சத்தை அல்லது பிரஹ்மலோகத்தை யளிக்கும் தன்மைவாய்ந்தவையும், வேகமான கதியோடு கூடியவையும், கறுப்பு நிறமான பாதைக்கண் செல்பவையும், வேகமுள்ளவையும், தங்கள் தொழிற்கண்ணும் நடைக்கண்ணுஞ் சிறந்து நிற்பவையும், வாயுவினல் தூண்டப்படுபவையும், பலவிதமாகச் செல்லும் மனத்தோடு கூடியவையுமான, உனது சுவாலைகள், யக்ஞத்தைநடத்தும் மனிதர்களுக்காகவே மூட்டப்பெற்று நின்றன.(எ-று). 'காலி கராலி, மனோஜவா, ஸுலோஹிதா, ஸுதூம்ரவர்ணா,ஸ்புலிங்கினீ, விச்வபுவீ, என்னும் ஏழுநாக்குகளோடு கூடிய அக்கினிச் சுவாலைகளில் ஒருவன் ஆஹுதி செய்தால், ஸூர்ய கிரணங்களோடு தேவர்களுக்குப் பதி வீற்றிருக்கும் லோகத்தில் அவனை யச்சுவாலைகள் கொண்டுபோய்விடும்.' என்று சுருதியிலிருப்பதால் முமுக்ஷுவ: என்றுரென்பார் ஸாயணர். மேனுட்டாசிரியர் இதுமுதல் 5 கவிகள் காட்டையழித்து ஆரியர்கள் குடியேறுவதற்கு வேண்டும் இடத்தைத்தரும் காட்டுத்தீயைப் புகழ்ந்த செய்யுட்களா மென்பர்.

5. காரிருளைக் கிழித்துமிக வொளிவீசிப்
பெருநெறியின் கறுப்பைமாற்றிச்
சாருமவன் புலிங்கங்கள், பேரவனி
யெவ்விடத்துந் தழுவித் தோய்ந்த
சிரமயத் தெங்கணுஞ் சேட்டித் துயிர்ப்பிற்
பெருமுழக்கைச் சேர்த்திப்பின்ன
ரேருறவே யிடியி னெலித்தெத்திசையும்
பொறிவீசிப் படருங்காலே.

(இ ள்.) பெரிய பூமியின் எல்லாப் பக்கங்களிலும் பரந்து, எவ்விடத்துஞ் சேட்டை செய்து,பெரு மூச்செறிந்து, பெரிய ஒலியை நிறைத்து, இடிபோன் முழங்கி,எத்திசையும் பொறிகளை வீசிக்கொண்டு படரும்போது அவ்வக்கினியின் தீப்பொறிகள் இருளைநாசமாக்கிப் பெரிய காந்தியைவீசித் தாம் செல்லும் நெறியிலுள்ள கறுப்பை மாற்றிப் பொருந்தும்—(எ-று.).

6. பழுத்தநிறச் செடிகளிடத்ததிகமுற
வளர்ந்துபணிந் தவற்றைத் தேசாற்
பழிச்சி யலங்கரித்தலிற் பேரொலியொடு
பத்தினிமார்க்கட் பரிந்து செல்லுங்
கொழுத்த விடையெனவேகும்; வலிதோற்றித்
தன்றநுவைக் கோல மாற்றித்,
தெழித்தொளிரும் வீமனென, வடக்கரிதாய்ச்

## மண்டலம் 1. சூக்தம் 140.

(இ-ள்.) பழுப்படைந்த செடிகளினிடத்து அதிகமாக வணங்கிவ ளர்ந்து அவற்றைத் தனது தேஜஸால் ஸ்தோத்திரஞ் செய்துஅலங்கரிப்பது போல மிகுந்த முழக்கத்தோடு, மனைவிகளிடத்துச் செல்லுங் காளையைப் போல அவ்வக்கினி அச்செடிகளைச் சூழ்ந்து கொள்ளும். தனது வல்லபத் தைத் தெரியக்காட்டித் தனது தேஜோ ரூபத்தை யழகுபடுத்தி, முழக்கஞ் செய்து விளங்கும் பயங்கரஸ்வரூபனைப்போலத், தடுக்க முடியாததாய் தன் னுடைய சுவாலையாகிய கொம்புகளைச் சிலுப்பும்—(எ-று.) பீமன், பயங் கரமானவன்.

7. மறைந்தொருக்காற் றெரிந்தொருக்கா லெவைபுமுணர்ந்திடு
மவனைமானப் பூடைச்
சிறந்துறவேகதுவும்; அழிவில்லதுவாய்த்
தனையறிந்தோ ரிடத்துச் சேக்கும்;
திறந்தெரியிச் சுடர் மீண்டுந் தெய்வபல
மடைந்தோங்கிச் செய்யவங்கி
யுறழ்ந்துதமைப் பெற்றோர் தமுருவமதை
மாற்றியிவ ளொழுகுமாதோ.

(இ-ள்) ஒரு சமயத்துக் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்தும் மற்றொரு சமயத்திற் பலருக்குந் தெரிந்தும் எல்லா முணர்ந்தவனைப்போல ஓஷதிகளைச் சூழ்ந்து கவ்வும். நித்தியமாய்த் தன்னை யறிந்த, யஜமானனி டத்துத் தங்கி யிளைப்பாறும். இத்திறமெல்லாமறிந்த அக்கினிச் சுவாலைகள் மறுபடியும் தெய்வபலத்தை யடைந்து விருத்தியாகி யாகாக்கினியோடு கலந்து தியாவாப்பிருதிவிகளாகிய பெற்றோர்களை உருவமாற்றி நடக்கும்— (எ-று.) செடிகள் பூமியின் றோற்றத்தை மாற்ற அக்கினி வானத்தின் தோற் றத்தை மாற்றுகிறதுபோலுமென்பார் ஹ்விட் என்பவர். இவ்வக்கினி பூமிவானமிரண்டையும் தொடுகிறது என்பார் ஸாயணர்.

8. சுருணீண்ட கேசினிக ளன்னனை
மிகத்தழுவித் தோய்வர்; செத்துந்
தெருளோடு மாயுவுளோன் வர வவன்பா
லுன்னதமாய்ச் சேர மீண்டும்
வெருவாமலெழுவர்; அவர் சரை யதனைச்
விடுவித்து மிகவுமார்த்து
வருவானவ் வுயிர்தரிப்போ னடக்கரியன்
புத்துயிர்ப்பை வளர்த் தன்னார்க்கே.

(இ-ள்.) நீண்டு சுருண்ட மயிரோடு கூடிய சுவாலைகளாகிய ஸ்திரீ கள் அக்கினியை நன்றாகத்தழுவிக்கொண்டிருப்பர். கரிக்கட்டையைப்போல மிருதபாவத்தை யடைந்தும் அவ்வாயுவுள்ள அக்கினியாகிய நாயகன்வரவே அவனைச்சேர வுன்னதமாக மீண்டும் தங்கள் உபத்திரவத்தை மறந்து பய மின்றி எழுவார்கள். உயிரைத் தாங்குபவனும் ஒருவராலு மடக்கமுடியாதவ னுமாகிய வவ்வக்கினி தன் பத்தினியாகிய அச்சுவாலைகளின் சரைத்தன்

மையை நீக்கிப், பிராணனை மீண்டும் வருவிக்க மந்திர உச்சாரணங்கள் செய்வதுபோல் உரக்கச் சப்தித்து அவர்களுடைய பிராணனை வளர்த்துக்கொண்டு வருவான்-(எ-று:) ஈண்டு அக்கினியை நாயகனாகவும், சுவாலைகளை அவனது பத்தினிகளாகவும் உருவகித்தார்.

9. தாய்புனைந்த வேகாசந்தனைச் சூழ்ந்து
சிக்குவையாற் சருவிமெய்யே,
வாய்விடுத்தார்த் தொழுகு மூயிரோடுபல
திக்கினிலு மருவி வேக
மாய் நடக்கும்; பாதமுள சங்கமத்துக்
குணவதனை யளித் தெக்காலுந்
தோய்திரண முதலவெரித் தேய்நெறியைச்
சியாமளமாய்த் தோய்க்கு மன்றே.

(இ-ள்.) (இது வடவைத்தீயின் துதி) பூமியாகிய தாய்போர்த்துக்கொண்டிருக்கும் திரண, குல்ம ஒஷதிகளாகிய மேல் வஸ்திரத்தைச் சூழ்ந்து நாக்கினால் உண்மையாகவே யருவி, வாய்விட்டுச் சப்தித்தோடும் பிராணிகளின்பின் பலதிக்கிலும் வேகமாகப்பரவும். இருகால் நாற்காற் பிராணிகளாகிய ஜங்கமங்களுக்குப் பிராணாதாரமான உணவையளித்து எப்பொழுதும் புல் முதலிய வற்றைத் தீய்த்துத் தான்போகும் மார்க்கமெல்லாம் சியாமள வர்ணமாக விருக்கும்படி செய்யும்—(எ-று.) திரணம். புல் துரும்பு முதலியன, குல்மம் புதர் அல்லது கொத்துச்செடி, ச்யாமலம்,சியாமளம், கறுப்பு அல்லது நீலநிறம்.

(வேறு)

10. நெட்டுயிர்ப் பெறியுங் காளை நிகர்க்கு மக்கினியே, சித்த
மட்டிலாச் சாந்தமுற்றோய், வளர்க பேரொளியின்; உன்னை
யொட்டிய விளமை நீத்துப் பகைவரை யோட்டிப் போரிற்
றிட்டமார் கவசமென்னத் திகழ்ந்தனை மகத்தினன்கே.

(இ-ள்.) பெருமூச்செறியுங் காளையைப்போன்ற அக்கினியே! மிகுந்த சித்த சாந்தியை யடைந்தவனே! மிகுந்த பிரகாசத்தோடு வளர்வாயாக. உனது சிறு சுவாலைகளோடு விளங்கும் சிசுத்தன்மையை விட்டுவிட்டுப் போரிற் பகைவரைச் சயிக்குந் தன்மையனாய், யுத்தகவசந்தரித்ததுபோல விளங்குகின்றாய்—(எ-று.) இச்செய்யுள் வடமொழியில் 48 எழுத்துள்ள ஜகதிக்கும் 44 எழுத்துள்ள த்ருஷ்டுப்புக்கும் ஒத்து வாராமல் 43 எழுத்தோடு கூடியுள்ளது. அதனால் ஜகதியல்லது த்ருஷ்டுப்பெனத்தலையிற்சந்தங் கூறியுள்ளாரேனும் வடமொழியிற் படிப்போர்க்கு முதற்பாதி த்ருஷ்டுப்பையே யொத்திருப்பதால் ஈண்டு த்ருஷ்டுப்புக் கேற்ற தமிழ்ச் சந்தத்திலேயே இச் செய்யுளை யாத்தாரென்க.

வருக்கம். 6.

(வேறு.)

11, அக்கினியே, யமைக்கரிய விறகின்மீ
தழகாக வளிக்கப் பெற்ற
புக்கியமாரிது வுன்றனணி மனத்தே

## மண்டலம். 1. சூக்தம். 140.

பிரியமதைப் புகட்டி யுன்றன்
முக்கியவன் பினுக் கேற்ற தாருக, உன்
றநுவ் தனின் மொய்க்குஞ் சுத்தச்
சுக்கிரவா ளொளியோடு மரகதத்தை
யெம்பொருட்டுத் தோய்விப் பாயே.

(இ-ள்.) அக்கினியே! அடுக்குவதற்குக் கஷ்டதரமாயுள்ள காஷ்டங்களின்மேல் நன்றாக வளிக்கப்பட்ட போஜ்ய வவியாகிய விது உன் அன்பு சார்ந்த மனத்திற் பிரியத்தையூட்டி உன்னால் இதர அவிகளைக்காட்டிலும் அதிகமாக விரும்பத்தக்கதாகட்டும். உனது சரீரத்தில் நிறைந்திருக்கும் நிர்மலமானதும், வெண்மையானதுமான சிறப்புப் பொருந்திய பிரகாசத்தோடு கூடி, அரதனங்களையல்லது ரமணீயமான செல்வங்களை யெங்களுக்குத்தருவாயாக—(எ-று.) மேனாட்டாசிரியர் முன்னடிக்கு வேறுமாதிரி உரைகூறுவர். இதர அரைகுறையான பிரார்த்தனைகள் உன்காதுக் கினிமையாயிருக்கிறும் இந்த எமது பரிபூரணமான பிரார்த்தனை அவைகளைக் காட்டிலும் அதிகமாக உன்னன்புக்குரியதாயிருக்கட்டும் என்பார்.

(வேறு.)

12. எங்கடேர்க் ககத்துக், கங்கி, யெப்பொழுதுஞ் சலிக்கு
மங்கமார் நடுப்பிற்பாத மடைந்த நாவாயையீகல்;
அங்கவன்னது மகோநராக வெம்வீரர்த் தோய்த்துத்;
தங்குறக் கரைசேர்த் தியாகச் சனத்தை, யெந்தஞ்சமாகல்.

(இ-ள்.) அக்கினியே! எங்களுடைய ரதத்துக்கும் கிரகத்துக்கும் நித்தியமாயுலாவுகின்ற (ரித்விக்குக்களாகிய) அடுப்போடும், (திரவிய தேவதாமந்திரார்த்தி ரூபக்) கால்களோடும் கூடிய (யக்ஞமாகிய) கப்பலை யளிப்பாயாக. அந்த (யக்ஞமாகிய) கப்பல் எமது புத்திரர்களைச் செல்வவான்களாக்கியாக கர்த்தாக்களை (ஜநநமரணாதி துக்கமாகிய கடலின்) கரையிற் சேர்த்து, எங்களுக்கு அதிக சுகத்தைத் தரும் தஞ்சமாக வமையட்டும்—(எ-று.) திரவியம், யாகத்திரவியம்; தேவதை, யாகமேற்கும் கடவுள்; மந்திரம், அக்கடவுளைக் குறித்துப் பாடும்தோம். மகோநர், செல்வ முள்ளவர்.

13. எங்களுக்தத்தை, யங்கி யேற்கவுன் னொளியினன்கே;
துங்கவான் புவியும், தாமே தோய்ந் தொழுகிடுஞ் சிராறு
மெங்களுக் காவை யாகத் தானியங்களினை யீதல்;
அங்கமார் பிறவை யென்று மன்னத்தைச் செவ்வைக லாற்றல்.

(இ-ள்.) அக்கினியே! எங்களுடைய உக்தங்களை அநுராகத்தோடுந் தொனிசெய்து ஏற்றுக் கொள்ளுவாயாக. வானமும், பூமியும், தாமாகவே யோடும் நீருவிகளும், எங்களுக்குப் பசுவையும், யாக புரோடாசத்துக்காகும் தானியங்களையும் தரட்டும். சிவந்த நிறத்தோடு கூடிய (அல்லது செம்மேகங்களோடு கூடிய) உஷதேவ் எங்களுக்குச் சிரேஷ்ட மாயுள்ள இதரயாகமாதனங்களையும் அன்னத்தையும் எல்லாகாலும் தரட்டும்—(எ-று.).

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

## 141. மண்டலம். 1. அநுவாகம் 21. சூக்தம். 1.

13 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷி தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: ஜகதி, 12, 13, த்ருஷ்டுப்; தேவதை: அக்கினி.

1. வலிநின்று தோன்றியதா லத்தேவ
னொளியுடலின் மருவி மெய்யே
பொலிவெய்தி யுரமுற்ற தப்பொழுதெம்
மதித்துதிகள் புகலும் பேற்றை
நலிவெய்தா தளித்ததுவால்; மகத் துதிசார்
மறைவாக்கு நலத்தின்யாக
விலமுற வவ்வக்கினியை யோமநடை
தனிலொழுகி யேய்த்த தன்றே.

(இ-ள்.) அரணிக் கட்டைகளைத் தேய்த்த பலத்தினின்றும் உற்பவித்த காரணத்தினால் அவ்வக்கினி தேவனது காந்தியானது உண்மையாகவே அவனது உடலிற் பற்றிப் பலப்பட்டுவிளங்கியது; அப்பொழுது எமது புத்திபூர்வமாகச் சொன்ன மந்திரங்களின் பலனைக் குறையாமல் அக்காந்தியளித்தது. யாகத்தில் ஸ்துதிரூபமாக விளங்கும் வாக்குக்கள் ஓமஞ்செய்யும் வேலையிலிருந்து கொண்டு அவ்வக்கினியை யாகக் கிரகத்துக்குக் கொண்டு வந்துசேர்த்தது—(எ-று.).

2. அனஞ்சமைப் போனுடல் வளர்ப்போ னவியுணவோ
னித்தியனு மவன்மண் டோய்ந்தே
யனம்பெறு மங்கலத்தாய ரெழுவரொடு
மிரண்டாவ தாக வேய்ந்தான்;
வனமிகு மக்காளையின தரும் பொருளைக்
கறக்கவென மதியிற் கூடும்
வனிதையர் மூன்றுவதாய்ப் பதின்மர்தரு
மவன்றனையே மகிழ்விற் பெற்றார்.

(இ-ள்.) உணவுப்பொருள்களைப் பக்குவப் படுத்துபவனும், சரீரத்தை வளர்ப்பவனும், அவியுண்டியோடு கூடியவனும், எப்பொழுதுமுள்ளவனுமாகிய வக்கினி, லௌகிகவைதிக கர்மங்களைச் செய்துகொண்டு முதலிற் பூமியிற் றங்கினான். இரண்டாவதாக மங்கலம் பொருந்திய எழு தாய்மாரோடுங் கூடித் தங்கினான். அழகிய அக்காளையினது பொருளையெல்லாங் கைக்கொளவெண்ணிப், புத்தியோடுகூடிய வனிதைகள், பத்துவிரல்களுங் கடைந்து தரும் அவ்வக்கினியை மூன்றுவதாக பெற்றெடுத்தார்கள்-(எ-று.) தாகந்தீர்த்தல், பாகஞ்செய்தலிவை யக்கினியின் லௌகிக கர்மமென்றும் யக்ஞஞ் செய்தல் வைதிககர்ம மென்றுங்கூறுவர் ஸாயணர்க. எழு தாய்மார் ஏழுலகங்களையும் செழிப்பிக்கும் மழையாகிய தாய்மாரென்றும், வனிதைய

## மண்டலம் 1 சூக்தம் 141.

றென்றும், பத்துத் திக்குக்களையு மென்றும், பதின்மர் அரணிகடையும் பத்து விரல்களென்றும் கூறுவர். முதலிற் பூமியில் அக்கினியாகவும், இரண்டாவதாக விண்ணிற் சூரியனாகவும் தக்கினனென்பது பிண்டப்பொருள். இவ்வ நித்தியனிடத்திருந்தே மாதரிச்வான் அரணிகடையும்போது அக்கினியைக் கொண்டுவருபவனாதலின் மூன்றுவதாக விரல்களைப்பற்றி விசேஷித்த தென்க.

3. பெருவெளியின் மூலமதி னின்றிவன்ற
 னுருவதனைப் பிறங்கீசானப்
 பெருமையுள சூரிகடம் பலமதனு
 லுருப்படுத்தும் பெட்பார் நாளும்,
 அருமையுறப் பண்டிருந்து மதுக் கூட்டக்
 குகையதனிலமர்ந் தொளித்த
 வெரியதனை மாதரிச்வான் கடைந்து வெளிக்
 கொண்டுவந்த வெழிற் காலத்தும்.

(இ-ள்.) பெரிய அந்தர வெளியினது ரூபத்தை ஈசானர்களாகிய (அல்லது நினைத்தது முடிக்கவல்ல) மேதாவிகள் (ரித்விஜர்கள்) தங்கள் பலத்தினால் (அரணியைக் கடைந்து) உருப்படுத்திய அந்தக் காலத்திலும், புராதன காலத்திலிருந்து மதுரம் நிறைந்த ஸோமம் முதலிய அவிப் பொருள்களைச் சேர்ப்பதற்காக மாதரிச்வான் கடைந்து வெளிக் கொண்டுவந்த அந்தக் காலத்திலும்—(எ-று.) அவனது ரூபத்தைத் துதித்தல் முறையா மென ஒரு வாக்கியங் கூட்டுக வென்பார் ஸாயணர். மாதரிச்வான் அந்தரிட்சத்திற் சுவஸிப்பவன் அல்லது பலன்தரும் யாகத்திற் சேஷ்டிப்பவன் என்பது பொருளென்பார் அவரே. இச்சொல்லின் பொருளை மண். 1 சூக். 60 செய் 1ற் பார்க்க.

4. பரமபிதா நின்றவனை யெம்மாட்டுக்
 கொண்டுவந்த பண்பார் காலத்
 தரியபசி யோடவனுஞ் செடி கொடிகளுக்கு
 மத்தியினி லுய்யா நின்றான்;
 இருவருமே யவன்பிறப் பைக்கருதி வியாபித்
 தடர்ந்த வெழிலாற் சோதிப்
 பெரியவனுந் தூய்மையனுங் கட்டிளமை
 வாய்ந்தவனும் பிறந்தா னன்றே.

(இ-ள்.) எல்லாவற்றிற்கும் ஆதாரமான பரமபிதாவினிடத்தினின்று அவ்வக்கினியை எங்களிடத்துக் கொண்டுவந்த வந்தக் காலத்தில், மிகுந்த பசியோடு அவனும் செடி கொடிகளுக்கு மத்தியிற் றோன்றுகிறான். அரணிக் கட்டைகளாகிய இருவரும் அவனது பிறப்பை யுத்தேசித்து ஒன்று கூடி வியாபித் தடர்ந்ததனால், சோதி மிகுந்தவனும், சுத்தனும், மிகுந்த இளமை வாய்ந்தவனும் பிறந்தான்—(எ-று.) பரமபிதா, திவப்பதி யென்பார் மேனாட்டாசிரியர். அவரே இருவர் வானம் பூமிகளா மென்பர் ஆனல் ஸாயணரோ அத்வர்யு யஜமானன் என்றும் இருவரையாவது அல்லது இரண்டு அரணிக்கட்டைகளையாவது குறிக்கும் என்பர்.

## அஷ்டகம் 2. அத்தியாயம் 2.

5. பின்னரவன்றாய் மார்க்குட் புகுந்துபரி
சுத்தமதைப் பெற் றியாரேனுந்
தன்னமுந்தீங் கிழைக்கவுறாவகை யளவின்
மிகவளர்ந்து சார்ந்தான், மொய்ம்பில்
முன்னமெனவேசிறந்தோன் முதற்றோன்று
மோடதிக்கண் மொய்த்தாற் போன்றே
பின்னருறு மற்பநவச் செடிக்கண் ணு
நுழைந்து சுடர் பிறக்குங் காலே.

(இ-ள்.) மேற்சொன்ன மந்திரத்திற் கூறியபடி யமைந்தபின்ன, பண்டைக் காலத்திற் போலவே வலிமையிற் பெருத்தவனாகிய அவ்வக்கினி முதலிலுதித்த மரங்களில் நிறைந்து விளங்கியதுபோல நூதனமாகத் தோன்றியசிறு செடிகளினிடத்தும் நுழைந்து தனது சுவாலே விளங்குமாறு செய்தகாலே, அவன் பத்துத்திக்குக்களாகிய தாய்மார்களுக்குள்ளே புகுந்து சுத்தமெய்தி எவராலும் இம்சிக்க முடியாதபடி தன்னளவிற் பெருத்து வளர்ந்தான்—(எ-று.) தாயர் நீர்களா மென்பர் மேனாட்டாசிரியர். மேலும், முன்னிரண்டடிகளை ஒருமுடிபாகவும் பின்னிரண்டடிகளை ஒருமுடிபாகவுங் கூறுவர். அற்றேகடையடியின் கடையிரண்டு சீரையும், 'பிறக்கு வானே. எனமாற்றிப் படிக்க.

வருக்கம். 8.

6. அன்னவனை யோதாவாய்ப் பகற் சவனத்
தனிற்றேர்வரவற்குத் தம்பான்
மன்னுறுநற் கொடைகளினைப் பகற்குப்போ
னிவேதிப்பா, மகிழ்ந் தெங்காலும்
பன்னுறும்பஃறுதியேற்போன் றேவர்கடங்
கருமத்தான் மனத்தினாலுந்
துன்னுறு தன்புகழ் கூறு மர்த்தியன்ற
னவியேற்கத் தோயும் போதே.

(இ-ள்.) சந்தோஷமாய் எல்லாக் காலத்திலும், வெகு பெயர்களினுடைய வெகு விதமான துதிகளையு மேற்பவனான அக்கினி, தேவர்களது கருமங்களினாலும் ஞானத்தினாலும் தனது புகழைக் கூறும் மர்த்தியனாகிய யஜமானனது அவியுணவை யேற்றுக்கொள்ள யாகதலத்திற்கு ப் போகும்போது, அவ்வக்கினியைப் பிராதஸ் ஸவனத்தில் ஹோதாவாகத் தேர்ந் தெடுப்பார்கள். பகனுக்கு ப்பரிந் தளிப்பது போல அவ்வக்கினிக்கும் தங்களிடத்துள்ள அவிக்கொடைகளை நிவேதிப்பர்—(எ று.). பகன் மண். 1 சூக்.36 செய் 2 பார்க்க.

7. வணக்குரியன் காறாண்ட வெவராலுந்
தடுக்கரிய வாக்கு வன்மை
யினைக்கியுள குடிலனைப் போற் றுதியோடு
பலதிக்கு மியையுங் காலம்

## மண்டலம் 1. சூக்தம் 141.

பிணக்கறவெப் பொருளினையுஞ் சுட்டெரித்துப்
பன்னெறியிற் பிணைந்து செல்லுங்
குணப்பிறவித் தூய னெறிகறுக் கடிப்போன்
பாதையினிற் கூடுந் தூளே.

(இ-ள்.) வணங்குதற்குத் தக்கவனாகிய வக்கினி, காற்றினாற் றூண்டப்பட்டவனாய், யாராலுந் தடுக்க முடியாத பலவித வாக்கு வல்லமையோடு கூடிய விதூஷகன் பலவித ஸ்தோத்திரத் தோடுஞ்செல்லுவது போல எவராலும் தடுக்க முடியாதவனாய்ப் பலவித ஸ்தோத்திரங்களோடும் பலதிசைகளிலும் பரவும் போது, எல்லாப் பொருள்களையும் சுட்டெரித்துப் பலபாதைகளிலும் செல்லும் பிறவிப் பரிசுத்தவானும், மார்க்கத்தைக் கறுப்பாகச் செய்பவனுமாகிய அவ்வக்கினி செல்லும் நெறியிற் றூள்கள் நிறைந்துவிடும் (எ-று.) குடிலன், வஞ்சகன் என்று பொருள்படினும் விதூஷகனென்றது ஸாயணாது உரையை யநுஸரித்தென்க. ரஜம், தூள், தூளென வாயிற்று. மேனாட்டாசிரியர், பட்டுப் போன செடிகளுக்கிடையே தடையின்றி வளைந்து செல்லும் பாம்பைப் போல, எனப்பொருள் கூறுவர்.

8. வடங்கொண்டு புனைதேரின், நிலைபெற்றுச்
செஞ்சுடரின் மருவு மங்கத்
திடம்பேர்த்து விண்ணுறுவான்; அவன்செல்லு
நெறிகறுத்துச் சேரக் கட்டை
யடர்த்தெரிப்பன்; அவனுடைய சுடர்க் காற்று
தோடும் புளாதி, சூரன்
றிடம் பெறு மல்லாக்கிரத்திற் கெதிராற்று
இழிந்தோடுஞ் சிதடர்ப் போன்றே.

(இ-ள்) அக்கினி யானவன், ஓரிடத்திற் பற்றிக்கொண்டு சிவந்த சுடர்களோடு பொருந்திய அவயவத்தனாய்க், கயிறுகட்டி யிழுக்கப் பட்ட தேர் சக்கரங்களி லுருண்டோடுவது போல, ஆகாய மார்க்கத்திற் செல்லுவான். அவன் போகும் மார்க்கங்கள் கறுப்படையும்வண்ணம் நெறியிலுள்ள கட்டைகளை யெரிப்பான். சூரனுடைய பலபராக்கிரமங்களுக் காற்றாது ஓடுகின்ற பயங்காளிகளைப் போல இவ்வக்கினியினது ஜுவாலைகளுக் காற்றாமல் பட்சி முதலிய ஜங்கமங்கள் அவனின்றும் ஓடும்—(எ-று.) இவவிருக்கைமேனாட்டாசிரியர் வேறுவிதமாக மொழி பெயர்ப்பர்: "தங்களுடைய தொழின் முறைகளை நன்குணர்ந்த சிற்பிகளாற் செய்யப்பட்ட வேகமான ரதத்தைப் போல அவன் தனது சிவந்த அங்கங்களோடு தன்னைத் தானே ஆகாயத்தை நோக்கித் தூக்கிக்கொள்ளுகிறான். அவனுடைய ஹோதாக்கள் கட்டைகளை யெரிப்பதனாற் கறுப்பு நிறத்தைபடைகிறார்கள். அவர்களுடையபலமானது, ஒருவீரனது மூர்க்கத்தனத்துக்கு முன்னில்லாதது போல, நிலையழிகிறது." என்பர். ஆனால் ஸாயணருரைப்படி இவ்வாசிரியர் மொழி பெயர்த்துள்ளார். இதுதாவாலத்துதி யென்பார் ஸாயணர்.

9. உன்னுமேல, யக்கினியே, இடவிரத
வருணன்னெறி மோங்கும் ஞானங்

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

குன்றாத வரியமனன் மித்திரனுந்
தந்தொழிலிற் கூர்மை பெற்றார்;
அன்னாரை யெவ்விடத்து நன்றாகச்
சூழ்ந்து பரந் தணைந்துன் கன்மந்
தன்னாலே வட்டையினி லாருறலிற்
பொருந்தியுட றரித்திட்டாயே.

(இ-ள்.) அக்கினியே! திடவிரதனான வருணனும், நல்லதானத்தோடு கூடிய அரியமானும், மித்திரனும் உன்னாலேயே தந்தொழிற்கண் சிறப்பை யடைந்தனர். ஏனெனில் வட்டைக்குள் ஆரங்கள் சென்று தங்குவது போல அம்மூவரையும் எல்லாப் பக்கங்களிலும் நன்றாகச் சூழ்ந்து உனது கர்ம பலத்தினால் அவர்களிடையிற் பரந்து பிறந்திட்டாய்—(எ-று.) வருணன் இரவுக்கும், மித்திரன் பகலுக்கும், அரியமான் காலைமாலை ஸந்திகளுக்கும் அபிமானி தேவதைகள். உடல்தரித்தல், பிறத்தல்.

10. கட்டிளமை யார்ந்தொழுகு மக்கினியே,
யுனைப்போற்றக் கருதிச்சோம
மட்டொழுகப் பிழிந்திடுவோன் றனக்குமணி
யளித்தவியை மருவுந்தேவர்க்
கிட்டவணைத்திடுவாயால்; வலிபெற்ற
விளமையனே, கிளருஞ்செல்வ
மொட்டியவ, பகனெனவே யுனைத்துதிப்போம்
புதிதாக வுடனே மன்னோ.

(இ-ள்.) அதிபால் யத்தோடு கூடிய அக்கினியே! உன்னை வணங்குவதற்காக ஸோமம் பிழியுமவனுக்கு ரத்னங்களையளித்து அவன்றரு மவியைத் தேவர்களிடத்துச் சேர்த்திடுவாய். பலத்திற்குப் பிறந்த குழந்தையே! மிக்க செல்வ முற்றவனே! பகனைத் துதிப்பது போல உன்னை நூதனமான ஸ்தோத்திரங்களால் உடனே புகழுவோம்—(எ-று.) பகன், மண். 1 சூக். 136 செய். 2 பார்க்க.

11. நன்னெறிக்காஞ் செல்வமதையுபாசிக்கத்
தக்கதனை நலக்க வித
லென்னவெவரும் புகழு மோக்கமறி
வாதியவை யியைமகாரைத்
துன்னுவிக்கல், ஈருலகுங் கதிர்விரித்து
நற்கருமந் தோயும்யாகத்
துன்னுறும்பல் தேவாது புகழ்மொழியை
யெப்பொழுதும் வழங்குவோனே.

(இ-ள்.) இரண்டு உலகங்களிலும் தனது கிரணங்களை விரித்துச் சுற்கருமத்தோடு கூடிய யாகத்தில் நினைக்கும் பல தேவாது புகழ் வசனங்களை அவர்களிடத் தெப்பொழுதுஞ் சேர்ப்பவனாகிய அக்கினி, நன்னெ

திகளில் உபயோகப் படுவதும், உபாஸிக்கத்தக்கதுமான செல்வத்தைக் கொடுப்பதுபோலவே, எல்லாரும் துதிக்கும் ஒக்கமும் கல்வியறிவுமுள்ள புத்திரர்களையும் தரட்டும்-(எ-று.) இச்செய்யுள் மொழிபெயர்க்கற்கரிதாயுள்ளது.

(வேறு.)

12, பேரொளி யோதா வன்னன் பிறங்கொளித் தேரின்வேக
மாரரியோடு மத்தமடைந் தெமதழைப்பைக் கேட்கல்
கூரறிவுள்ளோ னங்கி யுத்தமக் கருமங்கொண்டு
சீரழெகளிதிற் கிட்டுஞ் சிறப்பின் விண்ணெறியி னுய்க்கல்.

(இ-ள்.) மிகுந்த பிரகாசத்தோடு கூடிய ஹோதாவாகிய அக்கினி, தனது ஒளிவீசுந் தேரோடும் விரைகதித்துரகங்களோடும் ஸந்தோஷத்தையடைந்து எமது கூவிளிகளைக் கேட்கட்டும். மிக்கவறிவுள்ளவனுகிய அக்கினி உத்தமக் கருமங்களால் நடத்தப்பட்டு, அழகு பொருந்தியதும் எல்லாராலும் எளிதில் அடையக் கூடியதுமான ஸ்வர்க்க நெறியில் எங்களை நடத்தி யங்கேகொண்டுபோய்ச் சேர்க்கட்டும்—(எ-று.)

13. கருமத் தோடணைந்த பண்ணாற் கருத்துடனங்கியெம்மாற்
பரமசாம் ராச்சி யத்தின் பொருட்டு நன்ருகப் பாட
ஞரைபெற நின்ருன்; யாமு மோங்கு செல்வத்தின் யாகப்
பெரியருந் துதிப்போஞ் செல்லைப்பானுவார்ப்பித்தல்போன்றே.

(இ-ள்.) யாக கருமங்களோடு கூடிய மந்திரங்களால், பரம ஸாம்ராஜ்யத்தைப்பெறுமாறு, அக்கினி நன்ருகப் பாடப்பெற்ருன். யாங்களும் செல்வவான்களாகிய யாககர்த்தாக்களும், ஸூர்யன் மேகத்தை மழை பெய்வதற்காகச் சப்திக்கச்செய்வதுபோல், அவனது துதிகளை உரக்கக்கூறுவோம்—(எ-று.) மேஞட்டாசிரியர் கருமத்தோடு கூடிய பண்களால் என்னுது பலத்தோடு கூடிய பண்களால் என்பர், 'சிமிசக்தி இதிதந்நாமஸூபாடாத்' என்றும் ஸாயணர் கூறுவதாலென்க. மேலும் ததந்யு: என்பதற்குப் பரப்புவோமாகவென்று உரை கூறுவர். சூரியன் மேகப்படலங்களைவிரிப்பதுபோல யாங்களும் மகவான்களும் ஸ்தோத்திரங்களைவிரிப்போம்'. என்பர். ஆனல் 'சூரியன் மேகத்தை மழைக்காகச் சப்திக்கச் செய்வதுபோல,' என்பது ஸாயணருரை.

## 142. மண்டலம். 1. அநுவாகம். 21 சூக்தம். 3.

13 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப்; தேவதை: 1 ஸமித்தன், 2 தநூநபாத், 3 நராசம்ஸன், 4 இளா, 5 பர்ஹி:, 6 தேவீர் துவாரங்கள், 7 உஷாஸாநக்தௌ, 8 த்வயௌ, ஹோதாரௌ, ப்ரசேதஸௌ, 9 ஸரஸ்வதி, இளா, பாரதி யிம்மூன்று தேவிகள், 10 துவஷ்டா, 11 வனஸ்பதி, 12 ஸ்வாஹாக்ருதி, 13 இந்திரன்.

இவ்வகைய சூக்தமொன்று இம்மண்டலம் 13வது ஸூக்தமாக வந்துளது. இச்சூக்தங்களுக்கு ஆப்ரிஸூக்தங்களென்று பெயர். இம்மாதிரி இவ்விருக்குவேதத்தில் 10 ஸூக்தங்களுண்டு. அவையாவன:—

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

1. மண். 1. சூக். 13. காண்வகோத்திரத்து மேதாதிதி பாடியது (இவ்வஷ்டக முதற்கணுள்ளப்ரவரத்தில்அல்லது 49. கோத்திரங்களில் 24வது பார்க்க.) (அக்கினி) 12 ரிக்குக்கள்.
2. மண். 1. சூக். 142. ஆங்கிரஸ கோத்திரத்து உச்சத்யன் புத்திரன் தீர்க்கதமஸன் பாடியது (மேற்பட்டியில் 17வது பார்க்க.) (இந்திரன்.) 13 ரிக்குக்கள்.
3. மண். 1. சூக். 188. அகஸ்திய கோத்திரத்து அகஸ்தியன் பாடியது (49வது கோத்திரம் முதல்வகுப்பைப் பார்க்க.) (தநூநபாத்) 11 ரிக்குக்கள்.
4. மண். 2. சூக். 3. ஆங்கிரஸ கோத்திரத்துச் சுநஹோத்திரன் புத்திரனும், பார்க்கவ கோத்திரத்துச்சுநகனது ஸ்வீகார புத்திரனுமான க்ருத்ஸமதன் பாடியது. (7வது கோத்திரத்தைப் பார்க்க.) (நராசம்ஸன்.) 11 ரிக்குக்கள்.
5. மண். 3. சூக். 4. விசுவாமித்திர கோத்திரத்துக் காதி புத்திரன் விசுவாமித்திரன் பாடியது. (38வது 39வது கோத்திரங்களைப் பார்க்க.), (தநூநபாத்.) 11 ரிக்குக்கள்.
6. மண். 5. சூக். 5. ஆத்ரேய கோத்திரத்து அத்திரி புத்திரன் வஸுச்ருதன்பாடியது(IIIவதுகோத்திரம்பார்க்க.) (நராசம்ஸன்.) 11 ரிக்குக்கள்.
7. மண். 7. சூக். 2. வஸிஷ்ட கோத்திரத்து மைத்திராவருணர்களின் புத்திரன் வஸிஷ்டன் பாடியது. (48வது கோத்திரத்தைப்பார்க்க.) (நராசம்ஸன்.) 11 ரிக்குக்கள்.
8. மண். 9. சூக். 5. காச்யபகோத்திரத்து தேவலன் அல்லது அஸிதன் பாடியது. (41வது கோத்திரத்தைப் பார்க்க.) (தநூநபாத்) 11 ரிக்குக்கள்.
9. மண். 10 சூக். 70. பாத்ர்யச்வ கோத்திரத்து ஸுமித்ரன் பாடியது. (6வது கோத்திரத்தைப் பார்க்க.) (நராசம்ஸன்.) 11 ரிக்குக்கள்.
10. மண். 10. சூக். 110. ஜாமதக்ந்ய கோத்திரத்து ஜமதக்கினி அல்லது அவன் புத்திரன் ராமன் பாடியது (2வது கோத்திரத்தைப் பார்க்க.) (தநூநபாத்.) 11 ரிக்குக்கள்.

ஆப்ரீ ஸூக்தங்களென்றால் சாந்தப்படுத்தும் ஸூக்தங்கள் என்பது பொருளாம். ஆனல் இவை தேவதைகளைச் சமனப்படுத்தும் நோக்கமுள்ளவையல்ல. இதைப்பற்றியமோட்சமூலர் மதத்தைப் பின்னர்க் கூறுவார். இச்சூக்தங்கள் பெரும்பாலும்பதினொரு ரிக்குக்களுள்ளவை.ஒவ்வொரு ரிக்கும் ஒவ்வொரு தேவதையைக் குறித்துக் கூறும்.

முதல் ரிக்கு, அக்கினி இத்மனை அல்லது ஸுஸமித்தனை (அதாவது மூட்டப்பட்ட அக்கினியை) க்குறித்து நிற்கிறது.

## மண்டலம் 1. சூக்தம் 142

இரண்டாவது ரிக்கு, தண்ணீருக்குள் அல்லது மேகங்களுக்குள் மறைந்து நிற்கும் சூரியனாகிய தநூநபாத்தையாவது, அல்லது மனிதர்களாற் புகழப்படும் உதயசூரியனாகிய நராசம்ஸனையாவது குறித்துநிற்கிறது.

மூன்றாவது ரிக்கு, தேவதானங்களான இளா (இளை)க்களைக்குறித்தாவது அல்லது அவற்றைக்கொண்டு வரும்படி பிரார்த்திக்கப்படும் ஈளிதா அல்லது அக்கினியைக் குறித்தாவது நிற்கிறது.

நான்காவது ரிக்கு, யாகதர்ப்பையாகிய பர்ஹியைக்குறித்துநிற்கிறது

ஐந்தாவது ரிக்கு, விண்ணின்கபாடங்களாகிய தேவீர் துவாரங்களைக் குறித்து நிற்கிறது.

ஆறாவது ரிக்கு, விடியலும் இரவுமாகிய உஷாஸாநக்தங்களைக்குறித்து நிற்கிறது.

ஏழாவது ரிக்கு, இரண்டு தேவர்கள், இரண்டுஹோதாக்கள், இரண்டுப்ரசேதஸர்கள், இவர்களைக் குறித்து நிற்கிறது. (இரண்டுதேவர்களென்றது அக்கினியும் ஆதித்யனுமென்றும், இரண்டு ஹோதாக்களென்றது அக்கினியும் வருணனுமென்றும், இரண்டுப்ரசேதஸர்களென்றது ஆதித்யனும் வருணனுமென்றும், ஷட்குரு சிஷ்யர் சொல்லுவார்.)

எட்டாவது ரிக்கு, ஸரஸ்வதி, இளா, பாரதி, இம்மூன்று ஸ்திரீதேவதைகளைக் குறித்து நிற்கிறது.

ஒன்பதாவது ரிக்கு, சிருஷ்டி கர்த்தாவாகிய துவஷ்டாவைக் குறித்து நிற்கிறது.

பத்தாவது, ரிக்கு, யாகஸாதனமாகிய வனஸ்பதியைக் குறித்து நிற்கிறது.

பதினொன்றாவது ரிக்கு, ஸ்வாஹாக்ருதிகளைக் குறித்து நிற்கிறது. இந்தஸ்வாஹாக்ருதிகள் விச்வே தேவர்கள் என்பார் ஷட்குரு சிஷ்யர்.

இப்பத்து ஸூக்தங்களிலும் இரண்டாவதாக அழைக்கப்படும் தேவதையின் பெயராவேயே பேதமேற்படுகிறது. 3,5,8,10 எண்களால் குறிக்கப்பட்ட ஸூக்தங்களில் தநூநபாத்தென்றும், 4,6,7,9, எண்களாற் குறிக்கப்பட்ட ஸூக்தங்களில் நாசசம்ஸனென்றும் கூறப்பட்டுள்ளன. 1, 2 எண்களாற் குறிக்கப்பட்ட சூக்தங்களிலோ இவ்விரண்டு நாமதேவதைகளுக்கும் தனித்தனியொரு ரிக்கேற்பட்டுள்ளது. அதனால் அச்சூக்தங்களுக்கு 12 ரிக்குக்களாயின. 2 என்னினால் குறிக்கப்பட்ட சூக்தத்தில் இந்திரனுக்கும் ஒன்றைச்சேர்த்துப் பதின்மூன்றாகவாக்கியுள்ளார்கள். இச்சூக்தந்தான் நடைமுதல் சூக்தமாம்.

கீத்க, மோட்சமூலர், ரிக்வேத ஸம்ஹிதை பலராற் பலவிடங்களில் வரன்முறையின்றித் தொடுக்கப்பட்ட தொகைநூலென்று கருதுவது தகுதியல்லவென்பார். பத்து மண்டலங்களிலும்8 மண்டலங்களில்அக்கினிக்

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

குமுதற்குக்தமும், இந்திரனுக்கு இரண்டாவது சூக்தமும், விச்வதேவர்களுக்கு மூன்றாவது சூக்தமும் வந்திருப்பதாலும், ஒவ்வொரு கோத்திரக்காரரும் தமது மண்டலத்தில் இவ்வாப்ரீ சூக்தங்களிருக்கவேண்டுமென்று பிரயாசைப்பட்டு அமைத்துக்கொண்டதாகத் தெரிவதாலும், இம்மண்டலத்தைத் தொகுத்தபோது ஒருமேல்விசாரணைக் கர்த்தாவால் நடத்தப்பட்டதென்பது அறியக்கிடக்கிறதென்பர். பிராஹ்மணங்களிலும் சூத்திரங்களிலும் ஒருரிஷியினது ஸூக்தத்தையே ஒருவித யாகத்திற் கூறவேண்டுமென குறிப்பிட்டிருக்கும்போது வேறொரு ரிஷியினது அதேகருத்துள்ள சூக்தத்தை அதற்குப் பிரதியாக வுரைத்தல் மகாதவறு. ஆனால் இவ்வாப்ரீ சூக்த விஷயத்தில் அந்த நிர்ப்பந்தமில்லை. இவ்விஷயத்தைப்பற்றி ஐதரேய ப்ராஹ்மணத்திற் சொல்லப்படுவதாவது எந்த ரிஷியினது ஆப்ரீக்களை ஆசாரியன் உபயோகிக்கிறானோ அந்த ஆப்ரீ ரிஷியினது பந்துத்துவத்தை பவ்வாசாரியன் யாக கர்த்தாவுக்குக் கூட்டிவைக்கிறான்.' ஆசுவலாயனர் இதனையே கொஞ்சம் விஸ்தரித்துக் கூறுவர். 'சுநகர்கள், க்ருத்ஸமதனது சூக்தத்தை யுபயோகிக்க வேண்டும் வஸிஸ்டர்கள் வஸிஷ்டனது சூக்தத்தை யுபயோகிக்கவேண்டும். ஜமதக்நி அல்லது ராமனது ஸூக்தத்தை இச்சுநக வஸிஷ்டர்களைத் தவிர மற்றையோர்கள் உபயோகிக்கலாம். ஆனால் ஒவ்வொரு கோத்திரத்தாரும் தனது ரிஷியின் ஆப்ரீ ஸூக்தத்தை யுபயோகிப்பது உசிதமானது. இவ்விருஷிகளின்பெயரைச் சௌனகர் ஒரு சுலோகத்தாற் குறிப்பிட்டிருக்கிறார் :

'கண்ணுவர், அங்கிரர், காணு மகத்தியர்,
வண்ணச் சுநகர், வளர்விசு வாமித்ரர்,
நண்ணிய வத்திரி, நாடும் வசிட்டரோ,
டொண்ணிய காசிப ரோங்குபத்ர்யாச்சுவ
ரெண்ணுஞ் சமதக்நி யாம்.'

(இ-ள்.) முதலுக்குக் கண்ணுவரும், இரண்டாவதற்கு அங்கிரரும் மூன்றாவதற்கு அகத்தியரும், நான்காவதற்குச் சுநகரும், ஐந்தாவதற்கு விசுவாமித்திரரும், ஆறாவதற்கு அத்திரியும், ஏழாவதற்கு வசிட்டரும் எட்டாவதற்குக் காசிபரும்,ஒன்பதாவதற்குப் பத்ர்யாச்வரும்,பத்தாவதற்குச்சமதக்நியுமாம்—(எ-று)

காணகிரியென்னும் ஓர் பழையவாசிரியர் எல்லாக்கோத்திரத்தாரும் ஒரே ஆப்ரீ ஸூக்தத்தை யுபயோகிக்கலாமென்று கூறி அதனால் எல்லா ஆரியரும் உண்மையில் ஒரே குடும்பத்தைச்சேர்ந்தவர்களே யென்று வாதிப்பர். இதனால் இவ்வாப்ரீ ஸூக்தங்கள் ஒரு குடும்பத்தாருக்கும் மற்றொரு குடும்பத்தாருக்கும் உள்ள வைஷம்யங்களை மாற்றவந்தனவாம் என்பர் மோட்சமூலர்.

மேலும் இவ்வாப்ரீ ஸூக்தங்கள் சமிதாயாகபலியைச் செய்வதற்குமுன்புஹோதாவினால் உரைக்கப்படும் மந்திரங்களாம். இம்மந்திரங்களைப் பரிசீலித்துநோக்கின் ஒரு சூக்தத்துக் கருத்துக்களேயன்றிப் பதங்களும் மற்றுஞ்சிலவற்றில் ஒரேமாதிரிஅமைந்திருப்பதை யறியலாம்.மேலும் ஒருவர்க்கொருவர் விரோத புத்தியோடு கூடிய வஸிஷ்ட விச்வாமித்திரர்களது ஆப்ரீஸூக்தங்களிலுங் கூட இப்பதவொற்றுமைகளைக் காணலாம்.

## மண்டலம் 1 சூக்தம் 142.

நிற்க, இச்சூக்தத் தலைப்பில் ஸாயணரது பாஷ்யத்தில் இச்சூக்தத்து க்குத் தேவதா நிர்த்தாரணஞ் செய்திருக்கும் முறையிது: 'இத்ம, தநபாக் இவை யக்ஞ அவயவங்களாதலால் யக்ஞமே தேவதையாம் என்பது காத்தாக் யரது மதம். அக்கினியையே ஸமித்து முதலியவற்றாற் சொல்வதால் அக்கி னியே தேவதை யென்பது சாகபூணரது மதம். நிருக்தத்தில் ப்ரயாஜ அநு யாஜச் சந்த தேவதைகள் யாரென்று வினவிவெகுவிதபட்சாந்தரங்களை விவ ரித்துக் காட்டி அதற்காகப் பிராஹ்மணங்களையும் உதாகரித்து இதரபட் சங்களை யர்த்தவாதப் படுத்தி அக்கினியே தேவதை யென்று விஸ்தாரப் படுத்தியுள்ளார். அவரே இவ்வாப்ரீ ஸூக்தங்கள் மூன்று வகையென்பர்: 'வாஸிஷ்டர், ஆத்ரேயர்,' வாத்ரியாச்வர், கார்த்ஸமதர் இவர்களது ஆப் ரீக்கள், நாராசம்ஸனைக் குறித்தவையாம். மேதாதிதி தீர்க்கதமஸன் இவர்கள் செய்த ஆப்ரீக்கள் தநூநபாத், நராசம்ஸன் இருவரையும் குறித்தவையாம். மற்றவை தநூநபாத்தையேகுறித்தவையாம்."—நிருக்தம். இச்சூக்தம் இடை வகுப்பைச் சேர்ந்ததால் தநூநபாத் நாராசம்ஸன் இருவரையுங் குறித்தது.

1. சீர்பெற வளர்த்திடுமெரி, தேவரைச் சுருக்கு
நேர் பெற வெடுப் பவனுக்காத் தருக வித்தினத்துப்;
பேர் பெறும் பழந்தந்துவைப் பிறங்கு வித்திடுக,
வேர் பெறமதுப் பிழிந்தளி தாசுடற்கெனவே.

(இ-ள்.) நன்றாக மூட்டப்பட்டு வளர்க்கப் பெறுவதால் ஸுஸமித் தன் என்னும் பெயரோடு விளங்கு மக்கினியே! இந்நாளில் நெய்த்துடுப் பைத் தூக்கி யாகஞ் செய்பவனுக்காகத் தேவர்களைக் கூட்டிக் கொண்டுவரு வாயாக. சோமம் பிழிந்தளிக்குந் தாசுஷனுக்காகக் கீர்த்தி பொருந்திய பழை யநூலை விஸ்தரிப்பாயாக—(எ-று.) சுருக்கு, நெய்த்துடுப்பு. தாசுடன், த சுஷன், அவியளிக்கும் யஜமானன். தந்து, நூல், யக்ஞம் என்பார் ஸாயணர்.

2. விப்பிர, னுனைப்புகழ்பவ, னென்னன, னவியை
யொப் பிலாததா யுதவுவோன் புரிமகத் தனைந்து
செப்பு நெய்யொடு சோமமுஞ் சேர்த்தொழு கவியை
யிப்புவியினிற் றநூநபாத் தேற் றமர்குவையே.

(இ-ள்.) தநூநபாத் தென்னும் அக்கினியே! மேதாவியும் உன் னைப் புகழ்பவனும், என்போன்றவனும், அவி யளிப்பவனுமாகிய தாசுஷன் செய்யும் யாகத்தினிடத்து வந்து, நெய்யையும், ஸோமத்தையும் ஊற்றி, ம துரப் படுத்திய அவிப்பொருளை யேற்று யாக முடியுங்காறும் அங்கே அமர் திருய்—(எ-து.) தநூநபாத் மண். 1 சூக். 13 செய் 2 நோக்குக. மேல் காத் தாக்யர் மதப்படி தநூநபாத் என்பது யக்ஞ மெனப்பொருள் படுவதெப்படி யெனிற் சொல்லுவர். தந்வ:! காவ:, பசுக்கள்: போக்யத்திற்காக அவற்றி னின்றும் கிடைப்பது பால்: பாலிலிருந்து நெய்வருவதால் தநு நெய்யா யிற்று, அதிலிருந்து தோன்றியது யாக மாதலின் தநூநபாத் யாகத்தைக் குறிக்கு மென்றூர். அக்கினி பட்சமாகக் கூறும்போது, 'ஆபஸ்தந்வ உச் யந்தே' என்றவாக்கியப் பிரகாரம் தந்வ: நீர் (அந்நீரி னுதவியால் ஒஷதியும் வனஸ்பதியும் உண்டாகின்றன.) இவ்வனஸ்பதியாகியமரமே அரணிக் கட் டைகளுக்கு உபயோகப்படுகிறது. அவ்வரணிகளினின்றுந் தோன்றியது

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

அக்கினி, அதனுற் றநூநபாத்தக்கினி யாஞன்.இதையே தன்னுடலினிற்று னேயுதித்தவன்;என்ருர்முன்13வதுருக்தச்செய்யுளில்.அதற்குமேனுட்டாசிரியர் ஓரக்கினியைக் கொண்டு மற்ரேரக்கினி மூட்டாமலே மேகமின்னலிற் போலவும் அரணிகடைவதிற் போலவும் தானே யுண்டாவதால் அப்பெயர் வந்ததென்று கூறி ஸாயண பாஷ்யத்திற் கூறப்படும் இச்சப்தோற்பத்தி மஃனுலவுலிபமானதென்பர்.

3. அற்புதன், சுடர்ப்பிழம்பினன், பாவகன், தேவர்
சொறபெரு பொளிக்கடவுள, னராசம்ஸன், விண்ணின்
றற்புடன் மகத்தணேபவன், வணங்கிடத்தக்கான்,
விற்பெற மகம் மதுவினுன் மும்முறை தெளிப்பான்.

(இ-ள்.) ஆச்சிரியபூதனும், சோதிஸ்வரூபனும், (பொருள்களைப்) பரிசுத்தஞ் செய்பவனும், தேவர்களுக்கு மத்தியிற் சிறந்த தேவனும், நரர்களாற்றுதிக்கப் படுபவனும், விண்ணுலகத்தினின்றும் யக்ஞத்தின்கண் வந்தடைபவனும், யக்ஞத்தில் வணங்கத்தக்கவனும், ஆன அக்கினி யக்ஞமானது ஒளிபெறுமாறு மாதுர்யமான ரஸத்தினுல் அதன்மேல் மூன்று முறை தெளிப்பான்—(எ-று.) தேவர்களும் புகழும் சோதிக் கடவுளெனினும், தேவர்களுக்கு மத்தியிற் சிறந்த தேவனெனினும் ஒக்கும்.காத்தாக்கிய மதப்படி இந்தநராசம்ஸனென்ற பதமும் யக்ஞத்தையே குறிக்குமாயின் தேவசப்தத்திக்கு யக்ஞாபிமானிதேவன் அல்லது விண்ணுலகத்தினின்று கொண்டு வந்து அநுஷ்டிக்கப் படுபவன் எனப்பொருள் கொள்ளுக; மூன்று முறை வருவான்என்க; ஏனயவை முன்போலவே கொள்ளத்தக்கதென்பார் ஸாயணர்.

4. துதித் தழைப்புறு மங்கியிம் மகத்தி லிந்திரனைக்
கதித்தவன்பலைப் பன்னிறங் காணு று மவனைத்
திதித்த சிக்குவ, சேர்த்திடல்; மதியினுற் புகழுற்
றுதித்த வென்மறை யின்னது புகழ்ந்த துன்றனேயே.

(இ-ள்.) துதித்தழைக்கப்படும் அக்கினியே! அல்லது 'இண் 'என்னும் பெயரை யுடைய அக்கினியே! தித்திப்பான நாக்கோடு கூடியவனே! இம்மகத்தினிடத்து, இந்திரனே, அவிப்பிரியனே, பலநிறத்தோடு கூடியவனே, (இம்மூன்றும் இந்திரனையே குறித்தன,)க்கொண்டுவருவாயாக. எனது புத்தியினுற் கூறப்பட்ட இம்மந்திரம் உன்னையே புகழ்ந்து கூறிற்று—(எ-று.) திதித்த, தித்தித்த வென்பதன் இடைக்குறை, நெய் ஸோமம் முதலியவற்றை யுண்டு தித்தித்த வென்க.இனிஇளா என்பதற்குப் புரோடாசமென்ற பொருளுமுண்டு அற்றேல் இட்அபிமானி யக்ஞ தேவதையையென்று விளித்துப் பொருட் படுத்திக் கொள்வது மொன்று. யக்ஞ அங்கங்களாலும் யக்ஞ ஸம்பந்த தேவதைகளாலும் யக்ஞமே சொல்லப்படுவதால் எல்லாவற்றையும் யக்ஞ பரமாகவே வியாக்கியானஞ் செய்துகொள்ளத்தக்கது என்பார் ஸாயணர்.

5. சுருக்கையேந்துவோர் தருப்பையைப் பரப்புவோ ரொழுங்கி
னிருத்தி யாற்றுமிவ் வெங்கிப மதனி லுத்தமமா

## மண்டலம். 1. சூக்தம். 142.

யருத்தியோடுபஃ றேவருமணைவதாச் சுகத்தை
விருத்தி செய்யுமி லிந்திரற் கெனவிரித்தனரே.

(இ-ள்.) நெய்த்துடுப்பை யேந்துபவர்களும் தருப்பையை விரிப்பவர்களுமான ரித்விஜர்கள், யாக விதிகளின் படி ஒழுங்காக நடத்தும் இவ்யாகத்தில், உத்தமமானதும் பலதேவர்களும் வரத்தக்கதும், சுகத்தை விருத்தி செய்வதும், விசாலமானதுமான வீட்டை இந்திரனுக்காகச் சம்பாதித்தார்கள்—(எ-று.) இல், இல்லம் இரண்டன் றொகை.

6. வாயிற் றேவிமார் மகத்தினை வளர்ப்பவர் மகிமை
யாயி னோங்கியோர் பாவக ராதரத்தோடு
மேய வெண்ணிலர் விரும்புசி ரடைந்தவர் மிகவுஞ்
சேயராமவர் தேவரைத் தரவிரிந்துறலே.

(இ-ள்.) யாகத்தைத் வளர்ப்பவரும், மகத்துவ மோங்கினவரும், அல்லது பூஜிக்கத்தக்கவரும், வஸ்துக்களைப் பரிசுத்தஞ் செய்பவரும், ஆசையோடெவரும் பலரும் விரும்பும் பெருமை வாய்ந்தவரும், ஒருவர்க் கொருவர் தூரமாக வுள்ளவருமான தேவிர் துவாரங்கள் அல்லது வாயிற்றேவதைகள் நன்றாக விரிந்து நிற்கட்டும்—(எ-று.)

வருக்கம். 10.

7. கட்கினியரா முருவினர்துதி பொருந்தியவர்
இட்டமாகவே யிணைந்தவர் மகத்தினைச் சேர்க்கு
மிட்டமார்ந்த பேர்வலியிவை தாயரா மிரவு
மொட்டிநின்ற நல்வைகறுங் குசையமர்ந்துறலே.

(இ-ள்.) கண்ணுக்கினிய ரூபத்தோடு கூடியவர்களும், ஸ்துதிக்கப்படுபவர்களும், ஒழுங்காக ஒருவர்க் கொருவர் அருகுறச் சேர்ந்தவர்களும் மகிமை சிறந்த யாகத் தாயர்களும், ஆன இரவும், விடியலும் (பகலும் என்றபடி) இந்த பரப்பியுள்ள தர்ப்பையில் அமரட்டும்—(எ-று.) இரவும் பகலுமென்றது அவ்வபிமானி தேவதைகளைக் குறித்து நின்றது. அதிராத்ரம் முதலிய யாகங்கள் பகலிரவு இரண்டு காலங்களிலும் நடைபெறுபவையாதலின் இரண்டு தேவதைகளையு முடன் கூறினரென்பர்.

8. மதமளித்திடு நாக்கினர் மகர் தொழில் புரிவோர்
பதம்பலிக்கு நற்கவிக ளொக்கியமமை தேவ
விதம்பெறு மிருதாதர்கள் பலித மார்ந்திந்நா
ளிதம்பெற வினைத்தடவு மெம்மகமிதை வகிக்கல்.

(இ-ள்.) ஸந்தோஷத்தை யூட்டும் நாக்கோடு கூடியவர்களும், ஸ்துதி செய்யும் யாகவான்களது தொழிலைச் செய்பவர்களும், சொற் பலிதமுள்ள கவிகளும், யக்ஞ தீக்ஷாதகர்களுமான இரண்டு தேவ ஹோதாக்கள், பலனைத் தந்து, (நன்னிடத்துள்ள அவியை விண்ணிலுள்ள தேவர்களிடத்துச் சேர்ப்பதால்) வானைத் தொடும் எமது இந்த யாகத்தை இன்று நிர்வகிக்கட்டும்—(எ-று.) இத்தேவ ஹோதாக்கள், அக்கினியும் ஆதித்தியனும் அல்லது

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

அக்கினியும் வருணனும், அல்லது வருணனும் ஆதித்தியனும் என்னும்மூன் றிணைத்தேவர்களில் ஒருவராவா ரென்று ஷட்குரு சிஷ்யர் சொல்லுவ ரென்பது மேலே சொல்லப் பட்டது.

9. தூயள், தேவர்த மத்தியின் மருத்துக்கணடுவின்
மேய வோத்திரி பாரதி, யிளைமகி, நீரிற்
றோயும் வாக்கின,ளிவர் மகக்குரியராய்த் தோய்ந்தே
யேயு நற்குசை மீதிவட் டோய்க தமருகவே.

(இ-ள்.) பரிசுத்த மானவளும், மரணதர்ம மற்ற தேவர்களுக்கு மத்தியிலும் மரணதர்மத்தோடுகூடிய ரித்விஜர்களுக்கு மத்தியிலும் பொருந்திய ஹோமங் கூட்டுபவளுமான பாரதியும், இளையென்னும் பெரியவளும், நீரில் வசிக்கும் வாக்குத்தேவதையானஸரஸ்வதியும், ஆகியவிம்மூவரும் யக்ஞார்ஹர்களாய் இங்கு பரப்பப்பெற்றுள்ள தருப்பையின் மீது அமரட்டும் —(எ-று.) பரதன், சூரியன் அவனையிடமாகக் கொண்டவள் பாரதி யென்றும், இளை புரோடாசம் அல்லது பூமியில் விளையும் உணவுப் பொருள் அதனையிடமாகக் கொண்ட பெரியவள் இளையெனும் தேவி யென்றும், ஸரஸ் நீர் அதனையிடமாகக் கொண்டவள் ஸரஸ்வதி யென்றும்கூறிவிண்,பூமி, நீர் அல்லது அந்தர மென்னும் மூன்றிடத்து முள்ள தேவிகள் மூவரையும் விளித்தபடி யென்பார் ஸாயணர். மருத்துக்க ணடுவில் என்பதற்கு மருத்துக்களுக்கு மத்தியி லென்றே பொருள் கூறுவர் மேனுட்டாசிரியர். ஆனுர் மரணமற்ற தேவர்களுக்கு விபரீதமாக மரணமுள்ள ரித்விக்குக்களைக் குறிக்கு மென்பார் ஸாயணர். ஓத்திரி, ஹோத்திரி, ஓமங் கூட்டுபவள்.

10. வேகமார்ந்த, தற்புதத்தது, மிகுதியிற் செறிந்த,
தேகமாய்ப் பலவுயிர்நிலை யானதா மறலைத்
தாகமா யெமதுளம் விரும் பிறைவனுந் துவட்டா
போக மோங்கப் பொன் பெருக வெந்நாபிக்கா வனுப்பல்.

(இ-ள்.) வேகத்தோடு கூடியதும், அற்புத சக்தி வாய்ந்ததும், மிகவும் நிறைந்ததும், பல உயிர்களுக்கு நிலயம் போன்றதுமான தண்ணீரை யாங்கள் மிகவும் விரும்பும் மழைக் கர்த்தாவாகிய துவஷ்டாத்தேவன், எங்களுக்குப் போகம் விருத்தியாகவும், எங்களது செல்வம் பெருகவும், எமது யக்ஞத்தை யுத்தேசித் தனுப்பட்டும்—(எ-று.). நாபி, யக்ஞம். மண். 1 சூக். 139 செய். 1 பார்க்க. மேனுட்டாசிரியர், 'எங்களது பந்துவும். எங்களது நண்பனுமாகிய துவஷ்டா அபிவிருத்திக்காகவும், செல்வப்பெருக்கிற்காகவும, உயிர்க்காதாரமானதும் பூரணமாயுள்ளதும், அற்புதமானதும். தானங்களிற் சிறந்ததுமான பனிநீரை யனுப்பட்டும்;' எனமொழி பெயர்ப்பார். செய்யுளிற் பொன் பெருக வெனக் கூறினும் பொதுவாகக் கொண்டு பசுவாதி செல்வாபிவிருத்திக்காக வெனப் பொருள் கொள்ளுக.

11. வனப்பதி யுனதுளப் படித் திரிந்தி யாகத்தே
மனத்திற் றேவரை யழைத் தருதிருத்தி யேத்திடுக;
கனத்த பேரொளி மேதையாமங்கி யெம் மவியைத்
தினந்து மேனைய தேவர்க்கா வேற்பனுஞ் சிறந்தே.

## மண்டலம் 1 சூக்தம் 143.

(இ-ள்.) வனஸ்பதியே! உன்இச்சையின்பிரகாரந் திரிந்து யாகத்தினிடத்துத் தேவர்களை வரவழைத்து வணங்குவாயாக. மிகுந்த ஒளிபொருந்திய தேவனும் மேதாவியுமாகிய அக்கினி எங்களது அவியுணவுகளைத் தனக்காகவும் இதரதேவர்களுக்காகவும் சிறப்பி னேற்றுக் கொள்ளுகிறான்-(எ-று.) தேவ சப்தத்திற்கு ஒளியுள்ளவ னென்பது பொருளானது பற்றிப் பேரொளி மேதை யென்றார்.

12. பூடனோடு மாருதரிணைந் தொழு கெலாத் தேவ
ரீடினோடு செல்வாயு காயித்திரி யுருவம்
பீடினோடடை யிந்திரனிவர் பொருட்டவியை
நீடுசீர் மறை சொலி வழங்குவர் சுவாகாவின்.

(இ-ள்.) பூஷனோடும் மருத்துக் கூட்டங்களோடுஞ் சேர்ந்த விச்வ தேவர்கள் பொருட்டும், வேகமாகச் செல்லும் வாயு தேவனின் பொருட்டும் காயத்திரி முதலிய சந்தங்களே யுருவமாகவுடைய இந்திரன் பொருட்டும் அவியுணவுகளை, ஸ்வாஹா என்ற ஈறு கூடிய மந்திரங்களைக் கூறி ரித்விக்குக்கள் தருவார்கள்—(எ-று.) காயத்திரி சொல்லப்பட்டதனால் இதரப் பங்க்தியாதியுமின்றாற் கொள்ளுக வென்பார் ஸாயணர்.

13. இந்திரவிவண் 'சுவாக' வென்றுரைத் தளியவியை
யந்தி லேற்றவை யுண்டிட வணுகுவாய்; அழைப்பை
முந்துநின் செவிக் கொள்ளுக வுன்னை யத்துவரத்
தந்தமாகவே யழைத்தனர் துதி நினைத் துறலே.

(இ-ள்) இந்திரனே! ஸ்வாஹா வென்ற ஈற்றோடு கூடிய மந்திரங்களைச் சொல்லி யிங்கு தரும் அவிப்பொருள்களை யேற்று அவற்றைப்புசிப்பதற்கு வருவாயாக. உன்னை யழைப்பதைக் கேட்டு, அத்வரத்தில் (யாகத்தி லென்றபடி) உன்னைக் கூவுவோரது ஸ்துதிகளை யெண்ணி வருவாயாக—(எ-று.)

### வருக்கம். 11.

## 143 மண்டலம். 1. அநுவாகம். 8. சூக்தம். 4.

8 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: ஜகதி, 8 தருஷ்டுப்; தேவதை: அக்கினி.

1. மதுகைதரும் புத்திரனு மக்கினிக்குச்
சலந்தோன்றி வளரன் னுக்
கதிகவிலை பெறும் பொருளைப் பருவமதி
லணிவித்தே யவனி மீது
துதிசிறந்த வோதாவா யன்பினிலைப்
பவனுக்குத் துதிசார் சொல்லைப்
பு யதுவா யாக்கதிறை மறையோடு
மெடுத்திடுவேன் பொருந்தவின்றே.

## அஷ்டகம் 2. அத்தியாயம் 2.

(இ-ள்.) பலத்தின் புத்திரனும், ஜலத்திற் றோன்றி வளர்பவனும், பருவகாலங்களில விலையுயர்ந்த பொருள்களைப் பூமியின்கட் கூட்டி, யஜமானனிடத்துள்ள அன்பின் நிலைத்துப் பெருமைபொருந்திய ஹோம நிஷ்பாதகனுயுள்ளவனுமான அக்கினிக்கு ஸ்துதி ரூபமான வசனங்களையும், நூதனமானதும் செல்வத்தை வளர்ப்பதிற் சிறந்ததுமான மந்திரத்தையுங் கூறுவேன்—(எ-று.) அரணிகடையத் தோன்றுவதால் மதுகைதரும் புத்திரனென்றார் ஜலத்திலிருந்து ஒஷதிகளும், ஒஷதிகளினின்றும் வனஸ்பதியும் வனஸ்பதியாகிய அரணிகளினின்று அக்கினியும் தோன்றுவதால் அக்கினியை ஜலத்திற் றோன்றியவனென்றார். அல்லது நீர் பொதிந்த மேகத்திற் றோன்றும்மின்னலாகிய வக்கினியென்பதும் ஒன்று.

2, தோன்றியது மக்கினியா மவன்பரம
வியோமத்திற் சொரூபந்தன்னை
யான்றகதி மாதரிச்சு வானெதிரிற்
றோற்றுவித்தான்; அவனே மொய்ம்பி
னேன்ற கருமத்தினன் மூட்டப்பெற்
றொளிர்போதங் கியையுஞ் சோதி,
தோன்றுபுவி வானங்களி ரண்டினையு
மொளிர்விக்குந், தூய்மை கொண்டே.

(இ-ள்.) அக்கினியாகிய வவன் உற்பவித்ததும் பரமாகாசத்தில் தனது ஸ்வரூபத்தை மாதரிச்வானுக்கெதிரிற் றோற்றுவித்தான், அக்கினியே பலமியைந்த கருமங்களால் மூட்டப்பட்டு விளங்கியபோது அவனது சோதி, பூமிவானங்களிரண்டினையும் பரிசுத்தமாக விளக்கிக்கொண்டொளிர்ந்தது—(எ-று.) மாதரிச்வான். வாயு (1-141-3) இவ்வக்கினி மாதரிச்வானுக்கு முன்புதித்தவனென்பதை மண். 1 சூக் 31 செய். 3ற் பார்க்க. அங்கே, ‘அக்கினி நீ மாதரிச்சுவானனுக்கு முதலாவாய்’ என்று கூறப்பட்டுள்ளது.

3, அவன் சுடர்க ளோய்தலில; யணிமுகங்கொ
ளவன்கிரண மழகாய்த் தோன்றிக்
கவனமுட னெத்திசையு மொளிர் விக்கும்;
வெளிச்சமதே கதித்தமைந்தா
யிவனூறு மவ்வங்கியொளி நீரோட்ட
மெனவிசி யிரவெல்லாமும்
புவனமதிற் சரையடையா தசதியுரு
திருளோட்டிப் பொருந்து மாலோ.

(இ-ள்.) அவ்வக்கினியின் சுவாலைகள் ஒய்வடைவதில்லை. அழகிய முகத்தோடு கூடிய அவனது கிரணங்கள் பார்வைக்கழகாகக் காணப்படுவதுடன் எல்லாப்பக்கங்களிலும் ஒளியைவீசும். வெளிச்சமே தனது பலமாகக்கொண்ட அவ்வக்கினியின் பிரகாசம், நீரோட்டங்கள் வேகமாகச்செல்வதுபோலச் சென்று, கிழத்தன்மையை யடையாது மறதியுமில்லாது இரவு முழுவதும் இருட்டையோட்டி யமையும்—(எ-று)

4. எத்தனமும் பெற்றவனைப் புவியினது
நாபிக்க ணிர்த்தப் பூமி
சத்துவபார்க் தொழுகவெனப் பிருகுக்கள்
நிலைப்பிக்க தழலை, யேக
வுத்திமிகப் படைத்தோனை, வருணனைப்போன்
நிறைமையினையுட் கொண்டானைப்
பத்திகொடு கீதங்கள் பாடியவ
னுறையுளினிற் பரிக்து கூட்டல்.

(இ-ள்.) விசுவவேதஸனும், பிருதவி (ஈண்டு வேதி பூமியென்க.) யினது நாபிஸ்தானமாகிய உத்தர வேதிக்கண்ணே புவனத்திலுள்ள பூதஜாதங்கள் பலத்தை யடைவதற்காகப் பிருகுக்களால் இழுத்துக்கொண்டுவந்து நிறுத்தப்பெற்ற வக்கினியும், செல்வம் மிகுதியாகப் படைத்த வேகனும், வருணனைப்போலத் தலைமை (அரசரிமை)யை வகித்தவனுமான அக்கடவுளைக் கீதங்கள்பாடி யவனது கிரகத்திற் கொண்டுவந்து சேர்ப்பீர்களாக—(எ-று.) விசுவ வேதஸன், எல்லாத்தனங்களையும் பெற்றவன். உத்தி, செல்வம். வருணன்; தமோநிவாரகன் ஆதித்தியனென்பார் ஸாயணர்.

5. மருத்துவர்கள் முழக்கமெனத் தடுக்கரிய
வெறிபடையின், வானத் தோன்றி
யுருத்துவிழு மிடியெனவே தாங்கரிய
வக்கினிதன் ஒளிவாய் கூர்ம்பற்
பொருந்தி,யிவட் சூரவெதிர்த் திடுபகையை
யுண்ணுதலிற, பொருந்தார் தம்மை
வருத்தி வனந்தனை யெல்லாக் காலமது
முண்டொழித்து வளருமன்றே,

(இ-ள்) மருத்துக்களுடைய பொறுத்தற்கரிய சப்தத்தைப்போலவும், தடுக்கமுடியாத அஸ்திரத்தைப்போலவும், விண்ணிற்றோன்றிக்கோபத்தோடு விழும் இடியைப்போலவும் தாங்குதற்கரியனுகிய அவ்வக்கினி, தன் ஒளிபொருந்திய சுவாலைகளாகிய கூரியபல்லால், இவ்வுலகத்துச் சூரன் தன்னை யெதிர்க்கும் பகைவர்களை யழிப்பதுபோல (எங்களது) சத்துருக்களையிம்சித்து, எல்லாக்காலத்திலும் காட்டிலுள்ள மரங்களை யுண்டொழித்து வளருவான்—(எ-று.)

6. அங்கியெம துசதனது தோத்திரத்தைப்
பலிதத்து மடைய வெண்ணல்;
தங்குறு நற்றனங்கள்கொடவ் வசுக்கடவு
ளெம்மருத்தி சார்த்தல் முற்றும்;
அங்கமுறச் சோதிப்போ னெம்மறிவைத்
தீவிரமா யமைக்க னன்கே;
தங்கமுறு முகத்தவனை யிவ்வெனது
புகழ்க்கவி யாற்றுதிப் பேனன்றே.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

(இ-ள்.) அக்கினி யெங்கள் குலத்தலைவனாகிய உசத்தியனது ஸ்தோத்திரங்களைப் பலவழியாகவு மடைவதற்காகமனம்பொருந்தட்டும். அவ்வசுக்கடவுளாகிய அக்கினி, தன்னிடத்துப் பொருந்தியுள்ள செல்வங்களை யளித்து எங்களது ஆசைகளை முழுவதும் நிறைவேற்றட்டும். எங்களதுகர்மங்களைப் பரிசோதிப்பவனாகிய அவன் எமது புத்தியை(புத்தி பூர்வமான ஸ்தோத்திராதி கர்மங்களை யென்றபடி.) நன்காகத் தீவிரபக்குவத்திலமைக்கட்டும். பரிசுத்த ஜ்வாலைகளாகிய முகத்தோடு கூடிய அவ்வக்கினியை இந்த எனது கீர்த்தனங்களால் துதிக்கிறேன்—(எ-று.) உ(ச்)ச(த்) தஸ்ய என்பதற்கு உக்தஸ்ய என்றும் ஏதந்நாமகஸ்ய மஹர்ஷே:கோத்திரப்பிரபவஸ்ய என்றும் ஸாயணர் உரை கூறுவதால் உசத்தியனது உக்தங்களை அல்லது ஸ்தோத்திர வசனங்களை என்றுமொழி பெயர்த்தார். இச்சூக்தத்தைக்கண்ட தீர்க்கதமஸன் உசத்தியகோத்திரத்தானவன். செய்யுளில் உசதன் என்றார்.

7. எரிவளர்ப் போனன்ப னெனவடைவனிமு
தூற்றவெழு மிவனை, எங்கள்
கருமதை நிருவகிக்கு மக்கினியைச்;
சுவாலைகொடு காட்டங் கவ்வும்
பெரியவன், முட்டப்பெற்றெங் கூட்டமதி
லொளிவீசும் பெட்போன் யாஞ்சொ
லரியதுதிகமை யுயர வெண்சுடரி
னெடுத் துய்ப்பா னழகினின்றே.

(இ-ள்.) அக்கினியை வளர்க்கும் யஜமானன், நெய்யூற்றுவதனால் விருத்தியடைபவனும், எங்கள் ரிதங்களை அல்லது யாககருமங்களை நிறைவேற்றுபவனுமான அக்கினியைச் சிநேகனாகப் பெறுவான். தனது சுவாலையினால் ஸமித்துக்களைக் கவ்விக்கொள்பவனும், முட்டப்பெற்று எங்கள் யாகக் கூட்டத்திலொளி வீசுபவனுமானவவன், வெள்ளியவொளியோடு கூடி யெங்களது துதிகளை அழகாக வுயர்த்துவான்—(எ-று) வெண்சுடரின் நிர்மலமான ஜோதிஷ்டோமாதி கர்மங்களோடு கூடியவனையென்றும் பொருள்கூறுவார் ஸாயணர்.

(வேறு.)

8. அங்கி, யெங்களை நிகாக்க வலியின் மங்கலச் சுகங்க
டங்குற வசட்டை யின்றிச் சதாவுறுங் காவல் கொண்டே;
எங்களைக் காலக்காக்க, இட்டனே, நிமிடமேனு
மங்குறு மோச நாச மருவுறாத் துணைக ளோடே.

(இ-ள்.) அக்கினியே! அழகாக மங்கலகாமான சுகங்கள் நிறைந்தவையும், அசட்டையில்லாமல் எப்பொழுது முறுபவையுமான காவல்களோடு எங்களை இரட்சிப்பாயாக. எல்லாராலும் விரும்பப்படுபவனே! ஒருநிமிஷமேனும் ஓயாமலும், குறையாமலும், மோசநாசங்களை யடையாமலுமுள்ள துணைகளால் எங்களையும் எங்களுடைய புத்திரபௌத்திராதி சந்ததிகளையும் காப்பாயாக—(எ-று.)

### வருக்கம் 12.

## மண்டலம் 1 சூக்தம் 144.

## 144 மண்டலம் 1. அநுவாகம் 21 சூக்தம் 5.

### 7 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: டீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: ஜகதி; தேவதை: அக்கினி

1. மேனோக்கி யெழுங்காந்தி யுருவத்தோ
டணைமறையை மிகவுந்தூக்கித்
தானுற்று மவன்கன்ம முறைமிகவு
முணர்ந்தோதா சார்வ னன்கே;
யானச்சீர் கொடுவலத்தே திரிந்துமுத
லவனு றையு மவ்விடத்தே
தானுற்று முத்தமதாற்றமுவு சுருக்
கதை யெடுத்துத் தயங்குவானே

(இ-ள்.) மேல்நோக்கி யெழுகின்ற சோபன வுருவத்தோடு கூடிய மந்திரத்தைத்தாங்கி யல்லது உரக்கக்கூறித்தான் செய்யும் அக்கினிகர்மங்களின் கிரமத்தை நன்றாக வுணர்ந்து அம்மகத்தினிடத்து ஹோதா பொருந்துவான். கெடாத பெருமையோடு பிரதட்சிணமாகவந்து முதன்முதல் அவ்வக்கினிதங்குகின்ற அவ்விடத்தில் முத்தமிட்டுத்தொடுன்ற சுருக்கைக் கையிலெடுத்து விளக்குவான்—(எ-று.) ஆனச்சீர் என்பது எதுகைநோக்கிச் சேர்த்தது.

2. ஒளித்தேவன் பிறப்பிடத்தி லில்லமதிற்
கதிர்வளைய வோங்கி யித்தி
விளித்தேத்தும் ரிதத்தாரை; தண்ணீரின்
மடியதனில் விரிந்து வாழ்ந்து
களிப்போடு மயர்பொழுதிற் பல்லோருந்
துதித்தேத்துங் கடவுட்டன்மை
யொளிக்காதுமிக வொழுகுஞ் சிறப்பாருஞ்
சத்தியினை யுவந்தேற்றனனே.

(இ-ள்.) ஒளித்தேவனாகிய சூரியனது பிறப்பிடத்திலும், சதனத்திலும் தங்களது கிரணங்கள் சூழவோங்கி, ரிதத்தாரைகள் இவ்வக்கினியைக் கூவித்துதிக்கும். தண்ணீரினது மடியிற் பரந்துதங்கியிருக்குமக்காலத்தில் எல்லாரும் புகழ்ந்து கூறுகின்ற அத்தெய்வத்தன்மை வாய்ந்த சக்திகளை அம்மின்னல் ரூபமான அக்கினியேற்றான்—(எ-று)

3. சமவயதோர் சமப்பலனை யடைகுவான்
றனித்தனியே தத்தங் கன்மத்
தமரவென விருவர்களு மோங்கிவளர்
காலமதில வன்றன் றேகந்
தமையடையச் சேர்த்திடுவார்; பின்னரவன்
பகனெனயாந் தழுவிப் போற்றற்
கமைபவனும், வார்பிடிக்குஞ் சாரதியின்
மகமென்று மாற்று வானே.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

(இ-ள்.) ஸமானமான வயதுள்ளவர்க (வயது ஈண்டு சாமர்த்தியத்தை யுணர்த்த நின்றதென்பார் ஸாயணர்.) ளாகிய ஹோதா அத்வர்யு என்னுமிருவர்களும் ஸமானமானபலனையடையுமாறு தனித்தனியாகத்தங்களது கர்மங்களிற்றங்கவேண்டுமென்று அவ்வக்கினி வளர்ந்துள்ளகாலத்தில் அவனது அழகிய சரீரத்தைத் தங்கள் தங்களோடு சேர்த்துக்கொள்ளுவர். பிறகு அவன் எல்லாராலும் வணங்கப்படும் பகனையல்லது சூரியனைப் போலவணங்கத்தக்கவனும். தேரையோட்டும் ஸாரதி குதிரைகளைக் கடிவாளத்தை யிழுத்துப் பிடித்து நடத்துவதுபோல இவ்வக்கினி எக்காலத்தும் யாக கார்யங்களை நன்றாக நிர்வகித்து நடத்துவான்—(எ-று.) இருவர் ஹோதா அத்வர்யு இருவரென்பார் ஸாயணர். பகலும் இரவுமாயிருக்கலாமென்று (Ludwig) லுட்விக் சொல்வதை மேனாட்டாசிரியர் ஒத்துக்கூறுவர்.

4. ஓரிடத்தே யுறைவோர்கள், மிதுனமெனு
மிருவர் சமவயதை யுற்றோர்
பாரிடத்தே பகலினிற்போ லிரவினிலு
மோங்குவிக்கும் பலிதன், மாந்தர்
நேரிடத்து வாலிபனுய்ச் சனித்திருவர்
மிகவளிக்கு நெய்யையுண்டு
தாரிடத்தே கிழத்தன்மை சாருவாமல்
மிகவளர்ந்து சார்கின்றானே.

(இ-ள்.) ஒருவீட்டில் சேர்ந்து தங்கியிருப்பவர்களும், ஜாயாபதிகளைப் போன்றவரும், ஸமான வயதோடு கூடியவர்களுமான ஹோதா அத்வர்யுக்கள் இருவரும்பகலில் வளர்ப்பதுபோலவே இரவிலும் வளர்ப்பதும் (காரூபமாயிருந்தபோது) கிழத்தன்மையை அல்லது ஜீரணத்தை யடைந்திருந்தருமான அக்கினி, மனிதர்கள் தன்னை எதிரும்போது தருணனுய்ப்பிறந்து இவ் வோதா அத்வர்யுக்கள் தரும் நெய்யை சாப்பிட்டுக்கிழத்தன்மையை யடையாமலேவளர்கிறான்—(எ-று.) மிதுனம், இரட்டை, ஸ்திரீ புருஷர்கள் என்றபடி. பாரிடத்தே, தாரிடத்தே எதுகை நோக்கிச் சேர்க்கப்பட்டன. வடமொழி மூலத்திவில்லை. பலிதன் நரைமயிருள்ளவன், கிழவன். மேனாட்டாசிரியர் 'மனிதரது பலவித யுகங்களிலும் கிழத்தன்மையே யடையாமல், இப் பலி தன் தோன்றினன்.' என உரைகூறுவார். யுகா யுக்மமென்னுது காலவரையறையெனப் பொருள் கொள்ளுவர்.

5. பிரிந்தமைந்த விரல்பத்து மொளிகாலு
மிவ்வெரியைப் பிறக்காநின்ற;
இரிந்தொழியு மர்த்தியர்பா மெமக்குதவி
புரிகெனவித் தேவன் றன்னை
வருந்தியழைப்போம்; அவனுந்தனுவின்மீ
தோடுகதிர் விரிப்பான் வல்லே;
பொருந்தி யவன்றன்னச் சூழ்வோ ரோடு புதிய
கருமங்கள் புரிந்திட்டானே.

## மண்டல 1. சூக்தம் 144.

(இ-ள்.) ஒன்றோடொன்று பிரிந்துள்ள பத்து விரல்களும் ஒளியை வீசும் அவ்வக்கினியை மதனஞ் செய்து பிறங்க விட்டன. மரணதர்மத்தோடு கூடிய யஜமானர்களாகிய யாங்கள் இத்தேவனை யெங்களுக்கு உதவி புரியுமாறு வேண்டியழைப்போம். அவ்வக்கினியும் தனது நிஜசரீரத்தின் மேல் விரிந்தோடும் கிரணங்களைக் கொண்டு நவதரமான அநுஷ்டான விஷயங்களை யேற்படுத்தினன்—(எ-று.) தநு அல்லது வில்லிலிருந்து ஓடும் அம்பைப்போலத் தனது நிஜசரீரத்திலிருந்து கிரணம் ஓடுமாறு செய்வான் என்பார் ஸாயணர். ஆனால் பூமியின் சரிவான மேற்பரப்பில் அவன் வேகமாகச் செல்கிறான் என்பார்மேனாட்டாசிரியர். இவரே பரஸ்பர விச்லிஷ்டமான விரல்கள் பத்துமென்னாது, பக்தியே வுருக்கொண்ட விரல்கள் பத்துமென்பார்.

6. அக்கினியே, வானுறையு மவற்றையெலா
மாளுகிறாய், ஆர்ந்த பூமி
மிக்கவற்றையுன் பலத்தாற் கோபனென
வடக்குகிறாய்; வெண்மைச் சோதித்
தக்கபெரு மகிமையொடு மிரணியத்தைப்
படைத்திணைந்த தகைசால் வானோ
டொக்கவுறும் புவியிரண்டு முருண்டோடி
யுன் குசைசமீ தொலித்தமர்ந்த.

(இ-ள்) அக்கினியே! வானத்திலுறையு மவற்றிற் கெல்லாம் நீயாசனாகிறாய். நிறைந்த பூமியிற் செறிந்தவற்றை யெல்லாம் உனது ஸாமர்த்தியத்தினால், இடையன் கால்நடைகளை யடக்கியாளுவது போல ஆளுகிறாய். வெள்ளிய சோதியும், பெரிய மகிமையும், பொன் முதலிய சிறந்த பொருள்களும் படைத்து ஒருவர்க் கொருவர் சேர்ந்தொழுகும் வானம் பூமியிரண்டும் சப்தத்தோடு உருண்டோடி நீபரப்பிய குசையிற்றங்கின—(எ-று.)

7. அக்கினியே! யுவப்போடு மன்புறலவ்
வசனமதை யன்போ டேற்கல்;
தக்கமதஞ் சார்த்துபவ, பவியுளவ,
மகக்குதித்தோய், தயங்குங்கன்ம
மிக்கவுளோ, யெதிசைக்க ணைவைக்கு
மநுகூலன்; அணிமிகு தோற்றத்தோ
டொக்கவொழுகுநேக் காண்போ, ருண்டிநிறை
பெரியனி, னில்லுறைந்து வாழ்வார்.

(இ-ள்.) அக்கினியே! ஸந்தோஷத்தோடு இவ் வவியினிடத்துத் திருப்தியடைவாயாக. எங்களது அத்துதி வசனங்களை யன்போடுமேற்றுக் கொள்ளுவாயாக. நல்ல உற்சாகத்தை யளிப்பவனே! மிகுந்த சற்கர்மங்களோடு கூடியவனே! நீ எல்லாப்பக்கங்களிலுமுள்ள எல்லா வஸ்துக்களுக்கும் அநுகூலம் செய்பவன். அழகிய தோற்றத்தோடு ஒழுகுமுன்னைக்காணும் எல்லாப் பூதங்களும், அதிப்பிரபூதமான உண்டிச்செல்வத்தைப் படைத்தவ

ளைப்போல், தமக்கென வீடு வாசல்களைப் பெற்று வாழ்வார்கள்—(எ-று.) பிற்பகுதிக்கு மேனாட்டாசிரியர், 'எல்லாப்பக்கமுந் திரும்பிக்கொண்டு, உணவு நிறைந்த கிரகத்தைப்போற் பார்ப்பதற்கு அழகாயுமினிமையாயுமிருக்கிறாய்.' என மொழி பெயர்ப்பர்.

வருக்கம். 13.

## 145 மண்டலம். 1. அநுவாகம். 21. சூக்தம். 6.

5 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷி. தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்; ஜகதி, 5 த்ருஷ்டுப்; தேவதை: அக்கினி.

1. கேட்கவவன்றனை; வந்தான்; அவனறிவன்;
ஞான மிகக்கிளர்ந்தோ னன்னான்;
வேட்கையொடு மவனே காண்பொருணின்று
மெழுவான், வல்விரைவின் யாகம்
வேட்பவனாலழைப்புறுவான்; அவனிடத்தே
யாணையுள; விரும்பும் போகம்
மீட்பவனன்னா; னவனே வலிப்பதியாம்,
முதனா டைந்த வேந்தர்க்கீசன்.

(இ-ள்.) யஜமானர்களே! (கேட்கவேண்டிய ஸ்வர்க்காதி விஷயக் கேள்விகளை) யவன்பாற்கேட்பீர்களாக. அவனிதோவந்தான். அவனுக்கு அவ்விஷயம்தெரியும். அவனே ஞானமிகுந்தவன். அவனே காணப்படும் பொருளினின்று ஆசையோடும் வெளிவருவான். அவனையே வெகு விரைவாகவருமாறு யாககர்த்தாக்களழைப்பார்கள். அவனிடத்திலேயே நியமன ஸாமர்த்தியம் வாய்ந்த ஆக்ஞைகளுண்டு. மாந்தர் விரும்பும் போகங்களை அவனே தருவான். அவனே வலிக்கு நாயகனும். (அல்லது ஸாயணருரைப்படி அனப்பதியெனக்கொள்ளின் உணவுப்பொருள்களுக்கு நாயகனும்.) பலம் மிகுந்த ராஜாக்களுக்கும் அவனே பதி—(எ-று.)

2. அவன்றனையே கேட்கின்றார்; தீரனவன்
றன்மனத்தா லடைந்த வற்றை
யவமடையா தெல்லாருங் கேட்டறிந்து
பெறுவதிலை; யவனு முன்ன
ரவிர்தருநற் பதத்தினையும் பின்னருறு
சொல் லினையு மறவாதுள்ளத்
துவந்துமனனஞ் செய்வான்; அவனுகவி
கொண்டுலக மோங்கு மன்றே.

(இ-ள்.) அவ்வக்கினியையே அவர்கள் கேட்கிறார்கள். தீரனாகியவன் தனது மனத்தினாற் கிரகித்தடைந்த விஷயங்களைக்கெடாதபடி யெல்லாருங்கேட்டறிந்து பெறுவதில்லை. அவனும் முன்னுள்ளசொல்லையும் பின்

ளுள்ளசொல்லேயும் மறக்காமல் மனத்தில் தாரணைசெய்துகொண்டு ஒழுகு வான். அவனுடைய ரட்சணாதிகர்மங்களால் உலகமானது ஓங்கும்—(எ-று.)

3. சுருக்குமுதற் கருவியெலா மவனிடத்தே
செல்கின்ற; சொலும் போற்றுக்க
ளுருக்கமொடுமவன் வயினே; யென்வசன
மெல்லாமு மொருவனுகக்
கருத்துடனே செவிக்கொள்வான்; எவர்க்குநெறி
காட்டிடுவோன் கருதும் வெற்றி
பெருத்தவவன் மகமுடிப்போன் புரையுறுணைச்
சிசுநிமர்ந்து பெரி தேற்றானே.

(இ-ள்.) சுருக்கு முதலிய கருவிகளெல்லாம் நெய் முதலிய ஆவுதிப் பொருள்களோடு அவ்வக்னியினிடத்திலேயே செல்லுகின்றன (அதாவது அவனையே ஸேவிக்கின்றன என்றபடி.) சொல்லும் ஸ்துதிவசனங்கள் உருக் கத்தோடு அவனையே யடைகின்றன. எனது வசனங்களையெல்லாம் ஒருவ னுகவே அவன் கேட்கிறான். எல்லாரையும் நடத்துபவனும், ஜயசீலனும், யாகத்துக்குதவிசெய்து அதனை முடிப்பவனும், குற்றமற்ற துணையோடு கூடிய சிசுவுமாகிய அவ்வக்கினி இறுமாப்பையடைந்து யஜமானர்கள்தரும் அவிப்பொருள்களையெல்லா மேற்றுக்கொண்டான்—(எ-று.) சிசுவென்ப தற்குக் குழந்தையைப்போல் பிரியப்படத்தக்கவன் அல்லது சத்துருக்களைப் பரிசோதித்துப் பார்ப்பவன், என இரண்டு பொருள் கூறுவார் ஸாயணர்.

4. நெருங்கியவன் கடையும்போ துற்பவித்துப்
பலன்றருசிர் நிறைந்த ீதசோ
டொருங்கெழுந்து நகர்ந்திட்டா னப்பொழுதே;
சாந்தமனத் தொழுகும்யாக
துரந்தரனை நாந்தியொடு முதத்தோடும்
பலனியத் தொட்டு நீவும்,
விரிந்தொழுகு மவனிடத்தே விருப்பமுறு
நெய்த்தாரை விரையுங் காலே.

(இ-ள்.) அத்வர்யுவானவன் மிகவும் நெருங்கி அரணிகளைக்கடை யும்போது அவன் உற்பவித்துப் பலன்றரும் சுவாலைகளோடு கிளம்பி அப் பொழுதே பாவத்தொடங்கினான். சாந்தமனத்தோடு செல்லும் யாகவானுக் குப் பலன்றருமெண்ணத்தோடும் நாந்திக்கர்மத்தோடும் உவகையுள்ளத்தோ டும் அவனைத் தொட்டுத்தடவுவான், (உலகத்தில் குரு அநுக்கிரகார்த்தம் சிஷ்யனைத்தடவுவது போலவென்பார் ஸாயணர்.) அவ்வக்கினிவிரும்பும் நெய்த்தாரைகள், வியாபித்துச்செல்லு மவனிடத்தேபோய்விழ வேகமாகச் செல்லும்போது—(எ-று.) நாந்திக்கர்மம் பதினாறு கர்மங்களில் ஒன்று. ஸந்தோஷத்தைச் சனிப்பிக்குந்தொழில்என்பது பொருள்.

(வேறு.)

5. நீரிலும் வனத்துந் தோன்றி நிலைவுறு மவற்றைத் தூய்மை
யேருறப் பொருத்தும்; மேற்றேலிடத்தினே யியைக்கப் பெற்
றேன்;
சீருறு மறிஞ, னங்கி, திகழுமுண்மையன், ரிதத்தைத்
தேருமன்னவ னரர்க்குச் செப்பினன்கிரம முற்றும்.

(இ-ள்) தண்ணீரிலும் காட்டிலும் உற்பவித்த அங்குள்ள வற்றைப் பரிசோதித்து அழகின் நிலைப்பிப்பான். வஸ்துக்களின் மேற் பாகத்திலேயே யமைக்கப்பெற்றவன். வித்வானும் ஸத்திய ஸந்தனும் ரிதத்தை (யாகத்தை அல்லது ஒழுங்கையென்றபடி.) யறிந்தவனுமான அவ் வக்கினி, அநுஷ்டானக்கிரமங்களையெல்லாம் மர்த்தியர்களுக்குச் சொன்னான்—(எ-று.)

வருக்கம். 14.

## 146. மண்டலம் 1. அநுவாகம் 21. சூக்தம் 7.

### 5 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷி தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப்; தேவதை: அக்கினி.

1. முத்தலையுடையோன், பெற்றோர்மடியினின்முழுமையுற்றேன்,
நத்திய கிரணமேழோ, னகர்பவை நகராதற்று
முற்றியவெவற்றுமார்ந்தோன்மொய்த்தபேரொளியிற் கூடுஞ்
சுத்தவிண்ணிடத்தினெல்லாந்தோய்ந்துளவவனைப் போற்றல்.

(இ-ள்) மூன்றிடத்திலுள்ளவனும், தியாவா பிருதுகளாகிய பெற்றோரிடத்துப் பரிபூரணத்தை யடைந்தவனும், ஏழு கிரணங்களோடு கூடியவனும், நகர்ந்துசெல்லும் பிராணிகள், நகராது நிலையுற்றிருக்கும் ஸ்தாவரங்கள் இவற்றில் நிறைந்தவனும், மிகுந்த பிரகாசத்தோடு கூடிய ஆகாயத்தின் பலவிடங்களிலும் பொருந்தியவனுமாகிய அவனை ஸ்தோத்திரஞ் செய்யுங்கள்—(எ-று) முத்தலையென்றது மூவுலகு அல்லது ஆகவநீங்களாயாதி பேதத்தாற்றேன்று மூன்றிடமாம். ஏழுகதிர், காலி கராலி முதலியவை.

2. பலனளி மகானிப் பெற்றோர் பணிவுற வளர்ந்தான்; காளை
நலனுளகாவலுற்று நண்ணினன் சரையெய்தாது;
தலன்விரி சானுமீது பதங்களைத் தழுவுவித்தான்
பொலனுறு மவன் செங்கற்றைப் புயலினைத் தடவுமன்றே.

(இ-ள்.) பலனையளிக்கும்மகான் இப்பூமி வானங்களாகிய பெற்றோர்தனக்கடங்கித் தன்னைப் பணியும்வண்ணமோங்கினன். காளையாகிய வவன் நல்ல காவலையடைந்து கிழத்தன்மையுறாது பொருந்தினன். இடமகன்றபூமியின் உன்னதப்பிரதேசங்களிலும் தனது பாதங்களைவைத்தான், அவனது செங்கதிர்கள் மேகத்தைத் தடவாநிற்கும்—(எ-று.)

3. நலம்புரி வோர்கள், செல்வான் நெறியளந்து, மைந்திற்
றவந்தருவிடய மெல்லா,மவனுக்கே தந்திணைந்து,
நிவந்தரு சமானவற்ச னவன்றனை நெருங்கிச் சேர்ந்த
அவம்பெறு பெற்றமெங்குந் தோய்ந்திடப்பரந்து செல்வார்.

(இ-ள்.) நன்மையைப்புரிபவர்களும், செல்லும் பாதைகளை யளந்து எல்லா ஞானகர்மவிஷயங்களையும் பலத்தோடு கூடிய அவ்வக்கினிக்கே யளித்து இரண்டாகச்சேர்ந்துள்ளவர்களுமான பசுக்கள், தங்களிருவருக்கும் ஸமானமான பிரியமுள்ள வத்ஸனாகிய அவனை நெருங்கி எல்லாவிடத்திலும் பார்த்துவிசாரிப்பார்கள்—(எ-று.) பெற்றம் பசுக்கள். பூமிவானங்களென்பார் மேனாட்டாசிரியர்; ஆனால் இச்சொல் ஹோதா அத்வர்யு இருவரையுமாவது, யஜமானன் அவனது பத்நியிருவரையுமாவது குறிக்கும் என்பார் ஸாயணர்.

4. தீராங்கவிகள் நானாவிதந்தருதிறத்தி னென்றுஞ்
சீரிளமையி னமர்ந்தவவனைத்தன் பதத்திற் சேர்த்தார்;
கூரவாவுடனன்னார்கள் சிந்துவைக் குறிப்பிற் பார்த்தார்;
ஏருடனரர்தமென்றா ழிவர்மு னுற்பவித்தான் மாதோ.

(இ-ள்.) தீரர்களாகிய மேதாவிகள் பலவித ஞானத்திறமையோடு, நித்திய தருணனாகிய வவனை யவன்றங்கும் பதத்திற் சேர்த்தார்கள். மிகுந்த ஆசையோடுமவர்கள் வேகமாகச்செல்லும் நதிகளின்மீது பார்த்தார்கள். அவர்களுக்கெதிரில் நரர்கள் அல்லது நேதாக்களின் ஸூரியனான அக்கினி யாவிர்ப்பவித்தான்—(எ-று.) ஸூர்ய: ஸர்வஸ்யப்ரஸவிதா அயம் அக்நி: என்பார் ஸாயணர்.

5. திக்கெலாமருளத் தோன்றிச் செயம் பெறநின்றான்; யார்க்கு
மிக்கவர் சிறியருந்தஞ் சீவனநிமித்தம் போற்றத்
தக்கவன்; பலவிடத்து மவியன மடைந்தோ னெல்லா
மொக்கவேகாண் போ னிந்தச் சிசுக்களைத் தோற்றியோனே.

(இ-ள்.) எல்லாத்திக்குக்களிலும் அநுக்கிரக புத்தியோடு தோன்றி ஜயத்தைப் பெறுபவனாய் நின்றான் அவன் எல்லாருக்கும் பெரியர்களாகிய தேவர்களாலும் அத்தேவர்களையுத்தேசிக்க அற்பர்களாகிய யஜமானர்களாலும் தங்களது வாழ்வின்பொருட்டு ஸ்துதிக்கத்தகுந்தவன்; தேவ மநுஷ்யர்களாகிய எல்லாரிடத்தும் அவியைப்பெறும்மகவான்; எல்லாவஸ்துக்களையும் ஒரே பார்வையிற் காண்பவன். இந்த ரித்விஜர்களாகிய சிசுக்களைப்பிறப்பித்தவனுமாம்—(எ-று.) அவனை அவனது ஸ்தானத்தில் கவிகள் சேர்த்தாரென மேற்பாட்டோடியைக்க வென்பார் ஸாயணர்.

வருக்கம் 15.

## 147. மண்டலம். 1. அநுவாகம். 21 சூக்தம். 8.

5 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஔசி. தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப்: தேவதை: அக்கினி.

# அஷ்டகம் 2 அத்தியாயம் 2

1. திப்பியக்கதிர்கள், வல்லே திக்கெலாம்பரவு மன்ன,
செப்புமீர்சாருந்தோகஞ் சிறந்த பேரரையளித்துத்
திப்பியர்தேவர் யாகஞ் செவ்வையின் முடித்துவக்க
வொப்பி லெவ்விதத்தி,னங்கி, யுனக்குணா வாயுளீந்த?

(இ-ள்.) அக்கினியே! பிதா மாதாவென்னும் இருபக்கத்திலும் அல்லது ஆண்பெண் என்னுமிருவழியிலும் புத்திரர்களையும்பேரர்களையுமளித்துத் தேவர்கள் யாகத்தைச் செவ்வையாகநடத்தி யுவகைகொள்ளுமாறு, உனது ஒளிபொருந்திய சுவாலைகள், எல்லாத்திக்குக்களிலும் பரவும் அவை, எப்படி உனக்கு அன்னத்தோடு கூடிய ஆயுளைத்தந்தன?—(எ-று.)

2. அவியுணா வார்ந்தோய். மிக்கவிளமையோய், நன்கினீட்டிக்
குவிபெறத் தக்கதாய் நான்கூறுமிம் மொழியை யோர்க;
புவியினி லொருவன்றுன்பம்புரிய மற்றொருவனுன்மேற்
கவியினைப் பகர்வ, னங்கி; வணங்குவே னுன்னை யானே.

(இ-ள்.) அவியுணவு நிறைந்தவனே! மிகுந்த விளமையனே! நன்றாக வென்னாற் சம்பாதிக்கப்பட்டதாய்ப் போற்றற்குரியதாயுள்ள வென் மொழியை அறிவாயாக. (உலகில்) ஒருவனுன்னை யிம்சிப்பான். மற்றொருவன் உனது புகழைக் கூறுவான். அவருள் உன்னை வணங்குவோனாகிய யான் உனக்கு நமஸ்காரஞ் செய்வேன்—(எ-று.)

3. அங்கியுன் காவற் கற்றை யந்தணா மாமதேயன்
பங்குறு மிடுக்கணின்றும் பரிந்தவன் றன்னைக்காத்த;
சங்குறு விசுவவேதன் சற்கருமத் தோர்க்காத்தான்;
பொங்குதீங்கிழைக்கவென்னும்பொருந்தலர்க்குறும்புமின்றே.

(இ-ள்.) (இங்கு ஒரு இதிஹாஸமுண்டென்பார் ஸாயணர். உசத்தியன், பிரஹஸ்பதியென்று இரண்டு ரிஷிகளிருந்தனர். அவர்களில் உசத்தியனது மனைவியின்பெயர் மமதா. அம்மமதை கர்ப்பவதியாயிருந்தபோது அவளைப் பிரஹஸ்பதி ரமித்தான். சுக்கில நிர்கமனஸமயத்தில் கர்ப்பத்திற்றங்கி யேற்கனவே யுருப்பட்டிருந்த ரேதஸ், 'முனியே! உமது ரேதஸை விடாதேயும். எற்கனவே இங்கு தங்கி யுயிர்பெற்றுள்ளேன். அதனால் ரேதஸங்கரஞ் செய்யாதேயும்.' என்றது இதைக்கேட்டுப்பிரஹஸ்பதி தனதுபிந்துவைக்கட்டிக்கொண்டு, 'ஹே! கர்ப்பமே! நீ யென் ரேதஸை யடக்கியதனால் குருடனாய்ப் போவாயாக.'' எனச்சபித்தார். அதனால் அச்சிசு முனிசாபத்தினால் தீர்க்கதமஸனாய்ப் பிறந்தான். பிறவிக்குருடனான அவன் தனது குருட்டுத்தன்மை நீங்க அக்கினியைத்துதித்தான். அப்பொழுது அவ்வக்கினி யவனுக்குப் பார்வையளித்தான்.) அக்கினியே! உனது ரட்சணம் பொருந்திய சுவாலைகள் குருடனாகிய மாமதேயனது (அதாவது மமதையின் புத்திரன் தீர்க்கதமஸனது) துன்பத்தை நீக்கி யவனைக்காத்தன. தங்கும் எல்லாச்செல்வத்துக்குங் காரணனான அவ்வக்கினி ஸத்கருமஞ்செய்பவர்களைப் பாதுகாக்கிறான். ஸ்தோதாக்களுக்குத்தீங்கிழைக்கவெண்ணும் பகைவர்களால் நேரும் துஷ்டச் செய்கைகளும் பலிக்கவில்லை—(எ-று.) இது தீர்க்கதமஸன் தன்னையே படர்க்கைப் பெயரிற் கூறியதென்பார் மேனாட்டாசிரியர்.

4. கொடையிலான் கொடைதடுக்கு மிரண்டகப் பாபிக், கங்கி,
மிடையு மிப் பெரிய சிட்சை மேவுக பிரயோகத்;
தடையுற வவன்றன் சாற்றுந் தீமொழி யவனையே சார்ந்
திடையுறு தெரிக்க வன்னு னிழிவுடலதனை யின்றே.

(இ-ள்.) அக்கினியே! தானதர்மஞ் செய்யாமலும், பிறரது தர்மத்திற்குக் குறுக்கே நின்றும் இரண்டகஞ்செய்யும் பாபிக்கு அவனது நிக்கன்மத்துக்குப் பிரதி பலனாக இப்பெரிய சிட்சைவந்தடையட்டும். அவன் சொல்லுகின்ற அத்திய மொழிகள் அவனையே யடைந்து அவனது சரீரத்தை யெரிக்கட்டும் —(எ-று.)

5. வலியவ, மேறு மெல்லாமறிந் தொரு மர்த்தியன்று
னலிவுற வேனை போனை யிரண்டகத்தா னலிக்கிற்,
பொலிவுறு நுதிசா ரங்கி, புன்றனைப் புகழின்றனை
மெலிவுறு செடுக்க; துன்பமேவுறு தெமை யெடுக்க.

(இ-ள்.) வலிமை பொருந்தியவனே! விளக்கம்பொருந்திய ஸ்துதியோடு கூடியவனே! மேலும், எல்லாவிஷயங்களையு மறிந்துகொண்டு ஒரு மர்த்தியன் மற்றொரு மனிதனுக்கு இரண்டகஞ்செய்தால் உன்னைப்புகழு மிக்கிரபாராதியைக் காப்பாற்றுவாயாக. எங்களுக்கு நேருங் கஷ்டங்களை நிவர்த்திப்பாயாக—(எ-று.)

வருக்கம் 16.

---

# அறிவிப்பு.

இவ்வேத மொழிபெயர்ப்புக்கு நம்புத்தகாபிமானிகள் பின்னும் சில சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரவேண்டுமாய்ப் பிரார்த்திப்பதோடு இவ்விஷயத்திற் பலன் கருதாது தற்காலம் உதவிபுரிந்துவரும் தஞ்சாவூர் வக்கீல் ம-ா-ா-ஸ்ரீ P. V. நாகநாத சாஸ்திரியா ரவர்களின் வாக்குச் சகாயத்தையும் இதன் மூலமாய் விநய வந்தனங்களோடு அறிவிக்கிறோம். ஜீவனோபாயத்திற்காகச் செய்ய வேண்டிய வேலைகளைச் செய்த காலம்போக மிகுந்த காலத்தை யெல்லாம் இவ்வேதப் பணிக்கேயாம் செலவிடுகிறோம். பணப்பலனின்றி இவ்வேதபிரோ சம்பந்தமான எல்லாப்பணிகளையும் யாமே செய்ய நேர்வதால் சஞ்சிகைகள் காலதாமதாக வர நேர்கின்றன. அதனால் இத்தமிழ்வேதத்தை யாதரிக்கும் நேயர்கள் கவலையுறாதிருக்க வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறோம். அனுப்பும் ஒவ்வொருபிரதிக்கும் போஸ்டிஸர்டிபிகேட் வாங்கிவிடுவதால் சஞ்சிகைகள் தவறிப்போக நியாயமில்லை.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

### வருக்கம் 16.

## 148. மண்டலம். 1. அநுவாகம். 21. சூக்தம். 9.

5 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை. தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப்; தேவதை அக்கினி.

1. மாந்தர் தம்மகத்தில் வெய்யோன்மானச் சித்திரச் சரீரத்
தேந்தியவொளிக்கென்றேப்த்தவிவனே, யோதாவைப், பல்வே
றேய்ந்திடு முருவி னெந்தக் கடவுட்கும் பணிசெய்வானை,
வாய்ந்துற மதித்தான் மாதரிச்சுவா னுருவிச் சென்றே.

(இ-ள்.) மனிதர்கள் தங்களது கிரகங்களில் ஒளிமிகுந்த சூரியனைப்போலச் சித்திர வர்ணமான சரீரத்திற் றாங்கிய பிரகாசத்தை யெண்ணி யமைத்த விவ்வக்கினியைத், தேவர்களை யழைப்பவனை, பலவேரு உருவத்தோடு கூடியவனை, எல்லாத்தேவர்களுக்கும் யாகாதி காரியங்களை முடித்துத்தருபவனை, மாதரிச்வான் அரணிக்கட்டைகளுக்குட்புகுந்து மதனஞ் செய்து வெளிக்கொண்டுவந்தான்—(எ-று.) பலவேறுருவென்றது, மின்னல், சூரியன் அக்கினியென நிற்பதையும், ஆகவநீயாதி ஸ்தானபேதத்தோடு நிற்பதையும், காலிகராலி முதலிய சுடர்ப்பேதத்தோடு நிற்பதையும் எண்ணியாமென்பார் ஸாயனர்.

2. துதிகளை யுனக்கென் றேந்தித் தோய்த்திடு மவற் கிடுக்கண்
வதியுறப் புரியார்; அன்னவாய்மை கொளௌன்னை யென்றன்
றுதிமுதற் றொழின் மெச்சிற்றுத்; தோய்ந்தவரருகிற்சார்ந்தே
யதியுவப்போடு போற்று மவை யெலாமுவந்து கொள்வார்.

(இ-ள்.) ஸ்தோத்திரங்களை உனக்காகச் சேர்க்குமவனுக்குத் துன்பம் நேரும்படி (ஒருதேவரும்) செய்யமாட்டார்கள். அந்தப்பெருமையோடு கூடிய வென்னைநோக்கி, எனது ஸ்தோத்திரம் அவிப்பிரதான மாதிய தொழில்கள் (யான்செய்வது சரியென்று) அங்கீகாரமாகக் கூறின. அத்தேவர்களது அருகிற் சார்ந்து ஸந்தோஷத்தோடு தூக்கிக்கொண்டுபோய்த்தரும் அவிக்கொடை ஸ்தோத்திரம் இவற்றையெல்லாம் முதத்தோடு அவர்கள் எற்றுக்கொள்வார்கள்—(எ-று.) முதம் ஸந்தோஷம்.

3. நித்தியத் தலத்தன்னானை நெடுமகம் புரிவோர் தாங்கித்
துத்தியத்தோடு சேர்த்தார்; தேரினிற் றோய்ந்து வேக
மொத்த நற்றுரக மொப்ப வுவன்றருமாணை தாங்கிப்
பத்தியிற் கிரகித்தோதும் பதம் பெறச் சேர்த்திட்டாரே.

(இ-ள்) அவ்வக்கினியை யவன் என்றுமுள்ள விடமாகியகாருஹபத்திய ஸ்தானத்தில் ஸ்துதிகளோடு தூக்கிக்கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். தேரிற் பூட்டப்பெற்று வேகமாகச்செல்லும் குதிரைகளைப் போல அவனது ஆக்ஞையினால் அவ்வக்கினியைப் பத்தியோடுங் கைப்பற்றி அவனுடைய ஸ்தானத்திற் கொண்டுபோய் அமைத்தார்கள்—(எ-று)

## மண்டலம் 1. சூக்தம் 149.

4. தெறுப்பவன் பலவற்றைத்தன் பல்லினற் றின்றழிப்பான்;
பொறுப்பதற் கரியசோதி போர்த்தொளிர்குவன் வனத்தே;
கறுத்தெளி விடுஞ்சுவாலை நோக்கிக் கால் நிதமும் வீர
னெறுத்தெறி சரத்திற்சென்று தாக்கியே யொழுகுமன்னே.

(இ-ள்.) எதிர்த்தவர்களைக் கொல்பவனாகிய வக்கினி பலவித வஸ்துக்களையும் தனது சுவாலைகளாகிய பற்களினால் தின்று இம்சிப்பான். அவன் புருக்காட்டிற் பொறுத்தற்கரிய சோதியோடு விளங்குவான். கோபத்தோடு வீசுகின்ற அவனது சுவாலைகளை நோக்கி,வாயு, வீரனது அம்புவேகமாகச் செல்லுவதுபோலச் சென்று நித்தமும் அவற்றின்மேல் வீசியொழுகுவான்—(எ-று.)

5. கருவினி லிருக்கும் போதே கடிந்து துன்பியற்று மிச்சை
மருவியோர்வல்லோரொன்னார்வதைக்கொணுவவனைப்பார்வைத்
தெருளிலா வந்தரென்றும் வருத்துதல் செய்யா ரன்னன்
பிரபையால் அவனைக் காத்தார் பேரன்பி னிதமுள்ளோரே.

(இ-ள்.) கருநிலையில் (வெளிப்படாது) இருக்கும் பொழுதே யிம்சிக்கு மிச்சையுள்ளவர்களும், சக்தியுள்ளவர்களுமாகிய பகைவர்கள் வதைப்பதற்கு முடியாத அவ்வக்கினியைப், பிரபையுள்ள காரணத்தால் பார்வையில்லாத குருட்டு மனிதர்கள் ஒன்றுஞ் செய்யமுடியாது. நித்தியமும் அவனிடத்திலேயே யன்பு கொண்டு ஒழுகுபவர்கள் அவனை நன்றாகக் காத்தார்கள்—(எ-று.).

வருக்கம். 17.

## 149. மண்டலம். 1. அநுவாகம். 21. சூக்தம். 10.

5 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷி தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: விராஜ்; தேவதை: அக்நி

(வேறு.)

1. பெருஞ்செல்வ நாதனிறை பேசிறைவர் யாவர்க்கு
மருந்தனத்தை யளிக்கவிவ ணணைகின்றான் வசுப்பதத்தே;
பொருந்துகிரா வர்களெம தருகினுறு மவற்பணிவார்.

(இ-ள்.) பெரிய செல்வத்துக்குப் பதியும், தலைமை வகித்தவெவர்க்குந் தலைவனுமான வக்கினி யரிய செல்வத்தை யளிக்குமாறு, செல்வங்கள் தங்கு மிடமாகிய விய்யாக சாலையினிடத்து வருகிறான். எமது அருகில் வருமவனை, ஸோமாபிஷேகஞ் செய்யும் கல்லைச் சப்திக்கும யஜமானர்கள் பணிவார்கள்—(எ-று.). கிராவர், கிராவமுடையவர், கிராவம் சோமநசுக்குங்கல்.

2. நரர்குழுவி னெனப்புவிவானனன்னியெலாந்தோற்றுவிப்போன்
மருவி புகழ்தனின் வளர்வோன் சிவரெலாங்குடி நிரன்
விரைவுடனே மூன்னேகி வேதிபின்க ணபர்பவனே.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

(இ-ன்.) மனிதர்களுடைய கூட்டத்திற்போலவே பூமி வானங்களிலும் பொருந்தி யெல்லாவற்றையும் உற்பத்தி செய்பவனும், கீர்த்தோடு வளருங்காலேயும், உயிர்களெல்லாம் அநுபவிக்கும் ஸ்ருஷ்டிக்கிரமத்தோடு கூடியவனும், வேகமாக்முன்சென்று தனது வேதிஸ்தானத்திற் றங்குபவனுமாய் (அக்கினி வளர்கிறான்) —(எ று.) ஜீவபீதஸர்க்க: என்பதற்கு யஜமானர்கள்தரும் எல்லா அவிப்பொருள்களையும் மிச்சமில்லாமல் உண்டொழிப்பவன் என்றும் ஒருபொருள் கூறுவர். ஈண்டு ஜீவர்களால் நானுவிதமாக வநுபவிக்கப்படும் ஸ்ருஷ்டிக்கிரமத்தோடு கூடியவென்றார். என்? இவ்வக்கினி தனக்களிக்கப்படும் அவிமுதலியவற்றை யடைந்து தன் ஒளிபொருத்து மின்னலாகிய மழையைத்தந்து எல்லாப்பிராணிகளையும் வளர்ப்பிப்பதாலென்க. யோநௌவென்பதற்கு வேதியெனப் பொருள் கூறினர். ஒவ்வொரு கர்ப்பாசயத்திலும் புகுந்து அங்குள்ள கருவைவளர்த்துத் தங்குவோனென்பதும் ஒன்று. அக்கினியே இந்திராதிதேவர்களின் ஆத்மாவாய் ஸர்வத்தையும் சிருஷ்டிக்கிறான் என்பதுபொருள்.

3. இன்புறையும் புரங்களினை யேற்றமுற வொளிர்ப்பித்தோன்
கொன்பெறச்செல் நபக்காலே யெனக்குலவுங் கவி,நூறு
பொன்புறையுமான்மா,வெல்புரையுமொளிநனி திகழ்ந்தோன்.

(இ-ள்.) இன்பமானது தங்கும் (வேதி முதலிய) இடங்களைப் பிரகாசிப்பிப்பவனும், ஆகாசத்திற் செல்லும்காலையாகியவாயுவைப்போல விரைகதியோடுசெல்லும் கவியும், அழகிய நூற்றுக்கணக்கான ஆத்மாவாய் (அல்லது ரூபத்தோடு) காணப்படுபவனும், சூரியனைப்போலக் காந்திசிறந்து விளங்குபவனுமாகிய (வக்கினி) வளர்ந்தோங்குகிறான்—(எ-று.) கவி க்ராந்ததர்சி. நப்ய:, நபஸ்வான், வாயுவென்பார் ஸாயணர். நூறு ஆயிரமுதலியவெண்கள் கணக்கில்லாது பெருத்ததன்மையைக் காட்ட நின்றன.எல், சூரியன். நார்மிணிம்புரம் இன்பத்தைத்தருமிடங்கள் அல்லது யஜமானர்கள் தகுந்தவையென்று மனத்தினுல் எண்ணும் ஸ்தானம். பொன்புறையும், மெலித்தல் விகாரம், பொற்புறையுமென்பதுபொருள்.

4. இருபிறப்போன் மூவ்விடத்தே பேய்ந்துராஜ முழுமையுமே
திருவுறத்த னொளிகொண்டு திகழ்வித்தான்; வணக்குரியன்
மருவுபெருந் தூதனுற் றானமதின் வயங்கினனே.

(இ-ள்.) இருபிறப்பாளனுகிய வக்கினி மூன்றிடங்களிலும் பொருந்தி உலகமுழுவதையுந் தனது வெளிச்சத்தால் விளங்கவைத்தான். வணங்குதற்குரிய வுத்தமனுகிய ஹோதா தண்ணீரிருக்கும் ஸ்தானத்தில்நிலைபெற்றுவிளங்கினன்—(எ-று.) அரணியிரண்டிற் றோன்றுவதனுலும், வானம் பூமிகளிற் றோன்றுவதனுலும், கடையும்போது தோன்றும் ஸாதாரணப்பிறவியும் அதன்பின்னர் பவமானேஷ்டி முதலிய ஸம்ஸ்காரங்களடைந்த இரண்டாம் பிறவியுமாகிய இருபிறப்பை யடைவதினுலும், இருபிறப்பானனும் என்பார் ஸாயணர். மூவ்விடம், பூமிவானம் அந்தரங்கள், அல்லது ஆகவநீய, காருஹபத்ய, தக்ஷிணுக்கினி ஸ்தானங்கள். ரஜம், உலகம், லோகாரஜாம்ஸ்யுச்சயந்த வென்றார் யாஸ்கர் மண். 1 சூக். 90 செய். 7 பார்க்க. ஹோதா, தூதன், தேவர்களை யழைத்துவருபவன். அறற்றானம், அறல்

ஸ்தானம், தண்ணீரிருக்குமிடம்; இது புரோட்சணார்த்தம் பாத்திரங்களில் தண்ணீர்வைக்கப்பட்ட யாகபூமியென்பார் ஸாயணர். ஆனால் மேகத்தின் மின்னலைக்குறிப்பதால் மழைநீர்தங்கு மேகத்தலமாகிய அந்தரிட்சமென்பார் மேனாட்டாசிரியர் (Griffith).

5. இருபிறப்போ னர்தாத னெப்புகழும் படைக்கவெணித்
திருவுறும்பல் பொருள்களினிற் சிறந்தவெலாந் தாங்கினனால்;
மருவுமவற் கவியளிக்கு மர்த்தியனன் மகப்பெறுவான்.

(இ-ள்.) இருபிறப்பாளனும் ஹோதாவுமாகிய அக்கினி எல்லாக்கீர்த்தியையும் அடையவெண்ணி அழகிய பொருள்களிற் சிறந்தவற்றை யெல்லாந் தன்னிடத்தே தாங்கினான். அவ்வக்கினிக்கு அவியளிக்கும் மர்த்தியனும் சோபனம் வாய்ந்த புத்திரனையடைவான்—(எ-று.)

வருக்கம். 18.

## 150. மண்டலம் 1. அநுவாகம் 21 சூக்தம் 11.

3 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: உஷ்ணி; தேவதை: அக்கினி.

(வேறு.)

1. உனையே பணிவேன் கொடை மிக்குதவி
யெனையே யளியென்ன விரப்பல், மகான்
றனையே சரணென்றவனைத் தழுவி
மனையே வளரும் மகனின், எரியே!

(இ-ள்.) ஒரு பெரியஸ்வாமியை(தனநாயகனை)ச் சரணாகவடைந்து அவனது கிருகத்திற் பிறந்து வளர்ந்து அத்தனநாதனிடத்திலேயே தன்து கஷ்டங்களை யெல்லாஞ் சொல்லிப் பிரார்த்திப்பவனைப்போல, அக்கினியே! உன்னையே வணங்குவோனாகிய யான் மிகுந்த அவிப்பொருள்களைத் தந்து 'எனக்குப்புத்திரர்களையும், வித்தத்தையும், கொடுப்பாயாக' வெனப் பலவிதமாகவும் யாசிப்பேன்—(எ-று.)

2. தனவா னெனினு மவியைத் தருகா
துனை வந்தனையா னுருகிப் பணியா
தனைவான் கடவு ளறியா னவனுக்
கினிதா முதவிக் கியையா தவனீ.

(இ-ள்.) பணக்காரனென்னினும் உனக்கு அவியைத் தாராதவனும் உன்னை வணங்காதவனும், நாஸ்திகனுமான அம்மனிதனுக்கு உதவிசெய்ய வொருப்படாதவன் நீ—(எ-று.) நாங்கள் உன்னை வணங்குவோர்களாதலின் எங்களுக்குதவி செய்வாயாகவென்று எதிர்மறை கூறிப் பிரார்த்தித்ததாம் என்பார் ஸாயணர்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

3. சிகி, விப்பிரனே, திவமேவன் சுடரோன்
மிகுமப் பெரியோர் தமினும் பெரியன்
றகுமர்த்தியன்; உன்னை வணங்குறும் யாம்
வெகு வுன்னதமார் நிலை மேவுகவே.

(இ-ள்) அக்கினியே! மேதாவியே! உன்னை வணங்குந் தகைமை வாய்ந்த மர்த்தியன் விண்ணிற் சந்திரனுகிறான். அவ்விடத்தோங்கும்பெருமைவாய்ந்தவர்களிலும் பெரியவன். உன்னை வணங்கும் யாங்கள் சிரேஷ்டதையை யடைவோமாக—(எ-று.) எல்லாருக்கும் ஆற்றலாதத்தைத் தரும் சந்திரனைப்போன்றவன் என்பது பொருள்.

வருக்கம் 19.

## 151. மண்டலம். 1 அநுவாகம். 21 சூக்தம். 12.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷி தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: ஜகதி; தேவதை, 1 மித்திரன் 2-9 மித்திராவருணர்.

1. போரதனிற் பசுவிரும்புஞ் சுவாத்தியர்கள்
யாகமதிற் புகல் கன்மத்தா
லேருறவே யாபனனந்தலை மித்ர
னெனக்கொணர்ந்த வின்பன்யாருந்
தாரதனில் வணக்குரியன் சனங்களைக்காத்
திடுபவன்றன் சத்தத்தோடு
சிரியநன் மைந்ததனைக் கண்டுபுவி
வானிரண்டு நடுக்கிற் சேர்ந்த.

(இ-ள்) யுத்தத்தினிடத்துப் பசுக்களை யடையவிரும்பும் சோபனத்தியானபரர்கள், யாகத்தினிடத்து (அரணிகடையும்) கருமத்தினல் ஆபங்களுக்கு மத்தியில் அழகாக மித்திரனைப்போலக் கொண்டுவந்தமைத்தவனும், (எல்லார்க்கும்) பிரியமானவனும், யாரும் வணங்கத்தக்கவனும், சநங்களைப் காப்பாற்றுபவனுமானவவ்வக்கினியின் சத்தத்தையும் பலத்தையும் கண்டு வானம் பூமிகள் சலித்தன—(எ-று.) ஆபங்கள் நீர்களௌன்பார், மேனுட்டாசிரியர்; அந்தரிட்சமென்பார் ஸாயணர். மித்திரனென வென்பதற்குச் சிநேகிதனைப் போலவென்பதும், மித்திரனென்னுந் தேவனைப் போலவென்பதும் பொருந்தும். அதனல் இச்செய்யுளுக்கு அதிதேவதை மித்திரனென்றுர். இம்மித்திரனுகிய சூரியனும், நீரில் அல்லது அந்தரத்திற்றேன்றும் மின்னலும், அரணியிலெழுமக்கினியும் ஒரே ஒளிக் கடவுளினதம்சங்ளென்பது இதனுற்போதரும். தியானபரர்கள் கொண்டுவந்தமைத்தவன் செயப்பாட்டுவினைப் பொருளில் வந்த செய்வினை.

2. நன்பரினிச் சோமமளி புருமீளன்
ருெழினடத்து மின்னேர் நன்கே
பண்புறுமிச் செயலதனை யாற்றியதா
லம்வரவைப் பாடுவோன்ற

னென்பெருசற் கருமமதை யறிக;பழங்
குடியுதித்தோ னியைந்து கூவும்
விண்பரவுந் தோத்திரத்தை, விழைவளிப்பீர்,
செவியேற்று மிளிருவீரே.

(இ-ள்.) (மித்திராவருணர்களே!) சிநேகிதரைப் போல, ஸோமயாகஞ் செய்யும் புருமீடனது வேலையைச் செய்யும் ரித்விஜர்களாகிய இவர்கள் இவ்வேலையை நன்றாகச் செய்துள்ளதால், உமது வருகையைக் குறித்துப்பாடும் ரித்விஜனது சற்கருமத்தை யறிந்து (அவனுக்குத் தூல்லிய புத்தி யளிப்பீர்களாக.) பழைய குடியிலுதித்தவனாகிய அப்புருமீளனும் அவர்களோடு கூடியழைக்கும் ஸ்துதிகளை, இச்சைகளை யளிப்பவர்களே, கேட்பீர்களாக—(எ-று.) விண்பரவு மென்பது எதுகை நோக்கிச் சேர்த்தது.

3\. புவியோர்கள் வான்புவிநின் றேன்றவும
தரும் பிறப்பைப் புகழத்தக்க
சுவியேய்ந்தவதனை விழை வளிப்பிரும்
பெருவலிக்காச் சாற்று நின்றார்;
அவியார்ந்த வத்துவரந் துதிகூடி
யமைந்துளதை யார்வீரின்பிற்
கவியேந்து மவனுக்கும் ரிதத்தினுக்கு
நீவிர்தருங் காலத் தின்டே.

(இ-ள்.) இச்சைகளை யளிக்கும் மித்திராவருணர்களே! வானம் பூமியென்னும் இரண்டிடங்களினின்றும் தோன்றி வெளிப்பட்ட உமது கீர்த்தியும் ஒளியும் வாய்ந்த பிறப்பைப் பூமியிலுள்ளவர்கள் உமது மகத்தாகிய வலிமைக்காகப் புகழ்ந்து துதித்தார்கள். ஸ்தோத்திரக் கவிகளைப் பாடுவோனுக்காகவும் ரித (கர்ம)த்துக்காகவும் (அக்கினியை) நீவிர் கொண்டுவந்தளிக்குங் காலத்தில், அவிகளோடையும் ஸ்துதியும் நிறைந்துள்ள யாகத்தை நீங்க ளின்பத்தோடும் அநுபவிக்கிறீர்கள்—(எ-று.) முதற்செய்யுளில் மித்திரனைப் போல வென்று கூறியவர் ஈண்டு மித்திரனே யக்கினியாக வபேதப்படுத்திக் கூறினாரென்பார் ஸாயணர். வருணன் தமோநிவாரகனான ஆதித்யன்.

4\. வலிநிறைந் திருமதரிய பேரன்பி
னணைந்தபுவி மகிழ்வி னேங்கிற்;
றொலிநிறைந்து கோடிக்க லொழுங்கினுளி
ருத்தமமா ரொழுங்கை யின்றே;
பொலிவுளவும் பெருமைந்தைப் பெருவானின்
றேய்குவதைப் பேசுங் கன்மத்
தலைவறிவ பூட்டுநிறீ ராப்போத்தை
துகமதனி லார்த்தல் போன்றே.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

(இ-ள்.) வலிமிகுந்த அஸுரர்களாகிய மித்திராவருணர்களே! உம்முடைய பேரன்பிற்பொருந்திய பூமியானது (பூமி வேதியைக் குறிக்கும் என்பார் ஸாயணர். ஜனங்களைக் குறிக்குமென்பார் மேனாட்டாசிரியர்.) நன்றாக வோக்கத்தை யடைந்தது. ரிதவந்தர்களே அல்லது நீதிநெறியிலொழுகுபவர்களே! உத்தமமான ரிதத்தை யல்லது ஒழுங்குகளை உரக்கக் கூறுவீர்களாக. பெரிய விண்ணினின்றும் வந்த உமது பெரிய பலத்தை யாகாதிகர்மங்களிற் சேர்க்கிறீர்கள், காளைகளை நுகத்தடியிற் பூட்டுவதுபோல—(எ-று) அஸுரர் வலிமிகுந்தவர். மண். 1 சூக். 24 செய். 14 பார்க்க. கோடிக்கல் கோஷிக்கல்

5. இப்பெரிய புவியதனி லுஞ்சிறந்த
செல்வமதை யேயுமொப்பா
லொப்பியணைக்கின்றி; ராக்கூட்டமொரு
தூகளின்றி யொழுகிக்கொட்டி
றப்பறவேயணைகின்ற; அருகதனில்
வைகலொடு சார்ந்தமாலை
யெய்ப்பறவென்றாழ் நோக்கி முழங்குவவாற்
கள்வனெதி ரேய்ந்தார்ப் போன்றே.

(இ-ள்.) (மித்திராவருணர்களே!) இந்தப் பெரிய பூமியில் உமது சிறந்த செல்வத்தை உம்மிடத்துப்பொருந்தியுள்ள வலிமையினாற் சேர்க்கின்றீர்கள். பசுக்கூட்டங்கள் ஒருதடையுமின்றிப் பால் தருவான் தத்தங்கொட்டிலுக்குவந்து சேருகின்றன. திருடனைக்கண்டு மனிதர் உதவிக்காகச் சத்தமிடுவதுபோல இப்பசுக்கள் உபாந்தியத்திற் சூரியனைநோக்கி விடியற்காலத்திலும் மாலைக்காலத்திலும் முக்காரஞ்செய்கின்றன—(எ-று.)

### வருக்கம் 20.

6. மித்திரனே வருணவெவ வீர்சென்று
பூசிப்பீர் மிளிரவ்யாகத்
தொத்தசுருளோ தியெரி யுமைவணங்கும்;
உமதிச்சை யொழுகுமாறே
தத்துபுனலொழுக்குக; வெங்கன்மமதை
யோங்குவிக்கல்; சார்ந்தமேதை
யுத்திகொடு கூறுமெலாத் துதிகட்குந்
தனியிறைமை யுறுவீ ரன்றே.

(இ-ள்.) மித்திராவருணர்களே! எந்த யாகத்தினிடத்து நீங்கள் சென்று பூஜை செய்வீர்களோ அந்த யாகத்தில் சுருண்டகேசமாகிய சுவாலையோடு கூடிய அக்கினி யுங்களைச்சேவிக்கும். உங்கள் மனத்திற்கேற்றியவாறாக மழையைப் பெய்விப்பீர்களாக. மேதாவியாகியவிப்பிரன் பாடும் ஸ்துதிகளுக்கெல்லா மொப்பற்ற நாயகத்துவ மடைந்தவர்கள் நீங்களே—(எ-று.)

## மண்டலம் 1. சூக்தம் 151.

7. கவியாகி ஹோதாவாய்த் தனைக்கருதான்
புகழினெவன் கருதுமுங்க
ளபிலாசை யாற்றியவி தந்துவணங்
கிடுவானவ் வான்மையோன் வாய்த்
தவரூது சென்றருகி லவனளிக்கு
மவிப்பொருளைப் புசித்துச் சார்வீர்;
இவனுற்று மெந்துதியின் மனம்வாய்ந்திவ்
வத்துவரத் தேய்க நன்கே.

(இ-ள்.) கவியும் ஹோதாவுமாய்த் தன்வருத்தத்தைக் கவனியாதவனைப் புகழோடும் எவன் உங்கள் அபிலாஷையை நிறைவேற்றியவியளித்து வணங்குவானோ அவ்யஜமானனது யாகசாலைக்குச்சென்று அவனளிக்கும் அவிப்பொருள்களை யுண்டு களிப்பீர்கள். இவ்விடத்து யாங்கள் கூறுந் தோத்திரங்களிடத்து மனம்பொருந்தி யவற்றைக்கேட்டு எங்களது யாகசாலைக்கும் வருவீர்களாக—(எ-று.) அபிலாசை, அபிலாஷை.

8. எக்கிய சாதனங்களாற் கிரமதா
னேர்மையுளி. ரெழிலோ டும்மை
முக்கியமாய்த் தம்மனத்தி னெழுச்சிபோற்
புனைந்திடுவார்; மொய்ம்பிற் றேர்ந்த
வக்கிரமிலுளத்தோடு தங்கிதங்
கலையும்பான் மலியச் சேர்ப்பார்;
அக்கரைசார் சித்தமொடு மப்பொழுதே
மருகதனி லணைவீர் பொன்னின்.

(இ-ள்.) யக்ஞஸாதனங்களாலும், பாலினாலும், நேர்மையோடு கூடிய மித்திரா வருணர்களே! தமது மனக்கிளர்ச்சி யெழுந்ததுபோல யஜமானர்களுங்களை யலங்கரிப்பார்கள். தெளிந்த கூடிய புத்தியோடு தங்களது ஸ்தோத்திரங்களை யும்மிடத்து சேர்ப்பார்கள். அப்பொழுது நீங்கள் வரவேண்டுமென்ற வெண்ணத்தோடு தனத்தையேந்தி யெங்களுக்கருகில்வந்து சேர்வீர்கள்—(எ-று)

9. வீரர்கா ளுண்டியொடு தனமதனைத்
தாங்குறுவீர் விழைவி னுந்தம்
பாரநிலைத் தூரமகத் துவங்கூடு
முதவிகொடு பண்பார் மேன்மை
யேரினியைந்தனிர்; இரவு கழிந்தபக
லொடுபணிக ளெழிலா ராறும்
பரிவும தருந்தனத்தைத் தெய்வதிலை
தனையடைந்து பழகலின்றே.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

(இ-ள்.) வீரர்களாகிய மித்திராவருணர்களே! உணவுப் பொருள்களையும் செல்வத்தையு நீங்கள் தாங்குவீர்கள். ஆசையோடும், உம்து மனம்பொருந்திய மகத்துவத்தை வெகு தூரந் தோற்றுவிக்கும் உதவிகளோடு கூடிய பெருமையை பழசாசப் பெற்றீர்கள். உமது தெய்வத்தன்மையையுஞ்செல்வத்தையும் இரவும், கழிந்து போனபகல்களும், ஸிந்துக்களும், பணிகளாகியவசுரர்களும் ஒருநாளுமடைதலில்லை—(எ-று.) பணி வியாபாரஞ் செய்வோன் என்பது பதப்பொருள், உலோபி, கடவுட் பிரீதியாக வொன்றுந்தராதவன். இப்பொருளிலிருந்து பணங்காத்த பூதத்துக்குப் பெயராயிற்று. பின் பசுக்களைத்திருடிக் குகைக்கு ளடைத்துவைக்கு மசுரனுனன். ஈண்டு அசுரர்களென்னும் பொதுப் பெயரைக் குறித்து நின்றது. மண். 1 சூக். 6 செய். 5 நோக்குக.

வருக்கம். 21.

## 152. மண்டலம் 1. அநுவாகம் 21. சூக்தம் 13.

7 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷி தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப்; தேவதை: மித்திராவருணர்.

1. மித்திரா வருணீ ருந்த மேன்மைசா ராடை பீன்
மெத்திய; துமதொழுக்கம் யோசனை யிடையூறின்றி
யொத்தன; பொய்ம்மையெல்லாமொறுத்திட, ரெம்மாட் டியாகந்
தத்துறப்புணர்த்தி யஃதோடணைகுவீர் தடையிலாதே.

(இ-ள்.) மித்திராவருணர்களே! உமது சிறந்த உடைதிண்மை (கொழுப்பு) பொருந்தியது. உமது நடையும், புத்தியும் இடைஞ்சலொன்றுமின்றி யியைந்தன. பொய்களை (பாபங்களை) யெல்லாங் கண்டிப்பீர்களாக. உங்களிடத்தரிதம் அல்லது யாகமானது அமையும்படி செய்து அதனோடு நீங்களும் வருவீர்கள்—(எ-று.) உடைதிண்மை வாய்ந்த தென்றது உங்களுக்கு அளிக்கும் நெய்நிறையவமைந்துள தென்பதை யுணர்த்த வென்பார் மேனுட்டாசிரியர்; நீங்கள் மிகுந்த சோதியோடு கூடிய வுடையைத் தரித்து விளங்குகிறீர்க ளென்பதைக்குறிக்கு மென்பார் ஸாயணர்.

2. அவர்தமிவ் வலிமை யாருமறியொணு நின்றார்; துன்ப
மிவருமத்தன்மை யேய்க்குமறை, கவிபுகழ்ந்ததுண்மை;
எவருமஞ்சுறுநாற் கூர்மையியைந்தது முக்கூரோட்டும்;
தவலற முதற்க ணசந் தேவநிந்தகருஞ் சார்வார்.

(இ-ள்.) அம்மித்திராவருணர்களுக் கிடையிற் றோன்றிய இத்திறமையை எவரும் அறிய முடியாமலிருந்தார்கள். (பகைவர்க்குத் துன்பத்தை யூட்டும் மந்திரம், கவியினுல் எடுத்துக் கூறப்பட்டதுண்மையே. எவரும் அஞ்சத்தக்க உக்கிரம் வாய்ந்த நான்கு கூரோடுகூடிய வாயுதம் மூன்று கூரோடுள்ளதைச் சயிக்கும். தேவநிந்தைசெய்பவர்கள் முதலில் நாசத்தை யடைவார்கள்—(எ-று.) ஷட்விக் கென்பவர் வடமொழி மூலபாடத்தை மாற்றி (இந்திரனது வச்சிராயுதம்) மூன்று முறை யடிக்கிறது. பயங்கரமானவது

## மண்டலம் 1. சூக்தம் 152.

நான்குமுறையு மடிக்கிறது; என்று மொழிபெயர்ப்பர். ஆனால் மேனாட்டா சிரியரும் வில்ஸனும் ஸாயணருரைப்படியே மொழிபெயர்ப்பர். அவ்வாயுதங் கள் அவியளித்தலும் மந்திரோச்சாரணமு மென விளக்குவர் மேனாட்டாசி ரியர்.

3\. காலிலாள்காலோர் முன்னர்க்கடுகுவாள்; உம்இச்செய்கை
யேனுமித்திரவருணர், ரெவரறிவார்கள்? சூனுந்
தாலபார்சுமைவருத்தத்தமையினுஞ் சுமக்கு. முண்மை
மேனுறநிறைக்கும், பொய்யை வேதித்துக் கொல்லுமாலோ.

(இ-ள்.) காலில்லாதவளாகிய உஷை, காலுள்ள உலகப் பிராணி கள் எழுவதற்கு முன்னர் வருவாள். மித்திராவருணர்களே! பகலிரவு ரூப மாயுள்ள வும்மது செய்கையை (அதாவது காலில்லாத உஷையை முன்னே முவிக்குஞ் செய்கையை என்றபடி) யார் அறிந்தவர்கள்? கர்ப்பத்திலுள்ள சிசு வாகிய (உதயாத் பூர்வ ஸூர்யனும் பூமிபாரந் தாங்குதற்கரிதாயிருப்பினும் அப்பாரத்தைத்தாங்குவான். ஸத்தியத்தை (அதாவது பிரகாசம் உலகநடை முதலிய வொழுங்குகளை) நிறைவிப்பான். பொய்யை (மேற்சொன்ன பிரகா சம் முதலியவற்றிற்கு விருத்தமானதை) யழிப்பான்.—(எ-று.)

4\. கன்னியர்.காதலோனைக்காண்குவ. மென்றுமுன்பு
துன்னுவோன் கீழ்விழாது தோய்குவோன் வருணமித்ரர்
மன்னியபிரியத் தேசாம்வத்திரம் விசாலமுற்ற
தென்னாளும்பிரிக்கவொண்ணுவெ ழிலைத்தரிப்போன்றனை.

(இ-ள்) எப்பொழுதும் முன்னேறிக்கியே செல்பவனும், கீழேவிழாது பொருந்துபவனும், மித்திராவருணர்களிடத்துப் பொருந்தி எல்லாரும் வி ரும்பத்தக்கதாயுள்ள தேஜஸாகிய விசாலமான வஸ்திரத்தை, யொருநாளும் தன்னிடத்தினின்று பிரிக்க முடியாத தன்மைவாய்ந்ததைத் தரிப்பவனும், கன்னிகைகளுக்கு ஜாரனுமாகிய சூரியனை நாங்கள் பார்க்கிறோம்—(எ-று.) ஜாரன் காதலன் மண். 1 சூக். 66 செய் 4 பார்க்க. என்னமும், எவ்வளவும்.

5\. பிறந்தவன் வேகத்தோடும் வாய்வடம் பிறங்காமாவிற்
சிறந்தவன் முழக்கத்தோடுஞ் சானுவைநிமிர்த்திச் செல்வான்;
அறிந்திடக்கிடந்த தன்று வும்மறை, வருணமித்ரர்
திறந்தனிற் பொருந்துதேசைச் செறிந்தவர் துதிப்போரெண்
ணின்.

(இ-ள்) வேகத்தோடு பிறந்தவனும் கடிவாளங்கண்ணுக்குத் தெரி யாத (இல்லாதவெனினுமொக்கும்) குதிரையோடு கூடியவனுமான வாதித் யன் கனைத்துச் சப்தஞ்செய்துகொண்டு தனது முதுகை நிமிர்த்திச் செல் லுகிறான். வருணமித்திரர்களுடைய திறத்திற் பொருந்திய தேஜஸிற் கலந்தவர்களும் ஸ்தோத்திரஞ்செய்துசேவிப்பவர்களுமாகியமனிதர்களினது உள்ளத்தினுள் அந்தமேன்மைபொருந்திய இரகசியம் அறியக்கிடந்ததில்லை —)எ-று.) மறை இரகஸ்யம், ஸூர்யன் பற்றுக்கோடின்றி அந்தரமார்க்

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

கத்தில் திமிர்ந்துசெல்லுந்தொழில் மித்திராவருணர்களது அதினத்திலுள்ள தென்ற ரகஸ்யம். சானு, ஸாநு, உன்னதப்பிரதேசம், ஈண்டுமுதுலக யென்று மொழிபெயர்ப்பார் மேனாட்டாசிரியர்.

6. மறையினைவிரும்புமாமதேயனைக் களிப்பினூர்த்தும்
நிறைமடிப் பசுக்களோங்கி நிலவுகவெங்கும்; யாவு
மறிபவனெச்சிற் பிச்சையாற்றுக,வென்றுமும்மைத்
திறமையிற் பணிந்து சற்றுங்குறைவுறா வதிதிகாக்க.

(இ-ள்.) மேன்மையான மந்திரகர்மங்களை விரும்புகிறவனான மாம தேயனை (மமதையின் புத்திரன் தீர்க்கதமஸனாகிய வென்னையென்றபடி.) ஸந்தோஷப்படுத்தும் மடி நிறைந்த பசுக்கள் எவ்விடத்தும், விருத்தியடைந் து சிறக்கட்டும். அநுஷ்டான விஷயங்களெல்லாவற்றையு மறிந்த வித்வான் (ஆகுதிசெய்த மிச்ச முண்ணத்தக்கதென் றறிந்து) அம்மிச்ச வுணவைத் தனது வாயினாற் பிச்சையாகக் கேட்கட்டும். மித்திரா வருணர்களாகிய வுங் களை நன்றாகப்பணிந்து, கொஞ்சமும் குறைவில்லாத (அதிதியை) யாகத் தைக் காப்பாற்றட்டும்—(எ-று) இவ்வித்வான் யாசித்து அதிதியைக்காக்கும் போது மாமதேயனைத் திருப்திப்படுத்தும் பசுக்கள் பால் சுரந்து பெருகட்டு மென முடிக்கவென்பார் ஸாயணர். அதிதியைத்தன் வாயினால் விளித்து நமக்கு அவ்வித்வான் உதவிசெய்யட்டு மென வுரைப்பார் மேனாட்டாசிரியர். அவர் அபிப்பிராயப்படி அதிதி தேவத்தாய். கிராஸ்மான் என்பவர் அதிதி யென்னுஞ் சொற்கு நிவர்த்திக்கவேண்டிய கருப்பு அல்லது பஞ்சமென்பார்.

7. மித்திராவருண ரென்னுந் தேவர்காள் விரும்பியும்பா
லொத்தவிவ்வவிக் கொடையி னமத்திற லனத்தாலுள்ள
மெத்தவுங்களிக்கச் செய்வோம்; எம்மறை போரில்வெல்க;
இத்தரை யெங்கன்மத்தை யியற்ற விண்வீழ நீரே.

(இ-ள்.) மித்திராவருணர்களென்னும் தேவர்களே! ஆசையோடு முமக்குத்தரும் அவிச்சேவையில் நமஸ்கார பூர்வமான ஸ்துதிகளாலும் அன் னத்தாலும் உம்மைத்திருப்தி யடைவிப்போம். எங்களுடைய மந்திரங்கள் போரில் வெல்லட்டும். விண்ணினின்றும் மழைநீர் எமதுகர்மங்களைப்பூர்த் திசெய்து நிறைவேற்றட்டும்—(எ-று) மழை பெய்வதனால் தானியங்கள் வளர்ந்து யாகம் முடிவுபெறு மென்பார் ஸாயணர்.

வருக்கம். 22.

## 153. மண்டலம். 1. அநுவாகம் 21. சூக்தம். 14.

4 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ருஷி தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப்; தேவதை: மித்தி ராவருணர்.

1. ஒத்தவன்போடுமேன்மை யுற்றமித்திரவருணிர்!
சித்தமார் வணக்கத்தோடு மகிழ்வொடுமிழுதி னோடும்

## மண்டலம். 1. சூக்தம். 153.

அத்துவர் யவர்களாச்சியம் மொழுகும்மை யெம்மோ
டுத்தமக் கன்மர்தம்மாற் ருங்கிடப் பூசிப் போமே.

(இ-ள்) சமானப் பிரியத்தோடும் மகத்துவத்தோடுங் கூடிய மித்திராவருணர்களே! மனத்திற் பொருந்திய நமங்களோடும், புரோடாச முதலியவற்றோடும், நெய்யோடும், உங்களைப் பூசிப்போம், சதா நெய்யூறிவடியுமும்மை யெங்களோடு கூடிய அத்வர்யுக்களும் தங்கள் கர்மங்களால் உங்களைத் தாங்குமாறு—(எ-று). அத்திவர்யவர்கள், அத்வர்யுக்கள்.

2. மித்திராவருணர்காளும் புகழ்த்துதிகூறுமெண்ண
மொத்ததுவலியிர்முற்றமுனுற்றிலேனுமது தேசை
யுற்றனெனுமை துடன்பாட்டோங்கினெ ஹோதாயாகத்
துத்தமதுரைக்கச் சூரி யுஞ்சுகம் விழைந்தபோதே.

(இ-ள்.) மித்திராவருணர்களே! வலிமை பொருந்திய காளைகளே! ஹோதாவானவன் அத்வர்யுக்கள் கூடியுள்ள யாகத்தலத்தில் உமக்காக உங்களைக் கூறுகிற்த யாககர்த்தாஉமது ஸ்வர்க்கஸுகத்தை விரும்பும்போது, உம்முடைய சிறந்த புகழைத் தோற்றுவிக்கும் ஸ்தோத்திரங்களைச் சொல்லுமெண்ண மேற்பட்டதேயன்றி அதனைப் பூர்த்தியாகச் செய்யவில்லை அதற்குள் உம்முடைய தேஜஸை யடைந்து உம்முடைய அங்கீகாரத்தையும் பெற்றுவிளங்கினேன்—(எ-று.) இவ்விருக்குக்கு மேனாட்டாசிரியர் உரைவருமாறு 'உமது புகழ்ச்சி மகத்தான பலத்தைப் போன்ற ஓர்எதுவாகும். வலிமையுள்ளவர்களே! மித்திராவருணர்களே! யாகக் கூட்டத்தில் ஹோதா உங்களை யலங்கரிக்கும் போதும், யாககர்த்தாவாகிய ஸூரி உங்களது அநுக்கிரஹத்துக்காக உம்மை வணங்க விரும்பும் போதும், உங்களுக்காக நன்றாயுருப்படுத்தப்பட்ட ஸூக்தமொன்று கொடுக்கப்படுகிறது.' உத்தம், உச்தம், சஸ்திரம் அல்லது ஹோதா கூறுவது.

3. மித்திராவருணிர், யாகத்துக்கென, வவியையீய
வொத்தவம்மகனுக்காக, வொழிவிலாவளங்கொளாக்க
ளுத்தமச்சுகத்தையீயு, மும்மைமகத்தோமமூட்டு
மர்த்தியன் போல ராதஹவ்வியன் வணங்கும் போதே.

(இ-ள்.) மித்திராவருணர்களே! யக்ஞத்துக்காகவும் அவியளிக்கும் மனிதனுக்காகவும் குன்றாத பால்வளமுள்ளபசுக்கள் நல்லசௌக்கியத்தைத்தரும், மாநுஷஹோதாவைப்போலப் பிரசித்திபெற்ற ராதஹவ்யன் உம்மைவணங்குங்காலத்து—(எ-று) ராதஹவ்யன்என்னுஞ் சொல்லை இடுகுறிச்சிறப்புப்பெயராகச்சொல்லாமல் அவியளைத்தந்து ஸேவிப்பவனெனக்காரணப்பொதுப் பெயராகச் சொன்னர் மேனாட்டாசிரியர். இப்பெயர் மண். 5சூக். 67 செய் 3ல் மறுபடியும் வருகிறது.

4. இன்பினையுமக்களிக்கு மக்களினிடையே யுண்டி
யன்புறவளித்துத் தேவிமாரற லாக்காளோங்க;
தோன்றுதொட் டெம்மகர்க்குத் தோய்ந்தநற்பதிதா தாவாய்த்
துன்றுக;வுங்க; தேனுவுதவும் பால்சுனைவயினர்க.

(இ-ள்.) (மித்திராவருணர்களே!) உங்களுக்கு இன்பத்தைத்தரும் குடும்பங்களினிடையே, தேவிமார் (பிரகாச முள்ளவர் என்றபடி,) களாகிய ஆபங்களும் பசுக்களும் உணவுப்பொருள்களை யளித்துவிருத்தியடையட்டும். புராதனமாக வெங்களது யஜமானர்களைப் பரிபாலிப்பவனாகிய (அக்கினி) எங்களுக்குக் கொடையாளியா யிருக்கட்டும். யாங்கள் தரும் சருபுரோடாசங்களை யுண்ணட்டும். எங்கள் பசுக்கள்தரும் பாலையுங் குடிக்கட்டும்—(எ-று.) அறல், ஆபம், தண்ணீர்.

வருக்கம் 23.

## 154. மண்டலம். 1. அநுவாகம். 21. சூக்தம். 15.

### 6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: டீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப்; தேவதை: விஷ்ணு.

1. பார்த்திவரஜங்கடம்மைப்படைத்துயர் வோங்குந்தன்பேர்
சீர்த்திருவடி விசாலஞ் செறிய மும்முறையமைத்துக்
கூர்த்துளவுன்னதத்துப் புண்ணியர் குலவிடத்தை
பேர்த்துதைவுறுத்த விண்டு வீரியம் பகர்வேன்வல்லே.

(இ-ள்.) பிருதுவி ஸம்பந்தமான லோகங்களைச் சிருஷ்டித்து உயர் வோங்கிய தனது பெரிய பாதங்களை விசாலமாக வோட்டி மூன்றுமுறை வைத்துச் சிறந்த உன்னதத்தானத்தில் புண்ணியகிருத்துக்கள் உறையும் ஸ்வர்க்கத்தை யழகுபெறவமைத்த விஷ்ணுவினது வீரிய கன்மங்களை விரைவாகப் பகர்வேன்—(எ-று.) பார்த்திவம்ரஜம், என்றதற்கு ரஜோதல மெனப் பொருள்கொள்ளுக வென்பார் ஸாயணர், அது பூமி வானம் அந்தரிட்சமென்னும் மூன்றிடங்களையும் குறிக்கும். பிருதுவியென்பதற்கு இடம், ஸ்தலம் என்னும் பொருளை மண். 1 சூக். 108 செய். 9ற் பார்க்க ரஜம் உலகமென்பது மண். 1 சூக். 90 செய் 2ற் சொல்லப்பெற்றது. விஷ்ணுமும்முறையளந்ததை மண். 1 சூக். 22 செய் 17ற் பார்க்க.

2. வீரியச்செயலிதற்கா விண்டுவைப் புகழ்வர்காட்டி
னேருறும்பீமக் குஞ்சிதத் திரைநேடி நாகத்
தேரினிலுறைமானேயு மொருவனைப் பரந்தமூன்று
சீரடிக்கீழ்விசுவப் புவனமுஞ் சிறந்துளோனை.

(இ-ள்.) காட்டிற் பொருந்தியதும், பயங்கரமானதும், வளைந்து பதுங்கி யிரையைத்தேடித்திரிவதும்மலையுச்சியிலுறைவதுமானமிருகத்தைப் போலுள்ளவனும், விசாலமாகப் பரந்த தனது மூன்றடிகளின் கீழ் எல்லாப் புவனத்திலுமுள்ள பிராணிகளும் தங்கி வாழும் பெருமை யடைந்தவனுமாகிய விஷ்ணுவை அவனது(உலகத்தை மூன்றடியாலளந்த) வீரியச்செயலுக்காகப் புகழ்வார்கள்—(எ-று.) ஸ்தவதே யென்னுஞ் சொல்லைவிஷ்ணு புகழப்படுவான் என்னும் பொருளில்வந்த செய்வினையென்பார் ஸாயணர். ஆ

## மண்டலம் 1 சூக்தம் 154.

னுல் (Peterson) பீடர்ஸன் என்பவர் விஷ்ணு இதைப் புகழ்கிறுன். அல்லது பெருமையாகப் பேசிக்கொள்ளுகிறுன் என்று பொருளுரைத்தலே ஸரியென்பார். எனினும் மேனுட்டாசிரியர் ஸாயணரையேயொத்து மொழிபெயர்ப்பர் பீமம்,பயங்கரமானது. மிருகம் காட்டுப் பிராணியென்பது அதன் புதானப்பொருள்.குஞ்சிதம், விலைவு. குசா குவஷு ஸர்வாஸு பூமிஷு லோகத்ரயேஷஞ்சாரிவ'என்பார் ஸாயணர். இச்செய்யுள் நரஸிம்மாவதார சூசனையென்பார் பீடர்ஸன் என்பவர். அவரே சிங்கமுழங்குவதைப்போலப் பெருமைப்பேசுவனெனத் தொழிலுவமையாகக்கொள்வார்.

3. ஏகனுய் மூப்பதத்சா லிப்பெரும் பரப்புலகைப்
பாகமாயளந்து வாசத்தானமாய்ப் பதித்தகாலை
நாகமாரிடத்துவாழ்ந்து நடைபெருக்குள விண்டுப்பா
லோகையார்துதிபு மோய்ம்பாயுவந்து சென்றடைகமாதோ.

(இ-ள்.) ஒருவனுகவே தனது மூன்றடிகளால் இப்பெரிய விசாலமான புலகத்தையளந்தும்பிரித்தும் தனது வாஸஸ்தானமாகக் கொண்ட பலமிகுந்தவனும், மலைநிறைந்தவிடத்திற் குடிகொண்டு பெருநடையோடு கூடியவனுமான விஷ்ணுவைத் துதியானது எங்கள் செய்கைகளிற் றேன்றிய பலமாகச் சென்றடையட்டும்—(எ-று.)

4. எவனதுமுப்பதங்கள் மதுவொடுநிறைந்து சற்றுந்
தவலறவோங்கித் தத்தர்தன்மையின் மகழ்வ; யாவன்
கவனமார்ந் தேகனுகக்கருது முத்தாதுகூடும்
புவியொடுவானை பெல்லாப்புவனத்தைத் தாங்காநிற்போன்.

(இ-ள்) எவனுடைய மூன்றிடங்களும் மதுத்தன்மையினுல் பூர்ணத்தை யடைந்து கொஞ்சமும் குறைவடையாமல் தங்கள் ஸ்வபாவப்படி களிக்கின்றனவோ அப்போர்க்கொத்தவனையும், எவன் ஒருவனுகவே, பிருதிவி, அப்பு, தேயுவென்றும் மூன்று தாதுக்களாலான பூமி, (அந்தரம்) வானங்களையும், எல்லாப்புவனங்களையும் (அல்லது பிராணிக் கூட்டங்களையும்) தாங்குகிறுனோ வனையும்—(எ-று ) எங்கள் துதி அவனுக்கு ஓர்பலம்போலமையட்டும் எனமுடிக்க. ஸாயணர் இரண்டாமடியை,'தவலறவோங்கி யன்னர் தங்கவப்பிக்கும்; யாவன்,' என வுரைப்பர் ,அதாவது'குறைவையடையாமல் (தேவ) வுணவைத்தந்து தம்மை யாச்ரயித்த 'ஜனங்களுக்கு இன்பத்தை யூட்டுகின்றனவோ அப்போர்க்கொத்தவனையும்,'எவன் என்பதுபொருள்.(Peterson)பீடர்ஸன் என்பவர் ஸ்வதா (Dha)என்னும்பதமானது தனதூஸ்வபாவமாக வெனப்பொருள்படுமென்றும்,அப்பொருண்மையை இப்பொழுதுள்ள இந்திய ஆசிரியர்கள் மறந்துவிட்டார்களென்றும், அதனுற்றுன் ஸாயணர் அச்சொற்கு அன்னமெனப் பொருளெழுதுகிறுரென்றும் கூறுவர்.

5. தேவரை வணங்குவோர்கள் சிறப்புறக் களிக்கு மன்னுன்
றெவருமன்பு மிக்க தலமுறல்யான்; நீள்பாத
மோவருமவனை யன்றேவுண்மையாம் பந்து; விண்டு
மேவுமூர்ப்பதத்தில் மதுச்சுனை மேவுமன்றே.

(இ-ள்.) தேவரைவணங்குபவர்கள் மோட்ச ஸுகத்திற்களிக்கின்ற விடமாகிய அவனது அன்புமிக்க வழிவிலாப் பதத்தையான் அடைவேனாக. நீண்டகாலடிகளோடு கூடிய அவனல்லவா உண்மைச் சிநேகனும் (அல்லது உறவினனும்). அவ்விஷ்ணுவினது பரமபதத்தில் ஒரு மதுவூற்று உள்ளது — எ-று.) மதுவூற்று, ஸோமச்சுனை யென்பார் பீடர்ஸன். ஜராமரணங்களும் மறுபிறப்பின் பயமும் எதனிடத்திலில்லையோ, அமிர்தமாதிய ஸுகங்கள் எதனிடத்து நினைத்த மாத்திரத்திற் கிடைக்கின்றனவோ அத்தகைய மதுவூற்று என்பார் ஸாயணர்.

6. கொம்பினென் மிகுத்து வேகங் கூடியபசுக்க ளேய்ந்த
வும்பெரு முறைவிடத்தை யுறமிக விழைவோம்; ஆண்டே
பம்புறு நடைசார் காலைப் பரமமாம் பதம்பெரிதா
யெம்புடை யொளியைவீசி யியைவுறு நலக்கவின்றே.

(இ-ள்.) எண்ணிலாத கொம்புகள் (கிரணங்க ளென்றபடி) நிறைந்து வேகத்தோடு கூடிய பசுக்கள் (ஒளிகள், நட்சத்திரங்கள் என்பார் மேனுட்டாசிரியர்) பொருந்திய உமது பெரிய (வாஸ்துவை) வீட்டையடைய யாங்கள் விரும்புவோம். அவ்விடத்திலேயே பெரிய அடிகளோடு கூடிய காலையாகிய விஷ்ணுவினது பரமபதமானது மிகப்பெரியதாய்த் தோன்றி எம்மாட்டுத்தன் காந்தியை வீசிப்பொருந்தும் —(எ று.). உமது பெரிய வீட்டையென்றுளது. இதுவடமொழியில் இருமைப்பெயர், அதனுல் ஸாயணர் பத்தினி யஜமானர்களே! எனஒருவிளியையுட்கொண்டு உங்களுக்காக அவ்வீட்டை நீங்களடையுமாறு விஷ்ணுவைப் பிரார்த்திப்போமென்றுஉரை கூறுவர். ஆனுல் மேனுட்டாசிரியர் உமது என்றது விஷ்ணுவையும் இந்திரனையுங் குறிக்கலா மென்பார். அடுத்த ஸூக்தம் இந்திர விஷ்ணுக்களைக் குறிப்பதையறிக. பீடர்ஸன்என்பவர் இந்தரிக்கு மித்திராவருணர்களுக்குரிய தென்றும், இதனிடத்துப் பரமம்பதம் என்று வந்துள்ள காரணத்தால் இதனை இவ்விஷ்ணுவினது ஸூக்தத்திற் சேர்த்திருக்கிறுர்க ளென்றும், அவ்விருவர் மித்ராவருண ரென்பது பிரஸித்த மென்பதை மண். 1 சூக். 25 செய். 6ற் பார்க்கலா மென்றுங் கூறுவர். ஆனுல் அது கொள்ளத்தக்கதல்ல. கொம்பு கிரணங்களையும் பசுக்கள் விண்ணெளிகளையும் காட்டுகின்றன. மண். 1 சூக். 105 செய். 10ற் பார்க்க.

வருக்கம். 24.

## 155. மண்டலம் 1. அநுவாகம் 21 சூக்தம் 16.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: ஜகதி: தேவதை: 1—3 விஷ்ணுவும் இந்திரனும், 4–6 விஷ்ணு.

1. வஞ்சனைக்குள்ளாகா தார்மலைத் தொடரின்
சிகரமதின் மகத்துவத்தோ
டெஞ்சலிலாவேக முடனிலக் கெதிரும்

## மண்டலம் 1. சூக்தம் 155.

பரிதாக்கிபிறுத்ததென்னத்
துஞ்சுபவர், துதிவிழையும் பெருஞ்சூர
விந்திரற்குந் தேசயுமாற்கு
மஞ்சுதையையுங்காவலுற்றதனைத்
துதியோடு மருச் சிப்பீரே.

(இ-ள்.) வஞ்சனைகெட்படாதவர்களும், மலைத் தொடரினுன்னத சிகரத்தில், வேகமுடன் குறித்த விடத்தை யடையுங் குதிரைகள் தூக்கிக் கொண்டு போய் நிறுத்தினது போல மகத்துவத்தோடு தங்கியுள்ளவர்களு மான, ஸ்துதிவிரும்பிக் கேட்கும் மகத்தாகிய சூரனான இந்திரனுக்கும் அவ னோடு கூடிய விஷ்ணுவுக்கும் உமது காவலிலுள்ளஸோமத்துளிகளை ஸ்துத் தியத்தோடு மளித்துப் புகழ்வீர்களாக—(எ-று.).

2. இந்திரவிட்டுணுவிருவீ ரிட்டமதைத்
தருந்தொழிலீ ரியையுங் காந்தி
யுந்தமதுவருகையினைச் சுதைக்குடியன்
போற்றுகிறு; னுங்கு நீங்க
ளந்துறுமர்த்தி யன்றனக்குப் பிரதிபய
னுப்பலவா முணவை நாடித்
தந்திடுவீர்; கிருசானு விடையூற்றிற்
படாதவராய்த் தயங்குவீரே.

(இ-ள்.) இந்திர விஷ்ணுக்களே! அபீஷ்டங்களை யளிக்குந் தொ ழிலையுடையவர்களாகிய காந்தி சிறந்தவுமதுவரவை யெண்ணி, (ஆவுதி செய் து மிகுந்த) ஸோமத்தைக் குடிக்கும் யஜமானன் யாகத்தில்வணங்குகிறான். நீங்களும் அம்மர்த்தியனுகிய யஜமானனுக்குப்பிரதிபயனுகப் பலவாகவொழு கும்உணவுப் பொருளைத் தருகிறீர்கள். கிருசாநுவின் இடையூற்றிற் படாமல் நீங்களும் விளங்குவீர்கள்—(எ-று.) க்ருசாநு அக்கினி யென்பார் ஸாயணர் ஆனுல் ஸோமத்தைக்காக்கும் பூதமென்பது மேல் மண். 1 சூக் 112 செய் 21ற் கூறப்பட்டது. மேனுட்டாசிரியர் இவ்விருக்குக்கு வேறொருவகைப் பொருள் கூறுவர்: 'இந்திரவிஷ்ணுக்களே!' நீங்கள் உமது முழுவலிமை யோடும் வரும்போது, உங்களது ஸோமக்குடியன் (யஜமான னென்றபடி) உங்களுடைய ஆத்திரத்தோடு கூடிய வருகையைத் தூரத்திற் றடுத்துவிடு கிறான். மரணதர்மம் வாய்ந்த மனிதன் பேரிற் குறிப்பாக வேவப்பட்ட அதனை (அதாவது) வில்லேந்திய கிருசாநுவின் அம்பை நீங்கள் தூரவோட் டுகிறீர்கள்." என்பது.

3. இவைபவன்றன் மகத்துவ மாராண்மையினை
வளர்க்கின்ற; இருவர்தாயர்
சுவைபெறவின் றேம்புதொழி லெய்துறுவா
னவர்தம்மைத் தோய்ப்பானுளும்;
சுவைபறு தன்றந்தை திறத்தினைத்தாழ்த்து

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

மகனெனினும்; நாடின்மூன்று
யிவனுறுமஃதேவான வொளியதனி
னுன்னதமா யியையு மன்றே.

(இ-ள்.) யஜமானனால் ஆவுதிசெய்யப் பெறும் இவ்வவிப் பொருள் அவ்விந்திரனது மகத்துவ நிறைந்த ஆண்மையை விருத்திசெய்கின்றன. தியாவாப் பிருதுவிகளாகிய இரண்டு தாய்மாரும் பிராணிகளைப் பிறப்பித்து வளர்க்குமாறு அவற்றைத் தருகிறான் (அல்லது மேனுட்டாசிரியருரைப்படி யவற்றைக் கீழ்க் கொணர்கிறான்.) புத்திரனேனும் தந்தையினது கீர்த்தி வாய்ந்த நாமத்தைத் தாழ்த்திவிடுகிறான். விண்ணொளியில் உன்னதமாக நிற்பது மூன்றாவதே—(எ-று.) இவ்விருக்கின் பின்னடியின் பொருள் சற்றும் விளங்கவில்லை. அதனால் இவ்வாசிரியர் முற்றிலும் மேனுட்டாசிரியருரையைப் பின்பற்றி மொழி பெயர்த்துளார். இம்மேனுட்டாசிரியர், 'விஷ்ணுயாகத்தினிடத்துத் தன்றந்தையாகிய தியௌவைக்காட்டிலும் உயர்ந்தபதத்தை யடைகிறான். அக்கினிக்கு மூன்றுமிடமே;' என்பதுகருத்துப் போலு மென்பார். ஸாயணரோ, 'ஸோம ஆகுதிகள் ஆதித்ய மண்டலத்தை யடைந்து பன்னிரண்டு ஸவிதுக்களினுள்ளமரும் இந்திராவிஷ்ணுக்களைப் போஷிக்கின்றன. ஸந்தோஷத்தை யடைந்து இவ்விருவரும்மேகத்தின் மூலமாய் மழை பெய்விக்கிறார்கள். அம்மழையினால் பயிர்களோங்கச் சனங்கள் புத்திர பௌத்திரர்களுடன் விருத்தியடைகிறார்கள்; ,இவ்வளவு பெருமையையுந்தரும் மகாநுபாவர்கள் இந்திராவிஷ்ணுக்கள்; என்பர்.

4. இனனாகிப் பாலனனுய்ப் பகைவரிலா
தெந்நாளு மிளமை யேய்ந்து
தனதான்ற விரித நடைமூன்றினாற்
பூமிகளைச், சார்சுயேச்சை
தினமானப் பிழைப்பிவற்றுக்காத் தாவு
மவன்மாட்டுச் சேர்ந்தவிர்ந்த
வானமாரு மாண்மையினைப் புகழ்ந்துகவி
பாடிநிதம் வாழ்த்தூ வோமே.

(இ-ள்.) எல்லாவற்றிற்கும் நாயகனும் உலகைப் பரிபாலிப்பவனும் பகைவரில்லாதவனும், நித்தியதருணனும், பலவிதமாகச் செல்லும் தனது விசாலமான அடிச்சுவடுகள் மூன்றினால் உலகங்களைச் சுயேச்சையாகத் திரிந்து ஜீவிக்கும் பொருட்டுத் தாவியளப்பவனுமான அவ்விஷ்ணுவின் பும்ஸத்துவத்தைப் புகழ்ந்து பாடுவோம்—(எ-று.) இனன் ஸர்வஸ்ய ஸ்வாமி யென்பார் ஸாயணர்.

5. எல்லார்தங் கண்ணினிலுந் தோன்றுமவ
னீரடிக ளேன்ற மர்த்ய
னுல்லாச மாகவுறச் செல்கின்ற;
வவன் மூன்று முயர்ந்தபாத
மல்லாருஞ்சிறை வாய்ந்த பட்சிகளுங்
காணப்பரிதால்; மதிக்கின்ண்டு

## மண்டலம் 1 சூக்தம் 156.

சொல்லாருங் கதியேய்ந்த ஞானியரா
மாருதருந் தோய்கொண்ணுதே.

(இ-ள்.) எல்லாராலுங் காணப்படு மவனது இரண்டு அடிகள் மர்த்தி யுன் உற்சாத்தை யடையும் வண்ணஞ் செல்லுகின்றன. அவனது மூன்று வது அடியாகிய (பரமபதம்) வலிமையுள்ள சிறகுகளோடு கூடிய பட்சிகளா லும் காணக்கிடந்ததல்ல. நடைவிரைவிற்குப் பெயர்போன ஞானிகளாகிய மருத்துக்களாலும் அதனை யடைய முடியாது—(எ-று) மூன்றும்பாதம் பர மபத மென்றதை மண். 1 சூக். 154 செய். 4ற் காண்க வயச்சாவென்ப தற்கு மருத்துக்களும் என்பது ஸாயணருரை. ஈரடி யென்றது பூலோகமும் அந்தரிட்சமு மென்னு மிரண்டையுந்தாண்டுதலே. ஒன்று பிரவித்தமாகவும் மற்றொன்று மழை பெய்வதனுலும் தெரியு மென்பார் ஸாயணர்.

6. தொண்ணூறு காலவுறப் பதினோன்
மடியாத்துத் தோயும் வேகத்
தெண்ணூறும் பலவாரச் சக்கரத்தின்
வட்டமதாய்ச் சுழல் வேய்த்தான்;
தின்னுரு முடல்கொண்டு பல்லுருவத்
தொடுதுதியைச் செப்புவாரோ
டொண்ணுத விளமையுள வாலிபனு
யாமழைக்க வுறுவான் மன்னே.

(இ-ள்.) தொண்ணூறு என்னும் எண்ணை நன்குதரம் சேர்த்த காலவுறப்புக்களைப் பலவாரங்கணிறைந்த சக்கரத்தைப் போல வேகமாகச் சுழலவிட்டான். திண்மை பொருந்திய சரீரத்தோடும், பலவுருவங்களோடும் ஸ்தோதாக்களோடும், குமாரப் பருவங்கடந்த வாலிபனுய் யாங்களழைக்கும் போது வருவான்—(எ-று) இச்செய்யுளில் விஷ்ணுவைக் காலாத்மக சூரி, யனுகவுருவகித்தார். 94 எனக்கொண்டு வருஷம் 1, அயனம் 2, ருதுக்கள் 5, மாதம் 12, பட்சம் 24, நாள் 30, யாமம் 8, ஒருநாளிற் றேன்றும் லக்கி னம் 12 ஆகத் தொண்ணூற்றுநான்கென்பார் ஸாயணர். ஆனல் (Ludwig) லுட்விக் கென்பவர் 90நாள்க ளடங்கிய நான்கு காலங்கள் என்பர். இவையே தொண்ணூறு ஆரங்களுள்ள நான்கு சக்கரங்களைப் போன்றவை யென்பார். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு ஆரமாம்.

வருக்கம். 25.

## 156. மண்டலம் 1 அநுவாகம். 21 சூக்தம். 17.

5 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: ஜகதி; தேவதை: விஷ்ணு.

1. நெடுந்தூரம் விளங்குபவன் பெருங்கீர்த்தி
வாய்ந்திட்டோ னெய்பானெங்கி
யிடுக்கரவ னெரநிசைன், விட்டுணுவே,

## அஷ்டகம் 2 அத்தியாயம் 2.

சுகத்தைபளித் தெங்கட் கேய்த;
படுஞானத் தோசரெனினு மூன்றோமம்
பலவாருய்ப் பாரித்தேத்த
வடங்காதால்; அவியாள னெக்கிய னு
மருங்கிரியை யாற்றுவானே.

(இ-ள்.) விஷ்ணுவே! அதிகதூரம் பிரகாசிப்பவனுயும், பெரிய கீர்த்தி வாய்ந்தவனுயும், நெய்யினுல் விருத்தியடைந்து ரட்சணங்களோடு கூடியவனுயும், மித்திரனைப்போல எங்களுக்குச் சுகத்தைத்தந்து பொருந்துவாயாக. உனது ஸ்தோத்திர விசேஷங்கள் மிகுந்த ஞானவான்களால் பலவிதமாகப் புகழ்ந்து பாடப்படினும் எண்ணிலடங்கமாட்டா (பின்னும் விருத்தியாய்க் கொண்டேயிருக்கும் என்றபடி.) அவியளிப்பவனுகிய யஜமானனும் உன்னை நன்ருக ஆராதிப்பான்—(எ-று.) மித்திரன் துக்கத்தை நீக்கி ரட்சிப்பவன், நண்பன். மித்ர: பரமீதே ஸ்த்ராயதே; நிருக்தம்.

2. புராதனனுய் நூதனனும் விண்டுவுக்குப்
பலவுலகும் பொருத்து வோர்க்குத்
தராதலத்தை மகிழ்விக்குந் திருவாய்ந்தோற்
கவியளிக்குஞ் சால்பினேனும்,
வரோதயமார் மகத்துவனு மவன்பிறப்பின்
மகத்துவத்தை வழங்கு வோனும்,
நரோத்தமர்க ளெம்மினும்பல் கீர்த்தியடைந்
துயர்வாக நண்ணு வாரே.

(இ-ள்.) புராதனனும், நூதனனும், பலவித வுலகத்தையுஞ் சிருஷ்டிப்பவனும், எல்லாவுலகத்தையும் மகிழ்விக்கும் திருவாகிய மனைவியோடு கூடியவனும் (ச்ரயப்பதியு மென்றபடி) ஆகிய விஷ்ணுவுக்கு அவியளிக்கும் யஜமானனும், உத்கிருஷ்ட மகானுன வவனது உயர்வாகிய பிறப்பைப் புகழ்ந்துரைப்பவனுமான இவர்கள் உத்தமமான மனிதர்களினுங் கீர்த்தி வாய்ந்து அவர்களினுஞ் சிறந்து விளங்குவார்கள்—(எ-று.)

3. ஏத்துரைப்பீ ருங்களா லேன்றவரை
ரிதக்கருப்ப மேயன்னனைப்
போற்றியுவப்பித் தீரன்னுன்சனன
முத;லவன்றன் புகழ்சால் பேருங்
கூர்த்தறிந் தப் பெயாதனை வெளிபிட்டீர்;
விட்டுனுவே, கூடுமேன்மை
யாத்தவுன தொளிர்மதியை யாமடைய
வெக்காலும் யசனஞ் செய்வோம்.

(இ-ள்.) ஸ்தோதாக்களே! உங்களாற் கூடிய வரையில் யக்ஞத்தின்கர்ப்பம் போன்றவனை அவன் பிறந்தது முதற்கொண்டு ஸ்தோத்திரஞ் செய்து ஸந்தோஷப் படுத்தினீர்கள். அவனது நாமத்தையறிந்து அதனை வெளிப்ப

டுத்தினீர்கள். விஷ்ணுவே! மகத்துவம் வாய்ந்தவுனது சோபை நிறைந்த புத்தியை யாங்களடையுமாறு உன்னை வணங்குவோம்—(எ-று.) ரிதக்க ருப்பமென்றதற்கு யக்ஞாத்மக வுத்பன்ன விஷ்ணு வென்பார் ஸாயணர் யக்ஞோவைவிஷ்ணு:என்றுஐதரேயப்ராஹ்மணமும்,தைத்திரீய ஸம்ஹிதையும் கூறும். ஆனால் ஒழுங்கு அல்லது நியதிக்கு ஆதி யங்குரம் போன்றவன் என வுரைகூறுவர் மேனாட்டாசிரியர்.கடைசியடியிற் முன்னிலைப்படுத்தார்.

4. இறைமகனும் வருணனொடு மசுவினிய
இருவர்களு மருக ரிட்ட
மறியுமவன் கிருதுவினைச் சேவிப்பார்;
விட்டுணு விங் ககசைக் காணுந்
தெறுவலியை யுத்தமாம் வல்லபத்தைத்
தாங்கியுளான்; சிநேகனோடு,
முறுமுழையின் மேகமதைக் கருவுயிர்ப்பான்
றிறந்து பெய லுறுவிப்பானே.

(இ-ள்.) ராஜாவாகிய வருணனும், அசுவினியர்களும், மருத்துக் கூட்டத்தை யுணர்ந்த வவனது யக்ஞத்தைச் சேவிப்பார்கள். விஷ்ணு பக லைக்காணும் சக்தியையும், வல்லபத்தையும் தன்னிடத்துப் பெற்றுள்ளான். தனது சிநேகிதனோடு மலைக்குகையி லொளிந்துள்ள மேகத்தைத் திறந்து விட்டு மழையைப் பெய்விப்பான்—(எ-று.) அவன் யஜமானனைக்குறிக்கு மென்பார் ஸாயணர். இவரே சிநேகியென்றது ரித்விக்குக்களோடு கூடிய யஜமானனையே யென்பார். ஆனால் இந்திரனைக்குறிக்கு மென்பார் மேனாட் டாசிரியர்.வ்ரஜம் பசுக்கொட்டில் ஈண்டு மேக முழையைக் குறித்தது. இந் திர சப்தத்துக்கு யஜமானனென்று பொருளுளதை 5-ம்செய்யுளிற் பார்க்க.

5. நன்மை புரியுத்தமனும் விண்டுவினிற்
றோன்றியவ னவிலுங் கன்ம
நன்மை பெறவாற்று மகவானுக்குத்
துணையாக நடந்தான்; மூன்று
வன்மைபெறு மிடங்களினி லுமுயர்ந்துலகைப்
படைப்பவ னாரியற்கு மாண்பிற்
றின்மையுறவு தவுவோன் யஜமானற்
கவிப்பாகந் தெரிந்தி வானே.

(இ-ள்.) நன்மையைச் செய்யும் உத்தமனும், விண்ணிடத்திற் பிறந்தவனுமான விஷ்ணு ஸ்தோத்திர கர்மத்தைச் செய்யும் யாகவானுக்குத் துணையாக வந்தான். மூன்று இடங்களிலும் பெருமை பெற நிலைத்தவனும், உலகைச் சிருஷ்டிக்கும் விதாதாவும், ஆர்யனாகிய யஜமானனுக்கு உதவிசெய் பவனுமானவவன், அவனுக்கு அவிப்பொருளிற் பாகந்தருவான்—(எ-று.) மகவான், இந்திரன் என்னும் பதங்கள் யஜமானனைக் குறித்துநின்றன. என்? மகத்தைச்செய்பவன் மகவானென்க. இராம் ஹவிர்லக்ஷணங்கம் த்ராவயதி இதி இந்த்ரோ யஜமாந: என்பார் ஸாயணர். அதாவது அவியுணவை உருகி

யோடச் செய்பவனாகிய யாககர்த்தா வென்பது பொருள்: இதுவே யாஸ்கரது மதமும். ஆனால் மேனாட்டாசிரியர் இந்திரன் பொருட்டு என்றே உரை கூறுவர்.

வருக்கம். 26.

## 157. மண்டலம். 1. அநுவாகம். 22 சூக்தம். 1.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷி தீர்க்கதமஸன்: வடமொழிச்சந்தம்: ஜகதி; தேவதை: அசுவினிகள்.

1. அக்கினி மூட்டப்பெற்ற தவனியின்மீ
தாதவனுமனைந் துதித்தான்;
மிக்கவலியுஷை நிலவார் தேசினொடு
மிருள்சீத்தாள்; பேவும் யாகங்
தக்க வணமுறத் தேரை யசுவினியர்
புனைவித்தார்; சவிதாத்தேவன்
மக்களினைத் தந்தொழிற்கண் பருவவித்துப்
பின்னுறுவான் மதிக்கத்தானே.

(இ-ள்.) அக்கினி மூட்டப்பெற்றது. பூமியின்மீது சூரியனெழுந் தான். வலிமை மிகுந்த உஷைஜனங்களுக்கு ஆஹ்லாதத்தைத்தரும் பிரகாசத் தோடும் இருட்டையோட்டினாள். யாகத்தை நோக்கி வருவதற்காக அசுவினிகள் தமது தேரிற் கழுதைகளைப் பூட்டி யதனை யலங்கரித்தார்கள். தேவனாகிய ஸவிதா ஜகத்திலுள்ள பிராணிகளைத் தங்கள் தங்கள் கர்மங்களைச் செய்யுமாறு தூண்டித் தானும் பின்னுறுவான்—(எ-று.) ஸவிதா, ஸர்வகர்மனோநுக்ஞாதா அல்லது ஸர்வஸ்ய ப்ரஸவிதா என்பது பொருள்.

2. அசுவினிகாள் விழைவளிக்குந் தேரதனை
நீர்பூட்டுமக்காலத்தி
லிசையுமெம தரும்பலத்தைக் கிருதத்தான்
மதுவானு மீரஞ்செய்க;
வசையறுநற் றேசதனை மாந்தர்நடு
வெமக்கியைக்க; மருவும் யாங்க
ளசைவறு போர்வீரர் பொரும் யுத்தமதிற்
றனக்குவையை யடைக நன்கே.

(இ-ள்) அசுவினிகளே! மாந்தர் விரும்பியவற்றைத் தரும் பலம் பொருந்திய வுமது தேரை நீங்கள்பூட்டும்போது எங்கள் பலத்தைக் கிருதத்தினாலும் (நெய்யினாலும் அல்லது ஸாரபுஷ்டியுள்ள மழைநீரினாலுமென்பது பொருள்.) மதுவினாலும் நனைப்பீர்களாக. மனிதர்களுக்கு மத்தியில் குற்றமற்ற தேஜஸை யெங்களுக்களிப்பீர்களாக. யாங்களும் வீரர்களது போர்க்களத்திற் செல்வங்களைப் பெறட்டும்—(எ-று)

## மண்டலம் 1 சூக்தம் 157.

3. முவ்வருளை யுற்றகமுத் தட்டுடைய
தருஞ்செல்வ முட்டின் றேய்ந்த
தொவ்வுமெலாச் சவுபாக்கிய முமடைந்த
தசுவினிகளுற்ற தேர்நன்
கெவ்வமறு துதிகொண்ட திபைவேகப்
பரிபூண்ட தெம்மாட்டெய்தல்;
செவ்வையினெக நாற்பதத் தோடிருபாதப்
பிராணிகட்குஞ் சுகத்தைச் சேர்க்கல்.

(இ-ள்.) மூன்று சக்கரங்களோடு கூடியதும், மூன்று ஸாரதிஸ்தானங்களுள்ளதும், செல்வநிறைந்ததும், எல்லாச் சௌபாக்கியங்களைப் பெற்றதும், அசுவினிகளைத் தம்மிடத்தே யுடையதும், எமது நல்ல ஸ்துதி வசனங்களோடு கூடியதும், வேகமாகச்செல்லும் குதிரைகள் கட்டப்பெற்றதுமான தேர் எம்மிடத்து வரட்டும். எங்களது நாற்கா லிருகாற் பிராணிகளுக்கும் சுகத்தைத்தரட்டும்—(எ-று.)

4. ஊட்டிவளருண்டியினை, யசுவினிகா,
ளெங்களுக்கென் றுவப்பி னேய்க்க,
கூட்டுமதுக்கசையதனு லெங்கண்மேற்
பயன்றெளிக்க; கூடியாங்க
ளீட்டிய குற்றங்களினை யோட்டுக; எம்
மாயுளினை யெணிவளர்க்க;
வாட்டியழித்திடுகபகை; கூடவுறுந்
தோழர்களாய் வளர்கவின்றே.

(இ-ள்.) அசுவினிகளே! உடலைப்போஷிக்கு முணவினை யெங்களுக் களிப்பீர்களாக. மதுநிறைந்த தாற்றுக்கோலினால் எங்கள்மேற் (பலனை)த் தெளிப்பீர்களாக. எங்கள் குற்றங்களை யழிப்பீர்களாக. எமது வாழ்நாளை விருத்திசெய்வீர்களாக. எங்களோடு தோழர்களாயிருப்பீர்களாக—(எ-று.)

(வேறு.)

5. நீங்கள் பெண்பகட்டிற் கண்டீர் கருவினை நிறுத்துகின்றீர்;
நீங்களெப் பூதந்தோறு முள்ளிடத் ததனை யேய்ப்பீர்;
ஓங்கிய விச்சை யூட்டு மசுவினீர் வனபபதியை
நீங்க வங்கியைத் தண்ணீரை நிலைபெறவளர்க்கின்றீரே.

(இ-ள்.) பெண் பிராணிகளது பகட்டில் நீங்கள் கருப்பத்தை நிறுத்துகிறீர்கள். எல்லாப்பூதங்களுக்குள்ளேயும் அக்கருவைவைப்பீர்கள். இச்சைப்பட்டவற்றைத்தரும் அசுவினிகளே! வனஸ்பதிகளாகிய பெருமரங்களையும், அக்கினியையும், தண்ணீரையும், நீங்கள் விருத்திசெய்கிறீர்கள்—(எ-று.)

6. மருந்தொடு விளங்கா நிற்கு மருத்துவர் நீவிர்; தேர்க்கட்
பொருந்திய கதிமாவோடு புகழிற்றேர் கடாவுவீர் நீர்;

## அஷ்டகம் 2 அத்தியாயம் 3.

திருந்துற வவியைத்தாங்கிச் சிறப்புறுமுள்ளத்தோடு
வருந்தியே யளிப்பவர்க்கு வல்லபமேய்ப்பீர் ஞாட்பீர்.

(இ-ள்) (அசுவினிகளே!) நீங்களிருவரும் நோய்நீக்கு மருந்தோடு கூடிய மருத்துவர்களாம். வேகமான குதிரைகளோடு கூடிய தேரை யோட்டுவீர்கள். அவிப்பொருள்களைச் சுமந்துவந்து மனத்தோடு தருமவனுக்கு, உக்கிரம் பொருந்தியவர்களே, மேன்மையான வல்லபத்தைக் கூட்டுவீர்கள் —(எ-று.) ஞாட்பு, உக்கிரம், வல்லமை ஒருபொருளன.

வருக்கம் 27.

ஆகச்செய்யுள் 280.

### இரண்டாவது அத்தியாயம் முற்றும்.

———:o:———

## மூன்றாவது அத்தியாயம்.

இவ்வத்தியாயத்தில் 26 வருக்கமும், 6 ஸூக்தங்களும், 132 இருக்குக் களு முள்ளன.

### 158. மண்டலம் 1. அநுவாகம் 22. சூக்தம் 2.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஔசத்ய தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப், 6 அநுஷ்டுப்; தேவதை: அசுவினிகள்.

1. வாசவீ, ருருத்திரர்காள், மன்னுபல் ஞானத்தீர், போற்
றுசுறவளர்க்கும் பண்பீர், பகையினை யடக்குவீ, ரெம்
மாசைக ளியைப்பீ, ரிட்டி யமைந்துளீ, ரிடுக்கிலாது
வீசுமூ ருதியி னௌசத்யன் விழைவளிப்பதனி னீகல்.

(இ-ள்.) செல்வத்தோடு கூடியவர்களே! துக்க நிவாரணஞ் செய்பவர்களே! பலவிஷயங்களை யறிந்தவர்களே! ஸ்தோத்திரத்தால் வளருந்தன்மையுள்ளவர்களே! பகைவரை யடக்குபவர்களே! எமது இச்சைகளை வர்ஷிப்பவர்களே! யக்ஞத்திற் பூஜிக்கப்படுபவர்களே! லோபத்தனமில்லாது செய்யு முங்களிருவரது உதவிகளினாலும் உசத்தியன் மகன் ததிருபமாக விரும்புமவற்றை யளிப்பதுபோல எங்களுக்கும் தருவீர்களாக—(எ-று.) வாசவர், வசுக்களோடு கூடியவர்; வசு, செல்வம். ருத்ரசப்தத்தின்பொருளை மண். 1 சூக். 114 செய். 1ற் பார்க்க. இட்டி, யாகம். உசத்தியன்மகன் ஔசத்யன் தீர்க்கதமஸன், இம்மறையைக் கண்டவன்.

2. கோபதந் தன்னிலும்மை வணங்கிட கொடுக்குமுந்தஞ்
சோபையார் மனத்தினோடு கொடையெனி வசுக்கள்யாரே

## மண்டலம். 1 சூக்தம். 158.

தாபத நிலையி னிவோன்? நாடிய தருமுள் ளத்திர்.
தாபமா நடலை யோம்புந் தனத்தொடு மெழுந்து வாரீர்.

(இ-ள்.) வசுக்களே! கோபதமாகிய வேதிபூமியினிடத்து எம்மை வணங்கியதற்காகத்தரும் உமது சோபன புத்தியையும் (ஒன்றுக்குப் பலவாகத்தரும்)தானத்தையும் எண்ணி யார் உமக்குத் திருப்திவரும்படி யவி யளிக்குஞ் சக்தியாய்ந்தவன்? (ஒருவருமில்லை. நீவிர் அவ்வளவு பிரபாவம் பொருந்திய மகத்துவத்தோடு கூடியவர்கள் என்றபடி ) மக்கள் விரும்புபவற் றைத்தரும் மனத்தோடு கூடியவர்களே! உமது உடலைவளர்க்குந் தனத் தோடு வருவீர்களாக—(எ-று.) வசு, செல்வம். கோபதம், பசுவினிடம் என்டு பசு பூமியைக்குறிக்குமென்பார் ஸாயணர்.

3. குதிரையைப் பூட்டியன்றே வேகமார் குபவை யர்னைத்
தகுவலியோடு நாப்ப ணமைத்தனிர் துக்கிரன்றன்
புதல்வனை யெடுப்பான்? அற்றே பதங்கமாவோடு சூர
னெதிர்வதி னுமதுகாவற் சரணத்தை யேய்க யானே.

(இ-ள்.) (அசுவினிகளே!) துக்கிரனது புத்திரனுகிய புஜ்யனைத் தூக்கியெடுப்பதற்காகக் குதிரைகளைப் பூட்டி யல்லவா வுமது வேகம் பொருந்திய தேரைச் சமுத்திர மத்தியில் அதிகவலிமையோடு மமைத்தீர்கள்? அதுபோலவே பறக்குங் குதிரைகளோடு கூடிய சூரன் தனது சத்துருக்க ளைச் சயித்துப் பயமின்றித் தன்னுடைய வீட்டையடைவதுபோல உமது காவல்பொருந்திய ரட்சணங்களையான் அடையட்டும் —(எ-று.) புஜ்யன் கதையை மண். 1 சூக். 116 செய். 3ற் பார்க்க. ஈண்டு ஸாயணர் புஜ்யனைச் சத்துருக்கள் பாசத்தினுலுறுதியாகக்கட்டி நடுச்சமுத்திரத்தி லெறிந்தார்க ளென்க்கூடச்சொல்லுகிறார்.

4. உளங்கொண்டு போற்றுமிவ்வெ னுயர்துதியுசத்தியன்றன்
களங்கதொண்ட புதல்வற்காக்க; சாரிறகிருவரென்னைத்
தளர்ந்தழியாதமைக்க; தசவடுக் கெரியுங் கட்டா
குளந்தனி னுற்ற பூமியுண்பொழுதெனைச் சுடற்க.

(இ-ள்.) [இங்கோ ராக்கியானமுண்டு. உசத்தியனுக்கும் மமதைக் கும் புத்திரனுன தீர்க்கதமஸன் கிழத்தன்மை யடைந்திருந்தவனைச் சேவிக் கமுடியாததால் தாஸர்கள் அவனைநெருப்பிலிட்டார்கள். அவன் அசுவினிக ளைத்துதித்துத்தப்பினுன்: பின்னர் அவனைச்சாகும்படி தண்ணீருக்குள் மு முக்கஅங்கிருந்தபடியே மறுபடியும் அவன்அசுவினிகளைச்சந்தோஷப்படுத்தி னுன். அவர்களுளங்களித்து அவனைத் தண்ணீரினின்றுந் தூக்கிவிட்டார் கள். அதன்பிறகு அத்தாஸர்களுள் ஒருவனுன திரைதனன் அவனது தலை யை வெட்டயத்தனித்ததில் தனது சிரமும் மார்பும் வெட்டுண்டான்.] (அசு வினிகளே!) மனத்தினுல் எண்ணித்துதிக்கும் எனது இந்தத்துதி உசத்தி யன் மகனுகிய தீர்க்கதமஸனைக் காக்கட்டும். சிறகுகளோடு கூடிய இருவர் ளாகிய பகலும் இரவும் எனக்குத் தளர்ச்சியை யளிக்காமலிருக்கட்டும். பத் துதரம் ஒன்றின் மேலொன்றாக வடுக்கப் பட்டவிறகுத்தீ, உமது கட்டுக்

குட்பட்ட மனத்தோடு தனக்குக் கீழுள்ள பூமியை உண்டழிக்கும் போது என்னைச் சுடாமலிருக்கட்டும்—(எ-று.) இக்கவி மாமதேயனாகிய தீர்க்கத மஸன் தன்னையே படர்க்கையாக்கி யுரைத்தது.

5. உறுதியி னென்னைப்பிணித்துத் தாசர்களுய்த்தவேக
முறுநதியாஞ் சிறந்த தாயரு முழுக்கா தேய்ந்தார்;
கறுவியவுளத்தி னென்றன் சிரத்தினைக் கடியுந்தாச
னிறுதியி னுரமுங் காய மெய்தினன் திரைதன்னனே.

(இ-ள்.) என்னை யிறுகப் பிணித்துப் போட்ட நதிகளாகிய உத்தமத் தாய்மார்களும் என்னை முழுக்கவில்லை. கோபத்தோடு என்சிரத்தை வெட்ட வெண்ணின தாஸனாகிய திரைதனன் தனது சிரத்தோடு மார்பும் வெட்டுப் பட்டான்—(எ-று) இச்செய்யுளை மூன்று இரவு பக்தியோடு சூரிய தர்சனம் வரையிற் சபித்தால் திருடராலும் தன்னைக் கெடுக்க வெண்ணுவோராலும் வரும் கஷ்ட நீங்கு மென்பார் சௌநகர். மேலும் ஆததாயிகள், புலி, கோநாய் இவற்றின் வாதையும் இச்செய்யுளைச் சபிப்பதால் நீங்கு மென்றும் கூறுவார் அவரே.

(வேறு.)

6. மாமதேயனும் பிறவிப்பந்தக னொடுமிருளி
னுமதேயன் பத்தாவது யுகத்தினி னலிவைத்
தோமமாரவே யெய்தினான்; கருமத்தின் பொருட்டுத்
தோமமோதும் வேதா வெனச் சூதனிற் றேய்ந்தான்.

(இ-ள்.) மமதையின் புத்திரனும் பிறவிக்குருடனான தன்மையினால் தீர்க்கதமஸனெனப் பெயர் வாய்ந்தவனுமான ரிஷி (அசுவினிகளி னருளினாற் பத்துயுகஞ் சுகமாயிருந்து பின்னர்ப்) பத்தாவது யுகத்தில் ஜீர்ணத்தோடு திரைத்த சரீரத்தை யடைந்தான். கருமங்களைச் செய்வோருக்குப் பிரஹ்மாவாகவும் தேர்ப்பாகனைப் போல (அத்வர்யுக்களை) நடத்துவோனாகவுமாகிறான் —(எ-று.) யுகம் என்னும் பதத்திற்கு ஐந்துவருஷமுள்ள ஒரு காலவளவை யென்னும் பொருளுண்டு. பிறவியந்தக னென்றது வடமொழி மூலத்திலில்லை: தோம மென்னுஞ் சொல், குற்றம் ஸ்தோமம் என இரு பொருளிலும் இருமுறை உபயோகிக்கப் பட்டுளது. இச்செய்யுள் தீர்க்கதமஸன் தன்னையே படர்க்கையாகக் கூறிய தென்பார் ஸாயணர். ஆனால், பின்னோர் இடைப்புகுத்திய செய்யுளிது வென்பார்மேனாட்டாசிரியர். இவர் ஐந்துயுக மென்பது 100 வருஷமாயிருக்கலா மென்பர்

வருக்கம். 1.

## 159. மண்டலம். 1, அநுவாகம். 22. சூக்தம். 3.

5 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஒஷி தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: ஜகதி; தேவதை: தியாவாப் பிருதிவிகள்.

## மண்டலம் 1 சூக்தம் 159.

(வேறு.)

1. மகமதனில்வி யோடுபகத்தான
புவிவானை, மவிஞானத்தி
னிகமதனில் ரிதம்வளர்க்கு மிருவரினைத்,
தேவரொடு மியைந்து தேவர்
மகரெனவே பெற்றெழிலார்கன்ம வழி
யுண்மை செறி மதியிற் சிரி
னகவுறுநல் வரத்தனத்தை யழகினளிப்
பவரைச்,சொலார்த்துவேனே.

(இ-ள்.) மகத்தவம் வாய்ந்தவர்களும், ஞானவான்களும் ரிதத்தை (யக்ஞத்தை யல்லது ஒழுங்கை) வளர்க்கு மிருவரும், தேவர்களோடுகூடி அத்தேவரைப் புத்திர ஸ்தானத்திற் பெற்று அதிசயகன்மத்துவார ஸாத்தியபலன் வாய்ந்த புத்தியோடு, சிறந்த செல்வத்தை யழகாகத் தருபவருமான தியாவாப்பிருதிவிகளை யாகதலத்தில் அவிப் பொருள்களோடு ஸ்தோத்திரஞ் செய்வேன்—(எ-று)

2. வஞ்சனையில் பிதிர்மனத்தைத் தாயினது
பெரும்பலத்தை மதித்துப்பின்னுஞ்
செஞ்சுமொழி யவங்களினு னினைத்திடுவேன்;
வினைவார்ந்த கேடில் பெற்றோர்,
விஞ்சமவர் திறங்கொண்டு பிரசைகட்கு
மேன்மைசெறி யுதவியேவி,
யெஞ்சலில் பன்படங்கு விரிந்திடுமமுதப்
பண்பதனை யியைத்தாரன்றே.

(இ-ள்) வஞ்சனையில்லாத வானமாகிய பிதாவினது மனத்தையும், பூமியாகியதாயின் மகத்துவம் வாய்ந்த சுயசக்தியையும்மனத்தில் எண்ணிப் பின்னரும் ஹவங்களினால் ஸ்துதி பூர்வமாகநினைப்பேன். நல்லவினைவைத்தரும் தேஜஸோடுகூடிய அப்பிதாமாதாக்களாகிய பெற்றோர் தங்களது சாமர்த்தியத்தினுல்சிறந்த உதவிகளோடு யஜமானர்களாகிய பிரஜைகளுக்காகப்பலமடங்காக விரிந்து நிற்கும் அமிர்தத் தன்மையைச் சிருஷ்டித்தார்கள்-(எ-று) அவங்கள். ஹவங்கள் என்னும் வடசொல்லின் சிதைவு, அழைப்புக்கள் என்பது பொருள். தியாவாவைப் பிதாவாகவும், பிருதுவியை மாதாவாகவும் மண். 1 சூக். 191 செய். 6ற் கூறுவார்.

3. சற்கருமப் புத்திரர்க ளற்புதமார்
காட்சியினிற் சார்ந்த வின்றோர்
முற்படவே புவிரெழுவான் பெருந்தாய
இருவரையு முற்கொணர்ந்தார்;
நிற்பவற்றே டொழுகுபவை யிவற்றுண்மை
காத்திடுவா னிலைத்தருளு
வற்பமெனு மிருமையுறு தவன்பதத்தை
நன்குறக் காக்கின்றீரே.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 3.

(இ-ள்.) சற்கருமத்தோடு கூடியவரும் அற்புதமான தோற்றத்தை யுடையவர்களுமான இப்புத்திரர்கள் உலகத்திலுள்ள பிராணிகள் முற்பட வெழுமாறு மகத்துவம் வாய்ந்த தியாவா பிருதுவிகளென்னும் இரண்டு தாய்மாரையும் முதலிற் றோற்றுவித்தார்கள். தியாவா பிருதுவிகளே! ஸ்தாவரஜங்கமங்களின் உண்மைகளைக் காப்பதற்குத் தோன்றிய புத்திரனும் இரண்டு தன்மையில்லாதவனுமான சூரியனுடைய பதத்தை நீங்கள் நன்றாகக் காக்கின்றீர்கள்—(எ-று.) இப்புத்திரர்கள் என்றது புத்திரஸ்தானத்திலுள்ள பிரஜைகளென்பார் ஸாயணர். ஆனால் ரிபுக்களென்பார் மேனாட்டாசிரியர். மண். 1 சூக். 20 செய். 4ற் பார்க்க. சூனு, புத்திரன்; அது ஈண்டு சூரியனைக்குறித்தது.

4. மாயையல்ல நல்லறிஞ ராமவர்க
ளோரிடத்தின் வந்தோர் தம்மைத்
தோயுமிட மொத்த மிதுனங்களெனு
முடன்வயிற்றைத் துலக் களந்தார்;
ஏயுமொளிக் கவிகள்விணி னனந் தலையுஞ்
சமுத்திரத்தி னிடையு நூலைத்
தூயபுதுத் தன்மையினி லெக்காலும்
நூற்றுவிரிதரத்தோய்த்தாரே.

(இ-ள்.) மாயையில் அல்லது தமது காரிய ஞானத்திற் சிறந்த நல்ல ஞானிகளாகிய அவர்கள் (தியாவாப் பிருதுவிக ளென்பார் ஸாயணர்.) ஒரேயிடத்தினின்று பிறந்தவர்களும், சமமான வீட்டோடு கூடியவர்களும், மிதுனங்களுமான சகோதரங்களை (பூமிவானங்களை யென்பார் மேனாட்டாசிரியர்) அளந்து இரண்டாகப் பிரித்தார்கள். பிரகாசம் பொருந்திய கவிகள் வானமத்தியிலும் ஸமுத்திரமாகிய அந்தரிட்சத்தினிடையிலும் புதிது புதிதாகக்கிரணங்களை நூற்று விரியும்படி விட்டார்கள்—(எ-று.) நூல் கிரணம் அல்லது கதிரைக்குறித்தது. ஸமுத்திரம் அந்தரிட்ச மென்பது நிருக்தம்.

5. சவிதாவாந்தேவன்ற னருக்ரை யடைந்
தச்சிறந்த தனத்தையின்று
குவிகையொடும் யாசிப்போம்; வான்புவிகா,
ளெம்மாட்டுக் கூர்ந்தவன்பி
னவிர்மனத்தி னருளோடு மகநிறைந்து
பதிற்றுப்பத் தாகுமாக்கள்
தவவிளங்குந் தனவகையை பெமக்களிக்க
வுளங்கொண்டு தருதுவீரே.

(இ-ள்.) ஸவிதா வென்னும் தேவனுடைய சம்மதத்தைப் பெற்று அந்தச் சிறந்த செல்வத்தை யித்தினத்திற் றரும்படி கூப்பிய கைகளோடும் யாசிப்போம் தியாவாப் பிருதிவிகளே! எங்களிடத்து அநுக்கிரக புத்தியோடு கூடி, கிரகங்கள் நிறைந்ததும் நூற்றுக் கணக்கான பசுக்களோடு விளங்குவதுமான செல்வத்தை எங்களுக்குத் தருவீர்களாக—(எ-று.)

## மண்டலம் 1 சூக்தம் 160.

## 160. மண்டலம். 1. அநுவாகம். 22. சூக்தம். 4.

5 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: தீர்க்கதமஸன்: வடமொழிச்சந்தம்: ஜகதி; தேவதை: தியாவாப் பிருதிவிகள்.

1. எவ்வகைய சுகத்தினுக்குங் காரணர்கள்
நிதமுடையோர் ரஜத்தை யேந்த
வெவ்வுமனக்கவி யிருவர் பிறப்புநலத்
தோர்புவிவா னெனவுரைக்குங்
கவ்வுமொளித் தேவிபரா மவரிடையன்
றேயெல்லென் கதிர்வாய்தேவ
னெவ்வமறப் பலபொருளைத் தாங்கிமிகத்
தூய்மை யொடு மேகுகின்றான்!

(இ-ள்.) எப்பேர்ப்பட்ட அல்லது எல்லாச் சுகத்துக்குங் காரணபூதர்களும், நிதத்தோடு (உதகத்தோ டென்று பொருள் கூறுவார் ஸாயணர்.)கூடியவர்களும்,ரஜத்தை அல்லது நீர்நிறைந்த அந்தரத்தைத் தரிக்கும் எண்ணம் வாய்ந்த இரண்டு மேதாவிகளும், நற்பிறப்புள்ளவர்களும், பூமி வானங்களென்னும் ஒளிபொருந்திய தேவிமாருமாகிய அவர்களுக்கிடையிலவ்வா சூரிய னென்னுங் கதிர்த் தேவன், பிரகாசம், நீர்முதலிய பல வஸ்துக்களைத் தாங்கிக்கொண்டு சுத்தனாய்ச் செல்லுகிறான்—(எ-று.) நிதம் ரஜம் இரண்டிற்கும் உதகமெனவே பொருள்கூறுவர் ஸாயணர்.

2. மிகவிரிந்தோர் மகத்துவர்கள் பிரிந்துள்ளோர்
தந்தையொடு விழையுந்தாயாம்
வெருதுணிவி னுரோதசிக ளுடனோம்பு
வோரெனவே மேதினிக்கண்
மகிழுயிரைக் காக்கின்று ரெய்கனுஞ்செ
றணிமிகுந்த வண்ணரூபத்
தகவுடையி னன்னவரை யழகாகப்
பிதா போர்த்த தகைமையானே.

(இ-ள்.) பிதா (இப்பிதா தவஷ்டு வென்பார் மேலுரையாசிரியர் தியாவா வென்பர் ஸாயணர்.) எல்லாப் பக்கத்திலும் அழகிய போர்வையினால் அப்பூமிவானங்களை மூடினதனால், மிகவும் விரிந்தவர்களும், மகத்துவம் வாய்ந்தவர்களும், ஒருவரோ டொருவர் பிரிந்துள்ளவர்களும், தந்தையும் தாயும் ஆனவர்களும், மிகுதுணிவோடு கூடியவர்களுமான ரோதஸிக்கள் சரீரத்தை வளர்ப்பவர்களாகிய பெற்றோரைப்போலப்புவனங்களிலுள்ள ஜீவகோடிகளை ரட்சிக்கின்றார்கள்—(எ-று.)

3. பெற்றோர் தம்மகன் ஞானி பவித்திரவா
னும்வன்னி பிறங்குமாயை

## அஷ்டகம் 2 அத்தியாயம் 3.

யுற்றூர்ந்து புவனங்கடை மைந்துய்மை
யுறுத்துகிறான்; நங்கும் வெண்மைக்
கற்றுவை நற்றுதக் காளையினை
வெள்ளிய பால் கறந்தியன்றான்
சற்றேனு மோயா தெல்லாக்காலத்
தாங்கரந்து சார்கின்றானே.

(இ-ள்.) பெற்றோர்களாகிய தியாவாப்பிருதுவிகளின் புத்திரனும், புத்திமானும் பரிசுத்தஞ் செய்யுங் கிரணங்களோடு கூடியவனும், பலனைத் தாங்கிச் செல்பவனுமான சூரியன் மாயை நிறைந்து புவனங்களைப் பரிசுத்தஞ்செய்கிறான். அவனே வெண்மைநிறம் வாய்ந்த கறவையாகிய பூமியையும், நாது புஷ்டியுள்ள காளையாகிய வானத்தையும் வெண்ணிறமான பாலைக் கருதிக்கறக்கிறான்—(எ-று.) பால் ஈண்டு ஸாரபுஷ்டியுள்ள நீரைக் குறிக்கும். புத்திரனை சூரியனுடையமகாத்மியத்தைக் கூறிப் பெற்றோர்களைப் புகழ்ந்தபடியென்பார் ஸாயணர். ப்ருச்நி: வெளுப்பென்றுமீண்டு. பன்னிறமென்பது மண். 1 சூக். 23 செய். 10 ற் கூறினர், ப்ருச்நிமாதர: மருத்துவர் என்ற சந்தர்ப்பத்தில்.

4. தொழில்சிறந்த தேவர்களிற் றெழில்சிறந்தோ,
னெல்லார்க்குஞ் சுகத்தை யேய்க்கு
மெழில்சிறந்த வுரோதசியைப் படைத்தவனு,
நற்கிரியை யினைய வெண்ணிப்
பொழிலிரண்டை யளந்தவற்றைத் தனித்தனிநிர்
மித்தவனும், புகலெக்காலு
மழிவுபெறுத் தூண்களைக் கொண்டசையாமே
யமைத்தவனு மாமன்றானே.

(இ-ள்.) (மேற்செய்யுளில் புத்திரனாகிய சூரியனைப் புகழ்ந்து தியாவாப்பிருதுவிகளைப் பெருமைப்படுத்திய கவி ஈண்டு சிருஷ்டி கர்த்தாவைப்புகழ்ந்து அவற்றையுயர்த்துகிறா ரென்பார் ஸாயணர்.) எல்லாருக்குஞ் சுகத்தைத்தரும் பூமிவானங்களைப் படைத்தவனும், சோபனகருமவிச்சையினால் இவ்விரண்டுலகங்களையுந் தனித்தனியாக நிருமித்தவனும், அவைகள் அசையாதவண்ணம் ஒருகாலத்து மழியாத தூண்களால் நிறுத்தினவனுமான அச்சிருஷ்டிகர்த்தா தொழிலிற் சிறந்த தேவர்களி லுத்தமத் தொழிலாளியாம்—(எ-று.) ரஜஸீ என இருமை வாசகமாகவுள்ளது அதனாற் பொழிலிரண்டையென்றார். பொழில் உலகப்பொது. 'கடிபொழிலேழினும் என்றார் மணிவாக்கர். திருக்கோவையார் 393 பார்க்க.

5. வான்புவிகாள், துதிவாய்ந் தெந்தக்குமிகுங்
கீர்த்தியினை, மகிமை யார்ந்தீர்,
ஆன்றெமது பிரஜைகள் மீதெக்காலு
மாட்சியுறு மாற்ற றன்னை

## மண்டலம் 1. சூக்தம் 161.

பேன்றளிப்பீர்; மாக்கரது புகழ்ச்சிபினை
மருளியுறு செறுமை பெங்கட்
டோன்றும்வகை யநுக்கிரக மதிபொடு
வளர்ப்பிப்பி ருவப்பி னின்றே.

(இ-ள்) வானம் பூமிகளே! மகிமைமிகுந்த விருவர்களே! மிகுந்த கீர்த்தியையும், எங்கள் புத்திர பிருத்தியாதி பிரஜைகளை யெப்போது மடக்கியாளும் ஆற்றலினையும் எங்களுக்கு அளிப்பீர்களாக. மனிதர் புகழ்கின்ற பலத்தை யெங்களுக்கு விருத்தி செய்வீர்களாக—(எ-று.)

### வருக்கம் 3.

## 161. மண்டலம் 1. அநுவாகம் 22. சூக்தம் 5.

### 14 இருக்குக்கள்கொண்டது.

ரிஷி: ஔசி தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: 1-13 ஜகதி, 14 த்ருஷ்டுப்; தேவதை: ரிபுக்கள்.

1. கீர்த்தியினற் சிரேட்டனுந்தன் வயதினிளை
யவனுமிவட் கிளரு மெங்க
ணார்த்தறிஎன்? எத்தூதைக் கொண்டணைந்தான்?
என்ன சொன்னேம்? அருமையார்ந்து
சிறந்தபிறப்புள சமசத்தை நிந்தை
கூறலம் யாம்; திகழ்மரத்தின்
வார்த்தையினைச், சோதரனே யக்கினியே!
சிறப்பாமைய வழங்கி னேமே.

(இ-ள்) [ஸுதன்வன் புத்திரனாகிய ரிபு, விப்வான், வாஜனென்னு மூவரும் மனிதராயிருந்து தேவத்துவமடைந்து ஒரோவொரு கர்மஸமயத்திற் சோமபானஞ் செய்யப்பிரவர்த்தித்தவர்கள் அங்கே தேவர்களாற் பிரேரேபிக்கப்பட்டு அக்கினியானவன் அவர்களைப்போலவே உருவமெடுத்திருப்பதைக் கண்டு அவனை யறியமுடியாதவர்களாய் ஒருவரோடொருவர் ஸந்தேகப்பட்டுப் பேசிக்கொள்ளுகிறார்கள்.] கீர்த்தியினற் பெரியவனும், வயதிற் சிறியவனுமான விவன் எம்மிடத்து என் வந்தான்? என்ன சமாச்சாரத்தைத் தேவர்களிடத்திலிருந்து கொண்டுவந்தான்? நாங்கள் என்ன சொன்னோம்? சகோதரனாகிய அக்கினியே! சிறந்த பிறப்போடு கூடியதால் (துவஷ்டாகிருமித்ததா லென்க.) இச்சமஸத்தை நாங்கள் நிந்திக்கோம். அது செய்யப்பட்ட மரத்தின் சிறப்பை யெடுத்துக் கூறினோம்.—(எ-று.) சமஸம் மரப்பாத்திர விசேஷம். துரோணத்திலிருந்து ஸோமத்தைமொண்டு ஆவதி செய்ய வுதவும் செப்புமென்றது. மண். 1. சூக். 20. செய். 6.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 3.

2. ஒன்ருக வுளவிந்தச் சமசமதை
நான்காகவு ளுற்றல்; ஈதே
பொன்ருத தேவருமக்குரைக்க வெனச்
சொல்லினர்கள்; போந்தேன் யானும்;
கன்ருத சுதன்வனது புத்திரர்கா
ளித்தொழிலைக் கன்மராயின்
மன்ருரு மகத்தேவர் தம்மோடு
நீங்களுமே மருவுவீரே.

(இ-ள்.) ஒன்ருயுள்ள இச்சமஸத்தை நான்காகச் செய்யுங்கள். இதனையே தேவர்கள் உங்களுக்குச்சொல்லச் சொன்ஞர்கள். அதற்காகவே யானும் வந்தேன். சுதன்வனது புத்திரர்களே! இதை நீங்கள் செய்வீர்களாயின் தேவர்களோடு கூட நீங்களும் யக்ஞத்தில் பூஜிக்கத்தக்கவர்களாவீர்கள்—(எ-று)

3. தூதேய்ந்த வக்கினிக்குப் பதிலாக
நீருரைத்தீர். தோயுமாவைத்
தோதேய்ந்த வழிச்செய்தோர் தேரினையுஞ்
செய்வித்துத், தோலினின்றும்
போதேய்ந்த பசுவயக்கி, யிருவரையு
மிள்மையுறப் புரிந்து, பின்னர்
நீதோய்ந்து சொன்னதொழி லெனித்தம்பி
யிழைப்பமெனு நிலையார் சொல்லே.

(இ-ள்.) [இச்செய்யுள் ரிஷிரிபுக்களை நோக்கிச்சொல்லியது] தூதனுக வந்தவக்கினிக்கு நீர் பின்வரு மொழிகளைப் பதிலாகச்சொன்னீர்கள்: 'ஒரு அசுவம் சிருஷ்டிக்கப்படவேண்டும். ஒரு தேர் செய்யவேண்டும். (தோலிலிருந்து) ஒரு பசுவையுண்டாக்கவேண்டும். தியாவாப்பிருதிவிகளாகிய விருவரையும் இளமைப்படுத்தவேண்டும். இவற்றிற்குப் பிறகு, பிராதாவே நீ சொன்ன தொழிலைச் செய்வோம்.'—(எ-று.) தோலிலிருந்தென்றது, இச்சூக்தம் 7-ம் செய்யுளைக்கருதியென்க. மண். 1. சூக். 110. பார்க்க. இருவர் புவிவானங்கள்: மண். 1. சூக். 20. செய். 4. பார்க்க. இக்கருத்துக்களை, மண். 1 சூக். 20, இலும். சூக். 110, 111 லும் விரிவாக பார்க்கலாம்.

4. இரிபவர்கா ளவ்விதமே முடித்தவுட
னீண்டணைந்த வெழிலார் தூதன்
றிரிபவனு யெங்குற்ருனெனவினவத்
துவட்டா வந்திகழு நான்கு
பரவைகளா யியற்றியுள தன்மையினைக்
கண்டதுமே மனத்தின் வெள்கிக்
கரவுறவே மறைந்தனனுற் றேவமா

## மண்டலம். 1. சூக்தம். 161.

(இ-ள்.) ரிபுக்களே! அவ்விதமாகவே முடித்தபிறகு, 'இங்கு வந்த தூதன் எங்குசென்றானெனக்கேட்டீர்கள். அப்பொழுது துவஷ்டா தனது சமஸம் நான்காய்ச் செய்யப்பட்டிருப்பதைக்கண்டு தேவமாதர்களுக்கிடையே ஒளிந்துகொண்டான்—(எ-று.) தன்னை ஸ்திரீயென மதித்தான். என்பார் ஸாயனர். ரிபுக்களைக் கொல்ல நினைத்து ஒளிந்தானென்றும் ஸ்திரீகள் தேவகக்ஷைகளாயிருக்குமென்றும் மேனாட்டாசிரியர் கூறுவர்.

5\. தேவர்கட்கும் பானமதற் குபயோக
மாகின்ற சிறப்பார் செப்பை
பாவமொடு மகிழ்ந்தவரை யழிப்பமெனத்
துவட்டாவு மறைந்த காலை
மூவர்களும் வேறுபெயர் தரித்தனரால்
சுதைபிழிய முயன்ற காலத்
தோவறுமப மறுபெயரி னவர்களைக்கன்
னிகையேற்று ளுவக்க மன்றே.

(இ-ள்.) தேவபானத்துக்கான சமஸத்தை இகழ்ந்த ரிபுக்களை அழிப்போமென்று துவஷ்டா சொன்னதும், சோமம் பிழியும் அவர்கள் வேறு பெயர்களைத் தரித்துக்கொண்டார்கள். அவ்வேறு பெயர்களோடு கூடிய அவர்களைத் துவஷ்டாவின் புத்திரியாகிய கன்னிகையும் பிரியத்யதோடேற்றுப்பரிபாலித்தாள்—(எ-று.) புதுப்பெயர் ரிதுக்களாயிருக்கலாமென்பர் லுட்விக் என்பவர். கன்னிகை வருஷாரம்பத்துக்கு அதிதேவதையாகிய துவஷ்டாவின் புத்திரியென்பாரவரே. ஆனால் அம்மூவரும் தங்கள் நிசப்பெயர்களைச் சொல்லாது. ஹோதாவே. அத்வர்யுவே, உத்காதாவே, யென தங்கள் தொழிற்சங்கேதநாமங்களாற் றங்களை யழைத்துக்கொண்டார்களென்றும், கன்னிகையென்பது அவர்களைத்தோற்றுவித்த பூமியாகிய தாயைக்குறித்ததென்றும் ஸாயனர் கூறுவர்.

### வருக்கம். 4.

6\. இந்திரன்ற னரியிரண்டைப் பூட்டினனு
லசுவினிக ளிபைத்தார் தேரில்
நந்துமறைப்பதி விசுவ ருவாரும்
பசுவடைந்தான்; நனினித்தேவர்
தந்திசைசேர் சென்றிட்டீர் ரிபுவிப்வான்
வாஜரெனச் சற்கன்மத்தோ
டுந்தமது பங்கடைந்தீர் பாகமதில்
யாம்வணக்கு முரிமையார்க்கே.

(இ-ள்.) இந்திரன் றனது தேரில் தனது இரண்டு குதிரைகளையும் பூட்டினான். அசுவினிகளும் அங்ஙனே தேரிற்பரியைக் கூட்டினர். பிரஹஸ்பதியும் எல்லாவர்ணங்களோடுங் கூடிய பசுவை யடைந்தான். அப்பொழுது, நீங்களும் ரிபு, விப்வான், வாஜன் என்னும் உமது பெயர்களோடு

## அஷ்டகம் 2. அத்தியாயம் 3.

தேவர்களிடத்தூச்சென்று யாகத்தில் அவிப்பாகத்தைஅத்தேவர்களோடொக்கப்பெற்றீர்கள்—(எ-று.) விசுவ உருவு ஆரும் பசுவென்றது, காலாபிமானி தேவதைகளால் மீண்டும் செழிப்பிக்கப்பட்ட பூமியைக் குறிக்குமென்பார் மேனுட்டாசிரியர். இச்செய்யுள் ரிஷிக்கூற்று.

7. ஞானமதாற் சருமத்தி னின்றுவை
யுருப்படுத்தி, நலிந்து தோன்று
மீனமிலாப் பெற்றோரை யிளமையுற
விசைத்திட்டீ ரேன்ற மாதின்
றானமறு மோர்மாவை யுறுத்தினிர்சௌ
தன்வானீ ருமது தேரின்
மானமுறு பரிபூட்டித தேவரிடைச்
சென்றிட்டீர் மதிக்கத் தானே.

(இ-ள்.) சுதன்வனது புத்திரர்களே! உம்முடைய ஞானகர்மங்களால் தோலினின்றும் பசுவைச் செய்தீர்கள். கிழப்பட்டு நலிவாகத் தோன்றிய தியாவாப் பிருதிவிகளாகிய பெற்றோரைச் செழிப்போடு மிளமை பெறச் செய்தீர்கள். ஒரு அசுவத்தினின்றும் மற்றொரு அசுவத்தை யுருப்படுத்தினீர்கள். உமது தேரிற் குதிரையைப் பூட்டித் தேவர்களிடத்துச் சென்றீர்கள்—(எ-று.) சௌதன்வானீர், தத்திதவிளி.

8. இவ்வுதகந்தனைப் பருகலெனு மொழியே
யவர்க்குரைத்தி ரின்றேன் முஞ்சு
மொவ்வுறு நற்றடிக்கூடு வடியுமிதைக்
குடிக்கென்றீர்; ஓங்குமீதுஞ்
செவ்வையுள தாயுமக்குத் தோன்றிலதேற்
சுதன்வந்து சிறுவீர் மூன்றுங்
கவ்வையறு சவனமதிற் களிகொள்வீர்
சிறக்கவெனக் கழன்றிட்டீரே.

(இ-ள்.) [இச்செய்யுள், தேவர் ரிபுக்களுக்குச் சொன்ன விஷயத்தை ரிஷிசொல்வது.]. 'சுதன்வனது புத்திரர்களே! இம்முதற் சவனத்துச் சோமரஸமாகிய நீரைப் பருகுங்கள். இல்லாவிடில் மாத்தியந்தின ஸவனத்தில் முஞ்சப்புல்லால்வனைந்த வடிதட்டின் வழியாக வழியும் ஸோம உதகத்தைக் குடியுங்கள். இதுவும் பிடிக்காமற் போனல் ஸாயம் ஸவநமாகிய மூன்றும் ஸவனத்திற் களிப்பை யடையுங்கள்;' என்று கூறினீர்கள்-(எ-று.) 'பிராதஸ் ஸவனத்திலாவது மாத்தியந்தின ஸவனத்திலாவது ரிபுக்கள் பாகம் பெறுவதுண்டு. ஆனல் மூன்றுவது ஸவனத்தில் கட்டாயமாக அவர்களுக்குப்பங்குகொடுத்தேதீரவேண்டுமென்பது பிரஸித்தம்.' என்பார் ஸாயணர்.

9. ஆபங்களே சிறந்தவென வொருவ
னறைந் திட்டான்; அல்லவல்ல
தாபங் கொளக்கினியே சிறந்ததென
வேறொருவன் சமையச் சொன்னன்;

## மண்டலம் I சூக்தம் 161.

சோபங்கொள் மின்மேகஞ் சிறந்ததெனப்
பலரறியச் சொன்னா னேகன்;
பாபங்க டவிர்மெய்யே புகன்றுசம
சங்களுருப் படுத்தினாரே.

(இ-ள்.) [சமஸங்களை நான்காக்கியபோது எது நிலைத்த வுண்மைய தெனச் சொல்லிக்கொண்டு வேலை செய்தார்களென்பதை இக்கவி சொல்லுகிறார்] இம்மூவருள் ஒருவன் லோகோபகாரத்தில் தண்ணீரிற் சிறந்தது வேறொன்றுமில்லை யென்றான். உள்ளும் புறம்பும் நின்று தகித்தல், சமைத்தல் முதலியற்றைச் செய்வதால் அக்கினியே சிறந்ததென்று வேறொருவன் சொன்னான். தண்ணீருக்குக்கூட மேகங் காரணமானதால் மின்னலோடு கூடிய மேகமே சிறந்ததென்று மற்றொருவன் சொன்னான். இப்படி மூவரும் மெய்ம்மையையே பேசிக்கொண்டு சமஸங்களை யுருப்படுத்தினார்கள்—(எ-று.) ரிபுக்கள் என்னுஞ் சொல்லுக்கு விஸ்தாரமாகப் பிரகாசிப்பவர்கள் என்ற பொருளோடு, உண்மையாற் பிரகாசிப்பவர்களென்று ஒருபொருளு முண்டென்பார் யாஸ்கர்.

10. முடமான பசுவைநீர் நோக்கிக்கி
ழுடித்தொருவன் ழுழுது முய்க்கத்
திடமான வாள்கொண்டு விலையடைக்க
மாமிசத்தைச் சிறப்பாரங்கத்
தடலார வொருவன்று னாற்றிடமற்
றொருவனமுக் கத்த மித்த
வுடன்வாரிப் போட்டிடுவா, னிவர்பணியிற்
பிதாபுதல்வர்க் குதவி யாதே?

(இ-ள்.) உறப்பறையான பசுவை ஒருவன் தண்ணீருள்ள விடத்திக்குக் கீழேயோட்டிக்கொண்டுபோகக்,கத்தியினால் விலைக்குப்பெற்றமாமிசத்தைப் பலவவயவ ரூபமாகவும் வேறொருவனுருப்படுத்த, இன்னொருவன் அப்பசுவினது புரீஷத்தை வாரிப்போடுகிறான். இப்படி மூவரும் வேலை செய்யும்போது பெற்றோராகிய தியாவாப் பிருதிவிகள் இந்த ரிபுக்களாகிய புத்திரர்களுக்குச்செய்த வுதவியொன்றுமில்லை—(எ-று.) பூமிவானங்களாகிய பெற்றோரை யெளவன நிலைக்குக் கொண்டுவருவதை யாகபலி செய்யும் உவமைத்துவாரா சொல்லிக் காட்டினார் என்பார் மேனாட்டாசிரியர்.

11. உன்னதமா ரிடங்களினி னுயிர்க்குதவப்
புல்லதனை போங்குவித்துப்
பின்னரும் பள்ளத்தாக்கிற் சற்கருமத்
திறமையினீர் பிறங்குவித்தீர்;
உன்னருமிச் செயனாரா மிருபவர்கா
ளின்றேயன் றேங்குங் கூடர்

துன்னரிபோனவன் வீட்டிற் றூங்குவதை
யெக்காலுந் தோய்கின்றீரே.

(இ-ள்.) நாங்களாகிய ரிபுக்களே! உன்னதமான மலைப்பிரதேசங்களிற் பிராணிக் கூட்டங்களுக்குதவுமாறு புல்லைவளர்ப்பித்துப், பின்னரும் உமது கர்மசாமர்த்தியத்தினாற் பள்ளத்தாக்குக்களிற்றண்ணீர்தங்குமாறுசெய்தீர்கள். ஒன்றும் ஒளிக்கமுடியாத அச்சூரியனது கிரகத்தில் நீங்கள் தூங்குவதாகிய விச் செய்கையை இன்றேயன்று எக்காலத்திலும் அடைந்திருக்கிறீர்கள் (—எ-று.) கூடம், ரகசியம். அமரத்துவத்தையடையச் சூரிய மண்டலத்துக்குச் சென்ற ரிபுக்களை, விருஷ்டியாதி காரியங்களைச்செய்து பூமியைச் செழிப்பிக்கும்போது, அச்சூரியனது கதிர்களாகவே உடம்படுத்தினர். 'ருபவ:உருபாஸமானா: ரிதேந பாஸமானா:' என இருபொருள் நிருக்தத்திலுண்மையாலும் ரித சப்தத்துக்கு ஆதித்யன், உதகம், ஸத்தியம் என முப்பொருளுண்மையாலும், ரிபுக்கள் அல்லது ருபவர்கள் என்னும் பதத்திற்கு வெகுதூரம் விளங்குபவர், சூரியனாற் பிரகாசிப்பவர், தண்ணீராற் பிரகாசிப்பவர், ஸத்தியத்தாற் பிரகாசிப்பவர், என நான்கு பொருளுண்மை யுணர்க.

12. புவனங்கடமைச் சூழ்ந்து பின்னவற்றின்
மேற்பெய்த போது பெற்றோர்
கவனங்கொள் பாலனர்களெங் கிடங்கொண்
டமைந்திருந்தார்? கறுவியும்மே
லெவனுந்தன் கரந்தூக்கிற் சபித்திட்டீர்;
அருந்துதிக் கனிலயந்து திர்க்கத்
தவனங்கொள் சிறப்பினுமைப் புகழ்ந்தவன்மாட்
டெதிர்மொழிகள் சாற்றினீரே.

(இ-ள்.) புவனங்களையெல்லாஞ் சூழ்ந்து அவற்றின்மேல் மழையைப் பெய்வித்தபோது, உலக பாலனர்களாகிய வுமது பெற்றோர்கள் எங்கே தங்கியிருந்தார்கள்? கோபத்தோடு உம்மேற் கைகாட்டவந்த ராட்சஸாதிகளைச் சபித்து நாசஞ் செய்தீர்கள். உம்மை யுரக்கப் புகழ்ந்தவனுக்குப் பதில்மொழி தந்தீர்கள்—(எ-று.) பெற்றோரீண்டு சூரிய சந்திரர்களென்பார் ஸாயணர்.

13. இருபவர்காடயிலார்ந்த பினரிதனைக்
கேட்டனிரா விருளே யில்லா
வருளாள வெமையாவ ரெழுப்பினரோன்;
ருடுபதி லறைந்த தெங்குந்
திரிபவனுஞ் சுவானமுமை யெழுப்பினனென்;
ருண்டதனிற் சேரந்நாளே
பருமையினிற் கண்டிறந்து பலவாறு
யொளிகான்றீ ரவனியீதே.

## மண்டலம் 1. சூக்தம் 162.

(இ-ள்.) ரிபுக்களே! சூரிய மண்டலத்திற் றாங்கிய பிற்பாடு எழுந்து 'இருளேயில்லாத அருளாளனே! (ஒன்றையும் மறைக்காத் சூரியனே! என்றபடி.) எம்மையா ரெழுப்பினர்? 'என்று கேட்டீர்கள். 'எங்கும் திரிபவனு ன சுவானம் (அந்தரத்தில் சுவசிக்கும் வாயுவென்பார் ஸாயனர்) எழுப்பியது என்று ஆடு (அல்லது ஸாயணருரைப்படி எல்லாவற்றையும் மூடிக்கொள்ளும் சூரியன்) பதிற்சொன்னது. ஆண்டு முழுவதுக்கும் அன்றே நீர் பூமியின்மீது பிரகாசித்தீர்கள்—(எ-று.) முன்பு மழைக்காலத்தில் சூரிய சந்திரர்கள் மறைந்திருந்து மழைக்காலம் போனபிறகு எல்லாச்சகத்தையும் விளக்கவைத்ததால் இன்றைக்கே பிரகாசித்தீர்கள் என்றார் கவியென்பார் ஸாயணர். இருபவர்,ருபவர், ரிபுக்கள். பஸ்த: ஸர்வஸ்ய வாஸயிதா ஆதித்ய: என்பார் ஸாயணர். ஆடென்றுரைப்பார் மேனாட்டாசிரியர்.

14. சவஸநப்திருக்கா ளும்மைச் சார்ந்திட நாடி விண்ணின்
றவமறு மருதர், பூமியங்க ணிவ்வங்கி வாதன்
நிவமுறு மந்தரிட்சத் தணைகின்றார், முந்நீ ரோங்கும்
புவனநின் றடைகின்றானல் வருணனு முமைப்பொருந்த.

(இ-ள்.) பலத்தின் புத்திரர்களாகிய ரிபுக்களே! உம்மையேயடைய விரும்பி விண்ணிலிருந்து மருத்துக்களும், பூமியினிடத்து இந்த அக்கினியும், அந்தரிட்சத்திலிருந்து வாயுவும் வந்துசேருகிறார்கள். ஸமுத்திரத்தின் ஜலங்களினின்று வருணனும் உம்மையடைய விரும்பி வருகிறான்—(எ-று.) முந்நீர், ஸமுத்திரம். ஸமுந்தநஸ்வபாபமுள்ளது. நன்றாக ஈரப்படுத்தும் ஸ்வபாமுள்ளது என்பது பொருள். சவஸநப்திருக்காள், சவஸஸ்ய பலஸ்ய நபாதயிதார: பலத்தினின்றும் தோன்றியவர்களே என்பது பொருள். நப்தா பேரன் என்பதை வலிஷ்டநப்தார மென்னுஞ் சொற்றொடரிற் காணலாம். பலத்திற் சிறந்த ரிபுக்களே யென்பது கருத்து.

வருக்கம். 6.

## 162. மண்டலம். 1. அநுவாகம். 22. சூக்தம். 6.

22 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷி தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப், 3, 6 ஜகதி; தேவதை: அசுவம். குதிரையைப்புகழ்ந்ததால் அதுவே தேவதை யென்றார்.

1. எங்களைப் பழிக்கா தேய்க மித்திரன், வருண, னேன்ற
துங்கமா ரரிய, னாயு, விந்திரன் ரிபுக்க டோன்றல்,
மங்கலில் மருத ரின்னர், மகந்தனிற் றேவசாதப்
புங்கவ விரைவார் மாவின் வீரத்தைப் புகலுங்காலே.

(இ-ள்.) தேவர்களது அம்சமாகத் தோன்றியதும், சிறப்புப்பொருந்திய விரைவோடு கூடியதுமான அச்வத்தின் வீரச் செயல்களை யாகத்தினிடத்து யாங்கள் கூறும்போது, மித்திரன், வருணன், அரியமான், ஆயு (வாயுவின் மருஉவென்பார ஸாயணர்.) ரிபுக்களுக்கு நாயகனாகிய இந்திரன், மருத்துக்கள் என்னுமிவர்கள் எங்களைப் பழித்துக் கூறுமலிருக்கட்டும்—(எ-று.)

## அஷ்டகம் 2 அத்தியாயம் 3.

தேவசாதமென்றதற்கு தேவர்களிடத்துத்தோன்றியது என்பது ஒருபொருள். கந்தருவ குலத்தினின் றுற்பவித்ததாலென்க. வாயு வகார லோபத்தால் ஆயுவென்றாயிற் றென்பார் ஸாயணர். அக்கினியாயிருக்கலா மென்பர் மேனாட்டாசிரியர்.

2. கையினிற் கொள் பலியைக் கன்னுறுங் கோலத்தோடுஞ்
செய்ய நற்றனத்தினோடுஞ் செறிந்தமா முனர்த்தருங்கா,
லைய பலவுருவி னாடு சத்தமார்ந், தரிக்கும் பூடக்
துய்யவன் றனக்கு மன்பிற் றோயிடங் கதிக்கவேகும்.

(இ-ள்.) ஆபரணாதி யலங்காரங்களோடுஞ் செல்வத்தினோடும் நிறைந்த குதிரைக்கு முன்பு கையிற் றாங்கியுள்ள அவிப்பொருளோடு செல்லும்போது, பலரூபத்தோடுகூடிய ஆடானது சத்தமிட்டுக்கொண்டு இந்திர பூஷர்களுக்குப் பிரியமானவிடத்தை நோக்கி நேராக நடந்து செல்லும்—(எ-று.) பூடன் ஈண்டு அக்கினியைக் குறிக்குமென்பார் ஸாயணர். இப்பல புள்ளிகளுள்ள ஆடு யூபஸ்தம்பத்திலுள்ள அச்வத்தோடு சேர்த்துக் கட்டப்பெறும்.

(வேறு.)

3. எத்தேவர்க்கும் பிரிய மார்ந்தது,
பூடன்பாக மென்றசாக,
மொத்தாரும் விரைகதிபச் சுவத்தின்முனர்
நடகதுற்ற;தோங்குங் கீர்த்தி
சுத்தான்னத் தோடுறவே துவட்டாவக்
குதிரையொடுதோயும்பாகத்
தித்தாரத்தன்புறுமிப்புரோடாசந்
தனையன்பி னுனுற்றுங்காலே.

(இ-ள்.) எல்லாத்தேவர்களுக்கும் பிரியமானதும், பூடனுடைய(அல்லது அக்கினியினுடைய)பாகமானதுமான வெள்ளாடு வேகத்தோடு கூடிய குதிரைக்கு முன் நடத்தப்பெற்றது, கீர்த்தியையும் அன்னத்தையும் பெறுமாறு துவஷ்டா அக்குதிரையுடன்யக்ஞத்துக்குப் பிரியமான இப்புரோடாசமாகிய அஜத்தைப் பிரீதி ஹேதுகரமாக்ச் செய்தபோது—(எ-று.) துவஷ்டா வெல்லாவற்றையும் சிருஷ்டிக்குந் தேவன். சாகம் வெள்ளாடு.

(வேறு.)

4 மும்முறை பொழுதிற் றேவர்தம்முனர்ச் செலுமசுவஞ்
செம்மைபா ரவிக்குகந்ததனை மானுடர் சூழ்வித்தே
விம்முறு பொழுதிற்,பூடன்பாகமா மச முன்சென்றே
யம்மையிற் றேவர் பாட்டு மகத்தினை யறிவிக்குமமே.

(இ-ள்) தேவர்களுடைய சந்நிதிக்குச்செல்லுங் குதிரையை, யக்ஞத்தில் அவியாகத்தருவதற்கு யோக்கியமானதை மூன்றுதரம் அக்கினியைச் சூழ நடத்தும்போது, பூஷனது பாகமாகிய ஆடு அக்குதிரைக்கு முன்சென்

## மண்டலம் 1 சூக்தம் 162.

று தேவர்களிடத்து யாகம் நடக்கும் விஷயத்தை முன்னர் அழகாக வறிவிக்கும்—(எ-று.) குதிரையைத் தேவர்களிடத்து அனுப்புவது அவர்களிடத்துச் செல்வமும் இதர அநுக்கிரகங்களும் யாககர்த்தாவுக்குப் பெற்று வருமாறு.

5. தாத னத்வர்யு வங்கிதோய்ப்பவன்பதிற் பத்தாதா
வோதுறு பிரமன்.சாத்தா வுயர் கிராவக் கிராபன்
நீதற வொழுங்கிற் றேய்த்தே யணியுறுத்திய வியாகத்
தாதரவுட னாற்றேட்டக் காலினை யார்த்து வீரே.

(இ-ள்.) ஹோதாவும், அச்வர்யுவும், ஆக்கினித்ரனும், பிரதிப்பிரஸ்தாதாவும், மேதாவியாகிய பிரஹ்மாவும், பிரசாஸ்தாவும்,கிராவஸ்த்துத்துமாயெழுவர்களே! ஒழுங்காக வமைத்து அலங்காரஞ்செய்த இவ்வெக்கியத்தைக்கொண்டு ஆற்றேட்டத்தின்கால்வாய்களைநிரப்புவீர்களாக-(எ-று.)ஆற்றேட்டத்தின் கால்வாய்களை நிரப்புவதாவது யக்ஞத்தைச் சரிவரமுடித்துப் பலனைச் சாதிப்பீர்களாக வென்பது பொருளென்பார் ஸாயணர். ப்ரதிப்ரஸ்தாதா, பதிற்பத்தாதா வெனவும், ப்ரசாஸ்தா பசாத்தா வெனவும் மருவியதோடு, பசாத்தா முதல் கெட்டுச் சாத்தா வெனநின்றது.

வருக்கம். 7.

(வேறு.)

6. யூபமரம் வெட்டுபவர் யூபமதைச்
சுமப்பவர்மா யூபத்துச்சிச்
சோபையுறக் குமிழமைப்போர் குதிரைக்கா
முணவதனைச் சுகமே தோய்க்கத்
தாபமுறு மெரிதரும்பும் பாத்திரமுஞ்
சேகரிக்கத் தம்முள்ளத்தே
சோபமுறவுட னென்னு மவர்மதிபி
னெந்தொழிலை வளர்த்துத்தோய்க.

(இ-ள்.) யூபத்துக்கான மரத்தை வெட்டுபவர்களும், வெட்டின யூபத்தைச்சுமந்து செல்பவர்களும், குதிரையைக் கட்டும் யூபத்தினுச்சியிலழகாகக் குமிழை யமைப்பவர்களும், குதிரைக்கான வுணவைச்சமைப்பதற்கு வேண்டிய விறகு பாத்திரம் இவற்றைச்சேகரிக்குமாறு எங்களோடு கூடி வேலைசெய்யும் புத்திவாய்ந்தவர்களுமான விவர்கள் எங்கள் வேலையை யபிவிருத்தி செய்து பொருந்துவார்களாக—(எ-று.)

வேறு.

7. நன்மகிழ்வளிக்கும் போற்று நாட்டிடப் பெற்றதென்னால்;
தன்புற வழகுசார் மாத் தேவர்சா ருற்று நிற்க;
வன்புறப் பிணையன்னனைத் தேவர்தம் விருந்தாச் செய்வோம்;
அன்புற விருடிமார் விப்பிர ரவன்வயின் மகிழ்க.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 3.

(இ-ள்) நல்ல மகிழ்ச்சியைத்தரும் ஸ்தோத்திரம் என்னல் நாட்டப்பெற்றது. தனது பிருஷ்ட வழகுவாய்ந்த குதிரை தேவர்களது திக்குக்களிற் சென்று நிற்கட்டும். நன்றாக யூபஸ்தம்பத்திற் கட்டப்பெற்ற வவனை (குதிரையை)த்தேவர்களுக்கு விருந்தாகச் செய்வோம். ரிஷிகளும் மேதாவிகளும் அவனிடத்துக்களிப்பையெய்தட்டும்—(எ-று.) ரிஷி, இந்திரியங்களுக்கு மேற் பார்ப்பவன், இந்திரியங்களுக்கு மனத்துக்குமெட்டாத பார்வையுள்ளவன், அதீந்த்ரியத்ருஷ்டா. ஈண்டு குதிரையை யுயர்திணையாக்கிக்கூறினர்.

8. வேகமார் மாக்கழுத்தின் கயி,றவன் காலிற் பூட்டும்
பாகமார் கச்சுச், சென்னி யிரச், சவன்றனைச சூழ்தாம்பு
மோகையார் வாயிற் புல்லோடுவை யெலாந் தேவர்நாப்பட்
டாகமார்ந்துறு மப்போதுந் தங்குக வுன்றனோடே.

(இ-ள்.) வேகநிறைந்த குதிரையினது கழுத்துக் கயிறும், காற்கயிறும், பக்கக்கயிறும், தலைக்கயிறும், மற்றுமவனைச் சூழ்ந்த கயிறுகளும்,வழிநடையிளைப்பைத்தீர்க்க வவனது வாயிற்கொடுத்த புல்லும் ஆகிய வெல்லாமும் (குதிரையே!) தேவர்களுக்கு மத்தியில் நீயுறும்போது உன்னோடு கூடவே யிருக்கட்டும்—(எ-று.) அவைகளும் தேவத்துவ மடையட்டுமென்று முறை கூறலாமென்பார் ஸாயணர்.

9. வேகமாரபத்தின் பச்சைமாமிச மீக்களுண்ட,
தேகமாய் மரத்தின்வாளி னொட்டிய, துரிப்போன்கையிற்
சேகுறுநகைத்தமைந்த, திவையெலாந் தேவர்நாப்பட்
டாகமார்ந்துறுமப்போதுந் தங்குக,வுன்றனோடே.

(இ-ள்.) வேகநிறைந்த குதிரையின் பச்சைமாம்ஸத்தில் ஈக்கள் தின்றதும், யுபஸ்தம்பத்தில் ஒட்டினதும், கத்தியில் ஒட்டிக் கொண்டதும், உரிப்பவனாகிய சமிதாவின் கைகளிலும்,நகங்களிலும்ஒட்டிக்கொண்டதுமாகிய வெல்லாமும் (குதிரையே!) தேவர்களுக்கு மத்தியில் நீயுறும்போது, உன்னோடேயே யவையும் தேவர்களுக்குச் சந்தோஷத்தை யளித்துத் தங்கட்டும்—(எ-று.)

10. வயிற்றினின் றகனு முற்றச் சமித்திடா வுணவு, பச்சைப்
பயிற்றிய நாற்றவூன்முன் யாவையுஞ் சமிதா மாந்தர்
குயிற்றுக தோடமின்றி; யக்கியப் பலியைப் பின்னு
மயிர்ப்பறத் தேவபாக மாக்குக சமைத்து நன்கே.

(இ-ள்) சமிதாக்கள், வயிற்றினின்றும் வெளிப்படும் ஜீரணமாகாத இரையையும், நாற்றத்தோடு கூடிய பச்சை மாமிசத்தையும் தோஷமின்றி யொழுங்குபடுத்தட்டும். யக்ஞத்துக் கருகமான மாமிச பலியை நன்றாகச் சமைத்து தேவர்களுண்ணுவதற்கு யோக்கியமாயிருக்கும்படிப் பக்குவப்படுத்தட்டும்—(எ-று) சமிதாமாந்தர், சமிதாக்கள். யாகப்பசுவின் தோலையுரித்து வபையையெடுப்பவர்கள்.

வருக்கம். 8.

## மண்டலம். 1. சூக்தம். 162.

11. உனதுடலிறைச்சி யங்கி சமைப்புறும் போதுஞ், சூலந்
தனதுளே செல்ல நின்று சாருமூன் வடியும் போதும்,
கனிதரப் புவியின் மீதுங்காணு றுங்கருப் பைமீது
முனைதரா தவைவிரும்புந் தேவர்பான் முனைந்து செல்க.

(இ-ள்) (அசுவமே!) உனது உடலினது மாமிசம் அக்கினியினாற் சமைக்கப்படுங்காலத்தும், சூலத்தாற் குத்தப்பட்டு (வாட்டப்படும்போதும் என்பார் மேனாட்டாசிரியர்) ஊன்வடியுமக்காலத்தும, அதன் பாகங்கள் பூமியின்மேலாவது, கருப்பையின் மேலாவது விழாமல் அதனை விரும்புந் தேவர்களிடத்து நேராகச் செல்லட்டும்—(எ-று.)

12. வாசியினிறைச்சி பக்குவத்தினின் மருவல் கண்டோர்
பேசுவர்' பதத்தினுற்ற தெடுக்கல் போர்த்' தென்றுரக்க;
ஏசறப் பரியூன் பிச்சை யெண்ணியிங் குபாசிப் போர்தம்
மாசறு முடனாற் றெம்பான் மருவி யெந்தொழில் வளர்க்க.

(இ-ள்.) குதிரையினது மாமிசம் பக்குவப்பட்டுள்ளதைக்கண்டவர்கள், 'தேவருண்ணப் பதமாய்விட்டது; எடுத்துவிடுங்கள்' என்று உரக்கச் சொல்லுவார்கள். அக்குதிரையினது மாமிச பிச்சைக்காகக் கூடவிருந்து உபாசிப்பவர்களெம்மோடொத்துச் செய்யும் 'உதவிகள் எமது கர்மத்தைப் பலனுள்ளதாகச் செய்யட்டும்—(எ-று) அபிகூர்த்தி: உடனாற்று.

---

### ஞானசாகரப்பத்திரிகை, பல்லாவரம் :—

ஓம்.

## இருக்குவேதசங்கிதையின்
### தமிழ் மொழிபெயர்ப்பு.

இருக்கு எசுர் சாமம் அதர்வணம் என்னும் நான்கு வேதங்களில் இருக்குவேதம் ஒன்றே மற்றை மூன்றற்கும் முந்தியதும் பழமையானதுமாகும். இஃது ஆரிய பாஷையில் அமைந்திருந்தலால், ஈது இதுகாறுந் தமிழ் மக்கள் படித்தறியக் கூடாத அருமறையாய் இருந்தது. ஆரியந் தமிழ் என்னும் இருமொழியிலும் வல்லவராயிருந்த நம் முன்னோர்களில் எவரும் இதனைத் தமிழில் மொழிபெயர்த்து வையாமை ஒரு பெருங்குறையாயிருந்தது. அக்குறையினை நீக்குதற்கு உள்ளம் உவந்து, நீலகிரி மலையில் குன்னூர் ஆனந்தாசிரமத்திலிருக்கும் ஸ்ரீமத் சிவத்தியானானந்த மகருஷிகள் இவ்விருக்குவேதத்தை இனிய செந்தமிழில் பாட்டும் உரையுமாக மொழிபெயர்த்துத் திங்கடோறும் சஞ்சிகைகளாக வெளியிட்டு வருகிறார்கள். "செயற்கரிய செய்வார் பெரியர்" என்ற திருமொழிப்படி செய்தற்கரிய இப்பெருங்காரியத்தைக் கைம்மாறு கருதாது தமிழிற்குந் தமிழ் மக்களுக்குஞ் செய்தவரும் ஸ்ரீமத் சிவத்தியானானந்த மகரிஷிகளுக்கு இத்தமிழுலகம் பெரிதும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றது. எத்திறத்தாரும் வாங்கிப்படிக்க வேண்டுமென்ற இரக்கத்தால் இவ்வேத சஞ்சிகைக்கு ஆண்டு ஒன்றிற்கு ஆறு ரூபா குறைந்த விலை ஏற்படுத்தியிருக்கிறார்கள். தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் இதனை வாங்கிப் படித்து வேதத்தின் உண்மை அறியவேண்டுவது இன்றியமையாத கடமையாம்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 3.

13. மாமிசம் வேங் கடாரம் வெந்ததை மதிக்கு மாப்பை,
வாமமார் சட்டி யாணம் வழங்குவ, துயர் சூடாற்று
நேம வள்ளஞ், சருவின் மூடிகள், கொளுவி, வாள,
மோமென விவைகள் யாவு மசுவஞ்சூழ்ந் தொழுகுகின்ற.

(இ-ள்.) மாம்ஸம் வேகுங் கொப்பரையில் வெந்த விஷயத்தைப் பரீட்சிக்க உதவும் அகப்பையும், குழம்பையூற்றவுதவும் அழகிய சட்டிகளும், சூடாற்ற உபயோகப்படும் கிண்ணங்களும், மாம்ஸ நிறைந்த சருப்பாத்திரங்களின் மூடிகளும், கொக்கிகளும், மாம்சங்கொத்துங் கருவிகளுமாகிய வெல்லாம் அசுவத்தைச் சூழ்ந்து விளங்குகின்றன—(எ-று) ஆப்பை, அகப்பை. ஆணம் குழம்பு. கொளுவி, கொளிக்கி, அல்லது கொக்கி, பிரம்பினாற் செய்த கவுட்டை யென்பார் ஸாயணர். வாளம், கத்தி.

14. புறப்படுமிடமுந் தங்கிப் புரண்டிடு மிடங் கடாமுஞ்
சிறப்புறு மசுவ பாதப் புணைகளுந் தாகந் தீர்வான்
வெறுப்புறக்குடிநீ ருண்ட வுணவிவை யெல்லாந் தேவர்ப்
புறத்தினி னுன்றனோடே பொருந்திச்சேர்ந்துறைகநன்கே.

(இ-ள்.) அசுவம் புறப்படுமிடம், அது தங்குமிடம், அதுபுரளுமிடம் அசுவத்தின் காற்பிணிப்புக்கயிறுகள் தனது தாகந்தீர இனி வேண்டாமென்றவளவுக்குக் குடிக்கும் தண்ணீர், அது தின்றதீனி யாகியவிவையெல்லாம் தேவாதுபக்கத்தி லவ்வசுவமுறும்போது, (அசுவமே!) உன்னோடுகூடவுறட்டும்—(எ-று.) வெறுப்புற எதுகை நோக்கிச் சேர்த்தது. குதிரையையே படர்க்கை முன்னிலை இரண்டிலும் கூறியுள்ளார்.

15. புகைநாற்றம் வீசு மங்கி யுனைத் தொனிதராது செய்க;
மிகுநாற்றக் கடாரஞ் சூட்டான் வெடித் திரண்டாகா தேய்க;
தகுபோற்றின்விருந்தா யொப்பி 'வஷட்' டொடுதந்தமாவைப்
பகரேற்றத் தோடு தேவ ரெதிர் கொண்டு பற்றுவாரே.

(இ-ள்.) (அசுவமே!) புகைநாற்றம் வீசுகின்ற அக்னியானது உன்னைச் சத்தப்படுத்தும்படி செய்யாதிருக்கட்டும். நாற்றத்தோடு கூடிய உனது மாமிசம் வேகுங் கொப்பரை அதிகச்சூட்டினால் வெடித்துப் போகாவிருக்கட்டும். இஷ்டியில் ஸ்தோத்திரங்கூறித், தேவருணவாக 'வஷட்' காரத்தோடு தந்த அசுவத்தைத் தேவர்கள் பிரியத் தோடும் பிரதிக்கிரகணஞ் செய்வார்கள்—(எ-று.) யாகத்திற் குதிரை சத்தப்படுத்தினால் அதற்காகப் பிராயச்சித்தஞ் சொல்லப் படுவதால் தொனிதராது செய்க வென்றார்கவி. இதனையே அச்வமே யென்றது அச்வ அவயவங்களே யென விளித்து நீங்கள் வெடித்துக் கடாரத்தை யுடைத்து விடாதபடி யக்கினி காக்கட்டுமெனப்பொருள் கொள்ளுவது மொன்று என்பார் ஸாயணர். வஷட், மண். 1. சூக் 31. செய் 5. நோக்குக.

வருக்கம் 9.

## மண்டலம் 1 சூக்தம் 162.

16. பரியின் மேலங்கி யாகு மாடை, மேற்பரப்பும் போர்வை,
யரியினு ளான கோல மணிகளோ டவை பந்தக்
குரிய நற்சிரக் கயிறு, பாதவா ரிவைக ளியாவும்
பிரியமாய்த் தேவர் மாட்டுச் செல் லுறப் பிறக்கு கின்றார்.

(இ-ள்.) குதிரையின் மேற்சட்டையைப்போலப் போடப்பட்ட வஸ்திரமும், அதை மூடிநிற்கும் போர்வையும், தங்கமணிக்கோலங்களும், குதிரையை யடக்கியாளுஞ் சிரக்கயிறும், கால்வாரும் ஆகிய விவையெல்லாம் தேவர்க ளிடத்துப் பிரியதரமாகச் செல்லுமாறு அவற்றை யனுப்புகின்றார்கள்-(எ-று.)

17. நீட்டிய பின்னங் காலாற் கசையினா லேடி யுன்னை
யோட்டு நற்குரல்கொ டுன்மே லாற்றலைத் தன்பலத்தின்
வாட்டுமவ் வருத்த மெல்லா மறை சொலி யத்வரத்தி
லோட்டுவேன் சுருக்கா னெய்மு னவிகளை யொழுக்கல்
போன்றே.

(இ-ள்.) உன்மேலமர்ந்து பின்னங்காலாலுதைத்தும், கசையினா லடித்தும், பலத்தகுரலோடு உன்னை யோட்டியும் வாட்டுகின்றவவ்வருத்தங் களையெல்லாம் யாகத்தில் நெய் முதலிய வவியைச் சுருக்கினால் ஒழுகவிடு வதுபோல, மந்திரங்களாற்றீர்த்து விடுவேன்—(எ-று.) சுக்ருதஸ்ய என் பதற்கு சுவேண ஒட்டுங் குரலோடு வென்பது பொருள்.

18. வேகமார் பரியின் முப்பா னான்கெனும்விலா வெலும்பை
போகையார் தேவநண்பி னுற்றவை தமைவா ளிரும்;
சேகுறு ஞானத்தாற் காத்திரம் பழுதற வோவ் வொன்றாய்
வாகுற நவின்று கொண்டே வகிர்ந் தெடுத்திடுவீ ரன்றே.

(இ-ள்) வேகம் வாய்ந்த குதிரையின் முப்பத்து நான்கு விலா வெலும்புகளைத் தேவர்களுக்குப் பிரியமானவற்றைச் சமிதாவின்வாளானது கிழிக்கும். (வைகர்த்தாக்களே!) அவயவங்கள் பழுதுபடாதபடி ஒவ்வொரு அங்கத்தின் பேரையும் சொல்லிக்கொண்டே கிழித்தெடுப்பீர்களாக-(எ-று.) வைகர்த்தா, சமிதாவோடு கூட வேலைசெய்யும் இறைச்சிக்காரன். இவனே இதயம் முதலியவுறுப்புக்களைத் தனித்தனியாக வெடுத்துவைப்பவன். முப் பத்தாறில் இரண்டுபோகப்பாக்கி யென்பார் மேனாட்டாசிரியர். யாகக் குதிரை வானத்தின் அடையாளமாம். 34 விலாப்பழுக்கள், சூரியனும், சந்திர னும், 5 கிரகங்களும், 27நட்சத்திரங்களுமாம். வைகர்த்தா ஒவ்வொரு அங்கத் தையும் பேர்சொல்லி யெடுத்துவைக்க வேண்டியதன் காரணம், ஒவ்வொரு அங்கமும் ஒவ்வொரு தேவதைக்குப் பிரியமானதால்.

19. ஒளிபெறு மச்சுவத்திற் கொருவனே விசத்தா; விதே
தெளிபெறு மொழுங்கு; பின்னர்ச் செல்லுவோ ரிருவராமால்;
களிபெறுங் காத்திரத்தி னெழுங்குறக் காணுவ் வொன்று
[illegible] பிண்டமோ டளிக் கின்றேனே.

# அஷ்டகம் 2 அத்தியாயம் 3.

(இ-ள்.) காந்தியோடு கூடிய குதிரையின் விசஸ்தா ஒருவனே. இதுவே ஒழுங்கு. அவனுக்குதவிசெய்பவர் இருவர். அசுவமே! உனது காத்திரத்தினின்று ஒழுங்காகப் பேர்த்தெடுக்கும் ஒவ்வொரு உறுப்பையும் யான் பிண்டத்தோடு அக்கினியி லாவுதி செய்கிறேன்—(எ-று.) விசஸ்தாவே சமிதாவாம். இவன் பிராஹ்மணனாயிருக்கவேண்டியதில்லை யென்று ஐதரேயப்பிராஹ்மணம் கூறும். அவனுக்கு உதவி செய்வோர் இருவர் வைகர்த்தாக்கள். சமிதா யாகப்பசுவைப் பலியிடுபவன். இவன் விதையைப் பிசைந்து கொல்லுவது மரபு. வைகர்த்தாக்கள் அதனையுரித்து உள்ளுள்ள உறுப்புக்களை யொவ்வொன்றாகப் பேர்சொல்லி யெடுத்துவைப்பவர்கள். ஒளி பெறுமசுவமென்றது துவஷ்டாவினுடைய அச்வமென்றலு மொன்று.

20. செல்லு மக்காலை யன்பு சேர்ந்திடு மான்மா தாப
மொல்லு றுதணைக; வாளு னுடம்பினிற் றங்காதேக;
புல்லு மூணிச்சை கொண்டு பொருந்து கைப்பழக்க மில்லோ
னெல்லை யில்லாது வாளாற் சேதித்து மெய் பாழாக்கல்.

(இ-ள்) (அசுவமே!) நீதேவர்களிடத்துச் செல்லும்போது உனக்குப் பிரியமான ஆத்மா வருத்தமுறாதிருக்கட்டும். உனது அங்கங்களைச் சேதிக்கும் கத்தி உனது உடம்பிற் சிக்கிக்கொள்ளாது செல்லட்டும். கேவலம் மாம்ஸ இச்சையினாற் கைப்பழக்கமில்லாத வைகர்த்தா அறியாமற் கத்தியினால் அளவுகடந்து வெட்டி யுனது அவயவங்களைப் பாழாக்காமலிருக்கட்டும் —(எ-று.)

21. இல்லை, நீ மரித்தலின்றின், றெய்தலு மின்று காயம்;
செல்லவில பாதையூடே தேவர்வாய்ச் செல்லுகின்றாய்;
புல்லரி யிரண்டுமுன் கூட்டுற்றன புள்ளிமானும்;
டொல்விராசப நுகத்தின் வாசிபூட்டுற்ற தன்றே.

(இ ள்.) இல்லை. நீ யிவ்விடத்து மரிப்பதில்லை, காயப்படுவது மில்லை, கஷ்டமில்லாத பாதைகளின் வழியாகத் தேவர்களிடத்துச் செல்லுகிறாய். இந்திரனது இரண்டு குதிரைகளும், மருத்துக்களுடைய புள்ளிமானும் உன்னோடு கூட்டுறவுகொண்டன. அசுவினிகளது கழுதையின் நுகத்தடியில் இக் குதிரை கட்டப்பெற்றது—(எ-று.) அசுவமேதஞ் செய்யும் குதிரையே இந்திரன், மருத்துக்கள், அசுவினிகள் என்னுமிவர்களது வாகனங்களாகமாறி யவர்களைத்தாங்குகிறதென்றுகொள்ளுவதொன்று. தேவத்துவமடைந்து குதிரை வருவதைக்கண்டதும் இந்திராதியர்கள் தங்கள் வாகனங்களைத் தூண்டுகிறார்களெனக் கொள்ளுவதுமற்றொன்று. இக் குதிரை தேவத்வமடையவே மற்றவாகனங்கள் இதனைச் சுமக்கின்றனவெனக்கொள்வது வேறொன்று. ராஸபம், இராசபம், கழுதை, அசுவினியர் வாகனம்.

22. பரியிது முற்று மோம்புக் தனமெமக் களிக்க; ஆவும்
பரிநிறைவோடு மாண்மைபற்றும் புத்திரருமீக;
பரியுறு பாபமோடும் பண்பினை யதிதி கூட்ட;
பரி,பவியோடு மேலாய்பல [illegible]க்கென வருள்க.

## மண்டலம் 1 சூக்தம் 163.

(இ-ன்.) இக்குதிரை, முழுவதும் போஷணை செய்யும் செல்வத்தை யெமக்கு தரட்டும். பசச்செல்வத்தையும், குதிரைச் செல்வத்தையும், ஆண்மைவாய்ந்த புத்திரப்பேற்றையும் எங்களுக்குத் தரட்டும். (ஏற்கனவே கழன்று செல்லும்) பாபங்கள் எம்மை விட்டு ஓடுமாறு அதிதி (அதீநாச்வம் என்பார் ஸாயணர்.) எங்களுக்கு அநுக்கிரகிக்கட்டும். அசுவமானது அவிக்கானவவயவங்களோடுகூடியெங்களுக்கு மேன்மையான பலத்தை அல்லது பிரபுத்வத்தைத்தரட்டும்—(எ-று.)

### வருக்கம் 10.

## 163. மண்டலம் 1. அநுவாகம் 22. சூக்தம் 7

### 13. இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஔசித தீர்க்கதமஸன்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப்; தேவதை: அசுவம். இச்சூக்தத்தின் முதற்பதினோரிருக்குக்களால் அசுவமேதத்தின் மத்தியநாளிற்குதிரையைப் புகழ்வதென்பார் ஆசுவலாயனர்.

1. இச்சைக ளெல்லா மீயச் சமுத்திர மேறி, மாவே,
யுச்சமாய் முதற்கட் டோன்றி யுயர் தொனியிட்ட போது
நச்சி யேய்ந்திட்டாய் சேனப் பட்சமு மரிணத் தோளும்;
மேச்சுறு முனது சாத மேன்மைய துபத்துதித்தே.

(இ-ன்.) (அசுவமே!) இச்சைகளையெல்லா மளிப்பதற்காகச் சமுத்திரத்தின்மேலேறி முதன் முதற் பிறந்தவுடன் கனைத்தபோது, உனக்குச் சேனத்தின் சிறகும் மானின் வாகுக்களுமமைந்திருந்தன. உனது பிறப்பு மஹத்தானதும், புகழத்தகுந்ததுமாம்—(எ-று) பூரிஷாத் என்பதற்கு ஸர்வகர்மாரம் பூரகாத் என்பார் ஸாயணர். ஆனால் தண்ணீரின் மேற்பரப்பினின்றும் என்பார் மேனாட்டாசிரியர். ஈண்டு அசுவத்தை அந்தரிட்சத்தினின்றும் சூரியனுக்கொப்பாக்கருதினர். சேனம் பருந்து; பட்சம், சிறகு, 'மிகராட்சமபட்ச' என்னும் கந்தரலங்காரச் செய்யுளை நோக்குக. அரிணம், ஹரிணம், மான்; சாதம், பிறப்பு; உபத்துதித்து, (ஏ அசை.) உபஸ்துத்தியஞ் செய்யத்தக்கது.

2. யமன்றரு மிவன்மேற் சேனம் யாத்தனன் றிரிதன்; வேந்த
னமர்ந்தன னவன் மேன் முன்னர்; அவன்கலினத்தைப்பற்றிச்
சமன்றர கிருத்தினன் கந்தருவனும்; அசுவந் தன்னைத்
தமக்கெறுஞ் சூரினின்றும், வசுக்களே! சமைத்திர் நன்கே.

(இ-ன்) யமனளித்த இக்குதிரையின்மேற் சேணத்தைத் திரிதன் கட்டினன். அக்குதிரையின்மேல் முதலில் இந்திரனமர்ந்தான். சோமத்தைக்காக்கும் விசுவாவஸுவாகிய கந்தருவன் கடிவாளத்தைக்கெட்டியாகப் பிடித்தான். வசுக்களே! இவ்வசுவத்தை ஸூர்யனிடத்தினின்றும் உருப்படுத்தி வெளியிட்டீர்கள்—(எ-ன்.) யமன் ஈண்டு நியாமக அக்கினியென்

## அஷ்டகம் 2. அத்தியாயம் 3.

பார் ஸாயணர். திரிதன், த்ருதன் ஆப்த்யன். வானத்தில் தூரமான ஒரு மூலையிலுள்ள பழைய தேவதை. நீராவி நிறைந்த விடங்களில் வசிப்பவன். மூன்றுலகங்களிலும் வியாபித்துள்ளவனாதலின் அவனே வாயு வென்பார் ஸாயணர். அல்லது ஆஹவனீயாதி மூன்று ஸ்தானங்களில் வசிப்பதால் அக்கினியாமென்றும் கூறுவர். இத்தேவதை 1(5-வது சூக்த ரிஷியாகிய திரிதனது முன்னோர்களென்பதை மண். 1. சூக். 105. செய். 9-ற் பார்க்க. கந்தர்வன் ஸோமங்காக்கும் விசுவாவஸு வென்பார் மேனாட்டாசிரியர்.

3. தூரகமே, யமனீ; யாதித்தியனு நீ; கூடந் தோய்ந்த
விரதமார் செய்கை தன்னாற் றிரிதனும் விழைந்தே யானாய்;
இரதமார் சோமனின்று மென்னூறப் பிரிந்து நின்றாய்;
உரைதரா நின்றார் மூன்று பந்தன முனக்கு விண்ணின்.

(இ-ள்.) அசுவமே! நீயமன்; நீ ஆதித்தியன்; குஹ்யவிரதகர்மங்களால் நீ திரிதனுமாம். சோமனிடத்திலிருந்து வேறாக நீ பிரிக்கப்பட்டாய். நீ விண்ணிடத்தில் மூன்று பந்தனங்களாற் கட்டப்பட்டுள்ளதாகச் சொல்லுகிறார்கள்—(எ-று.) மூன்று பந்தனமாவன வஸு, ஆதித்யன், விண்ணென்னும் மூன்று உற்பத்திகாரணங்க ளென்பார் ஸாயணர்.

4. விண்ணூறு பந்த மூன்று புவியினின் மூன்று மென்பர்;
எண்ணு மந்தரத்தின் மூன்றென்றியம்புவர்; அசுவமே, நீ
பண்ணுறச் சனித்த சிறப் பரமமா மிடத்தி லெற்குக்
கண்ணுற வருணனாகக் காண்கின்றாய் கதிக்க நீயே.

(இ-ள்.) அசுவமே! உனக்கு விண்ணில் (வஸு, ஆதித்யன், ஆகாயம்,, என மூன்று பந்தனங்களுண்டென்பர். (அப்ஸு) பூமியில் (அந்நம், நிலம் விதையென) எனமூன்றுண்டென்பர். (ஸமுத்ரே அந்த:) அந்தரிட்சத்தில் (மேகம், மின்னல் இடியென) மூன்றுபந்தனங்களுண்டென்பர். (எங்காயினும் சரி) நீ தோன்றிய பரமஸ்தானத்தில் என் கண்ணுக்கு வருணனாகவே தோன்றுகின்றாய்—(எ-று.) விண்பந்தனங்களை 3-ம் பாட்டிற் கூறினார். அப்ஸு, அப் உபஜீவிதத்வாத் பூலோகோபி அப்சப்தேந அபிதீயதே. தண்ணீர் கூடவிருக்கும் பூமிக்கும் பெயராகும். ஸமுத்ரவனாத் அபா மபாதானாத்ஸமுத்ரமந்தரிட்சம்; பெரிய சத்தம் போடுவதாலும், தண்ணீர் விழுவதாலும் ஸமுத்ரமந்தரமாம். வருணன் பாபநிவாரணன்.

5. வாசியே யுனைத்துடைத்த விடமிவை; யாகந் தன்னிற்
பூசனை புரியுன் பாதக்குளம் படியிடங்க ளின்ன;
நாச மில்வகை யொழுங்கை நாட்டிடக் காப்போர் போற்றுந்
தேசின் மங்கலக் கவின முன்னதை யீண்டு கண்டேன்.

(இ-ள்,) அசுவமே! உன்னைப் பரிசுத்தமாகத்துடைத்த விடங்களிவை. யாகத்தில் வணங்கும் உனது காற்குளம்புகளின் அடையாளங்கள் தோன்றுமிடங்களிவை. ரிதத்தைப்பாதுகாப்போர் பத்திரமாகக் காப்பாற்றுங்கல்யாணகரமான கடிவாளங்கள் உன்னுடையவற்றை இவ்விடத்துப் பார்த்தேன்—(எ-று.) ரிதம், யாகம், ஒழுங்கு.

வருக்கம். 11.

6. தூரத்திலுறையு முன்ற னாத்துமந் தனை மனத்தா
லோருற வறிந்தேன் வானி னூடு மிளின்று பாயுஞ்
சூரனின; எளிதினேகும் பாதையிற் றுகளிலாது
கூடுமதூடு மேன்மேற் கூர்ந்துயர் சிரத்தைக்கண்டேன்.

(இ-ள்.) (அசுவமே!) அதிதூரத்திலிருக்கும் உனது ஆத்துமத்தை (சரீரத்தையென்பார் ஸாயணர்.) எனது மனத்தினால் (அல்லது அறிவினால்) பூமியினின்று விண்ணிலேறும் சூரியனாகவறிந்தேன். இலகுவாகச் செல்லக் கூடியவையும், தூளில்லாதவையுமான பாதைகளின் வழியாகப் பின்னும் பின்னும் மேலேறி யுயரச்செல்லும் உனது சிரத்தையுங் கண்டேன்-(எ-று.) பதங்கம் என்பதற்கு ஆதித்யனென்று உரைகூறினார் ஸாயணர் பட்சியென்பது உண்மைப்பொருள். ஈண்டு அசுவத்தைச் சூரியனோடு உடம்படுத்தார்.

7. ஈண்டு னுத்தம ரூபத்தைக் கண்டனெ னிச்சையோடு
பூண்ட நன்மனதறிற் கோபதத்தினி னுனைப்பொருந்த;
வேண்டி மர்த்திய னுன்போக மளிர்விக்கும்போது தின்னும்
பூண்டினையாவ லோனுப் விழுங்குதல் புரிகுவாயே.

(இ-ள்.) உணவுவேண்டுமென்ற ஆசையோடு கூடுமனத்தின், யாக பூமியினிடத்து உனது உத்தம ரூபத்தைப் பார்த்தேன். மர்த்தியனான யஜமானன் உனது போகத்துக்காக வுணவையளிக்கும்போது, தின்னும் ஓஷதிகளைப் பேராசையுள்ளவனைப்போல நீ விழுங்குகிறாய்- (எ-று.) சாதாரண உலகக்குதிரையைப்போலப் புல்லைத்தின்ன ஆவல் கொள்ளுகிறாயென்பது கருத்து. கோபதம், பசுவினிடம், யாகவேதியாம்.

8. உன்பின ரசுவமே, தேரோமுகுறும்; மர்த்தியன், கோ,
உன்பினர்க் கன்னி மார்தங் காந்தியுமுற்ற; நட்பிற்
பின்புறலுற் றார்மாந்த ரீட்டமும்; தேவருன்றன்
முன்பினைத் தொடர்ந்து சாயல் பற்றினர் முழுதுமீண்டே.

(இ-ள்.) அசுவமே! உன் பின்னால் தேரோடுகிறது. மர்த்தியனும், பசுவும் கன்னிகைகளுடைய கண்கவர்வனப்பும் உன் பின்னோடு செல்கின்றன. மனிதரது கூட்டம் உனது சிநேகத்தை விரும்பி உன் பின்னர்ச்செல்லுகிறது. தேவர்கள் (ரித்விஜர்களென்பார் ஸாயணர்.) உனது பலத்தைப் பின்பற்றி அதன் சாயலையடைந்தார்கள்—(எ-று.)

9. கொம்புபொன்மயத் தோனன்னோன் பாதமுமயத் தாற்கூர்ந்த;
இப்பரிமனோ வேகத்தோனிந் திரனிவனிற் றாழ்ந்தோன்;
மொய்ம்பினிற் பரிமேன் முன்னரேறினோ னவனிக் கட்
குப்பலினைடைந்தார் தாமுங் குலவி யன்னதனை யுண்ணா.

(இ-ள்.) அவன் (அசுவமென்றபடி) பொன்மயமான சிருங்கத்தோடு கூடியவன், அவனது பாதங்கள் இரும்புப்பிண்டம் போன்றன. மனோ

## அஷ்டகம். 2. அத்தியாயம். 3.

வேகமுள்ள விந்திரனும் வேகத்தில் இவனிற்குழ்ந்தவனே. குதிரையின் மேல் முதன் முதலேறின இந்திரனது அவியுணவைத்தின்னத் தேவர்களுங் கூடினார்கள்—(எ-று) இந்திரன் முதல் ஏறினதை இச் சூக்தம் 2-ம் செய்யுளிற் சொன்னார். கொம்பு ஈண்டு தலைமயிரைக் குறித்து நின்றது.

10. விட்டு விட்டமைந்த, வட்டச்சகனத்த, வீரன் போன்றிங்
கொட்டிய வுற்சாகத்த, வின் னுதித்திட்ட மாக்க
ணெட்டுறு பந்தி யஞ்ச நேரத் தம்வலி தழைத்த,
கிட்டியபோது விண் மார்க்கத்தினைப் புரவிதாமே.

(இ-ள்.) ஒன்றற்கொன்று இடையே இடம்விட்டு ஒழுங்காகவமைந்தவையும், பருத்தசகனத்தோடு கூடியவையும், வீரனைப்போன்ற உற்சாகத்தோடுகூடியவையுமான தேவஜாதிக் குதிரைகள் நீண்டவரிசையாகவுறும் ஹம்ஸங்களைப்போல வலிமையிலோங்கி நின்றன, அக்குதிரைகள் ஆகாய மார்க்கத்தையடைந்தபோது—(எ-று.) ஈண்டு சூரியனது குதிரைகளைப்புகழ்ந்ததாகக் கருதுவர் மேனாட்டாசிரியர். சகனம், இடுப்புமூட்டு. தேவஜாதிக் குதிரைகள், விண்ணிற்பிறந்த குதிரைகள் என்றபடி. ச்ரேணீச: ஏகவ்யாபாராணாம் பஹூநாம்ஸமூஹ: ச்ரேணிரித்யுச்யதே, பங்க்திபூய, என்டார் ஸாயணர். ஒரே தொழிலை மேற்கொண்டு பல கூடுவது ச்ரேணியாம். ஈண்டுவரிசையாய்மைந்தவர்களென்பது பொருள்.

### வருக்கம் 12.

11. குதிரையே, யோட்டங் கூர்ந்த மெய்யொடு குலவி யுள்ளாய்;
கதிவிரை வுளதுன் சித்தம் வாதனைக் கடுப்ப; உன்கொம்
பதிவிரிந்துள்ள பற்பலிடந் தொறு; மாரன் யத்தே
மதியுலாசத்தி னன்ன மருவிச் செல்கின்ற மன்னே.

(இ-ள்) அசுவமே! நீ ஒடுந்திறமைவாய்ந்த சரீரத்தோடு கூடியுள்ளாய். உன்மனம் வாயுவைப்போல வேகமுள்ளது. உனது கொம்பு (அதாவது தலைமயிர்) பலவிடங்களிலும் நன்றாக விரிந்துள்ளன. காட்டினிடத்து மனோஹரமாக அக்கேசங்கள் செல்லுகின்றன—(எ-று.) குதிரை சூரியனென்றும், கொம்பு அல்லது கேசம் கிரணங்களென்றும் சொல்லுவர் மேனாட்டாசிரியர்.

12. விரைகதி யசுவந், தன்னைப் பலியிடு சார் விரைந்த
துரை பெறு மனத்திற் றேவ சிந்தனைக் குறிப்பினோடே;
புருவையா மவன்றன் சுற்றம்பொருந்திமுன் னடத்தப்பெற்ற;
தருங்கவி களினோ டேத்தை யறைபவர் பின்செல்வாரே.

(இ-ள்) வேகமான நடையோடு கூடிய அசுவமானது, தன்னைப் பலியிடுமிடத்தை நோக்கித், தனது மனத்துத் தேவத்துவபாவக் குறிப்போடேயே சென்றது. அக்குதிரையின் பந்துவாகிய ஆடு அவனுக்கு (குதிரைக்கென்றபடி) முன்னடத்தப்பெற்றது. கவிகளும், ஸ்தோதாக்களும் [illegible] செல்லுகிறார்கள்—(எ-று.) புருவை, ஆடு. நா[illegible] சுற்றம், பந்து.

13. பரமமார்ஞ் சதனத்தின்கட் பரி பிதா மாதா முன்ன
ரரணை மாயுற்ற; நின்று தேவர்மு னதியுவப்பின்
வருகை யுற்றிடும்; பின் றாசுடற்கு மீச்சிறப்பிற் றேன்று
மருமை யார் தனத்தை யீயப் பிரார்த்தனை யாற்று மாலோ.

(இ-ள்.) உத்தமமான ஸ்வர்க்கதலத்திற்குப் பிதா மாதாக்களிடத்துக் குதிரை வந்து சேர்ந்தது. இன்றையத்தினம் தேவர்களுக்கு முன்பு மிகுந்த ஸந்தோஷத்தோடு வரும். அதற்குப் பிறகு அவிதரும் யஜமானனுக்குச் சிறந்த செல்வத்தையளிக்குமாறு பிரார்த்திக்கும்—(எ-று.) தாசுடன், தாசுஷன், அவியளிக்கும் யஜமானன். இச்சூக்தம் குதிரையைச் சூர்யனாகப் பாவித்ததோடு பலபுதைபொருளுள்ளதாயினும் இதற்கு முன்னுள்ளசூக்தத்துக்கும் இதற்கும் பொருண்முரணில்லை யென்பார் வில்ஸனென்பவர். பிதா மாதாக்கள் வானமும் பூமியுமாம்.

வருக்கம் 13.

## 164. மண்டலம். 1. அநுவாகம். 22. சூக்தம். 8.

52 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷெ தீர்க்கதமஸன்; வடமொழிச் சந்தம்: 12, 15, 23, 29, 36 41 ஜகதி,42 ப்ரஸ்தாரபங்தி,51 அநுஷ்டுப், மற்றவை திருஷ்டுப்; தேவதை, 1-41 விசுவதேவர்கள், 42 வாக், ஆபன், 43 சகதூமனும் ஸோமனும்,44: அக்னி சூரியன் வாயுக்கள், 45 வாக், 46, 47 சூரியன், 48 காலச்சக்கரம், 49 ஸரஸ்வதி, 50 ஸாத்யா:, 51 சூரியன் (பர்ஜந்யாக்கினிகளும்) 52 ஸரஸ்வதி (சூரியனும்).

சௌநகர் இம்முழுச்சூக்தத்துக்கும் உபயோகங் கூறுகிறார்: ஒரு த்விஜன் திருட்டைப்புரிந்து மயங்கியிருக்கும்போது இச்சூக்தத்தை மூன்று இரவு உபவாசமிருந்து சுத்தத்தோடு ஜபிப்பானாகில் உடனே அப்பாபம் நீங்கி யவன் பரிசுத்தனாகிறானென்பார்.

1. வாமமார் பாலனன் போற்றுறுபவ னிவன்றன் மையச்
சேமமார் பிராதா மின்னும்; செப்பு மூன்றாம் பிராதா
வோம நெய் முதுகன்; ஈண்டு சனப்பதி யிவனை மக்கள்
காமமா ரெழுவ ரோடுங் காண்கின்றே னெதிரின் மன்னே.

(இ-ள்) அழகோடு கூடியவனும், உலகத்தைப் பரிபாலிப்பவனும், யாவராலும் ஸ்தோத்திரங்களோடு விளிக்கத்தக்கவனுமான சூரியனுடைய நடுத்தம்பி அந்தரிட்சத்தில் மழையளிக்கும் மின்னலாம். மூன்றாவது தம்பி ஹோமநெய்யைத் தன்முதுகிலேற்பவனாகிய அக்கினியாம். சனங்களுக்குப் பதியாகிய இவனை எழுபுத்திரர்களோடு நான்ஸாட்சாத்காரமாகப் பார்க்கிறேன்—(எ-று.) எழு புத்திரர்கள் எழு உலகங்களென்பார் ஸாயணர். இதனைப் பரமேசுவரனது விராட்ரூபஸ்துதியாகக் கொள்ளலாமென்றும் அவரே கூறுவர். நடுத்தம்பி மின்னலென்றது ஸர்வவ்யாப்தியுள்ளதால் வாயு வென்றுங்கூறுவர்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 3.

2. ஏகசக் கரத்தேர் தன்னி லேழு பரியிணைப்பர்; மாவும்
ஏழுடை னெழு நாமத்தின் வலித்திடு மதை; மூன்றாபிச்
சேருறு நேமி சற்றுஞ் சிதை விலாதது, விங்கெல்லாப்
போக மேயுலகுந் தாங்கும் பெருமையைப்பொருந்துமஃதே.

(இ-ள்.) ஏகசக்கரத்தோடு கூடிய தேரில் ஏழு. குதிரைகளைப் பூட்டு வர். (அல்லது ஸப்தவென்று பெயரையுடைய குதிரை யொன்றைக்கட்டு வர்.) அக்குதிரை ஏழுபெயர்களோடு அத்தேரை யிழுத்துச்செல்லும். மூன்று நாபி (சக்கரக்குடங்)களையுடையதும், உறுதியானதும், இவ்விடத்து எல்லாப் புவனங்களிலுமுள்ள பிராணிகளுந் தன்மேற்றங்கும் பெருமை வாய்ந்தது மான அச்சக்கரம் சற்றும் சிதிலமடையாதது—(எ-று,) ஏழுபரியியைப்ப ரென்றது ஏழுவர் மாவியைப்பரெனக்கொண்டு ஏழுவர் ரித்விஜர்களென் பார் மேனுட்டாசிரியர். மூன்நாபியென்றது கோடை, மாரி, பனியென்று மூக்காலங்களையுணர்த்தும். ஏகசக்கரம் சூரியனும். இவனிடத்திலேயே உல கங்கள் நிலைத்துள்ளன.

3. ஏழுசக்கரத்தேர் மீதே யேறிய வெழுவர், தம்மைத்
தேழுறவிழுப்பா, னேழு கிளர் பரியுடையார்; ஏழு
பேழுறு பசுக்கள் கூடிப் பிறங்குறு முடன் பிறப்பா
மேழைய ரெழுவர் நன்கே யிசைத்தொருங் குறுகின்றாரே.

(இ-ள்.) ஏழுசக்கரங்களோடு கூடிய தேரின்மேலேறிய ஏழு பெயர் கள், தங்களை யிழுத்துச் செல்வதற்காக வேழு குதிரைகளுள்ளவர்களாம். பெருமைபொருந்திய ஏழு பசுக்களைச் செல்வமாகவுடைய ஏழு சகோதரி களும் ஸ்தோத்திரங்களோடு வருகிறார்கள்—(எ-று.) ஏழுவர் என்றது சூரிய கிரணங்களேழு, அல்லது அயனம், ரிது, மாஸம், பட்சம், பகல் இரவு, முகூர்த்தம் என்னும் வருஷாங்கங்கள் ஏழு என்பார் ஸாயணர். ஏழு சக்கரம், ஏழுபரியென்பன, சூரியகிரணங்களாம். ஏழு சகோதரிகள் ஆறு ரிதுக்களும், அதிகமாஸமுமாம். ஏழு பசுக்கள் ஸப்தஸ்வரங்களாம். இந்த ஸ்வரங்களைக்கொண்டே இவ்வேழு வருஷாங்கங்களாகிய ஸகோதரிகளும் ஆதித்யனுடைய கீர்த்தி வசனங்களைக் கானஞ்செய் தொழுகுகிறார்கள்.

4. பிறந்தது முதற்க ணன்னுன் றன்னை யார் கண்டார்? என்பு
சிறந்த தென்பிலாத வொன்றைத் தாங்கு சீர்கண்டார் யாரே?
அறந்தரு புவியி னெய்த்தோ ராத்துமா வுயிரு மெங்கே?
இறந்தெரி ஞானவானைச் சேர்ந் தெவன் வினவுவானே?

(இ-ள்.) [இப்பிரபஞ்சத்தின் காலாயத்தமானவற்றைப்பற்றிப் பேசிய பின்பு அதன் காரண பூதனுகிய பரமேசுவரனது விஷயத்தைக் கூறு கிறார்.] பிறந்த வுடனே முதலில் அவனை யாரறிந்தார்கள்? எலும்புள்ள பிர கிருதி எலும்பில்லாத அப்பிராகிருத இறைவனைக் கருப்பத்திற் றாங்குவது போலத் தாங்குவதை யார் பார்த்துள்ளார்கள்? பூமியினது இரத்தமும், ஆத் மாவும் பிராணனும் எங்கே யுள்ளன? இவ்விஷயங்களை யெல்லாந் தெரிந்த

## மண்டலம் 1. சூக்தம் 164.

ஞானவானைக் கண்டு கேட்பதற்கு எவனுக்குத் திறமையுண்டு?—(எ-று.) வினிகளுக்கெல்லாம் எதிர்மறை விடையளிக்க. அவ்யக்தமாயிருந்த ஈசுவ ரனையும், சிருஷ்டிக்கிரமத்துக்குப் பின்னர் அகன்பிரகிருதியிற் றோற்றியதை யும், அச்சிருஷ்டி அப்பரம புருஷனைக் கருப்பத்திற் சிசுவைத் தாங்குவது போலத் தனக்குட்டாங்குவதையும், இரத்தஉபலட்சிதமாக வந்த ஸப்ததாதுக் களோடு கூடியஅவனது ஸ்தூல சரீரத்தையும், பிராண உபலட்சித ஸூக்ஷ்ம சரீரத்தையும், ஆத்மாவாகிய சேதனத்தையும் கண்டவர்களில்லை. அப்ப டிக் கண்டறிந்த குருவை யடுத்துக் கேட்கும்தரம் வாய்ந்த சிஷ்யனு மில்லை —(எ-று.),

5. பக்குவமுறுவே னென்னிற் பரந்துணராது மையம்
மிக்கதத்துவங்கதேவர் விழைந்து காப்பவற்றைக்கேட்பேன்;
தக்கநற்கவிகளோரான் மோங்குறு வற்சன்மீதே
யொக்க'தம்மேழு நூலை யோட்டினர் படமுறுத்த.

(இ-ள்) பக்குவ மடைந்து கொண்டுவரும் யானெனது மனத்தால் உணர முடியாதவனும் ஸந்தேஹாஸ்பதக்க னானவையும், தேவர்களால் நன்குபாதுகாக்கப் படுபவையுமான தத்துவங்களைக் கேட்பேன். மேதாவிகள் ஒருவருக்கு மோங்கும் வதஸனாகிய ஆதித்யன் மீது தமது ஸப்த சந்தஸ் அல் லது ஸப்த ஸோமயாக நிர்மாணங்களாகிய எழுதந்துக்களையும் ஒரு வஸ்திரத் தைப் போலத் துறக்கு நெடுக்குமாக நெய்தார்கள் —(எ-று.) தந்து, நூல்; படம், வஸ்திரம். 'இவ்வுலகத்துத் தெய்வ நிலையைப் பற்றிய விஷயங்களை யறிந்தாற் போது மென்று கேட்கும்போது கவிகள் என்னாலறியமுடியாத விஷயங்களைப் பற்றிப் பேசுகிறார்கள்.' என்பது கருத்தென்பார் (Ludwig) லுட்விக் கென்பவர்.

### வருக்கம். 14.

6. கவிகளையறிந்தோர் தம்மைக் கண்டறி வெய்தும் வண்ணம்
புவியினில் வினவுகின்றேன் புத்தியில்லாது ஞானங்
குவியுறுனுகத், தோற்றங் கூடிடு துருவி னேகன்
தவவுது ரஜங்களாறைத் தம்பிக்கச் செய்தோன் யாரே ?

(இ-ள்.) ஞானம் வாய்ந்த கவிகளைப் பார்த்து ஞான மடையுமாறு புத்தியற்றவனும் ஞானங் குவியாதவனும் கேட்கின்றேன்; பிறப்பற்ற வொருவனது உருவமாக இவ்வண்டங்களின் ஆறுரஜங்களையும் அல்லது உலகங்களையும் ஸ்தம்பாகாரமாக நிற்கச் செய்த வொருவன் யார்?—(எ-று.) ஒருவன் ஸூரிய னென்றும், ஆறுஉலக மென்பது ஆறு ரிதுக்களையும் குறிக்குமென்றுங் கூறுவார் ஸாயணர். அஜன், பிறப்பிலான் பிரஹ்ம னென் றும் அவனது உலகமாகிய ஸத்ய லோகத்துக்குக் கீழுள்ள ஆறுஉலகங்களை ரஜங்களாறென்று கவிகூறினு ரென்றும் உரைப்பர்.

7. தெரிந்தவனறைகவின்டு சீக்கிரம் வாமத்தோடு
பொருந்து மிவ்வியின் சேமப்பதத்தினைப்; பகக்காலனுன்

## அஷ்டகம் 2 அத்தியாயம் 3.

திருந்தியசிரத்திற்பாலே பொழுக்கு, மன்னுன் சிறந்த
நிரந்தரவுருவின் காலா லிரினை வவ்வுமன்றே

(இ-ள்.) அழகாகப் பொருந்துகின்ற விச்சூரியனுகிய பட்சியின் உறுதியான விடத்தைத் தெரிந்தவன் இங்கு சீக்கிரம் சொல்லட்டும். பசுக்களாகிய வவனது கிரணங்கள் அவனது (சிரத்தினின்று) உன்னதஸ்தானத்தினின்று பாலே (அல்லது ஸாரபுஷ்டியுள்ள உதகத்தை) ஒழுகச் செய்யும். அச்சூர்யனது ஆடையையுடுத்துக்கொண்டே அல்லது அவனது ரூபத்திலேயே தங்கள் பாதங்களால் அந்நீரை (மறுபடியும்) இழுத்துக்கொள்ளும்—(எ-று.) சூரியகிரணங்கள், மழையைப்பெய்விப்பது போலவே, பெய்த மழைநீரையும் மீண்டும் ஆவியாக்குந் தன்மையிலுஞ் சிறந்து நிற்கின்றனவென்பார் வில்ஸனென்பவர்.

8. தாய் பிதாவுக்குப் பங்கு ரிதத்தினி லீந்தாள்; முன்ன
ரேய்மன மொத்துக் கன்ம விணைபினுற்கலந்தாள்; அன்னுள்
தோய்சிறுநாணிற் கர்ப்பரசத்தினுனிறைந்தாள்; மாந்தர்
வாய் நமத்தோடு போற்ற வந்தனையுற்ருர் வல்லே.

(இ-ள்.) பூமியாகியதாய் வானமாகிய பிதாவுக்கு ரிதத்தில் (யக்ஞகர்மத்தில் அல்லது இயற்கை யொழுங்கிலென்றபடி.) பங்களித்தாள். முதலில் பிதாவின் மனத்தோடு ஒத்த ஞானகர்மங்களினுல் அவனேடு கூடினுள். பயிர்களைப்பெற்று வளர்க்குமிச்சைகளோடு நாணிக் கூடிக் கர்ப்பரஸத்தினுல் நிறைந்தாள். மனிதர் நமஸ்காரங்களோடு அவளைத்துதிக்க நெருங்கினுர்கள்—(எ-று.)

9. தாயுந்தட்சிணை நிர்வாகஞ் சார்ந்து கூடினளாற்; கர்ப்பந்
தோயு நீர்மாலை தன்னிற் றேய்ந்தது; கன்று சுதத
மேய தாய்ப் பசுவை, நோக்கிற் றுற்ற மூன்றினிறு மேவித்
தாய வெல்லா வுருவுந் தாங்கிய தகைமைத் தல்லை.

(இ-ள்.) இப்பூதங்களை யெல்லா நிர்மிக்கும் மாதாவாகிய வானம், இஷ்டப் பட்டவைகளைப் பூரணமாகத் தருஞ் சாமர்த்தியம் பொருந்திய தட்சிணையாகிய பூமியின் நிர்வாகத்தைப் பெற்றுக் கூடினுன். கர்ப்பமாகிய நீர்க்குழு (சூரியனென்பார் மேனுட்டாசிரியர்) நீர் மாலையாகிய மேகத்தின் நடுவிற் பொருந்திற்று. அந்நீர்க்குழுவாகிய மேகக்கன்று முழங்கி, வானம் பூமி அந்தரமென்னும் மூன்றிலும் பொருந்திய வெல்லா வுருவத்தையும் தாங்கிய தாயாகிய பசுவைப்பார்த்தது—(எ-று.) கர்ப்பம், வத்ஸம் இரண்டிற்கும் சூரியனென்று பொருள் கொள்ளுவது பொருத்தமானதாம். மாதா பசுவினது நுகத்திற் பிணைக்கப்பெற்றுள் அதாவது யாகத்துக்குப்பால்தரும் பசுவினது வேலையைப் பூமிமேற் கொண்டது என்று முதலடிக்கு மேனுட்டாசிரியர் பொருள் கூறுவர்.

10. தந்தையர் மூவர் தாயர் மூவரைத்தாங்கி யேகன்
விதையினிமிர்ந்து நின்றுன்; களைப்பிணை விளையா ரென்றும்;

## மண்டலம் 1 சூக்தம் 164

எந்தாற்பொருளுமோரு மாற்ற, மெச்சிந்தையுள்ளு
நந்துறுதனின் வானமுகட்டினின் மறையுரைப்பார்

(இ-ள்.) புத்திரஸ்தானத்திலுள்ள ஆதித்தியன் ஒருவனாய், மழையினாற் பயிர்களை வளர்க்கும் பூமி, வான, அந்தரமென்னும் மூன்று தாய்மார்களையும், அம்மூவலகாபிமானி தேவதைகளாகிய அக்கினி,வாயு சூரியனென்னும் பிதாக்களையும் தாங்கிக்கொண்டு நிமிர்ந்து நின்றான். அப்படியிருந்தும் இப்பிதா மாதாக்கள் அவனுக்குக் களைப்பைத் தரமாட்டார்கள். அவர்கள் விண்ணுலகத்தின் மேலுள்ள வந்தரத்தில் எல்லாவற்றையும் அறிவதும் ஆனால் எல்லாருடைய அறிவினாலும் அறியப்படாததுமான மாற்றத்தால் (வார்த்தையால்) அவ்வாதித்தியனைப்பற்றிய மந்திரத்தைக் கூறுவார்கள் —(எ-று.) ஆதித்தியனைப்பற்றிப் பேசிக்கொள்வார்கள் என்றபடி. மாற்றம், வார்த்தை.

### வருக்கம். 15.

11. பன்னிரண் டாரம் பூண்டு பழமை யெய்தாது வானின்
முன்னரிற் பரிதிநேமி யொழுங் கினி துருளும்; சோடு
துன்னிய புதல்வ, ரங்கி, யிருபது கடையிற் றோய
முன்னிய வெழுசதத் தோர் முடுக்கொடு நிலைத்திட்டாரே.

(இ-ள்.) (ரிதத்தின்) சூரியனது சக்கரம் பன்னிரண்டு மாதங்களாகிய ஆரங்களைப் பூண்டு கிழத்தன்மை யடையாது வானிடத்தின் மேல் கிரமமாகச் சுற்றும். அக்கினியே! இரட்டையாகத் தோய்ந்த எழுநூற் றிருபது புத்திரர்கள் (அதாவது பகலு மிரவுமாகச் சேர்ந்த முன்னூற்றறுபது நாட்கள் என்றபடி.) இங்கேநிலை பெற்று நின்றார்கள்—(எ-று.)

(வேறு.)

12. பன்னிரண்டா கிருதியொடு மைந்து
பாதங்களோடும் பரிந்துமாரி
மன்னிவிரிந்திடு தந்தையெனச் சொல்வார்
விணிற்றூர மலிந்த பாதிக்
கண்ணுறைவோ; ரேனையவரிவர் சொல்வா
ரெழுநேமிக்கருது மாறாய்த்
துன்னுபழுத் தேரினதி தூரநோக்
குறுதேவன் றோய்ந்தா னென்றே.

(இ-ள்.) பன்னிரண்டு மாஸங்களாகிய ரூபத்தோடும், ஐந்து ரிதுக்களாகிய பாதங்களோடும், மழைநீர் நிறைவுள்ள பிதாவென விண்ணின் தூரத்திலுள்ள பாதியிலிருப்பவர்கள் சொல்லுவார்கள்: ஆனால் இங்குள்ள மற்றவர்கள் எழு நேமிச்சக்கரங்களும், ஆறு ஆரங்களு முள்ள தேரின் மேல் தூரதிருஷ்டியோடு கூடியுள்ள தேவனைத் தங்கியுளா னென்று சொல்லு

வார்கள்—(எ-று.) ஹேமந்த ரிதுவையும் சிசிர ரிதுவையும் ஒன்ருய்ச் சேர்த்து ஐந்து ரிதுக்கள் என்பார் ஸாயணர். இக்கருத்தை யொட்டியே மண். 1 சுக். 156 செய். 6லும் கூறினர். எழுசக்கரங்கள் அயனம், ரிது, மாதம், பட்சம, பகல், இரவு, முகூர்த்தம் என்னும் எழுமாம். ஆறு ஆரங்கள் ஆறு ரிதுக்களாம். இரண்டு விதமாகச் சூரியனைக் கூறுவோரின் மதங்களைக் கூறினர் கவி.

(வேறு.)

13. ஆரமைந்துள்ள சக்கரத்தின்மேற் சுழன் றெக்காலுஞ்
சாருறும் புவனமெல்லாம்; தாங்கிய வச்சுமிக்க
பாரந் தாங்கிடி னுஞ் சூட்டைப பற்ருது; ததன்குடந்தா
னேருறச் சநாதகாலந் தொட்டிரு ந்தியைந்த தாமே.

(இ-ள்.) ஐந்து ஆரங்களுள்ள சக்காத்தின் மேல்எல்லாப் பிராணிக் கூட்டங்களும் சுழன்று அங்கேயே தங்கியிருக்கும். அச்சக்காத் தேரைத் தாங்கும் அச்சு மிகுந்த பாரத்தைத் தாங்கிய காலத்தும் சூடு பெறுவதில்லை. அதன் குடமோ பழைய காலத்திலிருந்து முறியாதியைந்ததாம்—(எ-று.). ஐந்து ஆரங்கள் ஐந்து ரிதுக்களாம். மேற் 12ம் செய்யுளை நோக்குக.

14. வட்டையோடார்ந்த சக்கரம் பழுதின்றிச் சுற்றும்;
கட்டுறும் பதின்மரிர்ப்பர் கழிபெற விரிந்ததால
வட்டமாமதனில்; சூரனப்பகம் ரஜத்தற்சூழ
வட்டமாபுலவு; மெல்லாப் புவனமு மவன்கணேயும்.

(இ-ள்.) வட்டையோடு கூடிய சக்காம் பழுதுபடாமற் சுற்றுகிறது. மிகவிரிவாகப் பரந்த பூமியினிடத்து (இந்திராதி ஐந்து உலக பாலகர்களும், பிராஹ்மணர்முதல் நிஷாதரீருகவுள்ள ஐந்து வருணத்தாரு மாகிய) பதின்மர் அச்சக்காத்தைத்தாங்கி யிழுப்பார்கள். சூரியனது கண் ரஜத்தினற் சூழப்பெற்று வட்டமாய்ச்செல்கிறது. எல்லாப் பிராணிக்கூட்டங்களும் அவனிடத்துப்பொருந்தும்—(எ-று.) ரஜம்(atmosphere)உலகமென்பார் யாஸ்கர். உலகத்தைச் சூழ்ந்த வாயு கோசத்தை யுணர்த்துமச்சொல்.பதின்மர் பத்து உலகப் பரப்புக்களாயிருக்கலாமென்பர் மேனுட்டாசிரியர்.

(வேறு)

15. உடனுதித்தோர்தமிலேழா மவன் றனேயொற்
றைப்பிறப்போ னென்றுரைப்பர்;
திடனுறுமற்றறுவர்களுந் துணேப்பிறப்போ
ரிருடிகளாந் தேவசாதர்;
வடிவுறத் தம்மிடத்தினு று மவருருவம்
பலர்விழைவின் மன்னுந்; தங்கள்
வடிவுபலவாறுக வதிட்டாதா
வின்பொருட்டு மருவி யோடும்.

## மண்டலம் 1 சூக்தம் 164.

(இ-ள்.) ஒருங்கு பிறந்தவர்களில் ஏழாவதாகத் தோன்றியவனை யொற்றைப் பிறப்போனென்று சொல்லுவார்கள். மற்றைய அறுவரும் இரட்டைப் பிள்ளைகளும், இருடிகளும் (இவ்விரண்டாய்ச் செல்பவர்களு மென்பார் ஸாயணர்.) தேவப்பிறவியுள்ளவர்களுமாம். அழகாகத் தங்கள் தங்களிடங்களில் தக்கும் அவரது ரூபங்கள் எல்லாரு மிஷ்டப்படும்படி பொருந்தும் மேலும் தங்களது வடிவங்கள் பலமாதிரியாகப் பொருந்தத்தங்களைத் தாபித்த பிரபுவுக்காக வவைகள் (மீண்டும் மீண்டும்)சலிக்கின்றன—(எ-று.) ரிஷய: கந்தார: செல்பவர்களென்பது ஸாயணருரை.

### வருக்கம் 16.

(வேறு.)

16. பெண்பகுப்பினரைபெற்கிங் காவெனவுரைத்தார்; கண் ணோன்
கண்டனன்; அந்தன்காணான்;கவித்துவ மகனு மிஃதைத்
திண்ணமா யுணர்ந்தான்; ஈதைச்சரிவரத்தெரிந்து நின்றோன்
வுண்மைமார் பிதிர்ப்பிதாவாய் வயங்கியே யொளிர்கின்றானே.

(இ-ள்.) பெண்பாலாக வருபவர்களை யென்னிடத்து ஆண்பாலாகக் கூறினார்கள். கண்ணுள்ளவன் இதனுண்மையைக் கண்டான். அறிவிலியாகிய வந்தகன் இதனை யறியவில்லை. வயதிற் சிறியனான புத்திரனேனும் அவன் கவித்துவ சக்தியோடு கூடிய ஞாதாவாயின் இதனை யறிந்தவனவன். இவ்வுண்மையைச் சரிவரத் தெரிந்தவன்,அப்படித் தவறாகப்புருஷலிங்கமாக வெண்ணப்பட்ட 'ரச்மி' (கிரண மென்பது பொருள்) யாகிய பிதாவுக்குப் பிதாவாகிய சூரியனோடொருவனுப் (ஞானபாஸ்கரனுயென்க்.)க்கருதப்பட்டு விளங்குகிறான்—(எ-று.) வடமொழிப்பதங்கள் பொருள்பற்றிப் பால்கொள்ளுவன வல்ல. ஆணின் பெயர் ஸ்திரிலிங்கமாயிருத்தலுங் கூடும், பெண்ணின் பெயர் புல்லிங்கமாயிருத்தலும் கூடும். ரச்மி என்னும் பதம்ஸ்திரீலிங்கம். அதனை, மழைபெய்வித்துவுலகத்தைப்பரிபாலிக்குங்கர்த்திருத்துவத்தால் பிதாவாக வருவிப்பது மரபு. இதனைக் கவியுணர்ந்து ஸ்திரீலிங்க வாசகத்தைப் புருடனென்பதென்னை யென வாதித்துக் கூறினார்.' இதைத் தெரிந்தவன் பிதாவுக்குப் பிதாவாகிறானென்று கூறுவதும் ஒன்று. அதாவது எழுத்துவாசனையில்லாத பிதாவைக்காட்டிலும் கவியாய் அல்லது மந்திரதிருஷ்டாவாயுள்ள புத்திரனே அப்பிதாவுக்குஞானபிதாவாகக் கருதப்பெறுவானென்பது பொருள். இதைப்போன்ற ஒருசம்பவந்தாண்டியபிராஹ்மணத்தில்ஆங்கிரஸோற்பன்ன புத்திரனைப்பற்றித்தேவர்களே கூறியதாக ஸாயணர் எடுத்துக்காட்டுகிறார்.

17. பாத்துக்குக் கிழிகத்தின் மேனுமா பதத்திற் பாதத்
தாத்தினிற் கன்றைப்பற்றி யுயர்வுற வோங்கிற்றுவும்;
நிரத்திசெத்திக்கிலுற்ற, தெங்குதன் பலன்பாடென்னிக்
கருத்துறச் சென்று கன்றின் றளித்த?திம்மந்தை யின்றே.

(இ-ள்.) மேலுலகத்துக் கீழும், இக்கீழுலகத்துக்கு மேலும் தனது பாதத்திற் கன்றாகிய சூரியனைத் தூக்கிக்கொண்டு கதிர்க்கற்றைகளாகிய (அல்லது மேனாட்டாசிரியர் மதப்படி உஷஸாகிய) பசு எழுந்தது. எந்தத் திசையை நோக்கித்தான் பலன்படுங்கருத்தோடு சென்று எங்கே தன் கன்றை யீன்றது? இங்குள்ள மந்தையிலீனவில்லை—(எ-று.) இம்மந்தை யென்றது இங்கு காணப்படும் உலகத்தைக் குறித்து நின்றது.

18. கவியெனக் காண்போன் யாவன் பரத்துக்கீழிகத்து மேக்குப்
புவியுறுமிந்தக்கன்றின் பொய்பறு தாதைதன்னைக்
குவியுறுஞானத்திறனேர்ந்தோன்கூர்ந்துரைத்திடவேவல்லோன்?
எவணுதித்தோங்குந் தேவத்தன்மைபோ டியைய மனமே.

(இ-ள்.) பரலோகத்துக்குக்கீழும் இகலோகத்துக்கு மேலும் தோன்றும் இந்தக் கன்றாகிய சூரியனது பிதா யாரெனத்தனது வசாக்கிரசித்தத்தால் அறியும்ஞானசக்தி வாய்ந்த எந்தக்கவி சொல்லமுடியும்? தேவத்தன்மையோடு கூடிய அறிவு எங்கேயிருந்துதித்து எழுகிறது?—(எ-று.) இவை அகோசரமானவை யென்க. தாய் உஷஸ் என்பது எல்லாருக்குந் தெரிந்தவிஷயம். பிதாயாரென்று ஒருவருக்குந்தெரியாதென்பார் மேனாட்டாசிரியர்.

19. ஈங்குறு மவற்றைத்தூரச் செல்பவை யென்று சொல்வார்;
ஈங்குறுபவையென்பார் சேய்குறு மவற்றை மாந்தர்;
ஓங்குற வேந்தே, சோம, வுஞற்றிய வைற்றை லோகந்
தாங்கிய நுகம்பூண்டீர்க்குந் தன்மையோர்வகிப்பரன்றே.

(இ-ள்.) இவ்விடத்தைநோக்கி வருபவற்றைத் தூரச் செல்லுபவை யென்று கூறுவர். தூரச்செல்லுமவற்றை யிவ்விடத்துநோக்கி வருபவை யென்று சொல்லுவார். இந்திரனே! ஸோமனே! நீங்கள் சிருஷ்டித்தவற்றை யெல்லாம் லோகங்களைத் தாங்கும் நுகத்தைப்பூண்டு இழுக்கும் குதிரைகளைப்போல வகிப்பார்கள்—(எ-று.) 12 ஆதித்தியர்களின் மத்தியில் இந்திரன் ஒருவனானதால் இந்திரன் என்னும் பெயர் ஸூரியனைக்குறித்து நிற்கும். ஸோமன் சந்திரன்.

20. நற்சிறகுற்ற நண்பிற் கூடிபவிரண்டு புட்கள்
முற்படவோர்மரத்தினடைந்து மேலுறைந்த; வன்ன
வற்றுளொன்றினிய பிப்பலத்தினைப்புண்ணும்; மற்றொன்
றற்றருந்திடாது வாளா நோக்கியே யுறையுமாதோ.

(இ-ள்) நல்ல சிறகோடு கூடியவையான இரண்டுபட்சிகள் நண்பிற் பொருந்தியவை ஒரேமரத்தின்மேற் றங்கியுள்ளன. அவற்றுள் ஒன்று இனிய அரசமரக்கனியை யுண்ணும். மற்றொன்று பழத்தைத்தின்னாது பார்த்துக் கொண்டிருக்கும்—(எ-று.) இப்பட்சிகள் ஜீவாத்மாவும் பரமாத்துமாவுமாம் ஜீவாத்மா சுகதுக்கரூபமான போகங்களை யுண்ணும்போது பரமாத்மா அதனைப் பார்த்துக்கொண்டிருக்கிறது. இவையிரண்டும் தங்கியுள்ள மரம் மனித சரீரமாம். ஜீவாத்மா வுயிர்ச்சத்தியும்; பரமாத்மா இறைவனது பிரதிபிம்பகை தன்யரூபமாயுள்ள சாட்சிபூதமுமாம்.

வருக்கம் 17.

# அறிவிப்பு.

---

இவ்வேத மொழிபெயர்ப்பு முடியும் வரையிலும் வருஷ வாரி இவ்வேத கைங் கரியத்துக்குத் தமது உதவியாக விருக்கட்டுமென்று ஈனாது மீ 30-ரூபாய் அனுப்பிய கார்டைட் பாக்ட்ரி (Cordite Factory Contractor.) கண்டிராக்ட்டர் மகா-ா-ா-ஸ்ரீ **P. ராமஸ்வாமிபிள்ளை** யவர்களின் நன்கொடையை யிதன் மூலமாய்விநய வந்தனங்களுடன் தெரிவிப்பதோடு ஈச்வரன் இவ்வுபகாரியைமேன்மேலும் அபிவிருத்தியடையச் செய்வாராக வெனப் பிரார்த்திக்கிறோம்.

இவ்வேதபிரோ வேதங்களைத் தமிழ்ப்படுத்தும் நோக்கத்தோடேயே ஸ்தாபிக்கப்பட்டிருப்பதால் வேறொரு சாஸ்திரியையும் உடன்கொண்டு எமது பார்வையிலேயே யஜுர் வேதத்தையும் மொழிபெயர்த்து உடனே வெளியிட்டால் சிக்கிரம் வேதங்களெல்லாம் வெளிவர வேதுவாகுமேயென்று சில நண்பர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். அதற்குத்தக்க இடம்பாடில்லாததால் அப்படி யாம் செய்ய முடியாமலிருக்கிறது. நந்தமிழபிமானிகளாயுள்ள கன தனவான்களும் பிரபுக்களும் முன்வந்து தக்க உதவிபுரிவார்களாயின் இப்பிரோவுக்கெனவே ஒருதனிக்கட்டடமொன்றமைத்து, அதில் இப்பொழுதுள்ள புஸ்தகசாலையை விருத்திசெய்து, நமது வேதப்பிரசுரத்துக்கு மாற்றாகவரும் வாரப்பத்திரிகைகளும், மாத சஞ்சிகைகளையுங் கொண்டு அதன்கண் ஒரு இல்வசவாசகசாலையையுமமைத்து, ஒருயஜுர்வேதியையும்தக்கசம்பளத்தில் அமர்த்தித் தைத்திரியஸம்ஹிதைமொழிபெயர்ப்பையுந்தொடங்குவித்துவருகிற ஏப்ரல்மாதத்திலிருந்தே ரிக்வேதத்தோடு யஜுர் வேதத்தையும் ஒருமிக்க வெளியிடப் பிரயாசைப்படலாம்.நம் தமிழ்வேதபிமானிகள் இவ்விஷயத்திற் சற்றுக் கவனம் செலுத்துவார்களாயின் இது நடவாத காரியமல்ல. மனிதரது ஆயுட்காலம் நிலையற்றதாதலின் இப்படிச்செய்வது இறைவனது திருவுள்ளமாயின் நமக்குத் தக்கவுதவிகிடைத்த தட்சணமே அவ்வேலையையும் செய்யத் தொடங்குவோம்.

# ரிக் வேத ஸம்ஹிதை

## அப்த பூர்த்தி

## அறிவிப்பு.

---

எல்லாம் வல்ல இறைவனது அருளால் இவ்வேத மொழிபெயர்ப்பின் முதல் வருஷம் பூர்த்தி பெற்றது. இவ்வருஷத்தில் எமக்களித்த ஆதரணைக்காக எமது சந்தாதாரர்கள் யாவர்க்கும் எமது அன்பார்ந்த வந்தனத்தை யளிக்கிறோம்.

சிலர் இவ்வேத முயற்சியைக் கைதூக்கி விடவேண்டுமென்ற நோக்கத்தோடேயே, எமக்கு நன்கொடை யளித்தும், தங்கள் விளம்பரங்களைத் தந்தும், மாற்றுச் சஞ்சிகைகளனுப்பித் தங்கள் பத்திரிகைகளில் விதந்து கூறியும், பின்னும் பலவாறாக உதவிபுரிந்து உற்சாகப்படுத்தியும் உபகரித்திருக்கிறார்கள். அன்னாருடைய காலவுதவி யில்லாமற் போயிருந்தால் இப்பிரோவின் வேலை இவ்வளவு சிறப்புப்பெற நிறைவேறி யிருந்திராது என்பது திண்ணம். இவற்றைப்பற்றியெல்லாம் சவிஸ்தாரமாக இவ்வேத முடிவில் எழுத உத்தேசித்திருக்கிறோம். மேலும் இக்காரியத்தொடக்கத்தில் சிலர் இவ்வேதப்பிரசுரமும் நடந்தேறுமாவென்று ஐயுற்று நின்றகாலத்து, எம்மையறிந்தும் அறியாமலும் பலர் முன்வந்து சந்தாதாராகச் சேர்ந்து எம்மை யபிமானித்து வந்துள்ளார்கள். அவர்களுக்கு யாம் எழுமையும் நன்றிபறிவுள்ளோமா யிருக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

இவ்வருஷத்தில் இவ்வேதப்பிரசுரத்தை யபிமானித்தது போலவே அடுத்த வருஷத்திலும் கைதந்து இவ்வேதப்பணி முன்னேறுங்குமாறு பார்ப்பதுடன் பின்னும் பலருக்கும் இதன் அருமைபெருமைகளைக் கூறி யவர்களையும் சந்தாதாரர்களாகச் சேருமாறு தூண்டவேண்டுமாய் எமது சந்தாதாரர்கள் ஒவ்வொருவரையும் விநய வந்தனபூர்வமாய்ப் பிரார்த்திக்கிறோம்.

அடுத்த சஞ்சிகையை, ஒருவருஷச்சந்தாத் தொகையாகிய ரூபாய் (6-0-0) ஆறுக்கு வி. பி. யிலனுப்பும்போது அதனையும் ஏற்றுப் பெற்றுக்கொண்டு எம்மைக் கௌரவிக்கவேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறோம்.

## மண்டலம் 1 சூக்தம் 164.

21. நற்சிறைக் கிரண மெங்கணமுதத்தின் கூறை நாடிச்
சற்சனர் குழுவி லோயாதடைந்தொளி தயங்குமங்ஙன்,
முற்படைப்புவனத்துக் கினன் முழுஞானி, யோம்பு
மேற்படுதொழிலோன், மந்தனென் வயினுழைந்தான்மன்றே.

(இ-ள்.) நல்ல சிறகுகளோடு கூடிய ஆதித்ய ரச்மிகள் எவ்விடத்து அமுதத்தின் அல்லது தண்ணீரின் அம்சத்தைத் தாங்கிக்கொண்டு யக்ஞ தலத்திலுள்ள ஸாது ஜனர்களினது கூட்டத்தில் விளங்குகின்றனவோ வவ்விடத்து எல்லாப்புவனங்களுக்கும் ஸ்வாமியாகிய ஆதித்தியன், ஞானியாய், எல்லாவற்றையும் காப்பாற்றுபவனாய் பக்குவமில்லாத மந்தனாகிய என்னிடம் நுழைந்தான்—(எ-று)

22. மதுவுணுஞ் சிறைப்புளெந்த மரத்தினிற் றங்கிப் பின்னும்
விதுவொளிக் கதிரைத் தோற்று மம்மர வுச்சி மேய
பதமுறு பழந்தீஞ்சாற்றுடனைந்ததாப் பகர்வர், தந்தை
யிதமுறவோரார் யாரு மிதனை யெய்திடுதலின்றே.

(இ-ன்) இனிமையான மதுவை யுண்ணுகின்ற சிறகுகளோடு கூடிய கிரணங்களாகிய பட்சிகள் எந்த ஆதித்யனாகிய மரத்தி னிரவிற் றங்கிப் பின்னும் உதயகாலத்தில் பிரகாசத்தைத் தோற்றுவிக்கின்றனவோ அவ்வாதித்யனாகிய மரத்தின் உச்சியிலுள்ள பதம்வாய்ந்த பழமானது இனிய சாற்றோடு கூடியுள்ளதாகச் சொல்லுவார்கள் தத்துவ முணர்ந்தவர்கள். இப்படி ஜகத்பாலகனாகிய பிதாவை யறியாதவர்கள் இப்பழத்தையும் அடைவதில்லை —(எ-று.) புள், சூரியகிரணங்களைக் குறித்து நின்றது, மரம் ஆதித்யனைக்குறித்தது.

(வேறு.)

23. காயத்ரி யெனும்பத மேற் காயத்ரி
முதலமைத்த காசி லாறுந்,
தோயத்திருட்டுபினின் றுயர் திருட்டுப்
பெய்த்திட்ட தொழி லாறும்,
மேவச்சகதிபதத்தே பொலிர்சகதி
தாபித்த மிளிர் கொளாறுங்,
காயத்தி னன்குணர்ந்தோ ரமுதநிலை
தனையடைந்தார் கதிக்க மாதோ.

(இ-ள்.) காயத்திரி யென்னும் பதத்தின்மேல் (அல்லது ஸ்தானத்தின் மேல்) காயத்திரி யென்னும் பண்ணை யமைத்த விதத்தையும், திருஷ்டுப் என்னும் பதத்தின் மேல் திருஷ்டுப் என்னும் பண்ணை யமைத்த விதத்தையும், ஜகதி யென்னும் பதத்தின்மேல் ஜகதியென்னும் பண்ணை யமைத்த விதத்தையும், நன்றாக வறிந்தவர்கள் அமிர்தத்துவத்தை (மரணமற்ற மோட்ச நிலையை யென்றபடி.) நன்கு பெறுவார்கள்—(எ-று.) காயத்திரி

யின் பதமாகிய பூமியில் காயத்திரி யாகிய அக்கினி தங்கியிருப்பதையும், விருஷ்டி, பர்ஜன்யன் (மேகம்) வித்யுத் (மின்னல்) என்றும் மூன்றுமுள்ள அந்தரத்தில் மேல், கீழ், குறுக்கு என்னும் மூவகையாக வியற்றப் பட்ட வாயு தங்கியிருப்பதையும், மூன்றாவதாகிய விண்ணுலகத்தில் கதியிற் சிறந்த ஆதித்தியன் றங்கியிருப்பதையும், அறிந்தவர்கள் மோட்சத்தை யடைகிறார்கள் என்பதும் ஒன்று; அல்லது பிராதஸ் ஸவனத்தில் காயத்திரிச் சந்தத்தை யுபயோகிக்க வேண்டு மென்றும், மாத்தியந்தின ஸவனத்தில் திருஷ்டுப் புச்சந்தத்தை யுபயோகிக்க வேண்டு மென்றும், ஸாயம் ஸவனத்தில் ஜகதிச் சந்தத்தை யுபயோகிக்க வேண்டு மென்றும் அறிந்தவர்கள் மோட்சத்தை யடைகிறார்கள் என்றும் பொருள் கூறலாம். இதற்கு ஐதரேயப்ராஹ்மணத்திற் சொல்லியிருக்குங் காரணம் வருமாறு :—

பிராதஸ் ஸவனாரம்பத்தில் ஹோதா 'சோம்ஸாவோம்' என்று மூன்றட்சரங்களால் அழைக்கும்போது அத்வர்யு, 'சோம்ஸாமோதைவோம்.' என்று ஐந்து அட்சரங்களாற் பதிற்குரலளிக்கிறான். (ஒற்றெழுத்துக்கணலகுபெறா வென்றுணர்க.) பிராதஸ்ஸவனாந்தியத்தில் ஹோதா 'உக்தம் வா(ச்)சி என்னும் நான்கு அட்சரங் கூறும்போது, 'ஓமுக்தாசா' என்னும் நான்கட்சரங்களால் அத்வர்யு பதிலளிக்கிறான். ஆகவே பிராதஸ்ஸவனத்தினாரம்பித்திலும், முடிவிலும் இருவர் மொழிகளையுஞ் சேர்க்க மூன்றும் ஐந்தும் நான்கு நான்குமாகத் தனித்தனி எட்டட்சரங்களாகின்றன. அதனால் பாதத்துக்கு எட்டட்சரமுள்ள காயத்திரிச் சந்தஸையே பிராதஸ்ஸவனத்திலுபயோகிக்கவேண்டுமென ஒருவனறிந்துகொள்ளவேண்டும். அதுபோலவே மாத்தியந்தின ஸவனத்தொடக்கத்தில் ஹோதா, 'அத்வர்யோ சம்ஸாவோம்' என்னும் ஆறெழுத்துக்களினால் விளிக்க அத்வர்யு 'சம்ஸாமோதைவோம்' என்னும் ஐந்தட்சரங்களாற் பதிற் குரலளிக்கிறான். மாத்தியந்தின ஸவனமுடிவில் 'உக்தம்வா(ச்)சி இந்த்ராய' என்னும் ஏழட்சரங்களைக் கூற, அத்வாயு 'ஓமுக்தசா' என்னும் நான்கட்சரங்களாற் பதிலுரைக்கிறான். ஆகவே மாத்தியந்தின ஸவனாரம்பத்தில் ஆறும் ஐந்தும் பதினோரெழுத்துக்களும், முடிவில் ஏழும் நான்கும் பதினோரெழுத்துக்களும் உபயோகப்படுவதால், பாதத்துக்கு (ஒருசுலோகம் அல்லது ரிக்குக்கு நான்குபாதமென்றறிக.)ப் பதினோரெழுத்துள்ள திருஷ்டுப் சந்தஸை மாத்தியந்தின ஸவனத்தில் உபயோகிக்கவேண்டும் என்று அறிந்துகொள்ளவேண்டும். அம்மாதிரியே ஸாயம் ஸவனாரம்பத்தில் 'அத்வர்யோ சோசோம்ஸாவோம்.' என்று ஏழு அட்சரங்களால்ஹோதா விளிக்க, 'சம்ஸாமோதைவோம்' என்று ஐந்தட்சரங்களாற் பதிற்குரலளிக்கிறான்; ஸாயம் ஸவன முடிவில், 'உக்தம்வாச்சி இந்த்ராய தேவேப்ய இதி.' எனஹோதா பதினோரட்சரங் கூறும்போது, அத்வர்யு 'ஓம்' என்று ஏகாட்சரத்தாற்பதிலுரைக்கிறான். அதனால் ஆரம்பத்தில் ஏழும் ஐந்துமாகப் பன்னிரண்டெழுத்துக்களும் முடிவிற் பதினொன்றும் ஒன்றுமாகப் பன்னிரண்டெழுத்துக்களும்உபயோகப்படுவதால்பாதத்துக்குப் பன்னிரண்டெழுத்துள்ள ஜகதிச் சந்தஸை யுபயோகிக்கவேண்டும் ஸாயம் ஸவனத்திலென்றறிந்து கொள்ளவேண்டும். இவ்வகையறியாதபடி ஒருவன் கிரமப்படி இந்த ஸவனங்களைச் செய்துவந்தபோதிலும் அவை பூரணமாவதில்லை யாதலால் அவனுக்கு மோட்சமில்லை.

## மண்டலம் 1 ஸூக்தம் 164

24. அர்க்கங் காயத்திரியா லளந்தனன்; சாமந் தன்னை
யர்க்கத்தா லளந்த தன்றித் திருட்டுப்பாற் குளகந் தோற்றும்
வர்க்கத்தை யளந்தான்; வாகந் துவிபத நான்கு பாதத்
தர்க்கமி லளவை கொண்ட; தயக்கினு ரெழுத்தினேழ் பண்.

(இ-ள்.) காயத்திரியென்னும் பண்ணினால் அர்ச்சனு ஸாதனமான இருக்குக்களை யளந்தான். இருக்கினால் ஸாமத்தையளந்தான். த்ருஷ்டுப் பாதிய சந்தஸ்களால் இரண்டுமூன்றாகச் சேர்ந்தொழுகும் வர்க்கத்தை யளவு படுத்தினான். துவிபாத சதுஷ்பாத அளவைகளால் அநுவாகங்களும் அளவு பெற்றன. அட்சரங்களால் எழுவேதப்பண்களையும் உருப்படுத்தினார்கள்— (எ-று,) பாதத்துக்கு 8 அட்சரமுள்ள காயத்திரி, பதினோரட்சரமுள்ள திருஷ்டுப், பன்னிரண்டட்சரமுள்ள ஜகதி முதலிய சந்தஸ்கள் எழுத்தாலமைக்கப்படுவனவென வறிக. அதனால், இருக்கு, வர்க்கம், ஸூக்தம், அநுவாகம் இவற்றிற்கெல்லாம் அட்சரம் மூலமென்பதைக் கூறி யட்சரப்ரசம்ஸைசெய்தார் கவி. என்பார் ஸாயணர். வாகம் என்னும்சொல், வர்க்கம், அநுவாகம் என்னும் இருபொருள் கொண்டது.

25. வானத்திற் சிந்து தன்னைத் தாபித்தான் ஜகதி தன்னாற்;
றானத்திற் பரிதி 'ராதந்தரத்தினி' னிற்கக் கண்டான்;
ஞானத்தின் முக்கோல் காயத்திரிக்கு மூட்டிட நவின்று
ரானத்தின் மகிமை வன்மை யிவற்றின் மேம்பட்டதஃதே.

(இ-ள்.) (பிரஹ்மா) விண்ணுலகத்தில் ஸிந்துவை ஜகதிச் சந்தத்தினால் நிலைநிறுத்தினான். 'ராதந்தரம்'என்னும் ஸாமமந்திரத்தினால்ஸூர்யன் தனது நிலையில் நிற்கக்கண்டான். காயத்திரிச் சந்தஸை மூட்டுவதற்கு மூன்று எரிகோல்களுண்டென்று சொல்லுகிறார்கள். ஆதலால் அச்சந்தஸை மகத்துவத்திலும் பலத்திலும் மற்றவற்றைக்காட்டிலும் மேலானதாம். —(எ-று) ராதந்தரம் ஸாமங்களில் ஒன்று. ஸாமவேதம் 2-1-1-11 இதுவே ரிக்வேதம் ஏழாவது மண்டலம் 32வது ஸூக்தம் 22, 23வது ரிக்குக்களாமென்பார் மேனாட்டாசிரியர். ஆனத்தின் மரூஉச்சொல் ஆனதினால் என்பது பொருள். ஞானத்தின் எரிகைநோக்கிச் சேர்த்தது. ஞானத்தின் நவின்றென்க. காயத்திரியின் மூன்று பாதங்களையும் மூன்று ஸமித்துக்களாக உருவகித்தார்.

### வருக்கம் 18.

26. நற்கர முடையோன் பாலைக் கறப்பவன் கறக்கு மாறு
நற்கறவைப் பசுவை நாடியே விளிப்பென்; எங்கள்
முற்படு ஸோமயாக முடிக்குக ஸவிதா; கர்ம
மேற்பட நின்றதஃதை நன்கெடுத் தியம்புவேனே.

(இ-ள்.) நல்லகரங்களை யுடையவனும் பாலைக் கறப்பவனுமாகிய அத்வர்யு பிரவர்க்கியத்தின் பொருட்டுப் பாலைக் கறக்கும் வண்ணம் நல்ல கறவைப் பசுக்களைக் கூவி யழைப்பேன். எங்களது ஸோம யாகத்தை ஸவிதா முட்டின்றிச் செய்யட்டும். ஸோம யாகத்துக்கு முன் ஒளிபெற நின்ற

தாகிய பிரவர்க்கிய கன்மத்தை யான் நன்ருய் விளம்பரப் படுத்துவேன்—(எ-று.) ஸோம யாகஞ் செய்வதற்கு முன் செய்யும் ஆரம்ப கர்மம் பிரவர்க்கியமாம். மேனுட்டாசிரியர் அபீத்த: க(Gh) ர்ம: !என்பதற்குப் பாற்கொப்பரை சுட்டுப் போயிற் றென்று பொருளுரைப்பர். இவ்விருக்கிலுள்ள கறவை, மேக மென்றும், பால் மழைநீரென்றும், கறப்பவன் வாயுவென்றும், க(Gharmas) ர்ம: என்பது க்ரீஷ்ம மென்றும் பொருளுரைப்பது மொன்று.

27. வசுக்களை வளர்ப்பாட ன்கன்றிச்சைசார் மனத்தின் வந்தா
ளிசைத்த நற்குரலி னீண்டு; பாலை யச்சுவினியர்க்கா
ருசித்திட வளிக்கவிவ்வா; பெருமையி னேங்கிநிற்கு
மசுப்பி னெம்பபன் சிறக்க வன்னவள் செழித்து வாழ்க.

(இ-ள்.) செல்வங்களை வளர்ப்பவளாகிய பசு (சூல் கொண்ட மேக மென்க.) தனது கன்றை (பயிர் நிறைந்த பூமியென்க) யடையும் எண்ணத்தோடு முக்கார மிட்டுக் கொண்டு வந்தாள். இப்பசு தனது பாலை யசுவினிகளிருவர்க்கு மளிக்கட்டும். எங்களுடைய போக பாக்கியங்கள் பெருமையிற் சிறக்குமாறு அப்பசு விருத்தியடைந்து வாழ்வை யெய்தட்டும்—(எ-று.). ருசித்திட வழக்காற்றைக் கவியுட் புகுத்தியது. அசுப்பின், அளவின்.

28. கண்ணிமைத் தொழுகுங் கன்றி னருகுறமுழங்கிற்;றஃதன்
றிண்சிர மதனைநக்கி யொழுங்குறச் செயு முக்காரத்;
துன்னு மக்கன்றின் வாய் தன்மடியுற வரக்கக் கூவும்;
ஒண்ணிய பாலை யக்கன் றூட்டுமா றொழுக்கு மன்றே.

(இ-ள்.) கண்களைச் சிமிழ்த்துக்கொண்டு நிற்குங் கன்றினருகுறப்பசு ஹிங்காரஞ் செய்தது. முழங்கிக்கொண்டே இக்கன்றினது சிரத்தை நக்கிக் கொடுத்து உருப்படுத்துகிறது. (அல்லது அக்கன்றின் சிரத்தை நக்கி சுத்தஞ்செய்துகொண்டே ஹிங்காரம் செய்கிறது என்றும் கூறலாம்.) அக்கன்றின்வாய் தனது மடியிற்சேருமாறு உரக்கச் சத்தங்கொடுக்கிறது. அப்பாலை யக்கன்று குடிக்கும்விதமாக ஒழுகவிட்டு அதனை யூட்டுவிக்கிறது—(எ-று.) பசுவை மேகமாகவும் கன்றைப் பூமியாகவும் கொண்டு இச்செய்யுளைப் பொருட் படுத்தலாம். அற்றேல் பால் மழைநீராகும்.

(வேறு.)

29. எவன்சூழ நின்றதனுற் பசுவுந்தான்
வாழிடத்தி லிருந்து கொண்டே
யவந்திர முழங்குறு, மன்னவன் கூடச்
சிறுவனுல்; அன்னுள், மர்த்யன்
குவிந்தொழுகப் பணிவித்தா டன்குரலால்;
மின்னுகக் குலவுந் தோற்றங்
கவர்ந்தேகித் தன்னுருவைக் கவினுறவே
விளக்கினடோல்கடிந்து மன்னே.

# மண்டலம் 1. சூக்தம் 164.

(இ-ள்.) எக்கன்று தன்னைச் சூழ்ந்து நின்றதனாலே பசுவுந் தனது கொட்டகையிலிருந்துகொண்டு முழங்கிற்றோ அக்கன்றுங்கூடத் தெளிவறச் சப்திக்கும். அப்பசு தன் குரலால் மனிதன் தன்மாட்டு வணங்குமாறு செய்தது. மின்னலாக மாறித் தன்னுருவமெல்லார்க்கும்தெரியும்படிமேற்புரையை நீக்கி விளக்கிற்று--(எ-று) ஈண்டு அவன்என்றது கன்றை.பசுவைப் பெண்பாலாக்கிக் கூறினர். பசு மேகமென்றும் அவன் என்பதைப் பர்ஜன்யன் என்றும் மேனாட்டாசிரியர் கூறுவர்.பர்ஜந்யன் காளமுகிலை யுருவகப் படுத்தியஅல்லது புருஷீகரித்த நிலை.ஈண்டு ஸாயணர்வேறுபொருளுங் கூறுவர் சாகபூணியென்று ஒரு நிருக்தாசாரியனிருந்தான்.(நிருக்தம்பதப்பொருள் விளக்கநூலெனவறிக.) எல்லாமந்திரதேவதையையும்தனக்குத்தெரியுமென்று அவன் எண்ணியிருந்தான். உண்மை யறியமுடியாத விதமாகரூபத்தையெடுத்து அவனை மருட்டவேண்டுமென்ற வெண்ணத்துடன் ஆண்பெண்ணென்னுமிருருவையுமோருருவிற்றாங்கி ஒருதேவதையவன்கண்ணெதிரிற் றோன்ற, அவன் மயங்கி,'உங்கள் உருவை யறியகில்லேன். உங்களது நிசவுருவத்தைக் காட்டவேண்டு'மென்று கேட்டான் 'யான்''அயம்சிங்க்த' என்னும் ரிக்கின் தேவதை அங்கே யென்னுரு விளங்கும்'' என்று அத்தேவதையுபதேசித்தது. ஈண்டு ஸ்திரீலிங்கம் மாத்திரமிகவாக்கென்றும்உபயலிங்கத்துவம்ஆகையால்வித்யுத்பவந்தியென்பதிரூகவென்றும்மத்தி:லிங்கம்அங்கேமேகமுழக்கத்தினிடையேதோன்றுவதென்றும், அப்பொழுது மழையினால் பூமியைப்போர்த்துக் கொள்ளுவதினால் அதன் ரஸத்தைமீண்டும் தரித்ததென்றும் கூறுவர். இவை சூரியன் வேலையென்பது உத்தமலிங்கம், அதனால் வஸது உபயலிங்கத்தையுமறிவிப்பதாம். இதற்கு மற்றொரு உரையுமுண்டு.

மத்திமை வாக்கதி தேவன் குழறுகிறு
　　　　னிவன் சூழும்வாக்கு மீண்டு
மெத்தவியாபித்ததுவா,லாதித்யன்
　　　　மான வொளி வீசிநின்ற;
தொத்த முகிறனிலிடங் கொண்டருந் தொழிலா
　　　　லுலகமதைத் தொழுவித்தான்ற
வித்தியுதாய் மாறிப் பின் றன்றிறத்தாற்
　　　　சலரூபம் விழைந்தெய்திற்றே.

(இ-ள்.) மத்திமை வாக்கின் அதிதேவதை தெளிவற்ற சத்தத்தைச் செய்கிறான். இத்தேவதையாற் சூழப்படும் வாக்கும் ஈண்டு இடிரூபமாக வியாபித்தது. மேலும் சூரியனைப்போலவே ஒளியும் (மின்னலும்) வீசிற்று. மேகத்தினிடத்து அதிஷ்டானங்கொண்டு தனது சாமார்த்தியமான செய்கையினால் ஸ்தாவரசங்கமவுயிர்கள் நிறைந்த உலகத்தைப் பலன் குலுக்கி வணங்கி நிற்குமாறு செய்து மின்னலாக மாறிப் பின் றனது சாமார்த்தியத்தினாற் சலரூபத்தையுமடைந்தது—(எ-று.) வித்தியுதாய், வித்யுது ஆய், வித்யுது, வித்யுத், மின்னல் வாக்கு இடியாகவும் மின்னலாகவும் மழையாகவும் மாறி நின்றது ஒரு அதிசயமென்க.வடமொழிமூலத்திலுள்ள மர்த்தியம் என்பதற்கு ஸ்தாவரஜங்கமப்பிராணியுலகமென்றார் ஸாயணர்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 3.

(வேறு.)

30, மூச்சொடு கதிப்பிராணன் மூண்டது சலிக்குந்தன்மை
வாய்ச்சது கிரகநாப்பட் டின்மையிற் றூங்குற்ற;
நேச்சுறு முடலினோடு முடன்பிறப்பாகுஞ்சீவன்
பேச்சறு மமரம் வாய்ந்ததோங்கு நற்பிண்டங் கொண்டே.

(இ-ள்.) சுவாசமும், கதியும், உயிர்த்தன்மையும், சலிக்கும் ஸ்வபாவமும் வாய்ந்ததான சீவன் வீடுகளாகிய சரீரங்களுக்கு மத்தியில் அசைவின்றிக் கிடந்தது. மரண தர்மத்தோடு கூடிய வுடலோடு கூடிப் பிறந்ததாகிய சீவன் அமரத்தன்மை வாய்ந்ததாய் (சரீரத்தை விட்டபின்னும்) புத்திரர்களளிக்கும் பிண்டங்களால் வர்த்திக்கிறது—(எ-று.) ஈண்டு சரீரத்தின் அஸாரத்தைச் சாற்றிக் கவி சீவனின் நித்யத்துவத்தைச் சொன்னுரென்பார் ஸாயணர். மேனுட்டாசிரியர் முதலிரண்டடி அக்கினியைக் குறிக்குமென்றும் பின்னிரண்டடி பிதிர்க்களுக்குப் பிண்டமளிப்பதனு லாதரிக்கப்படுகிற சந்திரனைக் குறிக்கும்போலுமென்றுங்கூறுவர்.

### வருக்கம். 19.

31. தவறுரு நவிடயிற் கோபன் றன் னெறிகளினுற் சார்ந்துந்
தவலற வகன்றுஞ் செல்லக் கண்டனென்; கூடச்சாரு
மவமறு சோதியெங்கு மனைந் தொளி விரிப்பதோடு
புவன மத்தியத்திற் சுற்றிச் சுழல்வுறப் பொருந்துமாலோ.

(இ-ள்.) எப்பொழுதும் இடறிவிழாத கதியோடு எல்லாவுலகத்தையும் பரிபாலிக்கும் கோபனுகிய ஆதித்யன் தனது பாதைகளினுல் உதயமாகிப் பின்னர் அத்தமித்துச்செல்லுவதைக் கண்டேன். பின்னேடு கூடச் சேர்ந்து வருவதும் (இரவிலும் சந்திரன் முதலியவற்றிற்கும் வெளிச்சம் சேருமாறு) எல்லாப் பக்கத்திலும் தனது பிரகாசத்தை விரிப்பதுமான சோதியோ புவனங்களுக்கு மத்தியில் அடிக்கடிச் சுற்றிச் சுற்றிச் செல்லும்-(எ-று.) கோப:, ஸர்வஸ்ய விருஷ்டிப்ரகாசாதினா கோபயிதா:, எல்லாவுலகத்தையும் மழை வெளிச்சம் முதலிய வற்றுல் வளர்ப்பவன், ஆதித்யன்.

32. படைத்தவ ன்வன்றன் பண்பை நன்கறிந்துணர்வதில்லை,
யடைத்தனன் றன்னேற்றத்தையுறுதியாக்கண்டோனின்றும்;
நடைப்பெருமுயிர்க்கு நாதன் ருய்ப்பகட்டுறுமப்போதே
யடைப்புறு நிர்ருதிக்க ணுற்றன னுழைந்தான் மன்னே.

(இ-ள்.) அவனைச் சிருஷ்டித்தவன் அவனுடைய குணத்தை முற்றுமறிவதில்லை. தன்னைப் பார்த்தவன் கண்ணிற் படாதபடி தன்னை யுறுதியாக மறைத்துக் கொண்டான். வெகு பிரஜைகளுக்கு மூலகாரணனுன அவன் தாயினது கருப்பத்திலிருக்கும்போதே நிர்ருதியாகிய துக்கத்தை யநுபவிக்

## மண்டலம் 1 சூக்தம் 161.

சத் தொடங்கினன்—(எ-று.) படைத்தவன் ஆதித்தியனாகவும், படைக்கப் பெற்றவன் மின்னேடு கூடிய மேகமாகவும், நிர்ருதி பூமியாகவும், சொன்ன தொன்று.

33. இனியெனைப் பெற்ற தந்தை; சேர்ந்திடு நாபியீண்டே;
புவிபெரும் பரப்பிற் றிஃது தாயொடு முறவாய் நிற்கும்;
விவிதமாய் விரிந்த பூவான் யோனியா மந்தரத்திற்
சவிபெறு பிதாப் பெண்கர்ப்பந் தங்குறச் சமைத்திட்டானே.

(இ-ள்.) [தீர்க்கதமஸனது கூற்று] வானம் என்னைப்பெற்று வளர்க்குந்தந்தையாம். (பூமியினது ரஸத்தினால் உணவுப்பொருளும், உணவுப் பொருள்களால் ரேதஸும் ரேதஸால் மனிதனும் உண்டாகிறார்களென்று சுருதிகூறுவதால்) எனக்கு நாபி அல்லது சுற்றமு மிங்கேயேயுளர். விசாலமாகிய இப்பெரும் பூமி எனக்குத்தாயும்பந்துவுமாம். பாத்திரத்தைப்போல்விரிந்துள்ள பூமி வானங்களின் பிறப்பிடமாகிய அந்தரிட்சத்தில்விளக்கம்பொருந்திய பிதாவாகிய ஆதித்யன் அல்லது பரமேசுவரன், பெண்ணினது கருப்பமாகிய மழைநீரைத் தங்குமாறு செய்தான்—(எ-று.)

34. கேட்குவனுன்னைப் பூமிப் பரமகோடியும் யாதென்றே;
கேட்குவனுனைப் புவன நாபி யெங்குறையு மென்றே;
கேட்குவனுனை மழையைத் தரும் பரித் தாதுகன்னே;
கேட்குவல் வாக்குத் தோன்றும் பரமமாம் வியோமம் யாதே.

(இ-ள்.) யாஜமானனே! பூமியினது அறக்கோடி எதுவென்று உன்னைக் கேட்கிறேன். புவனத்தின் மத்தியஸ்தான மெதுவென்று உன்னைக் கேட்கிறேன் மழையை வருஷிக்கும் அசுவமாகிய ஸூரியனது ரேதஸ் எதுவென்று உன்னைக் கேட்கிறேன். வாக்குக்குக் காரணமாகிய பரம வியோமத்தின் தன்மை யென்ன வென்றுங்கேட்கிறேன்—(எ-று.) இது அசுவமேதயாகத்தின்மத்திய நாளில் ஹோதா முதலியோர் யாககர்த்தா வைக் கேட்கும் ரிக்கெ ன்பது ஸூத்ரம்.

35. வேதி விதலகக் கோடி யென்றுமே விளம்புவா ரிவ்
வேதியி னடக்கும் யாகம் புவனத்தி னுபி யாகும்;
ஓதிய சோம மாண்மை யசுவத்தின் தாதுவாம்; இத்
தீதிலாப் பிரமன் வாக்கின் பரம விண்ணுவன் கூர்ந்தே.

(இ-ள்.) இவ்வேதிகை பூமியினது அறக்கோடியாம். இவ் (வேதியிலிடத்து நடை பெறும்) யாகம் புவனத்தின் மத்திய ஸ்தானமாம். வ்ருஷண அல்லது வர்ஷகசாமர்த்தியம் வாய்ந்த அசுவமாகிய ஆதித்யனது ரேதஸ்ஸோமமாம். இங்கு மந்திரங்களைக் கூறும் பிரஹ்மவே வாக்குக்கு மூல காரணமான பரமவியோமமாம்—(எ-று.)

வருக்கம். 20.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 3.

(வேறு.)

36. அண்ட நடுக் கருவென்னும் புவனமதின்
விதைபயனோ டார்ந்த வேழும்
விண்டுவின தாணையினாற் றந்தொழிலை
நன்காற்றி மிளிருகின்ற;
கொண்டவறிவோடு மனத்தோடுங் கூர்ந்
தனைஞானக் கொள்கை சார்ந்தே
யண்டியெமைச் சூழ்ந்தெல்லாப் புறங்களினுந்
தோய்ந்து பரப்படையு மன்றே.

(இ-ள்.) பிரஹ்மாண்டத்துக்கு மத்தியாகிய அந்தரிட்சத்தில் கருப்பத்தைப்போல வொழுகும் புவனங்களினது ரேத (ஸாரம் நிறைந்த மழையையளிப்பதால் விதையென்பது பொருளென்பார் ஸாயணர்.) ஸாகிய வெழு சூரிய கிரணங்களும் விஷ்ணு அல்லது சூரியனுடைய ஆக்ஞையினால் தமது காரியங்களை நன்றாகச் செய்து விளங்குகின்றன. பிரக்ஞையோடும் யோசனையோடும் நிறைந்த ஞானக்கொள்கையை யடைந்து எம்மை நெருங்கிச் சூழ்ந்து எல்லாப்பக்கங்களிலும் பொருந்தி யவற்றில் அவை வியாபிக்கும்—(எ-று.) 'மகத், அகங்காரம்: பஞ்சதன்மாத்திரைகள் ஆகிய எழு தத்துவங்களும் அவிகிருதி ரூபங்களாயினும் விகாரத்தை யாசிரயித்து மூலப் பிரகிருதியில் பிரகிருதி விகிருதிஉதவினமென்னு மாத்துமனத்தோடுற்பவிப்பதால் அரையம்சத்தோடு பிரபஞ்சமாகமாறுவதால் அர்த்த கர்ப்பமாம். புருஷாம்சத்திற் விகிருதிப்படாதுநிற்பதனால்ஆதித்தியனும். அதனாலேயே பிரகிருதிவிகுருதித்வம். புவன்காரண பூதங்களாகும்போது வியாப்த புருஷனை விஷ்ணுவினது ஆக்ஞையினால் எல்லாப்பக்கங்களிலும் நிற்கின்றன்' என்பது முதலிரண்டடிக்குத் தத்துவார்த்தம். மற்றைய விரண்டடிமுன் போலவே.

(வேறு.)

37. உண்மையி னிவன் யானுள்ளே னென்பதை யுணரகில்லேன்;
றின்மையா ரிருள் மனத்திற் சேருளங் கட்டுண்டோடி
யெண்மையி னுழலுகின்றேன்; ரிதத்தினின் றலைச்ச னென்னை
யண்மிய போதிவ் வாக்கிற் பங்கடை கின்றேன் முன்பே.

(இ-ள்) உண்மையில் எல்லாவுலகத்திலும் யானே வியாபிக்கிறேனென்ற தத்துவத்தை யான் அறிவதில்லை. மூட சித்தத்தினால் மனங்கட்டுண்டு யான் அலைகிறேன். ரிதமாகிய வுண்மையின் முதற்றோற்ற மேற்பட்டபோது ஏகாத்ம பிரதிபாதிகமான உபநிஷத்தின் வாக்கின் பாகத்தை யடைகிறேன்—(எ-று.)

38. இன்னொடு முன்னர்ச் செல்லா நின்றனன் பிறங்குணவான்
மன்னிய வமரன் மர்த்தியத்தொடு முடன் பிறந்தோன்;

## மண்டலம் 1. சூக்தம் 164.

பின்னிவர் மாறு மென்றும் பேசுற வொழுகுகின்றார்;
உன்னியிங் கொருவ னேர்வர், மற்றையோ னோரார் மாந்தர்.

(இ-ள்.) உணவினால் (உபபோகங்களினா லென்பர் ஸாயனர்.) கிரகிக்கப் பட்டவனும் மர்த்தியமாகிய வுடலோடு கூடப் பிறந்தவனு மாகிய அமரண தர்மம் வாய்ந்த ஆத்மா ஒளியற்றகர்மங்களைச் செய்து கீழும் ஒளி பொருந்திய கர்மங்களைச் செய்து மேலும் செல்கிறான். ஆத்மாவும் உடலு மாகிய இவர்கள் ஒருவர்க் கொருவர் மாறுபட்ட நெறியி லொழுகுகிறார்கள். மனிதர்கள் இவர்களுள் ஒருவனாகிய வுடலை யறிவார்கள். மற்றொருவனாகிய ஆத்மாவை யறிய மாட்டார்கள்—(எ-று.) கீழ் நரகாதி ஸ்தலங்களும், மேல் ஸ்வர்க்கமுமாம். இவற்றையே செய்யுளில் 'பின்னொடு முன்ன' ரென்றார்.

39. அர்க்கத்தி னெவ் வெழுத்திற், பரமவின் னமர்ந்த தொப்பத்
தர்க்கமில் பெருமை யோடெத் தேவருந்தங்கா நின்றார்?
அர்க்கத்தா லென்னா மீதையறிந்திடா வவனுக்; கஃதை
வர்க்கத் தோடுணர்ந்தோ ரிண்டுமருவி வீற்றிருக்கின்றாரே.

(இ-ள்.) ஸ்தோத்திர ரூபமான இருக்கின் எந்த வட்சரத்திற் றேவர்களெல்லாரும், பரமவியோமமாகிய ஸ்வர்க்க பதத்தில் வீற்றிருப்பதை போலத் தங்கியிருக்கிறார்கள்? இவ்வட்சரத்தை யறியாதவனுக்கு அர்ச்சனா ஸாதனமான இருக்கினால் என்ன பிரயோஜனம்? அதனை அதன்வரன்முறைகளோடு அறிந்தவர்களாகள் இங்கு குழுமி அமர்ந்திருக்கிறார்கள்—(எ-று.) அவ்வெழுத்து பிரணவமாம். இதைப்பற்றி ஐதரேயப் பிராஹ்மணத்திற் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது: 'தான் வேதா நப்யதபத்தேப்யோபி தப் தேப்ய ஸ்த்ரயோவர்ணா அஜாயந்த, அகார உகார மகார இதி; தானேகதா ஸமபரத், ததேதத் ஓமிதி' என்பதாம். மாண்டூக்ய உபநிஷத்தில்' ஓம் இதிப் ரஹ்ம' முதலியவை சொல்லப் படுகின்றன. வேதத்துக்குப் பிரணவம் தான் பிரதிநிதி ஸ்தானத்திலுள்ளது. இப்பிரணவத்தில் எல்லாத் தேவதைகளும் வசிப்பதால் இது முக்கியமாம்.

40. நற்புல்லை மேய்ந்து செல்வ நண்ணுக; யாமும் செல்வ
முற்படப் படைத்தே மாக மொய்த்துநல்; எல்லாக்காலும்,
செற்பெறு பசுவே, மேய்ந்த திரணத்தைக்கறித் தூத் தோய்க;
எற்படு தெளிந்த நீரையிங்குற் றுக் குடிக்க நன்கே.

(இ-ள்.) பசுவே! நல்லபுல்லை மேய்ந்து பாற் செல்வத் தோடு பெருந்தவளாக; யாங்களும் செல்வமிகப் படைத்தவர்களாக விருக்கட்டும். எல்லாக் காலத்திலும் நீபுல்லைத் தின்பாயாக. இங்கு வந்து தெளிவாய்ச் சுத்தமான நீரைக் குடிப்பாயாக—(எ-று.) எல், ஒளி.

வருக்கம். 21.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 3.

(வேறு.)

41. சலிலங்களீட்டுகின்ற கௌரியொரு
பதத்தோடு சாரிரண்டு
வலிகைக் கொள்பாதத்தளாய் நான்கு
பாதமொடு வளருமெட்டு
மலிபதத்தைக் கொண்டவளா யொன்பதுபா
தங்கொண்டு மனும் பதிற்றுத்
தலைமருவு நூறெழுத்தாள் பரமவியோ
மத்தினிலே சத்தித் தாளே.

(இ-ள்.) தண்ணீரைச் சம்பாதிக்கின்ற வாக்கு மேகமாகிய ஒருபாதமும், மேகம் அந்தரம் (அல்லது சூரியனென்றுங் கூறுவார் ஸாயணர்) என்னும் இரண்டு பாதங்களும், கிழக்கு முதலிய நான்குதிக்குக் களாகிய பாதங்களும், அந்நான்கு திக்குக்களின் இடையிலுள்ள நான்கு மூலைகளுஞ் சேர்த்த எட்டுப்பாதங்களும், இவற்றோடு வானையுஞ் சேர்த்துக் கணக்கிட்ட ஒன்பது பாதங்களும் கொண்டவளாய், ஸஹஸ்ராட்சரரூபியாய் பரமாகாசத்திற் சப்தித்தாள்—(எ-று.) கௌரி சூல் கொண்ட மேகமாகிய வெருமையென்பார் மேனுட்டாசிரியர். சப்தப்ரஹ்மமாகிய வாக்கு ஒன்றாகிய பிரணவமாய் நின்று, சுபந்தந்திகந்தமென இரண்டாக மாறி, நாமஉப ஸர்க்கங்களோடு நான்காகி, ஆமந்த்ரித ஸஹிதா அஷ்டவிபக்திபேதத்தால் எட்டுக்கால் பெற்று, அவ்யயத்தோடு ஒன்பதாய்(அல்லது நாபி, உரம்,கண்டமுதலிய ஒன்பது இடங்களிலும் தோன்றி யென்பதும் ஒன்று.) பலவித அபிவ்யக்திகளையுற்றுஉத்கிருஷ்டமான இதயாகாசத்தில் (அல்லது மூலாதாரத்தில்) ஆயிரம் அல்லது அநேக விதமாக வியாபித்துப்பலசப்தங்களாக மாறிற் றென்பது தத்வார்த்தம்.

(வேறு.)

42. அவளிடத்திருந்து வேக மமைந் தொழுகும் மழைநீர்
விவித மாயூற்றும்; அஃதா னிலைபெற மேவு நான்கு
குவியுறுதிசைகள்; என்றுங் குலைவுறா வுதக மவ்வைப்
பவதியினிழிந்து பாயும்; ஆதலினுலகம் யாவும்
நிவமுறு முயிரைப் பெற்று நெடும்பக லோங்கி வாழும்.

(இ-ள்.) அவ்வாக்கினிடத்திலிருந்து வேகமாக உந்திச் செல்லும் மழைநீர் பல விதமாக வூற்றும். அதனுல் நான்குதிசைகளும் நிலைபெறப் பொருந்தும். எப்பொழுதுங் கெடாத தண்ணீர் அவ்விடத்திலிருந்து கீழ் நோக்கி யோடும். அதனுல் எல்லா ஜகத்துக்களும் உயிரைப் பெற்று வாழும்—(எ-று.) அவள் எருமை அல்லது மேகத்தைக் குறிக்குமென்று மேனுட்டாசிரியர் கூறுவார். நான்குதிசைகளென்றது உலக முழுதுமென்னும் பொருளில் வந்தது.

## மண்டலம் 1 சூக்தம் 164.

(வேறு.)

43. சகமயப் புகையைத் தூரந்தன்னில் யான்கண்டேன் கீனின்
றகவுற மேற்புறத்தை யடைந் தெங்கும் பரவிநிற்கத்;
தகவுறு வீரர் வெள்ளைப் பலன்றரு கொடியை யட்டார்;
இகவினுதி தொட்டு நடப்பதித் தன்ம மாமே.

(இ-ள்.) சகமயம் அல்லது சாணத்தினுலானவறளியின் புகை கீழ்ப் பக்கத்தினின்று மேனேக்கி யேறி யெங்கும் பரவி நிற்பதைத் தூரத்திலிருந்துயான் கண்டேன். தகைமை பொருந்திய வீரர்கள் வெண்மை நிறத்தோடு கூடியதும் பலனை நிறைப்பதுமான ஸோம வல்லியை நசுக்கிப் பக்குவப் படுத்தினர்கள். இப்படிச் செய்வது ஆதிகாலந் தொட்டு நடப்பாம்—(எ-று.) சகமயம் சகிருத்மயம், சுஷ்க கோமயம், அதாவது வறளி யல்லது எருமுட்டையாம் ஆராத் அதிதூர மென்பார் மேனுட்டாசிரியர் ஆனல் ஊதிதூர மென்பார் ஸாயணர். வீரர், ரித்விஜர் அல்லது தேவர்களென்றும் கூறலாம். 'ஸோம மானது பலன் றருவதற்குமுன் தேவர்கள் கோமயத்தைச்சுட்டார்கள். யக்ஞார்த்த மக்கிருந்து கிளம்பிய புகை மேகமாயிற்று என்று சொல்லுகிறார்கள்.'என்னும் வாக்கியத்தை மனத்தி லெண்ணி இம் மந்திரத்தை வியாக்கியானஞ் செய்யின் இது தெளிவாய் விளங்கு மென்பார் ஸாயணர்.

44. கேசமோ டுறுவார் மூவர் கிளர்கின்றூர் காலந்தோறும்;
நாச மெய்துற மழிப்ப னவர்களு ளொருவனுண்டு
தேசறு முடிவை யெய்து மெலவையின்; ஒருவன் நீரம்
விசி நோக்குவன்; ஒருவற்குருவில்லை வீச்சேதோற்றும்.

(இ-ள்.) நல்ல கிரணங்களாகிய கேசங்களோடு விளங்கும் அக்கினி, சூரியன் வாயுவென மூவர் ருதுக்கடோறும் காணப்படுகிறார்கள். அவர்களுள் ஒருவனுகிய அக்கினி வருஷமுடிவில் பூமியின்மீதுள்ள பயிர் பச்சைகளைச்சுட்டு நாசமாக்குவன்: மற்றொருவனுகிய ஆதித்யன் விருஷ்டிசாமர்த்தியத்தைப் பெற்றவனுய்ப் பார்த்துக்கொண்டிருப்பான். மூன்றுவனது உருவெளிப்படத் தெரியாது; ஆனல் அவன் வீசுவது மாத்திரம் ஸ்பர்சேந்திரியத்தா லறியப்பெறும்—(எ-று.) மழித்தல் மயிர்வினைஞனைப்போலச் செய்வதாம்.

45. நாற்பத முடையதாக வாக்கினை நயந்தளந்தார்;
மேற்பத வறிவு தோய்ந்த மேலவரிவற்றை யோர்ந்தார்;
ஆற்பதமான மூன்று குகையமைந் தொளிர்வதில்லை;
மேற்படு நான்காம் வாக்கை மனிதரும் விளம்புவாரே.

(இ-ள்.) வாக்கு நான்குபாத வளவைகளுள்ளது. உத்தமமான புத்தியோடு கூடிய மேலவர் அல்லது பிராஹ்மணர்கள் இந்நான்கு பிரிவுகளையும் அறிந்தார்கள். அவற்றுள் (நான்காவதாகாதமான) மூன்று குகை

களில் அடைக்கப்பட்டிருப்பதால் வெளிவந்து பிரகாசிப்பதில்லை. வெளிவரும்நான்காவதாகிய வைகரி வாக்கைத்தான் மனிதர்கள் பேசுவார்கள்—(எ-று.) இந்த நான்கு பாதங்களையும் பலர் பலவாறு பேசுவார்கள். இந்நான்கும், பூ:, புவ: ஸுவ: என்னும் மூன்று வ்யாஹ்ருதிகளும் பிரணவமுமென்பார்கள் வேதவாதிகள்; கிரியாப்பிராதனமாகிய ஆக்கியாதமும், திரவியப் பிரதானமான நாமமும்ஆக்கியாதபதத்துக்கு முன்னடக்கும் உபஸர்க்கமும், உச்ச நீச அர்த்தங்களின் பொருட்டுத் தோன்றும் நிபாதங்களுமாக நான்கென்பர் வையாகரணிகள்; மந்திரவிதானப் பிரதி பாதகமான வேதபாகமாகிய மந்திரமொன்று, கல்பம், உதம், ஷார்த்துவம் முதலியவையாகச் சொல்லும் கல்பம் இரண்டு, மந்திர தாத்பர்யார்த்தப்பிரகாசக வேதபாகமாகிய ப்ராஹ்மணம் மூன்று, போக விஷயமாகப் பசுவைத்தருக முதலிய வாக்குக்களாகிய லௌகிகம் நான்கு என்பர் யாக்ஞிகர்; ரிக், யஜுஸ், ஸாமம், வியவஹாரமென நான்கென்னும் நிருக்தம்; மூலாதாரத்தில் ஸூக்ஷ்மமும், அங்கிருந்து ஹ்ருதயத்தைநோக்கி வருவதாக யோகிகளாற் பார்க்கப் படுவதால் பச்யந்தியும், புத்தியைநோக்கி வருவதாலும் மத்தியஸ்தானமகிய இதயத்திலுதிப்பதனாலும் பெயர்பெற்ற மத்திமையும், தாலு ஒஷ்டவியாபாரங்களால் வெளித்தோன்றும் வைகரீயுமென நான்கென்பார் யோகியா பச்யந்தியென்னும் பதத்தைப் பைசந்தியெனப் பிறழ்வுபட வுரைப்பர் தமிழரிற் சிலர். ஆற்பதமான, ஆஸ்பதமான (காரணமான)வென்னும்சொல் வடமொழி மூலத்திலில்லை.

46. இந்திரன் வருணன் மித்ர னக்கினி யென்பார்; திவ்ய
சுந்தரச் சிறகுதோய்ந்த கருத்துமா னவனே யாவன்;
நந்திய வொன்றை நான வகையுரை தருவர் விப்ரர்;
அந்தமாய் மாதரிச்சுவான் யம னங்கி யென்பார்.

(இ-ள்.) அவனை ஐச்வரிய விசிஷ்டனென்னும் பொருள்படும் இந்திரனென்றும், பிரமீதியால் (ஞானத்தாலென்க) மரணத்தி னின்றும் காப்பவனென்று பொருள்படும் பகலபிமானி தேவதையாகிய மித்திரனென்றும், பாபநிவாரக னென்னும் பொருள்படும் இரவபிமானி தேவதையாகிய வருணனென்றும், அங்கனதி குணவிசிஷ்டமுள்ளவனென்று பொருள் படும் தேவதையாகிய அக்கினி யென்றும் அழைப்பார்கள். திவிபவனும் அழகிய பட்சங் (சிறகு)களோடு கூடியவனுமாகிய கருத்மந்தனுமவனே. ஸத்தாகிய ஒரு வஸ்துவை விப்பிரர்கள் பலவிதமாகக் கூறுகிறார்கள். அவனையே அந்தரிட்சத்தில் சுவஸிக்கும் வாயுவென்றும் கூறுவர்—(எ-று.) 'ஏகம்ஸத்விப்ரா பஹுதாவதந்தி' யென்ற சுருதிவாக்கியமுள்ள விடம் இதுவே. கருத்துமான், கருத்மந்தன், கருடன்.

47. நியமமா யொழுகுமேக நிறங்கறுப், புதக மீர்க்குஞ்
சுயவழகார் கதிர்கள் நீருடை தரித்து வானி
னயமுற வேறும்; பின்னர் ரிதத்தல நின்று மீள
வியனுறு மீண்டு, பூவைக் கிருதத்தா னனைக்கு நன்கே.

(இ-ள்.) நியமமாக வொழுகு மேகத்தின் நிறங்கறுப்பாம். தண்ணீரை யெடுத்துக்கொள்ளும் சுயவழகு வாய்ந்த கதிர்கள் ஜலமாகியஆடையைத்தரித்துக்கொண்டு விண்ணுலகத்திலேறும். பின்பு ரிதத்தலமாகியஆதித்

ய மண்டலத்திலிருந்து மீளவும் கீழ்நோக்கி வரும். அப்பொழுதுதான் பூமியை வளத்தினால் நன்றாக நனைக்கும்—(எ-று.) நியாகம், கீழ்வீழ்ச்சி யென்பார் மேனாட்டாசிரியர். ரிதத்தலம் ஒழுங்குதயமாகுமிட மென்பார் மேனாட்டாசிரியர்; ஆதித்ய மண்டலமென்பார் ஸாயணர். கிருதம், நெய், மழைநீர், வனமென்ற பொருளில் வந்தது.

48. வட்டைகள் பன்னிரண்டு மருவுஞ் சக்க்ரமிங் கொன்றே;
ஒட்டிய குடங்கள் மூன்று மூனர்ந் திதை யறிந்தான் யாரே?
கட்டுறு மார முந்நாற் றறுபதச்சக்கரத்திற்
றெட்டுழல்வன வெப்பக்கந் தன்னிலுங்கழலுறுவே.

(இ-ள்-) பன்னிரண்டு மாஸங்களும் பன்னிரண்டு வட்டைகளாம் அவை பொருந்தியுள்ள ஸம்வத்ஸரமாகிய சக்கரம் ஒன்றே. அச்சக்கரத்திக்குக் (கிரீஷ்ம, வர்ஷ, ஹேமந்த வென்னும் மூன்று குடங்களுண்டு. (வருஷ சக்கரத்தைப் போலவே காலசக்கரத்துக்கும் இவ்வமைப்புத்தான்.) இதனை யறிந்தவன் யார்? அச்சக்கரத்துக்கு முந்நூற்றறுபது ஆரங்கள் ஒரு பக்கத்திலுங் கழலாதனவாய்ச்சுழல்கின்றன—(எ-று.) கழலாதனவென்பது மேனாட்டாசிரியருரையை நோக்கிச்சேர்த்தது. அவர் இச்செய்யுள் இங்கு அநாவசியமான தென்பர்

49. அறனுறை பவளே, யுன்றன் மெய்யினி லார்ந்த கொங்கை
யுறுசுக மூல,மெல்லா வுசிதமா ருயிரை யோம்ப
நிறுவிய தாதநம் பொ னளிப்பது கொடை சிறந்த
தறுதியி, லதனைச் சேர்க்க யாமதை யாரு மாறே.

(இ-ள்.) தண்ணீரிலுறையும் ஸரஸ்வதியே! உனது சரீரத்திற் றூங்குவதும், சுகத்துக்கு மூலமானதும், சிரேஷ்டம் பொருந்திய வெல்லாவுயிர்களையும் நீ காப்பாற்றுவதற்காக உன்னாற் றூங்கப்பெற்றதும், ரத்நம் செல்வம் இவற்றையளிப்பதும், சோபன தானத்தோடு கூடியதுமான உனது ஸ்தனத்தை யாங்கள் கறந்து குடித்து யக்ஞகாரியங்களுக்கும்உபயோகிக்குமாறு கொண்டு வருக—(எ-று.) ஸரஸ்வதி நீரிலுறைபவள். ஸர இத்யுதகநாம. நிருக்தாசாரியர் இச்சொல்லின் ஒருகூறு ஆற்றையும் மற்றொருகூறு அவ்வாற்றின் அதிஷ்டான தேவதையும் குறிக்குமென்பர். ஸரஸ்வதி நதி கங்கைக்கு முன் சிறப்புப்பெற்றிருந்த நதியாம். அவ்வாற்றங் கரையிலேயே ஆரியர்கள் அநேகயாகங்களைச் செய்தவர்களாதலின் அந்த நதிக்கரை சிறப்புப் பொருந்தியதாயிற்று. அது பிராஹ்மரிஷிதேசத்தி லொடு மாறு என்றும் அதைவிட்டு எழு வருஷத்துக்குமேல் பிரிந்திருப்பது பிராஹ்மணீகத்துக்குக் குறைவையளிக்குமென்றும் மனுஸ்மிருதி கூறும். முதலில் ஆற்றின் நாமமாயிருந்தது பின்னர் ஆரியர் அவ்வாற்றின் கரையிற் பாடிய சூக்தங்களுக்கு வாக்களித்த தேவதையாக மாறிற்றென்பர் மேனாட்டாசிரியர்.

50. எக்கியர் தன்னாற் றேவ ரெக்யெ மிழைத்தார்; அன்ன
முக்கிய தன்மர் தாமே முதன்மையிற் றிகழ்ந்த வாகும்;

## மண்டலம் 1 சூக்தம் 165.

உக்கிர மகிமை வாய்ந்தோ ருற்றனர் முன்பு தேவர்
யக்கியஞ் சாதித் தோர்க ளியைவுறு நாகந் தன்னை.

(இ-ள்.) எக்கியத்தைக் கொண்டு ஹோம ஸாதனமான ஆஹவங் யத்தைத் தேவர்களாகிய ரித்விஜர்கள் செய்தார்கள். அந்த முக்கிய தர்ம களே முதன் முதலிருந்தன. மகிமையோடு கூடியவர்கள் ஆதி யக்ஞகர் மகங்ளைச் செய்தவர்களாகிய தேவர்கள் தங்கியுள்ளஸ்வர்க்கதலத்தை யடைந் தார்கள்—(எ-று.) நாகம், அகமற்றது, பாபமும் துக்கமு மில்லாதது, ஸ்வர்க் க மென்பது பொருள். ஸாத்தியர்க ளென்பதற்கு யாஸ்கர் விண்ணுலக வாசிகளென்பார். ஸாயணர் காலத்து இப்பதப்பொருள் நிலையற்ற தென்று இதனுல் வெளியாகிற தென்பார் வில்ஸன் என்பவர்.

(வேறு.)

51. ஒருருவின திவ்வுத கைசுக டோறும்
பேருறு முயர்தலத் தொடு பிறங்கு கீட்டலத்துஞ்
சாரு மேகங்கள் கருவுயிர்த் துயிர்ப்பிக்குந் தரையை
யேரி னங்கிகள் விண்ணினைக்களிப்பினி னிருத்தும்.

(இ-ள்) எப்பொழுதும் ஒரே ரூபத்தோடு கூடிய இவ்வுதகம் கிரீஷ்ம காலத்துப் பகலில் மேனோக்கி யேறியும், வர்ஷ காலத்துப் பகல்க ளிற் கீழ் நோக்கிப் பெய்தும் ஒழுகுகின்றது. பர்ஜன்ய ரூபமான சூல் கொண்ட மேகங்கள் தலைப்பெய்து பூமியைப் பயிர் பச்சையால் நிரப்பும். ஈண்டு செய்யப்படும் அக்கினி காரியங்கள் விண்ணுலகத்திலுள்ள தேவக ளைச் சந்தோஷப் படுத்தும்—(எ-று.)

(வேறு.)

52. கானெகக் மீண்டு மீண்டு மழைப்பெனுற் கடிசார் தெய்வ
மாக்கிய வணிசிறகிற் கதிபெருத் தணைந்தோன் றன்னைத்,
தேக்கிய நீரும் பூடுஞ் சிறக்கத் தாங்கிய கர்ப்பத்தை,
யூக்கிய மழையி னெம்மை யுவப்பிக்குங் கமலத்தோனை.

(இ-ள்.) காவல் பொருந்திய தெய்வத்தன்மை வாய்ந்த வழகிய சிற குகளோடு கூடிக்கதியிற் பெருத்தவனும்,காலமழையினுல் எம்மைச் சந்தோ ஷப் படுத்தும் நீர் நிறைந்தவனுமான சூரியன் எங்களைக் காக்கட்டு மென்று அடிக்கடி யவனை யழைப்பேன்—(எ-று.) மழையினுற் றடாகங்களை நிரப் புபவனு மென்று பொருள் கொள்ளுவார் ஸாயணர். (Thaoagam) தடாகம் வடமொழிப் பதம்க.மலம், நீர் என்னும் பொருளில்வந்தது.

வருக்கம். 2.

## 165. மண்டலம். 1, அநுவாகம். 23 சூக்தம். 1.

15 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: 1, 2, 4, 6, 8, 10, 11, 12 இவைகளுக்கு இந்திரன்; 3, 5, 7, 9 இவை களுக்கு மருத்துக்கள்; 13, 14, 15 இவைகளுக்கு அகஸ்தியன். வடமொழிச் சந்தம்: திருஷ்டுப்; தேவதை: மருத்துக்களோடு கூடிய விந்திரன்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 3.

இச்ருக்தம் இந்திர மருத்து அகஸ்திய ஸம்வாதமாயுள்ளது. 'ஒரு ஸூக்தம் யாருடைய வாக்கோ அவனே ரிஷி' யென்னும் நியாயத்தால் இச்ருக்தத்துக்கு இம்மூவரும் ரிஷிகளாயினர். இங்கு பிரதி பாதிக்கப் படுவதும் இந்திர மருத்துக்களுடைய தன்மைகளே யாதலின் மருத்துக்களோடு கூடிய இந்திரன் தேவதையானான். இச்ருக்தத்துக்கு மோட்சமூலர்விரிவுரை யெழுதியுள்ளார்.

1. எவ்வழ கொடு சேர யாவருஞ் சூட்டப் பெற்று
ரொவ்வு போருறையுளோரா மருதர்க ளொத்த வாயுள்
செவ்வி தினடைந்தோர்?எங்ஙனிருந்திவட்சேர்ந்தார்?செல்வம்
வவ்வு மாசையிற்றம்மொய்ம்பைவழுத்துகாளையரென்யாதே

(இ-ள்.) சமானமான வீட்டி லுறைபவர்களும், சமான வயதுள்ளவர்களுமான மருத்துக்கள் எந்த வழகினால் எல்லாரும் ஒரே மாதிரியாகச் சூட்டப் பெற்றார்கள்? எங்கிருந்து இங்கு வந்தார்கள்? செல்வத்தைக்கைக் கொள்ளும் ஆசையோடு தமது வலிமையைப் புகழ்ந்து பேசு மிவர்களது எண்ணம் என்ன?—(எ-று.) இச்செய்யுளும் அடுத்த செய்யுளு மிந்ரனது கூற்றுக்கள்.

2. இளமையோரெவன்றன்போற்றையேற்றனர்?மருதர்தம்மை
வளமையினெவன்றன்யாகத்திழுத்திடமதியுட்கொண்டான்?
உளமகிழ்ச்சியினிற்சேனமொப்பவந்தரத்திற்பாயு
மளவினினவரையாமுமேத்தித்தாமதஞ்செய்வோமே.

(இ-ள்.) நித்திய தருணர்களாகிய மருத்துக்கள் யாருடைய அவியோடுகூடிய போற்றை விரும்பியேற்றனர்? அம்மருத்துக்களை யெவன் தனது அத்வரத்துக்கு வருமாறு மனதிலெண்ணித் திருப்பினான்? உளமகிமை வாய்ந்த சந்தோஷத்தோடு சேனப் பட்சியைப்போல அந்தரத்தில் விரைவாகப் பாயுங்கால் நாம் அவர்களைப் புகழ்ந்து தாமதமாக வங்கே செல்லுமாறு செய்வோம்—(எ-று)

3. பரிசனர் சூழ்ந்து போற்றுஞ் சற்பதி யாகும்வேந்தே
யொருவனைச் செல்லவேனோ? அநுசாருறை யாரென்னே?
அருமையி னெம்மாட்டுற்றே யன்புரை கூறுகின்றாய்,
அரிவ வுன்னுளத்தைச் செப்பாய் சோபனமொழிகளாற்கே
(இ-ள்.) [இது மருதர் கூற்று.] பரிஜனர் சூழ்ந்து போற்ற செல்பவனும், சத்துக்களுக்குப் பதியுமாகிய இந்திரனே! நீ யொருவனாய் செல்லக்காரணமென்ன? கூடச் செல்பவர்கள் உன்பக்கத்திலில்லாத காரணமென்ன? ஆர்மையோடு எம்மிடத்துவந்து அன்புக்குரிய வார்த்தைகளைக் கூறுகிறாய். உன் மனத்திலுள்ளதைச் சோபன வார்த்தைகளாற் சொல்லுவாயாக—(எ-று.)

4. பிரமமும் போற்று நன்கே பிழிபெறுஞ் சுகச்சுதையும்
வரமுறு மென்வே; யென்றனத்திரி வசியி னேச்சிச்
சருவுறும்; எனையே போற்றிச் சாற்றுவா; ருக்தமென்ற
னருகுற விழையும்; எம்மை பரிபிவையவிபாற் சேர்க்கும்.

## மண்டலம் 1 சூக்தம் 165.

(இ-ள்.) [இது இந்திரன் கூற்று.] எல்லா வவிக்கர்மங்களும், ஸ்தோத்திரங்களும், சுகத்தைத்தருவதாய் நன்ருய்ப்பிழியப்பெற்ற ஸோமமும், என்னுடையவே. சத்துருக்களைப்பட்சிக்கும் என் வச்சிராயுதம் (இடையில் ராட்சஸர்களுடைய உபத்திரவத்தைப் பரிகரிக்கும்பொருட்டு) வலிமையோடு வீசப்படுகிறது. யஜமானர்களெல்லாரும் என்னையே ஸ்தோத்திரங்களாற் புகழ்வார்கள். உக்தங்கள் என்னை யடைய விரும்புகின்றன. இக்குதிரைகள் அவிகளை நோக்கி எம்மைக் கொண்டுபோய்ச் சேர்க்கும்—(எ-று.)

5. ஆதலிற் சுயப்பலத்தி னருகுறு மசுவத் தோராய்ச்
சோதியா னெமது மெய்யைத் துகளற வொளிர்வித் தியாங்க
ளோதுறு முவற்றைப் பூட்டா நின்றனம்; வேந்தே, யெங்கள்
நிதறு முதகஞ் சேர்க்கு மவியைநீ யுன்னல் காணுய்.

(இ-ள்.) ஆகையினுல் ஸ்வபலத்தோடு கூடச் சமீபத்திலுறும் நடைசிறந்த வசுவங்களோடு கூடியவர்களாய்த் தேஜஸ்களோடுஎமது சரீரங்களைப் பிரகாசிக்குமாறு செய்துகொண்டு யாங்கள் இம்மான்களைப் பூட்டுகிருேம். (உன்னேடுகூட யஜமானர்கள்தரும் அவியைப் புசிப்பதற்கெனக்கூட்டுக.) எங்கள் பலத்தினுல் அளிக்கும்மழைநீரால் விளையும் அவிப்பொருள்களையே நீ யுண்ணுகிருயெனவறிக—(எ-று.) ஆகையால் நாமிருவரும் பரஸ்பரோபகாரிகள் ஆதலின், எனக்கு என்னுடைய என்னையென்னும் மமதை யுனக்கு வேண்டாமென்று மருத்துக்கள் கூறியபடி.

6. மருதர்காளுமது வன்மை வதிந்தது மெங்ஙனென்னை
யொருவனு யகியை வாட்ட வுறுத்தினீர்; உண்மையின்யா
னுெருவனே யுக்கிரத்தன் வல்லப மகிமை யுற்ருேன்;
தரியலர் தம்மை முற்றச் சாடினேன் வச்சிரத் தான்.

(இ-ள்.) [இது இந்திரன் கூற்று.] (இவ்வளவு வீறுப்புப்பேசும் மருத்துக்களே! (அன்று விருத்திரவதஞ் செய்தபோது) உமது வன்மையெங்கே போயிருந்தது? யென்னையொருவனுய் அகியைவருத்தும்படி விட்டீர்கள். உண்மையில் யானே யுக்கிரமும், பலமும், மகிமையும்வாய்ந்தவன். எல்லாச் சத்துருக்களையும் யானுெருவனே வச்சிரத்தாற் சாடினேன்-(எ-று.) வதஸ்யை: வச்சிரங்களால் என்பார் ஸாயணர்.

7. காளையே யெம்மோடேய்ந்து நண்பர்கட்காக மிக்க
மீளிமையோடு பூன்றவளமதை விளைத்தாய்; வேந்தே,
நாளு முத்தமப்பலத்தி னணுகுறுவோனே, யாமுங்
கோளுறவெணின்முடிப்பேங்கொள்ளையினெமதுமொய்ம்பின்

(இ-ள்.) விருஷபமே! எம்மோடு சேர்ந்து உன்னுடைய ஆண்மையினுல் சிநேகிதர்களுக்காகப் பூரண வளத்திற் செறிந்த காரியங்களைச் செய்தாய். இந்திரனே! பலோத்தமனே! யாங்களும் மனத்தில் எண்ணங்கொண்டால் எமது பலத்தினுல் கொள்ளைக் காரியங்கள் (மிகுதியானகாரியங்களென்றபடி) செய்து முடிப்போம்—(எ-று.) இச்செய்யுள் மருத்துக்கள் கூறியது.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 3.

8. கொதிப்பினாற்பலத்தினோங்கிக்கொள்ளுமெனிந்திரத்தால்
வதைத்தனென் விருத்திரன்றனுடலினை, மருதிர், யானே;
வதைக்குலிசத்தைத்தாங்குங் கரத்தொடு மனிதர்கட்காப்
பதைப்பற வொழுகுமாறு படைத்தனென்றெளிவார் நீரே.

(இ-ள்.) [இது இந்திரனது கூற்று.] மருத்துக்களே! கோபத்தினால் எனது பலத்தில் விருத்தியடைந்து எனது ஐந்திர சக்தியினால் யானே விருத்திரனை ஸம்ஹாரஞ் செய்தேன். கொலைவல்ல வச்சிரத்தையேந்திய கையுடைய் மனிதர்கட்காக எல்லார்க்கும் ஆற்றலாதத்தைத்தரும் தெளிந்த மழைநீரை நன்றாய் ஒடும்படி செய்தேன்—(எ-று.)

9. உனக்கெதிருறுதிவாய்ந்த தொன்றுமில், மகவானே, யுன்
றனக்கெதிரறிவு சார்ந்த தேவர்கள் சாற்றற்கில்லை;
இனிப்பிறந்திடுவோர் முன்னர்ப்பிறந்தவரிவர்களுறென்றன்
கனத்தினையண்மார்; செய்கசெய்பவைகநித்தமொய்ம்போய்!

(இ-ள்.) மகவானே! உனக்கு எதிரில் உறுதிவாய்ந்த பொருள் ஒன்றுமில்லை. தேவர்களிலும் உன்னைபொத்த வித்வான் (ஜயிக்கும் உபாயத்தை யறிந்தவன் என்பார் ஸாயணர்.) இலன். இனிப்பிறக்க நிற்கும் மர்த்தியர்களிலும், முன்புபிறந்து இப்பொழுது தேவர்களாயிருப்பவர்களிலும் யாரும் உனது பெருமையை யறுக வல்லாரலர். அதி பலவானே! செய்யவேண்டியவைகளைச் செய்வாயாக—(எ-று.) இது மருத்துக்கள் கூற்று.

10. என்பலமொன்றே மேம்பா டெய்திய தென்மனத்தில்
வன்மையை யெய்தியாதியா தியான் செயநுறினும்; யானே
வன்மையுக்கிரத்தன்கண்டீர்; மருதர்காள், தெரிந்தேவிட்டுந்
தின்மையாரவற்றிற் கெல்லாந்தேவனிந்திரன் யான்றானே.

(இ-ள்.) எனது புத்தியின் பலத்தைப்பெற்று யான் என்னென்ன செய்யையாற்றினும் எனது பலமே மேன்மை சிறந்து நின்றதாம். யானே உக்கிரன். மருத்துக்களே! யான் அறிந்தே கொல்லும் அவற்றிற்கெல்லாம் யானே ஈசனும் இந்திரனு மாவேன்—(எ-று.) இச்செய்யுளும் அடுத்த செய்யுளும் இந்திரவாக்கியங்களாம்.

### வருக்கம். 25.

11. கருதியவளிப்பேறுக்குக் கடிமகத்தெனது நட்புக்
கருமையார் தோழிர்மெய்கண்மெய்யினுக் கிந்திரற்கு
மருதராசர்காளிங்கனெனக்கென மதித்துச்செய்த
கருதியார் பிரமத்தோம மகிழ்ச்சியை யெனக்குத்தோய்த்த.

(இ-ள்.) தோழர்களே! மருத்துக்களே! வீரர்களே! இச்சைகளை வர்ஷிப்பவனும், இந்திரனுமான வெனக்கு யாகத்தினிடத்து எனது தோழமையை யெய்துவதற்காகவும், அநேக சரீரங்களோடு கூடிய எனது சரீரத்

தைப் போஷிக்கவும், நீங்கள் சுருதி பூர்வமாகத்தந்த அவிக் கர்மங்களும் ஸ்தோமங்களும் எனக்கு ஸந்தோஷத்தை விளைத்தன—(எ-று.) 'இச்செய்யுளில் இந்திரன் மருத்துக்களின் நட்பின் அநாவசியத்தைக் கூறினதைப் பற்றிப் பச்சாத்தாபப் படுகிறான். தான் அவர்களை நிராகரித்த போதும் அவர்கள் அவனை 9வது செய்யுளிற் புகழ்ந்துள்ளது அவன் மனத்தையுருக்கிற்று. அதற்குப் பிறகு அவ்விருவரது நட்பும் பழைய மாதிரி கூடிவிட்டதென்னலாம்.' என்பர் மோட்சமூலர்.

12. இவ்வகையிவர்களென் மாட்டொளியினையேய்த்து மூட்டின்
றெவ்வுறுங் கீர்த்தியோடு மன்னத்தைத்தாங்கி நின்றார்;
செவ்வியபொன் வண்ணத்தின் மருதர்காள், திண்ணமாகத்
திவ்விய யசசா லென்னைச் சிமிழ்த்தனிர் சிமிழ்க்கா நின்றீர்.

(இ-ள்.) இம்மாதிரியாக இம்மருத்துக்கள் என்னிடத்துத் தங்களது பிரபைகளைப் பொருத்திக் குறைவற்ற கீர்த்தியையும் அன்னப் பொருள்களையும் எனக்காகத் தாங்கினார்கள். நல்ல தங்கநிறத்தோடு கூடிய மருத்துக்களே! நிச்சயமாய் ஒளிவீசுகின்ற புகழினால் என்னைக் கட்டினீர்கள்; இன்னுங்கட்டுகிறீர்கள்—(எ-று.) சந்த்ரவர்ண: என்பதற்குப் பொன் வண்ணமென்பார் ஸாயணர். யசசு, புகழ். புகழினாற் கட்டினார்களென்பதற்குப் புகழ்ந்து சந்தோஷிப்பித்தார்கள் என்பது பொருள். 'என்னை நோக்கியே எப்பொழுதும்பிரகாசிக்கிறார்கள், அல்லது, என்னையே எப்பொழுதும் திருப்தி செய்கிறார்கள்; எனக்காகவே கீர்த்தி அன்னம் இவற்றைத் தாங்குகிறார்கள். என்னாற்செய்யப்படுங் கர்மங்களுக்காக வென்னையே ஸ்துதிக்கிறார்கள்.' என்பது கருத்தென்பார் ஸாயணர்.

13. மருதர்காளும்மையீண்டு மகிமையின் வளர்த்த தாரே?
கருதுறு தோழர்காள் நீர் தோழரைக் கருதிச் செல்லீர்;
அரிய செல்வத்தைப் பூரணத்தினி னமைக்கல், சோபைப்
பெரியவர்காள், என் யக்ஞ வொழுங்கினைப் பெரிதும் பாரீர்.

(இ-ள்.) மருத்துக்களே! உங்களை யிவ்வுலகத்து மகிமையிற் பெருகுமாறு யார் செய்தார்கள்? தோழர்களே! உங்கள் தோழர்களாகிய யஜமானர்களை நோக்கிச் செல்லுங்கள். பிரபை மிகுந்த சித்திர வர்ணத்தவர்களே! சிந்திக்கத் தக்கவையான தனங்களைப் பூரணமாக வமைப்பீர்களாக. எனது யக்ஞ விதிகள் சரியாக வநுஷ்டிக்கப் படுகின்ற விஷயத்தையும் நன்றாகக் கவனிப்பீர்களாக—(எ-று.)

14. உமை வணங்கற் குரியபோற்றினா லுரைத்தாயிற்றால்;
அமைதுதியா ளளப்போன் புத்தியு மடையா நின்ற,
திமையினில் விப்பிரன் பால் மருதர்காளேய்குவி, ருந்
தமையெணித்துதிப்போ னர்க்கந்தயக்கிய தன்மையானே.

(இ-ள்.) மருதர்களே! உம்மை வணங்குதற் குரிய ஸ்தோத்திரங்களால் வணங்கியாயிற்று. பொருந்திய துதிகளாலுமையளப்பவனுடையபுத்தியும் உம்மாட்டடைந்தது. உம்மை நினைத்துத் துதிப்பவன் உம்மை யர்ச்

சித்த காரணத்தால் நீங்கள் விரைவாக விப்பிரனுகிய யஜமானனிடத்துச் செல்வீர்களாக—(எ-று.) மான்யஸ்ய என்பதற்கு மாநீயஸ்ய விதுஷ: என்பார் ஸாயனர். ஆனுல் மானனுடைய புத்திரனது எனப்பொருள் கூறுவர் மேனுட்டாசிரியர். இவ்விருக்கின் பொருளைத்தாம்உத்தேசமாக வெழுதியுள்ளதாகவும் கூறுவர்.

15. மருதர்கா ளிப்போற்றும்மை யின்பத்தின் வைகுவிக்கல்;
கருது மிவ்விசையு, மத்த மூட்டு வோர்வரத்தைக்கான்போர்
சுருதியு, முடல் வளர்க்க வென்னியே தோய்க; யாமுங்
கருதிய வுண்டி வன்மை வெற்றியார் கொடையுங் காண்க.

(இ-ள்.) மருத்துக்களே! இந்த ஸ்தோத்திரம் உம்மையின்பத்திற்றங்குமாறுபுரிக. இக்கீர்த்தனமும், மத்தத்தை யூட்டுவோர்களும் வரப்பிரதானமுதலியவற்றுல் உம்மை அளப்பவர்களும் செய்யும் ஸ்தோத்திரங்களும், எமது சரீரத்தை வளர்க்குமாறு பொருந்தட்டும். யாங்களும் உணவையும், பலத்தையும், ஜயசில தானத்தையு மடையட்டும்—(எ-று.) ஈண்டும் மானனது புத்திரன் மாந்தார்யனது துதிகளை யென்பார் மேனுட்டாசிரியர். அவன் ஒருகவியாயிருக்கலா மென்பர்.

வருக்கம். 26.

ஆகச்செய்யுள். 412.

மூன்ருவது அத்தியாயம் முற்றும்.

---

## நான்காவது அத்தியாயம்.

இவ்வத்தியாயத்தில் 29 வருக்கமும் 18 ஸூக்தங்களும் 142 இருக்குக்களு முள்ளன.

## 166. மண்டலம் 1. அநுவாகம் 23. சூக்தம் 2.

15 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்1—13, ஜகதி, 14, 15 திருஷ்டுப்; தேவதை: மருத்துக்கள்.

மித்திராவருணர்கள் ஊர்வசி யென்னும் அப்ஸர ஸ்திரீயைப் பார்த்தபோது அவர்களது ரேதஸ் கும்பத்தில் விழ அகஸ்திய வஸிஷ்டர்களுற்பவித்தார்களென்ப. இதுமுதல 26 ஸூக்தங்கள் அகஸ்தியர் கண்டவையாம்.

(வேறு.)

1. பலனவிப்போன்றனைவிளக்க வேகமொடு
தோன்றுவர்தம் பண்டு நின்றும்
வலன்பொருந்தும் பெருமையினை விரைவாக
வுரைத்திடுவோம்; மருவுந் தியைத்

## மண்டலம் 1 சூக்தம் 166.

தலன்றேறு நெறியெல்லா, மாருதர்காள்,
பேரொலியீர், சார்த்திப் போரிற்
பலந்தோற்றுங் கருமங்கள் புரிவதுபோற்
சத்தியுளீர் புரிந்தீர் பண்பின்.

(இ-ள்.) பலனைத் தருபவனாகிய இந்திரனது பெருமையைத் தெரியப்படுத்தவேகத்தோடு யாகவேதிக்கு முன்னர்க் காணப்படுபவர்களாகிய மருத்துக்களினது, பழைய காலத்திலிருந்து பலத்தோடு கூடியுள்ள மகிமைகளை இப்பொழுது கூறுவோம், பெருத்த சப்தத்தோடு கூடியவர்களே! எல்லாம் செய்ய வல்லவர்களே! மருத்துக்களே! இடந்தோறும் வழியில் நெருப்பை வைத்து யுத்தத்திற் போல உமது பலத்தைத் தோற்றுங் கருமங்களைப் புரிந்தீர்கள்—(எ-று.).

2. அன்பார்ந்த வவுரசபுத் திரனென்ன
யாகமதி னூர்ந்த தேனை
யின்பார்ந்த கிரீடையர்கள் கொண்டுவந்து
பலரிடிக்கக் கிரீடிப்பார்கள்;
அன்பார்ந்த வுதவிகொடு முருத்திரர்க
டுதிப்போன்மாட் டடைவார், சற்றுந்
துன்பார்ந்து நையாதே யவியளிப்போன்
றனைக்காப்பர் சுயமொய்ம்போரே.

(இ-ள்.) அன்பிற் சிறந்த ஔரஸ புத்திரனைப் போல யாகக் கூட்டத்தில் மாதுரியமான வவியைக் கிரீடையர்களான மருத்துக்கள் பலரு மிடித்து நெருக்கக் கொண்டுவந்துவைத்துக் கிரீடிப்பார்கள். உருத்திர புத்திரர்களாகிய வவர்கள் நமஸ்காரஞ் செய்து துதிப்பவனுக்கு உதவியைக் கொண்டு வருவார்கள். ஹவிஸை யளிப்பவனை ஸ்வயபலமுள்ள வவர்கள் துன்பப் படுத்தாது காப்பார்கள்—(எ-று.) மருத்துக்களைப் பற்றி மண். 1 சூக். 114 செய். 6 பார்க்க.

3. அவிசுதனை யளிப்பவன்யா ரென்னினுமன்
னுன்றனக்கிங் கமரம் வாய்ந்தோர்
தவவுதவி யாற்றுபவர் தனநிறைவை
யுந்தருவர்; சகாயரென்ன
வவன்பொருட்டு மாருதர்கள் சுகமதனைத்
தோற்றுவிப்போ ரதிகமாகப்
பவனரஜந் தனிற்றன்னீ ரொழுகும்வகை
நனைத்திடுவார் பொருந்தி மாதோ.

(இ-ள்.) ஸோம மாதிய அவிப் பொருள்களைத் தரும் யஜமானன் யாராயினும் அவனுக்கு, மரணமின்மை வாய்ந்தவரும் மிக்கவுதவி செய்பவர்களுமான மருத்துக்கள் (பசு நிறைவு முதலியவற்றைத் தருவதோடு) செல்வ நிறைவையும் தருவர். சுகத்தைத் தருபவர்களான மருத்துக்கள் ஹிதஞ்

## அஷ்டகம் 2 அத்தியாயம் 4.

செய்யும் கிரேகிதரைப் போலப் பொருந்திப் பூமியைச்சூழ்ந்த ரஜத்தில் தண்ணீர் அதிகமாக வோடும்படி நனைப்பார்கள்—(எ-று.) புவனரஜு மென்றது பூமியை யடுத்த வாயுப் பிரதேச மென்க. மண். 1 சூக். 110 செய். 6 நோக்குக.

4. மிகுபலத்தால் ரஜமதனை யெப்புறமுங்
குழப்பமுற விளைத்தமாக்கள்
தகுதியுறச் சுயமாக வேவப்பட்
டோடுகின்ற தக்கவாறே;
அகிலபுவ னத்துயிரும் வீடுகளும்
பயமடைந்த வாயுதத்தோ
டிகவயின் ருமதுபல நிறத்தோடு
வருவதனை யெண்ணி யந்தோ.

(இ-ன்.) மிகுந்தபலத்தால் பூமியைச்சூழ்ந்த அந்தரவுலகத்தை எல்லாப்பக்கமும் குழப்பமடையும்படி செய்த வுமது அசுவவிசேஷங்கள் (சாரதியில்லாமல்) தங்களைத்தாங்களே தூண்டுதல் செய்துகொண்டு தக்கவாறு செல்லுகின்றன. அப்பொழுது எல்லாவுலகங்களிலுமுள்ள பூதஜாதங்களும் கிரகங்களும் பயத்தையடைந்தன, ஆயுதங்களை நீட்டிக்கொண்டு உமது சித்திரவர்ணத்தேடகூடிய சாயலோடு நீங்கள்வருவதைக்கண்டு—(எ—று.).

5. பளிச்சௌனவே செல்லுபவர் பர்வதங்க
டமைபொலிப்பித் தாகாயத்தின்
வெளிப்புறத்து முகட்டினைத்த மாண்மையினு
லசைத்திட்டு மேவுங் காலை
பொளிப்பரப்பி னுமதுவரு கையையறிந்து
வனப்பதிக ளொக்கப் பீதித்
துளக்குறுவ தோடிபத வுழற்சியென
வோடதிகள் சுழலு நன்கே.

(இ-ன்.) பளிச்சென்று மின்னிக்கொண்டு செல்பவர்களாகிய மருத்துக்கள்,பர்வதங்களை (அல்லது மேகங்களை)ச்சப்திக்குமாறுசெய்துவிண்ணினது உச்சியைத் தமது பலத்தினல் நடுங்குமாறு புரியும்போது வனஸ்பதிகளாகிய பெருமரங்கள் உமது (மருத்துக்களது) வருகையை யெண்ணி நடுங்கும். தேர்சுழல்வதுபோல ஓஷதிகள் சுழல்வுறும்—(எ-று.). உமது என்பது அவர்களது என்ற பொருளில் வந்தது. . இவ்வகைப்படர்க்கை முன்னிலைமாற்று வேதஸஹஜம். ஈர்யா: என்பதற்கு ஆண்மையினுல் என்னுது நார்களுக்கு ஹிதஞ்செய்பவர்களாயென்று உரைகூறுவர்ஸாயணர். அவரே ரதயந்திஇவ என்பதற்குத் தேரேறவெண்ணும் ஸ்திரீ அங்குமிங்குஞ் சுற்றுவதுபோல என்று உரை கூறுவர்.

வருக்கம். 1.

## மண்டலம் 1 சூக்தம் 166.

6. உக்கிரரா மாருதர்காள் குறைவடையாச்,
சேனையுளீ ரோங்கு ஞானத்,
தக்கரையா ரெம்மதியி விச்சைகளைப்
பூரிப்பிர்; அனியின் யாண்டும்
மிக்கவலி கூடிய வும் மழற்றந்தங்
கடிக்குங்கான் மேவுமாக்க
ளொக்கவெவற்றையுஞ் சிறிதுங்குறிதவரு
வம்பெனவே யூறிழைக்கும்.

(இ-ள்) உக்கிரம் பொருந்திய மருத்துக்களே! குறையாத சேனையோடு கூடியவர்களே! ஞானத்தோடு கூடியவர்களாய் எமது இச்சைகளை நிறைவேற்றுகிறீர்கள். அழகாக வெல்லா விடத்தும் வலிபொருந்தியஉமது அழற்றந்தமாகிய மின்னலானது கடிக்கும் போது மேகங்களாகிய இப்பசுச்களைக் குறிதவருத வம்பைப் போல அது எல்லாவற்றையும் அழிக்கும்--(எ-று.)

7. நிலைவாய்ந்த தானத்தோ ரழியாத
தனமுள்ளோர் நேடி யென்றும்
பலன்வாய்ந்த கொடைமிக்கோர் யாகமதிற்
றுதிகொள்வோர் பண்பார்வேந்தை
நலன்வாய்ந்த சோமமதைக்குடிக்கவெனத்
துதிக்கின்றார்; நன்னார்தம்மை
வலன்வாய்ந்து நலிக்கின்ற வீரன்றன்
முதலாண்மை மதித்தோர்வாரே.

(இ-ள்.) நிலைத்து நிற்கும் தானங்களைச் செய்பவரும், அழியாத செல்வ முள்ளவரும், பலனிறைந்த கொடையோடு கூடியவரும், யாகத்தினிடத்துத் துதியை யேற்பவருமான மருத்துக்கள் ஸோம பானத்திற்காக இந்திரனைத் துதிக்கிறார்கள். பகைவரை வாட்டும் வீரனாகிய இந்திரனுடைய பிரதம பௌருஷங்களை யவர்கள் நன்று யறிவார்கள்—(எ-று.)

8. மாருதர்காள் சதபோகப் பாலனமார்
புரங்களொடு வஞ்சமார்ந்த
பேரகங்க ணின்றுபெரி தளிக்கவெனு
நரனைமகார்ப் பெருக்கி மிக்க
சிரகத்தனுக்கி வளர்த்திடுமவனை,
யுக்கிரர்காள், சிறப்பிற்பற்பல்
பேரொலியின் முழங்குறு நன்மகத்துவத்தீர்,
வலியுறைந்தீர் பெரிதுங்காப்பீர்.

(இ ள்.) உக்கிரர்களும், விவித சப்தத்தோடு கூடிய மகத்துவர்களும் பலமிகுந்தவர்களுமான மருந்துக்களே! நூற்றுக் கணக்கான போகங்கள் நிறைந்து சத்துருக்களினின்று காக்கும் கோட்டைகளால், வஞ்சனை மிகுந்த

## அஷ்டகம் 2 அத்தியாயம் .4

பெரும் பாபங்களினின்றும் நீங்கள் பெரிதுங் காக்க வேண்டும் மனிதனை சந்ததியபிவிருத்தி செய்து சீர் நிறைந்த வில்லத்தானாக நீங்கள் வளர்க்கு மன்றுனை, நன்றாகக் காப்பாற்றுவீர்—(எ-று.)

9. உந்தேரில் மாருதர்காள், நன்மையெலாம்
பொதிந்துள்ள; வோங்கும்வன்மை
நந்தாயு தங்கள்பல வொன்றோடொன்
றெதிரிடுத லுடை நின்ற;
உந்தோட்கோப் பெருநெறி யிளைப்பாற்ற
வெனவமைந்த;வுங்களட்சத்
தந்தேர்ச்சக் கரங்கவரு கழகாக
வொத்தவணைஞ் சுழலு மன்றே.

(இ-ள்.) மருத்துக்களே! உமது தேரில் எல்லாக்கல்யாணகரங்களும் நிறைந்திருக்கின்றன. பலம்பொருந்திய ஆயுதங்கள் ஒன்றோடொன்று எதிரிட்டது போல விருக்கின்றன. செல்லு நெறியின் இளைப்பைத்தீர்க்க உமது தோட்கோப்பாகிய பஷ்யாதிகள் அமைந்திருக்கின்றன. உங்களது தேரச்சிற் சக்கரங்கள் சமீபத்தில் எற்றக் குறைவின்றி யுருள்கின்றன—(எ-று.)

10. நரர்களது கரங்களினிற் கவியான
தனமிகவு நாடிச் சார,
வுரமதனி லொளிவீசும் பொன்மணியார்
கோலங்க ளோங்கா நின்ற;
தரமிகுதோளிடத்து வசியாயுதங்கள்
வச்சிரத்திற் றங்குகின்ற;
இருவதனை யுறுப்பினெலாந் தாங்குகிறார்
பறவையது சிறகு போன்றே.

(இ-ள்.) வீரர்களாகிய மருத்துக்களது கைகளிற் றுனுர்த்தம் கலியாணகரமானபூரிகள் சேர்ந்திருக்க அவர்களது மார்பிற் காந்தி வீசும் பொன்னுபரணங்களும் ரத்நாபரணங்களும் ஓங்கி நிற்கின்றன. அவர்களது புஜத்தில் கூர்மை மிகுந்த வாயுதங்கள் வச்சிராயுதத்தைப் போலத் தங்கியிருக்கின்றன. பட்சிகள் சிறகைத் தாங்குவதுபோலத் தங்களது அவயவங்களோறும் லட்சுமியைத் தாங்குகிறார்கள்—(எ-று.)

வருக்கம், 2.

11. மகத்துவத்திற் பெரியவர்கள், வியாபிப்போர்,
விபூதியுளோர், விண்ணூர்நாளின்
மிகத்தொலையினுந் தெரிவோர், களிப்பளிப்போர்,
நன்னுவோர், விழைந்துவாயா

## மண்டலம் 1 சூக்தம் 166.

ஆகத்தஆறு மொழிபகர்வோர், இந்திரனை
நன்ருகவுவந்து சூழ்ந்தோர்,
தொகுத்த துதிபொடுகூடிச்சிறந்த, மருத்
துவர்களிவண் டோய்வார் நன்கே.

(இ-ள்.) மகத்துவ மிகுந்த மஹான்களும், விபுக்களும், பலவித ஐசுவரியங்களோடு கூடியவர்களும், வானத்தில் நிறைந்த நட்சத்திரங்களைப் போலத் தூரத்தினின்றுங் காணப்படுபவர்களும், மத்த மளிப்பவர்களும், நல்ல நாவோடு கூடியவர்களும்,வாயினுலினிய வசனங்களைப்பேசுபவர்களும் இந்திரனை நன்ருகச் சூழ்ந்து கலந்தவர்களும், துதிகளோடு கூடியவர்களு மான மருத்துக்கள்(இவ் வெக்கியப் பிரதேசத்துக்குவருகிருர்கள்)—(எ-று.) தோய்வார் நன்கே யென்றது ஸாயணருரையை நோக்கிச்சேர்த்தது.

12. நற்பிறப்பின் மாருதர்கா ளும்மகிமை
யத்தகைத்தாம்; நாடி நீங்கள்
முற்பட விந்தவைய திதித் தொழிலினைப்போற்
பரந்தனவாம்; மூண்ட வல்பிற்
சற்கருமஞ் செயுமனிதன் கொள்கவென
வவன்விழையுந் தனத்தைக் கூட்டுஞ்
சற்கொடையை யிந்திரனுங் கைவிட்டு
வஞ்சனைக டயக்கலின்றே.

(இ-ள்.) நற்பிறப்போடு கூடிய மருத்துக்களே! உங்களது மாஹாத் மியம் அத்தகையதாம். நீங்கள் தருங்கொடைகள் அதிதியாகிய பூமியினது செய்கையைப்போல மிகப்பரந்ததாம். அன்போடு சத்காரியங்களைச் செய் யும் யஜமானன் விரும்பியதனத்தையளிக்கும் உமது கொடைகளை இந்திர னுங் கைசோரவிட்டு மாற்றுவதில்லை—(எ-று.) 'மருத்துக்களது கொடை கள் அகண்டமாயுள்ள அதிதியைப்போல வரையற்றது,' என்பது கருத் தென்பார் மோட்சமூலர். இச்சூக்தத்துக்கும் அவர் விரிவுரையெழுதி யுள்ளார்.

13. மாருதர்காள், மரணமுறீ, ருமமுறவித்
தகைத்தாகு, மதிக்கி னீங்கள்
பூருவகாலந் தொடங்கிப் பயிலுறுவீ
ரெந்துதிக்குப் பொருந் தோளப்
பூரியினை யளித்துக் காத்திடுவீர்கள்;
இம்மறையாற் போற்று மாந்தர்க்
கேரினவர் கீர்த்தியினைக் காத்துநர
ருஞ்செயலின் மகிமை யேய்த்தார்.

(இ-ள்.) மருத்துக்களே! மரணமற்றவர்களே! உமது பந்துத்வ மித் தன்மையதாகும்.யோசிக்குமிடத்து நீங்கள் பண்டைக்காலத்திலிருந்து பழகு கிறீர்கள். (காலாதிதர்களென்றபடி:) எங்களுடைய ஸ்தோத்திரத்துக்கு

ஏராளமான பூமியையளித்து எங்களைக் காப்பாற்றுவீர்கள். இந்த மந்திரத்தினுற் றுதிக்கும் மனிதர்களுக்கு அவர்களது கீர்த்தியை யளித்துக்காப்பாற்றி, நேதாக்களாகிய மருத்துக்கள் தங்களது அற்புதச் செய்கைகளால் தமது மகிமையை எல்லார்க்குந் தெரியப்படுத்தினார்கள்—(எ-று.)

(வேறு.)

14. வேகமார் மருத்துவர்காள், வெகுதன முமது கொண்டே
யேகமாய்த் திர்க்ககாலம் வாழ்வினை பெய்தி யோங்க,
வாகவ மதனி னெங்கள் மனிதர்கள் பெருகி நிற்க,
வோகையி னெக்கியத்தா விட்டியி னோங்கு விப்பேன்.

(இ-ள்.) வேகம் பொருந்திய மருத்துக்களே! உம்முடைய ஏராளமான செல்வத்தைக்கொண்டு யாங்கள் நெடுங்காலம் வாழ்வடைந்து சிறக்குமாறும், யுத்தத்தில் எங்களது ஜனங்கள் பரந்து நிற்கவும், யக்ஞ கர்மங்களால் இவ்விஷ்டியைப் பூரணமாகுமாறு புரிவேன் —(எ-று.)

15. மருதர்கா ளிப்போற்றும்மை யின்பத்தின் வைகுவிக்கல்;
கருதுமிவ் விசையும், மத்தமூட்டுவோர் வரத்தைக்காண்போர்
கருதியும், உடல்வளர்க்க வெண்ணியே தோய்க; யாமுங்
கருதிய வுண்டி வன்மை நெடும்பகல் வாழ்வுங் காண்க.

(இ-ள்.) மருத்துக்களே! இந்தஸ்தோத்திரம் இன்பத்திற் றங்குமாறு உம்மைப்புரிக. இக்கீர்த்தனமும், மத்தத்தை விளைப்பவர்களும் வரப்பிரதான முதலியவற்றாலும்மை யளப்பவர்களுஞ் செய்யும் ஸ்தோத்திரங்களும், எமது சரீரத்தை வளர்க்குமாறு பொருந்தட்டும். யாங்களும் உணவையும், பலத்தையும், சிரகால ஜீவனத்தையுமடையட்டும்—(எ-று.) இச்செய்யுள் மூன்றாவது அத்தியாயத்தின் கடைச்செய்யுளாக வந்துளது. ஆண்டு ஜீரதாநும் என்னும் மூலப்பதத்துக்கு ஜயசிலதான மென்றுரை கூறிய ஸாயணர் ஈண்டு சிரகால ஜீவனமென்றார். அதனாற் செய்யுளில் 'வெற்றியார் கொடையும்' என்பதற்குப் பிரதியாக நெடும் பகல் வாழ்வும்' எனமாற்றிக் கூறினார் இந்நூலாசிரியர். ஈரிடத்திலும் மாநனது புத்திரனுகியமாந்தார்யன் சொல்லுந்துதி யென்றே மேனாட்டாசிரியர் மொழிபெயர்ப்பர்.

வருக்கம். 3.

## 167. மண்டலம். 1. அநுவாகம். 23. சூக்தம். 3.

11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப்; தேவதை: 1 இந்திரன், 2-11 மருத்துக்கள்.

1. ஆயிரமுதவி, வேந்தே, யுன்னவை, யரிவ, தேர்ந்த
லாயிர முணவின் பேதங், களிப்பினை யெமக் களிப்பா
னுயிரம்வகைத் தனங்க ளாரும் வேகத்தின் மாக்க,
ளாயிரமாக வெங்க ளருகினி லடைந்து நிற்க.

## மண்டலம் 1 சூக்தம் 166.

(இ ள்) இந்திரனே! அரீயென்னுங் குதிரைகளிரண்டுக்கு நாயகனே! ஆயிரக்கணக்கான வுதவிகளும், பொருக்கி யெடுத்த ஆயிரக்கணக்கான உணவு பேதங்களும், எங்களுக்குச்சந்தோஷத்தை யூட்டுவதற்காக ஆயிரக்கணக்கான செல்வங்களும், வேகம் பொருந்திய குதிரை பசு முதலிய நாற்காற் பிராணிகளும் எங்களுக்குச் சமீபத்தில் வந்து சேரட்டும்—(எ-று.)

2. மாயையிற் சிறந்தோ ராகு மாருத ருதவி யோடும்
பாயபேர் விண்ணினின் றும் பற்றிய முதன்மைச் செல்வ
மேயவை யோடு நன்னர் மேவுக, வவர்தம் வேகந்
தேர்யுமாப்பிணையலோ தமெனினு மக்கரை தோய்மோதே.

(இ-ள்.) ஞானத்திற் சிறந்தோரான மருத்துக்கள் ரட்சணங்களோடும், பெரிய விண்ணிலிருந்து கொண்டு வந்த முதன்மையான செல்வங்களோடும், எம்மை நன்கே யடைவார்களாக, அவர்களது வேகமான குதிரைக்கூட்டம் ஸமுத்திரமாயினும் பொருட்படுத்தாமல் அதன் அக்கரையிற் றனங்களோடு சேருமக்காலத்து—(எ-று.) ஸமுத்திரம் அந்தரிட்சமாம்.

3. நன்னிலையுற்று நெய்யோ டோடிப் பொன்னுருவினண்ணி
டன்னியமின் மேகத்தின் மாலையிற் கூடி மாந்தர்
பன்னியின் மறைந்தொழுகிப் பகர்மக வாக்கி னேரோர்
நன்னயக் காலந்தன்னிற் சபையினி னலக்கத் தோன்றும்.

(இ-ள்.) உலகத்தில் நன்றாக நிலைத்து, ஸாரபுஷ்டியுள்ள நீரோடு சென்று, தங்கம்போன்றழகிய ரூபத்திற் சிறந்த மின்னலாகிய ஆயுதவிசேஷம் மேகமாலையிற் கூடுவதுபோல அம்மருத்துக்களுடன் கூடி, மனிதர்களது பத்தினிகள் (வெகு ஆபரணங்களோடு ரூபவதிகளாயிருந்தும்) மறைவாக வந்தப்புரத்திற் சஞ்சரிப்பதுபோல மறைவாகவே யொழுகி, யாகத்தினிடத்து ஸ்தோத்திர முதலிய ரூபமாக வாக்கானது எல்லாருடைய காதினுங்கேட்கவுலாவுதல்போலஒவ்வொருகாலத்தில்இடிரூபமானவாக்காகவெல்லாருக்குந்தெரியும் வண்ணம் ஸபையில் வெளித்தோன்றும்—(எ-று.) மின்னலை மருத்துக்களது ஆயுதமாகவும் அம்மின்னல் குடும்ப ஸ்திரீகளைப்போல மறைந்தே மேகத்தினு ளொழுகுவதாகவும், ஒரோர் காலத்தில் யக்ஞ பூமியில் மந்திரசப்தங்க ளறியப்படுவது போல இடியினால்அறியப்பட்டு வெளிந்தெரியுமென்றும் வர்ணித்தார். இவ்வுவமைகளை யறிய முடியவில்லையென்று கூறிமேனாட்டாசிரியர் பின்வருமாறு மொழிபெயர்ப்பர்: "ஒருமனிதனது பத்தினியைப்போலவும், நன்றாய்ப் பிடிக்கப்பட்டுப் பிரகாசத்தோடு கூடிப் பொன்னா லலங்கரிக்கப்பட்டுப் பின்னாற் கொண்டுபோகப் பெற்ற ஈட்டியைப்போலவும், மறைவாக அவர்களுக்கருகில் ஒன்று செல்லுகிறது. அவர்களுக்கிடையில் அழகிய வாசாலகமுள்ள மாதைப்போல வாக்கு மிருக்கிறது." என்பதாம்.

4. எப்பரு சோபை வாய்ந்த மருதர்க ளென்று நீரை
யுய்த்து மின்னோடு சேர்ந்தார்பொதுவினிற்றுப்போரொப்ப;
மொய்த்திடு கோரர் தம்முன் புரோதஸி முரணிச் செல்ல
வுய்த்திலர்,தேவ ரன்னுள் தோழமை யோங்கலூழ்த்தார்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் .4

(இ-ள்.) இளைப்படையாதவரும் சோபனலங்காரங்களோடு கூடிய வருமான மருத்துக்கள் எப்பொழுது நீரைச்சொரிந்து பொருவி லநுபவிப் பவர்களைப்போல மின்னலோடு கூடினார்கள்.மழையையதேஷ்டமாகப்பெய் விக்கும் கோரர்கள் தங்களுக்கு முன் ரோதஸியாகிய ஸ்திரீ பயந்தோட வி ரட்டினார்களவர். ஆனால் தேவர்களாகிய வவர்கள் அவளதுதோழமை விருத் தி படையுமாறு விரும்பினார்கள்—(எ-று)உரோதஸி பூமி வானங்களெனக் கொள்ளின், புருஷர்கள் தாங்களநுபவிக்கும் ஸ்திரீகளிடத்து ரேதஸைக் கொட்டுவதுபோலப்பூமியின்மீது மழையைப்பெய்கிறார்களென்றும் அப் பூமிவானங்களைப் பயமுறுத்த வெண்ணாது அவற்றின்தோழர்களாய் அவற் றை அபிவிருத்தி செய்கிறார்களென்றும் உரைக்க. உரோதஸியென்பதற்கு ரோதனஸ்வாபவமுள்ள ருத்திரனது ஸ்திரீ ரோதஸி யென்பர் சிலர், மண். 1 ருக். 101 செய்.7 பார்க்க. வேறு சிலர் மருதர்களது ஸ்திரீகள் என் பர். ஈண்டு மின்னலாகிய மருத்துக்களது பத்தினியென்னும் பொருளில் வந்தது. வாழ்த்தல் நினைத்தல்.

5. அவிழ்ந்த கூந்தலினள் வீரமார்ந்த ரோதஸி யசுர்யை
குவிந்திவர் தம்மைக் கூட வெண்ணிய போது சேவை
நிவந்தவர் தேரிற் சூர்யை நேர வந்தரத்தின் மேகந்
தவழ்தலிற் காந்தி சார்ந்த வுருப் பொடு தாவினாளே.

(இ-ள்.) அவிழ்ந்து விரிந்த கூந்தலோடு கூடினவளும், வீரமனத் தோடு கூடியவளும், அஸுரர்களாகிய மருத்துக்களது பத்தினியுமாகிய ரோதஸி (மின்னல்) இம்மருத்துக்களைக்கூட வெண்ணியபோது, தன்னைச் சேவித்தோங்கும் அம்மருத்துக்களது தேரில், மேகமானது அந்தரத்திற் செல்லுவதுபோலச்சென்று, ஒளிவீசு மவயவங்களோடு சூரியனது புத்திரி யாகிய ஸூர்யா அசுவினிகளது தேரிற்குவியதுபோலப் பாய்ந்தேறினாள் —(எ-று.)

வருக்கம். 4.

6. யுவானர்கள் சோபை கூர்ந்த யுவதியைச் சபையில் வன்மை
தவாதுள வவளைத் தேரிற் சார்த்தினார், மருதிர், நீங்க
ளவாவிய வர்க்க மோங்க, வவிபுளோன் சோமமுற்று
நிவாசவான் வணங்கிப் பண்ணை நேடிப்பாடிய வப்போதே.

(இ-ள்.) மருத்துக்களே! நீங்கள் ஆசைப்படும் அர்க்கம் அல்லது ஸ்தோத்திர மோங்கி நிற்கும்போதும், அவியைக்கரத்தேந்திய ஸோமயாஜி யாகிய கிரகஸ்தன் உங்களை வணங்கித்தங்களைப்பாடியபோதும்,நித்தியதரு ணர்களாகிய மருத்துக்கள், சோபை கூர்ந்தவளும், ஸபைகளில் வலிமைமி குந்தவளுமான அந்த யுவதியாகிய மின்னலைத் தமது தேரில் நிலைப்பித் தார்கள்—(எ-று.) மருத்துக்களே! என்று முன்னிலைப் படுத்திப் பின்னர் யுவானர்களென்றவிடத்து அவர்களையே படர்க்கைப்படுத்தினார்.

## மண்டலம் 1. சூக்தம் 166.

7. மருதராமிவர்க ளுண்மை மகிமையை, யுரைத்துப் போற்ற
மருவிய வதனைச் சொல்வேன், மற்றிவள் கூடத்தின்மை
பரவிய மனத்திற் சித்தத்திட மகங்காரப் பண்பும்
விரவியுஞ் செல்வம் வாய்ந்த மாதரை வசிக்குமாற்றை.

(இ-ள்.) மருத்துக்களாகிய விவர்களது உண்மைவாய்ந்த மகிமையும், உரைத்துப் போற்றத்தக்கதுமான அதனையெடுத்துரைப்பேன். (அது வெதுவெனில்) வலிமைபொருந்திய (அல்லது மழைபெய்விக்கும்) மனத்தோடும், திடச்சித்தத்தோடும் அகங்காரத்தோடுங் கூடியிருந்தும் இவ்வுரோதஸீயுங் கூட அவர்களோடு சேர்ந்து ஸௌபாக்கியவதிகளாயுள்ள ஸ்திரீகளிடத்திற் சென்று அவர்களைத்தாங்கும் விஷயத்தை—(எ-று.)

8. மித்திரன் வருண னர்யமானுங் கேடகற்றி மற்று
மித்தரைப் பாவநீக்கி யிரட்சணை புரிகின்று, ரிங்
கொத்தசை வின்மை யார்ந்த வுறுதிவாப் பொருளு மாட்ட
மெத்துறப் புரிவார்; மாண்ட வவியன் வாழ்வான் மருத்திர்.

(இ-ள்.) பகலபிமானி தேவதையாகிய மித்திரனும், இரவபிமானி தேவதையாகிய வருணனும், காலைமாலை ஸந்திகளுக்கபிமானி தேவதையாகிய அர்யமானும், கெட்டுப்போகும் பொருள்களை நாசமுறவிலக்கி இவ்வுலகத்திலுள்ள பாபங்களை நீக்கி யிரட்சிக்கின்றார்கள். சலிக்காமல் உறுதியாயுள்ள பொருள்களையும் சலிப்பிப்பார்கள். மருத்துக்களே! சிறந்த அவிப்பொருள்களையளிக்கும் யஜமானன் வாழ்வையடைவான்—(எ-று.)

9. அன்மையிற் றூரத் தேனு மணைந்தயா மெவரு முங்க
ளுண்மையார் பலத்தை பெய்தோ, மருதர்காள்; வீரமார்ந்த
துண்மையி னவர்க ளோங்கித் தீரராய்ப் பகைவர்தம்மை
யண்மி யர்ணவத்தின் றன்மை யனையராய்ச் சூழ்ந்திட்டாரே.

(இ-ள்.) மருத்துக்களே! சமிபத்திலும், தூரத்திலாயினும் உள்ள யாங்கள் உங்களுடைய உண்மைப்பலத்தை யடைவதில்லை. வீரம் நிறைந்த பலத்தவர்களான அம்மருத்துக்கள், சமுத்திர ஜலம் வியாபித்துச் சூழ்வது போலச் சத்துருக்களை நெருங்கிச் ,சூழ்ந்தார்கள்—(எ-று.) முதலிரண்டடியை முன்னிலையாகவும் பின்னிரண்டடியைப் படர்க்கையாகவுங் கூறினர்.

10. இன்றியா மிந்திரற்குப் பிரிய வுத்தமராய் நிற்க;
வென்றியை மர்யனோடும் விளம்புவ மறுநாள்; யாங்கள்
முன்பும் வன்மையி னோடுற் றோம், புதுவலி தினமுமெய்க்க;
முன்புறு வீரர் தம்முட் பெரியவ னெம்மோ டேய்க,

(இ-ள்.) இன்றைக்கு யக்ஞஞ்செய்யும் யாங்கள் இந்திரனுக்குப் பிரியதமர்களாக விருக்கட்டும். நாளைக்கு இதர ரித்விஜர்களாகிய மர்த்தியர்களோடு இந்திரனுடைய ஜயத்தைக் கூறுவோம். யாங்கள் முன்னரும் பலத்தோடி

ருந்தோம். நாள்தோறும் புதிய பலம் எங்களை யடையட்டும். வலிமை மிகுந்த வீரர்களில் மகிமை வாய்ந்தவனான இந்திரன் எங்களுக்கு அநுகூலஞ்செய்ப வனாய் எங்களோடிருக்கட்டும்—(எ-று.) யுத்தந் தொடங்குவதற்கு முன் கூறிய செய்யுளிது போலு மென்பர் மேனாட்டாசிரியர்.

11. மருதர்காளிப் போற்றும்மை யின்பத்தின் வை துவிக்கல்;
கருதுமிவ் விசையும், மத்தமூட்டுவோர்வரத்தைக்காண் போர்
சுருதியு, முடல் வளர்க்க வெண்ணியே தோய்க; யாமுங்
கருதிய வுண்டி வன்மை நெடும்பகல் வாழ்வுங் காண்க.

(இ-ள்.) 166ம் சூக்த விறுதியில் உரை கூறியுள்ளது காண்க—(எ-று.)

வருக்கம் 5.

## 168. மண்டலம். 1. அநுவாகம். 23. சூக்தம். 4.

10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: 1–7 ஜகதி, 8–10 திருஷ்டுப்; தேவதை: மருத்துக்கள்.

(வேறு.)

1. அருகினுமை மகந்தோறு மடைந்துள்ளோன்
விரைவாக வடையா நின்றான்
பெருகு பயன் றனைத்; தேவர்தமை வணங்கு
மவன்கருமம் பிறங் கெல்லாமுங்
கிருபையுடன் கைக்கொள்வீர்; ஈருலகும
பெருங்காவல் கிளர்ந்து வாழ்வா,
னரியதுதி கொண்டும்மை யிங்கெமை நோக்கிப்
போதுற யானழைவிப்பேனே.

(இ-ள்.) (மருத்துக்களே!) உம்மைத் தனது யாகங்கடோறு மடைந்துள்ள யஜமானன் மிகுந்த லாபத்தை விரைவாக வடைகிறான். தேவர்களை வணங்கு மவனுடைய கருமங்களெல்லாவற்றையும் நீங்கள் அன்போடு ஏற்றுக்கொள்வீர்கள். இவ்வானம் பூமியென்று மிரண்டுலகங்களும் பெரிய பாதுகாப்போடு வாழ்வை யடையும் வண்ணம் அரிய ஸ்தோத்திரங்களால்நீங் கள் எங்களை நோக்கி வருமாறு யான் உங்களைத் திருப்புவேன்—(எ-று.) வடமொழி இருக்கின் முதலடியிற் பதங்கள் சிதைந்துள்ளன வென்றும், அதனால் இம்மொழிபெயர்ப்பு உத்தேசமாகச் செய்ததாகு மென்றும், இவ்வுண்மையை மோட்சமூலரது 'கீழ்நாட்டுப் புண்ணிய நூல்கள்' 32-வது புஸ்தகம் 281-வது பக்கத்தில் அறியலாமென்றுங் கூறுவர் மேனாட்டாசிரியர்.

## மண்டலம் 1 சூக்தம் 168.

2. உரு நலத்தோர் தாந்தோன்றித் தம்பலமே
பெருத்தவர்க ளோங்கன்னத்தோ
டிருந்துறக்க வொளியினையு முனுக்குபவர்
தோற்றுகிற ரெண்ணவொண்ணுப்
பெருந்திரைக ணீர்மீது செல்லுதலி
னருகுறுமப் பெட்பார்காலத்
தருநமங்கள் பெறத்தக்கோர் காளையெனப்
பசுவெனவே யணையு மன்னுர்.

(இ-ள்.) நல்ல ரூபத்தோடு கூடியவர்களும், அநன்யஹேதுகர்களாய்த் தாமே பிறந்தவர்களும், தமது பலமே பெருத்தவர்களும், அன்னத்தையும் ஸ்வர்க்கவொளியையும் அளிப்பவர்களும், ஆயிரக்கணக்கான அலைகள் வெள்ளத்தின்மீது செல்லுவதுபோல அருகிலுறு மக்காலத்து வணங்கத்தக்கவர்களும், காளையைப்போல மழை பெய்விப்பவர்களும், பசுவையொத்தவர்களுமான மருத்துக்கள் உற்பவிக்கிறுர்கள்—(எ-று.)'அருகுறுமப்பெட்பார் காலத்தரு நமங்கள் பெறத்தக்கோர்' என்றது தூரத்திலிருக்கும்பொழுதுபயங்கரமாகத்தோற்றினும் சமீபத்தில் வந்தபோது வணங்கப்பெறுவதால்ஸௌஜன்ய மாயிருக்கிறுர்களென்பதையுணர்த்து மென்பார் மேனுட்டாசிரியர்.

3. நிறைவாங்கத் தோடுறைந்து பிழிவுறுநற்
சோமமென நிறைந்த வுள்ளத்
துறைவார்கள் தோழமை கொளன்பினெடு
மவ்விடத்தே யுவர்தந் தோளில்
நறைவாய்ந்த குழலியர்தங் கணவர்புயம்
பற்றுதலி னலக்கச் சத்தி
யுறைவாய்ந்த, தவர்கரத்திற் கட்கமொடு
வலயமது முறையு மாதோ.

(இ-ள்.) பிழிவதற்கு முன் தண்ணீரால் நனைக்கப்பட்டு ஊறியுள்ள அவயவத்தோடுகூடிய ஸோமமானது பூரணமாயிருப்பதுபோலத் திருப்தியால் நிறைந்த இதயத்தோடு கூடிய மருத்துக்கள் அன்புநிறைந்த சிநேகிதர்களைப்போல அவ்விடத்துத்தங்குவார்கள். கணவர்களது தோளை யுவதிகளான நாயகிகள் பற்றித்தொங்குவதுபோல அவர்களது தோளிற் சத்தியானது உறைந்தது. அவர்களது கைகளில் வாளும் வலயங்களும் தங்கும்—(எ-று.) ஸ்திரீதனது புருஷன் றேளிற் றெருங்குமுவமையை மண்.1 சூக்.167செய். 3லும் பார்க்க.

4. சுயமாகக் கூடியவர் விண்ணிலிருந்
தலைவின்றித் தோயா நின்றுர்;
நயமாரு முங்கசையி னுந்தமைத்தூண்
டிக்கொண்டு நாடும் வேக

## அஷ்டகம் 2 அத்தியாயம் 4.

மயமாவிர், மரணமிலிர்; மகந்தோறு
மணைபவர்கள் மருதர் பாவக்
கயமார்ந்தோ ரொளிப்படையார் திடப்பொருளே
யம்மவற்றைக் கடிந்திட் டாரே.

(இ-ள்) தாங்களே கூடிக் கொண்டவர்களாகிய மருத்துக்கள் விண்ணி னிடத்திலிருந்து அனாயாசமாக விங்குவருகிறார்கள். மரண மில்லாதவர்க ளே! உமது கையினால் நீங்கள் உங்களையே தூண்டிக் கொண்டு வேகப்படுத் திக் கொள்ளுகிறீர்கள். யாகந் தோறும் வருபவர்களும் பாபக்ஷயத்தோடு கூடியவர்களும் (பாபமற்றவர்களும் என்றபடி) பிரகாசம் பொருந்திய ஆயுதத் தோடு கூடியவர்களும் ஆனமருத்துக்கள் திடமான வஸ்துக்களையு மழித்தார் கள்—(எ-று.) படர்க்கை முன்னிலை மாற்றைநோக்குக. கசை என்பதற் குச் சவுக்கென்னுது ஸ்துதிமொழி யென்பார் ஸாயணர்.

5. மின்னொளிரும் படைவாய்ந்தமாருதர்கா
ளும்முளெவன் விழைந்து தானே
கன்னமிரண்டினை நாவாற் கதலுறுத்த
லெனவசைப்பான்? கதிர்க டோன்று
மன்னமுறு பயிர்களினை வளர்த்திடுமந்
தரவறநி, னவையு மார்க்க
முன்னியக சேய்கின்ற வேதசனிற்
பலவிதமா யுறுத்து வானே.

(இ-ள்.) மின்னலாகப்பிரகாசிக்கும் ஆயுதத்தைப் பெற்ற மருத்துக்க ளே! உங்களுக்குள் எந்தப் புருஷன் உங்களை நாக்கினால்இரண்டு தாடைகளை யும் அசைப்பதுபோல அங்கு மிங்குமோடச்செய்வான்? கதிர்களோடு கூடிய அன்னப்பயிர்களை வளர்க்கும் அந்தரிக்ஷ மேகத்தை விரும்புவதுபோல உம்மையடையும் மார்க்கத்தை எண்ணிப், பகற்காலத்திற் சூரியனைக்கொண்டு வருங் குதிரையாகிய எதசனைப்பலவாறு முயக்குவதுபோல யஜமானன் பல விதத்துதிகளால் உங்களை யியக்குகிறான்—(எ-று.) இச்செய்யுளில் அநேக சொற்கள் கருத்துறைவதால் ஸாயண ரிச்செய்யுட்குக் கூறும் உரை உத்தேச வுரைதானென்பர் வில்ஸன் என்பவர். எதசனைப்பற்றி மண். 1 சூக். 121 செய். 13 நோக்குக.

வருக்கம். 6.

6. மருதர்கா ளெங்கிருந்து நீர்வருவிர்?
இவ்வுலக மகத்வம் வாய்ந்தே
யாருவதின் மூடிவோடு முதலெங்கே
பதரைப் போலடுக் கணைந்த
நீருறையும் படலத்தைச் சலிப்பித்து
வச்சிரத்தை நேடி யோச்சி
யேரினொளி வீசுகின்ற வர்ணவத்தை
வற்றுறக்கி மிழிக்குங்காலே,

## மண்டலம் 1 சூக்தம் 168.

(இ-ள்.) மருத்துக்களே! நீங்கள் எங்கிருந்து வருவீர்கள்? அடுக்காகத் தண்ணீர் நிறைந்த மேகப் படலங்களைப் பதரைச் சலிப்பிப்பது போலச் சலிப்பித்து, வச்சிராயுதத்தினால் காந்தி வீசும் சமுத்திரமாகிய கருமுற்றிய மேகத்தைத் தன்னிடத்துள்ள நீரெல்லாம் வற்றிப் போகும்படி கீழ் விழ்த்தும் போது மஹத்துவம் பொருந்திய இவ்விருஷ்டியுதக வுலகமாகிய அந்தரிட்சத்தின் முடிவு முதலு மெங்கே?—(எ-று.) அத்ரிணா வஜ்ரேண வென்பார் ஸாயணர். மலையிலிருந் தென்றூர் மேனாட்டாசிரிர். அர்ணவம், சமுத்திரம், ஈண்டு கருமுற்றிய நீலமேகத்தைக்குறித்தது. ரஜம், உலகம், விருஷ்டியுதகலோகம் அதாவது மழைநீர் தங்கும் உலகம் அல்லது அந்தரிட்சமாம்.

7. உங்கொடை போன்றது துணையோ டொளிவாய்ந்த
துயர் மருநீர், சுகத்தையுற்ற
தங்கமுறு பக்குவமார் பயனுறைந்த
கேதிலரையடக்கிக் கொல்வ,
திங்குமது செல்வமும் வள்ளன்மையனின்
கொடைபோன்ற தேயும் போற்றுன்.
மங்கலங் கொள்வது விரைவினேகுவதா
லசுர்யையது வன்மை போனறே.

(இ-ள்.) மருத்துக்களே! உமது விருஷ்டி யாதி விஷயங்களாகிய செல்வம் உமது கொடையைப் போலப் பிரவித்த மானது, சகாயத்தோடு கூடியது, பிரகாசிப்பது, சுகத்தைத் தருவது, தாதாவினது தட்சிணை போன்றது, ஸ்துதிகளால் மங்கலத் தன்மை பெற்றது, விரைவிற் சேருவது, அஸுரஸ்திரீயினது பலத்தைப் போல வெல்லா வற்றையும் அடக்குஞ் சக்தி வாய்ந்தது (இத்தகைய செல்வ மெம்மதாகட்டு மென்பது பொருளென்பார் ஸாயணர்.)—(எ-று.) அஸுர்யா இவ ஜஞ்ஜதீ யென்பதற்கு அஸுர ஸ்திரீ யெப்படி வேறொருவனது ஸொத்தை யபகரித்து மற்றொருவனுக்குத் தானஞ்செய்வாளோ அதுபோல இதுவும் மேகத்தின் நீரை யபகரித்து உலகத்துக்குத் தரும் சக்தி பெற்றது என விரித்துரைப்பார் ஸாயணர்.

(வேறு.)

8. பவிகளைக் கண்டு சிந்து ப்திஹுறச் சலிப்ப, மேகத்
திவவுறு மொலி கிளர்ச்சி யடைந் திவண் முழங்கும் போது;
புவியினின் மருதர் நெய்யை யூற்றிப் போஷிக்கு மக்கா
லவையுற நகுந் தடித்து நாடிக்கீழ் நோக்கி மாதோ.

(இ-ள்.) மேகத்தினது இடியொலி முழங்கும் போது, மருத்துக்களது வச்சிரப் பழுக்களைக் கண்டு, ஒழுகுந் தன்மையுள்ள நீர் எதிர்க்குரலவித்துச் சலிக்கும். மருத்துக்கள் பூமியின்மேற் சாரநிறைந்த நெய் போன்ற மழை நீரைப் பெய்வித்து அப்பூமியைப் புஷ்டியடைவிக்கும் போது மின்னலானது கீழ் நோக்கிப் பிரகாசிக்கும்—(எ-று.) தடித்து, மின்னல்.

9. பொருஞ் செருவதற்காப் பெற்றுள் பிருசிநிக்தா யொளியின்
வருங் குழுவினர் மருத்துச் சேனையை; மருவு மின்னுர்
பெருஞ்சல தரத்தைப் பெற்று ரோருரு வெனப் பயின்றோர்;
விரும் பனப் பயிரைப் பின்னர் மேதினி மீது கண்டார்.

(இ-ள்.) பல நிறத்தோடு கூடிய பிருச்சி யென்னுந் தாய், பெரிய யுத்தத்தில் மேகத்தைச் சயிப்பதற்காக ஒளியோடு கூடிச் சலிப்பவர்களாகிய நாற்பத்தொன்பது -மருத்துக்களது சேனு ஸமூகத்தைப் பெற்றுள். ஒரே ருபத்தோடு பயின்றவர்களாகிய விம்மருத்துக்கள் பெரிய மேகத்தைப் பெற்றனர். அதன் பிறகுதான் எல்லாராலும் விரும்பப்படும் அன்னப் பயிர்களை (ஸர்வ ஜனக்களும் பூமியின் மீது) கண்டார்கள்—(எ-று.) மேதினி மீது ஒன்பது வடமொழி மூலத்திலில்லை. பலத்தை யளிக்கும் உணவுக்காக அம் மருதர்களே தங்களைச் சுற்றிலும் பார்த்தார்கள் என்பர் மேனுட்டாசிரியர்.

10. மருதர்கா, ளிப்போற் றும்மை யின்பத்தின் வைகுளிக்கல்;
கருது மிவ்விசையும், பதசமூட்டுவோர் வ்ரதத்தைக்காண்போர்
சுருதியு, முடல்வளர்க்க வென்னியே தோய்க; யாமுங்
கருதிய வுண்டி வன்மை நெடும்பகல் வாழ்வுங் காண்க.

(இ-ள்.) 165-வது சூக்தத்தின் இறுதியில் இச்செய்யுளின் உரையைக் காண்க—(எ-று.)

வருக்கம். 7.

## 169. மண்டலம். 1. அநுவாகம். 23. சூக்தம். 5.

8 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: 2 சதுஷ்பாதவிராஜ, ஏனைய வை த்ருஷ்டுப்; தேவதை: இந்திரன்.

1. மகத்துவ ரிவர்களேனு மிந்திர விடவே மாட்டாய்;
மகத்துவர் கோபதினறு மதித்து நீகாததல் மான
வுகாமினின் மருதரோர்வாய், வேதனே, யுவர்கள் சேர்க்குஞ்
சுகத்தினைத் தருவா யுன்றற் ரேய்ந்தவே நார மிக்க.

(இ-ள்.) இங்கு வந்துள்ள மருத்துக்கள் உன்னை யபேட்சிக்காத மகத்துவம் வாய்ந்தவர்களாயினும், இந்திரனே, நேசமுறைமையினால் நீ யவர்களைக் கைவிடமாட்டாய். மகத்துவம் வாய்ந்தவர்களது கோபத்தினின்றும் நீ காப்பாற்றுவதுபோல, மருதர்களை யடக்கி யாளுமவனே, பிரம்மனைப் போன்றவனே, அம்மருத்துக்கள் கூட்டுவிக்கும் மழைச் சுகத்தையு மளிப்பாயாக. ஏனெனில் உன்னு லளிக்கப்பட்டனவே உத்தம பிரியத்தோடு கூடியவையாம் -(எ-று.)

## மண்டலம் 1 சூக்தம் 169.

(வேறு.)

2. இந்திரனே விசுவஜன மேய்ந்தவர்கள் மர்த்தியருக்
கந்தமுற மழைதருவோ ரருஞானத் தோர்களுனை
முந்துறவே கூடினர்கள்; மொய்த்த மருத்துவர் சேனை
நந்துபொரு டனைப்போரிற் பெறக்களிப்பி னண்ணினதே.

(இ-ள்) இந்திரனே! எல்லாக்கிருஷிகர்களும் தமக்குளடங்கப்பெற்றவர்களும், மர்த்தியர்களுக்கு மழையைத்தருபவர்களும், அரிய ஞானத்தோடு கூடியவர்களுமான மருத்துக்கள் உன்னைச் சூழ்ந்து கூடினார்கள். கூட்டமாய் நிறைந்த மருத்துக்களினது சேனை யுத்தத்திற் காந்தி மிகுந்த செல்வத்தை யடைய சந்தோஷ மனத்தோடு செல்கிறது—(எ-று.) முதற் செய்யுளில் இந்திரன் மருத்துக்களை விடாத தன்மையைக்கண்ட கவி இச்செய்யுளில் மருத்துக்கள் இந்திரனை விடாத தன்மையைக்கண்டு கூறுகிறார் என்பர் ஸாயணர். நண்ணினதே என்றது நிகழ்காலப்பொருட்டில் வந்த இறந்த காலம்.

(வேறு.)

3. உனது கைப்படை யெமக்கா வோங்கிய, தகியே, பூர்வ
வனமழை மருதர் வீழ்த்தார்; அங்கியு மகிழ்வி னென்றுங்
தனமளி கருமத்திற்காத் தயங்கினன்; அவியூண், தீவை
வனம் பொறுத் திடுதலென்ன, மகத்தவர் தாங்கா நின்றார்.

(இ-ள்.) இந்திரனே! உனது ஆயுதவிசேஷமாகிய வச்சிரம் எங்களுக்காகச் சிறந்து நின்றது. நெடுநாளாகச்சேர்ந்து கொண்டு வந்த அழகிய மழைநீரை மருதர் (மேகத்தினின்றும்) விழுமாறு புரிந்தார். (செல்வந்தரும்) கருமத்துக்காக அக்கினியும் ஒளிவீசித் திகழ்ந்தான். தண்ணீர் ஒரு தீவைச் சூழ்ந்து ஏந்துவதுபோல யஜமானர்கள் சருபுரோடாச முதலிய அவியுணவை யேந்துகிறார்கள்—(எ-று.) ஆபோ ந த்வீபம், என்பதற்கு இரண்டு பார்சுவத்திலு மோடுந் தண்ணீரோடு கூடிய பர்வதத்தைப்போலவென்பார் ஸாயணர். ஆனால் தண்ணீர் ஒருதீவைத்தூக்கிப் பிடிப்பதுபோல வென மொழிபெயர்ப்பர் மேனாட்டாசிரியர்.

4. இந்திர வெமக்குச் செல்வ மீக; வுத்தமப் பலத்தோ
டந்துறுங்கொடையோன்போன்றவள்ளனுன்றனைத்துதிப்போ
முந்துற வாயுவுன்னை விழைகுவர் மது நிறைந்தே
யந்தமார் தனத்தை யூட்டு மாறெனவவியுண்பிப்பார்.

(இ-ள்.) இந்திரனே! எங்களுக்குச் செல்வத்தை யளிப்பாயாக யாங்களும் உத்தம பலத்தோடு கூடிய பசு முதலிய தட்சிணைகளை யளிக்கும் யஜமானனைப்போன்ற தாதாவாகிய உன்னைத் துதிகளாற் சந்தோஷப்படுத்துவோம். சீக்கிர வரப்பிரதனான வாயுவைப் போன்ற வுன்னை விரும்பும் யஜமானர்கள் மதுரமான பால் நிறைந்த ஸ்தனத்தை குடிப்பிப்பதுபோல அவியுண்டிகளை யுனக்கு ஊட்டுவார்கள்—(எ-று.)

## அஷ்டகம் 2 அத்தியாயம் 4.

5. இந்திரவுனது செல்வ மின்ப மீவதிற் சிறந்த,
நிந்தன யக்ஞ கன்ம மியற்றுவோன் யாவனெனு
நந்திய நடை யோனுக்கு; மருத்துவர், பூர்வகாலத்
தெந்தமை யுற விச்சிக்குந் தேவர் மீச்சுகத்தை யிக.

(இ-ள்.) இந்திரனே! (அக்கினியை வளர்த்துச் செய்யும்) யக்ஞ கன்மங்களைச்செய்து நேர்மையான நடையி லொழுகுபவனுக்கு உனது செல்வ விசேஷமானது ஸந்தோஷத்தை யளிப்பதிற் பேர்போனது. பூர்வ காலத்திலிருந்து எம்மை யடைய விச்சிக்கும் தேவர்களாகிய மருத்துக்கள் எங்களுக்கு நற்சுகத்தை யளிக்கட்டும்—(எ-று.)

### வருக்கம். 8.

6. மழைதரு மனிதர் தம்மை யிந்திர மகிமை யோரை
யழைதரல்; பிதுவி யில்லத் தாற்றுக முயற்சி; யின்னர்
விழைதரப் பரந்த மூல மேவிய மான் போர்மார்க்கத்
தழைதர நின்ற மன்னனுரப் படையொத் திருற்ற.

(இ-ள்.) இந்திரனே! மழையைத்தரும் நரர்களாகிய மருத்துக்களை மகத்துவம் வாய்ந்தவரைக் கொண்டுவருக. பூமியிலுள்ள யக்ஞ கிரகங்களில் அவியுணவென்று முயற்சியைப் புரிக. (அல்லது அந்தரிட்ச வுலகத்திலுள்ள மேகத்தோடு யுத்தம் புரிக வென்னலும் ஒன்று.) ஏனெனில் இம்மருத்துக் களது விசாலமான மார்போடு கூடிய அசுவங்கள், ஒரு அரசனது பலத்தைத் தோற்றுஞ் சேனையானது யுத்த மார்க்கத்தில் நிற்பதுபோல நிற்கலுற்றன —(எ-று.) பிதுவி, பிருதுவி, பூமி, அந்தரிட்சத்திற்கும் ஒரு பெயர்.

7. நிரனு மர்த்தியன்றன் காவலர் பகைமேற் சென்று
சிறப்பாவ மாற்றுஞ் சிதடனை யென்னச் சாடுங்
கோரர் பன்னிறத்தோ ரோட்டங் கூடிய நடைமருத்த
ரேரினி னுடன்வருகை யெஞ்செவிபுற்றே யோங்கும்.

(இ-ள்.) நிரனுகிய மர்த்தியனுடைய காவலோடு கூடியவனு கிய பகைவன் மேற் பாய்ந்து, அதர்மவானை யழிப்பதுபோல வழிப்பவ ரும், கோரர்களும், பல நிறத்தோடு கூடியவர்களும், வேகமாக வோடிவரு பவர்களுமாகியமருத்துக்களுடைய உடன்வருகையானதுகேட்கப்படுகிறது —(எ-று.) இந்திரனேடுடன் வருகையென்க. இச்செய்யுள் உத்தேச மொழி பெயர்ப்பே. மேனுட்டாசிரியர் பின்வருமாறு இந்த ரிக்கை மொழிபெ யர்ப்பர்: "தன்னை நேசிப்பவர்களோடு யுத்தம் செய்யும் மர்த்தியனைப்பாவி யின் மேற் பாய்வதுபோலப் பாய்ந்து முறியடிப்பவரும், கோரரும், பலநிற வொளிகளை வீசுபவரும், வேகமாகச் செல்பவருமான மருத்துக்கள் முன் னேக்கிவருமொலி கேட்கப்படுகிறது." என்பதாம்.

## மண்டலம் 1 சூக்தம் 170.

8. மனமுயர் வெய்த வேந்தே மாருதரோடு தானந்
தனமெலாம் பொதிந்த தாக்கள் முன்னுற நின்ற நீசு;
கனமுறு துதிசார் தேவர் தம்மொடு துதி பெற்றாய்நீ;
யனநெடும் பகல் வாழ்வீவ தடைகுவந் தேவ யாமே.

(இ-ள்.) இந்திரனே! எங்களுடைய மனது உயர்வையடைய மருத்துக்களோடு கூடி நின்று, எல்லாச் செல்வங்களும் நிறைந்ததும் பசுக்கள் முன்னின்றதுமான தானத்தைத் தருவாயாக. தேவனே! துதிக்கப்படு மித்தேவர்களோடு நீயும் ஒருவனாகத் துதிக்கப்பெற்றாய். யாங்கள் நெடுநாளுயிரோடிருக்கும் பலத்தை யளிக்கும் உணவைப்பெறுவேமாக—(எ-று.)

வருக்கம். 9.

## 170. மண்டலம் 1. அநுவாகம் 23. சூக்தம் 6.

5 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: 1,3, 4 இந்திரன், 2, 5 அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: 1 ஜகதி 2-4 அநுஷ்டுப்; 5திருஷ்டுப்.தேவதை: இந்திரன்.

இச்சூக்தம் இந்திர அகஸ்திய ஸம்வாதமாயுள்ளது.

(வேறு.)

1. இன்றைக்கே தில்லையது நாளைக்கு
மில்லையாகும்; இந்த வுண்மை
யென்றைக்கு நிரூபிக்க வேலாத
வற்புதத்த தேவனே யோர்வான்
பின்றைக்கும் வேறொருவன் சித்தமதிற்
புகுந்து மிகப் பிறங்குமஃதை?
அன்றைக்கே யழிந்தது நம்முள்ளமதிற்
கொண்டிருந்த வரு நினைப்பே.

(இ-ள்.) [தூக்கப்படுவதுபோற் சொல்லப்படுகிறது. இந்திரன் கூற்று] இன்றைக்கில்லாதது நாளைக்கு மில்லையாம். ஒருவராலும் நிரூபிக்கமுடியாத அற்புதம் வாய்ந்த இந்த வுண்மையை, வேறொருவனுடைய சித்தத்திற் புகுந்து ஸஞ்சரிப்பதை யெவனறியமுடியும்? எம்முடைய வுள்ளத்தில் யாங்கொண்ட நினைப்புக்களெல்லா மன்றே யழிந்தன—(எ-று.) இந்திரன், மருத்துக்களுக்காக வேற்பட்ட யக்ஞஹவிசுகளைக் கையேற்றதினால் நொந்து, மருத்துக்கள் பிறனுடைய சித்தவிருத்திக்குட்பட்டு நடக்கவேண்டி வருவதையும், தங்களெண்ண நிறைவேறாதுபோனதையு மெண்ணித்துக்கிக்கும் செய்யுளிது வென்பார் மேனாட்டாசிரியர்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் .4

(வேறு.

2. இந்திரா வெமைக் கொல்லுவா னெண்ணலே; லுனது
சொந்த சோதர ராவர்கள் மாருத, ரவரோ
டந்தமான நற்சார்பினைக் கற்பித் தேயவினாக;
நந்து போரினி னெங்களை வதைக்க நாடிடலே.

(இ-ள்.) இந்திரனே! எம்மைக்கொல்ல விச்சிப்பதெற்றுக்கு? மருத்துக்கள் உனது சொந்தசகோதரர்களாம். அவர்களோடு சிநேகபாவத்தைக் கற்பித்துக்கொண் டணைவாயாக போரில் எங்களைக் கொன்றுவிடாதே—(எ-று.) இது அகஸ்தியன் கூற்று. சகோதரர்கள் என்றதை அதிதியின் மக்கள் இந்திரனும் மருத்துக்களும் மற்ற தேவர்களும் என்னும் புராண வசனப்படியுங் கொள்ளலாம் இந்திரனாலளிக்கப்படும் போகங்களைத் தாங்குவதாற் சோதரர்களென்பதுமொன்று.

3, தம்பியே யகத்திய விவ னெஞ் சுசா வாயு
மிம்ப ரெங்கமைப் புறக்கணித் துறைவதே னுனது
பம்பு நன்மனப் பண்பினை யறிகுவ, மெய்யே
யெம்புடை பொரு பொருளுமே யிமைய்பை யேயல்லை.

(இ-ள்.) [இது இந்திரன் கூற்று] பிராதாவாகிய அகஸ்தியனே! நீயெங்கள் தோழனுயும் எம்மை யசட்டைப்பண்ணக் காரணமென்ன? உன்னுடைய மனப்பண்பையாம் அறிவோம். எம்மாட்டு ஒருபொருளுயியைக்க வுண்மையாகவே நீ விரும்புவதில்லை-(எ-று) இதுவும் மருத்துக்கள் தம்மை யகஸ்தியன் லட்சியஞ் செய்யாததன் நிமித்தம் குறைகூறியதாகுமென்பர் மேனுட்டாசிரியர்.

4. வேதியை யலங்காரமாக் குயிற்றுக; விழைந்து
நீதியி னெரி முனருற நிலத்திட மூட்டித்
தீதிலாவகைத் திகழ்விக்க; மரிப்பின்மை யுணர்த்து
மாதரத்த தெக்கியத்தினை மனுவிப்ப மாங்கே.

(இ-ள்) [இது இந்திரன் கூற்றென்றும், அகஸ்திய வாக்கியமுமாமென்றுங் கூறுவர்.] ரித்விஜர்களே! யாக வேதியை யழகாகச் செய்வீர்களாக. அக்கினியை முன்னிடத்தில் மூட்டிப் பிரகாசிக்குமாறு செய்க. மரணமற்ற தேவத்தன்மையை ஞாபகமூட்டும்யக்ஞத்தை யாங்களிருவரும் அவ்விடத்துப் பொருந்துமாறு செய்வோம்—(எ-று) இருவரும் என்றது மூலத்திலுள்ள வினை இருமைச் சொல்லாயிருப்பதைப்பற்றி. இந்திராகஸ்தியர்களாகிய யாங்களிருவரும் என்றபடி.மன்னுவிப்பம் மனுவிப்பமென இடைக் குறைந்தது.

(வேறு.)

5. வசுபதியாகும் வேந்தே வசுக்களுக் கிறைவனியே;
இசைவுறு நண்பர் தம்மைத் தாங்குவாய் நண்பர்க்கிச;
நசையொடு மருதர்மாட்டு நட்புறு மொழியுரைப்பாய்;
இசையுமவ் விருதுதோறு மேய்க்குமவ் வவி யுண்பயோ.

## மண்டலம் 1. சூக்தம் 171.

(இ-ள்.) [இது அகஸ்தியன் இந்திராமருத்துக்களை யிணைவிக்குங் கூற்று.] அவித்தனங்களுக்குப்பதியாகிய இந்திரனே! நீ எல்லாச்செல்வங்களுக்கு மீசனும். மித்திரபதியே! நீ எல்லா நண்பர்களையும் தாங்குவாய். ஆசையோடு மருத்துக்களோடு ஸ்நேஹவசனங்களைக் கூறுவாயாக. ரிதுக்களோடு மளிக்கப்படும் சருவாதியவுணவுகளை யுண்பாயாக—(எ-று.) சரு, சமைத்த வுணவு.

### வருக்கம். 10.

## 171. மண்டலம். 1. அநுவாகம். 23 சூக்தம். 7.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: 1, 2 மருத்துக்கள், 3-6, மருத்துக்களோடு கூடிய இந்திரன்.

1. இந்நமத் தோ டுந்தம்மை யெய்துவேன் யான்; சூக்தத்தால்
வெம்பெறப் பகையை வரட்டு மாருதீர், வேண்டுவே னும்
நந்திய வருண் மனத்தை; நற்றுதி யுவப்பிக்குந் நீ
ரந்துறு கோப மாற்றி யவிழ்த்திட ரசுவந்தம்மை.

(இ-ள்.) இந்த நமஸ்காரபூர்வமானயவியுணவோடு மும்மையானடைவேன் பகைவர் புறங்காட்டியோடுமாறு அவர்களை யிம்சிக்கும்மருத்துக்களே! நல்ல ஸ்தோத்திரத்தால் உமது அநுக்கிரஹ புத்தியை யாசிப்பேன். நல்ல ஸ்தோத்திரங்களாற் சந்தோஷப்படுத்தப்படும் நீர் உம்மை யடையுங் கோபத்தை யகற்றி யுமது அசுவங்களை யவிழ்த்து விடுவீர்களாக—(எ-று.)

2. மருதர்கா ளுமக்கித்தோம நமத்தொடு மனத்தி னெந்த
மிருதயஞ் சமைத்த தியவி யைந்தது; தேவர்கா ணீர்
தரமொடு மதனைத்தாங்கு முள்ள வோகையினிற் சாரீர்;
வரமுற நீரே யாற்று நமத்தினை வளர்ப்பீ ராவீர்.

(இ-ள்.) மருத்துக்களே! யாங்கள் மனப்பூர்வமாய் எங்களது ஹிருதயத்திற் செய்த விந்தஸ்தோமம் நமஸ்காரத்தோடு (அல்லது நம இத்யன்ன நாமவென்னும் வாக்கியப்படி அவியுணவோடு) உமக்களிக்கப்பெற்றது. தேவர்களே! அதனைத்தரிக்கும் உள்ளக்களிப்போடு இங்கு வருவீர்களாக. யஜமானர்களது நமங்களை (வணக்கம் அல்லது அவியுணவென்னு மிரண்டிலெதனையேனுங் கொள்ளுக.) வளர்ப்பவர்கள் நீங்களே—(எ-று.)

3. துதிபெறுமருதரெம்மைச் சுகத்தினிலிவையக்க; மேலுந்
துதிபெறுமகவானெங்குஞ் சுகந்தருத்தமனுப்தோய்க;
அதிபரமோன்னதத்தில், மருதர்கா ளழகோ டின்பம்
நிதிபெறும் வெற்றி யின்ன நிகழ்த்துக வருநாளெல்லாம்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 4.

(இ-ள்) ஸ்துதிகளைப் பெற்றவர்களாய் மருத்துக்கள் எங்களைச் சுகத்தினி லமர்த்துக. துதியைப்பெற மிந்திரனும் எங்களுச் சுகத்தைத்தரு முத்தமனாக விருக்கட்டும் மருதர்களே! எங்களுக்கு வரும் நாட்களெல்லாம் ஒன்றுக்கொன்று உயர்வாகவும், அழகாகவும், இன்பத்தைத் தருவனவாகவும், ஜயப்பிரதமாகவு மிருக்கும்படி செய்க—(எ-று.) கோம்யாதி வநாதி என்பதற்கு அழகிய மரங்களைப்போல வென்பர் கிராஸ்மானென்பவர். வனம் ஈட்டியென ஆகுபெயராற் கொள்கவென்பார் லுட்விக் என்பவர். எங்கள் மரங்கள் (அதாவது ஈட்டிகள்) எங்களுடைய சௌரியத்தினால் எப்பொழுதும் 'நேராக நிற்க.' என மொழிபெயர்ப்பர் மோட்சமூலர். ஆனால் மேனாட்டாசிரியர் (Griffith) தனக்கு வேறுவிதமாக மொழிபெயர்க்குஞ் சக்தியின்மையினால் ஸாயண பாஷ்யத்தையே பின்பற்றிவநாநி என்பதை அஹாநி யென்பதன் விசேஷணமாகவே கொண்டுள்ளதாகக் கூறுவர்.

4. ஓடினே னிந்திரன்ற னுயர்வலிபதனி னின்றே
நீடிய பயத்தானிற்கு மியலின்றி, மருத்துவர்காள்
தேடியுந்தமக்கென்றுருஞ் சவி தயாராகிச் சேர்ந்த;
கூடியதொலைவினைத்குயிற் றனம்; பொறுக்கவெம்மை.

(இ-ள்.) மருத்துக்களே! இந்திரனுடைய பெரிய வலிமையைக் கண்டு, உடல் நடுங்க நிற்கு. மாற்றலின்றிப் பயந்தோடினேன். உங்களுக்கென நிறைந்த அவி தயாராயின. (இந்திர பயத்தால்) இவற்றைத் தூரத்தில் வைத்துள்ளோம். எம்மை க்ஷமித்து எங்களுக்குச் சுகத்தை யளிப்பீர்களாக—(எ-று.) இது அகஸ்தியன் மருத்துக்களது உணவை யிந்திர னுண்ணும்படி விட்டதற்காக அவர்களை மன்னிப்புக்கேட்ட செய்யுள் என்பார் மேனாட்டாசிரியர்.

5. உன்னபிமான முற்றோர் நித்தியம் வைகறூறு
மன்னுநற் கிரணந் தேர்வான் மருவிய வலியோய், காளை
யன்னவ, வுக்கிரத்தோர் மருத்துவ ரோடணைந்து
துன்னு முக்கிர, மொய்ம்பீவோய், புராதன கீர்த்திதோய்க்க.

(இ-ள்.) உனது அபிமானத்தைப் பெற்றவர்கள் தினமும் விடியற்காலத்தில் தோன்றும் கிரணங்களை யறியும் வண்ணம் பொருந்திய வலியுடையவனே! உக்கிரனே! பலத்தை யளிப்பவனே! புராதனமானவனே! உக்கிரம் வாய்ந்த மருத்துக்களோடு கூடி எங்களுக்குக் கீர்த்திவாய்ந்த வுணவை யளிப்பாயாக—(எ-று.)

6. நார் வலிபெருந்தோ ரோடு மிந்திர காக்க; நேயம்
மருதரோ டணைந்த கோப மாற்றுக; வளிபார் ஞான
மருவியாரோடு தெவ்வுவ வாட்டித் தாங்கிடுக; யாமுங்
கருதிய வுண்டி வன்மை நெடும்பகல் வாழ்வுங்காண்க.

(இ-ள்.) இந்திரனே! வலிமிகுந்த நேதாக்களாகிய மருத்துக்களோடு கூடி யெம்மைக் காப்பாயாக. அந்த மருத்துக்களிடத்து எற்படுங் கோபத்

தை மாற்றுவாயாக. ஞானவான்களாகிய அம்மருத்துக்களோடு எங்களது பகைவரை யடக்கி எங்களைத் தாங்குவாயாக. யாங்களும் உணவுப்பொருள் களையும் பலத்தையும் நீண்ட ஆயுளையும் பெறுவேமாக—(எ-று.)

வருக்கம். 11.

## 172. மண்டலம். 1. அநுவாகம். 23. சூக்தம். 8.

3 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: காயத்திரி; தேவதை: மருத் துக்கள்.

(வேறு.)

1. சித்திரத்திற் செறிகவும் யாமனம்;
சித்திரத்திற் செறிகவும் மூதிகள்,
மெத்து நற்கொடை மேவு மருத்துக்காள்,
தத்துகாந்தி யகியிற் சருவுவீர்,

(இ-ள்.) சோபன தானத்தோடு கூடியவர்களே! மருத்துக்களே! அகியைப்போலக் காந்தி வீசுமவர்களே! உமது வரவுஆச்சரியகரமாயிருக் கட்டும். உமது உதவிகளும் ஆச்சரியகரமாயிருக்கட்டும்—(எ-று.) யாம னம் வடமொழிப்பதம் கமநம், நடையென்பது பொருள். ஊதிகள் உதவிகள். அகி பாம்பு ஈண்டு வளைந்து வளைந்து செல்லும் மின்னலைக்குறித்து நின்றது.

2. தூர மேக லவ்வம் பும்மழகினை
யேரி மீனைப்பது சோபன வீகையிர்;
தூரமேக னீ ரோச்சத் தொடுத்திடுஞ்
சிரி னுற்ற கல் செய்ப மருதரே.

(இ-ள்.) சோபன வீகையோடு கூடியவர்களே! மருத்துக்களே! உம்மை யழகுபடுத்தும் அவ்வம்பு (எங்களினின்று) தூரத்திற் செல்லட்டும். நீங்கள் வீசுங் கற்கள் எங்கண்மேல் விழாது தூரஞ் செல்லட்டும்—(எ-று.)

3 திரண மென்னச் சலித்துச் செறியுமெம்
பரிசனங்களைப் பற்றிய வாதையிற்
பரிகரித்திடல் வேகத்தின், வள்ளல்காள்,
பெரிய வாழ்வுறத் தாக்குக பெட்பினே.

(இ-ள்.) சோபனதானத்தோடு கூடியவர்களே! துரும்பைப்போல அற்ப மாகச் சலிக்குமெமது புத்திர பிருத்யாதி ஜனங்களின் வாதைகளை நீக்கி ரட் சிப்பீர்களாக. எங்களுக்கு நெடுங்கால வாழ்வுறும்படி யெங்களைத் தாக்கி. விடுவீர்களாக—(எ-று.) த்ருணஸ்கந்தஸ்ய என்பதற்குத் துரும்பைப் போல அற்பமான வென்றது திரணஸ்கந்தன் என்னும் அஸுரன் அல்லது அரசனது என்னலும் ஒன்று. திரணஸ்கந்தனது ஜனங்களைக்கொல்லாது விலக்குங்களென்பது பொருள். இவனதுபெயர் வேறெங்கும் வரவில்லை.

வருக்கம். 12.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 4.

### 173. மண்டலம். 1. அநுவாகம். 23. சூக்தம். 9.

13 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: இந்திரன்

(வேறு.)

1. நபத்தினிற் பரவுஞ் சாம நாடியே யோர்ந்த வாறு
செபத்தினிற் பாட; யாங்கள்செறியொளிவின்னினேனுங்குஞ்
சுபத்திநரை யர்ச்சிக்கின்றோம், பாலினைத் தோய்க்கு மாக்க
ளபத்துரு வவை யிற்சாருந் தெய்வ மெக்கியத் தனைப்பான்.

(இ-ள்.) (இந்திரனே!) ஆகாசத்தில் வியாபிக்கும் ஸாமத்தைத் தேர்ந்தெடுத்து உத்காதா அவனுக்குத் தெரிந்தவண்ணம் பாடட்டும். பாலைத்தரும் பசுக்கள் ஆபத்துக்குள்ளாகாத வலை யக்ஞ கிரகத்தை நோக்கிவரும் தெய்வமாகிய வுன்னை (பர்ஹிஷ—) யக்ஞத்தினிடத்து அல்லது தர்ப்பையினிடத்து)க்கொண்டுவந்து சேர்க்குமாறு, காந்திபொருந்திய ஸ்வர்க்கத்தைப்போல வோங்குநின்ற சஸ்திரங்களைக்கூறி யர்ச்சிக்கின்றோம்— எ-று.) பர்ஹி: யக்ஞமென்பது ஸாயணருரை. மேனாட்டாசிரியர் வே: என்பதற்கு வேத்வியென வினைப்பொருள் கொள்ளாது, பட்சியெனப் பெயர்ப்பொருள்கொண்டு இவ்விருக்கை வேறுமாதிரி மொழிபெயர்ப்பர். அது வருமாறு: "பட்சியைப்போலப் பாய்ந்துசெல்கிற ஸாமத்தை யவன் பாடட்டும். பால்தரும் பசுக்கள் தடையின்றித் தேவர்களது கூட்டத்தைத் தர்ப்பையில் மருமாறு விளிக்கும்படி யாங்கள் விண்ணொளிபோல விரியும் சஸ்திரத்தைக் கூறுவோம்." என்பதாம்.

2. காளை காளையர்க டாமே யவிதருங் கருமத் தோரின்
நாளுமீப்பசியின் வாடு மிருகத்தி னுரக்கக் கூவித்
தாளொடு மருச்சித் தேத்தல்; கூர்த்தனே, துதியுவக்கு
மாளன் மர்த்தியனுந் தூதன் மகத்திரு பலியு மீவான்.

(இ-ள்.) ஹவியளிக்கும் யஜமானனுடைய காளை அவியளிப்பதே தமது கர்மமாக வுள்ள ரித்விஜர்களாகிய காளைகளோடு, மிகுந்த பசியினால் வருந்து மிருகமானது உரக்கச் சப்தமிடுவதுபோலச் சத்தமிட்டு அர்ச்சிக்கட்டும். துதிபெற்ற விந்திரனே! ஸ்தோத்திரஞ் செய்வதிற் சந்தோஷங்கொள்ளும் மர்த்தியனுடைய ஹோதா யக்ஞத்தினிடத்து அவி ஸ்துதியென்னும் இரண்டுவகைப் பலியையுமளிப்பான்— எ-று.) கூர்த்தனே வடசொல், உத்கூர்ண இந்திர—என்பார் ஸாயணர்.

3. அனந்துகட்டிய விடத்திற் சூழ்ந்தனைந் தோதா ஞால
வனந்தரு சாற்காலத்துக் கருவினை மதித்துச் சேர்க்கல்;
குனம்பின்மாக்களைக்களிண்டுகொளரப்பட்,டாப்போத்தார்க்கல்;
உனப்பெறு துதிநேங்க ளொலிபுவி வானினூடே.

## மண்டலம் 1. சூக்தம் 173.

(இ-ள்.) ஹோதா வாகிய அக்கினி அளந்து கட்டிய விடங்களாகிய ஆஹவநீயாதி ஸ்தானங்களில் பூமியினது வளத்தைத் தருஞ் சரற்கால (வருஷசம்பந்தமான வென்பர் ஸாயணர்.) கர்ப்பங்களை (அவியுணவுக்கான பயிர்களை அல்லது கால ஹோமங்களை)க் கொண்டுவந்து சேர்க்கட்டும். (வஸந்த காலத்தில் ஜ்யோதிஷ்டோமஞ் செய்கிறார்கள் என்று சுருதியுண்மையான்.) குதிரை (ஈண்டு அக்கினி) இங்கு கொண்டுவரப்பட்டுக் கனைக்கட்டும். காளையும் (இச் சொல்லும் அக்கினியையே குறித்தது.) முக்காரம் போடட்டும். தூதுவனைப் போல வாக்கானது பூமி வானங்களுக் கிடையே செல்லட்டும்.—(எ-று.)

4. அவன்பொருட் டுயரன் பார்ந்த வவிபளிக்கின்றோம்; தெய்வ
நிவப்பெறு பத்திவாய்ந்தோர் நீள்வலித் துதி புரைத்தார்;
உவம்பெறு வலிபொளிர்ந்தோ னசத்திய ரென்ன வேகந்
தவழ்ந்துற வருமேவான் றேரிற் றங்கு மிந்திரன் களிக்கல்.

(இ-ள்.) உயர்தர வன்பிற் பெருகு மவிப் பொருள்களை யவனுக் களிக்கின்றோம். தெய்வ பக்தி வாய்ந்தவர்கள் பலத்தை விருத்தி செய்யும் துதிகளைக் கூறினார்கள். உவமையாகக் கூறத்தக்க வலிமை யோடு விளங்குபவனும், நாஸத்தியர்களாகிய அசுவினிகளைப் போல வேகமாக வருபவனும், தேரிற்றங்குபவனுமான விந்திரன் இவற்றில் (அதாவது எங்களவியிலும் பக்தர்களது துதியிலும்) திருப்தி யடையட்டும்—(எ-று.) நசத்தியர், நாஸத்தியர், அசுவினியர். உவம், உவமம் இடைக்குறைந்தது.

5. மெய்ம்மைசார் பலத்தோன், சூரன், விழைதருமகவான், றேரிற்
செம்மைவாய்ந்துறுவோன், போரிற்செருச்செய்வோர் தம்மை
வெல்வோன்,
அம்மைசார்காளையேய்ந்தோன், ஆவரணத்தின் மன்னும்
பொய்ம்மையாரிருளைநல்கேபுடைக்குமிந்திரனைப்போற்றல்.

(இ-ள்.) உண்மைப் பலத்தோடு கூடியவனும், சூரனும், விரும்பத்தக்க செல்வத்தோடு கூடியவனும், தேரில் நன்றாக வமர்ந்துள்ளவனும், யுத்தத்திற் சண்டை செய்யும் வீரர்களைச் சயிப்பவனும், அழகிய (வச்சிர மாகிய) காளையைப் பெற்றவனும், உலகை மூடிக் கொள்ளும் இருட்டைச் சேதிப்பவனுமாகிய விந்திரனை (ஹோதாவே!) துதிப்பாயாக—(எ-று.) வ்ருஷன்வன், பலம் பொருந்தியவனே அல்லது காளை மாட்டினாற் சுமக்கப் பெற்றவனே யென்பர் மேனாட்டாசிரியர். ஆனால். 'வ்ருஷா தே வஜ்ர உததே வ்ருஷாதேரத:' என்ற (மண்.2 சூக்.16 செய்.6.) வாக்கியத்தின்படி வஜ்ராயுதந் தரித்தவனேயெனப் பொருள் கூறுவர் ஸாயணர். இவ்விடத்துமோட்ச மூலர் கூற்று கருதத் தக்கது. 'வ்ருஷ சப்தத்துக்குப் பல முறைந்த பிராணி யென்பது பொருள். வேத கவிகளுக்கு இவ்ருஷ சப்தத்தை யெவ்வளவு தாமுபயோகித்தாலும் ஆசை தீருவதில்லை.' யென்பர். மண். 2 சூக். 16 செய். 6; மண் 5 சூக். 36 செய். 5; மண். 5 சூக். 40 செய். 2, 3; மண். 8 சூக். 13, செய். 31-33 இவற்றைப் பார்க்க. இம்மண்டலம் 177வது சூக்தம் 2, 3 செய்யுட்களையும் பார்க்க.

வருக்கம். 13.

6. இப்பெரு மகிமை தன்னு னரரிடத் தொளிரு மின்னுற்
கப்புவி வானங் கச்சை யாயுறப் பற்ற வில்லை;
இப்புவி தன்னைத்த னுடை யென்ன விந்திரன் றரிப்பான்;
ஒப்புலன் வானை, யுண்டி யுடைய னுபசம தென்ன.

(இ-ள்.) மேலே கூறப்பட்ட பெரிய மகிமையோடு நேதாக்களாகிய யஜமானர்களிடத்து விளங்கு மிவ்விந்திரனுக்குப் பூமி, வானங்கள் அரைக்கச்சையாக வுறப் போதுதலில்லை. (அதாவது இந்திரன் ஓடியாடித் திரிவதற்கு இவ்வுரோதஸியினது இடம் போதாதென்றபடி.) இப்பூமியை (லோகத்திரயங்களையும்) தனது உடையைப்போலச் சுற்றிக்கொண்டிருக்கிறான். உணவை (அல்லது உணவுப் பொருளைத்தரும் மழையை) யுடையவனுகிய விந்திரன் ஓபசத்தை அல்லது நுதலணியைப்போல கொம்பைப் போலவென்பார் ஸாயணர்) விண்ணைத் தரிப்பான்—(எ-று.) ஓபசம், ஈஷத் உபசேதே ஓபசம் ச்ருங்கம் என்பது ஸாயணருரை. நெற்றிக்கு முன்னின்று அதை யலங்கரிப்பது, நுதலணி.

7. சமத்தினி லுன்னைச் சூர சத்துருக்களை யடக்குஞ்
சமர்த்தி னிந்திரனைச் சிலர் வலிபெறக் கயக்கு மேவானை
யமர்த்து முத்தம நெறிபோ னுந்துஞ் சூரியை மதத்தி
லமைத்திட வலியி னொத்த வனபின மேராகை யார்ந்தார்.

(இ-ள்.) சூரனே! யுத்தத்தினிடத்திற் சத்துருக்களை யடக்கு மிந்திரனும் பிராணிகளை யுரப்படுத்துவோனும், ஸூக்ருத்துக்களுக்கு உத்தம நெறியை யமைப்பவனும், ஸூரியுமாகிய வுன்னை மதத்தோடுறுமாறு தங்கள் வலியினால் ஒத்த பிரியமுள்ளவர்களாகிய மருத்துக்கள் உள்ள முவந்தார்கள்—(எ-று.) 'சூரனே' யாகத்தினிடத்து இச்செய்யுளிற் சொன்ன குணவிசேஷமுள்ள வுன்னைத்தங்களுடைய வலியினாற்களிப்பினமர்த்தஸமானப் பிரிய முள்ளவர்களாகிய ரித்விஜர்கள் உள்ள மேவாகை கொண்டனர்.' என்றுரைகூறலும் உண்டு. அற்றேல் நான்காமடியிலுள்ள 'வலி' யென்னும் சொல்லை 'அவி' யென மாற்றிப் படிக்க. ஸமத்ஸு, சமத்தினில் என்பதற்கு யுத்தத்தில் என்றது யாகத்திலெனப்பொருள் உரைத்துக்கொள்ளுக. வடமொழியிலுள்ள வாஜை: என்பதற்கு வலிகளினால், அல்லது அவிகளினால் என்னும் இரண்டுபொருள்களுமுண்டு. இந்த்ரன் என்னும் பதத்திற்கு 'சத்ருணாம் தாரகம்,' பகைவரையடக்குபவன் என்பது பதப்பொருள். ஸூரி, ஸ்வாமி.

8. இவ்வகைச் சவன முன்ன இன்பமார்ந் துள்ள,தாப
மொவ்வுறு தேவி மாந்த ருவக்க வந்தரத் தோடுங்கால்;
எவ்வகை வாக்கு முன்னை யிஷ்பி னுர்த்துவவாம்,போற்றைச்
செவ்விதிற் றாண்டு மேவாரைச் சனங்களை விருப்புங் காலை;

(இ-ள்.) மழை நீராகிய தேவி மனிதர் களிக்குமாறு அந்தரிட்சமாகிய ஸமுத்திரத்தி லொழுகும்போது, இவ்வகையாக உனது ஸோமயாகம் இன்பமுறைத்தனது. ஸ்தோத்திரங்களைப்பி ரரேபிக்கும் ஸூரிகளாகிய யஜ

மானர்களையும், ஸ்தோத்திரஞ் செய்யும் ஜனங்களையும் புத்தி பூர்வமாக நீ விரும்பும்போது எல்லாவிதமான வாக்குக்களும் உன்னைச் சந்தோஷப்படுத்துகின்றன—(எ-று.) ஸவனம், ஸோமம் யாண்டு பிழியப்பெறுமோ அவ்விடம் ஸவனமாம், சோம யாகம் என்முர் உரையில். ஸமுத்ரம், 'உதக ஸமுத்ரவண அபாதார பூத அந்தரிக்ஷம்.' தண்ணீர் ஓடவு மொழுகவுமியைந்த விடமாகிய அந்தரிட்சமென்பது பொருள். கௌ:,ஸர்வாபி ஸ்தோத்ர சஸ்த்ர ரூபாவாக்கென்பார் ஸாயணர். (Dhisna) திஷணாபுத்திபூர்வமாகஅல்லதுமழைத் தருஞ்செயலோடு என்றுங் கூறுவர் ஸாயணர் இப்பதம் செய்யுளில் இல்லை உரையிற் காண்க.

9. இனவுன தருந் துணையை யெய்துக; விறைவர் தம்மை
மனமுறப் போற்று வோரி னென்னை முற்றினராய்மன்ன;
தினமுங் கன்மத்தை வேகிற் செய்பவ னென்ன வேந்தன்
கனமுறு முக்தஞ் சேர்க்குங் காலத்துத் துதியின் வைக.

(இ-ள்) ஸ்வாமியாகிய இந்திரனே! உனது நல்ல சகாயங்களை யாங்கள் அடையட்டும். ராஜாக்களாகிய நரர்களைப் போற்றுகின்றவர்கள் தங்கள் எண்ணங்களை நிறைவேற்றிக் கொள்ளுவதுபோல உன்னைப்போற்றின யாங்களும் எமது இச்சைகளைப் பூர்த்தியாகப் பெற்றவர்களாகப் பொருந்தட்டும். (பின்னிரண்டடி இந்திரனைப் படர்க்கைப்படுத்திக் கூறியது.)வேகமாகக் கர்மத்தை செய்பவனைப்போல எங்களதுசஸ்திரங்கள் இந்திரனைக்கொண்டு வந்தபின்னர் அவ்விந்திரன் எங்களது துதியினிடத்து நிலைப்பெற்றுத் தங்கட்டும்-(எ-று) எவ்வகையாகஇந்திரன் றுணைசெய்வானே எவ்வகையாக யாங்கள் எங்களதெண்ணத்தைப்பூர்த்திசெய்துகொள்வோமோ எவ்வகையாக இந்திரன் எங்களது ஸ்துதியிற் றங்குவானே அவ்வகையாக ரித்விஜர்களே நீங்கள் புரிவீர்களாக வென்று ஒரு வாக்கியங் கூட்டுக வென்பார் ஸாயணர்.

10. நரர்களைத் துதித்து நண்பராக்குவோர் போனுமேவோம்யாம்;
கரமதிற் குலிச முற்ற விந்திர னெமமோ னுகல்;
வரமுறு கேண்மை வேட்டோர் மருவு செங்கோலின் வாழும்
புரபதியினைப்போன்மத்திபொருந்தியோரவியின் வேட்டார்.

(இ-ள்.) நரர்களாகிய வீரர்களை (அரசர்களை யென்னலும் தகும்) நண்பர்களாக மாற்றிக் கொள்ளுவோரைப் போல யாங்களும் இந்திரனை நண்பனாக்கிக்கொள்ளுவோம். அப்பொழுது கையில் வச்சிராயுதத்தைத் தாங்கிய விந்திரனும் எங்களுடையவனாகட்டும். நியாயமாக வரசாளும் ஒரு பட்டணத் தரசனது சிநேகத்தை விரும்பினவர்கள் அப்புரபதியைப் பூஜிப்பதுபோல, இங்கு மத்தியஸ்தர்களாகப் பொருந்திய ரித்விஜர்களும் யக்ஞ ஸாதனங்களால் இந்திரனை வணங்குகிறார்கள்—(எ-று.) இது ஒரு கடினமான விருக்கென்பர் மேனாட்டாசிரியர். ஸாயணருரையைத் தழுவி மொழிபெயர்த்துள்ள வில்ஸன் முற்பாதியிருக்கை ஒரு வாக்கியமாக முடித்துள்ளார்.

வருக்கம். 14.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 4.

11. எக்கியன் வேந்தன் றன்னை யோக்க மெய்துற வளர்ப்பான்,
உக்கிர மனத்தோ டன்னான் சூழ்வுற வுலவும் போதும்,
மிக்க வேட்கையனை யன்மை யுறையு நீர்த்துறை யிழுத்த
லொக்க, நீள்பாதைசேர்க்குங்கணக்கினிற் பயன்கொள்வோனை

(இ-ள்.) மிருந்த தாகமுள்ளவனைச் சமீபத்திலுள்ள பிரவிர்த்தமான தண்ணீர்த்துறை யிழுப்பதுபோலவும், பயன் பெறுபவனை நீண்டு வளைந்த பாதையானது தன்னிடத்துச் சேர்ப்பதுபோலவும், இந்திரன்கோபத்தோடு தூரமாக வளைந்து செல்லும்போதும் யக்ஞத்தினால் அவனோங்கி வளரும்படி யக்ஞம் புரிபவன் செய்வான்—(எ-று.) "இப்பொழுது காலஹரணஞ் செயினும் முடிவில் இந்திரன் யக்ஞத்தினிடத்து வருவான். நாம் பொறுமையோடுகாத்திருக்கவேண்டும். தாகமெடுத்த வழிப்பிரயாணிநீரோட்டத்துக்கு வந்து கடைசியாகத் தனது பிராயணத்தின் முடிவிடத்தை யெய்துகிறான்." என்பது கருத்தென்பார் மேனாட்டாசிரியர். இவ்விருக்கிலும் அநேக பதங்கள் காந்துறைகின்றன வென்பார் வில்ஸனென்பவர். உள்ள பதங்களைக் கொண்டு எவ்வளவுபொருள் வேண்டுமாயினும் கொள்ளலாமே யொழியத் தமக்குவேண்டிய பதங்களைத் தம்மிஷ்டப்படி சேர்த்து ஸாயணரைப்போல வலித்து பொருள் கொள்ளுவது அழகல்லவென்பர் மேனாட்டாசிரியர் பயன் கொள் வோனைப் பாதைசேர்க்குங் கணக்கினிலெனச் சேர்க்க.

12. போரினிற் றேவரோடு பொருந்திய நீ யிங்கெம்மைச்
சோரவிட்டிடல், மெய்ம்பார்ந்த விந்திர வுனக்கு வேறாய்
நேருறுமவி; பெரியோர் பலனொடு கூடும் போற்றுத்
தேருறு மவியர், சிந்தும் பலன் மருத்துவரை யேத்தும்.

(இ-ள்.) வலிமை பொருந்தியவனே! இந்திரனே இங்கு நடக்கும் யத்தத்தில் தேவர்களாகிய மருத்துக்களோடு கூடிய நீ எங்களைக் கைசோரவிட்டு விடாதே. உனக்காகத் தனியாக ஹவிர்ப்பாகம் பொருந்தியுள்ளது. மகத்தவனான விந்திரனைப் பலன்பெறு மாற்றலோடு புகழும் ஸ்தோத்திரங்கள், தேர்ந்த அவியோடுகூடியவரும் மழையாகிய பலனை யொழுக்குபவருமான மருத்துக்களையும் துதிக்கும்—(எ-று.) இச்சூக்தம் முழுவதுமே மொழிபெயர்த்தற்கரிய இருக்குக்களடங்கி யுள்ளதாம்.

13. அரிவ, விந்திர, வெம்மிப்போற் றுனக்கென வணைந்ததிதாற்
பெருநெறி யெமக்குக் காண்க; தேவனே நன்மை யார்ந்த
திருவை யா மெய்த வெம்மைச் சேருக சூழ்ந்து; யாமுங்
கருதிய வுண்டி வன்மை நெடும்பகல் வாழ்வுங் காண்க.

(இ-ள்.) கருஞ்சிவப்புநிறம் வாய்ந்த குதிரைகளிரண்டைப் பெற்றவனே! இந்திரனே! யெங்களுடைய இந்த ஸ்தோத்திரம் உனக்காகப்பொருந்தியது. இதைக் கைக்கொண்டு எங்களுக்கு வாழ்வைத் தருவாயாக. தேவனே! யாங்கள் செல்வப்பெருக்கை யடையும்வண்ணம் எங்களைச் சூழ்ந்து சேர்ந்து நடத்துவாயாக. யாங்களும் உணவுப்பொருள்களையும், பலத்தையும், நெடுங்கால வாழ்வையும் பெறுவோமாக—(எ-று.)

வருக்கம். 15.

## மண்டலம் 1 சூக்தம் 174.

## 174. மண்டலம் 1. அநுவாகம் 23. சூக்தம் 10.

### 10 இருக்குக்கள்கொண்டது.

ரிஷி: ஷி அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: இந்திரன்.

1. மன்னனீ வேந்தே தேவர் யார்க்கும்; நேதாக்க டர்மைந்,
துன்னவர்த் தெறுப்போய், காக்க; விரட்சணை புரிகவெம்மை;
நன்னலத்தோர்த மூண்மைப் பதிமகவா னெம்மேனம்
பின்னமாக்குபவ செல்வம் பெருத்தவ வலி யளிப்பாய்.

(இ-ள்) இந்திரனே! நீ (எங்கட்கு மாத்திரமே யன்றி) எல்லாத் தேவர்களுக்கும் அரசனும். சத்துருக்களைக்கொல்லும் அஸுரனே எங்கள் யக்ஞங்களை நடத்துவிக்கும் நேதாக்களாகிய நரரைக் காப்பாயாக. எங்களையும் இரட்சிப்பாயாக. ஸத்தாக்களுக்கு உண்மையான பலனை யளிக்கும் பதி நீ. மகவான் (செல்வான்) நீ. எங்களது பாபத்தைக் கெடுப்பவன் நீ. மிக்க செல்வத்தோடு கூடிய நீ ஸ்தோத்திரங்களுக்குப் பலத்தை யளிப்பாயாக—(எ-று.)

2. இந்திர விகழ்ந்து பேசுஞ் சனங்களி னேழு கோட்டை
நந்துகார் காலந் தன்னி னற்சர ணளிப்ப வற்றை
முந்துற வழித்தாய்; நிந்தை யற்றவ முடுகு நீரைச்
சிந்தினை விருத்திரற்கொன் றிளமையார் புருகுற்சற்கே.

(இ-ள்.) இந்திரனே! இகழ்ந்து பேசுஞ் சனங்களுக்கு மழைக்காலத்திற் காவலை யளிக்கும் எழுகோட்டைகளைப் பொடித்தனை. நிந்தை யற்றவனே! நித்திய தருணனான புருகுத்ஸனுக்காக விருத்திரனை யழித்து மழை வெள்ளத்தையோடவிட்டாய்—(எ-று.) புருகுத்ஸனைப்பற்றி மண். 1. சூக்தம் 63 செய். 7 பார்க்க. மழைக்காலத்தில் சுகமாக விருக்கும்படி கட்டிக்கொண்டு வாழ்ந்த எழு கோட்டைகளாம் என்பர் மேனாட்டாசிரியர்.

3. சூரர்தங் காவற் சேனை சோர்ந்திட வோட்டி, வேந்தே,
யாருடன் விண்ணொளியைப், புருகுத, நானத் தேய்ப்பா,
யேரினன்னவரோ டெம்மிற்கருமத்தும்பொருளினுந்தேய்ந்
தாரும் வல்சுதி யெரியைச் சியமே யென்னக் காக்க.

(இ-ள்.) இந்திரனே, புருஹூதனே! சூரர்களுடைய காவலிலமைந்த சேனைகள் (அசுரபுரிக ளென்பார் ஸாயணர்) தோற்றழியும் வண்ணம் ஓட்டி விண்ணி னொளியாகிய சூரிய வெளிச்சத்தை நிச்சயமாக எந்த மருத்துக்களோடு சேர்ந்து அமைப்பாயோ அம்மருத்துக்களுடன் எம்முடைய வீட்டில் நடக்கும் யக்ஞ கர்மங்களிலும், இதர வஸ்துக்களிலும் பொருந்திக் கழிவை யெய்தும், விரைவான நடையோடு கூடிய அக்னியைச், சிங்கந் தான் தங்கும் வனத்தை யழிக்கும் யானை முதலிய பிராணிகளை வதஞ்செய்து அவ்வனத்தைக் காப்பது போலக் காப்பாயாக—(எ-று.) யக்ஞக் கிரஹத்திலுள்ள அக்கினி அழிவை யடையாமற் காக்கப்படின் யாங்கள் அநுஷ்

டான பார்களா யிருப்போமென்பது கருத்து. சிங்கம் சத்துரு மிருகங்களைக் கொல்லுவது போல நீ பகைவரது கோட்டைகளை யழிப்பாயாக வென அவ்வுவமையை அசுரபுர பேதனத்துக்குங் கூறலா மென்பார் ஸாயணர்.

4. அவர்களுன் குலிசச் சத்த மகத்துவத் தொத்த சார்க்கட்
சலமெனச் சேர்வா ருன்றன் சீர்சரு வுறுவான், வேந்தே;
அவமுற நீரை விழ்த்த வாயுகங் கொண் டரியின்
சுவலுறும்போ துவன்மைத் திறத்தினுன் பொருள் கவர்ந்தாய்

(இ-ள்.) இந்திரனே! அப்பகைவர்கள் உனது வச்சிராயுதத்தின் சத்தமகத்துவத்தினுல், எல்லாரும் ஒத்துறையும் இடமாகிய அந்தரிட்சத்தில் (பூமியி லென்பார் மேனுட்டாசிரியர்.) உனது கீர்த்தி வெளித் தோன்றும் வண்ணம் சலங்ஙலிற் சேர்வார்கள். நீ மழை நீரைக் கீழ்விழியுமாறு புரியக் கையி லாயுதத்தை யேந்திக்கொண்டு அரீ யென்னும் இரண்டு குதிரைகளின் மீது மேறிய போது உனது சாமர்த்தியத்தினுல் (அப்பகைவர்களது) உணவுப் பொருள்களைக் கைக்கொண்டாய்—(எ-று) அரீ, இருமைப் பெயர், இந்திரனுடைய குதிரைகளுக்குப் பெயர். சுவல், தோள் ஈண்டு முதுகைக் குறித்தது.

5. இந்திர, சுகத்தை நாடு நேர்நடை யாதன் மாவிற்
சுந்தரக் குற்சன் றன்னை நீவிரும் பவிக்கட் போய்க்கல்;
நந்து சூரிய னெம்மாட்டுத் தேருரு ளடுத்த மேக்கே;
அந்நிப குலிசக் கையன் பொரு தடையலா மேற்செல்க.

(இ-ள்.) இந்திரனே! சுகத்தை யிச்சிக்கின்றனவும், நேரிய நடையோடு கூடியவும் (குத்ஸனை யடைந்தனவும்) ஆனவாயுவினது (வாயு ஸமானவேக முள்ள வென்பார் ஸாயணர்.) குதிரைக ளிரண்டின் மேல் குத்ஸரிஷியை உனக்குப் பிரியமான அவியைத் தரும் யக்ஞ தலத்துக்குத் தூதிக் கொண்டு போவாயாக. சூரியன் எமக்கருகில் தனது தேர்ச்சக்கரத்தை மேல் நோக்கி நன்குக வுருட்டட்டும். வச்சிரபாகு வாகிய விந்திரன் (இது இந்திரனைப் படர்க்கைப் படுத்தியது) போர் செய்பவனுப் சத்துருக்களின் மேற் செல்லட்டும்—(எ-று.) மேனுட்டாசிரியர் இவ்விருக்கின் முதற் பாதிக்கு வேறு வகையாகப் பொருள் கூறுவர். 'இந்திரனே! பாரிடத்தில் நீ களி கொள்ளுகிறுயோ அந்தக் குத்ஸனை நீ தாங்குவாயாக. வாயுவினது இரண்டு கருஞ்சிவப்பு நிறமுள்ள குதிரைகளும் கீழ்ப்படிதலோடு கூடியுள்ளன.' என்பார். பின்னிரண்டடி ஸாயணருரையைப் போலவே.

வருக்கம். 16.

6. அரிவ, விந்திர, போற்முர்க்கும் வலியின, விசையபற்றோர்
அரிகளுன் மித்திரர்க், கிங்கின்புறு வள்ளல் கண்டு
சுருடன் செறியு முன்னு னவிக்கப்பெற் றரும்புதல்வ
குரிமையின்வலிப்போர்தம்மையெமாறத்துக்கொல்லுபவனுக

## மண்டலம் 1 சூக்தம் 174.

(இ-ள்.) அரீ யென்னும் குதிரைகளிரண்டுக்கு நாயகனே! இந்திரனே! ஸ்தோத்திரங்களாற் பலவிருத்தி யடைபவனே! உனது நண்பர்களுக்கு விரோதிகளும், அதாசுஷர்களும் (தானஞ் செய்யாதவர்களும் என்றபடி) தானஞ் செய்து இன்புறும் அர்யமணனைக் கண்டும் வணங்காதவர்களும், ஆயுள் நிறைந்த மனிதர்களோடு கூடிய வுன்னால் விரைவாகத் தள்ளப்பட்டுத் தமது குடும்ப விருத்திக்காகப் புத்திரர்களைத் தாங்குவோருமான அவர்களைக் கொல்லுவாயாக-(எ-று.).அர்யமணன், வள்ள லென்னும் பொருளில் வந்தது.

7. கவிபருள் தூண்ட வுன்னை யிந்திர, துதித்தான்; தாசன்
புவியின்கீழ்ப் படுக்கை பெய்தப்பொருத்தினை;தன தானத்தா
லவியறு மொளியி னேற்குமவனி மூன்றமைத்தாய்;துட்டப்
புவியினிற் குயவாசன்றன் பொன்றிடப்பொருதுகொன்றாய்.

(இ-ள்.) இந்திரனே! வேதவித்தான ஹோதாவாகிய கவி யருளினாற் றூண்டப்பட்டு உன்னைத் துதித்தான். தாஸனாகிய பலகவன் பூமியின் கீழ்ப் புதைக்கப்படுமாறு செய்தனை (கொன்றாய் என்றபடி). சித்திர தானங்களால் (அல்லது தனந்தரு மகிமை வாய்ந்த உனதுதேஜஸ்களினால்)மூன்று பூமிகளை யமைத்தாய்: துஷ்ட ஸ்தானத்தில் (பெருமுழக்கோடு கூடிய குயவாசனை யுத்தஞ்செய்து கொன்றாய்—(எ-று.) அவனி மூன்று. பூமி, யந்தரம், விண்ணென்றும் தார்சிக பாசுக ஸோமிக பூமிகளென்றும் கூறுவர் ஸாயணர். துர்யோணே என்பதற்குத் துஷ்ட ஸ்தானத்தி லென்றது துர்யோணனென்னு மரசனுடைய பிரீதிக்காக வென்பதும் ஒன்று. ஆனால் மேனாட்டாசிரியர் குயவாசனை அவனது வீட்டிற் கொன்றாய் என்பர். துரோணையும் துர்யோணையும் ஒன்றாகக் கொண்டார் போலும்.

8. இவ்வுன சநாத செய்கை பண்டுநின் றேய்ந்த வற்றை
நவ்வியர் துதியா நின்றா, ரிந்திர;'உயிர்கள் கேடற்
றெவ்வுற நபத்தை விட்டா யற்றனை; யசுரர் கோட்டை
வவ்விநீயபழித்தாய்;தெய்வமில்லவன்மழுவைச்தாழ்த்தாய்.

(இ-ள்.) இந்திரனே! இந்த உனது நித்தியமான செய்கைகள் பழைய காலத்திலிருந்து வந்தவற்றை நூதனமான ரிஷிகள் துதிக்கின்றார்கள். உயிர்கள் அழியாதிருக்கும் வண்ணம் மேகங்களைப் பெயித்தாய். அசுரர்களது கோட்டைகளை நாசஞ் செய்தாய். தெய்வ மற்ற அவ்வசுரர்களது கொலைவல்ல ஆயுதத்தை வணங்குமாறு செய்தாய்—(எ-று.).

9. அலைப்பவன் புயலலைத்துக் கடுவரலாற்றின், வேந்தே,
தலைப்பெய லறல் பெய்வித்தாய்; சூரனே, சமுத்திரத்தின்
றலைத் தணீர் பெருகுமாறு தயக்கிப் காலந் தன்னி
னிலைப்புறக் காத்தாய் துர்வசன் யது விருவர் தம்மை.

(இ-ள்.) இந்திரனே! சத்ருக்களைச் சலிப்பிப்பவனும் மேகங்களைச் சலிப்பித்து வேகமாகச் செல்லுமாற்று நீரைப்போல வென்று மோடும்படி மழை நீரைப் பெய்வித்தாய். சௌரியம் வாய்ந்தவனே! ஸமுத்திரமா

மே லந்தரிட்சத்தின் மேல் தண்ணீர் பெருகுமாறு தயக்கிய போது, தூர்வசன், யதுவென்னும் இரண்டு ராஜர்ஷிகளையும் (பூரணமான ஜலவிருஷ்டியினால்) அழிவடையாமல் நிலைக்குமாறு காப்பாற்றினாய்—(எ-று.) தூர்வசன், யது, மண். 1 சூக். 108 செய். 8 நோக்குக.

10. அரியெலாக் காலத்துந் நீ யெம்மவனாக; தான
மருவு முத்தமனை யாக; நரர்தமை யென்று மோம்ப;
செருவெலா மளிக்க வெங்கட் சூரத்தினைச் சிறக்க; யாமுங்
கருதிய வுண்டி வன்மை நெடும் பகல் வாழ்வுங் காண்க.

(இ-ள்.) இந்திரனே! நீ யெல்லாக் காலத்திலும் எங்களவனாக விருப்பாயாக; தானத்தோடு பொருந்திய வுத்தமனாகவு மிருப்பாயாக. புத்திர மிருத்யாதி மனிதர்களைப் பரிபாலிப்பாயாக. யுத்தந்தோறு மெங்கள் சேனைக்குப் பலத்தை நன்றாக வளிப்பாயாக. யாங்கள் உணவுப் பொருளும் பலமும், நீண்ட ஆயுளும் பெறுவோமாக— (எ-று.)

வருக்கம். 17.

## 175. மண்டலம். 1. அநுவாகம். 23 சூக்தம். 11.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ரிஷி அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: 1 ஸ்கந்தோக்ரீவி (3, 6,காய்ச்சீர்வந்த அறுசீர்க்கழிநெடில்; பிரஹதிபோல) 2–5 அநுஷ்டுப், 6 திருஷ்டுப்; தேவதை: இந்திரன்.

(வேறு.)

1. மதத்தைக் கொள்க, வுனதுமகான் மருவு,மரிவ,பாத்திரகின்
ரிதத்திற்குடிக்கப்பெற்றதும்பாலின்றுபருகப்பெற்றதுவால்;
மதத்தையளிக்குந்துளிபிச்சைவருடிப்பவனுன்றனக்கென்ன
விதத்தின்வெகுவுத்தமத்தானத்தன்னத்தரத்தின்மதர்த்தனவே.

(இ-ள்.) அரி யென்னும் குதிரை யிரண்டிற்கும் நாயகனாகிய விந்திரனே! உன்னுடைய மதத்துவம் வாய்ந்தஸோமமானது பாத்திரத்தினின்றுங் குடிக்கப் பட்டது போல உன்னாற் குடிக்கப் பெற்றது. அதனால் நீமதத்தை யடைவாயாக. மதத்தை யூட்டும் ஸோமத்துளிகள், இச்சைகளை வர்ஷிப்பவனாகிய வுனக்காகப் பலவித (ஆயிரக் கணக்கான வென்று மூலத்திலுள்ளது.) தானங்களோடும், உணவுப் பொருள்களோடும், பலத்தோடும் மதம் பொருந்தி நின்றன— (எ-று.)

(வேறு.)

2. தனையிலையுக்தவ, விந்திர, வெங்கள் மாட்டனாக,
வினைபு நல்வலிச் சிறப்புறு மதத்துன் ஸோமம்
இனையி ருணத்தி னிலைந்தது மரிப்பினைக்காது
தனையும் போரினிற் பகைவரை யடங்குவிப்பதுவே.

## மண்டலம் 1 சூக்தம் 175.

(இ-ள்.) யாங்கள் தரும் ஸோமத்தை ஸகாயனுக வுடைய விந்திரனே! நல்ல வலிமையோடு கூடியதும், சிறப்புப் பொருந்தியதும், மதத்தை யளிப்பதும், ஒப்பற்ற தானத்தோடு கூடியதும், அமரத்துவத்தை யளிப்பதும், யுத்தத்திற் பகைவரை யடக்குவதுமான உனது ஸோமம் எங்களை யடையட்டும்—(எ-று.) பின் பாதியை இந்திர பரமாகவும் அர்த்தஞ்செய்யலாம். அற்றேல் பலம் பொருந்தியதும் மதத்தை யளிப்பதும் சிறந்ததுமான உனது ஸோமம் எங்களை யடையட்டும். அச்சோமத்தோடு கூடிய இந்திரனே, நீ எங்களுக்குத் தாதாவாகவும், யுத்தத்திற் சயமூட்டுபவனுகவும், அமர்த்தியனுகவு மிருப்பாயாக என்க.

3. சூரனீ கொடை வாய்ந்தவன் மனிதனின்றேரை
மீயரிற் றூண்டுவோன் யாமளி சோமத்தின் றுணையோன்;
சீறினேன்பினை யாற்றிடான் றசியுவைத் தகிப்பாய்,
தாசி ஞெண்சுட ரோங்கு பாத்திரத்தினைத் தகைய.

(இ-ள்.) (இந்திரனே!) நீ சூரனும், தாதாவும், மனிதனுடைய யக்ஞமாகிய தேரை நடத்துவோனும், எங்களுடைய ஸோமத்தின் ஸஹாயனும். சுவாலையோடு கூடிய பாத்திரத்தைத் தகிப்பதுபோல, விருதாநுஷ்டானமில்லாத தஸ்யுவை யெரிப்பாயாக—(எ-று.)

4. பலத்தி னீசனுய்ச் சூரிய னுருளினைக், கவியே,
பெலக் கவர்ந்தனை; குற்சனை வாதன்றன் பரிமீ,
துலத்தி னெங்களு முலர்த்திடு மசுரன் சுட்டுணனைக்
கொலற்கென விவண் டேக்கிக்கொண் டேகினை யன்றே,

(இ-ள்.) கிராந்த தர்சியாகிய இந்திரனே! உனது பலத்தினுல் ஈசானனுகிச் சூரியனது தேருருளுளொன்றைக் கவர்ந்தனை. உலகமெலாம் கற்பாறையைப்போல வற்றச்செய்யும் அசுரனுகிய சுஷ்ணனைக் கொல்லுவதற்காகக் குத்ஸனை வாயுவினது (அல்லது வாயு வேகமுள்ள) குதிரையின்மீது தூக்கிச் சென்றாய்—(எ-று.) சூரியனுக்கு முன்பு இரண்டு சக்கரங்களிருந்தன வென்றும் அவற்றுள் ஒன்றை இந்திரன் கவர்ந்தனனென்றும்ஒரு இதிகாஸமுண்டு. மண். 5 சூக். 29 செய். 10 பார்க்க. குத்ஸனை வாயுவின் பரியின் மீது கொண்டுபோனதைமேல் 174-வது சூக்தம் 5-ம் செய்யுளிற் கூறினர். மண். 1 சூக். 51 செய். 6-லுங் காண்க.

5. மகாவலிமைய துன்மதங்; கிருது வுன்னதுவு
மகாவளப் புகழேய்ந்தது; விருத்திரன் றனைக்கொல்
சுகா துபப் பொரு டேய்ப்பவை யசுவமாதிய சார்
மகாதனம் பகை வதைப்பவைதமை வழங்குவமே.

(இ-ள்.) உனது ஸோம பானத்தினுல் வரு மதம் மகா வலிமை பொருந்தியது. உனது கர்ம வியாபாரம் மகா வளம்பொருந்திய கீர்த்தியோடு கூடியது. இம்மதம் கர்மமாகிய விரண்டும் விருத்திரனைக்கொன்று சுகா

நுபவப் பொருள்களைத் தருபவையும், சத்துருக்களைக் கொல்லுபவையான அசவமாதிய பெரிய செல்வங்களைத், தருபவையுமாம்—எ-று.) வழங்குகவே என ஈற்றுச் சொல்லை மாற்றி அத்தகைய செல்வத்தை யதுக் கிரகிப்பாயாக வென முடித்தலும் ஒன்று. சுகாநுபவப் பொருள், சுகாநுபப் பொருளென இடைக் குறைந்தது.

(வேறு.)

6. பண்டைய துதியாளர்க்குத், தவித்தவன் பருகு நீரி,
னண்டி யிந்திர நீ யென்றுஞ் சுகமய மானாய்; அஃதாற்
கொண்டவித் துதியி னுன்னை யடிக்கடி கூவினேன்; யா
முண்டிடு முணவின் வன்மை நெடும்பகல் வாழ்வி னோங்க.

(இ-ள்.) இந்திரனே! பூர்வகாலத்து ஸ்தோதாக்களுக்குத், தாகமே த்தவனுக்குக் கிடைத்த நீரைப்போல நீ யெப்பொழுதுஞ் சுகமயமாகவிருந் தாய். ஆகையால் இத்துதியினால் யான்உன்னை அடிக்கடி துதித்துக் கூவி னேன். யாங்கள், உணவுப் பொருள்களிலும், பலத்திலும்,நெடுநாள் வாழ்வி லும் விருத்தி யடைந்து நிற்போமாக—(எ-று.) வன்மையின் எனவிரிக்க.

வருக்கம். 18.

## 176. மண்டலம் 1. அநுவாகம் 23. சூக்தம் 12.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: 1–5. அநுஷ்டுப், 6 திருஷ்டுப்; தேவதை: இந்திரன்.

(வேறு.)

1. இந்துவே, வசுவெங்களுக் கெய்துமா மதத்தி
னந்துக; வுன தூரத்தி னிந்திர னகம்புகுக;
முந்துகோபத்தின் மூரனொடும் பரவுநின்று;யு
னந்திகத்தொரு பகைவனை யேனுங் காண்கிலேயால்.

(இ-ள்.) துளிகளால் நனைக்கும் ஸோமனே! எங்களுக்குச் செல்வம் வந்து சேரும் வண்ணம் மதத்தை யடைவாயாக. உனது பலத்தினோடு இந் திரனுக்குட் புகுவாயாக. கோபத்தோடு பலத்தில் வியாபிக்கிறாய். உனது சமீபத்தில் ஒரு சத்துருவையும் நீபார்ப்பதில்லை-(எ-று.) அந்திகம், ஸமீபம்.

2. தானவன்மைய னவனுக்குப் பணியுண வடைந்த
வேளவிற் பயிர்விளைவுற யவத்தை வித்திடலின்,
ஞான மார்ந்தவர் நனந்தலை யேகனு மவற்கு
ளானவண்ண மெங் கிதங்கள் புகுதுமா றனைக்க.

(இ-ள்.) தானவன்மையோடு கூடிய காளையாகிய எந்த விந்திர னுக்கு, வயலிற் பயிர் விளையுமாறு கிருஷிகர்களால் யவமாதிய தானியம் வி

## மண்டலம் 1 சூக்தம் 176.

தைக்கப்படுவது போலப் பலியுணவு பரப்பப்படுகிறதோ, எந்த இந்திரன் ஞானிகளாகிய மனிதர்களின் மத்தியில் ஏகனாய் விளங்குகிறானோ அந்த இந்திரனுக்குள் எங்களது ஸ்தோத்திர கீதங்கள் புகுமாறு செய்க—(எ-று) எனல், நினைப்புனமேனும் ஈ ... தானிய வயலைப் பொதுவிற் குறித்தது. அந்தராத்மாவே! அல்லது ஹோதாவே யென ஒருவிளி கூட்டுவர் ஸாயணர். இந்துவே! யென்னும் முன்பாட்டின் விளியைக் கூட்டினும் பொருந்தும்.

3. ஐங்குடியினர் செல்வினை முற்றிலு மடைந்த
வைங்கர மிரண்டோ, பெமைப்பகைத்து வஞ்சனைசெய்
நைங்கரன்றனை வருத்துக, விண்ணுறு மசனி
கைங்கரியத்தை யொத்திடக் கடிந்து கொல்லுகவே.

(இ-ள்.) (தேவர், மனிதர், பிதிர்க்கள், பசுக்கள், பட்சிகள் என்னும்)ஐந்து வகைச் சனங்களின் செல்வத்தினையும் முழுவதும் தாங்கிய அழகிய கைகளிரண்டையுடைய விந்திரனே! எம்மைப் பகைத்து எமக்குத் துரோகஞ் செய்யும் (அழியுங் காத்தோடு கூடிய) மனிதனை வருத்துவதோடு, விண்ணிற் பிறந்த இடியாகிய வச்சிராயுதத்தின் றொழிலைப்போல அவனைக்கொல்லுவாயாக-(எ-று.) ஐங்குடியினர் ஐந்து ஆரிய குடியினரென்பர் மேனாட்டாசிரியர். மண். 1 சூக். 7 செய். 9 பார்க்க. நான்கு வருணத்தாரும் நிஷாதருமாகிய ஐந்துவகைச் சனங்களையுங் கூறலாமென்பர் ஸாயணர். ஐங்கர மிரண்டோ யென்னுஞ் சொற்றொடரில் ஙகரம் சந்தவோசைக்காக வந்தது. ஐம்மையாகிய கரமிரண்டுள்ளவனே யென்க. நைங்கரனென்றது எதுகைக்காகச் சேர்த்தது: வடமொழி மூலத்திலில்லை.

4. சுதைபிழிந் துனக்களித்திடா ரெவரையுந், துக்கம்
வதையுறுத்து மன்னவர்களை, யுனக்கு நற்சுகத்தைத்
ததையுறப் பொருத்தாரினைக் கொல்க; வெங்களுக்குப்
புதைய லன்னரத ளித்திடாய்; சூரியு மடைவான்.

(இ-ள்.) ஸோமாபிஷவஞ் செய்து உனக்களிக்காதவர்களும், துக்கத்தால் நாசமடைபவர்களும், உனக்குச் சுகத்தைப் பொருத்தாதவர்களுமான அயஜமானர்கள் எல்லாரையும் ஒருமிக்க வழிப்பாயாக. அவர்கள புதைத்துவைத்துள்ள செல்வத்தை யெங்களுக்களிப்பாயாக. ஸ்தோதாவாகிய யஜமானனும் அதிற் பங்கடைவான்—(எ-று.)

5. இருவகையிலும் வலிமை யேய்ந்தவன்றனை, யருக்கப்
பெருமை வாய்ந் திடையின்றியே பேசுற்றோன் றன்னை
யிருமை சாரவே காத்தனை; இந்துவே! போரி
லருமைநல் வலியரியையுங்காத்தனை நன்கே.

(இ-ள்.) இந்துவே! அவிக்கொடை, ஸ்தோமப் புகழ்ச்சியென்னும் இருவகையிலும் பலம் பொருந்தியவனும், ஓயாது அர்க்கத்தைக் கூறிப் புகழ்பவனுமான யஜமானனைப் பெருமைபெறக் காத்தனை. யுத்தத்தில் வலிமையோடு கூடிய (அல்லது உணவுப் பொருளோடு கூடிய) இந்திரனையும் நன்

## அஷ்டகம் 2 அத்தியாயம் 4.

முகக் காத்தாய்—(எ-று.) முதலிரண்டடியின் கணுள்ளவற்றையும் இந்திரனுக்கே யேற்றிக் கூறுவதுமுண்டு. அற்றேல் பேசுற்றேன் றன்னை யென்பதைச் செயப் பாட்டுவினைப் பொருளில் வந்த செய்வினையாகக் கொள்க. இந்துவே! ஸோமனே.

6\. பண்டைய துதியாளர்க்குத், தவித்தவன் பருகு நீரி,
னண்டி யிந்திர நீ, யென்றுஞ் சுகமயமானாய்; அஃதாற்
றொண்டவித் துதியி னுன்னை யடிக்கடி கூவினேன்; யா
முண்டிடு முணவின் வன்மை நெடும்பகல் வாழ்வி னோங்க.

(இ-ள்.) இந்திரனே! பூர்வகாலத்து ஸ்தோதாக்களுக்குத் தாகமெடுத்தவனுக்குக் கிடைத்த நீரைப்போல நீ யெப்பொழுதுஞ்சுகமயமாக விருந்தாய் ஆகையால் இத்துதியினால் யான் உன்னை அடிக்கடி துதித்துக் கூவினேன். யாங்கள் உணவுப் பொருள்களிலும், பலத்திலும், நெடுநாள் வாழ்விலும் விருத்தியடைந்து நிற்போமாக—(எ-று.) வன்மையினென விரிக்க.

### வருக்கம் 19.

## 177. மண்டலம். 1. அநுவாகம். 23. சூக்தம். 13.

5 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை, இந்திரன்.

1\. ஞானியர் வள்ளல், வாய்ந்த குடிகளின் காளை, மாந்தர்
கோனவன், வேந்தன், யாரு மழைத்திடும் பு கூதன், போற்
றுனுபர் வெப்பித் துப்பு வேண்டி யெந்தமமைக் காத்துத்
தானமா ரரிகள் பூட்டிச் சாருக வழுதி னெங்கண்.

(இ-ள்.) ஞானவான்களுக்குத் தனந் தருபவனும், பிரஜைகளின் விருஷபமும், பயிர்த்தொழில் செய்யும் மாந்தருக்கு அரசனும், எல்லாராலும் அழைக்கப்படும் புருகூதனுமான இந்திரன் எங்களது ஸ்தோத்திரங்களால் உயர்வை யடைந்து, அவியுணவிச்சையோடு மெம்மைக் காப்பாற்றிக் கொடையிற் சிறந்த தனது அரிகளிரண்டையுந்தேரிற் பூட்டி அழகாக எனக்கருகே வரட்டும்—(எ-று.)

2\. இந்திர வுனது வன்மைக் குதிரைகள் முதன்மைவாய்ந்து
வந்தன மறையாற் றுன மருவிய தேரிற் பூண்டு
நந்தறு மவற்றை யேறி யவைதமா னடத்தப் பெற்றிங்
கந்துக; யாமுஞ் சோமம் பிழிந்தழைக் கின்றேம் வேந்தே.

(இ-ள்.) இந்திரனே! பலம் பொருந்தி யிளமை வாய்ந்த உனது குதிரைகளும், சிரேஷ்டம் வாய்ந்தவையும், ஸ்தோத்திரமாகக்கூறும் பிரஹ்மங்களால் தானம் நிறைந்து வலிபெற்ற தேரிற் பூட்டிக்கொள்பவையுமான

## மண்டலம் 1 சூக்தம் 178.

வவற்றின்மேலேறி அவற்றால் நடத்தப்பெற்று இங்கு வருவாயாக. இந்திரனே! யாங்களுஞ் சோமம் பிழிந்து உங்களை யழைக்கிறோம்—(எ-று.)

3. வலியுள வுன்றே ரேறல்; வலியுள சோம முன்றன்
பொலிவிற்காப் பிழிவுபெற்ற; சுற்றிலும் பொருந்தி நின்ற
மலிமதுரத்தின்; மாந்தர் வலிபெறு காளையே, மெய்ம்
பொலிதரு மரியைப் பூட்டி யென்கண் வேகத்தி னேகல்.

(இ-ள்.) உனது வலிபொருந்திய தேரிலேறுக; பலத்தையளிக்கும் சோமங்கள் உனக்காகப் பிழியப்பெற்றன. மாதுர்யமான பால் முதலிய வுணவுகள் எங்களைச் சுற்றிலுமுள்ள சமஸங்களில் நிறைந்திருக்கின்றன. மனிதர்களுக்குள் வ்ருஷபம் போன்றவனே! வலிமை செறிந்த உனது அரிகளிரண்டையுந்தேரிற் பூட்டி வேகமாக வென்னைநோக்கி வருக—(எ-று.)

4. தேவரை படையும் யக்ஞ முண்டுள, தீண்டே மேதத்
தாவரு பலியும்; வேந்தே,பிரம முந் தயங்கு மீண்டே;
மேயாவறு சோமமீண்டு; தருப்பையும் பரந்த, தீண்டு
மேவுக, வமர்க, மாந்தல்; சக்கிர, வரி தெறிக்கல்.

(இ-ள்.) சக்கிரனே! தேவர்களிடத்துப் போய்ச்சேரும் யக்ஞமிங்குளது. மேதத்துக்குரிய பசுவும் இங்குளது. இந்திரனே! மந்திரங்களும் இங்கே தயங்குகின்றன, ஸோமமு மிங்கு நிறைந்துளது. தருப்பையும் விரிக்கப் பெற்றுள்ளது. இங்கு வருவாயாக; அமர்வாயாக; ஸோமத்தைக் குடிப்பாயாக; உனது அரிகளிரண்டையும் அவிழ்த்து விடுவாயாக—(எ-று

5. மனக்கிசை துதியாளன் றன்மறையினு னன்கு போற்ற
வினிப்புறும் வேந்தே யெம்மை நோக்கியீண்டெய்த;உன்றன்
கனத்த நற்றுணையிற் காயனத்தின் யாஞ் சுகத்தைச் சார்க;
அனத்தொடு வலிமை தோய்ந்த வாயுளை யடைந்து வாழ்க.

(இ-ள்.) மனதுக்கிசைந்தஸ்தோதாவினது பிரஹ்மங்களாற் கூறப்படும் ஸ்தோத்திரங்களைக் கேட்டு ஸந்தோஷப்படும் இந்திரனே! எங்களை நோக்கி யிங்கு வருவாயாக. உனது துணையினுற் பாடிக்கொண்டே யாங்கள் சுகப்பொருள்களை யடையட்டும். அன்னத்தையும், வலிமை பொருந்திய ஆயுட் காலத்தையும் யாங்கள் பெற்று வாழ்வோமாக—(எ-று.)

வருக்கம். 20.

## 178. மண்டலம் 1. அநுவாகம் 23. சூக்தம் 14.

5 இருக்குக்கள்கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்;தேவதை: இந்திரன்.

1. போற்றுரைப்பவரைக்காக்கப் பொருந்தியதுணைகள்,வேந்தே
ஆற்றிய வுனது கேள்வித் தனமதை பளிக்கி, னெம்மை

## அஷ்டகம் 2 அத்தியாயம் 4.

மேற்றலத் தூக்கு மாசை மேவிடி னதைத் தடுக்கல்;
எற்றவை மாந்தர்க்கான வெவையு முன்னவை யாமெய்த.

(இ-ள்.) ஸ்தோத்திரங் கூறுபவர்களைக் காப்பதற்குப் பொருந்திய உதவிகளை யிழைந்த கீர்த்தி நிரம்பிய செல்வத்தை யளித்தாயானால் எம்மை யபர்த்திக்கொள்ளு மிச்சை எம்மைச் சாரும்போது அதனைத் தடுக்காதொழிக. மனிதர்க ளநுபவிக்கத்தக்கவையாக நீ யளித்த எல்லாவற்றையும் நாங்க ளடைக—(எ-று.)

2. மகத்தலத் தன்னிற் சோதரத் துறவார்க்கோர் செய்கை
மிகத்தெமை யடையு மெங்கள் கன்மத்தையென் றுங் கேட்டின்
முகித்திடலரசே வேந்தே; வலியளி யாபஞ்சென்ற
தகப்பினி னவன்மாட்; டிந்திரன் றுணை யனமுஞ் சேர்க்க

(இ-ள்.) அரசனாகிய விந்திரனே! யக்ஞதலத்தில் சகோதரிகளைப் போன்ற உறவோடு வரும் இராப்பகல்களின் செய்கைகள் எம்மைவந்து சேர்கின்ற எங்களது கர்மங்களைக் கெடுத்து விடற்க. இவ்விந்திரனுக்குப் பலத்தைத்தரும் ஆபங்கள் (தண்ணீர் அல்லது அவிகார்யங்க ளிரண்டினி லொன்றை யேனுங் கொள்ளுக.) அவனிடத் தோடின. இந்திரன் எங்களுக்கு உதவிகளையும் உணவுப் பொருள்களையுந் தரட்டும்—(எ-று.) முன்னிலைப் படர்க்கை மாற்றைக் கவனிக்க. ஆபம், நீர், கர்மம்.

3. நாரிமைவெற்றியாளனொடும் போரதனிற்சூரன்,
வரமுறவிரப்போன்போற்றை வாவிதிற்கேட்கும் வேந்தன்
நரமுநர் துதியைத் தாங்கித் தூக்கிடவெண்ணிற் றேரை
யருகுறத் தாசுடன்மாட் டடைதினிங் கணைப்போனாவான்.

(இ-ள்.) யுத்தநேதாக்களாகிய மருத்துக்களோடு கூடிய ஜயசீலனும், யுத்தத்திற் சௌர்யம் வாய்ந்தவனும், தனது அநுக்கிரகத்தை யாசிக்கும் ஸ்தோதாவினது அழைப்புக்களைக் கேட்பவனுமான இந்திரன், தன்னைப் புகழ்ந்து பாடும் சிறந்த ஸ்துதிகளை யுயர்த்தவிரும்பினால் தனது தேரை அவியளிக்கும் யஜமானனுக் கருகிற் கொண்டு வந்து நிறுத்துவான்-(எ-று.)

4. இந்திர னரர்களோடு கீர்த்தி யிச்சையினா னன்பர்
தந்தரு ளவியை நன்கே தின்கின்றான்; விவிதவாக்கோ
டந்துறு மர்ப யக்ஞத் தனம், யஜமானன் போற்றிற்
சுந்தரப் பலனை மெய்யே தோப்பவன்றனைத் துதிக்கும்.

(இ-ள்.) நரர்களாகிய மருத்துக்களோடு கூடிய இந்திரன் கீர்த்தி பெற மாசையினால் நண்பர்களாகிய யஜமானர்கள் தரும் அவியுணவை நன்றாகப் புசிக்கிறான் பலவித வாக்கியங்களோடு பொருந்திய மர்த்தியர்கள் குழுமிய யக்ஞத்தில் அவியுணவானது, யஜமானனாற் புகழப்பெற்று, அவனுக்கு ஸத்யபலனை யளிக்கும் இந்திரனை ஸ்துதித்துப் புகழும்—(எ-று.)

ஓம்! வேத புருஷாய நம:

# ரிக் வேத ஸம்ஹிதை.

## இரண்டாம் வருஷத்திய அறிவிப்பு.

‘ஊட்டுவிப் பானு முறங்குவிப் பானுமிங் கொன்றோடொன்றை
மூட்டுவிப் பானு முயங்குவிப் பானு முயன்றவினை
காட்டுவிப் பானு மிருவினைப் பாசக் கயிற்றின்வழி
யாட்டுவிப் பானு மொருவனுண் டே’ தூய வம்பரத்தே.

நெருநலுள ளொருவ னின்றில்லை யென்னும் பெருமையை யுடைய இவ்வுலகில் இதுகாறும் எமக்கு அருளூட்டிய ஈசன் இன்னமு மூட்டுவா னென்னுந் துணிபின் இவ்விரண்டாம் வருஷத்திய பிரசுரத்தையும் வெளியிடத் தொடங்கினோம்.

சென்ற வருஷ மெமது கைமாற்றைக்கருதாது பற்பல வுதவிகள் புரிந்துவந்த பிரேசர் பிரஸ் மானேஜரவர்கள் அத்தகைய உதவிபுரிவதன் அசாத்தியத்தை யெடுத்துக் காட்டினராக, யாமு மெமது கஷ்டத்தை யறிவிக்க, அவர் அன்பு கூர்ந்து எமக்கு அதிகத் திரவிய நஷ்டமேற்படாதபடி ஒருவாறு இசைந்து இவ்வருஷமும் இவ்வேத அச்சுப் பணியை நடத்தித் தருவதாக ஒப்புக்கொண்டது இத்தமிழ் வேதஞ்செய்த புண்ணியமே. அதற்காக அவ்வச்சுக்கூடத்தார்க்கு எமது அன்பார்ந்த பிரணமத்தை யளிக்கிறோம்.

சென்ற வருஷம் முழுவதும் காலாகாலமின்றி யாம் அனுப்பிய வி. பி. புக் போஸ்ட்டுக்களைத் தடைகூறாது ஏற்றுத் தவறாது அனுப்பிவந்த குன்னூர் ரோட் போஸ்டாபீஸ் தலைவர் மகா-ா-ா-ஸ்ரீ நரஸிம்மலு நாயுடு அவர்களுக்கு யாம் பெரிதுங் கடமைப்பட்டிருக்கிறோம்.

எமது வேண்டுகோளுக்கிணங்கிக் காகிதத்தை ஒரு மொத்தமாக வாங்கிப்போட்டு மாதாமாதந் தவறாமல் எமக்களித்துவந்த குன்னூர் S. M. R. ரொக்கக்கடை என், எஸ், ராமஸ்வாமி பிள்ளையவர்களின் உதவிக்கும் எமது அன்பார்ந்த வந்தனம்.

கடைசியாக, எமக்குவேண்டிய காலத்துச் சிட்டு நாட்டின்றிப் பொருளுதவி செய்துஎமது சௌகரியம்போலத் திருப்பிக் கொடுக்கலாமென்று திரவிய முதவிய மகா-ா-ா-ஸ்ரீ நாராயணஸாமி பண்டிதர் அவர்களின் உதவி யெஞ்சிரமேலது.

எல்லாம் வல்ல இறைவன் இவ்வருடத்தைச் சென்ற வருடத்திலுஞ் சிறப்பாக நடத்துவிப்பாராக வெனப் பிரார்த்தித்து இதனை வெளி விடுகிறோம்.

ஓம் தத்ஸத்.

## மண்டலம் 1 சூக்தம் 179.

5. உன்றுணைகொண்டு, வேந்தே, யுரம்பெருத்தவர்களாகத்
துன்று மெண்ணாத்தி ஞர்ந்த துன்னலர் தமையடக்க;
துன்றுக, மகவா னெந்தந் துணைவனு மெமைவளர்க்க;
கன்றலி லுணவு வன்மைநெடும்பகல் வாழ்வியாங் காண்க.

(இ-ள்.) இந்திரனே! மகவானே! உனது துணையினால் யாங்கள், வலிமை மிகுந்தவர்களாகத் தம்மை மதிக்கும் பகைவரை யடக்குவோமாக. எங்களது ஸகாயனுகப் பொருந்தி யெங்களை வளர்ப்பாயாக. யாங்கள் உணவுப் பொருள்களையும்,பலத்தையும், சிரகால வாழ்வையு முடைவோமாக —(எ-று.)

வருக்கம் 21.

## 179. மண்டலம். 1. அநுவாகம். 23. சூக்தம். 15.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: 1, 2 லோபாமுத்திரை 3, 4 அகஸ்தியன், 5, 6 சிஷ்யன்; வடமொழிச் சந்தம்: 1–4 திருஷ்டுப், 5 ப்ருஹதி, 6 திருஷ்டுப்; தேவதை: ரதி.

லோபாமுத்திரை அகஸ்தியனது மனைவி. முதலிரண்டு செய்யுட்களில் மனைவி புருஷனது அன்பின்மையைப் பற்றிக் குறைகூற 3வது 4வதுசெய்யுட்களில் அகஸ்தியன் பதிலுரைக்கிறான். கடைசிச் செய்யுட்களில் அவர்களது லம்வாதத்தைக் கேட்டுக் கொண்டிருந்த சிஷ்யன் (கவி) அதன்முடிவை ச்சுருக்கிக் கூறுகிறான். மேனுட்டாசிரியரது அபிப்பிராயப் படி 5வது செய்யுள் இச்சூக்தத்திற்கு ஒரு தொடர்பு மில்லாததாம். அவர் இச்சூக்தத்ததமது புத்தகவிறுதியில் ஆங்கிலத்தும் லத்தீனிலுமாகக் கலந்துமொழி பெயர்த்து எழுதியுள்ளார். இந்நூலாசிரியர்இவ்வகைச் செய்யுட்களையும் மொழி பெயர்த்துத் தமிழில்எழுதுவது நூலினது பூரண நிலையைக் கருதியென்றுணர்க. ரதி, ஸந்தோஷம், மதக்களிப்பு.

1. பகலொடு மிரவிற் பற்பல் சரற்பெரும்பொழு துழைத்து
மிகவுறக்கிழுத்தனத்தைக் கவிலேக்கும் வைகலைக் கழித்தேன்;
தகவிலாச் சரையு மென்றன் ற.நுவழகினைக் கெடுத்த,
தகமுறப் புருட ரின்னு மனைவியர் தம்மை யண்மல்.

(இ-ள்.) அநேக கூதிர்காலங்கள் (வருஷங்க ளென்றபடி) இரவும் பகலுமாக உழைத்துக் கிழத்தனத்தை யடைவிக்கும் விடியற் காலங்களைக் கழித்தேன். சரையானது எனது சரீரத்தின் அழகினைக் கெடுத்தது. புருஷர்கள் இன்னும் தமது பத்தினிமார்களை நெருங்கியணையட்டும்—(எ-று.) இதுலோபாமுத்திரை கூற்று.

2. முன்னுளோ ரொழுங்கிற்றேரப்போர் தேவர்தம்மோடுமுன்னி
கன்னரிங் கொழுங்கமைத்து நவில்பவரே னுந்,தந்நோன்
புன்னுறு முடிவையெய்த கிலரே னும் புரிவர் தோய்வார்;
மன்னுக வின்று காளை யோரொடு மனைவிமாரே.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 4.

(இ-ள்.) முற்காலத்திலுள்ளவர்களும் ரிதாநுஷ்டானபருமான மனிதர்கள் தேவர்களோடு கூட யோசித்து ஸ்மிருதி ரூபமான (ரிதங்களை அநுஷ்டான விதிகளை யமைப்பவர்களாயினும், தமது பிரஹ்மசர்ய விரதத்தை இன்னும் முடிக்காதவர்களாயினும், தள்ளக் கூடாத ருதுகால கழனங்களைச் செய்து கூடுவார்கள். ஆதலால் இப்பொழுது காளையர்களாகிய) புருஷர்களோடு பத்தினிமார்கள் சேரட்டும்—(எ-று.) இதுவும் லோபாமுத்திரை கூற்று.

3. தேவர்தந் துணையுற்றேம் யாமிருவருஞ் செல்லலெய்தோம்;
ஆவலோ டெல்லாப் போட்டியாளர் தங்களையு மேற்கொண்
டோவறு வெற்றி கொள்வோ மிங்கு நூறுவகையார்ந்தே;
மேவிய மிதுனமாக விருவருஞ் சயங்கொள்வோமே.

(இ-ள்.) [இது அகஸ்தியன் கூற்று.] (பத்தினியே!) தவப்பிரியர்களாகிய தேவர்களுடைய துணையையுற்றவர்கள் யாமாதலின்நீயும் நானும் வியர்தமான துன்பத்தை யடைய மாட்டோம். நம்மோடு போட்டி போடும் எல்லாரையும் நாம் மேற்கொண்டு, இந்த ஸம்ஸார வாழ்க்கையில் அபரிமிதமான போகப்ராப்தி ஸாதனங்களை யடைந்து பரஸ்பர ஸூரதஸங்கிராம ஜயத்தை யடைவோமாக. நன்றாக வொருவரோடொருவர் கூடிச்சுகிக்கும் மிதுனங்களாக விருந்து நாமிருவரும் பரஸ்பர ஜயத்தை யடைவோமாக—(எ-று.),

4. ஓதியும் பொறியடக்கத் துற்றும் வாழென்னைக் காமங்
காதுதலுற்ற துன்ற னிணக்கொடு வசந்தந் தோற்ற;
நீதியின் லோபா முத்ரை காளையை நித்தஞ் சேர்வாள்;
வாதமில் பலத்துத் தீரன் றனைப் பலமிலாள் புசிப்பாள்.

(இ-ள்.) பத்தினியே! ஜபஅத்தியயநங்கள் செய்து கொண்டும், ப்ரஹ்மசர்ய விரத மநுஷ்டித்துக்கொண்டு மிருக்குமென்னை, உன்னுடைய பிசர்க்கையினாலும் வஸந்தமாதிய காலவிசேஷத்தினாலும் காமமானது இழுத்துக் கவ்விக் கொண்டது. இந்த லோபா முத்திரை நாதுவை வருஷிக்குங் காளையாகிய என்னைத் தினமும் அடைகிறாள். மகாபலத்தோடு கூடிய தீரனாகிய வென்னைத் துர்ப்பலையாயுள்ள ஸ்திரீ ஆகர்ஷித்து அநுபவிக்கிறாள் —(எ-று.) அமுத: வஸந்தாதி காலாத் என்பர் ஸாயணர். முன்னிலைப் படர்க்கை மாற்று. இதுவும் அகஸ்திய வசனமே.

(வேறு.)

5. அருகேயுறைபு மிச்சோம மிதயத் தென்று மமர்ந்துளதை
விரைவிற் றுதிப்பேன்;குருசொன்னபிரலாபத்தின்விளைந்திட்ட
துரிதந் தன்னை யதுநன்கே தூர வோட்டிச் சுகமீக;
மரிய னென்று மிகுதியுறுங் காமத் தாழ்ந்தோன் கண்டீரே.

(இ-ள்.) [இது குருவினது பிரலாபத்தைக் கேட்ட சிஷ்யன் பிராயச்சித்த ரூபமாகத் துதித்தது. இவ்விரண்டு இருக்குக்களைத் துதிப்பவர்களுக்கு இஷ்டப் பிராப்தியும் பாப நிவாரணமுங் கிடைக்கு மென்பார் சௌ

## மண்டலம் 1 சூக்தம் 180.

நகர்.] எங்களுக்கருகே தங்கியிருப்பதும், எங்களது மனத்தில் எப்பொழுதும் வெந்திருப்பது மான இந்த ஸோமத்தை யான் வேகமாக ஸ்தோத்திரஞ் செய்வேன். குருசொன்ன காமப்ராலாபத்தைக் கேட்டதனாலுண்டான பாபத்தை அது நன்றாகத் தொலைத்து எங்களுக்குச் சுகத்தைத் தரட்டும். மர்த்தியனாகிய மநுஷ்யன் (அற்பகர்மவானா யிருப்பினும்) மிகுந்த காமத்தி லாழ்ந்தவனே.—(எ-று.) குருசொன்ன பிரலாபத்தின் விளைந்திட்ட என்னும் சொற்றொடர் வடமொழி மூலத்திலில்லை. ஸாயணருரையைநோக்கிச் சேர்த்தது. ஸோமம் என்பதைச் சந்திர பரமாகவும் அர்த்தஞ்செய்து கொள்ளலாம்.

(வேறு.)

6. அகத்திய னிவ்வா றேத்தின் யாகத்தின் பயனைத் தோற்றி
யகத்தினிற் பிரசை வன்மை புத்திர ராசை கொண்டே
யகத்தினை யோட்டு வோனா யிருடியா யிரண்டு மோம்பி
மகத்தின் மெய்ப்பலனைப் பெற்றுத் தேவரின் மருவினானே.

(இ-ள்.) அகத்தியன் இவ்வகையாக ஸ்தோத்திரம் யாகம் என்னும் இரண்டின் பலனையும் ஏற்படுத்தித் தனதுள்ளத்தில் பிரஜைகள் (வேலையாட்கள்) பலம், புத்திரர் இவர்களின் இச்சையை யடைந்து தனது பாபத்தை யோட்டிக் கொள்ளும் உக்கிரனாய், அதீந்திரியதிருஷ்டாவாகிய ரிஷியாய்க் காமம் தபஸ் என்னும் இரண்டையும் போஷித்து, யக்ஞ கர்மங்களின் உண்மைப் பலனையடைந்து தேவர்களுள் ஒருவனாகச் சென்றான் (அவன் எம்மைக் காக்க வென்பார் ஸாயணர்.)—(எ-று.) அகம், மனம், பாபம்.

வருக்கம். 22.

### 180. மண்டலம். 1. அநுவாகம். 24. சூக்தம் 1.

10 இருக்குக்கள்கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: அசுவினிகள்,

1. உமது தே ரர்ணவத்தைச் சூழவே யுருளும் போது
கமன சோபனமா ரும்மா ரஜத்தினிற் கடி தி னேகும்;
தமனிய வட்டை யுந்தேர்ச் சார்ந்தது தேனை யூற்ற
வமல வன்னதனை மாந்தி வைகலினணைகின்றீரே.

(இ-ள்.) (அசுவினிகளே!) உங்களுடைய தேரானது அந்தரமாகிய ஸமுத்திரத்தைச் சுற்றியுருளும் போது நடையழகு வாய்ந்த உமது குதிரைகள் உலகமெங்கும் வேகமாகச் செல்லும். உமது தேரின் பொன்வட்டை மதுரரஸத்தை யூற்ற நீங்கள் அம்மாதுரியமான ரஸத்தைக் குடித்து விடியற்காலத்தில் எமது யக்ஞத்தை நோக்கி வருகிறீர்கள்—(எ-று.)

2. விவித நன்னடைபோ ளர்யன் மிகுதியும் வணங்கப் பெற்றே
ளிவுளியன்னவன்றேர் முன்ன ரெழுந்து சென்றிடு மக்காலை
நிவரு மெத்துதியு முற்றீர்! மதுவினை நேடி யுண்பீர்!
சுவசையு முபக்காத்தோற்ற, மோய்ம் பனத்துதியு மோங்கும்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 4.

(இ-ள்.) எல்லாத் துதியையு முற்றவர்களே! மதுவைக் குடிப்பவர்களே! (அசுவினிகளே!) பலவிதசக்தியோடு கூடியவனும், நரர்களுக்கு ஹிதஞ்செய்பவனும், மிகவும் நன்றாகப் பூஜிக்கப் பட்டவனும், குதிரைபோல் வேகமாகச் செல்லுபவனு மாகிய சூரியனது தேருதிப்பதற்குமுன் நீங்கள் எழுந்து செல்லும்போது உமது ஸகோதரி (அல்லது தானே ஸஞ்சரிப்பவள்) ஆகிய உஷை உமது வரவை யெண்ணி உதிக்க, பலத்துக்காகவும், உணவுக்காகவும் யஜமானன் துதிக்கும் ஸ்தோத்திரங்கள் விளங்கா நிற்கும்—(எ-று.) ஸ்வஸா ஸஹோதரி, உஷை.

3. வனத்திடைத் திருடன் போன்று சுத்தனு மவிய லீயு
மினத்தாறு பாலே, புண்மை யுருவத்தீர், சமையா வாக்கட்,
கனத்தபாற் பசுவகட்டின் முதன்முதற் றோன்றி யோங்கும்
வனப்புறு மதனைப் பக்குவத்தினிற் சார்த்தினீரே.

(இ-ள்.) ரிதஸ்வரூபிகளாகிய அசுவினிகளே! காட்டின் மரங்களுக்கிடையிற் பதுங்கிச் சாக்கிரதையுடன் காத்திருக்கும் திருடனைப் போலச் சுத்தமான ஹவிப்பொருள்களோடு கூடிய யஜமானன் ஜாகரூகனைய்வணக்கத்துடன்றரும் பாலைக், கறவைப்பசுவின் கண் முதலிற் காணப்படும் அதனைப் (பாலையென்பதோடேற்றுக) பக்குவப் படாத கிடோரியினிடத்துப் பக்குவமான நிலையில் வைத்திர்கள்-(எ-று.) வநிநோ ஹ்ரவாரோந என்பதற்கு ஸாயணர் காட்டு மரங்களுக் கிடையிற்றிருடன் ஜாகரூகனைக் காத்திருப்பது போலவென்பார். ராத் (Roth) தென்பவரை யொட்டி மேனாட்டாசிரியர் (Griffith) மரப்புதருக்கிடையில் பாம்பு செல்வதுபோல நெருப்பு ஸமித்துக்களுக்கிடையில் எரிந்தொளிர்வதைக்காட்டுமென்பார். (Ludwig) லுட்விக் கென்பவர் ஹ்வாரா: பாம்புமன்று திருடனு மன்று மரத்தொட்டியா மென்பர்.

4. அத்திரி கருத வோட்டத் தாருநீ ரென்னத் தண்ணென்
றொத்திடச் சூட்டை யின்ப முறையுமா றாற்றி னீரால்;
உத்தம நரர்கா ளச்சுவினியர்கா ளுமதே யங்கி
தத்திய விட்டி; தேரி னுருளெனச சாருந்தேனே.

(இ-ள்) நரர்களே! அசுவினிகளே! அத்திரி ரிஷி வேண்டிக் கொள்ள அவன் அடைபட்டிருந்த சூட்டறையை, ஓடுநீரைப் போலத் தண்ணென்று இனிமை யாயிருக்கும்படி செய்திர்கள். அக்கினி யிஷ்டி உம்முடையதே. மதுத்துளிகள் தேருருள்களைப் போல ஓடி யும்மையடையும்—(எ-று.) மேனாட்டாசிரியர் உங்களுடைய தேர்ச் சக்கரங்கள் தேனூற்றுக்களைப் போல வெம்மாட்டு வருமென்பர். வடமொழி மூலத்தில் ரத்யாஇவ சக்ரா வென்றேயுளது. அத்திரி கதையை மண். 1 சூக்.112 செய். 7-ற் பார்க்க.மண். 1 சூக். 56 செய். 3, மண். 1 சூக் 116 செய். 8,இவற்றிலும் இதனைக் காண்க.

5. துக்கிரன் மகனின் வெற்றி தோய்ந்தவன் றன்னின்னவக
லெக்கிப் தனதானத்தை யேற்றும்பா லீகுவேன் யான்;
முக்கியம் பூவானீ ரும்மகிமையை முழுதுந் தோற்றும்;
எக்கியத் தூய்மையீ ருஞ் சுரையுளோன் பாவ நீங்கல்,

## மண்டலம் 1 சூக்தம் 180.

(இ-ள்.) வெற்றி தோய்ந்தவனாகிய துக்கிரன் மகன், புஜ்யுனைப் போல யானும் விடியற்காலத்து யக்ஞ ஹவிகளைச் சுமந்துவந்து உமக்குத் தருவேன். பூமியும், வானமும், நீரும் (இச்சொல் ஈண்டு அந்தரிட்சத்தைக் குறித்தது) உமது மகிமையை விளக்கும். பூசிக்கத் தக்கவர்களே! உம்முடையவனாகிய ஜரையோடு கூடிய இந்தரிஷி பாபங்களினின்றும் நீங்கட்டும் —(எ-று.) துக்கிரன் மகனைப் பற்றி மண். 1 சூக். 116 செய். 3 பார்க்க.

வருக்கம். 23.

6. நற்கொடை போரே, பூட்டப் பெற்றவும் பரிகளோடு
முற்பட வரும்போ தூண்டி பொடுபுவி முழுது விப்பீர்;
எற்படு சூரி வாத னெனவுமை யுவப்பி னூட்டல்;
பொற்புறு நோன்போனென்னைப் பூரணவுணவைக் காண்பான்.

(இ-ள்.) நல்ல தானத்தோடு கூடிய அசுவினிகளே! உமது தேரிற் பூட்டப்பெற்ற குதிரைகளோடு நீங்கள் வரும்போது பூமி முழுதும் உணவுப் பொருள் நிறைந்திருக்கும் வண்ணஞ் செய்வீர்கள் யாக நடத்துவிக்கும் ஸூரி வாயுவைப்போல உங்களை வேகமாகத் திருப்தி செய்து அவியுணவை யளிக்கட்டும். நல்ல நோன்போடு கூடியவனைப்போல (அல்லது விரதாநுஷ்டானனைப்போல) அந்த ஸூரி பரிபூரணமான உணவுப்பொருள்களை யடைவான்—(எ-று.) ஸ்வதாபி: என்பதற்கு அன்னப் பொருள்களால் என்றாற் உங்களது தன்மைப்படியென மொழிபெயர்ப்பர் மேனாட்டாசிரியர். அவருடைய உரை வருமாறு: 'நல்ல தான கர்த்தாக்களே! நீங்கள் புணைக்கப் பட்டகுதிரை யிட்டங்களைக் கீழ்நோக்கி யடித்துவிடும்போது, உங்கள் ஸ்வபாவமாக ஞானத்தையும் அனுப்புகிறீர்கள். காற்றைப்போல வேகமாக ஸூரி உங்களைத் திருப்தி செய்வித்து விருந்தளிக்கட்டும். அவன் பக்திமானைப் போல் அபிவிருத்தியடையப் பலத்தை யடைகிறான்.'' என்பதாம்.

7. மெய்ப் பலனுற்ற போற்றோர் யாங்களும் பல்வகையி
னெய்ப்பறத் துதிப்போம்; பேர வுலோபியும்புறகே; எங்க
ளுய்ப்புறு மிசசைமீவீர், பழிப்பிலீ ரருகிற் றேவர்
துய்ப்புறு மதனை யின்னே தோய்ந்துகாண் பருகுமீரே.

(இ-ள்.) ஸத்ய பலன்களைப் பெற்ற துதியாளர்களாகிய யாங்களும் பலவிதமாக உம்மைக் களைப்பின்றித் துதிப்போம். உங்களோடு பேரஞ் செய்யும் லோபி இதிற் சேராதவனாம். எங்களுடைய இச்சைகளை யளிப்பவர்களே! நிந்தை யற்றவர்களே! அருகிலிருந்து தேவர் குடிக்கும் இச்சோமத்தை யிப்போதே நீங்களும் அடைந்து குடிப்பீர்களாக—(எ-று.) கடைசியடிக்குமேனாட்டாசிரியர், 'எவன் தெய்வ மருகிலுறுமோ அவனைக் காப்பீர்களாக.' என்ற உரை கூறுவர். பேரம், வியாபாரம், விலையைக் குறைத்துக்கேட்பது.

8. உண்மையி னசுவினிக்க ளும்மையே நாளும் வெப்பத்
திண்மையை யழிக்கு மாரி நீரினைச் சேர, மாந்தர்
வண்மையோர் தம்மிற் கீர்த்தி மருவிய வகத்தியன்று
ளெண்மையாயிரம்போற்றுமேலயுணர்த்தினுனிசையினென்ன.

(இ-ள்) அசுவினிகளே! நேதாக்கள் (அல்லது காரிய நிர்வாஹகர்கள்) ஆகிய மனிதருள் சிறப்பு வாய்ந்தவனான அகஸ்திய மஹாரிஷி, ஸங்கீத ஸ்வர சப்தங்களைக் கூட்டுவதைப்போல ஆயிரக்கணக்கான ஸ்தோத்திரங்களால் உஷ்ணதாபத்தைக் கெடுக்கும் மழைநீரை யுடையுமாறு உம்மையே துதிக்கிறான்—(எ-று.) சேதயதி ஸ்துத்யாப்ரபோதயதி யென்பார் ஸாயணர். நிகழ்காலப் பொருளில்வந்த இறந்தகாலம் உணர்த்தினனென்பது.

9. தேரினின் மகிமையா னீர் செல்லுறும் போது, மாந்த
ரோருறு மோதாவைப்போற் றுடிப்புட னெழுகும்போதுஞ்,
சூரிக டமக்கு நன்மாக் கொடையினைத் தோய்க்கும் போது,
மாருக யாமு நாசத்தியவர்காள் செல்வங் கூர்ந்தே.

(இ-ள்.) பொய்யுரையாதவர்களே! தேரினது மகிமையால் நீங்கள் செல்லும்போதும், மனிதர்களுக்குள் ஹோதாக்களைப்போல அவசரத்தோடு நீங்கள் ஒழுகும்போதும், ஸூரிகளாகிய யாக கர்த்தாக்களுக்கு நல்ல அசுவங்களைத் தரும்போதும், யாங்களும் செல்வம்நிறைந்தவர்களாக விருக்கட்டும்—(எ-று.)

10. இன்றியாந் தோமந் தம்மா லெதிருற வழைப்போ முங்கள்
பொன்றலி லுருளை வாய்ந்து விண்புடை சூழுந் தேரைக்,
கன்றலிற் புதியவஃதைக் கனம்பெற வசுவினீர்காள்;
துன்று மொய்ம் புண்டியோ டியா மாயுளும் பெற்றுவாழ்க.

(இ-ள்.) அசுவினிகளே! அழியாத வுருளைகளோடு கூடியதும், ஆகாயத்தின்மேற் சூழ்ந்து செல்வதும், புதியதுமான உங்களுடைய தேரைச், செல்வத்தைப்பெற யாங்கள் இன்றைக்குத் தோமங்களால் எங்களை நோக்கிவரும்படி யழைப்போம். வன்மை பொருந்திய வுணவையும், ஆயுளையும் யாங்களடைந்து வாழ்க—(எ-று.)

வருக்கம். 24.

## 181. மண்டலம். 1. அநுவாகம். 24 சூக்தம். 2.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப்; தேவதை: அசுவினிகள்.

1. பிரிய வுத்தமர்காள் வன்மை தன்னிலுந், தனத்து,மெஃதைப்
பெரிய வத்வர்யுக்கள்போ லறனின்றும் வெளிக்கொணர்வீர்?,
அரிய வுங் கீர்த்தி தன்னை யிம்மகந் தோற்றுவிக்கும்,
நரர்களைக் காப்பீர், செல்வ நல்குவீ ரவர்களுக்கே.

(இ-ள்.) பிரியதமர்களே! அத்வர்யுக்களைப்போல நீங்கள் பலத்திலும், செல்வத்திலுஞ் சிறந்த எதனைத் தண்ணீரினின்றும் வெளிக்கொணர்வீர்கள்? ஜனங்களை ரட்சிப்பவர்களே! அவர்களுக்குச் செல்வத்தைத் தருபவர்

சகளே! இந்த பக்ஷமானது உமது கீர்த்தியை வெளிப்படுத்துகிறது (எ-று.

2. தூய வும் பரிகள், மாரி பருகுவ, வாயு வேக
முயவை, தெய்வத் தன்மை மேவுவ, மனோ பலத்த,
வேயுந் தம் மொளிப, காட்சிக்கினிய பிட்டத்த, வோட்டந்
தாயநன் னடை யிளைய, வசுவினீ, ருமைத் தாங்க.

(இ-ள்.) அசுவினிகளே! மழைநீரைக் குடிப்பவையும், வாயுவேக முள்ளவையும், தெய்வத்தன்மை பொருந்தியவையும், மனோபல முள்ளவையும், ஸ்வயமாகப் பிரகாசிப்பவையும், பார்ப்பதற்கழகான பிருஷ்டத்தோடு கூடியவையும், ஓட்டமே நடையாக வுடையவையும், இளமை வாய்ந்தவையுமான வுங்களுடைய குதிரைகள் உங்களைச் சுமக்கட்டும்—(எ-று.)

3. அகன்ற முன்னிடத்த, இச்சையளிப்ப, திங் கவனி யென்ன
வகன்றது, மனோ வேகத்த, தகத்தறி வோடியைந்த,
துகந்தெவ ருந்துதிக்க வோங்கு முந்தே ரெமக்குச்
சுகந்தர வருக சொந்தத் தேரி னுன்னதத்திற் றேய்ந்தீர்!

(இ-ள்.) உங்களது சொந்தத்தேரின்மீது உன்னதஸ்தானத்திலமர்ந்துள்ள அசுவினிகளே! அகலமான முன்னிடத்தோடு கூடியதும், இச்சைகளை வருஷிப்பதும், பூமியைப்போல விசாலமாக வுள்ளதும், மனோவேகத்தோடு கூடியதும், அறிவோடு கூடிய மனத்தோடுள்ளதும், எல்லாராலுந் துதிக்கப்படுவதுமான உங்கள் தேர் எங்கட்குச் சுகத்தைத் தருமாறு எமது யக்ஞப்பிரதேசத்தை நோக்கி வரட்டும்—(எ-று.)

4. இகத்திங்கு பிறந்தோர், பாப மின்றிய வுடலோர், தத்தம்
மகத்துவக் குறியோ ரும்மை மகத்தினிற் றுதித்தோ நன்கே;
மகத்து நற்சூரி வெற்றி வாய்ந்தவ னொரு வனும்மின்;
சுகத்தினி லுரைப்பர் விண்ணின் சோபன மகன் மற்றோனே.

(இ-ள்.) இவ்வுலகத்து மத்திம உத்தமஸ்தானங்களிற் பிறந்தவர்களும், (குருவாகிய ததீசியைத் தலையைக் குறைத்தும்) பாபத்தையடையாத உடலோடு கூடியவர்களும், தத்தமக்கென (நாஸத்தியா, தஸ்ரா என)ப் பிரத்தியேகமான அடையாளங்களோடு கூடியவர்களுமாகிய உங்களிருவரையும் யக்ஞத்திலிடத்து நன்றாகத் துதித்தோம். உங்களுள் ஒருவன் மத்தியமஸ்தான உற்பன்ன ஸோமாதிஷ்டானதேவதையான சந்திரனாய், ஜயசீலனாய், யக்ஞ நிர்வாஹக ஸூரியா யிருப்பான். (சந்திரனாலேயே ஓஷதிவனஸ்பதிகள் விருத்தி யடைவதா லென்பர் ஸாயணர்.) உங்களுள் மற்றொருவன் விண்ணின்புத்திரனும், சோபன கிரணங்களோடு கூடியவனுமான ஆதித்தியனென்று சிலர் (தாங்கள் பெறும் சுகத்தை யெண்ணி)ச்சொல்வார்கள்—(எ-று.) ததீசி அதர்வணன் புத்திரன். மண். 1சூக். 116 செய். 12 பார்க்க. நிருக்தக்காரர் அசுவினிகள் ஸூர்யசந்திரர்க ளென்பர். மண். 1 சூக். 89 செய் 3 பார்க்க. சுகத்தினில் என்றது வடமொழி மூலத்திலில்லை.

5. பொன்னிறச் சிரேட்டத் தே, ரும் மனப்படி புரியு மஃது,
துன்னிய கிழ்த்தலத்தே தோய்வ தெம்மில்ல மேக;

## அஷ்டகம் 2 அத்தியாயம் 4.

அன்னியு னரியை மாந்த ர்ார்த்துவ, ரசுவினீர்காள்!
மன்னிய துதிகளோடு மதனஞ்செ யுணவு கொண்டே.

(இ-ள்.) மஞ்சள் நிறம் வாய்ந்ததும், சிரேஷ்டமானதும், உங்களிஷ்டப்படி செய்வதும் கீழ்நோக்கி யோடுவதுமான உமது தேர் எமது யக்ஞக் கிரகத்தை நோக்கி வரட்டும். அசுவினிகளே! உங்களுள் மற்றவனுடைய அரீ யென்னுங் குதிரைகளிரண்டையும், உலகத்திலுள்ளவர்களாகிய யஜமானர்கள் ஸ்தோத்திரங்களோடு மத்தித் தெடுத்த உணவுகளினூ லூட்டுவார்கள்—(எ-று) அன்னியன்யாரென விளங்கவில்லை. உங்களுக்குள் உத்தமனது குதிரைகளை என்பது ஸாயணருரை. மேஞட்டாசிரியர் இவ்விருக்கின் பின்னடிக்குவேறுமாதிரி உரைகூறுவர்:'மற்றவனது அரீயென்னுங் குதிரைக்கு மனிதர் வயிறு நிறையவூட்டுவார்களாக. அசுவினிகளே! அவர்கள் முழக்கங்களோடுரஜங்களைக்கலக்குகிறூர்கள்.' என்பது. ஆனுல் ஸாயணர், ரஜாம்ஸி லோக: அத்ர லோக சப்தே ஜநவாசக என்பர். இவர்மத்நா வென்பதை வாஜை: என்னும் பதத்தோடு சேர்ப்பர்.

### வக்கம். 25.

6. உங்களுட் சரற்காலத்தோ னிடபமே யெனப் பகையை
மங்குறப் புரிந் தேராள மதுரமா ருணவிகொண்டு
தங்குற வருகின்றூன்; மற்றொருவன்ற னிச்சை யூட்டிப்
பொங்குவர்; அவன்றூன் றூண்டுமுபர்புனலெம்மாட்டெய்தும்.

(இ-ள்.) உங்களுள் சரத் காலத்தனுகிய வொருவன் (சந்திரன்) இடபத்தைப் போலச் (இச் சொற்கு மேஞட்டாசிரியர் முகிலைப் போல வென்றும், ஸாயணர் மழை பெய்விக்கும் இந்திரனைப் போல வென்றும் உரை கூறுவர்.) சத்துருக்களை வாட்டி ஏராளமான மாதுர்ய வுணவுப் பொருள்களோடும் வருகிறூன். மற்றொருவனுகிய ஆதித்யனுடைய இச்சைகளை யவனுக்களித்து யஜமானர்கள் களிப்பார்கள். அவன் ஏவும் உன்னதத் தானத்துச் செல்லும் மழைநீ ரோட்டங்கள் எம்மை யடையும்—(எ-று.) இப்பாட்டிலும் மேற் பாட்டிலும் பின்னிரண்டடி யிலுள்ள அந்யஸ்ய வென்னும் சொல்லால் முன்னிரண்டடியில் ஏகஸ்ய என்னும் சொல்வருவித்துக் கொள்ள வேண்டியது தகுதி யென்பார் வில்ஸன் என்பவர். இச்செய்யுளில் முதற்பாதி சந்திரனையும் பின்னிரண்டடி சூரியனையும் துதித்தபடி. அசுவினிகள் சூரிய சந்திரர்களென்று நிருக்தம் கூறும்.

7. வேதசி ரசுவினிக்கா ணிலைபெறு முமதுகீத
மோது மூவிதத் துறுதி யோங்கிய ததை யுரைத்தார்;
நீதரு தோம்பல் போற்றப் பெற்றுமை யாசிப் போனைக்;
காதினிற் கொளலென் போற்றை யியங்கினு மியங்கி ரேனும்.

(இ-ள்) பலனை யமைக்கும் தெய்வங்களே! ஸ்திரமானதும், மூன்று விதமாக வுறுதி யடைந்து விளங்குவதுமான உமது கீதத்தைக் கூறினூர்கள் ஸ்தோத்திரத்தை யடைந்தவர்களாய் யாசிப்பவனை ரட்சிப்பீர்களாக நீங்கள் சென்று கொண்டிருப்பினும் அல்லது ஓரிடத்து நிலைத்திருப்பினும்

எனது அழைப்பைக் காது கொடுத்துக் கேட்பீர்களாக—(எ-று) வேதசிர், விதாதாக்களே, பலவினை யமைப்பவர்களே. மூவகை யுறுதியாவது மூவர் வாயினின்றும் வருவது. ஹோதா, அத்வர்யு, உத்காதா மூவர்.

8. ஒளிபெற வுமது மெய்ப்பைத் தோற்று மித்துதி நாங்கட்
களியுற, மூவ்விதத்தே யணிந்திடு தருப்பை யில்லிற்
களிபெறப் பெருகிற், றுங்கள் மழைமுகில், வலிபெறுநத்திர்,
துளியொடு பெருகி நின்ற, மனிதர்க்குக் கிரமொத்தே.

(இ-ள்.) காந்தியோ டிருக்கும் வண்ணம் உமது ரூபத்தைத் தோற்று விக்கும் இத்தக்கிதம், மனிதர்களுக்குத் திருப்தி யுண்டாகுமாறு, மூன்று விதமாக விரிக்கப்பட்ட தருப்பை யோடு கூடிய யக்ஞக்கிரகத்தில் பெருக்க மடைந்து நின்றது. வலிமை சிறந்த அசுவினிகளே! இச்சைகளை வருஷிக் கும் உங்களுடைய மழையைத்தருமேகம் மனிதர்களுக்குப் பசுவின் பாலைப் போலப் பயனிறைந்ததாய் மழைத் துளிகளோடு பெருகி நின்றது—(எ-று.)

9. பல்லறி வுள்ளோனக் கிவைகலைப் போற்றுங் கன்மக்
தொலைறு மசுவினிர்கா ளுமைச் துதிப்பான் பூடன்னி,
னல்லவை கொண்டு தோதா வணக்குட னுமைக் கூவுங்கால்;
வலிமை யுண்டி யாயுள் மருவியாம் வாழ்க நன்றே.

(இ-ள்.) அசுவினிகளே! ஸ்தோதாவானவன் நல்ல அவிப் பொருள் களைக் கையிற்கொண்டவனும் வணக்கத்துடன் உம்மை யழைக்கும் போது பூஷனைப் போலப் பலவித அறிவுள்ள அந்த யஜமானன் அக்கினியையும் உஷ ஸையும் துதிக்கும் பிராதக்காலக் கர்மத்தில், முடிந்தவகையில் உங்களை ஸ் தோத்திரஞ் செய்வான். யாங்கள் பலத்தையும், அன்னத்தையும், ஆயுளையும் பெற்றுவாழ்வோமாக—(எ-று.) தோதா ஸ்தோதா வென்பதன் தற்பவம்.

வருக்கம் 26.

## 182. மண்டலம். 1. அநுவாகம். 24. சூக்தம். 3.

8 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: 6, 8, திருஷ்டுப், மற்றவை ஜகதி; தேவதை: அசுவினிகள்.

1. பெருமார்வி தெழுந்தது, போற்றி வினர்காள்,
விழை வளிக்கும் பெரிய தேரிங்
கேருறவே வந்தது, போற்றெழுமிதனை
யெதிர்ப்படுவீர்; இன்பங் கொள்க
சாருமு நற்றுதியர், விசுபலைக்கு வசு
வளித்தவர், நன் மதியைத் தூண்டுந்
திரர், திவப் புதல்வர், சுசி விரதருக்கு
நலமதனைச் செய்கு வோரே.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 4.

(இ-ள்) மேதாவிகளாகிய ரித்விஜர்களே! நம்முடைய பிரக்ஞானமானது எழுந்தது. நமது ஆசைகளை யளிக்கும் பெரிய தேர் நமக்கு முன் வந்தது; ஸ்தோத்திரங்களோடு மதன்முன் னேகுவீர்களாக. நன்றாய்த் துதிக்கப் படுபவரும், விச்பலைக்குச் செல்வ மளித்தவர்களும், நமது புத்தியைத் தூண்டிவிடும் தீரரும், விண்ணிற்குப் புத்திர ஸ்தானத்திலுள்ளவர்களும், சுத்தமான நோன்பாளர்க்கு நலத்தைச் செய்பவர்களுமான அசுவினிகள் மதங் கொள்ளுக—(எ-று.) விசுபலைக்குத் தங்கக் கணைக்கா லளித்தவர்களு மென்பார் ஸாயண ரீண்டு. மண். 1 சூக். 116 செய் 15-ல் இரும்புக் காலென்பர். இவ்வேறுபாட்டாலும் இவ்விரண்டாவது அஷ்டக உரைவேறொரு கைப்பாடென்பது போதரும்.

2. அசுவினிகாள், துதிபெறுவீர், மருத்தமர்காள்,
பகைவர் தமை யடக்குவீர்கா,
ளிசையுறு நற்றொழிலீ, ரிந்திரத்தமர்காள்,
தேருடையீ, ரேறுந் தேரை
விசைபெறத்தூண் டுத்தமர்காள், எங்குமுறுவது
மதுக்கள் மிகுந்து முற்றுங்
கசியுறு முந்தேரை யிவணடத்துக;
தாசுடன்கன்மற் றதனோ டெய்த

(இ-ள்) அசுவினிகளே! துதிக்கப்படுபவர்களே! மருத்துக்களைப் போலவேகத்திற் சிறந்தவர்களே! பகைவர்களை யடக்கும் தஸ்ராக்களே! கீர்த்தி வாய்ந்தநற் கருமத்தோடு கூடியவர்களே! இந்திரனைப்போல ஈசுவரோத்தமர்களே! தேரை யடைந்துள்ளவர்களே! எறிச்செல்லும் தேரை நடத்துவதிற் சிறந்தவர்களே! எல்லாவிடத்திலும் தோன்றுவதும், மாதுர்யமான தேன் நிறைந்து வழிவதுமான உங்கள் தேரை இங்கு நடத்திக் கொண்டுவருவீர்களாக. அவியளிப்பவனிடத்து அத்தேரோடு வருவீர்களாக—(எ-று.) இந்திரதமர், ஈச்வரோத்தமர்களென்பது ஸாயணருரை.

3. பகைவரைப்பிரவ்விடத்தே யென்செய்வீர்?
அவியீயார் பண்பார் மேன்மைத்
தகையுறுமச் சனத்தினிடைத் தங்குறலேன்?
அவர் தம்மைத் தாண்டிச் செல்க;
மிகவுமுமக் கெதிர்ப்பேர மாடுவன்ற
னுயிரதனை விரிவித் தாற்றல்;
நகுமொளியை யுமைப்போற்றும் வாக்கினனும்
விப்பிரன்பா னுடிக் கூட்டல்.

(இ-ள்) சத்துருக்களை வதைக்கும் தஸ்ராக்களே! அவ்விடத்தே யென் செய்கிறீர்கள்? அவியுணவுகளை யுங்களுக்களிக்காது பெருமை பாராட்டிக்கொள்ளும் ஜனங்களினிடத்து என் தங்கி யிருக்கிறீர்கள்? அவர்களைத்தாண்டிச் செல்வீர்களாக. உங்களுக்கெதிரிற் பேரம்பேசு மவ்வுலோபியின் பிராணன் அழியுமாறு புரிக. உங்களைப்போற்றும் வாக்கோடு கூடிய விப்பிரனிடத்து ஜோதியைக் கூட்டுவீர்களாக—(எ-று.)

## மண்டலம் 1 சூக்தம் 182.

4. எப்புறமு, மெமையிகழு நாயதனைப்
பலாற்கடித்து நொறுக்கி யெம்மோ
டொப்புறவே பொருமவரைக் கொல்க; விவை
யசுவினிர்கா ளோர்வீர் நன்கே;
செப்புறு முந்துதியினன்கூ றெச்சொல்லும்
பலனுளதாச்செய்க; என்றன்
றப்பறு நற்றுதியினை நீரிருவருநா
சத்தியர் காள்சால வேற்க,

(இ-ள்.) எம்மை நிந்திக்கும் நாய்க்கு ஸமானமானவனை யெல்லாப் பக்கத்திலும் பல்லாற் கடித்து நொறுக்குவீர்களாக. எம்மோடு ஸமான மாக யுத்தஞ்செய்யும் பகைவர்களைக் கொல்லுக அசுவினிகளே! இவற் றை நீங்கள் நன்கு யறிவீர்கள். உங்களைத் துதிப்பவன்கூறும் பிரதி வார்த்தையையும் பலனுள்ளதாகப் புரிக. நாஸத்தியர்களே! என்னுடைய துதியை நீங்களிருவரும் நன்றாக ஒப்புக்கொள்வீர்களாக—(எ-று.)

5. உரத்தோடு சிறகார்ந்த விப்பிலவந்
தனைமுந்நீ ருவந்து தாண்ட
வராத்தர்ந்த துக்கிரன்றன் மகனுக்காப்
புரிந்தனிர்நீர் மருவுந் தேவர்
திரத்தாளு மனத்தோடு சுகமாக
வெளிக்கொணர்ந்திர் செய்ய வஃதாற்;
பெருத்தோங்கும் வெள்ளமதி லமிழ்ந்தவனை
யிலேசாகப் பேர்த் திட்டீரே.

(இ-ள்) வலிமையோடு கூடியதும், பக்கத்திற் சிறகுகளோடுகூ டியதுமான இந்தக் கப்பலைச் சமுத்திரத்தைத் தாண்டும் வண்ணம் துக்கிர புத்திரனான புஜ்யனுக்காகச் செய்தீர்கள். தேவர்களது அநுக்கிரகத்தைப் பெறும் மனத்தோடு, அவனைச், சிறந்த வந்தத் தேரினது வுதவியினாற் சுக மாக வெளிக்கொண்டு வந்தீர்கள். பெரிய வெள்ளத்தி லமர்பவனை லேசாக மேற்றூக்கினீர்கள்—(எ-று.) பிலவம் ப்லவம், கப்பல். ஆத்மன்வந்தம் என்பதற்கு ஆத்துமாவோடு அல்லது உயிர்ப்போடு கூடியவென்பார் மே ளுட்டாசிரியர். ஆனால் பலத்தோடு அல்லது திடத்தோடு கூடியவென்பார் ஸாயனர்.

### வருக்கம். 27.

(வேறு.)

6. அகட்டினின் மூழ்கி நான்கு கலமச்சுவினியர் தம்மா
லாகப்புற வோட்டப் பெற்ற, வுதகத்துட் டலேகீழாகத்
தொகுப்புறுந் தமத்திற் பற்றுக் கோடின்றி யாழ்ந்ததுக்ரன்
மகப்படுந் துயரி னன்னுன் றனைவெளிக் கொணருகின்ற.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 4.

(இ-ள்.) அசுவினிகளா லோட்டப்பெற்ற நான்கு கப்பல்கள் சமுத்திரத்துக்குள் மூழ்கித். தண்ணீருக்குள் தலை கீழாகத் தள்ளப்பெற்று நிறைந்த இருட்டுப் பிரதேசத்தில் ஒருவித ஆதாரவுமின்றி யாழ்ந்த துக்கிரனுடைய மகனாகிய புஜ்யன் படுந் துன்பத்திலிருந்தும் அவனை வெளிக்கொண்டு வருகின்றன—(எ-று.) புஜ்யனைப் பற்றி மண். 1 சூக் 116 செய் 3 பார்க்க.

(வேறு.)

7. அருணவத்தி னிடைத் தௌக்கிரியன்வணக்கி
னொடுசூழ்ந்தே யணைந்து பற்றத்
தருவெதுவே நின்றுளதவ் வாலம்பந்
தனைப்பற்றிச் சாருங் கீர்த்தி
மருவுறநீ, ரசுவினிகாள், சிறகோடு
பாய்மிருகம் வாய்ந்து பற்றிச்
சருவுறுமோர் மலாறென்னச் சுகமாக
வவன்றன்னைத் தாங்கிச் சென்றீர்.

(இ-ள்.) சமுத்திர மத்தியில் துக்கிரன் மகனாகிய புஜ்யன் வணங்கி யாசித்துக்கொண்டவனுய்ப் பற்றித்தொங்குவதற்கான மரமெது நின்றது? அசுவினிகளே! சிறகோடு கூடிய பிராணி பிடித்துத் தொங்குவதற் கேற்பட்ட மலாறைப் போல நீர் அத்துக்கிரன் மகன் பற்றியுள்ள அம்மரக் கொம்பைப் பிடித்து உமது கீர்த்தி யோங்கும் வண்ணம் சுகமாக அவனைக் கரை சேர்த்தீர்—(எ-று.) இச்செய்யுள் மொழி பெயர்த்தற் கரியதாயுளது. தரு, மரம் அதனாற் செய்த தேரைக் குறிக்கு மென்பார் ஸாயனர். மலாறு, மரக் கொம்பு.

8. நரரொடு நாசத்யர்கா ளுடியே வணக்கத்தோடு
வரமுறு சோமமீயு மகக்குழு நின்று மின்று
புரியுமெந் துதி யுமக்குப் பொருந்தியதாக; யாமுங்
கருதியவுண்டி வன்மை நெடும்பகல் வாழ்வுங் காண்க.

(இ-ள்.) நரர்களே (அல்லது நேதாக்களே!) பொய்யுரையாதவர்களே! சிறந்த ஸோமத்தைப் பிழிந் தூட்டும் இம்மகக் கூட்டத்தினின்றும் இன்றைக்கு வணக்கத்தோடு கூறும் ஸ்தோத்திரம் உங்களுக்கு அறகுணமுள்ளதாக விருக்கட்டும். யாங்களும் நினைத்த வுணவுப் பொருள்களையும் பலத்தையும், நீண்ட வாயுட்காலத்தையு மடையட்டும்—(எ-று.) ஈண்டும் மாநாஸா: என்பதற்கு வணக்கத்தோடு என்னாது மானஸனல் எனமொழி பெயர்ப்பர் மேனாட்டாசிரியர்.

வருக்கம். 28.

## 183. மண்டலம். 1. அநுவாகம். 24. சூக்தம். 4.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: அசுவினிகள்.

## மண்டலம் 1 சூக்தம் 183.

1. மனத்தினும் வேகம் வாய்ந்த வந்தூர மூன்று மூன்று
கனத்த பேருருளை மூன்று தாதுவி னானதோங்கு
மனத்தொடு சற்கன்மத்தோ னில்லினை நோக்கி நீங்கள்
தினத்தும் விஞ்சிறைப்புளென்னச் சேர்ப்பதைப் பூட்டீர் வல்லீர்

(இ-ள்.) பலம்பொருந்திய காளைகளே! மனத்தைக்காட்டிலும் வேகமாகச் செல்வதும், மூன்று ஸாரதிஸ்தானங்களோடு கூடியதும், மூன்று உருளைகளுள்ளதும், பொன், வெள்ளி, தாமிரமென்னும் மூன்று லோகங்களாற் செய்யப்பெற்றதும், ஸத்கர்மங்களோடு கூடிய யஜமானனது கிரகத்தை நீங்கள் சிறகோடு கூடிய பட்சி பாய்வதுபோல நோக்கிச் வேகமாகக் கொண்டுவந்து சேர்ப்பதுமான தேரைப் பூட்டுவீர்களாக—(எ-று.) வந்தூரம் வடமொழிப்பதம், தேர்த்தட்டென்பது பொருள். மூன்று வந்தூரங்கள் அசுவினிகளது தேர்க்குண்டென்பதை மண். 1 சூக். 34 செய். 9ற் பார்க்க.

2. கிருதுவுள்ளவர்காள், நீங்க ளவியுணா விச்சையோடு
பிருதுவி யடைய வேறி னுருளு நன்குந்தேர்; உந்த
முருவினைப் பிறக்குங் கிதமிஃதுமை யுயர்வி னுற்றல்;
கருதறு விண்ணின் பெண்ணு முஷையொடுங் கடுகுவீரே.

(இ-ள்) கர்மத்தோடு (ஞானத்தோடென்பர் மேனாட்டாசிரியர்) கூடியவர்களே! யஜமானர்கள் தரும் அவி யன்னத்தின் அசையோடு யாகபூமியை யடைவதற்காக உமது தேரின்மேலறினால் அத்தேர் இலகுவாக உருண்டுவரும். உங்களுடைய ரூபத்தை யழகுபடுத்தும் இந்த ஸ்தோத்திரமேமானது பெருமையுற எங்களைச் சேவிக்கட்டும். விண்ணின் புத்திரியாகக் கருதப்படும் உஷஸோடும் நீங்கள் விரைகுவீர்கள்—(எ-று.) அசுவினியாது காலமும் உஷவின் காலமுமொன்றே யாதலின் என்பார் ஸாயணர்.

3. ஏறுக நன்கே யோடுந் தேரினை, யவியினோடு
கூறுநோன் பதனையாற்றுங் கொள்கையினுனேற்றுவோன்பான்
மாறிலா நரர்கா, ளுசத்தியவர்கா, ளடைந்து மக்க
ளூறற வவனு யோங்க நீருற வென்னு மஃதை.

(இ-ள்.) எதிரில்லாத வீரர்களே! பொய்யுரையாடாதவர்களே! அவிப்பொருள்களைக் கையேந்திச் சொல்லப்படும் விரதாநுஷ்டங்களைச் செய்யுங் கொள்கையோடு யக்ஞத்தைச் செய்பவனிடத்துச் சென்று, அவனும் அவனுடைய சந்ததியும் ஓங்குமாறு நீங்களூர்ந்து யாகதலத்தை யடைய வெண்ணி வேகமாக வருகும் தேரினை யேறுவீர்களாக—(எ-று.)

4 பகைவரைத் தெறுப்பி ளூர்த்த மருளினுங் காட்டு நாயும்
பகைவ ரன்னியருமென்னைப் பதைப்புற வாட்டல்; என்னைத்
தகையுற விடுத்து வேறே ரளியன்பாற் சாரீர்; உம்பால்
குகைதரு போற்று மிங்குன் டும்மதிம் மதுவார் வள்ளம்.

(இ-ள்.) சத்துருக்களை வாட்டும் தஸ்ராக்களே! உமது அநுக்கிரகத்தினால் என்னைக் காட்டு நாயும் இதர ஹிம்சகர்களும் வருத்தாதிருக்கட்டும். என்னை விடுத்து வேறொரு அவி தரும் யஜமானனிடத்துச் செல்லாதீர்கள். உங்களுடைய அவிப்பாகமும், ஸ்தோத்திர கீதங்களும் இங்கேயிருக்கின்றன. மதுநிறைந்த இந்தப் பாத்திரம் உங்களுடையதே—(எ-று.) 'காட்டு நாயாவது அதன் பெண்ணாவது உங்களை வருத்தாதிருக்கட்டும்.' என மொழிபெயர்ப்பார் மேனாட்டாசிரியர். அசுவினிகள் காட்டுநாய் வாயினின்றும் பட்சியை மீட்ட கதைக்கும் இச்செய்யுட்கும் உபரோத சம்பந்தமொன்றுமில்லையென்பார் லுட்விக் என்பவர். ஸாயணருரைதான் பொருத்தமுள்ளதாக இந்நூலாசிரியரது கருத்து.

5. கோதமன் புருமீளன்று னத்திரி யிவர்களும்மை
நீதியிற் காக்குமாறு நேடியே யழைத்தார்; தெவ்வவைக்
காதுவீர், குறித்த சாரைக் கருதிநேர் செல்வோ னென்ன
வோது மென்னழைப்பை நோக்கி யுறுக,பொய்யுரையாதீரே.

(இ-ள்.) கோதமன், புருமீஹ்ளன், அத்திரி யென்னும் (உங்களுக்குப் பிரியமான) ரிஷிகள் தங்களைக் காப்பாற்றுமாறு உங்களைக் கூவியிரந்தார்கள். (அதுபோலவே யானு மழைக்கிறேன்.) பகைவரைக் கொல்லும் தஸ்ராக்களே! நாஸத்தியர்களே! குறித்த விடத்தை நாடிச் செல்பவன் நேராகப்போய் அவ்விடத்தை யடைவதுபோல நீங்களும் எனது அழைப்பைக் கேட்டு (எனக்கு அநுக்கிரகம் புரியுமாறு) நேராக வருவீர்களாக—(எ-று.)

6. இருளினக் கரையை யாங்கள் கடந்தனம்; உமக்கி யாங்கள்
புரியு மித்துதி யும்மீது பொருந்திய ,தசுவினீர்காள்;
தெரியு நற்றேவ யாதையூடு சேருக விங்கு; யாமும்
கருதிய வுண்டி வன்மை நெடும்பகல் வாழ்வுங் காண்க.

(இ-ள்.) கீர்த்திக்குப் பிரதிபந்தமாயுள்ள துக்கமாகிய இந்த இருட்டினது எல்லையைக் கடந்தோம். அசுவினிகளே! உங்களுக்காக யாங்கள் செய்த ஸ்தோத்திரங்கள் உம்மிடத்துவந்து சேர்ந்தன. நன்றாகத் தோன்றும் தேவர்கள் செல்லும் நெறியின் வழியாக இங்கு வருவீர்களாக. யாங்களும், உணவு, பலம், நீண்டவாயுள் இவற்றை யடையட்டும்—(எ-று.)

வருக்கம். 29.

ஆகச் செய்யுள். 554.

நான்காவது அத்தியாயம் முற்றும்.

---

## ஐந்தாவது அத்தியாயம்.

இவ்வத்தியாயத்தில் 29 வருக்கமும், 16 சூக்தங்களும், 159 இருக்குக்களுமுள்ளன. இவ்வத்தியாயத்தி னிடையே முதல் மண்டல முடிகின்றதென வறிக.

## மண்டலம் 1 சூக்தம் 181.

## 184. மண்டலம் 1. அநுவாகம் 24. சூக்தம் 5.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: அசுவினிகள்.

1. இன்றுமற்றையநாளும் யா மேத்தியே யழைப்போமும்மைத்
துன்று மிவ்வைக ரீருன்றத் துதியொடும் அர்ய னீண்டு
கன்று பொய்புரையீர், விண்ணின் கான்முளையாவீர், வன்மை
பொன்று மன்னவற்கா நின்று னெங்கு நீருறைந்த போதும்.

(இ-ள்.) நாஸத்தியர்களே! விண்ணின் புத்திரர்களே! இன்றைக்கும் மற்றைய நாட்களிலுங் கூட யாங்கள் உம்மைப் போற்றினுற் கூவியழைப்போமாக. இன்று விடியற்கால முதயமாகவே அர்யனாகிய துதியாளன், தானசீலனாகிய யக்ஞ கர்த்தாவுக்காக, நீங்க ளெங்கிருந்தாலும் (வருவீர்களென) இவ்விடத்திற் றங்கி யிருக்கிறான்—(எ-று.) ஹோதா விங்கிருப்பதனால் யாகஞ் செய்யும் யாங்களும் உம்மைக் கூவி யழைப்போமாக எனக் கூட்டலு மொன்று.

2. வள்ளல்கா ளெஞ்சோமத்தான்மதர்த் தெமோடுளங் களிக்க;
கொள்ளலாப் பேரத்தோரைக் கொல்லுக; வுயர்ந்த சொற்க
ளுள்ளுறு மெனது போற்றைச் செவியினுட்கொண்டுகேட்க,
உள்ளுமெந் துதிப் பலனைக் குவிக்குறு வீரர்கா ணீர்.

(இ-ள்.) இச்சைகளை வர்ஷிக்குங் காளைகளே! யாங்கள் தருஞ் சோமத்தைக் குடித்து மதங்கொண்டு எங்களோடு உளங்களிகொள்வீர்களாக. உம்மோடு வியாபாரஞ்செய்யும் லோபிகளாகிய அயஷ்டாக்களைக் கொல்வீர்களாக. மனத்தினுணினைத்துச்செய்யு மெங்களது துதிகளின் பலனைக் குவித்துத்தரும் வீரர்களாகிய அசுவினிகளே! நீங்கள், உயர்ந்த வேத வாக்கியங்களை யுட்பொதித்த எனது ஸ்தோத்திரத்தைச் செவியினுட் கொண்டு கேட்பீர்களாக—(எ-று.)

3. பொய்யிலாப் பூடர்கா ணீர் தேவாா யண்பிற் சூர்யை
வய்யம தேற முன்னர் வந்தனிர்; எங்கன்மத்தே
செய்யபோற் றுமையே பூர்வ காலம்போ லின்று மேத்து,
முய்யநன் சொழுகும் பாவ மொழித்திடும் யாகந்தன்னின்.

(இ-ள்.) நாஸத்தியர்களே! பூஷனைப்போல வுயிர்களைப் போஷிப்பவர்களே! தேவர்களாகவிருந்து நீங்கள், சூரிய புத்திரியாகிய ஸூர்யை உமது தேரிலேறும்படி (அல்லது ஸூர்யை யுமது தேரிற் றங்கும்படி (பந்தய வோட்டத்தில்) எல்லார்க்கும் முன் வந்தீர்கள். எங்களுடைய கர்மத்திற் கூறப்படும் சஸ்திர ரூபமான துதிகள், முற்காலத்தைப்போல விப்பொழுதும், யாங்கள் உச்சிவிக்குமாறு நன்றாக நடைபெறுவதும், பாவ நிவாரக வருணஸ்வரூபமாயுள்ளதுமான யாகத்து வித்திக்காக உங்களையே துதிக்கும்—(எ-று.) ஸூர்யையின் கதையை மண். 1 சூக். 119 செய். 5ற் பார்க்க.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 5.

மேனுட்டாசிரியர் பிற்பாதிக்கு வேறு வகையாகப் பொருளுரைப்பார். 'தண்ணீரிற் றோன்றிய உங்களது பெரிய ஆகிருதியுள்ள குதிரைகள், வலிமைபொருந்திய வருணனின் பழையகாலங்களைப் போல முன்னேக்கிச் செல்லுகின்றன' என்பது. வருணயுகம் எதுவென்பது சந்தேகமென்பார். இப்பொருட்பேதம், ககுஹா: என்பதற்கு சஸ்த்ர ரூபா ஸ்துதய: என்னுது குதிரைகளென்றதனுலும், வருணஸ்ய என்பதற்கு பலப்ரதிபந்தக பாபநிவாரகஸ்ய யாகஸ்யவிித்யர்த்தம் என்னுது வருண தேவனுடைய வென்று கொண்டதனுலும், அப்ஸுஜாதா: கர்மஸு ஸம்பாதிதா: என்னுது தண்ணீரிற்பிறந்த என்று பொருள்கொண்டதனுலும், வந்ததென்க.

4. மதுவுளீ ருமதத் தான மெம்மிட மருவ; போற்றை
யதியுவப் போடு மீவோன் றுதியுமக் கின்பளிக்க,
வதியுநற் கொடையீ ரும்மை நன்குறவடைய மாந்தர்,
மதமுற, வுண்டியிச்சை கொண்டிவண் புரியுங்காலே.

(இ-ள்.) மதுநிறைந்த பாத்திரத்தையுடையவர்களே! உம்முடைய் அந்தப் பிரஸித்தமான தானமானது எம்மை யடையட்டும். நல்ல தானத்தோடு கூடியவர்களே! பலத்தை யடைவதற்காக ரித்விஜர்களாகிய மனிதர்கள் உணவுப்பொருள்களின் நசையினுல் உம்மை (தங்களையுங் கூடவெனச் சேர்ப்பர் ஸாயணர்) மத முறுத்தும்போது மனனிய ஸ்துதிகளைக் கூறுவோனுகிய அகஸ்தியனது (கவி தன்னையே படர்க்கையாகக் கூறிக் கொண்டது) போற்று உங்களை ஸந்தோஷப்படுத்தட்டும்—(எ-று.) ஈண்டும் மேனுட்டாசிரியர் மானனது துதி யுங்களை ஸந்தோஷப்படுத்தட்டும் என்பார்.

5. இத்துதி பாவந்தன்னை யெண்ணிநன் கொழிப்ப தும்மை
நத்தியே யணையச் செய்த, தருப்பொருளசுவினீர்காள்,
சத்திய முரைப்பீர், யாக சதனத்தை நோக்கிச் சார்க,
புத்திரரோடி யாமோங்க வகத்தியன் வயிற்பூரித்தே.

(இ-ள்.) அரிய அவிச் செல்வத்தோடு கூடியவர்களே! அசுவினிகளே! பாபத்தை நன்கு யொழிப்பதான வித்துதி உம்மைச் சேர்வதற்காகவே செய்யப்பெற்றது. நாஸத்யிர்களே! யாங்களும் எமது புத்திரர்களும் சுகத்தைப் பெறுமாறு, அகஸ்தியனிடத்து உவகை கொண்டு இந்த யாகக்கிரகத்தை நோக்கி வருவீர்களாக—(எ-று.) செய்தது செயப்பாட்டுவினைப் பொருளில் வந்த செய்வினை.

### வருக்கம் 1.

## 185. மண்டலம். 1. அநுவாகம். 24. சூக்தம் 6.

### 11 இருக்குக்கள்கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: தியாவாப்பிருதுவிகள்.

## மண்டலம் 1 சூக்தம் 185.

1, முன்பு தோன்றிய திவற்று ளெதுபினர்ப் பிறந்த, தெந்தக்
சொன்பெறு வகையி லுண்டானவையிவை?யறிந்தார் யா ரே?
முன்பெறு முனார்வீ, ரெல்லா மொழிதரு பொருளுந் தாமே
யன்பினிற் றாங்கு கின்ற;அல்லெலா யுருளி னேடும்.

(இ-ள்.) (இந்த வானம் பூமிகளுள்) முன்பு பிறந்ததெது? பின்பு தோன்றியது எது? எந்த நல்ல வகையில் இவை யுண்டானவை? இவ்விஷயத்தை யறிந்தவர் யார்? கவிகளே! இங்கு காணப்படும் நாம ரூபமுள்ள எல்லாப் பொருள்களையும் தாங்களே அன்போடு காப்பாற்றுகின்றன. பகலுமிரவுமாய் (முன்பின் றேற்றமெதுவென வறிய வொண்ணுதபடி) சக்கரத்தையுடையவற்றைப் போலச் சுற்றும்—(ஏ-று.)

2. சலிப்பிலர் பாதமில்லா ரிருவரும் பாதம் வாய்ந்தே
சலித்திடும் பெருங் கருவைப், பெற்றவர் மடியிற் சூனு
களிப்பினிற் றாங்க லொப்பத் தாங்குவர்; கலுடநின்று
பொலிப்புற வெம்மைக் காக்க, வோங்குவான் புவிகாளின்றே.

(இ-ள்.) சலனமற்றவர்களும்,பாதமில்லாதவர்களுமான (தியாவாப்பிருதிவிகள்)இருவர்களும்,காலோடு கூடியவையும், சலனஸ்வபாவமுள்ளவைகளுமான சர்ப்பசிசுவைப்போலப் பூமி வானங்களுக்கிடையில் அடங்கியுள்ள எல்லாப் பிராணிக்கூட்டங்களையும், மாதா பிதாக்கள் தமது மடியிற் புத்திரனைத் தாங்குவதுபோலத் தாங்குவார்கள். பெரிய பயங்கரமான பாபத்தினின்றும், பூமி வானங்களே, எங்களைக் காப்பாற்றுவீர்களாக—(ஏ-று.) மேனுட்டாசிரியர்,பெற்றோர்கள் குறவைத்தாங்கும் உவமையை இரண்டாவது வாக்கியத்தோடு சேர்ப்பர். படர்க்கை முன்னிலை மாற்றை நோக்குக.

3, அதிதியின் செல்வம் பாவ மற்றது துறக்கலாபம்
வதிபுறு மதுகுறைவே யில்லது வதைக்க லாத
ததனை வேண்டுவல் புவிவா னனமுள ததனைப் போற்றோ
ரிதமுறத் தோற்றல்; பாபத்திருந்தெமைப்புவிவான் காக்க.

(இ-ள்.) அதிதியின் அல்லது அகண்டநீயமான பிருதுவியின், (அல்லது ஸாயணருரைப்படி அந்தரிட்சத்தின்) மழைச் செல்வமும், பாபமற்றதும்,ஸ்வர்க்கப்பயனையுடையதும், அக்ஷயமானதும், ஒருவராலும் இம்சிக்க முடியாததுமான அதனை யான் யாசிப்பேன். ரோதஸீ உணவுப்பொருள்களோடு கூடிய அச்செல்வத்தை ஸ்தோதா சுகப்படும்வண்ணம் சிருஷ்டிக்கட்டும். பூமி வானங்களே! எங்களைப் பாபத்தினின்றும் காப்பாற்றுவீர்களாக—(ஏ-று.) அதிதியின் செல்வம் இயற்கை தரும் செல்வங்களெல்லாமென்பார் மேனுட்டாசிரியர்.

4. தபனை யற்றவர்க டேவத் தந்தையர் தயவினேடு
நிபமுற வுதவு வோர்கள் வானில மிருவர் பக்க
லுபயந்தவர்க்கு நாப்ப ணுறைகுவ மல்லு மெல்லும்;
விபுலை வானங்கா ளெம்மைப் பாப மேவாது காக்க.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 5.

(இ-ள்.) பிராரத்பிடிக்க முடியாதவர்களும், தேவர்களுக்குத் தந்தைபோல்பவர்களும், தயவு கூர்ந்து ஸமிருத்தியாக வுதவுவோர்களுமாகிய பூமி வானங்களுக்கருகே உபயதேவர்களுக்கு மத்தியில் பகலும் இரவுமாகத் தங்கி யிருப்போமாக. பூமி வானங்களே! எங்களைப் பாப மடையாதபடி காப்பீர்களாக—(எ-று.)

5. கூடியே செல்வோர் மங்கைப் பருவத்தோ டோரிடத்திற்
கூடுவோ ருடன்பிறப்பா முறவினர், பெற்றோர் தங்க
ளிடிய மடியி லுள்ள புவன நாபியினை மோப்பார்;
தேடியே பாப மெய்தா தோம்புக புவிவா னெம்மை.

(இ-ள்.) ஒருவரோடொருவர் சேர்ந்து பரஸ்பரம் உபகார்ய உபகாரக பாவத்தோடு கூடிச் செல்பவர்களும், யுவதிகளும், ஓரிடத்திற் சந்திப்பவர்களும், ஸகோதரிகளுமாகிய உறவினர், பெற்றோர்களாகிய தியாவாப் பிருதுவிகளின் மடியிலுள்ளதும் உலகத்துக்கு நாபிபோல்வதுமாகிய வேதியைத் தொடுகிறார்கள். பூமி வானங்களே! எங்களைப்பாபத்தினின்றுங் காப்பீர்களாக -(எ-று.) உறவினர், விரல்களெனக் கொள்வது சிறப்பு. புவன நாபிம் பூத ஜாதஸ்யபந்தகம் உதகம் என்பார் ஸாயணர். லுட்விக் என்பவர் பெற்றோரென்றது தக்ஷனையும் அதிதியையுங் குறிக்குமென்பர். ஸாயணருரைப்படி உறவினர் தியாவாப் பிருதுவிகளென்றும் அவர்கள் தங்கள் மடியாகிய அந்தரிக்ஷத்திலுள்ள மழைநீரைத்தொடுகிறார்களென்றும் அவர்கள் எம்மைக் காப்பாற்றுகவென்று ஒரு வாக்கியங் கூட்டவேண்டுமென்றுந்தெரியவருகிறது.

### வருக்கம். 2.

6. இடமகல் சதனத்தோர்கள், பெரியவர் தேவ ரோடு
புடவியோர் களிக்க யாவுந் தோற்றுவோர், நல்லுருவோர்,
தடவற ருங்குவோரை ரிதத்தினு லழைப்பர் சாரச்;
செடியுறு தெம்மைக்காக்க திணையொடு வான்கா லின்றே.

(இ-ள்.) விஸ்தீரணமான சதனங்களுக்கு ஆதாரமாக வுள்ளவர்களும், பெரியவர்களும், தேவர்களும் (மனிதரும்)ஸந்தோஷப்படும் வண்ணம் (மழை, பயிர் முதலிய யாவற்றையும்) தோற்றுவிப்பவர்களும், நல்ல ரூபத்தோடு கூடியவர்களும், அமிர்தமாகிய தண்ணீரைத் தாங்குவோர்களுமாகிய பூமி வானங்களை யக்ஞ வொழுங்குகளால் யான் கூவி யழைப்பேன். பூமி வானங்களே! எங்களைப் பாபமடையாதபடி காப்பீர்களாக—(எ-று.) தேவாநாம் அவஸா என்பதற்குத் தேவர்களுடைய காவலோடு என்பார் மேனுட்டாசிரியர். ஆனல் தேவாநாம் உபலக்ஷணம் ஏதத் தேவ மநுஷ்யாதீநாம் ப்ரீத்யா என்பது ஸாயணருரை. திணை, பூமி.

7. பரந்தவை, பெரிய, நானு வகை பரவுற்ற, வெல்லை
விரிந்த தூரத்தினுற்ற, வோங்கு சோபனச் செல்வத்த,
தரம்பெற யாவுமீயு முவற்றினை மகத்திற் போற்றின்
வரந்தர வழைப்பேன்; பூவான், மறமுறு தெம்மைக் காக்க.

## மண்டலம் 1 சூக்தம் 185.

(இ-ள்.) இடம்பரந்தவையும், பெரியவையும், பலவிதமாக விரிந்து நிற்பவையும், எல்லை வெகு தூரத்திலுள்ளவையும், சோபன செல்வத்தோடு கூடியவையும், எல்லாவற்றையும் அளிப்பவையுமான பூமி வானங்களை யக்ஞத்தினிடத்து நமஸ்காரங்களோடு கூவி யாசிப்பேன். பூமிவானங்களே! எங்களைப் பாப மடையாதவண்ணம் காப்பீர்களாக—(எ-று.)

8. தேவர்பாற் சகாயர் தம்பா லில் மகாரிவர்க்கு நாத
னேவன் பாலேனுஞ் செய்த பாபங்க ளெவையு மிந்தத்
தேவபோற் றெழிக்குந் தன்மை சேர்ந்ததா யியைக; பாப
மேவுறு தெம்மைக் காக்க மேதினி வானங்கா ணிர்.

(இ-ள்.) தேவர்களிடத்தும், சிநேகிதர்களிடத்தும், இல்லம் புத்திரர் முதலியோரின் நாதனிடத்தும் யாங்கள் செய்த பாபகிருத்தியங்களைப் போக்குங் கருவியாக இந்த ஸ்தோத்திரம் பொருந்தட்டும். பூமிவானங்களே! எங்களைப் பாபம் அடையாதபடி காப்பீர்களாக—(எ-று.)

9. துதிபெறு மிருவர் மாந்தர் தஞ்சுக மளிப்போ ரென்னைக்
கதியுறக் காக்க; என்பா லருளொடு முதவியோடும்
வதியுக; அர்யர் யாங்கள் வளக்கொடை சாருமாறு
சுதையினுன் மதர்த் தள வில்பெருந்தனம் விழைவேமாக.

(இ-ள்.) கீர்த்தி வாய்ந்த தியாவாப் பிருதிவிகளாகிய விருவர் மனிதர்களுக்குச் சுகத்தை யளிப்பவர்க ளென்னை நன்றாகக் காக்கட்டும். என்னிடத்து அருளோடும் உதவியோடும் அவர்களிருவரும் தங்குக. ஸ்தோதாக்களாகிய யாங்கள் வளம் பொருந்திய கொடையைப் பெறுமாறு அவியுணவாகிய ஸோமத்தைக் குடித்து மதங்கொண்டு பெரிய செல்வத்தை யடைய விரும்புவேமாக—(எ-று.) ஸுதாஸ்தாராய வென்ற சொல் முன்பும் 184ம் சூக்த முதற் செய்யுளில் வந்துளது. அங்கும் இங்கும் மேனாட்டாசிரியர் தெய்வமற்றவனைக் காட்டிலும் என்றே பொருள் கூறியுள்ளார்.

10. நல்லுணர் வுற்றேன் யானு நாடியிம் முதலா முண்மை
சொல்லுவே னெவருங் கேட்கச்; சோக பாவங்க டம்மை
யொல்லுமா றருகு நின்றே யோட்டுக; தந்தை தாயும்
பல்லுதவியு மளித்துப் பராமரித்திடுக வெம்மை.

(இ-ள்.) நல்ல வறிவோடு கூடிய யான் இந்த முக்கியமான வுண்மையையெல்லாருங் கேட்குமாறு சொல்லுவேன். சோகமும் பாபமும் எங்களை யணுகாதபடி எங்கள் பக்கத்திலுறைந்து அவற்றை யோட்டுவோர்களாக பிதாவாகிய விண்ணும் மாதாவாகிய பூமியும் பலவித உதவிகளையுமளித்து எங்களைப் பாதுகாப்பார்களாக—(எ-று.)

11. தந்தை தா யாகும் வானப் பூமிகா ளிவன் யான்சாற்றி
நந்துமித் துதியு முண்மைப் பயனொடு நலக்க வோங்க
அந்திகத் தேவ ரோடு மடைக நீ ருதவியோடு
முந்து பல்லுண்டி வன்மை நெடும்பகல் வாழ்விபாங் காண்க.

## அஷ்டகம் 2 அத்தியாம் 5.

(இ-ள்) தந்தையாகிய வானமே! தாயாகிய பூமியே! யான் கூறும் இந்தஸ்தோத்திரம் ஸத்ய பலனோடு நன்கே விருத்தியடைந்து நிற்கட்டும். நீங்களும் தேவர்க்கருகில் உங்களுடைய வுதவிகளோடு வாருங்கள். யாங்கள் உணவு, பலம், நீண்ட ஆயுளோடு கூடிய வாழ்வு இவற்றைப்பெறுக—(எ-று) அவமே அந்திகாம ஏதத் என்பார் ஸாயணர். அந்திகம் ஸமீபம். தேவாது அந்திகமென்க.

வருக்கம் 3.

### 186. மண்டலம். 1. அநுவாகம். 24 சூக்தம். 7.

11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: விசுவ தேவர்கள்.

1. மகத்தினி னிளையோ டேத்துஞ் சிறப்புறு துதியோ டெங்க
ளகத்தினை யடைக வெல்லா நரருக்கு மிதத்தை யாற்றி
யுகப்புறு மங்கியோடு தேவனுஞ் சவிதா,வெல்லாச்
சகத்தையுங் களிப்புறுத்தி யெந்துதி தமிற்களிப்பான்.

(இ-ள்.) எல்லா மனிதருக்கும் ஹிதஞ்செய்யும் அக்கினியும், தேவனாகிய ஸவிதாவும் யக்ஞத்தினிடத்துத்தரும் இளையோடும் (ரத்நத்தோடு மென்பார் ஸாயணர்.) நல்ல ஸ்தோத்திரங்களோடும் எங்களது மகவில்லை நோக்கி வருக, எல்லாச் சகத்திலுள்ள பிராணிகளையும் ஸந்தோஷப்படுத்துமாறும், எங்களது துதியிற் றாங்கள் களிக்குமாறும்—(எ-று.)

2. மித்திரன் வருண னர்யமான் முதல் விசுவதேவர்
சத்துரு வடக்குவோராய் சமப்பிரியத் தோராகத்
தத்துகவெம்மாட் டியாரு மெம்வலி குறைக்கா தாற்றி
பொத்தவாழ்வினை வளர்த்து நன்மைசா ருரத்தோ டேய்ந்தே.

(இ-ள்) மித்திரன், வருணன், அர்யமான் முதலிய விச்வதேவர்கள், சத்துருக்களை யடக்குபவர்களாய், ஸமானப் பிரீதியோடு கூடியவர்களாய், எமது வலிமைகுறையாத வண்ணம் புரிந்து, எமது வாழ்வினை யோங்குமாறு செய்து, நன்மைபொருந்திய பலத்தோடு கூடி எல்லாருமாக எங்கள் யாகத்தை நோக்கி வருவார்களாக—(எ-று) சவ: என்பதற்கு வலியென்னாது அன்னமென்பார் ஸாயணர். ஸுஷஹாவென்பதற்கு ஸுஷ்டு சத்ரூண மபிபவேக என்று ஸாயணர் உரை கூறுவாரேனும்,மேலிரண்டாம் வரியிற் சத்துரு வடக்குவோராய் என்பது வந்துள்ளதாற் நன்மைபொருந்திய பலத்தோடு எனப் பொருள் கூறினு ரிந்நூலாசிரியர்.

3. உங்க ளன்பிற் சிறந்த வுத்தம வதிதி தன்னை
யெங்கள் போற்றகனல், வல்லென்றுற் றும்மோ டுளங்களிக்கு
மங்கியைத் துதிப்போ னெங்கள் வருணனுய்க் கீர்த்திமானுய்
மங்குறப் பகையை வாட்டிச் சூரியா யன நிறைப்பான்.

## மண்டலம் சூக்தம் 186.

(இ-ள்.) (விசுவதேவர்களே! உங்களுக்காக அவியை சுமப்பதனால்) உங்களுடைய அன்பிற் சிறந்த விருந்தினனும், வேகமாகவந்து உம்மோடு கூட களிப்பவனுமான அக்கினியை, எங்களது வருணனாய், (பாவ நிவாரகனென்றபடி.) க்கீர்த்தி பொருந்தியவனாய், எங்களது சத்துருக்களை வாட்டி ஸூரியாய், உணவைப் பூர்த்தியாக அவன் எங்களுக்குத் தருமாறு, எங்களது ஸ்தோத்திரங்களாற் றுதிப்பேன்—(எ-று) ஸூரி, யாககர்த்தா.

4. நமத்தொடு மடைந்து பாப நாசத்தை யெண்ணி யும்மைத்
தமத்தொடு பகற்க ணன்கு கறக்குறு பசுவிற் சார்வேன்
சமத்துறு மடியிற் பற்ப லுருவொடு சாரும் பாலை
டமர்த்துறு பொதுநா ளொன்றி லர்க்கத்தை யமைத்துக்
கொண்டே

(இ-ள்) விசுவதேவர்களே! ஸமானமாயுள்ள மடியில் நெய் முதலிய பல வுருவத்தோடுஞ் சாரும் பாலையும் அர்க்கத்தையும் ஒரு பொதுநாளில் உங்களுக்காகத் தயார் செய்துகொண்டு, உங்களை நான் நமஸ்கார பூர்வமாக வடைந்து, பாவநாசத்தை விரும்பி, பகலும் இரவுமாகக் கறக்க இலகுவான பசுவினிடத்து வருவதுபோல் உம்மாட்டு வந்து சேருவேன்—(எ-று.) அர்க்கம் மந்திரமென்றுமது அர்ச்சிக்கத்தக்க அவி யன்னத்தோடு எனப் பொருள் கூறுவார் ஸாயணர். பொது நாளொன்றில் என்பது யஞ்ஞநாளைக் குறிக்கது. அதுவே எல்லாத்தேவருக்கும் பொதுவிற் பிரியமான நாளாகும். பசுவின் என்பது தொழிலுவமை, மேனாட்டாசிரியர் கவி பசுவென்றும், பால் அவனது பாட்டென்றுங் கூறுவர். மடியென்ற தின்டு பால் முதலியவைகளை யூற்றும் மகத்தை யுருவகப்படுத்திக் கூறினதென்பர். பற்ப லுருவென்றது மஞ்சளும் பழுப்புநிறமுமுள்ள ஸோமத்தைப் பாலிற் கலந்ததா லேற்பட்ட வுருவென்பர்.

5. சிந்துவும் சேவை யூட்டுந் தாயெனச் சேர்க, நீரின்
மைந்தனெவனோடியாங்கள் துதியொடும்பெறுவம், யாரை
மைந்துள மனோவேகத்துக் காளையுஞ் சுமந்து செல்லும்
அந்தர மார்க்குந்தே வவ் வகி யெமக் கின்புறுத்தல்.

(இ-ள்.) ஸிந்துவென்னு மாது கன்றுக்குப் பாலூட்டும் பசுவைப் போல எம்மை யடையட்டும். நீரின் புத்திரனாகிய வக்கினியை யாரோடு கூடி யாங்கள் ஸ்தோத்திரஞ்செய்து சேருவோமோ, யாரை மனோ வேகத்தோடு கூடிய காளையாகிய விருஷ்டி யுதக மேகமானது சுமந்து செல்லுமோ அந்த அந்தரிட்ச காவலனாகிய வகியென்னுந்தேவன் எங்களுக்கின்பத்தைத் தரட்டும்—(எ-று.) அகிர் புத்ந்ய: என்பதற்கு அந்தா காவலனாகிய அஹியென்னுந் தேவனென்பது ஸாயணருரை.

### வருக்கம் 4.

6. மேலுமெம் மகத்திடத்துத் துவட்டனுஞ் சூரி தம்மோ
டேலுறு மன்பினோடு மெய்துக; விருத்திரன்றன்

## அஷ்டகம் 2 அத்தியாயம் 5.

கோமா ருருவழித்தோ னிந்திரன் பலங்குவித்த
மேலவன் மறையோர்க் கீவோன் டேவுகா ரமரேப் பாட்டே.

(இ-ள்.) அன்றியும், எங்களது யாகத்தினிடத்து (தேவத்தச்சனு கிய) துவஷ்டாவும் யாகஸ்தாபகர்களான ஸூரிகளோடுஸமானப்பிரீதியுள்ள வனுய் எமது யக்ஞ தலத்தை நோக்கி வருக. விருத்திரனைக் கொன்றவனும் பலோத்தமனும், மந்திரங்களை யோதுவாருக்கு அவர்களது இச்சைகளை யளிப்பவனுமான இந்திரன் நேதாக்களாகிய எங்களிடத்து வந்து சேரட்டும். —(எ-று.)

7. தருணனு மிவனை மாவைப் பூட்டுவோன் றன்னை யெங்க
ளருமதிப் போற்றுக், கற்ருக் கன்றினை நீவலென்ன,
வருடுறு; மவனை மாந்தர் தம்மு ளுத்தம வின்போனைக்
கருதியே வணங்கு மெம்பாப் பலனொடு மனை கடுப்ப.

(இ-ள்.) நித்திய யௌவன முள்ளவனுகிய விவ்விந்தரனை அசுவங் களைப் பூட்டுபவனை எங்களுடைய அரிய புத்தியினு லுருப்படுத்தப்பெற்ற ஸ்தோத்திரங்கள், கறவைப்பசு தனது கன்றை நக்கிக் கொடுப்பதுபோலத் தடவிகொடுக்கும்(அல்லது புகழுமென்றபடி.). நரர்களுக்குள்உத்தமமாயுள்ள ரஞ்சகனுன இவனை எமது பலனேடுகூடிய பாக்கள், மனைவி பர்த்தாவை வணங்குவதுபோல வணங்கும் —(எ-று.) மேனுட்டாசிரியர் தருணம் சிசும் எனக்கூட்டி இளங்கன்றை யெனப் பொருள்கூறுவர்.

8. ஒக்கமார் படையோ ரொத்த வுளத்தினர் புள்ளி யேய்ந்த
மாக்களை யுடையோர் காவலாளரிற் றேரை யூர்வோர்
வீக்கிய நண்பர் மித்திரற் கெனவிளங்குவோர் தெவ்
வூக்கியே யழிப்போ ரெங்கள் மாருத ருறுக பூவான்.

(இ-ள்.) விருத்தியோடு கூடிய சேனையை யுடையவரும்,(அல்லது ஆயுதங் களையுடையவரும் என்பார் மேனுட்டாசிரியர்.) ஒத்த உள்ளத்தோடு கூடிய வர்களும், புள்ளிமான்களாகிய குதிரையை யுடையவரும், ரட்சகர்களைப் போலத் தேரினை யூர்ந்து செல்பவர்களும், மித்திரனேடு நண்பிற் கூடி வி ளங்குபவர்களும், பகைவரைத் தின்றழிப்பவருமாகிய வெங்கள் மருத்துக் கள் ரோதவீ யல்லது பூமிவானங்களிற் றங்கட்டும்—(எ-று.)

9. இவரது மகிமை தன்னை நன்குணர்ந்திடு மக்காலை
யவமி னற்றுதியைப் பூட்டி யறிவுளோர் துதியா நிற்பர்;
யிவரது படைக ளெல்லா வுவர்நிலந் தோறு மேகி
சவசவென் றுறவே யூட்டி நற்றினத் தொளியின் மூடும்.

(இ-ள்.) இம்மருத்துக்களுடைய மழையூற்றும் மகிமையை நன்றாக வுணர்ந்தபோது குற்றமற்றநற்றுதிகளைப் பிரயோகித்து ஞாதாக்கள் துதிப் பார்கள். இம்மருத்துக்களது மழையாகிய ஆயுதங்கள், காய்ந்து கிடக்கும் உவர் நிலங்களிலெல்லாம்விழுந்து அவற்றை யீரத்தோடுறுமாறுசெய்து,மப்

புமக்தாரமில்லாதநாளில் வெளிச்சமானது உலகை மூடிக்கொள்வதுபோல அந்த நிலங்களை மூடிக்கொள்ளும்—(எ-று.) இவ்வளவு மழையைத்தரும் மருத்துக்களது மகிமை மகா பெரியது என்றபடி.

10. சொந்தமொயம் புள்ளோர் பூடனசுவினி நமமைக் காக்கச்
சந்ததம் வெறுப்பில் விண்டு வாதனே டிருபு நாத
னந்தமா யிவர்க டம்மைத் துதியொடு மணைந்து போற்றிர்;
நந்தநற் சுகத்திற்காக நாடித் தேவரை நன் கேய்க்க.

(இ-ள். (ரித்விஜர்களே!) ஸ்வதஸ்ஸித்தமான பலமுள்ளவர்களாகிய பூஷன், அசுவினியிவர்களையும், எப்பொழுதும் த்வேஷமில்லா விஷ்ணுவையும், வாதனையும். ரிபுக்களின் நாத (ரிபுக்ஷான்) னாகிய இந்திரனையும் அழகாகத் துதித்துப் போற்றுவீர்களாக. நாம் சுகத்தைப்பெறும்படி தேவர் நம்மிடத்து வரும்வண்ணஞ் செய்க—(எ-று.) வாதன், வாயு. ரிபுக்ஷானைப்பற்றி மண். 1 சூக் 162 செய். 1 பார்க்க.

11. வணங்குதற் குரியி ருங்க ளொளியது செல்வம் வாய்ந்த
தினங்குறத் தேவர்க்காக வெவற்றையும் புரிவ தெங்கள்
குணங்களைத் தூண்டி யெங்கள் குடிபதத்துத் தங்க; யாமு
மணங்கற வுண்டி வன்மை யாயுள்சார் வாழ்வுந் காண்க.

(இ-ள்.) வணங்குதற் குரியவர்களே! செல்வம் வாய்ந்ததும் தேவர்கள் ஒப்புக்கொள்வதற்காக வெவற்றையும் புரிவதுமான அந்தப் பிரஸித்தமான உங்கள் ஒளி எங்களை யடிக்கடி தூண்டி யெங்கள் வீடுகளில் வசிக்க யாங்களும் உணவு பலம், தீர்க்காயுளோடு கூடிய வாழ்வுஇவற்றை யடைக—(எ-று.)

வருக்கம் 5.

## 187. மண்டலம். 1 அநுவாகம். 24. சூக்தம் 8.

### 11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: 1, அநுஷ்டுப்கர்ப்பம் (கந்தாநுபூதிக்லி.) 2,4,8, 9, 10 காயத்திரி, 3, 5, 6, 7, அநுஷ்டுப், 11 ப்ராஹதி; தேவதை: அன்னம்.

இச்சூக்தத்துக்குச் சௌநகர்கூறும் பல சுருதியாவது: 'இச்சூக்தத்தைப் படித்தாலும், பூசித்தாலும், அவியளித்து ஆவுதிசெய்யும்போது ஓதினாலும் அன்ன ஸமிருத்தி யேற்படும், பசி, பிணி யேற்படா.'

(வேறு.)

1. விரைவிற் பிதுவைப் புகழ்வல், மிகுமொய்ம்
புறைபத் தரையை யுபர்விப் பவனைத்
திரிதன் னகியைக் கனுவிற் கனுவி
விரியச் செயும் வன்மையை யீகுவனை.

(இ-ள்.) பாலனும், மிகுந்த பலத்தினால் பூமி யுயர்வை யடையுமாறு தாங்கிப் பிடிப்பவனும், திரிதனுகிய இந்திரன் அஹியாகிய விருத்திர

# அஷ்டகம் 2 அத்தியாம் 5.

னைக்கனுக் கனுவா யழிப்பதற்கு வேண்டிய பலத்தை யளிப்பவனுமாகிய, அன்னதேவதையை விரைவாகப் புகழ்வேன்—(எ-று.) திரிதன், த்ரிதன், ரிக்வேதத்திற் சொல்லப்படும் ஒரு பழைய தேவதை. இந்திரன், வாயு, மருத்துக்களிருவர்களோடு இத்தேவதையை இணைத்துக் கூறுவது வழக்கம். இவனைப்பற்றி மண். 1 சுக். 163 செய். 2 பார்க்க. பிது, பிதா, பாலகனென்பது பொருள், ஈண்டு அன்னமென்க.

(வேறு.)

2. உன்னுற்குயர் வோங்கிய தந்தையே,
நன்னு மத்த நலத்துறு பாலக,
யன்னி யுன்னை யழகிற் றுதிப்பமா
லெண்ணி யெந்துணை யாளனு யெய்துக.

(இ-ள்.) உண்ணற்கினிமையாயுள்ள அன்னமாகிய தந்தையே! மதத்தையூட்டும் ஸோமமாகிய தந்தையே! உன்னை யடைந்து யாங்க ளழகாகத் துதிப்போம். எங்களுக்குத் துணையாளனுக விருப்பாயாக—(எ-று.) பிதோ, தந்தையே, பாலகனே யென்றார் அன்னத்தை.

(வேறு.)

3. அருகி னெந்தமாட் டொழுகுக மங்கல மார்ந்து
பெருகு நற்றுணை தம்மொடும் பிறங்குறு சிவனு
யிருமனத்தரு தின்பளி நண்பனே யின்பின்
மருவு மன்னமே சுகத்தினை மன்னுவிப்பவனே.

(இ-ள்.) மங்கலத் தன்மை நிறைந்து நல்ல வுதவிகளோடு கூடிய சிவஸ்வரூபியாய் இருதிறப்படாமற் களங்கமற்ற சுகத்தைத் தருஞ் சகாயவானே! இன்பத்தோடு கூடியவனே! சுகத்தை யடைவிப்பவனே! அன்னமே! எங்களுக்கு ஸமீபத்தில் வர்த்திப்பாயாக—(எ-று.)

(வேறு.)

4. அன்னமேயுன் வயினுறு மச்சுவை
மன்னியோங்கி விரிந்து வளர்ந்துள
வுன்னு மந்தர லோகத் துவப்பின், வான்
நன்னயத்துப் பரவிடும் வாதனின்,

(இ-ள்.) அன்னமே! ஆகாயத்துப் பரந்து கிடக்கும் வாயுவைப்போல உன்னிடத்து அந்த அறுசுவைகளும் உலகமுழுவதும் பலவிதமாக விரிந்து பெருகியுள்ளன—(எ-று.)

(வேறு.)

5. அன்னமே, சுவை யார்தரு தந்தையே, யுனது
பின்னமில் கொடை யிவைகளும் பேசு முன்னிரதர்

## மண்டலம் 1 சூக்தம் 187.

தன்னுாற் சுவைதாமு மித்தடித்த வெங்கழுத்தின்
மன்னுபோத்தி னன் கோங்கியே வனைவனபணியே.

(இ-ள்.) அன்னமே! ருசிநிறைந்த பிதாவே! உனது (கெடாத) விக்கோடைகளும் உனது அறுவகைப்பட்ட சுவைகளின் ருசியும் தடித்த கழுத்தின்ன காளை மாடுகளைப்போலத் தொழில் செய்கின்றன-(எ-று.) போத்து என்றது மேனுட்டாசிரிய ருரையையொட்டி. பணி வனைவனவே யென் க

வருக்கம். 6.

6. தந்தையே, மகத்துவத்தினிற் றழைத்த தேவர்கட
ருந்து நன்மன முன்னிடத்தே பதிவுற்ற;
நந்து கேதுவி னற்றெழி னலமுறப் புரிந்தார்;
இந்திர னகி வதைத்தன னுவதிருந் துணையின்.

(இ-ள்.) பாலனஸ்வரூப வன்னமே! மகத்துவம்பொருந்திய தேவர்களின் நன்மன முன்னிடத்திலேயே பதிவுற்றன. (நீயே தேவர்களுக்கு வீரச் செயல்களைப் புரியும் புத்தியூட்டுகிறாய் என்றபடி.) உனது ஞான கேதுவின் கீழே அழகிய வீரகர்மங்கள் செய்யப்பபெற்றன. உனது பெரிய துணையைக்கொண்டே இந்திரன் அஹியாகிய விருத்திரனை வதைத்தான் —(எ-று.) இச்செய்யுள் அநுஷ்டுப் சந்தத்தினதாகக் காணப்படவில்லை.எனினும் உரைகாரரும் அநுக்கிரமணிக்காரரும் உரைத்ததை இந்நூலாசிரியர் பின்பற்றியுள்ளார். இதனை அநுஷ்டுப்கர்ப்பமாகக் கொள்வது பொருத்தமாகும்.

7. தந்தையே தடித் தோடியை தனத்தினி னிறைந்த
வந்தரப் பருவதத்தினை யடைந்தவ னுறினு.
நந்துறின் சுவை யோக்கிய வன்னமே, நிறைவைச்
சிந்தை யெய்துறப் புசிக்குமா றிங்கு சேர்ந்திடவே.

(இ-ள்.) பிதாவே! மாதுர்ய ரஸத்தோடு கூடிய அன்னமே! மின்னலோடு கூடிய செல்வத்தினால் நிறைந்த அந்தரிட்ச பர்வதமாகிய மேகத்தின்கண் நீ போய்த் தங்கியிருப்பினும், யாங்கள் சிந்தை நிறைவிற் புசிக்குமாறு இங்கு வருவாயாக—(எ-று.)

(வேறு.)

8. உடலிக்க னறவி னெருதளி
காடி. நாங்களிங் குண்ணினு நன்குநீ,
தேடி வாதச் சிறப்பி னுறுபவ,
கூடி. போங்கல் குலவு கொழுப்பினே.

(இ-ள்) (வாதாபியே!) வாயு அல்லது பிராணனாற் பூரிக்கப்பெற்ற சரீரமே! (ஸோமமேயென்பார் மேனுட்டாசிரியர்.) ஔஷதிகளிலாவது, தண்

னீரிலாவது லேசமாத்திரம் ஙாங்க ளுட்கொண்டபோதிலும் கொழுப்போடு கூடிப் பெருத்துக்காணப்படுவாயாக—(எ-று.)

9. கூடுங் கிரக் கலப்பொடு, சோமனே,
நாடி யாங்கொள் யவக்கலப் பெய்தியே,
தேடி வாதச் சிறப்பி னுறுபவ
கூடியோங்கல் குலவு கொழுப்பினே.

(இ-ள்.) ஸோமனே! (வாதாபியே) வாயு அல்லது பிராணனாற் பூரிக்கப்பெற்ற சரீரமே! ஸோமத்தோடு கூடிய பாலையும், யவரஸத்தையும் யாங்கள் குடிக்கும்போது அச்சோமாம்சஞ் சேருவதைக்கொண்டு நீ பருத்துக் காணப்படுவாயாக—(எ-று.)

10. நாடி யோக்கம் பரும னுரமிவை
தேடிச்சார்க, கரம்ப நிறைசெடி;
தேடிவாதச் சிறப்பினுறுபவ,
கூடி யோங்கல் குலவு கொழுப்பினே.

(இ-ள்.) கரம்பங் அல்லது ஸத்துபிண்டம் (பொடிமா அல்லது பொரிமா வென்றபடி.)நிறைந்த ஓஷதியே ஒக்கத்தையும்பருமனையும், உரத்தையும்பெற்று நிற்பாயாக. அதனை யுண்ணுவதனால், சரீரமே, கொழுத்துக் காணப்படு வாயாக—(எ-று.)

(வேறு.)

11. அனமே யாங்க ளவிப்பொருளை, யாக்க ளென்றும் விளைப்பது போற்,
தினமுந்துதிவாக்கியத்தோடுமெடுப்போந்,தேவர்தம்மோடு
நனியார்தந்து விருந்தாகி நலக்க வவரை மதமுறுத்திப்
பினரு மெங்கடம்மோமம் பிறங்கு முணவாம் உன்னின்றே.

(இ-ள்.) அன்னமே! பசுக்கள் அவிக்கான திரவியங்களைத் தோற்றுவிப்பதுபோலத் தேவர்களுக்கும் எங்களுக்கும் விருந்தாகி மதத்தை யூட்டி எங்களது ஸோம வவிப்பொருள்களாய் விளங்குகின்றஉன்னிடத்திலிருந்து ஸ்தோத்திர வசனங்களோடு ஹோமத்திரவியங்களை யுண்டாக்குவோம்.—(எ-று.)

வருக்கம். 7.

## 188. மண்டலம் 1. அநுவாகம் 24. சூக்தம் 9.

11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: காயத்ரி; தேவதை: 1 இத்மன், 72தநூநபாத், 3 இளன், 4 பர்ஹி, 5 தேவத்துவாரங்கள், 6உஷாஸாநக்தா, க தேவஹோதாக்களிருவர், 8 ஸரஸ்வதி, இளை, பாரதி மூவர், 9 துவஷ்டா, 10 வனஸ்பதி, 11 ஸ்வாஹாக்ருதி, இவை அக்கினியின் பல ரூபங்களாம்.

## மண்டலம் 1 சூக்தம் 188.

இது அகஸ்திய கிருத ஆப்ரீ ஸூக்தம். இம்மண்டலத்தில் முன் இரண்டு ஆப்ரீ ஸூக்தங்கள் வந்துள்ளன. அவற்றைப்பற்றி மண். 1 சூக் 142 ற் பார்க்க.

(வேறு.)

1. தேவரோ டொரு தேவனு யாயிரஞ்
சிவனப்பொருள் சேர்ப்பவ, தூதனே,
யோவி னல்லொளி யோங்கி யவிப்பொருள்
தாவுவிக்கல் கவியென் சமித்தனே.

(இ-ள்.) தூதனும், கவியும், ஆயிரக்கணக்கான சீவனப்பொருள்களைச் சேர்ப்பவனும், நன்றாக மூட்டப்பெற்றவனுமாகிய அக்கினியே! தேவர்களோடு ஒரு தேவனாய்ப், பிரகாசிப்பாயாக. (பிரகாசித்து) ஸோமத் திரவியங்களை யவர்களிடத்துச் சுமந்து செல்லுவாயாக—(எ-று.)

2. தன்னுடலினிற் றானே யுதித்தவன்
மன்னு மெக்கியன் மன்ன ரிதத்தினிற்
றன்னு நன்மது தோய்ந்துளதின், அனம்
நன்ன ராயிர நாடி யளித்துமே.

(இ-ள்.) தனதுடலிற் றானே யுதித்த தநூநபாத்தும், எக்கிய நிர்வாஹகனுமான அக்கினி, ஆயிரக்கணக்கான வுணவுப் பொருள்களைத் தாங்கிக்கொண்டு மாதுரியமான வவிப்பொருள்க ளாயிரக்கணக்காய்த் தோய்ந்தன்ன ரிதத்திற் (யாகத்திற்) பொருந்துக—(எ-று.)

3. யாங்கள் கூவித் துதிக்க வியைந்து நீ
யோங்கு மெக்கியத் தேவரை யிவ்விடந்
தாங்கிச் சேர்க்கல்; சகத்திர தானங்க
ளீங்களிக்கிறு யக்கினி யென்றுமே.

(இ-ள்.) அக்கினியே! எங்களால் அழைக்கப்பெற்றுத் துதிக்கப்படத்தக்க நீ யக்ஞார்ஹர்களான தேவரை இங்கு கொண்டுவருக. ஆயிரக்கணக்கான (அபரிமித என்றபடி.) செல்வங்களை நீ தருகிறாய்—(எ-று.) ஈட்ய: துதிக்கத் தகுந்தவன் என்றார் (இளன்) இட் என்னும் பெயரையுடைய அக்கினியே என்றும் கூறலாம்.

4. ஆயித்தராம் வீர ரமர்வதை
யேயு நல்வலிகொண்டு தருப்பையைத்
தூயினர் கீழ்த்திசை யினிற் றேய்த்தனர்,
பாயொளியி னுதித்யர் பரவவே,

(இ-ள்.) ஆயிரக்கணக்கான வீரர்க ளமர்வதான தருப்பையைப் (பப்ஹிஸை)த் தங்களுடைய பலத்தினால் ரித்விஜர்கள் கிழக்குத்திக்கில் தூவினார்கள். அதிதி மக்களாகிய, நீங்கள் அதன்மேற் பரவிப்பலவிதமாகப் பிரகாசிக்கிறீர்கள்—(எ-று.) ஆதித்யர்களாகிய நீங்கள் பரவுமாறு தோய்த்தனரென்க. ஆதித்தியர் அதிதிமக்கள், தேவர்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 5.

5, நன்கொளிரும் விராட்டு நலம்பெற
நின்றெழுகி விரிந்து வெகுவிதந்
துன்று நானுவிதத்த துவார நெய்
சென்றெழுகத் திகழ்த்தி விளங்குவ.

(இ-ள்.) நன்றாகப் பிரகாசிக்கும் விராட்டுக்களும், நன்றாகத்தோன்றி விரிவுபெற்றுப் பலவிதமாகப் பொருந்திய பல துவாரங்கள் ஸார புஷ்டியுள்ள கிருதத்தைத் தம்மூடொழுகுவித்து விளங்குகின்றன—(எ-று.) விராட்டு, இறை. ஸ்ம்ராட் என்பதற்கு நன்கொளிரும் என்றார் ஸாயணர். சக்கரவர்த்தியென்பது மேனாட்டாசிரியர் உரை.

வருக்கம். 8.

6. நல்லணியொடு நல்லுரு வத்தொடு
மல்லும் வைகறு மாரு மழகினி
னல்ல வண்ண மொளிநல மோங்குவர்;
புல்லுக வவ ரிங்கு பொருந்தியே.

(இ-ள்.) நல்ல ஆபரணங்களோடும் நல்ல வுருவத்தோடும் பகலும் இரவுமாகிய விருவர்கள் மிகுந்த வழகோடு பிரகாசிக்கிறார்கள். அவ்விரவும் பகலுமாகிய விருவர்களு மிங்கு தங்கட்டும்—(எ-று.)

7. கவியிருவர் முதன்மையர் நன்மையிற்
செவியுறும் வசனங்கள் சிறந்தவர்
புவியிற் றெய்விகம் பூண்டிடு தூதர்க
ளவியி னிம்மக மெம்பொருட் டாற்றுக.

(இ-ள்.) கவிகளும், முதன்மையானவரும், நல்ல வசனங்களோடு கூடியவருமான தேவ ஹோதாக்களிருவரும் அவிப்பொருள்களோடு எமக்காக இந்த யாகத்தைச் செய்யட்டும்—(எ-று.)

8. இளை சரஸ்வதி பாரதி யுங்களை
யளியி னிங்குறக் கூவுவென் யாரையும்;
விளையுஞ் செல்வம் விழுமிய வற்றினை
யளியி னெங்கட் களித்திட நீங்களே.

(இ-ள்.) பூமிதேவியாகிய இளையே! உதகதேவதையாகிய ஸரஸ்வதியே! (பாத ஆதித்ய: என்னும் வாக்கியப்படி) விண்ணின் தேவதையாகிய பாரதியே! உங்களெல்லாரையும் யான் இங்கு வருமாறு கூவுவேன். நீங்கள் கீர்த்திபொருந்திய சிறந்த செல்வத்தை எங்களுக்கு அளிப்பீர்களாக—(எ-று.)

9, துவட்டர மப்பிரபு வுருவங்க
ளுவப்பின் யாவையு மாக்களையும் மெய்ச்

கவித்த லின்றியவனைத்தனன்; அன்னவை
நிவப்பி னேங்கிப் பெருக நிமிர்த்தலே.

(இ-ள்.) துவஷ்டாவாகிய அந்தப் பிரபு எல்லா வருவங்களையும் பசுக்களையுங்கூட எங்களுக்காக வுண்டுபண்ணினன். அவனே அவைகள் எங்களுக்காக விருத்தி யடையுமாறு புரிக—(எ-று.). துவஷ்டா யக்ஞ ஸாதன பாத்ராபிமானிதேவன்.

10. தேவர்கட்கு வனப்பதி பானத்தை
மேவுமுன்னுளத் தோடு மனுப்புக;
தாவு யக்கினி கவ்விய வத்துவைப்
பாவுநற் சுவை சாரப் பயிற்றுக.

(இ-ள்.) வனஸ்பதியே! உனது மனத்தினு லெண்ணித் தேவர்களுக்கு வேண்டிய பான வுணவைச் செய்தனுப்புவாயாக. அக்கினி ஹவ்யங்களை (அவிப்பொருள்களை) ருசியுள்ளனவாகச் செய்யட்டும்—(எ-று.)

11. தேவர் முன்னர்ச் செலவுறு மக்கினி
பாவகாயத்திரியிற் பரிந்துநன்
கோவறத்துதி யுற்றுச் சிறந்தனன்;
மேவுந்தேசைச் சுவாகா விளக்கவே.

(இ-ள்.) தேவர்களுக்கு முன்பு செல்லும் அக்கினி காயத்திரி மந்திரத்தால் ஸ்தோத்திரஞ் செய்யப் பெற்றுச் சிறந்துளன். அவ்வக்கினி ஸ்வாஹாவென்னும் மந்திரத்தோடு அவி யளிக்கப் பெற்று பிரகாசிக்கிறன்—(எ-று.) அக்ரணீத்வாத்ஏவ அக்ரிசப்தோ நிஷ்பன்ன: அக்கிரம் அல்லது முன்னுருவதால் அக்கினியென்று காரணப்பெயர். இச்சூக்தம் யக்ஞாவயவங்களாகிய ப்ரயாஜதேவதைகளைத் துதிக்கும் நெறியில் யக்ஞத்தையே துதித்ததாகுமென்பர் சிலர். ஈண்டு அக்கினியையே துதித்ததாகக் கூறியுள்ளார்.

வருக்கம். 9.

## 189. மண்டலம். 1. அநுவாகம். 24. சூக்தம். 10.

8 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: அக்கினி.

இச்சூக்தத்தின் ஒவ்வொரு ரிக்கையும் ஜபித்தாலும் அல்லது அவற்றைச் சொல்லி ஆவுதிசெய்தாலும் பதிதர்களும் பிரஷ்டர்களும் உயர்வையடைவார்களென்பர் சௌநகர். லுட்விக் கென்பவர் இச்சூக்தம் கொள்ளைநோயேற்பட்ட காலத்தெழுதப்பெற்றது போலுமென்பர்.

(வேறு)

1. நன்னெறி யூடுசெல்வ நண்ணு வானடத்த, லங்கி
மன்னிய தூய்மைக்கன்மம் யாவையு மதிக்கொடேமேல்;

## அஷ்டகம் 2 அத்தியாயம் 5.

துன்னிய பாப மெம்மை நெறிபிறழ்ந்துறத் தோய்விப்ப
துன்னி யோட்டுக; சிறந்த வுத்தம நமச்சொ லீவோம்.

(இ-ள்.) அக்கினியே! பரிசுத்தமான கர்மங்கள் யாவற்றையுமறிந்த தேவனே! (ஒளிபொருந்தியவனே யென்பது பொருள்.) யாங்கள் ஸவர்க்க செல்வத்தை யடையுமாறு எங்களை நல்வழியில் நடத்துக. எம்மை நெறிதவறிச் செல்லுமாறு செய்யும் பாபங்கள் எங்களை யடையாதவாறுக மனத்தில் எண்ணி அவற்றை யோட்டுவாயாக. உனக்கு யாங்கள் உத்தமமான நல்ல வணக்கத்தோடு கூடிய ஸ்துதிகளைச் செய்தளிப்போம்—(எ-று.)

2. நவ்வியனான நீ நன்மகத்தினு லெம்மை, யங்கி,
பொவ்வு மெப்பவமுந் துக்க முறுத்திடா வகையிற் சேர்க்க;
எவ்வமில் விசால பூமி, யோங்குபல் லரணு மெய்தல்;
கவ்வையில் சுகத்தைக் காண்க மகவொடெங் கான்முளைக்கே.

(இ-ள்) அக்கினியே! நவீன ஸ்தோத்திரங்களாற் றுதிக்கப்படும் நீ, நல்ல யக்ஞ சாதனங்களால் எந்தப்பாபங்களும் எங்களை வருத்தாதபடிஎங்களை யக்கரை சேர்ப்பாயாக. குறைவில்லாது விசாலமாகப் பரந்த பூமியோடு கூடிப் பலவிதமான வரணை லெங்கட் பொருந்துவாயாக. எங்களது புத்திரர்களுக்கும், சந்ததியாருக்கும், குற்றமற்ற சுகத்தைச் சேர்ப்பாயாக—(எ-று.) ரோக சமனத்தையும் பய நிவாரணத்தையுந் தருவாயாக எனவுங் கூறலாம்.

3. அக்கினி, யெம்மை ரோக மடையுறு தோம்ப லஃதை
யக்கினியோம்பா மாந்த ரடைவதற் குரியர் மீண்டு,
மொக்க வெவ்வமரரோடு முறும்வணக் குரியதேவே,
யெக்கிய பூமி நாடி யெய்துக வெங்கள் மாட்டே.

(இ-ள்.) அக்கினியே! எங்களை நோய்வந் தடையாவண்ணம் காப்பாற்றுவாயாக. அக்கினியை யோம்பாதவர்களே யந்நோய்களை யடைவதற்குரியர். எல்லா வமரர்களோடும் வருகின்ற யஜத்ரனாகிய தேவனே! (ஒளிபொருந்திய வக்கினியே யென்றபடி.) எங்களது யாகபூமியை நோக்கி மறுபடியும் வருக—(எ-று.) நோய்தீர்ப்பது மாத்திரமே போதாது யக்ஞதலத்துக்கும் வரவேண்டும் என்றபடி.

4. இடையறு வினதன்பிற் சா ரில்லினி லொளிர்ந்து நின்று
தடையறு துறுங்காப்பானீ யெங்களை, யங்கி, காக்க;
உடையுறு வன்மை யுற்றோய், யிளமை மிக்குவந்தோ, யச்ச,
மிடையறுப்போற்றோன் றன்னையின்றும்பின்னருந்தொடற்க.

(இ-ள்.) அக்கினியே! உனது தடைபடாத வன்போடுகூடிய யக்ஞக்கிரகத்தில் நீ விளங்கித் தடைப்படாதென்று மோங்கும் உதவிகளால் எங்களைக் காப்பாற்றுவாயாக. சத்துருக்களாலழிக்கமுடியாத பலத்தைப்பொருந்தியவனே! இளமை மிக்கவனே! எப்போதும் ஸ்தோத்திரபரனு யிருப்பவனிடத்துப் பயமானது இன்றைக்கும் பின்னென்றைக்குங்கூடச்சேராமலிருக்கட்டும்—(எ-று)

## மண்டலம் 1 சூக்தம் 189.

5. அங்கியே யெமக்குத் திமை புரிந்துனை வெனும் அகத்தின்
வெங்கரத்தனிற்ளிக்கா தோம்புக; தந்தி தம்பா
விற்குபல் லில்லதின்பா லெமைத்தால்; வலிமியைந்தோய்!
மங்குற வளிக்க வென்று மருவு திமோர்வா யெம்மை.

(இ-ள்.) அக்கினியே! எமக்குத் தீங்கையாற்றி எம்மை யுண்ண விரும்பும் பாபத்தினது கொடியகாத்தினில் எங்களைத் தந்துவிடாது காப்பாயாக. பல்லுள்ள பாம்புமுதலிய பிராணிகளிடத்தும் பல்லில்லாது கொம்பு முதலியவுள்ள பிராணிகளிடத்தும் எங்களைத் தந்து விடாதே. பலமுள்ளவனே! ஹிம்ஸகர்களான தஸ்கர ராட்சஸாதிகளினது கையில் எங்களைத் தந்துவிடாதே—(எ-று.)

### வருக்கம் 10.

6. இத்தகைக் குணத்தோர், யங்கி, யெக்கியத்துக் குதித்தோய்,
நித்தலுந் துதிக்க வெம்மெய் நிந்தையோ டிடுக்கணுற்ற
வொத்தவெப் பகைவனின்று மோம்புக; தேவ, நீயே
இத்தரைக் குடிலமாற்று மெவனையும் வதைக்கின்றாயே.

(இ-ள்.) இத்தகைய குணங்களோடு கூடிய வக்கினியே! ரிதத்துக்காக அல்லது யக்ஞத்துக்காகப் பிறந்தவனே! யாங்கள் உனைத்துதிக்கும்போது நீ, எங்களை நிந்தித்து எங்கட்குத் துன்பம்புரியவெண்ணும் எல்லாப்பகைவரிடத்தினின்றும் எமது சரீரத்தைக் காப்பாற்றுவாயாக. தேவனே! நீயே இவ்வுலகத்துக் குடிலச்செய்கை புரியும் எல்லாச் சத்துருக்களையும் வதைப்பவன்—(எ-று.)

7. துதிப்பதற் குரிய வங்கி தோன்றிரு வகையர் தம்மை
விதிப்படி யுணர்ந்து வைகல் மிளிர்கின்று யாகவான்பா;
லெதிர்ப்படு மாக்ரமத்தோ யியையும்போ திருத்துவிக்கர்
விதிப்படி புரியும் யாகச் சூரியின் மனுக் கடங்கல்.

(இ-ள்.) வணங்குதற்குரிய வக்கினியே! யஷ்டா, அயஷ்டா என்று மிருவரையு மறிந்து விடியற்காலத்து யாகவானிடத்து ஒளிபெற்று நிற்கிறாய். வேகமுள்ளவனே! நீ வந்து பொருந்தும்போது, ரித்விக்குக்களின் இச்சைப்படி செய்யும் யாகஸூரியைப்போல மனிதர்களது இஷ்டத்துக்கடங்கி நடப்பாயாக—(எ-று.) யஷ்டா, யாகஞ்செய்பவன் அயஷ்டா,யாகஞ்செய்யாதவன். மனு, மனிதர். ஸூரி யாகத்துக்குப் பொருளுதவி செய்து அதனை நடத்துவிப்பவன்.

8. அருமறைச் சூனுவாகு மக்கினிக் கொன்னர்க் கொல்லும்
பெருவலி யவனுக்கெந்தம் போற்றுமே பிறக்கச்சொன்னோம்;
இருடிய ரோடியாமு மென்னிலாத் தனத்தை யெய்த
கருதிய வுண்டி வன்மை நெடும்பகல் வாழ்வியாங் காண்க.

(இ-ள்.) மந்திரத்தினுற்பவிக்கும் குழந்தையாகிய அங்கிரசியினிடந்தும், சத்துருக்களைக் கொல்லும் பலம் வாய்ந்த வனிடத்தும்,எமது ஸ்தோத்திரத்தைக்கூறினேம். மற்றைய ரிஷிகளோடு யாங்களும் கணக்கில்லாத செல்வத்தை யெய்துவோமாக. உணவு பலம் நீண்டவாயுள் இவற்றை யாங்கள் பெறுவோமாக—(எ-று.) ஈண்டும் மானனது புத்திரனாகிய நான் என்பர் மேனாட்டாசிரியர். ஆனால் ஸாயணர் மாநோத்மந்த்ர: என்று அங்கிரசிக்கேற்றி ஏழாம் வேற்றுமைப்பொருளில் வந்த முதல்வேற்றுமையென்பார்.

## வருக்கம் 11.

## 190. மண்டலம். 1. அநுவாகம். 24. சூக்தம். 11.

### 8 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: பிரஹஸ்பதி. ஸ்நானஞ்செய்து இச்சூக்தத்தைச் சபித்துப் பிரஹஸ்பதியை வணங்குவோர் வீரர்களையும்,தனத்தையும், நல்ல பெருமையையும் அடைகிறார்கள் என்பார் சௌநகர்.

1. புரையிலா னிச்சை யீவோன் பொங்குதேன் மொழியுள்ளோ
னுரைபெறு நவத்துதியி னுவப்பின்வாக்கிறையைப்போற்றல்;
நிரையொளி யுடையோ னர்க்க நிறைமொழி கொண்டுதேவர்
தரையுறு மனிதர்கூடத் தவநவத்தோன் சொற் கேட்பார்.

(இ-ள்.) (ஹோதாவே!)குற்றமற்றவனும், இச்சைகளை யளிக்குங்காளையும், சந்தோஷப்படுத்தும் வசனத்தோடு கூடியவனுமான பிரஹஸ்பதியை நூதன ஸ்தோத்திரங்களாற் போற்றுவாயாக. மிக்கவொளி வீசுபவனும் நவநவமான ஸ்தவங்களுக்கு அருகனுமான வவனது சொற்களை யர்ச்சனஸாதனமான மந்திரங்களைக் கூறிக்கொண்டு தேவர்களும் மர்த்தியர்களும் கேட்பார்கள்—(எ-று.) எவனுடைய சொல்லைத்தேவர்களும் மர்த்தியர்களுங் கேட்பார்களோ அப்பிரஹஸ்பதியைப் போற்றுவாயாகவென மூலத்திலுள்ளது.

2. அவனையே வணங்குங் கால வாக்குக, டேவர் தம்மை
யிவணுற விழையு மாந்தர் நீரினை பொழுக்கல் போன்றே;
அவன்ம னுவிர்ப்பவிக்கும் விபு வறல் சிறந்த தியும்
பவனனு மாதரிச்சுவான் மறைப்பதி யானுனே

(இ-ள்.) தேவர்களை வணங்கும் யஜமானர்கள் தண்ணீரைப் பெருகுவிப்பதுபோல ஸ்தோத்திரங்கள் (வருஷ ரிதுவுக்கான ஸ்தோத்திரங்களென்பர் ஸாயணர்) அவனையே ஸேவிக்கும். (தேவ யஜனஞ் செய்பவராது கூட்டமான ஒரு நதி நகர்வதுபோல வென்பார் மேனாட்டாசிரியர்.) அந்தப்பிரஹஸ்பதியே எல்லாவற்றிலும் ஆவிர்ப்பவிக்கும் விபுவாய்ச் சிரேஷ்டமான

தக்ஷிராகிய பலனை யளிக்கும் வாயுவாகிய மாதரிச்வாகுைவானுன்—(எ-று.) மேனுட்டாசிரியர், 'லோகங்களைப் பரப்பினதால் பெரிய மாதரிச்வாருய்ப் பிருஹஸ்பதி யக்ஞத்திலிடத்துத் தங்கினுன்.' என்பர்.

3. அரக்கரின் றெவன்றிறமை யனைத்து நித்தலும் மொளியைப்
பெருகுவோ னச்சுறுத்தும் வனமிருகத்தின் வன்மை
செருக்குறப் பெறுவா, னன்ருல், சிறந்தருகின னமத்தோ
டருக்கத்தைப் புகழை யேற்ப னருக்கனின் கரத்தினென்ன.

(இ-ள்.) எவனுடைய சாமர்த்தியத்தைக்கொண்டு தினகாரக வொளியைத்தரும் ஸவிதா மாத்தேவுாதி ராட்சஸர்களதுபயத்தின் நீங்கினவனுய்ப் பயத்தைத்தரும்ஸிம்ஹம் முதலிய வனமிருகங்களைப்போலப்பலத்தை யடைவானே,அந்த பிருஹஸ்பதி,யஜமானன் அருகிலிருந்து யக்ஞத்தோடு புரியும் ஸ்துதியையும் சுலோகத்தையும், சூரியன் தனது கிரணங்களை நீட்டுவதுபோலத்தனது கரங்களை நீட்டி யேற்றுக்கொள்ளுகிறுன்—(எ-று.)

4. அவன் புகழ் வானம் பூமி யெங்கணும் பரவா நின்ற;
லவிதரு ஞானி யாதித்தியன் றனி னதனை யேற்க;
இவை விருகற்பதியைப் போற்றவ லகியின் மாயை
யவை நிறைவானிற் செல்லும் வேடன்ற னம்பையொத்தே.

(இ-ள்.) அவனது(பிருஹஸ்பதியினது) சுலோகம்வானத்திலும்பூமியிலும் பரவியுள்ளது.அவியளித்துப் பூசிக்கும் ஞானி சூரியனைப்போல வேகமாகச் சென்று அப்புகழைக் கைக்கொள்ளட்டும். பிருஹஸ்பதியைப் போற்றுமிவை (ஸ்துதிகளென்றபடி) அறிவினது மாயை நிறைந்த வானிடத்தை நோக்கி வேடனது அஸ்திரங்கள் செல்லுவதுபோலச் செல்லும்—(எ-று.) அத்யோக என்பதற்குக் குதிரையைப்போல வேகமாகவென்பது தான் எங்கும் உபயோகப்பட்டுள்ள பொருள். இங்கு சூரியனைப்போல வென்பார் ஸாயணர்.

5. தேவ கல்யாணனுன்னைச் சிறிதுமே பலன்றராத
வாவென வெண்ணி யுள்ளஞ்சார் பாபிக ளுனுஞ் சீவிப்பார்;
மேவு மித்துட்ட புத்தி யோருக்கில் கொன்று மீயாய்;
ஆவலின் மறைப்பதியே யடக்குவாய் கொடுமையோரை.

(இ-ள்.) கல்யாணனுகிய வுன்னைப் பயனற்ற பசுவென்று நினைத்து அவிக்கான அன்னப்பொருள்களை யதேஷ்டமாகப் பெற்றுள்ள பாபிகள் உன்னுலேயே சீவிக்கிறுர்கள்.(அல்லது உன்னையடைந்து அற்பத்தை யிரக்கிறுர்களென்பர் ஸாயணர்.) இத்தகைய துர்ப்புத்தியுள்ளவர்களுக்கு நீபொன்முன் தருவதில்லை. பிருஹஸ்பதியே! கொடுமையுள்ளவர்களை நீ யடக்குகிறுய்—(எ-று.)

வருக்கம், 12.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 5.

6. நன்னெறி யொழுகி நல்ல வழிதரு மவனுக் கின்ப
நன்னெறி யாதல் துஷ்டர் தமைத்தெறு மிறைமீ தன்பு
துன்று மித்திரனின்; எம்மைத் தூடித்திங் குனை யுறுதார்
மன்னுறு காவ லோராய் மருவினு மதனி னீங்க.

(இ-ள்.) யக்ஞாதி நல்லமார்க்கத்திற் சென்று நல்லவழிதானியங்களை யளிக்கும் அவனுக்குத், துஷ்டர்களை யடக்கும்வேந்தனிடத்து எல்லா வழியாலும் அன்புமிகுந்துள்ள சிநேகிதனைப்போல, நல்ல மார்க்கமாக நீ யிருப்பாயாக. எம்மைத் தூஷித்து உன்னை யடையாதவர்கள் அநேககாவல்களோடு கூடியிருப்பினும் அவர்கள் ஒரு காவலுமில்லாதவர்களாகட்டும்—(எ-று) இச் செய்யுட்கு மேனுட்டாசிரியர் உரை தெரியவில்லையென்று கூறி வேறுமாதிரியாக மொழிபெயர்ப்பர், இவ்வுரை ஸாயணருரையைப் பின்பற்றியது. பின்னிரண்டடிக்கு, 'எங்களுக்குபதேசஞ்செய்யும் பாபமற்றவர்கள் அஞ்ஞானத்தால் மூடப்பட்டிருப்பினும் அவ்வஞ்ஞான வாவரண நீங்கினவர்களாகட்டும்.' எனவேறொரு பொருளும் ஸாயணர் கூறுவர்.

7. அவனிய ரெனத், துதிக ளடையு மன்னவனை, யோங்குந்
துவனிசா ரலைவட்டத்தைத் தோய்கடல் செல்லு மாற்றின்;
அவ னறிவுள்ளோன் வாக்கின்பதி மிகுமாவ லோனு, நீர்,
புவனத்தோய் கலமிரண்டைப் பொருந்தியே கூர்ந்து நோக்கும்

(இ-ள்.) பூமியிலுள்ளவர்கள் தங்களது எஜமானர்களிடத்துச் சேர்வதுபோலவும், சப்திக்கும் அலைவட்டங்கள் நிறைந்த சமுத்திரத்தை ஆறுகளடைவதுபோலவும் எங்களுடைய ஸ்தோத்திரங்கள் அவனை யடையும். ஞானவாலும், ஆவலோடு கூடியவனுமாகிய அப்பிரஹஸ்பதி, தண்ணீர் அத்தண்ணீரிற்றோற்றும் நாவாய் ஆகிய இரண்டையும் அவ்விரண்டுக்கு மத்தியினின்று கவனித்துப்பார்ப்பான்—(எ-று.) இதுவும் கடினமான ரிக்கென்பர்மேனுட்டாசிரியர். நீர் யக்ஞாதி கர்மங்களென்றும் நாவாய் அக்கர்மத்தை நிறைவேற்றுதற்கான பரிகலங்களென்றும் கூறுவர் அவர். அப்ஸு-நீர், கர்மம் என்னும் பொருளிலும், தர: தாண்டுஞ் சக்தி, படகு என்னும் இருபொருளிலும் வந்ததால் இரட்டுற மொழிதல் என்னும் உத்தியென்பார் லுட்விக் கென்பவர்.

8. வருடிப்போன் மகத்துவத்தோன் பலபொருளெனிப் புதித்தோ
னுரமுளோன் மறைக்குநாத னேருங்குறற் றேவன் போற்றுற்
றாமுறத் துதிக்கப்பெற்று னன்னவன் றருக மாவா;
கருதிப வுண்டி வன்மை நெடும்பகல் வாழ்வியாங் காண்க.

(இ-ள்.) இச்சைகளை வர்ஷிப்பவனும், மகத்துவம் வாய்ந்தவனும், பல விஷயங்களின்பொருட்டு உதித்தவனும், பலமிகுந்தவனும், பிரஹஸ்பதியும், தேவனுமான அவன் ஸ்தோத்திரங்களால் துதிக்கப்பெற்றுன். அவன் எங்களுக்குக் குதிரைச்செல்வத்தையும் பசச்செல்வத்தையுந் தருக, உணவு, பலம் தீர்க்காயுள் இவற்றையாங்கள் பெறட்டும்—(எ-று.)

### வருக்கம். 13.

## 191. மண்டலம் 1. அநுவாகம் 24. சூக்தம் 12.

### 16 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அகஸ்தியன்; வடமொழிச்சந்தம்: 1-9 அநுஷ்டுப், 10-12 மஹா பங்தி, (பங்திபோல) 13 மஹாப்ருஹதி(திருஷ்டுப்போல) 14-16 அநுஷ்டுப்; தேவதை; தண்ணீர், திரணம், சூரியன். இவர்களாம்.

அகஸ்தியன் தனக்கு யாரோ விஷ மூட்டிவிட்டார்களெனப் பயந்து இவ்விஷ நிவர்த்திக்காகப் பாடிய உபநிஷத்துச் சூக்தமிது. உபநிஷத்தென்பதற்கு ரஹஸ்ய மென்பது பொருள். நிஷ்டையோடு இச்சூக்தத்தைச் சபித்தால், குளவி, பாம்பு, தேள், முதலிய பிராணிகளின் விஷங்களும், வேர் முதலிய விஷங்களும் திருஷ்டி தோஷமும் நீங்குமென்பார் சௌநகர்.

(வேறு.)

1. அற்பமோடு பேர்விடங்களும் விடத்தி னோடறலின்
முற்படும் மிருவகையவா முயிர்களு முன்ன
ரேற் சரீரத்துள் யானறியா வகை யியைந்து
தோற்றி யன்னதைச் சூழ்ந்துகாய்ந் துறுகணூட்டுவவே.

(இ-ள்.) அற்ப விஷங்களும், பெரு விஷங்களும், நீரிலுறையும் பிராணி விஷங்களும் (தரையிலுறும் பிராணி விஷங்களும், என்பதையினத்தாற் கூட்டிகொள்க வென்பார் ஸாயணர்.) ஆகிய விருவகைப்பட்ட பிராணி விஷங்களும் என்னையறியாமல் எனது சரீரத்துக்குட்புகுந்து அதனை வருத்துகின்றன—(எ-று) தரையிலூரும் பிராணிகளின் சில்விஷம், பெருவிஷம், நீர்ப்பிராணிகளின் சில்விஷம் பெருவிஷமென ஈரிரண்டுறுவதைக் காண்க.

2. வந்து பின்பது கண் ணுறு வகையினின் விடத்தை
யுந்தி யோட்டுறும், போகு மக்காலையுங் கொல்லும்;
முந்த வந்தல நின்றுமுன் னோட்டு மப்போதே
நந்துவிக்கும்; தூளாக்கி யவ்விடமெலாம்பொடிக்கும்.

(இ-ள்.)[இது விஷத்தைத்தவிர்க்கும் ஒஷதி ஸ்துதி.] அது (ஒஷதியானது) வந்த பின்னர் அவ்விஷமானது காணாத வகையே அவ்விஷத்தை யோட்டிவிடும். போகும்போதே அதனை நாசஞ் செய்துவிடும். எல்லாவித மானவிஷங்களையுந் தூளாக்கி யழிக்கும்—(எ-று.)

3. சரத்தினோடு நற்குசை குசரங்களிற் சைர்யர்
திரத்து முஞ்சப்புல் லாதிய வவற்றினிற் றிரிந்தே
யுரத்து வைரமோ டொழுகிடும் யாவையு மறைவின்
வெருக்கொளும் வகை யென் னுட னிற் பரவினமே.

## அஷ்டகம் 2 அத்தியாம் 5.

(இ-ள்.) சரப்புல், தருப்பை, குசரம், சைர்யம், முஞ்சப்புல் இவற்றுக்குள் வைரத்தோடு திரியும் விஷப்பிராணிகளின் விஷமெல்லாம் யானறியாதபடி யெனக்குட் புகுந்து யான் பயப்படும் வண்ணம் பார்த்து நின்றன—(எ-று) குசரம் குத்ஸிதசரமென்பார் ஸாயணர். ஸைர்யம் தடாகாதிப் பிராந்தங்களில் விளையும் புல், அசுவவால் எனப்பெயர்போனது என்பர். சரம் குசரம், தர்ப்பை அல்லது குசம், சைர்யம், முஞ்சம் இவை புல் வகைகளாம்.

4. ஆக்கடங்கள் கோட்டத்தினி லடங்கின; மிருக
மோக்க முற்றதங் குகையினி லுற்றன; மாந்தர்
தேக்குதம் முணர்ஒமொளி யிழிவுறச் சேர்ந்தார்;
ஊக்கி யப்பொழு தெய்தின கண்ணுறு தனவே.

(இ-ள்.) பசுக்கள் தங்கள் கொட்டிலிற் போயடங்கின. மிருகங்கள் தங்கள் குகைகளிற் றங்கின. மனிதர்களுடைய அறிவாகிய வொளியிழிவு பெற்று நின்றது. அந்தச் சமயத்திற் கண்ணுக்குத் தெரியாத விஷங்கள் என்னை யடைந்து என்னுடலிற் பரவிவிட்டன—(எ-று.)

5. இப்பிராணிக ளூர்வன யாவையுந் தூங்க
ளெப்பிராணிகள் கண்ணிலுந் தோற்றுறு தெல்லாத்
துப்பையு முணர்ந் தோங்குறு மசண்டைதோய் காலத்
திப்புவியுறுந் தேனரின் விழிப்பி னெய்துறவே.

(இ-ள்.) ஊர்வனவாகிய இவ்விஷப்பிராணிகளெல்லாம் தாங்கள் ஒருவர் கண்ணிலும் படாமல் எல்லாப் பிராணிகளையும் பார்த்துக்கொண்டே மசண்டை யிருட்டாயுள்ள மாலைக் காலத்திற் றிருடர்களைப்போலக் காணப்படும். (ஆகையால் மனிதர்களே! ஜாக்கிரதையாயிருங்கள்)—(எ-று.) தேனர், ஸ்தேனர், திருடர்.

6. வானமும் பிதாப் புவியுமே தாயென்பார் சோம
னுனவன் பிராதா வுடன்வயிறுமே யதிதி
யானதா லெலாவற்றையுங் கண்டுகொண் டொருவ
ரேனுங் கண் ணுறு வகையுறல்; தூங்குக சுகமே.

(இ-ள்) பாம்புகளே! உங்கள் பிதா வானமாம்; மாதா பூமியாம்; சோமன் உங்கள் சகோதரனும், அதிதி சகோதரியாம். ஆகையினால் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டே ஒருவர் கண்ணிலும் படாமல் நீங்கள் தாங்குவீர்களாக, உங்களுங்களிடத்தில் (எங்கள் மாட்டுவராமல் என்றபடி.) சுகமாகத் தூங்குவீர்களாக—(எ-று.)

7. புயங் கடிப்பவ ரங்கத்தைப் புண் படுத்துபவ
ரயங்கொ ளூசியிற் கொடுக்குள ரதிவிடஞ் செறிந்தோர்
நயங்கொளெங்கணிற ரேற்றுநீர்-நீங்களெல்லாருங்
கயங்கொண் டெம்முறு தோடுக மறைக வெங்கட்கே.

## மண்டலம் 1 சூக்தம் 191.

(இ-ள்) புஜத்தைக் கடிப்பவர்களும், அங்கத்தைப் புண்படுத்துபவர்களும், இரும்புசிபோன்ற கொடுக்கோடு கூடியவர்களும், அதிக விஷத்தோடு கூடியவர்களுமாய் எங்கள் கண்ணுக்குத் தெரியாமலிருக்கும் விஷ ஜந்துக்களே! நீங்களெல்லாரும் தேய்வையடைந்து எம்மையடையாதபடியே டி எங்கள் கண்ணிற்படாமல் மறைவீர்களாக —(எ-று) கயம், க்ஷயம்.

8. கண்ணுறுதன கடிபவன், யாவருங் காண்போன்
விண்ணொளிர் மணி கிழக்கினி லுதித்தெழுந் திடுவான்,
கண்ணுறுதன யாவையுந் தயருறக் களைந்திங்
கென்று நிமையா ருயிர்களை யெழிறை வழித்தே.

(இ-ள்.) மனிதரது கண்ணுற் காணப்படாதனவற்றைக் கொல்லுபவனும், எல்லாராலுங்காணப்படுபவனுமான விண்மணி(சூரியன்)கண்ணிற்படாத ஜந்துக்கள் யாவற்றையும் அழித்துக்கொண்டும்,தீமை நிறைந்த மஹாஉரக ராக்ஷஸாதி ஜீவன்களை நாசப்படுத்திக்கொண்டும் கிழக்குத்திக்கிலுதித்து மேலெழுவான் —(எ-று.)

9. எப்பொருளையு மிருதிவி னழிப்பவ னென்றாழ்
அப்பொருண்மைசா ராதித்தன் மலையினின் றுயரத்
துப்போடும் மெழுந்தோங்கினன் யாவருங் காண்போ,
னிப்புவியினின் மறைந்தொழு கவற்றினை யிரிப்போன்.

(இ-ள்) எல்லா வஸ்துக்களையும் நன்றாகவழிப்பவனும், மேற்பாட்டிற் சொன்ன குணவிசேஷமன்ன வாதித்தியனும், எல்லாராலுங் காணப்படுபவனும், இப்ரகண்ணுக்குத் தெரியாமலிருக்கும்விஷஜந்துக்களையழிப்பவனுமாகிய சூரியன் மலையின்மீது உயரமாகத்தோன்றியெழுந்தனன்—(எ-று.

(வேறு.)

10. சூரியனிடத்திற் றொங்கு விப்பன் யான் விடத்தைக், கள்ளை
யேருற விற்போன் றோற்பை தம்மு ளதைதமைத்த லொப்ப;
சாரலனவனுஞ் சாவை, யாமுமே யதனைச் சாரோம்;
தூர மன்னவன் றன்பாதை; யரிநிறத் தயக்கப்பெற்றே
சூரு மாதுரியத் தேனு யாக்கினு னுன்னை மெய்யே.

(இ-ள்.) கள்ளைச் செய்து விற்பவன் றோற்பைகளில் அக்கள்ளை யூற்றி தொங்கவிட்டு வைப்பதுபோல யான் விஷத்தைச் சூரியவட்டத்திற் றொங்கவிட்டு வைப்பேன். அவ்விஷம் பட்ட காரணத்தால் அவன் சாகமாட்டான். அச்சூரியனுடைய அருளுண்மையால் யாமுஞ் சாகமாட்டோம். அவனுடைய பாதை வெகு தூரத்திலுள்ளது. (விஷமே!) அரியென்னும் குதிரைகள் சுமந்து செல்லும் அச்சூரியன் உன்னை யினிமைவாய்ந்த மதுவாக (உண்மையாகவே) மாற்றிவிட்டான்—(எ-று.) சூரிய ரூபமாக ஒரு சக்கரம் வட்டமாக வரைந்து அதற்குள் அவ்விஷத்தை யடைத்து அதனை மந்தி

ரத்தினால் மதுரூபமானவமிருதமாகமாற்றும் வித்தைக்குத்தான் மதுவித்தையென்று பெயர். ததீசியினிடத்திலிருந்து அசுவினிகள் பெற்ற வித்தைகளில் இது ஒன்று. இச்செய்யுளும் பின் மூன்று செய்யுட்களும் அத்தகையுபயோகிக்கப்படுவன.

11. எரினிப் பணியிபற்றுஞ் சிறுபுளாம் பெடையு முன்னைச்
சாருறு விடத்தை யுண்டு சமித்திடச் செய்துகொண்டாள்;
சாரல ளவளுஞ் சாவை, யாமுமே யதனைச் சாரோம்;
தூரமன்னவன்றன்பாதை; அரியினாற் சுமக்கப்பெற்றோ
னொரு மாதுரியத் தேனா யாக்கினா னுன்னை மெய்யே.

(இ-ள்.) அழகாக இவ்விதம் வேலைசெய்யும் சிறு பட்சியாகிய கபிஞ்சலிப்பேடு உன்னிடத்திலுள்ள விஷத்தைத் தானுண்டுஜீரணித்துக்கொண்டுவிட்டது. அதுவுஞ் சாகாது. நாமும் சாகமாட்டோம். அச்சூரியனது பாதை வெகு தூரமானது. (விஷமே!)அரியென்னும் குதிரைகள்சுமந்துசெல்லும் அச்சூரியன் உன்னை யினிமை வாய்ந்த மதுவாக மாற்றிவிட்டான்—(எ-று.) இவ்வித்தையினால் விஷந்தீண்டப்பெற்றவனது சரீரத்திலுள்ள விஷம் இச்சகுன (பக்ஷி)த்துவாரா சூரியனை யடைகிறது. அப்பட்சி கபிஞ்சலீ யென்பார்ஸாயணர். செய்யுளிற் பெண்பாலாகக் கூறினாரேனும் உரையில் அஃறிணையானது பற்றி ஒன்றன் பாலாகக் கூறப்பட்டது.

12 ஊருமூவெழு புலிங்க முண்டன, வெம்மைச் சூழ்ந்து
சாருறுவிடத்திற் றோன்றும் வலிக்கொழுப்பதனை நன்கே;
சாரல வவைதாஞ் சாவை, யாமுமே யதனைச் சாரோம்;
தூரமன்னவன்றன் பாதை; அரியினாற் சுமக்கப்பெற்றோ
னொரு மாதுரியத் தேனா யாக்கினா னுன்னை மெய்யே.

(இ-ள்.) மூன்றுவகைப்பட்ட எழு புலிங்கங்கள் நம்மைச் சூழ்ந்து பற்றிய விஷத்தின் வலிமையைத்தின்றழித்தன. அப்புலிங்கங்களுஞ்சாகா. நாமுஞ் சாகமாட்டோம். அவனது பாதை வெகு தூரமானது. (விஷமே!) அரியினாற் சுமக்கப்பெற்ற அச்சூரியன் உன்னை யினிமை வாய்ந்த மதுவாக மாற்றிவிட்டான்—(எ-று.) புலிங்கம், தீப்பொறி, ஊர்க்குருவி யிரண்டிக்கும் பெயர். சிவப்பு, வெள்ளை, கறுப்பு பேதத்தால் மூன்றுவகைப்பட்ட காலி கராலி முதலிய எழுவகைச்சுடர்களென்னலும் தகும்; இன்றேல் 21 வகைப்பட்ட ஊர்க்குருவி பேதத்தைக்கொள்ளலுந்தகுமென்பார் ஸாயணர். முன்பு மண்டலம் 1 சூக். 50செய். 12ற்கிளிமுதலிய பறவைமஞ்சட்காமாலையை மாற்ற உபயோகிக்கப்பட்டுள்ளதைக் காண்க.

13. சாருறு விடத்தை மாற்றுஞ் சத்திவாய்தொண்ணூற்றொன்பா
னேருறு நதியினும மெவற்றையு மெண்ணினேன் யான்;
தூர மன்னவன் றன்பாதை; அரியினாற் சுமக்கப் பெற்றோ
னொரு மாதுரியத் தேனா யாக்கினா னுன்னை மெய்யே.

## மண்டலம் 1 சூக்தம் 191.

(இ-ள்.) எங்களைச்சாரும் விஷத்தை மாற்றுஞ் சக்திபொருந்திய தொண்ணூற்றொன்பதுநதிகளெல்லாவற்றின் பெயரையும் யான் எண்ணிக் கீர்த்தனஞ்செய்தேன். அவனது பாதை அதிதூரத்திலுள்ளது. (விஷமே!) அரியென்னுங் குதிரையினாற் சுமக்கப்பெற்ற சூரியன்உன்னை இனிய மதுவாக மாற்றிவிட்டான்—(எ-று)

(வேறு.)

14 மூவெழுமைசார் மயிற்பெடை யோடெழு சுவசை
யாவவா நதிகளு மூனதிரும் விடமதனை,
யாவலோடு கும்பத்தினிற் பெண்கடண்ணீரை
மேவு செய்கையிற் சேர்த்தலிற் சுமந்து சென்றனவே.

(இ-ள்.) இருபத்தோரு பெண் மயில்களும், கங்கைமுதலிய எழுநதிகளும், பெண்கள் குடத்தில் தண்ணீரைத் தூக்கிக்கொண்டு தூரப்பிரதேசத்துக்குக் கொண்டுபோவதுபோல, உன்னுடையவிஷத்தைத் தூரக்கொண்டுபோயின—(எ-று.) 21 என்ற எண் ஒரு காரணமுமின்றி மேற் பன்னிரண்டாவது செய்யுளினின்றும் எடுக்கப்பெற்றதுபோலுமென்பார் மேனாட்டாசிரியர். மயில்கள் பாம்புக்குப் பகையென்பது உலகப்பிரசித்தம். நதியே மு மண். 12 சூக். 32 செய். 12 பார்க்க.

15. குற்றுருக்கொடு குவலயத்தினிற் குழிபறிக்குஞ்
சிற்றுயிரதா நகுல முன்றனைத்தெறும் விடத்தை
முற்று நேடியே போட்டுக; இல்லெனின் முரணி
னெற்றி யன்னதைக் கல்லினா னசுக்குவனின்னே.

(இ-ள்.) அற்ப உருவோடு மண்ணிற் குழிபறிக்கும் கீரியானது உனது விஷத்தை முழுவதுமில்லாமற் செய்யட்டும். இல்லாவிடில் அதை என் வலிமைகொண்டு கல்லினால் நசுக்கிக் கொல்லுவேன்—(எ-று.) மேனாட்டாசிரியர் அவ்விருக்குக்கு, 'விஷப்பூச்சி மிகச்சிறியது. அப்பிராணியை நான் கல்லால் நசுக்குகிறேன்.' தூரதேசங்களுக்குப்போன அவ்விஷத்தையங்கிருந்து விலக்கி யோட்டுவேன். எனமொழிபெயர்ப்பர். குஷும்பக: என்பதற்கு விஷப்பையையுடைய பிராணியென்று லுட்விக், கிராஸ்மான் இவர்கள் கூறுவதாற் றானு மதனையே பின்பற்றினதாகக் கூறுவர். ஸாயணர் நகுலம் பாம்புக்கு வைரியென்று எல்லாரு மறிந்ததென்பர்.

16. அரசமுற்ற தேள் விஷம வலியற்றதென் றிண்டு
கிரியினின்று மக்கிரிதான் வெளிவந்து புகன்ற,
தரசவெங் கொடுக்குள விருச்சிக மெனுமுயிரே,
அரச முன்விட மென்பதை நீ யறிகுவையே

(இ-ள்.) நகுலமானது மலைப்பக்கத்திலிருந்து வெளிவந்து தேளினது விஷம் ஸாரமற்றதென்று புகன்றது. 'விருச்சிகமே! உனது விஷம் அற்பத்தன்மையோடு கூடியது.' என்று கூறிற்று—(எ-று) தேளின்விஷம் சிறியது. பாம்பின் கடியும் கிருமி முதலியவற்றின் கடியும் அற்பமே. அவை பாதிப்பதில்லையென்றும் கூறிற்றென்பார் ஸாயணர். இச்செய்யுட்களெல்லாம் விஷத்தைப்போக்கும் உபநிஷத்தாம்.

வருக்கம் 16.

முதல் மண்டலம் முற்றும்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 5.

முதல் மண்டலம் இதனோடு முடிந்தது. இதற்குச் சதர்ச்சி மண்டலமெனப் பெயர் வந்ததன் காரணம் ஒவ்வொரு ரிஷியும் ஏறக்குறைய நூறு இருக்குக்கள் அல்லது தனிச் செய்யுட்கள் பாடியுள்ளதாலென்க. இம்மண்டல அட்டவணை பின்வருமாறு:

### முதல் மண்டலம்.

| அநுவாகம். | சூக்தம். | ரிக்குக்கள். | தமிழ்ச் செய்யுள். |
|---|---|---|---|
| 1 | 3 | 30 | 30 |
| 2 | 4 | 40 | 40 |
| 3 | 4 | 40 | 40 |
| 4 | 6 | 66 | 66 |
| 5 | 6 | 77 | 77 |
| 6 | 7 | 97 | 97 |
| 7 | 5 | 71 | 71 |
| 8 | 8 | 96 | 96 |
| 9 | 7 | 80 | 80 |
| 10 | 7 | 72 | 72 |
| 11 | 7 | 74 | 74 |
| 12 | 9 | 91 | 61 |
| 13 | 11 | 97 | 97 |
| 14 | 9 | 106 | 106 |
| 15 | 12 | 125 | 125 |
| 16 | 10 | 108 | 108 |
| 17 | 5 | 83 | 83 |
| 18 | 6 | 78 | 78 |
| 19 | 7 | 60 | 60 |
| 20 | 6 | 40 | 40 |
| 21 | 17 | 119 | 119 |
| 22 | 8 | 123 | 123 |
| 23 | 15 | 124 | 124 |
| 24 | 12 | 115 | 115 |

ஆக அநுவாகம் 24-க்கு சூக்தம் 191 ரிக் 2012. அதற்குத் தமிழ்ச் செய்யுள் 1982.

இம்மண்டலத்தின் சூக்தங்களைக் கண்ட ரிஷிகளின் சரித்திரச் சுருக்கம் பின்வருமாறு:

## மண்டலம் 1 சூக்தம் 191.

1. மதுச்சந்தன்: இவன் விசுவாமித்திர வம்சத்துப் பிறந்தவன். இவன் 1 முதல் 10 முடியவுள்ள சூக்தங்களைக் கண்டவன்.

2. ஜேதா: இவன் மேற்சொன்ன மதுச்சந்தனின் புத்திரன். 11வது சூக்தத்தைக் கண்டவன்.

3. மேதாதிதி: இவன் கண்ணுவனது புத்திரன். 12 முதல் 23 முடியவுள்ள சூக்தங்களைக் கண்டவன். இவனது யாகத்தில் இந்திரன் ஆட்டுக்கடா உருவாகவந்து சோமபானஞ்செய்தான். இவனொரு ஆப்ரீ சூக்தத்தைக் கண்டவன்.

4. சுநச்சேபன்: அஜீகர்த்தரது புத்திரன். அரிச்சந்திரன் மகன் ரோஹிதனுக்குப் பதிலாக வருணபலிக்காகத் தந்தையினிடத்து விலைக்கு வாங்கப்பட்டு விசுவாமித்திரரது சற்போதனையினால் வருணனைப்பாடி யூபத்தினின்றும் அவிழ்க்கப்பட்டுத் தப்பியவன். 24 முதல் 30 முடியவுள்ள சூக்தங்களைக்கண்டவன். வெகு உருக்கமான கவி.

5. ஹிரண்யஸ்தூபன்: இவன் அங்கிரஸ வம்சத்து வந்தவன். 31 முதல் 35 முடியவுள்ள சூக்தங்களைக் கண்டவன்.

6. கண்ணுவன்: கோரனது புத்திரன். 36 முதல் 43 முடியவுள்ள சூக்தங்களைக்கண்டவன்.

7. பிரஸ்கண்வன்: 6வதாகச் சொன்ன கண்ணுவனது புத்திரன். 44 முதல் 50 முடியவுள்ள சூக்தங்களைக் கண்டவன்.

8. ஸவ்யன்: அங்கிரஸனது புத்திரன் இந்திரஸமானவன். 58 முதல் 62 முடியவுள்ள ஸூக்தங்களைக் கண்டவன்.

9. நோதா: கோதமனது புத்திரன். 58 முதல் 64 முடியவுள்ள ஸூக்தங்களைக் கண்டவன்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 5.

10. பராசரன்: சக்தியின் புத்திரன். கிருஷ்ணத்வைபாயன வ்யாஸனின் தந்தை. 65 முதல் 73 முடியவுள்ள ஸூக்தங்களைக் கண்டவன்.

11. கோதமன்: ரஹூகணனது புத்திரன். நோதா அல்லது நோதஸனின் தந்தை. 74 முதல் 93 முடியவுள்ள ஸூக்தங்களைக் கண்டவன். இவனுக்காக அசுவினிகள் ஒரு நீரூற்றைக் கொண்டுவந்தளித்தார்கள்.

12. குத்ஸன்: ஆங்கிரஸன் புத்திரன். 94 முதல் 98 முடியவுள்ள ஸூக்தங்களையும், 101 முதல் 115 முடியவுள்ள ஸூக்தங்களையும் கண்டவன். இவனும், 105 வது ஸூக்தத்தை யிவனோடு பாடிய அபன் புத்திரனான திரிதனும் கிணற்றில் தள்ளப்பட்டு வருந்தியவர்கள். விசுவதேவர்களையும் இந்திரனையும் துதித்துக் கரையேறினார்கள்.

13. காச்யபன்: மரீசியின் புத்திரன். இவன் ஒரே ரிக்குள்ள 99 வது ஸூக்தத்தைக் கண்டவன்.

14. வார்ஷாகிரர்: விருஷாகிரன் புத்திரர், ரிஜ்ராச்வன், அம்பரீஷன், ஸஹதேவன், பயமானன், ஸுராதஸன் என்னும் ஐவர். 100 வது ஸூக்தத்தைக் கண்டவர்கள். இவர்களுக்குக் காரணப்பெயர்களாக வந்தவை இவை. இவருள் ரிஜ்ராச்வன் கதை வருமாறு: 'ஒருநாள் அசுவினி தேவதைகளின் வாகனமாகிய கழுதை காட்டுநாய் வேஷம்போட்டுவர அதற்கு 100 ஆடு பலி கொடுத்தான். அவன் தந்தையவனது கண்ணைக் குத்திவிட அவன் அசுவினியர்களுக்குத் தன்னை நூற்றொராவது ஆடாகப் பலியிட வெண்ணிய போது அவர்கள் மெச்சி அவனுக்குப் பார்வையைமீண்டு மளித்தனர்.' என்பது

15. கட்சிவான்: தீர்க்கதமஸனுக்கும் அங்கராஜன் தாசியாகிய உசிஜைக்கும் பிறந்தவன். பின்

ளர் அங்க தேசாதிபதியாய் ராஜசூய யாகத்தைச் செய்தவன். இவன் மனைவியின் பெயர் விருசயை. பாவயவ்யனைப் புகழ்ந்து தட்சிணை பெற்றுத் தந்தையாகிய திர்க்கதமஸனுக்கதனை யளித்தவன். குதிரைக் கடிவாளத்தைப் பிடித்தவனென்பது இவனது பெயரின் பதப்பொருள். இவன் ஒருசமயத்துப் பிராஹ்மணனாகவும்மற்றொரு சமயத்துக்ஷத்திரியனாகவும் விளங்குபவன். 116 முதல் 126 முடியவுள்ள சூக்தங்களைக் கண்டவன். வெகு இதிஹாஸங்களை யிவனது சூக்தங்களிற் காணலாம்.

16\. பருச்சேபன். திவோதாஸனது புத்திரன். இத்திவோதஸனுக்கு அதிதிக்குவன் என்ற வேறொரு பெயருமுண்டு. இவனொரு சிறந்த தாதாவாகிய ராஜரிஷி. 127 முதல் 139 முடியவுள்ள சூக்தங்களைக் கண்டவன்.

17\. திர்க்கதமஸன்: உசத்தியனுக்கும் மமதைக்கும் பிறந்தவன். பிரஹஸ்பதி யென்னும் வேறொரு ரிஷியினற் கருப்பத்திலிருக்கும் போதே குருடனுப்போகும் வண்ணஞ் சபிக்கப்பட்டான். அக்கினியைத் துதித்து மீண்டுங் கண்ணைப்பெற்றான். 140 முதல் 164 முடியவுள்ள சூக்தங்களைக் கண்டவன். இவன் ஒரு ஆப்ரீ ஸூக்த ரிஷி.

18\. இந்திரன்: 165,170சூக்தங்களிற் சில ரிக்குக்களைக் கண்டவன். 'யாருடைய கூற்றாகச் சொல்லப்படுகிறதோ அவர்களே ரிஷிகளாம்' என்னும் வாக்கியத்தின்படி இந்திரன் ரிஷியானன்.

19\. மருத்துக்கள். 165வது சூக்தத்திற் சில ரிக்குக்களைக் கண்டவர்கள். இவர்களும் மேல்கூறியபடியான ரிஷிகளேயாம். இவர்கள்

## அஷ்டகம் 2 அத்தியாம் 5.

நாற்பத்தொன்பதின்மரான. கதையை மண். 1ருக் 114 செய்யுள் 6ற் காண்க.

20. அகஸ்தியன்: மித்திராவருணர்கள் ஊர்வசியையோகித்தபோது அவர்களது ரேதஸ் ஒரு கும்பத்தில் விழ அகஸ்திய வசிஷ்டர்கள் உற்பவித்தார்களென்பது கதை. இவன் 165 முதல் 191 முடியவுள்ள ரிக்குக்களைக் கண்டவன். இவனொரு ஆப்ரீ ஸூக்த ரிஷி.

21. லோபாமுத்ரா: அகஸ்தியன் மனைவி. 179வது ஸூக்தத்தில் முதல் இரண்டு இருக்குக்களைக் கண்டவள். இச்சூக்தத்தின் கடைசி ரண்டு இருக்குக்களையும் அகஸ்தியனது சிஷ்யன் கண்டதாகக் கூறப்படுகிறது. இவை பிராயச்சித்த ரூபமான ரிக்குக்களாம்.

ஆங்கில தேசத்திலுள்ள கோபதநகர(Oxford.) சர்வகலா சாலையிற் பதிப்பிக்கப்பெற்ற காத்தியாயனரது ஸர்வாநுக்கிரமணியின் பதிப்பாசிரியராகிய மாக்டாநல் என்பவர் இம்முதல் மண்டலத்துக்குப் பின்வருமாறு சந்தஸநுக்கிரமணி கூறுவார்:—

| | | | |
|---|---|---|---|
| 1 காயத்திரி (24) | ரிக்குக்கள் | 472. | (இச்சந்தஸில் பாதநிச்ரத்தும் பிரதிஷ்டாவுமடங்கும்.) |
| 2 உஷ்ணி (28) | ரிக்குக்கள் | 21. | (இச்சந்தஸில் புரஉஷ்ணி, ககுப், தநுசிரா, அநுஷ்டுப் கர்ப்பம் இவைகளடங்கும்.) |
| 3 அநுஷ்டுப்(32) | ரிக்குக்கள் | 117. | (இச்சந்தஸில் காவிராஜ், நஷ்டரூபி, கிருதி, விராட் இவைகளடங்கும்.) |
| 4 பிரஹதி (36) | ரிக்குக்கள் | 5. | (இச்சந்தஸில் விஷ்டாரப்பிரஹதி, ஸ்கந்தோக்ரீவி, யடங்கும்.) |
| 5 பங்தி (40) | ரிக்குக்கள் | 61. | (இச்சந்தஸில் பிரஸ்தார பங்தி, சதுஷ்பாதவிராட், இவைகளடங்கும், |

## மண்டலம் 1 சூக்தம் 191.

6 த்ருஷ்டுப்(44) ரிக்குக்கள் 742. (இச்சந்தஸில் விராட்ரூபம, விராட் ஸ்தானம், இவை யடங்கும்.)
7 ஜகதி (48) ரிக்குக்கள் 356.
8 அதிசக்வரி(60) ரிக்குக்கள் 5.
9 அஷ்டி (64) ரிகருக்கள் 4.
10 அத்யஷ்டி(68)ரிக்குக்கள் 80.
11 த்ருதி (72)ரிக்கு 1.
12 அதித்ருதி(76)ரிக்கு 1.
13 த்விபாதவிராஜ் (20) ,, 61. 31 என்றுள்ளது.
14 ப்ரகாதப்ரஹத (36 & 40) 80. இவை ப்ரஹதி ஸதோ ப்ரஹதிகளாம்.

---

2006

இந்தப் பட்டியினின்றும் ஆறு சூக்தம் குறைவதன் காரணந் தெரியவில்லை. இத்தமிழ்வேத நூலாசிரியர் மஹாபிரஹதியைப் பிரஹதியிற் சேர்த்துள்ளார். இவ்வநுக்கிரமணி நூல் கிடைப்பதன் முன்னரே இந்நூலாசிரியர் சந்தச்சீர்ப்பிரிவு செய்து கொண்டுவிட்டதாற்சந்தங்களிற்சில வேறுபாடுகளேற்பட்டுள்ளன எனினும் பெரும்பான்மை வேதச் சந்தங்களை குழுப்படுத்தியிருக்கும் முறைக்கு ஒத்ததாகவேயிருக்கிறது. முதல் ஏழு சந்தங்களையே வேதப்பண் ஏழு என்று வழங்குவது வேதவழக்கு. த்விபாதவிராஜ் இவ்விரண்டாகப் படிப்பதே வழக்கானது பற்றி அவ்வநுக்கிரமணியில் 61 என்னாது 31 என்றே வரைந்துள்ளார்கள். எனினும் ரிக்கின் தொகை பேறக்குறைய சரியாக வரும்படி 61 என்றே இங்கு காட்டப்பட்டுள்ளது. 60 இரட்டை இருக்குக்களும் 1 ஒற்றை ரிக்கு அதிகமாகவு மிருப்பதுணர்க. (.) இக்குறிபிட்ட அடைப்பாளங்களுக்குள்ளுள்ளஎண்கள் அவ்வடமொழிசந்தத்தின் எழுத்துக் கணக்குகளை எடுத்துக்காட்டுவன.

இரண்டாவது மண்டலத்திற்குக் கிருத்ஸமத மண்டலமென்றபெயர். இம்மண்டலத்துக்கு இப்பெயர்வந்த காரணத்தை மேல் சொன்னகாது வரலாற்றில் ஷட்குரு சிஷ்யர் கூறியுள்ள கதையிற்

கூறினர். இச்சௌநகரே க்ருத்ஸமதரென்ற பெயருடன் இம்மண்டலத்தை யொழுங்குபடுத்தியவர். இதுமுதல் ஆறு மண்டலங்கள் ரிஷிகளின் பெயரால் விளங்கும். 2வது மண்டலத்துக்குக் க்ருத்ஸமதர், 3வதுக்கு விசுவாமித்திரர், 4வதுக்கு வாமதேவர், 5வதுக்கு அத்திரி, 6வதுக்கு பாரத்வாஜர், 7வதுக்கு வஸிஷ்டர் இவர்கள் ரிஷிகளாம். இவர்களுக்கு மாத்யமர்கள் என்ற பெயருண்டு. இவர்களது மண்டலங்கள் முதல் மண்டலமாகிய சதர்ச்சிமண்டலத்துக்கும், எட்டாவது (ப்ராகாத) ஒன்பதாவது (ஸோமபவமான) பத்தாவது (க்ஷுத்ரஸூக்த மஹாஸூக்த) மண்டலங்களுக்கும் மத்தியிலிருப்பதால் இவர்களுக்கு அப்பெயர் வரலாயிற்று. இவர்கள் ஒருகாலத்தவர்கள் என்று ஊகிக்கவும் இடமுண்டு. ஏனெனில், கௌஷீதகி ப்ராஹ்மணம் 11, ஐதரேயப் ப்ராஹ்மணம் 2—19, இவற்றில் "மாத்யமர்கள் ஸரஸ்வதி நதிக்கரையில் ஸத்ரயாகஞ் செய்தார்கள், அப்பொழுது கவஷன் அவர்களுக்கு மத்தியில் உட்கார்ந்தான். நீ தாஸ்யா புத்திரனுதலால் உன்னோடு கூட யாங்கள்புசிக்கமாட்டோம்.' என்றார்கள். அவனுக்குக் கோபம்வந்து, 'ப்ரதேவத்ராப்ரஹ்மணே.' (மண். 10 சூக். 30 செய். 1) என்னும் ஸூக்தத்தைப் பாடி ஸோமாபிஷவத்துக்கு வேண்டிய நீரைத் தெய்விகமாய் வரவழைத்துத் தந்தான். அதனால் அவனையும் ரிஷியாக ஒப்புக்கொண்டார்கள்." என்று சொல்லப்படுகிறது.

இரண்டாவது மண்டலம் முதல் 7வது மண்டலம் வரையிலுள்ள ஸூக்தங்களையெல்லாம் அவ்வம்மண்டலப் பெயரமைந்த ரிஷி யொருவரே பாடினரென்பதில்லை. அம்மண்டலத்துப் பெரும்பான்மையான சூக்தங்களை அவ் ரிஷி பாடினரென்று கொள்ளுதமே கருத்தியென்க

## 192. (1.) மண்டலம். 2 அநுவாகம். 1. சூக்தம். 1.

### 16 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: க்ருத்ஸமத சௌநகன்; வடமொழிச்சந்தம்: ஜகதி; தேவதை: அக்கினி.

ஆங்கிரஸ குலோத்பன்னனுன சௌநகன் அசுரராற் பிடிக்கப்பட்டுப் பின் இந்திரனால் விடுவிக்கப்பட்டான், இவ்விந்திரனே அவனைப் பிருகுகுலத்தலைச்சேர்த்து க்ருத்ஸமதனென்ற பெயரையு மளித்தவன், இதனைச் சௌநகர்

## மண்டலம் 2 சூக்தம் 1.

காலத்திலிருந்த ஷட்குருசிஷ்யரது கூற்ருகக் காட்டியுள்ளார். ஷட்குருசிஷ்யரென்பது ஆறு குருக்களுக்கு சிஷ்யர் என்னும் பொருளை யுணர்த்துங் காரணப்பெயர். இவரே காத்தியாயனரது ரிக்வேத ஸர்வாநுக்ரமணிக்கு வேதார்த்த தீபிகை யென்னும் விரிவுரை யெழுதியவர்.

(வேறு.)

1. நரர்கள்வயி னரபதியா மக்கினியே
பகற்கால நலக்க வோங்கி
வரமுறவே பிறந்தனை நீ மழை நீரிற்;
கல்லதனின் மலிர்ந்து தோற்ற
மருவினை நீ; வனமரங்கண் மீதுதித்தாய்;
ஓடதிக்கண் வந்தாய் நீயே;
உருவுயர்விற் சுசியுறுஞ் சூரியனுகத்
தோன்றுவது முனது மெய்யே.

(இ-ள்.) யஜமானர்களாகிய மனிதர்களிடத்து நரபதியாகவுள்ள வக்கினியே யாகத்துக்காகப் பகலெல்லாம் பிரகாசிக்க நீ மழை நீரிலும், கல்லிலும் காட்டு மரங்களிலும், ஔஷதிகளிலும், சுத்தமான ரூபத்தோடு கூடிய சூரியனிலும் பிறக்கிறாய்(எ-று.) சுத்தமாய்ப் பிறக்கிறு யென்பதே மூலபாடமாயினும் ஸாயணருரையைத் தழுவிச் சுத்தமான சூரியனுய்ப் பிறக்கிரு யென்ருர். வித்யுத் அநலம், தாவாநலம் இவற்றைக்குறித்தபடி.

2. அக்கினியே போதாவின் கன்மமுன
தாம்;போத னணியார் கன்ம
முக்கியமா யுன்னதுவாங்; காலமறிந்
திடவிருத்விக் முன்னும்வேலை
யெக்கியத்தி லுன்னதுவே; நேட்டாவின்
றொழிலுனதாம்; யக்ஞு மென்னுந்
தக்கபிர சாத்தாவத் வரியுமகப்
பதிபிரமன் றமத்தி னீயே.

(இ-ள்.) அக்கினியே! ஹோதாவின் வேலை யுன்னுடையதாம்; போதனது வேலையும் உன்னுடையதாம்; காலமறிந்துசெய்யும் ரித்விக்கின் வேலையும் உன்னுடையதாம்; நேட்டாவின் றொழிலு முனதாம்; யாகக்கிரஹத்தில் யக்ஞத்தை யிச்சிக்கும் பிரசாஸ்தா, அத்வர்யு, பிரமன், கிரஹபதியெர்களெல்லாரும் நீயே—(எ-று.) (Damam) தமம், யாகக்கிரஹமென்க. யாகப்பிராஹ்மணர்கள் 16 வரில் முக்கியமானவர்களைச் சொன்னுர். அவர்களது தொகையும் தொழிலும் யாகத்துக்குத் தக்கவாறு மாறுபடுமேனும், அவர்களைப்பற்றி ஆசுவலாயனர் கூறுவதாவது:

1, ஹோதாவும், மைத்ராவருணர்,அச்சவாகன், க்ராவஸ்த்துத் இவர்களும், 2 பிராஹ்மணும், பிராஹ்மணுச்சம்ஸி,ப்ரதிஹர்த்தா, ஸுப்ரஸ்மண்ய இவர்களும், 3. அத்வர்யுவும், பிரதிப்ரஸ்தாதா, நேஷ்டா, உன்னேதா இவர்க

ரும். 4 உத்காதாவும், பிரஸ்தோதா, ஆக்னீத்ரன், போதா இவர்களும் ஆகப் பதினறுவர்களாம் ஒவ்வொருவரியிலும் பின் சொல்லப்பட்டவர்கள் முதலில் சொல்லப்பட்டவனது உதவியாளர்களாம். உதவியாளர்களின்றி முதல் நான்குபேர்களை மாத்திரம் தேர்ந்தெடுக்கும்போது பிரஹ்மாவை முதலிற் றேர்ந்தெடுப்பதென்பர் ஆசுவலாயனர். இவர்களைத்தவிர கிரஹபதி பதினேழாவனும். கௌதமஸூத்ர பாஷ்யத்தில் அக்கினிஹோத்ரம் அல்லது ஔபாஸனத்துக்கு அத்வர்யு ஒருவனும், தர்சபூர்ணமாஸத்துக்கு நால்வரும், சாதுர்மாஸ்யத்துக்கு ஐவரும், பசுபந்தத்துக்கு அறுவரும், ஜ்யோதிஷ்டோமத்துக்குப் பதினறுவரும் வேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆசுவலாயனர் இரண்டுநாள் முதல் பதினொருநாள்வரையிலும் நடக்கும் அஹீன யாகங்களுக்கும், ஒருநாளில் நடக்கும் ஏகாஹங்களுக்கும் பதினறுவர் வேண்டுமென்றும், 13 நாள் முதல் 10 நாள்வரையில் நடக்கும் ஸத்ர யாகங்களுக்கு 17 பேரும் வேண்டுமென்றும் கூறுவர். இவர்களது கிரியைகள் வருமாறு: ஹோதா ரிக்வேத உக்தங்களைக்கூறுவோன்; தேவர்களையழைப்பவன். மைத்ராவருணனும், அச்சவாகனும், கிராவஸ்த்துத்தும் இவனுக்கு உதவி செய்வோர். அத்வர்யு யஜுர்வேத மந்திரங்களைக் கூறுவோன். யாக பூமியை யளந்து வேதி நிருமித்து யாகத்துக்கு வேண்டியவற்றைத் தயார்செய்பவன்; பிரதிப்ரஸ்தாதாவும், யாககர்த்தாவின் மனைவியைக் கூட்டிக்கொண்டு வரும் நேஷ்டாவும், உந்நேதாவும் அத்வர்யுவுக்குஉதவிசெய்பவர்கள். பிரஹ்மா மூன்று வேதத்தோடு அதர்வத்தையு மறிந்தவன்; பிராஹ்மணச்சம்ஸன், ப்ரதிஹர்த்தா, ஸுப்ரஹ்மண்யன் இவர்கள் அவனுக்கு உதவிசெய்பவர்களாம் உத்காதா ஸாம கீதங்களை யுரைப்பவன். நன்றாய் ஸ்தோத்திர பாடங்களைக் கூறும் ப்ரஸ்தோதாவும், அக்கினியை மூட்டுபவனாகிய ஆக்னீத்ரனும், பரிசுத்தமாக யாகதலத்தை வைப்பவனாகிய போதாவும் ஆகிய மூவர்களும் அவனுக்கு உதவி செய்பவர்களாம். இந்த நியதி எல்லா யாகங்களிலும் ஒருவிதமாக வில்லை. சில விடங்களில் போதா பிரஹ்மனுக்குஉதவி செய்பவனாகவும், ப்ரசாஸ்தா (யாகவிசாரணை கர்த்தா வென்றபடி) ஹோதாவுக்கு உதவியாளனாகவும் சொல்லப்பட்டிருக்கிறார்கள். இவற்றையெல்லாம் ப்ராஹ்மணங்களிற் கண்டுகொள்க. இவர்களைத்தவிர யாகபலியைச்செய்யும் சமிதாவும், பலிப்பசுவின் அவயவங்களைக் கெடாதபடிகிழித்துஎடுத்துவைக்கும் வைகர்த்தாவும், யாககர்மங்களை மேற்பார்க்கும் ஸதஸ்யனும், யாகபுருஷனும் கிரகபதியும், (இவர்கள் மூவரா யிருப்பதுமுண்டு) கூடப் பாடுவோர்களாகிய உபகாதாக்கள் பலரும், ஒரு ஆத்ரேயனும் சொல்லப்பட்டிருக்கிறார்கள். பார்யையைத்தவிர இதர பத்தினிகளும் சொல்லப்படுகிறார்கள். தாண்ட்ய ப்ராஹ்மணத்தில் ப்ரதிப்ரஸ்தாதாவைக் கூறாமல், இரண்டு அத்வர்யுக்களும், இரண்டு உந்நேதாக்களும், இரண்டு (Abhigarapagarau) அபிகராபகரர்களுங் குறிக்கப்பட்டிருக்கிறார்கள்.

3. நன்மையர்த மிச்சையரி காவோர்,
யக்கினியே, நவிலும் வேந்தன்,
வன்மைசெறி பலர்புகழும் வணக்குரிப
விட்டுணுவே; மறைப்பதியே,

## அஷ்டகம் 2 அத்தியாயம் 5.

(இ-ள்.) அக்கினியே! நீ (பலனைச் சம்பாதிக்கும்) துவஷ்டாவாய் நல்ல வீரியத்தோடு கூடிய தனத்தை யக்ஞத்திற் கூடியுள்ள ஜனங்களுக்குத் தருகிறாய். ஸ்துதி வசனங்களெல்லாம் உன்னுடையனவே. இதஞ் செய்யும் தேஜஸோடு கூடியவனே! (மித்திர மஹனே யென்பதன்பொருள் அது) நீ எங்களது பந்துத்துவத்தை யடைகிறாய். உனது வாஹனங்களை விரைவாய்த் தூண்டுபவனே! நல்ல குதிரைகளாகிய செல்வத்தைத்தருவாய். பலவிதமான செல்வத்தோடு கூடியவனே! மனிதர்களுக்கு நீ வலிமை ஸ்தானமாக வுறைகிறாய்—(எ-று.) எக்கியமார் என்ற அடை வடமொழி மூலத்திலில்லை. மித்திரமஹ: என்பதற்கு ஹிதகாரிதேஜ: என்பார்ஸாயணர்.

### வருக்கம் 17.

6. உருத்திரனீ யக்கினியே பேரிடஞ்சார்
விண்ணுலகி னரத்தோய் நீயே;
மருத்துவராங் குழுப்பலத்தை நண்ணுகிறாய்;
உணவினுக்கு மன்ன னீயே;
பெருத்தசுக வீடுடையோய், வாயுவென
மருணவரி பெற்றுச்செல்வாய்;
அருத்தியினு னுள்ளமொடு பூடனெனப்
பரிசனத்தை யளிக்கின்றாயே.

(இ-ள்.) அக்கினியே! நீ துக்க நிவாரகனாகிய ருத்திரனும்; விசாலமான இடத்தோடு கூடிய வானுலகத்திற் பலம் பொருந்திய அஸுரன் நீயாம். மருத்துக்கூட்டத்தாரது பலத்தை நீ யடைகிறாய். நீ உணவுக்கு ஈசுவரனும். பெரிய ஸுகத்தைத்தரும் நிவாஸஸ்தலத்தோடு கூடியவனே! வாயுவேகமான சிவப்புக் குதிரைகளை யடைந்து (மகத்தை நோக்கியேனும் வனத்தை நோக்கியேனும்) செல்லுவாய். போஷக தேவதையாகிய பூஷனைப்போல உனது மனத்திற் பொருந்திய ஆசையோடு யாகதலத்திலுள்ள பரிஜனங்களைக் காப்பாற்றுகின்றாய்—(எ-று.) காட்டை நோக்கிச் செல்லும்போது வாயுவாகிய சிவப்புக் குதிரையின் மேலேறிக்கொண்டு என்று கொள்ளுதல் தகுதி

7. உனைப்புனையு மவனுக்குப் பொன்னளிப்பா
யக்கினியே; யொளிருந்தேவ
னினமெனவே யரதனங்க ளுடையவாய்;
நரர்களிடத் தேப்பதியே
தனவினைப்பாப் பகுத்தக் காக்குவாய்;
எக்கியமார் தமந்தில் யாவன்
மனமுவந்து பரிசரணை புரிபவனைக்
காப்பதற்கு முனங்கொள்வாயே.

(இ-ள்.) அக்கினியே! உன்னையலங்கரிப்பவனுக்குப் பொன்னளிப்பவன்நீ. ஒளிவிளங்கும்தேவனாகிய ஸவிதாவாய் ரமணீயமான மணிமுத்தாதி தனங்களைத்தருபவன்நீ. நரபதியே, செல்வங்களுக்கு ஈசனுடைப் பகுப்பவனுநீ

## மண்டலம் 2. சூக்தம் 1.

ருக்கிறாய். யக்ஞக்கிரஹத்தில் உன்னைச் சேவிப்பவனுக்குப் பாலகனாகவிருக்கிறாய்—(எ-று.) தமம், யக்ஞக்கிரஹம்.

8. அக்கினியே, யகப்பதியா முனைத்தமத்தில்
யஜமான ரமர்த்து கின்றார்;
மிக்கவொளி விசியெமக் கருடனமா
முன்றனையே வேண்டா நின்றார்;
தோக்கவனி நிறைதோற்றத் துருபவனே,
பெவைக்குமிறை யாகத் தோய்ந்தாய்;
புக்கசகத் திரஞ்சத முந்தச மிவற்றின்
பலனளிக்கப் பொருந்தினாயே.

(இ-ள்.) அக்கினியே! யாகஞ் செய்பவர்களுக்குப் பதியாகிய வுன்னை யக்ஞ கிரஹத்தில் யஜமானர்கள் அமைக்கிறார்கள். மிகுந்த வொளியை வீசி யெங்களுக்கருளுகின்றனை செல்வமாகிய வுன்னையே யவர்கள் வணங்கிப் பிரார்த்திக்கிறார்கள் ஒளி நிறைந்த ஜ்வாலாரூபமாக காணப்படுபவனே! எல்லாவற்றிற்கும் நாயகனாக நீயானாய். ஆயிரம் நூறு பத்து என்னுமிக் கணக்குகளளிக்கும் பலனையெல்லாம் நீ யளிப்பாய்—(எ-று.)

9. தந்தையாமுனை, பெரியயே. யிட்டிகளி
னரர்விழைந்தார்; தநக்நிக்கால்வோய்,
சந்ததமும் பிராதாவா யுறவுன்னைக்
கன்மமதி லிரந்துசார்ந்தார்;
முந்தவுனைவணங்குவர்தம்புத்திரனா
யமைகின்றாய்; முழுச்சுகத்தி
னந்திரனாய்த் தோழனாய்த் துன்பமுறா
தெமைக்காக்கு நலமுறறாயே.

(இ-ள்.) அக்கினியே! பிதாவாகிய வுன்னை மனிதர்கள் யாகங்களில் விரும்பினார்கள். சரீர முழுவதும் பிரகாசிப்பவனே! எப்பொழுதும் தங்களது ஸஹோதரனாக நீயுறுமாறு உன்னைத் தங்களது கர்மங்களில் யாசித்து அவ்வகையே பெற்றார்கள். உன்னைச்சேவிப்பவர்களுக்கு நீ புத்திர ஸ்தானத்தி லமர்கின்றாய். பரிபூரண ஸுகத்தோடு விளங்கும் சகாயனாய் எங்களுக்கு துன்பநேராதபடி காக்கிறாய்—(எ-று.) தந்தையாய் உன்னை யடைய விரும்புபவர்களுக்குத் தந்தையாகவும், ஸகோதரனா யுன்னை யடைய விரும்புவோர்க்குச் சகோதரனாயும், புத்திரனா யுன்னை யடைய விரும்புவோர்க்குப் புத்திரனாயும் ஆக மூன்றுவகையாகவும் ரட்சிக்கிறாய் என்பது கருத்து.

10. அக்கினிநீ ரிபு,வருசே வணக்குரியன்,
கீர்த்தியுள வன்னார்த்துக்குந்
தக்கதன மதனுக்கு மீச்சுரனாய்;
துளிசிறந்த சாரா நின்றாய்;

## அஷ்டகம் 2 அத்தியாயம் 5.

மிக்கவகையே பெரிப்பாய் காட்டமதை
யிருள்சிக்க; விழைவின் யாகம்
புக்கதனை நடத்துவித்தாய் பலனதனை
யெவ்விடத்தும் புணர்த்துவாயே.

(இ-ள்.) அக்கினியே! நீ (ஒளிவீசுபவன் அல்லது மேதாவியாகிய) ரிபுவாம். மிகுதியாகப் பகழ்ப்பெற அன்னத்துக்கும் செல்வத்துக்கும் ஈசுவரனும். நன்றாக ஒளி வீசுகின்றாய். இருள் கெடும் வண்ணம் எரி துரும்புகளை நன்றாகச் சுடுகிறாய். யாகத்திற் புகுந்து அதனை நடத்துவிக்கிறாய். யக்ஞ பலனை யெவ்விடத்துங் கூட்டுவாய்—(எ-று)

11. தேவனு மக்கினிநீ தாசுடனுக்
கதிதியாள்; செப்பு மோம
மாவலொடு மமைப்பவனும்; பாரதியாய்த்
துதிகளினு லடைவாய் மொய்ம்பே;
தாவருநூ றிமமுள்ள விளையாகிக்
கொடைத்திறத்தைச் சார்வாய்; செல்வ
மோவருநற் பதியேநீ வாக்கிறைவி,
விருத்திரனை யொழித்தோன்றானே.

(இ-ள்.) தேவனே! அக்கினியே! நீ அவியளிக்கும் யஜமானனுக்கு அகண்டமான பலனை யளிக்கும் அதிதியாம். நீ ஹோம நிஷ்பாதகனுன ஹோதாவாம். நீயே பாரதியாய்த் துதிகளினுற் பலத்தை யடைந்து வளர்கிறாய். நூறு பனிக்காலங்களோடு கூடிய (பலவருஷமுள்ள அல்லது நீண்ட வாயுளுள்ள வென்றபடி.) இளையாய்த் தானத்திறமை யடைந்து நிற்பாய். வஸுபதியே! நீயே ஸரஸ்வதியும், விருத்திர ஹந்தாவுமாம்—(எ-று.)

12. நன்குவளர்க் கப்பெற்றோ, யக்கினியே
யுத்தமவாழ் நாளாகின்றாய்;
நன்மைபெறக் கீர்த்திபல கண்ணுறுவ;
மகிழ்வளியுன் னன்னிறத்தே;
தின்மைதவிர்த் தனமளிக்கும் பெரியவனீ;
பலவிடயஞ் செறிந்தசெல்வம்
வன்மைபெறப் பலதிசையும் பரந்துளது
நீயெனவே வணங்கு வாரே.

(இ-ள்.) நன்றாக வளர்க்கப்பெற்ற வக்கினியே! நீ யுத்தமவாழ்நாளாக விருக்கின்றாய். பார்ப்பவர்க்கு இன்பத்தைத்தரும் உன்து (சிவப்பு, வெளுப்பு முதலிய) வர்ணத்தில்பலவிதக் கீர்த்தியும்நன்றாகக்காணப்படுகின்

## மண்டலம் 2 சூக்தம் 1.

ரை. பசுக்களினின்று எங்களை விலக்கி உணவுப் பொருள்களை யளிக்கும் யஜமான் பொருட்டு பலவித விஷயங்களு நிறைந்ததும் எல்லாப்பக்கங்களிலும் வியாபகமானதுமான செல்வமும் நீயே—(எ-று.)

13. அக்கினியே யுன்னைவாயா யடைந்தனர்க
ளாதித்யர்; அருஞானத்தோராய்,
சிக்குவையா யுனைச்செய்தார் தூயவொளி
யுடையவர்; சிறந்தவோம
முக்கியமார் செல்வமுள்ளோ ரத்துவரத்
தின்னையன்றி முன்னே நிற்பர்;
எக்கியவா வுதியவிவை யுன்வழியாய்த்
தேவர் புசிக்கின்று ரின்பொட.

(இ-ள்.) அக்கினியே! அதிதிமக்களாகிய இந்திராதி தேவர்கள் உன்னைத் தங்களது வாயாகப்பெற்றார்கள். கவியே! பரிசுத்த வொளியோடு கூடியவர்கள் உன்னைத் தங்கள் நாக்காக வாங்கிக்கொண்டனர். ஹோமத்திரவியங்களோடுகூடிய வத்தேவர்கள் அத்துவரத்தில்உன்னை சேவிப்பார்கள். யக்ஞத்தில் ஆஹுதிசெய்யும் உணவுப்பொருள்களையுன் துவாரா தேவர்கள் புசிக்கிறார்கள்—(எ-று) கவி அதீயஞானத்தோடு கூடியவன். அத்துவரம், யக்ஞம்.

14. அமரராந் துரோகமிலா ரக்கினியே,
தேவர்களா யார்ந்தோர் யாருந்
தமதவிசை யுன்முகத்தா லுண்ணுகிறார்;
உன்றனால சாரம் வாய்ந்த
அமுதரிய பானமதை மர்த்தியருஞ்
சுவைப்படுத்தார்; தரைசார்பூடு
வளருகின்ற கருப்பமதா யொளி தூநீ
தூய்மையொடு பிறக்கின் றனையே.

(இ-ள்.) அக்கினியே! மரணமற்றவர்களும், துரோகமில்லாதவர்களுமான எல்லாத்தேவர்களும், தங்கள் அவிசை யுனது வாய்மூலமாக வுண்ணுகிறார்கள். மர்த்தியர்களாகிய யஜமானர்களும் தங்கள்ஸாரமிகுந்த பானத்தை உனது உதவிகொண்டு சுவையுள்ளதாக்கிறார்கள். பூமியிலுள்ள செடி கொடிகளின் மத்தியில் விளங்குகின்ற நீ பரிசுத்த வொளியோடு பிறக்கின்றாய்—(எ-று.)

15. இவர்களொடு மக்கினியே யுன்வலியாற்
கூடினை; யிவரிற் றேவே,
சுவைபெறவுன் மகத்துவத்தா லுற்சிறப்போய்,
பிரிந்துறுவாய்; தோயுமிந்த

## அஷ்டகம் 2. அத்தியாம் 5.

நவைபறுபல் லன்னமெலா நின்றிறவே
தாசர்நுறுபா, ஞுடிற் பூவான்
இவையிரண்டு தம்பிறைந்தன வாருங்குணத்தாற்
பரவுறுபா வெழிலி னின்றே.

(இ-ள்.) அக்கினியே! இப்பிரசவித்தபெற்ற தேவர்களோடும் உன தபலத்தினுல் கூடிநின்றாய். தேயனே! மந்திரங்களோடு ஆவிசு கடைவதாற் றோன்றுகிற காரணத்தால்) நல்ல பிறப்போடு கூடியவனே! இத்தேவர்களின் வேறாய் அவர்களுக்குப்பிரதிநிதியாக உன் மகத்துவத்திலுல் பிரிந்து தோற்றுவாய். அவ்வுன் மகத்துவமானது யக்ஞ வலியன்னம் எல்லாவற்றையும் இங்குதங்கும் வண்ணம் செய்யும். பூமிவானங்களாகிய விரண்டிலும் தனது நன்மையினுற் பாவிக்கிடக்கும்—(எ-று.)

16. உன்புகழைப் பாடுமெமக் கக்கினியே
பசுவோடு முன்னு மாவைக்
கொன்பெறநற் பலனுக வனுப்புவிக்குஞ்
சூரிகளைக் கூர்ந்தவெம்மை
மன்பெறவாழ் வெய்துறவே யிருவரையு
நனிநடத்தல்; மன்னு வீர
ரின்புறவெந் தமைச் சூழ மகக்குழுவிற்
பெரும்புகழை யியம்பல் யாமே.

(இ-ள்.) அக்கினியே! உனது கீர்த்தியைப்பாடும் எங்களுக்குப் பசு குதிரை முதலிய செல்வங்களைப் பலனுகத்தரும்ஸூரிகளையும், எங்களையும் ஆகிய இருவரையும் சிறந்த வாழ்வை யடையுமாறு நடத்துவாயாக. வீரியத்திற் றோன்றிய புத்திரர்களோடு யாங்கள் யாகக்கூட்டத்தில் உனது சிறந்த கீர்த்தியைச் சொல்லுவோமாக—(எ-று.) ஸூரி, யாகநடத்துவிக்கும் கர்த்தா.

### வருக்கம் 19.

## 193. (2) மண்டலம். 2. அநுவாகம். 1. சூக்தம். 2.

### 13 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: இம்மண்டல திருஷ்டாவாகிய க்ருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: ஜகதி; தேவதை: அக்கினி.

1. எக்கியத்தா லக்கினியாஞ் சாதவே
தசனவனை யேத்தி யோம்பல்;
எக்கியத்தி னவிகொண்டு மெய்வளர்க்குந்
துதிகொண்டும் வணங்க, வெற்றித்
தங்கவண மொளிர்பவனை நல்லன்னத்தை
யுடையவனைச் சார்ந்து போற்று
மித்ரவனை கின்னுஸக வொதாவை,
வலியதனை விளைப்பொன்றனை.

## மண்டலம் 2 சூக்தம் 2.

(இ-ள்.) ரித்விஜர்களே! ஜாதவேதஸனாகிய அக்கினியை யக்ஞத்தி னுற்றுதித்து வளர்ப்பீர்களாக. நன்குமூட்டப்பெற்றெரிபவனும், நல் லவுணவுப்பொருளோடு கூடியவனும், வெகு ஸ்தோத்திரங்களோடு கூடிய வனும், விண்ணுலகத்தில் வசிப்பவனும், ஹோமஸம்பாதகனும், பலத்தைச் சிருஷ்டிப்பவனுமான அவ்வக்கினியை, யக்ஞத்திற்றரும் சருபுரோடாசாதி யவிப்பொருள்களோடும் அவனது (அக்கினியினது) சீர்த்தியை விஸ்தரிக்கும் ஸ்துதிப்பாட்டுகளோடும் வணக்குவீர்களாக—(எ-று.) ஹோதா, ஹோதா, ஹோம நிஷ்பாதகன். ஜாதவேதஸன். மண்.1. சூக். 44. செய் 1. பார்க்க.

2. இரவுபக, லக்கினியே, யுன்றனையே
விழைந்தாரோ லேயுங் கோட்டத்
தறவொடுந்தங் கன்றுகளைச் சார்தேனு
தமைப்போன்றே; யோங்கும் பற்பல்
வசமளிப்போய், தேவர்களின் றூதுவனாய்ப்
பரவிடுவாய்; மாந்தர் தங்க
ளிரவொடுமற் றெக்காலு நியதியுள
நீபொளிரி னெரிகால் வின்றாய்.

(இ-ள்.) அக்கினியே! கொட்டிலிற் கறவைகள் தங்கள் கன்றுகளுக் குப் பால்தரவிரும்பிச் சார்வதுபோலக் காலை மாலை வேளைகளில உனக்கு ஆவுதியளிக்க (ரித்விஜர்கள்) உன்னை விரும்பியடைகிறார்கள். பலவிதமாய ஐசுவரியங்களைத்தருபவனே! தேவர்களினுடைய தூதனாய்விண்ணோரும் பரவுவாய். மனிதர்களது இரவுக்காலங்களிலும் மற்றெல்லாக்காலங்களிலுங் கூட ஒழுங் கு நிறைந்து நீ பொலிவிட்டெரிகின்றாய்—(எ-று.)

3. அக்கினியன் பூமியோடு வானமதிற்
பரந்தவனைக் கடிதமைத்தார்;
விக்கினிய தேவர்களும் ரஜோமுகத்
தனிற்செல்வ மிளிருந் தேரின்,
திட்பமுள வெள்ளொளியார் தூயெரியைக்
குவலயத்திற் சிறந்தோ ரென்றும்
நட்பவறி வொடுபோற்றற் குரியவனை
மித்திரனி னுனித்து மன்னே.

(இ-ள்) நல்ல தோற்றத்தோடுகூடியவனும், பூமிவானங்களிற் பரந் தவனும், நிறைந்த வெள்ளொளியோடுகூடிய பரிசுத்தனும், பூமியி லுள்ள பெரியவர்கள் துதிக்கத்தகுந்தவனுமாகிய அக்கினியை, செல்வ நிறைந்த தேரைப்போலவும், மித்திரனென்னும் தேவதையைப் போலவும் ரஜோலோகத்தின் அடியில் அமைத்தார்கள்—(எ-று.) ரஜம், அந்தரிட்சம்.

4. செய்யொழுக்கு மவன்றன்னை ரஜமதனிற்
றனித்ததமர் தன்னி னேடிப்
பெய்தனராற் சந்திரப்பே ரொளியினனை
யந்தரத்துப் பெரிதுமேற்பாய்க்

## அஷ்டகம் 2 அத்தியாயம் 5.

நெய்தருவனைத் தனதுகணா லுணர்பவனைப்
பூவான மிரண்டு நோக்கி
யுய்தியுறு வவைபாற்சென் றுதகமெனக்
காப்பவனை யோங்குமாறே.

(இ-ள்.) நெய்யை (அல்லது ஸாரபுஷ்டியுள்ள மழைநீரை) ஒழுகவிடு பவனும், தங்கத்தைப்போல வொளிவீசுபவனும், (வளர்ந்த பின்னர்) அந்தரிட்ச வுலகத்துப் பாய்ந்துசெல்பவனும், தன் சுவாலைகளாகிய கண்ணாற் காண்பவனும், பூமி வானம் என்னும் இரண்டையும் பார்த்துக்கொண்டு அவை விருத்தியடையுமாறு பரவ்வோனும், மழைநீரென உலகைக் காப்பாற்றுபவனுமான அவ்வக்கினியை ரஜோலோகத்தில் அவனது தனித்த வீட்டில் அமைத்தார்கள் —(எ-று.) தமம், வீடு, கிரகம். தனித் தமம் ஜனங்களில்லாத வீடு என்பார் ஸாயணர்.

5. அவனேமை நிருமிப்போ னெவ்வகைய
வத்வரத்து மமைந்து நிற்க;
அவன்றன்னை மானவர்க ளவியோடுந்
துதியோடு மடைந்து சூழ்வார்;
சுவணமொளிர் தாடையுமுளான் வளர்ந்தோங்கு
மோடதிக்கட் டோய்ந் தெரிப்பான்;
திவமொளிரு நாளென்ன வுரோதசியைச்
சுவாலையினாற் றெரிக்கின்றானே.

(இ-ள்.) ஹோதாவாகிய அவ்வக்கினி எல்லா அத்துவர (யாக)ங்களிலு மமைந்து சூழ்வானாக. அவனை மனிதர்கள் அவிப்பொருளோடும் ஸ்துதியோடும் சூழ்கிறார்கள். பொன்போல ஒளிவிடும் தாடையோடு கூடியவன், விருத்தியாக நிற்கும் ஒஷதிகளினிடத்துப் பொருந்தி யவற்றைத் தகிப்பான். நட்சத்திரங்கள் நிறைந்த விண்ணைப்போல அவ்வக்கினி தனது சுவாலையினால் பூமிவானங்களை யொளிப்படுத்துகிறான்—(எ-று.) நாளொளிருந்திவமென்ன என மாற்றிப் பொருள் கொள்ளுக.

### வருக்கம் 20.

6. அக்கினிநீ யெஞ் சோமர் தனைக்கருதித்
தனமகனை யளித்து நன்கே
மிக்கவளத் தோனாக வெம்மாலே
முட்டப்பெற் றொளியின் விங்கல்;
எக்கியத்தி னவிப்பொருளை நரர்க்களிப்பான்
றேவர்களை யென்றுஞ் சாற்றிற்
றக்கவனம் விருந்துபரப் பூவானை
யெங்களுக்காத் தபக்கிடாயே.

## மண்டலம் 2 சூக்தம் 2.

(இ-ள்.) அக்கினியே! எங்களுடைய க்ஷேமத்தையெண்ணி எங்களுக்குச் செல்வத்தையளித்து மிக்க வளப்பத்தோடு கூடியவனாய் எம்மாலே மூட்டப்பெற்று ஒளிவீசி நிற்பாயாக. மனிதர்களுக்கு யக்ஞ வலிகளை யுண்டு பண்ணுமாறும், தேவர்கள் ஸவனவிழாக் காலங்களில் விருந்தயரும் வண்ணமும், பூமி வானங்களைச் செழித்தோங்குமாறு செய்வாயாக—(எ-று.)

7. அக்கினியே யெங்களுக்குப் பெருந்தனங்க
ளளித்திடுக; சகநாற்றோரை
முக்கியமா யளிக்கல்; புகழ்செறி யனத்தை
வீட்டினைப்போற் றிறந்து மூட்டல்;
இக்குவலயம் வானைப் பிரமத்தாற்
சோபையுற விபற்று; பென்றா
லொக்கவொளிர் விண்ணெனவே வெள்ளொளியை
வைகல்களு மொளிர்விக் கின்ற.

(இ-ள்.) அக்கினியே யெங்களுக்குப் பசுவாதி பெரிய செல்வவிசேஷங்களைத் தருவாயாக. ஆயிரக்கணக்கான புத்திர பிருத்யாதிகளைத் தருக. கீர்த்திமிகுந்த உணவுப்பொருள்களை வீட்டைத்திறந்தளிப்பதுபோலக் கொடுப்பாயாக. பூமி வானங்களை மந்திரங்களோடு கூடிய கர்மங்களாற் சோபையுறுமாறு செய்வாயாக ஆதித்யனொளி வீசும் ஆகாயத்தைப்போல விடியற்காலங்கள் வெள்ளொளியை வீசுகின்றன —(எ-று.) விடியற் காலத்தில் ஆஹிதாக்கினிகள் ஒளிர்கின்றனவென்றும் கொள்ளலாமென்பர் ஸாயணர்.

8. மகிழ்வுதரும் வைகறொறு மவன் மூட்டப்
பெற்றவனுப் மருவுஞ் செய்ய
தகைமையுள பானுவின் விண்ணென வொளிர்வான்;
நன்மகத்தித் சாருஞ் சோற்று
லிகவயின் மானுடர்க்கா வேத்தமெளி
யாயுளுமோர்க் கேயும் வேந்தா
யகமகிழும் பிரசைகளா லழகாகப்
போற்றுறுநல் லதிதி யாவான்.

(இ-ள்.) மகிழ்ச்சியைத் தருகின்ற விடியற்காலங்கடோறும் அவன் (அக்கினி) மூட்டப்பெற்றுச் சிவந்த வொளியோடு விண்ணைப்போல் விளங்குகிறான். நல்ல யாகத்தில் இந்து மநுஷஹோதாக்கள் ஸ்தோத்திரங்களாலேத்த, அக்கினி ஆயுக்கள் அல்லது மனிதர்களுக்கு மன்னனாகவும், உள்ள மகிழ்விற் பிரஜைகள் அழகாக வுபசரிக்கும் விருந்தினனாகவு மாகிறான்—(எ-று.) ஒளிர்வான் ஆவான் என்பன நிகழ்காலப் பொருளன. வழக்கத்தை குறிப்பதாற் காலவழுவமைதியாம். இம்முறையையே யெல்லாவிடத்துங் கொள்க.

9. பழமைகொளு மக்கினியே, மக்களெமாற்
பாடுற்ற பா,வுயர்ந்த
கிழமைசெறி பெருவானின் மரணமறு

## அஷ்டகம் 2 அத்தியாம் 5.

தேவரிடைக் கிளர்ந்தே யோங்கும்;
அழகமரு மகமதனிற் றுதியாளற்
கவன்விழையும் வண்ண மார்ந்து
பழகுசதப் பல்லுருவ வேட்ணையைக்
கறவையினிற் பண்பி னீயும்.

(இ-ள்.) பூர்வகாலத்திலிருந்தறும் அக்கினியே! மனிதர்களாகிய வெங்களாற் பாடப்பெற்ற பாக்கள், உன்னதமான பெரிய வானத்தில் மரணமற்ற தேவர்களுக்கு மத்தியில் பெருமைபெற விருத்தியடைந்து நிற்கும். அழகிய யாகத்தினிடத்துத் துதிப்போனுக்கு அவன் விரும்புகிற வண்ணம் நூற்றுக்கணக்கான பசு குதிரை முதலிய பலவேறுபட்ட வுருவோடு கூடிய ஆசைகளைப் பால் அளிக்கும் பசுவைப்போல அத்துதியானது அளிக்கும்—(எ-று.)

10\. அக்கினியே யாங்கள் விரை கதிமாவிற்
பிரமமதி லார்ந்து வீர
மிக்கு மனிதர்க்கணனி யேற்றமொடு
தோற்றுக; வெம் மிகுசீர்ச் செல்வ
மொக்கவுறுங் குடியாள ரைவரினு
மேலாக வுயர்வி னோங்கித்
தக்கவொளி வில்வீசும் விண்மணியின்
மிகுகாந்தி சார்ந்துநிற்க-

(இ-ள்.) அக்கினியே! வேகமாகச் செல்லும் குதிரைகளோடும், ஸ்தோத்திரங்களோடும் நிறைந்து, வீரமிகுந்து, மனிதர்களுக்குள் யாங்கள் மேன்மையடைந்து தோற்றுவோமாக. எங்களது கீர்த்தி வாய்ந்த செல்வங்கள், சாதுர் வர்ண்ய நிஷாத பஞ்சகக் குடிகளெல்லாவற்றிலும் மேன்மை பெற்று வளர்ந்து, காந்தி வீசும் விண்மணியாகிய சூரியனைப்போல ஒளிபெற்று நிற்கட்டும்—(எ-று.)

11\. வலிமையினிற் பேர்பெற்றோய், நற்பிறப்பிற்
சூரிகளு மவிந்து போற்றுந்
தலைமையுளோ, யெங்களது போற்றுதி
யுணர்வாயால்; சார்ந்த வங்கி
நிலைமையிறுன் சுயத்தமத்தி லெக்காலு
மோங்குமகார் நேடி யிய,
வலிமையுளோர் வணக்குரிய மகத்தொளிரு
முன்றனையே மதித்துச் சார்வார்,

(இ-ள்.) சத்துருக்களை யடக்கும் பலத்திற் பெயர் பெற்றவனே! நல்ல பிறப்போடு கூடிய செல்வவான்கள் (அல்லது யாககர்த்தாக்கள்) பொருந்தித் துதிக்கும் பெருமைபெற்றவனே! எங்களுடைய ஸ்தோத்திர முத

லியவற்றை யுணர்வாயாக. அக்கினியே! நீ தங்கியுள்ள உனது சொந்தக்கிரகத்தில் நித்தியமாகப் புத்திராபிவிருத்தி யுண்டாக்கும் வண்ணம் பிரகாசிக்கின்ற உன்னை, வணங்குதற்குரிய யாகதலத்திற் சிறந்து விளங்கும் உன்னையே பலம்பொருந்திய வலிதரும் யஜமானர்கள் அடைவார்கள்—(எ-று.) மூலத்தில் இவ்விரண்டு வாக்கியங்களையும் ஒன்ருகச் சேர்த்துள்ளார். எந்த அக்கினியை வாஜத்தோடு கூடியவர்கள் வணங்குவார்களோ அந்த அக்கினியாகிய நீ யெங்கள் ஸ்தோத்திராதி கர்மங்களை யுணர்கவெனக்கூட்டியுள்ளார். வாஜி: பலவந்தர், அவியுள்ளவர் இரண்டு பொருளையும் குறிக்கும். சுயாமத்தில், சொந்தமான வீட்டில் என்றபடி. தமம், வீடு. மண். 2 சூக். 1 செய். 2 பார்க்க.

12. சாதவேதசனுகு மக்கினியே, போற்றுரைப்போர்
சூரியெனச் சாரண்டு
நீதியுளோர் யாமுமுன தரும்புகலிற்
றங்குறுக; நிறைவினைங்கட்
கோதுபல வொளிவீசும் பொன்னெடுமேசல்
வம்மிவைக ளளவி னேங்கக்
கோதரு புத்திரரோடு மவர்வழிக்கான்
முளைகளொடுங் கூட்டாய் நன்கே.

(இ-ள்.) சாதவேதனுகிய அக்கினியே! ஸ்தோதாக்கள் ஸூரிகளென விருவகைப்பட்ட யாங்கள் உன்னுடைய சரணிடத்துத் தங்குவோமாக. எங்களுக்குப் பலவித வொளிவீசும்பொன்னேடு கூடியதும் புத்திரர்களும் அவர்களது சந்ததியார்களும் நிறைந்ததுமான செல்வத்தைத்தருக—(எ-று.) ஜாதவேதஸன் மண். 1 சூக். 44 செய் 1 பார்க்க.

13. உன்புகழைப் பாடுமெமக், சக்கினியே
பசுவோடு முன்னு மாவைக்
கோன்பெற நற்பானுக வனுப்புவிக்குஞ்
சூரிகளைக் கூர்ந்த வெம்மை
மன்பெறவாழ் வெய்துறவே யிருவரையு
நனிகடத்துக; மன்னுர்வீர
ரின்புறவெந் தமைச்சூழ மகக்குழுவிற்
பெரும்புகழை யியம்பு யாமே.

(இ-ள்.) அக்கினியே! உனது கீர்த்தியைப்பாடும் எங்களுக்குப் பசு குதிரை முதலிய செல்வங்களைப் பலனுகத்தரும் ஸூரிகளையும், எங்களையும் ஆகிய இருவரையுஞ் சிறந்த வாழ்வை யடையுமாறு நடத்துவாயாக. வீரியத்திற் றேன்றிய புத்திரர்களோடு யாங்கள் யாகக் கூட்டத்தில் உனது சிறந்த கீர்த்தியைச் சொல்லுவோமாக—(எ-று.)

வருக்கம். 21.

## 194. (3) மண்டலம் 2. அநுவாகம் 1. சூக்தம் 3.

11 இருக்குக்கள் கொண்டது.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 5.

ரிஷி: ஒஷி கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப், 7ஜகதி; தேவதை; 1ஸமித்தன், 2 நராசம்ஸன், 3 இளன், 4 பர்ஹி, 5 தேவத்துவாரங்கள், 6 உஷாஸா நக்தர்கள், 7தேவ ஹோதாக்களிருவர், 8 ஸரஸ்வதி, இளை, பாரதிமூவர், 9 துவஷ்டா, 10 வனஸ்பதி, 11 ஸ்வாஹாக்ருதி; இவை அக்கினியின் பலரூபங்களாம்.

இது க்ருத்ஸமதகிருத ஆப்ரீ ஸூக்தம். இதற்கு முன்னர் முதன் மண்டலத்தில் மூன்று ஆப்ரீ ஸூக்தங்கள் கூறப்பெற்றன. மண். 1 சூக் 142 பார்க்க.

(வேறு.)

1\. பிதுவியி னமைக்கப்பெற்ற சமித்தனை யங்கி யெல்லாத்
திதிபெறு புவனமுன்புஞ் சிறந்து நிற்கின்றான்; தூத,
னறிவுணர்வுள்ளோன், றேவன், பாவகன், பழமையார்ந்தோன்,
வதியுறத் தக்கோன், யாகத்தேவரை வணங்க, லங்கி.

(இ-ள்.) பிருதுவியில் அல்லது வேதி லக்ஷண பூமியில் அமைக்கப் பெற்ற ஸமித்தனாகிய அக்கினி எல்லாப் புவனங்களுக்கு முன்னர் சிறப்புப் பெற நிற்கிறான். ஹோதாவும், நல்ல மேதாவியும், தேவனும், பரிசுத்தஞ் செய்பவனும், புராணனும், யக்ஞத்திற் றங்குதற் குரியவனும் ஆன அக்கினி யாகத்தினிடத்துத் தேவர்களைப் பூஜித்து வணங்கட்டும்—(எ-று.) பிதுவி, பிருதுவியின் மரூஉ. ஹோதா, தேவர்களை யழைப்பவன், தூதன். பாவகன், பரிசுத்தஞ் செய்பவன். ஸமித்தன், நன்றாக மூட்டப் பெற்றவ னென்பது பொருள். இச்சூக்தம் பிரயாஜ தேவதைகளைத் துதித்தது.

2\. இடங்களை நல்லொளியா னராசம்ஸ னேற்றிப், பின்னர்
தடங்கொள் மூவொளி யுலகிற் றன் மகிமையினைத் தோற்றி
யிடங்கொளு மவியை நெய்யா னனைத்திடு மெண்ணத்தோடு
திடம்பெற மகத்தலையிற் றேவரை யுவகை யார்த்தல்.

(இ-ள்.) நரர்களாற் புகழப் படுபவனான நராசம்ஸன் யக்ஞக்கிரஹம் அவியுபகரணம் முதலிய விடங்களைத் தனது நல்ல ஒளியினாற் பிரகாசிக்கச் செய்து, பின்னர் ஒளி பொருந்திய ஸ்வர்க்கம், பூமி அந்தர மென்னும் மூவுலகங்களிலும் தனது மகிமையினைத் தெரியப் படுத்தி, நிறைந்துள்ள அவியுணவுகளை நெய்யால் நனைக்க வெண்ணி, யக்ஞத்தினிடத்துத் தேவரை ஸந்தோஷப் படுத்தட்டும்—(எ-று.)

3\. எந்துதி பெற்றே யங்கி யெமக்கருள் மனத்தின் யாக
நந்துறத் தக்கோனா யிந் நரரிடைத் தேவர்தம்மை
முந்துற வணங்குகின்று; மருத்துவர் குழுவைச் சேர்க்கல்;
இந்திரன் றனை நரர்கா டருப்பை யச்சுதனை யேத்தல்.

(இ-ள்.) அக்கினியே! எங்களுடைய ஸ்தோத்திரங்களைப் பெற்று, எங்களுக்கருள் செய்யும் மனத்தோடு, யாகத்தில் விளங்கத்தக்கவனாய் இம்ம

## மண்டலம் 2. சூக்தம் 3.

னிதர்களுக்கிடையில் அவர்களுக்கு முன்னால் தேவர்களை யின்று பூஜிப்பாயாக. மருத்வரத கூட்டத்தை யிருகூட்டிக் கொண்டுவருவாயாக. நரர்களோடு (ஹோதாக்களே அல்லது ரித்விஜர்களே!) தருப்பையிலமர்ந்துள்ள அழிவில்லாதவனான இந்திரனைப் பூஜிப்பீர்களாக—(எ-று.) அச்சுதன், அழிவில்லாதவன்.

4\. தருப்பையாந் தேவ, வோங்கி வீரரிற் சிறந்தில் வேதி
விரித்துறப் பெற்றுச் செல்வத்துக்கெனப் பரந்துமேவி
யருத்தியி னிழுதொழுக்கு மிதனிடத் தமர்க, யாகப்
பொருத்தமார் வசுக்கள் விச்வதேவராதித்தியர்காள்.

(இ-ள்.) தர்ப்பையாகிய தேவனே! வளர்ச்சி பெற்று, வீரம்பொருந்திய புத்திரர்களிற் சிறந்து, இவ்வேதியில் விரிக்கப் பெற்றுச் செல்வத்துக்காகப் பரப்பப்பெற்று நெய்துளிக்கும் இதன்மேல் (இங்குவிரித்துள தருப்பையின் மேலென்றபடி) அமர்வாயாக. யக்ஞார்ஹர்களான வஸுக்களும், விச்வ தேவர்களும், ஆதித்யர்களும் இதன்மிது அமரட்டும்—(எ-று.)

5\. வாயிலாந் தேவிமா ரெம் வணக்கின லழைக்கபபெற்றோ,
ரேயநல் லாடுபோக்கோ ரியைக நன்னர் விரிந்தே;
பாயவவ் வழிவிலாதார், பரவு கீர்த்தியினை நன்மை
மேயவீரரை நிறத்தைத் தூய்ப்படுப்பவர் சிறக்க.

(இ-ள்.) எமது நமஸ்கார மந்திரங்களால் அழைக்கப் பெற்றவர்களான தேவிகளாகிய துவாரங்கள், தங்களுக்கிடையே யாவரையும் இலகுவாகப் போகவிடுபவர்கள் நன்றாக விரிந்து அமையட்டும். பரப்படைந்துள்ள அந்த அழிவில்லாத துவாரங்கள், கீர்த்தியையும், நல்லவீரர்களையும், நிறத்தையுமுடைய யஜமானர்களைப் பரிசுத்தப்படுத்துபவர்கள், பிரக்கியாதி யடைந்து நிற்கட்டும்—(எ-று.) இத்துவாரங்கள் அகிலாண்டத்துக்கும் சூரிய வொளியைக்கொண்டு வரும் கிழக்கு வாயில்களை யுருவகப் படுத்தியதாம் என்பர் ரிக்வேத அண்ட சாஸ்திர நூலாசிரியராகிய வாலிஸ் என்பவர்.

### வருக்கம் 22.

6\. நற்பணிக் குறுவோர், நாளும் பலனெமக் களிப்போர், வைக
லற்படு மிரவிருவர், திறமையோ ரென வுறுவார்,
முற்பட விரித்த தந்து மகவுருப் பெறுவா னெய்வார்,
நற்பய சுன்னோர் நன்கு கறப்பவர் நாடிக் காக்க.

(இ-ள்.) நல்லகருமத்தை யெண்ணி வருபவர்களும், எங்களுக்குப் பலனையளிப்பவரும், திறமை வாய்ந்த ஸ்திரிகளைப்போல ஒருவர்மாறி யொருவர், ஒத்துவரு பவர்களும், எதிரில் விரிந்து கிடக்கும் யக்ஞாவயவங்களாகிய நூலையாகமென்னும் உருவாய்ந்த வஸ்திரமாக நன்றாய் நெய்பவர்களும், நல்லபால் அல்லது மழைநீரோடு கூடியவர்களும், நன்றாய்ப் பலனைக் கறந்து தருபவர்களுமான (உஷஸாநக்தா) பகலிரவென்னும் இருவரும் எங்கள் யக்

ஞத்தை (நாடிக் காக்கட்டும்)—(எ-று.) நாடிக்காக்க வென்பது ஸாயணரு ரையை நோக்கிச் சேர்த்தது. பயஸ், பால், மழைத் தண்ணீர் இரண்டுக்கும் பொருந்தும். பகலிரவுகளால் மழையுண்டாகிற தென்பது சுருதி.

(வேறு.)

7. தேவர்களி ஹோதாக்க ளிருவர், முதன்
மையர்ஞானஞ் சிறந்து நின்றோர்,
மேவுமுடல் சிறந்தோரை நன்மறையா
னேராக வணங்கி வேண்டல்,
பாவுபுவிதனி னுபியிடை மூன்று
சானுவினிற் பரிந்து கோல
மாவலுடன் பொழுதுதொறு மணிப்படுத்துத்
தேவர்களை யன்பினோடே.

(இ-ள்.) முதன்மை வாய்ந்தவரும், ஞானத்திற் சிறந்தவருமான தேவ ஹோதாக்க ளிருவரும், தமது சரீரத்தி லழகுசிறந்து நிற்பவர்களான தேவர்களைப், பரந்த பூமியின் நாபி அல்லது மத்திய ஸ்தானமாகிய வேதியி னிடத்து ஆஹவநீயாதி மூன்று உன்னதப் பிரதேசங்களிலும் அழகாகவ மைத்து நல்ல மந்திரங்களாற் கலக்கமின்றி நேராக வணங்கித் துதிக்கட்டும் —(எ-று.) வேதியைப் பிருதிவியின் நாபி யென்பது வேதமரபு. ஸானு உன் னதப்பிரதேசம்; 3 சானுவென்று ஆக்வநீய, கார்ஹபத்ய, தக்ஷிணாக்கினி வே திகளைக் குறித்தார். ஓதா, ஹோதா, ஹோம நிஷ்பாதகன், தேவாநாம் ஆஹ்வா தா.

(வேறு)

8. எம்மறை பலிக்குமாறு செயுஞ் சரச்சுவதி, தெய்வ
விம்மிய வினை, யாவற்றும் விரிந்த பாரதி, யிம்மூவர்
கொம்மைசார் தேவிமார்க ளவிபெறத் தருப்பை சூர்ந்தே
செம்மையிற் குலைவிலாத சரணமாச் செறிந்து காக்க.

(இ-ள்.) எங்களது மந்திர கர்மங்களைப் பலிதமெய்துவிக்கும் ஸரஸ் வதியும், தேவியாகிய இளையும், எல்லாவற்றிலும் பரந்து மேற்போன (வாக் காகிய) பாரதியும், இம் முத்தேவிகளும், யாங்கள் தருமவியைப் பெறுமாறு இங்குள்ள தருப்பையில் குலைவில்லாத சரணமாக வமர்ந்து இவ் யாகத்தைக் காக்க—(எ-று.) தருப்பையிலமர்ந்து என்பது இலக்கணையால் யாகத்தில மர்ந்து என்னும் பொருளது. கொம்மை, அழகு ஸ்வத (dh) யாவென்பதற்கு அவியைப் பெற என்னுது தனது சொந்தத் திறமையா லென்பது மேனுட் டாசிரியது உரை. ஸரஸ்வதி ப்ரஹ்ம பத்தினி யென்றும், இடா அல்லது இளை, விஷ்ணு பத்தினியாகிய பிருதிவி யென்றும், பாரதி ஆதித்யனது பத் தினி யென்றும் வேதார்த்ததீபிகை கூறும்.

9. பொன்வண்ணத் தன்னலன்னம் பூரிப்போ னன்மகத்தோன்
மின்வண்ணத் தேவ ரிச்சைக் குரியவன்விரைவிற்கேட்போன்

## மண்டலம் 2 சூக்தம் 4.

மன்வன்ன காமியா மெம் பிரஜைகடமைத் தாவட்டா
கொன் வன்னத் தளிக்கல்: தேவர்க் கூடுறுநெறியிற்சேர்க்கல்.

(இ-ன்.) பொன்னிறம் பொருந்திய வீரனும், அன்னப் பொருள் சிலை நிறைய வளிப்பவனும், கன்மகத்தை யுடையவனும், ஒளிபொருந்திய தேவரால் விரும்பப் படுபவனும் சீக்கிரமாக விஷயங்களைக்கேட்பவனும்,ஆன துவட்டா நிலைக்குந் தன்மைவாய்ந்தஎங்களதுசுற்றமாகிய புத்திர பௌத்திரர்களை நன்றாக வளிக்கட்டும்; அவர்கள் தேவர்களை யடையும் நெறியில் அவர்களைச் சேர்க்கட்டும்—(எ-று.)

10. வனப்பதி யெங்கன்மத்தை யறிந் தருகினின் மருவல்;
மனத்துட னங்கியெங்க ளவியினைத் தன்கன்மத்தா
னினிப்புறச் சமைக்கல்; தேவர் தம்மிடை மும்மைக்காப்பின்
மனக்கினி யவியை யோர்ந்து தேவர்தஞ் சமிதா சேர்க்கல்.

(இ-ன்.) வனப்பதி (யூபாபிமானி தேவதையாகிய வக்கினியைக் குறித்தது.) எங்களது கர்மத்தை யறிந்து அதற்கருகிற் றங்குக. அக்கினி தனது கருமத்தால் எங்களது அவியுணவை மனத்தி லெண்ணிப் பக்குவப் படுத்தட்டும். தேவ சமிதாவாகிய வவ்வக்கினி, உபஸ்தரணம், அவதானம், அபிகாரம் என்னும் மூன்று வகையிலும் காப்பிடப்பட்ட மனதுக்கினிய அவியுணவைத் தேவர்களிடத்துச் சேர்க்கட்டும்—(எ-று) சமிதா,யாகப்பசுவை விதையிலடித்துக் கொல்லுபவன். மண். 2 சூக். 1 செய். 2ற் பார்க்க 'அக்நிர்வை தேவானாம் சமிதா' என்பது சுருதி.

11. நெய்தெளிப்புற்ற திண்டு; நெய்யவன் யோனி; நெய்யின்
மெய்யுற வமைந்தோ னன்னான்;மெய்யொளி யவற்குநெய்யே;
எய்யுறு திச்சை யீவோ, யவிதருங்காற் கொணர்ந்து
மய்யறு சுவாகா வோடு மருவவி சுமந்தின் பூட்டல்.

(இ-ன்.) இவ்விடத்து நெய்யைத் தெளிக்கிறேன். அவனது பிறப்புக்குக் காரணம் நெய்யாம், அவன் நெய்யிலேயே தனது உடலமையப் பெற்றவன். அவனுக்கு உண்மையான தேஜஸ் நெய்யாம். விருஷபமே! (இச்சையளிக்கும் அக்கினியே யென்றபடி) யாங்கள் அவியை யளிக்கும் போது தேவர்களைக் கொண்டுவந்து, குற்றமற்ற, ஸ்வாஹா வென்னும் மந்திரத்தோடு தரும் அவ்வவிப் பொருளை யேற்று அத்தேவர்களுக்குக் களிப்பூட்டுவாயாக—(எ-று.) இச்சூக்தத்தில் தனூபாத் தின்மையால் இது நராசம்ஸ ஸூக்தமாம். இது முதல் வகுப்பைச் சேர்ந்தது. மண். 1 சூக். 142 செய் 1ன் மேற் குறிக்கப்பட்டுள்ள ஸாயணபாஷ்யக்குறிப்பைப் பார்க்க.

### வருக்கம் 23.

## 195. (4) மண்டலம். 2. அநுவாகம். 1. சூக்தம். 4.

### 9இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: பிருகு கோத்திரத்து ஸோமாஹூதி; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: அக்கினி. இதுமுதல் நான்கு ஸூக்தங்கள் ஸோமாஹூதி பாடியவை.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 5.

1. நல்லொளி வீசு மங்கி, நற்றுதி பெற்றோன், மாந்தர்ப்
புல்லுறு மதிதி, நல்ல வவியனை, யுமக்கா, யாரு
மொல்லுமா றன்ப னென்னப் பெறவுறு வோனைத், தேவ
வல்லமைச் சனத்துத் தேவன் சாதவேதனை யழைப்பல்.

(இ-ள்.) நல்ல ஒளியை வீசுபவனும், நல்ல ஸ்துதிகளை யடைந்தவனும், மனிதர்களைச் சாரும் அதிதியும், நல்ல அவியுணவோடு கூடியவனும், மனிதர்கள் தன்னை நண்பனாகப் பெறுமாறு அடைபவனும், தேவத் தன்மை பொருந்திய ஜநங்களுக்கு மத்தியிலுள்ள தேவனும், ஜாதவேதஸனுமான வக்கினியை, யஜமானர்களாகிய வுங்கள் பொருட்டுக் கூவி, யழைப்பேன்.—(எ-று.) மித்ர இவ என்பதற்கு நண்பனைப் போல என்றாது சூரியனைப் போல என்று கூறுவதும் ஒன்று. ஜாதவேதஸன். மண். 1 சூக். 44 செய் 1 பார்க்க. அதிதி, விருந்து, உபசரிக்கத்தகுந்தவன் என்பது பொருள்.

2. அறஇறு மந்தரத்து மாயுளோ ரில்லின் கண்ணு
முற, விவன் றனைப்பிருகு குலத்து முன்னவர் சேவிப்போர்
நிறுவின ரிரிடத்தும்; நேமியின் முழுது மித்திக்
கறுவுக பகையைத் தேவரிடை புகும் விரைபரி யோன்.

(இ-ள்.) மழைநிருறும் அந்தரிட்சத்திலும், மனிதர்களது கிரகத்திலு முறைமாறு இவ்வக்கினியைப் பிருகுகுலத்து முன்னோர்களாகிய பரிசரர்கள் அவ்விரண்டிடத்து மமைத்தார்கள். தேவர்களிடையில் வேகமாகச்செல் லும் குதிரையையுடையவனுகிய இவ்வக்கினி, பூமி முழுதுமுள்ள எங்கள் பகைவர்களை யெல்லாம் அடக்கி மேலாக நிற்கட்டும்—(எ-று.)

3. மனிதர் தங்குடி யிடத்தே மருவு வித்திட்டார் தேவர்
கனிதரு நட்பி னன்னூர் கருதிலிற் செல்லுங் காலை;
இனிதர விரவெல்லாமுந் தாசுட னின்ப மெய்தத்
துலோதர லொளியின் யாக வீட்டினிற் றுதையப் பெற்றே.

(இ-ள்.) ஸ்வர்க்ககமனர்களாயுள்ள தேவர்கள் மனிதர் கருதியுள்ள யாகதலத்தை நோக்கிச்செல்ல விருப்பமுற்றபோது, மானுஷப்பிரஜைகளி னிடத்துச் சிநேகிதனைப்போல அக்கினியை யமைத்தார்கள். அவி யளிப்பவனுகிய தாசுஷன் சுகத்தைப்பெறுமாறு யாகவீட்டிலமைக்கப்பெற்று இன் பத்தைத்தருமாறு இரவுப்பொழுதெல்லாம் பிரகாசிக்கட்டும்—(எ-று.)

4. தன்னரு முடைமை போலத் தாங்கிய வவன்ற னேக்க
முன்னரு மினிமைத் தாமா லொடுங்குறக் காட்டங்கவ்வத்
துன்னிய காட்சி யற்றே; தேரினிற் பூட்டிய வாலை
முன்னுற வசைக்கு மாவினுவை போடதிக்கு ளோட்டும்.

(இ-ள்) தன்னுடைய சொந்த உடமையைப்போலத் தாங்கிய அவ் வக்கினியினது புஷ்டி அல்லது சரீர வளர்ச்சி ரமணியமாக வுள்ளது. விற குகள் ஒடுக்கத்தை யடையுமாறு அவற்றை யெரிக்கச்செல்லும் காட்சியும்

## மண்டலம் 2 சூக்தம் 4.

அத்தன்மைத்தேயாம். தேரிற் கட்டப்பெற்று வாலையாட்டும் குதிரையைப் போல அவ்வக்கினி தனது ஜ்வாலைகளாகிய நாக்கை யோஷதிகளுக்குள் நீட்டுவான்—(எ-று.) எவ்வக்கினி நீட்டுகிறானோ அவனது புஷ்டியெனச் சேர்த்துள்ளது வடமொழி மூலத்திலென்க.

5. என்ன தம்மகத்துவத்தையேத்தினார் துதியோர்; அன்னான்
றன்னைநேசிப்பவர்க்குத்தனதுபொன்னிறத்தைத்தோய்த்தான்;
பின்னரு மவியிற் பற்ப னிறத்தைப்பெற் றறிய நின்றான்;
மன்னு மூப்பென்று மீள விளமையை மருவ நிற்பான்.

(இ-ள்) என்னுடைய அந்த மகத்துவத்தை ஸ்தோதாக்கள் எப்போதும் புகழ்ந்தார்கள். அவனை நேசிப்பவர்களுக்கு (அவ்வக்கினி) தனது அழகிய நிறத்தை யளித்தான். ரமணீயமான ஆஜ்யாதி அவிகளை யேற்றுச் சித்திர வர்ணத்தோடு எல்லாராலும் அறியக்கிடக்கிறான். தானடையும் கிழத்தன்மையானது எப்போதும் மீண்டும் மீண்டும் (அவிகளால்) யௌவனத்தை யடையும்வண்ணம் நிற்கிறான்—(எ-று.) என்னுடைய என்றற்றொடக்கத்துமுதல் வாக்கியம் அக்கினி தன்னையே கூறிக்கொண்டதாகுமென்பார் மேனாட்டாசிரியர்.

### வருக்கம். 24.

6. தாகமிக் குள்ளோ னென்ன வனத்தினை யவன்றகிப்பான்;
ஓகையி னெறியி னீரிற் றேருறு மாவிற் சத்தத்
தேகுவான், கருநெறிக்க ணொரியழ கெய்திக் காண்பன்,
மேகமா ரந்தரத்தே விளங்கு விட்சோதி போன்றே.

(இ-ள்.) தாகமிகுந்தனவனைப்போல அவன் காட்டையெரிப்பான். வழியி லங்குமிங்குமாகச் செல்லும் நீரைப்போலவும், தேரிற் கட்டப்பட்டுக் கனைத்துக்கொண்டு செல்லும் குதிரையைப்போலவும், செல்லுவான். கறுப்பாகிய மார்க்கத்தில் நெருப்பினதழகிய சோதியைப்பெற்று மேகநீர் நிறைந்த அந்தரத்தில் தோன்றும் சூரியனைப்போலக் காணப்படுவான்—(எ-று.)

7. பலநெறி பரந்து பூமி முழுவதும் பரவிச் செல்லுந்,
தலைமேலாஞ் சுயேச்சை யாகக் கோபனின் றேகுமாவின்;
நலவொளி கூர்ந்த வங்கி நாடிப் பூமியைப் பதத்தி
னிலவ விட்டது போற் குத்துச் செடிகளைக் கரித் தெரிக்கும்.

(இ-ள்.) பலவழிகளிலும் வியாபித்துப் பூமி முழுதும் வளர்ந்து, மேய்ப்பவனில்லாதமாடு தன்னிச்சையாக வெங்கும் திரிவதுபோலப் பரவுவான். நல்ல வொளியோடுகூடிய அக்கினி, பூமியை (யுழுது சாகுபடி செய்வதற்கு யோக்கியமாயிருக்கும் வண்ணம்) பதப்படுத்தியதுபோலக் குத்துச் செடிகளைக் கரும்பாகச் சுட்டெரிப்பான்—(எ-று.)

## அஷ்டகம் 2 அத்தியாயம் 5.

8. பூர்வகாலத்திற் செய்த வுதவியை நினைந்து பூண்ட
வார்வமோ டருந்துதியை யறைந்தன மூன்றும் யக்ஞத்;
தேர்பெறு வீரரோடு மகிமை வாய்ந் திசைமிகுந்து
சீர்பெறு நெறியிற் றோன்றுந் தனமன மங்கி சேர்க்கல்.

(இ-ள்.) அக்கினியே! நீ பூர்வகாலத்தில் எங்களுக்குச் செய்த வுதவியை நினைந்து அன்போடும் மனனீயமான ஸ்துதிகளை மூன்றும் ஸவனத்தில்உனக்கெனக் கூறினோம். அழகிய வீரர்களாகிய புத்திரரோடு மகிமை பொருந்தியதும், கீர்த்தி மிகுந்ததும், நல்ல வழியில் வந்ததுமான செல்வத்தையும அவிப்பொருளையும் எங்களுக்குத் தருவாயாக—(எ-று.)

9. நன்மைசார் வீர ருற்றோர், பகைவரை நலிப்போர், மேன்மை
யுன்னிய நடையோர் கூட வொழுக்கின ருன்காப் பெய்தத்
துன்னிய துதிக்கிருத்சமத ரயலாரை வெல்க;
அன்ன மீந்திடுக போற்று மெமக்கு மெஞ்சூரி கட்கும்.

(இ ள்.) நல்ல வீரர்களோடு கூடியவர்களும், பகைவரை வாட்டுபவரும், மேன்மை பொருந்திய நடையோடு கூடியவர்களும் தங்கள் தங்கள் குல தருமங்களைச் செய்து கொண்டு ஒருவருக்குந் தெரியாமற் றம்பாட்டி லொழுகுபவர்களும், உனது துணையைப் பெறுவதற்கு வேண்டிய துதிகளோடு கூடியவர்களுமான கிருத்ஸமத வம்சத்தினர் தமது அயலாரை (ஒழுக்கத்தினால்) வெல்லுக. (அக்கினியே!) உன்னைத் துதிக்கும் எங்கட்கும் எங்களுடைய ஸூரிகளுக்கும் அன்னத்தைத் தருக—(எ-று.)

வருக்கம். 25.

### 196. (5) மண்டலம் 2. அநுவாகம். 1. சூக்தம். 5.

8 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஸோமாஹுதி; வடமொழிச்சந்தம்: அநுஷ்டுப்; தேவதை: அக்கினி.

(வேறு.)

I. சேதனன் னெமைப் பாலிப்போர்க் குதவு நற்றந்தை
யோது தூதனாய்த் தோன்றினன், வணங்குதற் குரியன்,
நீதிசா ரொழுக் குற்றுநற் செல்வ நேடுறுவோன்;
நீதி னல்வலி யவனைச் சேர்ந் தாளுவோ மவியின்.

(இ-ள்.) எங்களுக்கு அநுஷ்டான விதிகளை யறிவிப்பவனும், எங்களுடைய பிதாக்களாகிய ஸூரிகளுக்கு உதவும் பிதாவும், வணங்குவதற் குரியவனும், நல்லொழுக்கத்திற் பொருந்திச் செல்வத்தைச் சம்பாதிப்பவனுமாகிய வக்கினி ஹோதாவாய் உற்பவித்தான். நல்வலிமையோடு கூடியவவனை அவிப்பொருளோடு கூடிய யாம் அடைந்து அவனை நடத்துவோமாக—(எ-று.)

## மண்டலம் 2 சூக்தம் 5.

2. எழு வார்களும் யாகநேதா வென விங்கு
குழும் யாரிடம் விரிந்து தந்தொழிலொடுங் கூடும்,
வாழு மாந்தரிற் றேவர்கள் யாவர்க்கு மிடையே
விழு மட்டமப் போதனுப் விரிபவன் யாரே.

(இ-ள்.) யக்ஞத்தை நடத்தும் நேதாவாகிய எந்த வக்கினியினிடத்து எழு ரச்மிகளாக வெண்ணப்பட்ட எழு ஹோதாக்களும் தங்கள் தங்கள் கர்மங்களை விஸ்தாரமாகச் செய்துகொண்டு கூடியிருக்கிறார்களோ, எவன் மனிதர்களுக்குள்ள போதாவைப் போல எல்லாத்தேவர்களுக்கும் மத்தியில் எட்டாவதாகிய போதனாய் வியாபித்து நிற்பானோ (அந்த அக்கினி எங்களுடைய யக்ஞத்தைத் தாங்கட்டும்)—(எ-று) எழுவார் என்றது எழு ஹோதாக்களை. போதன், போதா, பரிசுத்தஞ் செய்பவன் மண். 2 சூக். 1 செய். 2 இன் உரையைப் பார்க்க.

3. இம்மகத்தினை யெணியவி யேந்தவும் பிரமஞ்
செம்மை சாரவே கூறவும் விரும்புவன் சிறந்தே;
இம்மை யெக்கவி யேயினுந் தன்னவா யிவைப்பார்,
னம்மை நேமிசார் சக்கரமா மெனப் பரந்தே.

(இ-ள்.) [மேற் செய்யுளில் ஹோதாக்களாகவும், போதனாகவும் தொழில் புரிவதிற் களிகொண்ட அக்கினி ஈண்டு இதரத் தொழிலுஞ் செய்வான் என்கிறார்.] இந்த யக்ஞ கர்மத்தை யெண்ணி அத்வர்யுவாய் அவியுணவை யேந்தவும், ஹோதாவாய் பிரஹ்மங்களை அல்லது சஸ்திரங்களைச்சொல்லவும் விரும்புவான். வளைய மானது சக்கரத்தைச் சுற்றுவிப்பது போல எல்லாக்கவிகளையும் (அல்லது மேதாவிகளான ரித்விஜர்களது ஞானகர்மங்களையும்) தன்னுடையவா யாக்கிக் கொள்வான்—(எ-று.)

4. தூயவன் பிரசாத்தனுப் மக விடையூறு
வீபவாற்று தூய்க் கன்மனுய்த் தோன்றினன்; றனது
ஞாயமான பல் விரதங்க ளறிவுறு தனவைத்
தோய விட்டிவ னோங்குவான் மரக்கிளை தூக்க.

(இ-ள்.) இயல்பாகவே பரிசுத்தமுள்ள வக்கினி, பிரசாஸ்தாவாய், யக்ஞவிடையூறுகள் கெடுமாறு செய்யும் பரிசுத்த கர்மனாய்ப் பிறந்தான். அவனது அழியாத பலனோடு கூடிய விரதங்களை யறிந்து இங்கு நடைபெறுமாறு செய்து மரக்கிளை செழித்தோங்குவதுபோல விருத்தியடைகிறான்—(எ-று.)

5. எவைக ளிங்குறுங் களிப்பொடு பரவுறு மவையே
சுவை பெறவவி விரும்பு நேதாவெனு மவன்ற
னவையில் மூன்றுரு தம்மினுஞ் சிறந்த தன்னிறத்தைச்
சவையினிற் பலவகை புரிந் துபசரிக் கின்ற.

(இ-ள்.) எந்த விரல்கள் இங்கு அநுஷ்டிக்கப்படும் யாகத்தினிடத்து வந்து பரவிக்களிப்பை யளிக்கின்றனவோ தர்மே யோடி யாடித்திரி

யும் அந்த விரல்களே, அவியையுண்ண விரும்பும் நேதாவாகிய அவ்வக்கினியினுடைய ஆஹவநீயம், காருகபத்தியம் தக்ஷிணக்கினி யென்னும் மூன்று உருவத்தைக் காட்டிலும் சிறந்த நிறத்தைப் பலவகையாக யக்ஞக் கூட்டத்திற் புரிந்து அவனை யுபசரிக்கின்றன—(எ-று.) இது ஸாயனருரை. ஆயுவ:, கர்த்ர்ய: என்றும், தேவ: ப்ரீணயித்ர்ய: என்றும்: ஸ்வஸார:, ஸ்வயம் ஸாரிண்யோ அங்குலய: என்றும், ருவித் பஹூக்ருத்வ: என்றும் பொருள் கூறுவர். மேனாட்டாசிரியர் இவ்விருக்குக்குப் பொருள் விளங்கவில்லை யென்று கூறி, 'நேதாவாகிய வனுடைய பசுக்கள் அவனது நிறங்களினுற் றம்மைப் போர்த்துக் கொண்டு அவனைச் சேவிக்கின்றன நம்மிடத்திற்கு வந்துள்ள சகோதரிகளாகிய மூவரைக் காட்டிலும் அவன் பெரியவ னன்றோ?' என்றுமொழிபெயர்ப்பர். உஷஸுக்களை நடத்துவதால் அக்கினியை நேதாவென்றும், பசுக்கள் மூன்றென்றதற் கொப்ப உஷஸுக்களும் மூன்றுயின வென்றும் லூட்விக் என்பவர் எண்ணுகிறார் என்பர்.

6. சுவசை நெய்யினை யேந்தித் தாயருகினிற் றேய்ந்து
நிவமொடும் முறைகாலையி லவைவர வினைந்து
தவமகிழ்துவன், வானத்தின் மழையினைச் சாரும்
யவமகிழ்வதின் மகத்தி லத்துவரியு வீண்டே.

(இ-ள்.) சகோதரி ஸ்தானத்திலுள்ள (ஜுஹூ) நெய்த்துடுப்பு நெய்யை யேந்திக் கொண்டுவேதி பூமியாகிய தாயின் பக்கத்தில் உறையும் போது, அந்நெய்த்துடுப்பு முதலிய உபகரணங்கள் வருவதை அல்லது வந்திருப்பதை யெண்ணி, மழை வரவை நோக்கி மகிழும் யவமாதிய தானியங்களைப் போல, அத்வர்யு மிக மகிழ்ச்சிகொள்வான்—(எ-று.) ஸ்வஸா, சுவசை, சகோதரி, நெய்த்துடுப்பைக் குறித்ததென்பார் ஸாயனர்; உஷஸைக் குறிக்குமென்பார் மேனாட்டாசிரியர். தாய், பூமியைக் குறித்துக் காட்டும் உத்தரவேதி யென்பர் மேனாட்டாசிரியர்.

7. தனது கன்மத்தி லவிகளைத் தாங்குவ தற்கா
வனிப் புரிந்திட விருத்துவிக்காய் மகத்தொழிலே;
பினர் மகத்தினிற் காமவி யளித்தனந் தோமந்
தனையு மீந்தன நாமவற் கழகு தைவரவே.

(இ-ள்.) அவ்வக்கினி தனது யக்ஞ கர்மத்தில் அவிகளைத் தாங்கும் சக்தி தனக்குறுவதற்காக ஹோதா, போதா, பிரசாஸ்தா முதலிய ரித்விக்ரூபத்தைத் தரித்துத் தானே யக்ஞகர்மங்களைச் செய்யட்டும். பின்பு யாங்களும் மகத்திற்கு வேண்டிய சரு புரோடாசாதி யவிகளையும் அழகுபெற அவற்குச் சார்த்தினம்; ஸ்தோமத்தையும் அளித்தோம்—(எ-று.) 'யாங்கள் அளித்தோம், அவற்றை யாங்கள் பெறட்டும்' எனமொழி பெயர்ப்பார் மேனாட்டாசிரியர்.

8. அங்கியே யறிவாளனும் வணங்குதற் குரியோர்
மங்கலில் லெலாத் தேவர்க டம்மையுந் திருத்தி
பொங்குமா றிவட் புரிந்திட வருளுவாய்; யாமு
மங்கமாய் மக மாற்றின முன்றனக் கெனவே.

## மண்டலம் 2. சூக்தம் 6.

(இ-ள்.) அக்கினியே! (உன்னுடைய மகிமையை அல்லது கர்மப்பிரயோகத்தை) யறிந்தவனாகிய யஜமானன், வணங்குதற் குரிய எல்லாத் தேவர்களையும் ஸந்தோஷப் படுத்துமாறு, (அநுக்கிரகிப்பாயாக.) யாங்களும் உனக்காகவே யாகத்தைப் புரிந்தோம். (நீயே அவ்வத் தேவர்களது ரித்விக்காயிருந்து காரியத்தை நிர்வகிப்பாயாக.) —(எ-று.)

வருக்கம். 26.

## 197. (6) மண்டலம். 2. அநுவாகம். 1. சூக்தம். 6.

8 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஸோமாஹுதி; வடமொழிச்சந்தம்: காயத்திரி; தேவதை: அக்கினி.

(வேறு)

1. அங்கி யிவ்வென் ஸமித்தெரி யார்ந்ததைத்
தங்கு போற்றினி னுன்றனைச் சார்ந்ததை
யங்கமாக வடைந்திட; னற்செவிக்
கிங்கிந் நல்லிசை யின்பி னெடுத்திடல்.

(இ-ள்.) அக்கினியே! ஜ்வாலையோடு கூடியதும் எனது போற்றோடு உன்னைச்சார்ந்துள்ளது மான இந்த ஸமித்தை ஏற்றுக் கொள்ளுவாயாக. இந்த நல்ல கீதத்தைச் சந்தோஷத்தோடு ஏற்றுக் கொள்ளுவாயாக—(எ-று.)

2. அங்கியே, வலிபெற்றவ, வேகமாய்ப்
பொங்கு மிட்டியோய், நற்பிறப் புற்றவ,
அங்கமான விச்சூக்தத்தி னுன்னை யாந்
துங்க மாகத் துதைந்து வணங்குவம்.

(இ-ள்.) அக்கினியே! வலிமைக்குப் பிறந்தவனே! வேகமாகச் செய்யப் பெறும் இஷ்டியுள்ளவனே! நல்ல பிறப்போடு கூடியவனே! அழகிய இந்த ஸூக்தத்தினால் உன்னை யாங்கள் பரிசுத்தமான வவியாவுதிகளோடு நெருங்கி வணங்குவோம்—(எ-று.) அச்வ மிஷ்டே என்பதற்கு, வேகமாய்ப் பொங்கு மிஷ்டியோய் என்னாது, குதிரைகளைத் தேடுபவனே யென்பர் மேனாட்டாசிரியர்.

3. செல்வ மீபவ செல்வம் விரும்புநை
நல்லிசையினை நாடு முன்றன்னையே
நல்லிசை கொடு நாடி வணங்குவம்
பல் லுபசாரணை புரி யாங்களே.

(இ-ள்.) செல்வத்தைத் தருமக்கினியே! செல்வத்தை விரும்புபவனும், நல்ல ஸ்துதி கீர்த்தனங்களை விரும்புபவனுமான வுன்னைப், பலவித உபசாரங்களும் புரியும் பரிசாரர்களாகிய யாங்கள் உபசரித்து ஸ்தோத்திர கீதங்களால் வணங்குவோம்—(எ-று.)

4. செல்வ நாயக, செல்வத்தை யீபவ,
நல்லனத்தவ, ஞான நிறைந்தவ,
ஒல்லும் வாய்மை யுன்னி வெறுப்பவர்
புல்லுரு தெமைப் போக்குக தூரத்தே.

(இ-ள்.) வஸுபதியே! செல்வத்தை யளிப்பவனே! மகவானே! (அன்னப் பொருளோடு கூடியவனே!) ஸூரியே! எங்களைத் துவேஷிப்பவர்களோடு யுத்தம் செய்து அவர்களைத் தூரத்தி லோட்டுவாயாக—(எ-று.)

5. எங்களுக் கவன் விண்ணினி ழிந்துறுந்
துங்க நன்மழை தோய்க்கல்; அடக்கலா,
வெங்களுக் கவன் வன்மை யியைத்திடல்;
எங்களுக் கவ னேய்க்கல் ப லன்னமே.

(இ-ள்.) விண்ணினின்று பொழியும் மழையை அவன் எங்களுக்குத் தரட்டும். ஒருவராலும் அடக்கமுடியாத பலத்தை அவன் எங்களுக்களிக்கட்டும். ஆயிரக்கணக்கான உணவுப் பொருள்களை யவன் எங்களுக்குக் கூட்டிவைக்கட்டும்—(எ-று.)

6. தூத, போற்றுதற் கேற்றவ, வாலிப,
ஓதனே, யுனேயோது மவ னுன்றன்
நீதி னற்றுணை தேடுகின்றோ,னவற்
கேத மாற வியைக வருகினே.

(இ-ள்.) தூதனே! போற்றுதற் குரியவனே! இளமை மிகுந்தவனே! ஹோதாவே! உன்னைத் துதிப்பவனும் உன் துணையைத் தேடுபவனுமான வ வனுக்குத் துன்பநீங்கும் வண்ணம் அவனுக்கருகில் வருவாயாக—(எ-று.) விளிகள் அக்கினியைக் குறித்து நின்றன.

7. இருவகைப் பிறப் பேய்ந்தவர் தம்முளும்
பெருமை சார்கவி பேசுமறி வொடு,
மருமை யாக வுலாவுவை, யக்கினி,
நரரி னன்பெனத் தூதென நாடியே.

(இ-ள்.) கவியே, அக்கினியே! தேவர் மனிதரென்னு மிருவகைப் பிறப்பாளருக்கு மத்தியில், ஞானத்தோடு, மனிதர்களுடைய சிநேகிதனைப் போலத் தூதனாக வுலாவுவாய்—(எ-று.)

8. யாவு மோர்தரு நீயிவ ணெங்களு
மாவலோ டெம தாசைக ளார்த்துக;
தேவர் தம்மை வணங்கிடல் ஞானியே,
பாவு மிக்குசை மீது பரவவே.

மண்டலம் 2 சூக்தம் 7.

(இ-ள்.) எல்லாவற்றையும் அறியும் நீயிவ்விடத்து எல்லாப்பக்கத்திலும் அவலோடு எங்களுடைய இச்சைகளை நிறைவேற்றுவாயாக. ஞானியே! தேவர்களை வணங்குவாயாக. இத்தருப்பைமீது தங்குவாயாக—(எ-று.)

வருக்கம். 27

## 198. (7) மண்டலம். 2. அநுவாகம். 1. சூக்தம். 7.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஸோமாஹுதி; வடமொழிச் சந்தம்: காயத்திரி; தேவதை: அக்கினி.

1. அங்கி, வாலிப மார்ந்தவ, பாரத,
துங்க நல்வசு, கீர்த்தி துதைந்திவட்
பொங்கு பேரொளி போர்த்துப் பலர்விரும்
பங்கமான தனத்தை யணைக்கவே.

(இ-ள்.) அக்கினியே! இளமைமிகுந்தவனே! பாரதனே! வஸுவே! கீர்த்தி மிகுந்து, மிக்க வொளியோடு கூடிப் பலராலும் விரும்பப்படும் செல்வத்தை யெங்களுக்குக் கொண்டு வந்து தருவாயாக—(எ-று) வஸு, செல்வ காரணன், ஒருவகைக் கடவுள் வகுப்பினன். பாரதன், பாரதா ரித்விஜர்கள் அவர்களால் மதனஞ்செய்யப் பட்டுக்கொண்டு வசப்படுபவன், அவர்களது ஸ்தோத்திரம்அவி யிவற்றிற்களிப்பவன்.

2. தேவர் தம்பகை மானிடர் தம்பகை
யேவர் தம்பகை யேனு மெமைத்தம
தோவி நீவலிக் குள்ளடக்கா துறல்;
பாவு மன்ன துவேடநின் றோம்புக.

(இ-ள்.) தேவர்களுடைய பகையும் மனிதர்களது பகையும் எம்மை யடக்கியாளாமலிருக்கட்டும். அவ்வகைய துவேஷங்களினின்று எங்களைக் காப்பாற்றுவாயாக—(எ-று) அராதி என்னும் வடமொழிப் பதத்துக்குத் தான மின்மை யென்பது பொருள். அது சத்துருத்துவத்தைக் குறித்தது.

3. உன்னருளி னெவ் வுன்னலர் தம்மிடை
மன்னிடும் பகை தன்னையும், வேகமார்
நன்னதிப் புன லீந்திக் கடந்தலிற்,
றன்னமுந் துணையின்றிச் சயிப்பமே.

(இ-ள்.) உனது அருளினால், நீரோட்டத்தை நீந்தித் தாண்டுவது போலத் தனியாகவே (ஒருதுணையுமில்லாது என்றபடி) எம் சத்துருக்களதுபகையைக் கடந்து செல்வோமாக—(எ-று.)

4. சுத்தனே, தொழற் கேற்றவ, பாவக,
இந்தரைக்க ளிழுது நனைத்திட

## அஷ்டகம் 2 அத்தியாயம் 5.

வொத்த போது மகத்துவ முற்றுநீ
தத்து சோதியிற் சாருவை, யங்கியே.

(இ-ள்.) சுத்தனே! வணங்கத் தக்கவனே! பாவகனே! அக்கினியே! உன்னைநெய் நன்றாக நனைத்த போது மகத்துவமிருந்து நல்லொளியோ டோங்குவாய்—(எ-று.)

5. காளையோடுதன் கன்றை யகட்டுறும்,
பாளை யாவொடு, பண்பில் மலட்டொடு
நாளு முன்றனைப், பாரத, வங்கியே,
வேளை தோறும் வணங்கநீ யெம்மவன்.

(இ-ள்.) பாரதனே! அக்கினியே! காளையோடேனும், சூல்முதிர்ந்த பசுவோடேனும், மலட்டுப்பசுவோடேனும் யாங்கள் உன்னை வணங்க நீஎங்களால் ஆராதிக்கத்தக்கவனாகிறாய்—(எ-று.) அஷ்டாபதிபி; என்பதற்குக் கன்றை வயிற்றிலுடைய பசுவென்று ஸாயனர் பொருள் கூறுவர். ஆனால் எட்டட்சர முள்ள பாக்களா யிருக்கலா மென்று ராத்(Roth) கிராஸ்மான் (Grassman) என்பவர்கள் எண்ணுவார்கள். ஈண்டு பசுவென்னும் பதமும் ஸ்தோத்திரம் என்னும் பொருளைச் சுட்டும் என்பார் பெர்கேன் (Bergaigne) என்பவர். செய்யுளில் கன்றை யகட்டுறும் பாளை ஆவென்றார். பாளை கருப்ப சிசுவுக்குப் பெயர்.

6. மர வுணவினன், மன்னு மிழுதினன்,
பரவு வோனொடு பண்பிற் பழையவன்,
வரவுயர் வினன்,வல்லமை புத்திரன்,
தரமுயர்ந்த வதிசயத் தன்மையன்.

(இ-ள்.) ஸமித்தை யுணவாக வுடையவன், நெய்யால் நனைக்கப் பெற்றவன், ஹோதா, புராதனன், சிரேஷ்டன், வலிமையிற் பிறந்தவன், அற்புதன். (இப்பேர்ப்பட்ட மஹாநுபாவன் எம்மை ரட்சிக்கட்டும்)—(எ-று.)

வருக்கம் 23.

## 199. (8) மண்டலம் 2. அநுவாகம் 1. சூக்தம் 8.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: 1-5. காயத்திரி, 6 அநுஷ்டுப்; தேவதை: அக்கினி.

1. அன்னம் வேண்டு மவனிற் றுதித்திடல்
மன்னு கீர்த்தி வளருத்தமன், பயன்
றுன்னுமாறு பொழிபவ, னங்கியி
னுன்னு நற்பரி யூர்தியை வேக்மே.

## மண்டலம் 2 சூக்தம் 8.

(இ-ள்.) கீர்த்தி சிறந்த உத்தமனும், பலனைப் பொழிபவனுமான அக்கினியினது அசுவ மார்த்த தேரை, உணவுப் பொருளை யாசிப்பவன் துதிப்பதுபோல, வேகமாகத் துதிப்பாயாக—(எ-று.) மனமே அல்லது ஹோதாவே எனஒருவிளி கூட்டுக. தேரிற் பரிகட்டுவதைப் புகழ்க வென்பாரு மேனையோராசிரியர்.

2. தாசுடரை நெறியி னடத் துவோன்,
பேசு மூப்பிலன், சத்துருவைக் கிழத்
தாசி னெய்ப்பவன், பார்க்க வழகினன்,
நேசமோ டென்றும் போற்ற நிலைஇயினன்.

(இ-ள்.) தாசுஷர்களை (அவியளிக்கும் யஜமானர்களை என்றபடி) நல்ல நெறியில் நடத்துபவனும், கிழத்தன்மை யற்றவனும், சத்துருக்களை விரைவிற் கிழப்படுத்துபவனும், வணக்குவோர் பார்ப்பதற் கழகிய தோற்றத்தோடு கூடியவனுமான வக்கினி எக்காலத்தும் அன்பர் போற்றுமாறு தங்கினன்—(எ-று.)

3. தோடமோ டுடைக் காலத்துஞ் சோதியோ
டிலா துற வில்லினி லெய்தியே
தோடமற் றழிவில்லா விரதத்தின்
பீடு தோன்றப் புகழப் பெறுபவன்.

(இ-ள்.) இரவும், பகலும் சோதியோடு விளங்குமாறு யாகவீட்டின் கணுற்று, குற்றமற்று அழிவில்லாத அவனதுவிரதத்தின் பெருமை தோன்றுமாறு ஸ்தோத்திரஞ் செய்யப் பெறுபவன் (எவனோ அவன் அக்கினி யென்க,)—(எ-று.) தோஷம்,இரவு. குற்றம் என்னும் இரண்டு பொருளிலும் வந்தது. உடைக்காலம். உஷைக்காலம், உஷஸ்காலம், விடியற்காலம்; ஈண்டு இலக்கணையாற் பகலைக் குறித்தது.

4. விண்மணியி னொளியினை வெல்லவே
யென்னு சித்திர வெல்லின் றொகையொடு
கன்னுறக் கிழத்தன்மை கழிக்கழ
கொன்னுமா றெவ்விடத்து மொழுகுமே.

(இ-ள்.) விண்ணிலுள்ள சூரியனது ஒளியைப் போன்று சித்திர பாதுவோடு கூடிக், கிழத்தன்மை நீங்கி, அழகாக எல்லாவிடத்துங் கதிர்களை யோட்டிப் பிரகாசிக்கும்—(எ-று.)

5. அங்கி யத்திரி தன்னை யவனுடைத்
துங்க வாட்சியிற் றேய்ந்திட வுக்தங்கள்
பொங்கு மன்பிற் புரிந்த; புகழெலா
மங்கமாக வவனை தரித்தனன்.

## அஷ்டகம் 2 அத்தியாம் 6.

(இ-ள்.) அத்திரி (சத்துருக்களையும் அன்னத்தையும் பட்சணஞ்செய், பவ னென்பது பொருள் யாகிய அக்கினியை அவனுடைய ஸ்வய் ஆட்சி யிற்றங்குமாறு உக்தங்கள் அல்லது ஸ்தோத்திர வசனங்கள் அன்போடு பு கழ்ந்து புரிந்தன. எல்லாக் கீர்த்தியையும் அவனே யேற்றுத் தாங்கினன்—(எ-று.)

(வேறு.)

6. சோமனக்கினி யிந்திரன் றெக்க தேவதைக
ளாமெவர்களு முதவியை யாற்றிட யாங்கள்
பேமற நவிவின்றியே பிறங்குக குழுவி;
நாமுறப் பொரும் பகைவரை நலிததொழுகுகவே.

(இ-ள்.) ஸோமன், அக்கினி, இந்திரன் முதலிய எல்லாத் தேவர்க ளுடைய வுதவியையும் பெற்று யாங்கள் இம்சையில்லாமற் கூடி வாழ்வோ மாக. எங்களுடைய சத்துருக்களை வாட்டி வெல்வோமாக—(எ-று.) பேமற நாமுற என்பன எதுகை நோக்கிச் சேர்த்தன.

வருக்கம் 29.

ஆகச் செய்யுள். 713.

### ஐந்தாவது அத்தியாயம் முற்றும்.

---

## ஆறுவது அத்தியாயம்.

இவ்வத்தியாயத்தில் 32 வருக்கமும் 15 சூக்தங்களும், 157 இருக்குக்களுமுள்ளன.

## 200. (9) மண்டலம். 2. அநுவாகம். 1. சூக்தம் 9.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம். திருஷ்டுப்; தேவதை: அக்கினி

(வேறு)

1. ஞானவா,னேக்கமுள்ளோ,னொளியுளோ,னன்னுட்புற்றோன்,
பூணுறும்விரதமொன்றுநகுலவுருமதியைப்பூண்டோ
னுன வாயிரஞ் சுமப்போ,னுத்தம,னங்கி,தூய
மானமார் நாக்கோ, னேதா, மருவினன் வடமேவதிக்கண்.

(இ-ள்.) ஞானவானும், வளர்பவனும், ஒளியுள்ளவனும், நல்ல வலி மைபொருந்தியவனும், எடுத்துக்கொண்ட விரதங்கள் கெடாதபடி காக்கும் புத்தி வாய்ந்தவனும், ஆயிரக்கணக்கான வுருவைத் தாங்குபவனும், உத்தம

## மண்டலம் 2 சூக்தம் 9.

னும், பரிசுத்தமான நாக்கோடு கூடியவனும், ஹோதாவுமான அக்கினி (ஹோதிருஷதனம்) உத்தரவேதிக்கண் அமர்ந்தான்—(எ-று.) வஸிஷ்டன் எல்லாவற்றையும் ஒளியாற் போர்க்கும் உத்தமன் என்பது பொருள். செய்யுளில் உத்தமனென்றார். ஹோதிருஷதனம், ஹோதிரு ஸதனம், ஹோதா வமரும் இடம், உத்தரவேதியென்க, வடவேதியென்றார் செய்யுளில்.

2. காளையே யங்கி நீயுங் கருதிடு தூத னாகல்;
நாளுநீ யெமதுதுன்ப நலித்திடல்; தனத்தைச்சேர்க்கல்;
தாளுடனொளிர்ந் தெம் மைந்தர் சாற்றிடு பேராதி
யாளுவோ னென்னக்கொள்க கருத்துறுங் காவலோர்ந்தே.

(இ-ள்.) இச்சைகளை வருடிக்கும் விருஷபமே! அக்கினியே! நீ தேவர்களை யழைக்கும் தூதனாகுக. எங்களுடைய கஷ்டத்தை எப்பொழுதும் நிவிர்த்திப்பாயாக. எங்களுக்குச் செல்வத்தைச் சேர்ப்பாயாக. நன்றாக வொளிவீசி எமது புத்திரர்களையும், பேரர் முதலிய வம்சாவளிகளையும் காக்குங் கருத்து மிகுந்த காவலனென வுன்னை மதிக்கொள்வாயாக—(எ-று.)

3. அங்கிநீ பிறந்த வுச்சத் தானத்தும் வணங்குவோமா ;
தங்குகீழ்த் தலத்துமுன்னை வணங்குவோந் தோமஞ்சாற்றி;
இங்குநீ யுதித்தபூமி யேத்துவேன்; வளர்த்தார் நன்கே
பொங்கு நல்லொளியின் மூட்டப்பெற்ற வுன்றனை யவிபின்.

(இ-ள்.) அக்கினியே நீ சூரிய ரூபமாகத் தோன்றிய பரமோன்னதத்தானமாகிய ஆகாசத்திலும் உன்னை வணங்குவோம். அதற்குக்கீழே மின்னல் ரூபமாகத்தோன்றும் அந்தரிட்சத்திலும் உன்னை ஸ்தோத்திர பூர்வமாக வணங்குவோம். இவ்விடத்து நீ யாகாக்கினியாக உதயித்த பூமியையும் துதிப்பேன். நன்றாக மூட்டப்பெற்ற வுன்னைப் புரோடாசாதி அவிப்பொருள்களோடு அத்வர்யுக்கள் நன்றாக வளர்த்தார்கள்—(எ-று.)

4. வணங்குதற் குரியோ, யங்கி, யவியொடும் வணங்க வின்னே
யிணங்கியா மீயுந்தானஞ் சிறந்ததென் றேத்த னன்கே;
அணங்குறு தனப்பதியா மார்ந்தவெச் செல்வத்திற்கும்;
துணங்கற வொழிக்கும் வாக்கைத் தோற்றுவிப்பவனு நீயே

(இ-ள்.) வணங்குதற்குரியவனே! அக்கினியே! நீ தேவர்களை அவிகளோடும் வணங்குவாயாக. யாங்கள்தரும் இவ்வவிக்கொடை ஸ்வாதுதரம் ஸ்வாதுதரமென்று சிறந்து கூறுவாயாக நீ எல்லாச் செல்வத்திற்கும் தனபதியாம். இருளையோட்டும் ஸ்துதிவசனங்களை எம்வாயினின்று தோற்றுவிப்பவன் நீயேயாம்—(எ-று.) துணங்கறல், இருள்.

5. கன்னினுக் கினியோய்,நாளு நாளு முற்பவிக்கு முன்ற
னொன்னுறு முபய செல்வங் குறைவினை யெய்துருவார்;
நன்னு போற்றுனை, யங்கி, நல்லனத் தோனுய்ச் செய்க;
புண்ணியப் புதல்வரோடு பொருந்து செல்வத்தோ னாக்கல்.

(இ-ள்.) காட்சிக்கினியவனே! அக்கினியே! ஒவ்வொருநாளும் அக்கினிஹோத்திரகாலத்தி லுற்பவிக்கும் உன்னுடைய உபயசெல்வங்கள் குறைவை யடைவதில்லை. உன்னை ஸ்தோத்திரஞ்செய்து உன் பக்கலுறு பவனை நல்ல உணவுப்பொருளோடு கூடியவனாகச் செய்வாயாக. நன்னெறி யிலுற்ற புத்திரர்களோடு செல்வத்தையும் பெற்றவனாக அவ் யஜமானனைச் செய்வாயாக—(எ-று.) உபயசெல்வமென்றது தேவர்களுக்கு அவியூட்டும் செல்வமும், மாந்தர்களுக்கு யாகப் பயனை யளிக்குஞ் செல்வமுமாம்.

6. இச்சுடர்த்தொகுதியுள்ளோன், படிநலமியைந்தோன் போற்றின்
மெச்சு தேவரை வணங்கு மேன்மையன் மகோத்தமன்றான்
நச்சுக வெம்மை; அங்கி, யிகழொணு வலியோய், செல்வ
மொய்ச்சவ, வொளியோய், பாவம்பாற்றுவோயொளிர்கநன்கே.

(இ-ள்.) இந்த ஜ்வாலாஸமூஹங்களோடு கூடியவனும், நல்ல பிரக் ஞையுள்ளவனும், தேவரைப் போற்றினாலும் அவியினாலும் வணங்குபவனும், யாக உத்தமனுமான அக்கினி எம்மை விரும்பி எம்முடையவனாகத் தங்கட் டும். அக்கினியே! சத்துருக்கள் திரஸ்காரஞ் செய்யமுடியாத வலிமையோடு கூடியவனே! செல்வ நிறைந்தவனே! ஒளியோடு கூடியவனே! எங்கள் பா பத்தை யற வழிப்பவனே! நன்றாய் எங்களது க்ஷேமத்தைக் கருதிப் பிரகா சிப்பாயாக—(எ-று.)

### வருக்கம் 1.

## 201. (10) மண்டலம். 2 அநுவாகம். 1. சூக்தம். 10.

### 6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: அக்கினி.

1. சுஹோத்திர, னங்கி, தந்தை துணையுமுக்கிய, னிளையின்
மகோத்தமப் பதத்தில் மாந்தர் மூட்டுற நிற்போன், கீர்த்தி
சுகோர்த்தம மாகப் போர்ப்போன், ஸ்ரேய்ந்த பல்வகை ஞானத்
தோன்,
மிகோத்தம வலியுணவோ, னமரன் யாவரும் போற்றுற்றான்.

(இ-ள்.) எல்லாராலு மழைக்கப்படுபவனும், தேவர்களைப் பரிபா லிப்பதில் தந்தை போன்றவனும், முக்கியனும், இளையெனும் உத்தம யாகஸ்த லமாகிய உத்தர வேதியில் மனிதர் தன்னை மூட்ட நிற்பவனும், கீர்த்தியை உடையாகப் போர்த்தவனும், பலவித பிரக்ஞைகளோடு கூடியவனும், சிறந்த வலிமை யுடையவனும், அன்னப் பொருளோடு கூடியவனும், மரண தரும மற்றவனுமான அக்கினி எல்லாராலும் போற்றத் தக்கவனும்—(எ-று.) சு கோத்திரன், நன்றாய் அழைக்கப் படுபவன் என்பது பொருள். ஜோஹூத் ரன் என்று வடமொழி மூலத்திலுள்ளது.

2. சித்திரபாநு, வங்கி, செவிதர லெலாப் பண்ணேடு
மொத்தியானழைப்பதைப், பல்லுணர்வுளோ, னமரன்றானும்;

## மண்டலம் 2. சூக்தம் 10.

இத்தரை யவன்றன் றேரைக் கறுப்புமாச் சிவப்பு மீர்க்கும்;
ஒத்தபல்லிடஞ் சேர்க்கப்பெற் றவைகளைத் துவர்ப்படுப்பான்.

(இ-ள்) சித்திரம் போன்ற பற்பலவித ஒளியை யுடையவனும், பலவித பிரக்ஞைகளோடு கூடியவனும், அமரனுமான அக்கினி, எல்லாப்பண்களோடும் யானழைப்பதைக் கேட்கட்டும். அவனுடைய தேரைக் கறுப்புக் குதிரையும் சிவப்புக் குதிரையுமாக விழுக்கும். யாகக் கிரகத்திலுள்ள பலவிடங்களுக்கும் ரித்விக்குக்களாற்கொண்டுபோகப் பெற்று அவ்விடங்களைச் சிவப்பு நிறப்படுத்துவான்—(எ-று.) துவர், சிவப்புநிறம்.

3\. மல்லார்ந்த சயனக் கட்டை மதித்து நல்லுருவிற் றீயை
வல்லாரும் பிறப்பித்தார்; அவ்வக்கினி விவித ரூபச்
சொல்லார்ந்த செடியி லூற்றான் கருவென; மகிமையோடும்
அல்லார்ந்த விரவுந் தன்னைத் தொட லுறாதறிவின்வாழ்வான்.

(இ-ள்.) (வல்லவர்களாகிய அத்வர்யுக்கள்) நன்றாய் உருப்படுத்தப்பட்ட அக்கினியை முகம் மேலாகக் கிடக்கும் அரணியிலிருந்து கடைந்து பிறப்பித்தார். அவ்வக்கினியும் பலவிதமாயுள்ள ஔஷதிகளிற் கருப்பரூபமாகத் தங்கினான். இருட்டு நிறைந்த இரவும் தன்னைத் தொட (மறைக்க வென்றபடி) முடியாதபடி தனது மகிமையோடும், அறிவோடும் வசிக்கிறான்—(எ-று.) வாழ்வான் காலவழுவமைதி.

4\. எப்புவனத்துந் தங்கி மகிமையி னியைந்திங் கெல்லாத்
துப்பினு மோங்கி வன்மை துதைந்திவண் யாருங் காண
வொப்புற மங்கி தன்னை யுத்தம வவிபி னோடுந்
துப்பொடு நினைக்கா கின்றேன் றூய்மைகொள்மனத்தினோடே.

(இ-ள்.) எல்லாப் புவனங்களிலும் (அல்லது பூதஜாதங்களிலும்) வைச்வாநரரூபமாய்த் தங்கி, மகிமை பொருந்தி எவ்வித ரூபத்தோடும் கூடிய வுணவுப் பொருள்களில் வியாபித்து நின்று, பலம்பொருந்தி, இங்கு யாருங் காணும் வண்ணம் தங்குகின்ற அக்கினியைச், சிறந்த புரோடாசாதி அவியுணவுகளோடும், நெய்யோடும், (பரிசுத்த மனஸ்களுய்) நினைக்கிறேன்—(எ-று.) துப்பு, உணவு நெய் என்னும் இருபொருளிலும் வந்தது. தூய்மை கொள் மனத்தினோடே என்னும் விசேஷணம் வடமொழி மூலத்திலில்லை.

5\. எத்திசையும் பரந்திங் கெதிருறு மவனை நெய்பாற்
போற்றுவேன்; வாதையில்லா மனத்தொடு மதனை யேற்க;
மர்த்தியர் போற்று மங்கி, மாந்தர்கள் விழைவண்ணத்தா
னெத்த காந்தியினிறைந்தோ னொளிமிகுந் நினைத் தொடற்க

(இ-ன்.) எல்லாத் திக்குக்களிலும் பரந்து இங்கு யக்ஞத்தை நோக்கி வரு மிவ்வக்கினியை நெய்யினால் நினைப்பேன். வருத்த மற்ற மனத்தோடு அவன் அதனை யேற்கட்டும். மர்த்தியர்கள் துதிக்கும் அக்கினியும், மனிதர் விரும்பும் நிறத்தோடு கூடியவனும், பூரண தேஜஸோடு கூடியவனுமான

வவன் தனது தேஜஸ் மிகைபட்டு எம்மைத் தொடாதிருக்கட்டும்—(எ-று.) அரட்சஸா மனஸா என்பதற்கு, வாதையில்லா மனத்தோடு மென்னும் குற்றமற்ற ஸ்தோத்திரத்தோடும் என்று பொருளுரைப்பர் ஸாயனர். அற்றேல், இரண்டா மடியை, 'பொத்துவேன்; குற்ற மற்ற புகழொடு மதனை யேற்க;' 'எனமாற்றிப் படிக்க. குற்ற மற்ற ஸ்தோத்திரங்களோடு கூட்டி யளித்த அந்நெய்யை அவ்வக்கினி யேற்றுக் கொள்ளட்டு மென்று பொருளுரைக்க.

6. தேசினுற் பகைவதைத்துத் தெரிகவுன் பங்கை; உன்னை
யாசறு தூதாப் பெற்றே மறைக முன்மனுவைப்போன்றே;
பேசறு செல்வமுற்றேன் பான்பெருங் கூச்சலோடு
மாசறு பலனை யீந்து குறைவறுந் தீ விளிப்பல்.

(இ-ள்.) (அக்கினியே!) உனது தேஜஸினுற் சத்துருக்களை யடக்கி உனது பங்கைத் தெரிந்து கொள்ளுவாயாக. உன்னைத் தூதனுகப் பெற்ற யாங்கள், ஆதிகாலத்து மநுவைப் போல உன்னைப்பற்றிப் பேசுவோமாக. செல்வத்தை யடைந்த யான், பெரியசப்தத்தோடு, குற்ற மற்ற (அல்லது இனிமையான) பலனைத் தந்து பூரண மாயுள்ள வக்கினியை யழைக்கிறேன் —(எ-று.)

வருக்கம் 2.

## 202. (11) மண்டலம். 2. அநுவாகம். 1. சூக்கம். 11.

21 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: 1—20. விராட்ஸ்தானம், 21. த்ருஷ்டுப்; தேவதை: இந்திரன். விராட் ஸ்தானமும் திருஷ்டுப்பின் ஒருவகைப் பேதமானது பற்றி அறுசீர்க்கழி நெடிலேயாம்.

1. இந்திர வெமதழைப்பிற் செவிதரல்; இயையுஞ் செல்வ
நந்துமுன் கொடைக் குரியோர்யாங்களுனன் னுடையோநாடின்;
தந்திட வசுவிரும்பு மிவ்வவி வளர்க்காநின்ற
முந்துறு புனலின் வீங்குஞ்சிந்துவின் முன்னாந்துன்மொய்ம்பே.

(இ-ள்.) இந்திரனே! எமது அழைப்பைக் கேட்பாயாக. செல்வமிருந்த வுனது கொடைக்குப் பாத்திரவான்களாகிய யாங்கள் உன்னுடையவர்களேயாம். வள்ளன்மைக்காகச் செல்வத்தை விரும்பும் இந்த வவியுணவுகள், நதிகளை வளர்க்கும் நீர்ப்பெருக்கைப் போல உனது பலத்தை வளர்க்கின்றன—(எ-று.)

2. ரூர, விந்திர, வலியாற்சூழுற்றுப் பெருத்த பன்னீ
ராருமா றவிழ்த்தாய்; உக்தம் வளர்ந்திட, மரணந் தன்னைச்
சாருறு தென வேமாப்பிற் றழைத்த வத்தாசன் றன்னைக்
கூரவே துண்டு துண்டாய்க் கூறிட்டுக் கிழிக்கின்றாயே.

## மண்டலம் 2 சூக்தம் 11.

(இ-ள்.) சூரனே! இந்திரனே! அஹி யென்னும் விருத்திரனாற் நடை செய்யப் பட்டுத் தம்மளவிற் பெருத்த பலவித தண்ணீர்களும் பெருகி யோடுமாறு அத்தடையைப் பேர்த்தெறிந்தாய். உன்னைத் துதிக்கும் சஸ்திரங்கள் உனது பலத்தை யோங்குவிக்கத், தனக்கு மரணமே நேராதென வெண்ணி யிருந்த அந்தத்தாஸனை (விருத்திரனை யென்றபடி) நீ துண்டு துண்டாகக் கிழிக்கிறாய்—(எ-று.)

3. சூரவிந்திர நீயின்பஞ் சூழுறு முக்தந்தம்மி,
மேலருருத்திரர்கள் போற்றி,யுனக்குப் பூரிப்பை யூட்டச்
சாரு மித்துதிகள், காந்திதழைத்தவை, யாகநோக்கிக்
கூரு முன்றன் யடைந்தே கூறுவ வுனையே நன்கே.

(இ-ள்.) சூரனே! இந்திரனே! நீ ஸந்தோஷிக்கும் உக்தத்திலும் ருத்திர புத்திரர்களாகிய மருத்துக்கள் கூறும் ஸ்தோத்திரங்களிலும், உனக்குக் களிப்பை யூட்டவந்தவித்துதிகள், காந்தியோடு கூடியவைகள், யாகத்தை நோக்கிவரும் உன்னைச் சார்ந்து நன்றாகப் புகழ்கின்றன—(எ-று.) வாயவே விஸ்ரதே ந சுப்ரா என்பதற்கு ஒளிபொருந்திய வவர்கள் வாயுவைச்சேர்வதுபோல வெனப் பொருளுரைப்பர் மேனாட்டாசிரியர்.

4. சோபனம் வாய்ந்த சம்ப முன்கரத்தும்மிற் றேய்த்தச்
சோபனம் வாய்ந்த வுன்றன் வலியினை வளர்ப்போ மெம்மிற்
சோபனம் வாய்ந்து, வேந்தே, போக்கத்தின் வளர்ந்து வெய்ய
தாபமார் கதிரோனோடு தாசியர் சனத்தை வெல்க.

(இ-ள்.) இந்திரனே! பிரபையோடு கூடிய வச்சிராயுதத்தை யுனது கரங்களிவிட்டு, உனது கீர்த்தி மிகுந்த வலிமையை வளர்க்க மெம்மோடு சிறப்பெய்தி வளர்ந்து, சூரியனோடு (அல்லது சூரியனுடைய வுதவிகொண்டு) தாஸ ஜனங்களை வெல்வாயாக—(எ-று.) தாசிய ரெனப் பெண்பாலாகவே மூலத்திலுள்ளது. அசுரக் கூட்டங்களை யென்றபடி சூரன், ஸூர்யன்.

5. சூரனே, குகையிற் றங்கி மறைந்து தோயங்கள் சூழ
வாரு மாயையினிற் கூடமாக வுள்ளொளிந்து நீரைச்
சாருமந்தரம் பெய்யாது தப்ப மாக்கிய வகியை
யேரினுன் வீரியந்தா லிடித்துமே கொன்றாய் மன்னே.

(இ-ள்.) சூரத்தன்மை பொருந்திய விந்திரனே! குகையிற்றங்கிக் கண்ணுக்குத் தோன்றாமல்,நீர் தன்னைச்சூழ மாயாவித்தன்மையினிறைந்து, மறைவாக வத்தண்ணீருக்குள்ளேயே ஒளிந்து, நீர்நிறைந்த அந்தரிட்சம் மழை பெய்யாவண்ணம் அதனை ஸ்தம்பமாகச்செய்த அகியை (விருத்திரனை அல்லது மேகத்தையென்பார் ஸாயணர்.) அழகாகவுனது வீரம்பொருந்திய வச்சிரத்தால் இடித்துக் கொன்றாய்—(எ-று)

6. போற்றுவ மிந்திரா வுன்பழம் பெருஞ்செய்கை தம்மைப்;
போற்றுவ மேறு நீதா னவினமாய்ப் புரிந்த வற்றைப்
போற்றுவ முனது கையி லொளிபொருந்திய சம்பத்தைப்;
போற்றுவ மென்றாழ்க் கேதுவாகு மூன்னரியைத் தானே.

## அஷ்டகம் 2 அத்தியாம் 6.

(இ-ள்.) இந்திரனே! நீபண்டைக்காலத்திற் செய்த மகத்தான செயல்களைத் துதிப்போம். நூதனமாகச்செய்யும் செயல்களையும் புகழ்வோம். உன் கரங்களில் விளங்கும் வச்சிராயுதத்தையும் ஸ்தோத்திரஞ் செய்வோம். சூரியனது வரவை முன்னறிவிக்கும் உன் அரியென்னும் குதிரைகளிரண்டின் வரவினையும் சிலாகித்துப் பேசுவோம்—(எ-று.) மழைக்குப் பின்றோன்றும் சூரியனது வரவையென்பர் ஸாயணர். மேனாட்டாசிரியர் உசந்தம் என்னுஞ் சொற்கு ஒளி பொருந்திய வென்றது ஆவலோடுள்ள வெனப் பொருள் கூறுவர். சேது, கொடி, அறிவிப்பது.

7. இந்திர, விரைவுறுத்து முன்னரி யிரண்டு நெய்மைச்
சிந்துமேகத் தொனியைச் செய்தன; புவிபுரன்மே
முந்துற விசாலமாக விரிந்து பொய்த்தது; மேகந்தா
னந்துற வங்கு மிங்கு மலைவது நிலைத்த தன்றே.

(இ-ள்.) இந்திரனே! துரிதப்படுத்து முனது அரியென்னும் இரண்டு குதிரைகளும் நெய்மைஅல்லது ஸாரபுஷ்டியுள்ளமழைநீரையூற்றும் இடிபோன்ற சப்தத்தைச் செய்தன. பூமியும் மழையை யெதிர்பார்த்துக் கொண்டு பரிபூரணமாக விரிந்திருகின்றது.பர்வதமாகியமேகம்மழைக்குமுன் அங்குமிங்கும் திரிந்தோடுவது,மழை பெய்வதற்காக ஓரிடத்தில் நிலைத்தது —(எ-று,) பர்வதம், மேகம்.

8. ஒப்பின்றிப் பொழிய மேகமொழுகுறு நிலைத்த; தம்மீது
தாய்வயிற் கூச்சலிட்டுச் சலித்தது லைவறவே; தொல்லுஞ்
சேய்மையிற் றொனியெழுப்பித்தெழித்திடுமவர்கள், வேந்தன்
வாய்மையிற் றூண்டச், சாலப் பரப்பினர் வகுளி தன்னை.

(இ-ள்.) ஒப்பில்லாது பெய்வதற்காக மேகமானது ஓரிடத்து நிலைத்தது. அதுவே தாய்மார்களாகிய தண்ணீர்களோடு கூச்சலிட்டுக் கொண்டு அங்குமிங்குமாகவலைந்தது. வெகுதூரம் வரையில் சத்தஞ்செல்லுமாறு ஊப்புகின்ற மருத்துக்களாகிய வவர்கள்,இந்திரனுடைய தூண்டுதலினால் சத்தத்தை வெகுதூரம் பரவச் செய்தார்கள்—(எ-று.) தாய், மேகங்களின் நீர்; பன்மைப் பொருளது.அவர்கள் மருத்துக்கள்என்பார் ஸாயணர். வகுளி, ஒலி.

9. பெருங்கட றனிற்படுத்து மாயையிற் பிறங்கிநின்ற
விருத்திரன் றனையிடித்து வீழ்த்தினன் வேந்தன்; நீரைத்
தருமழைக் காலை வச்சிரத்தினாற் றனிதஞ்செய்த
வரும்பொழு ததனிற் பூமிவானுமே பயந் ததிர்ந்த.

(இ-ள்.) பெரிய ஸமுத்திரமாகிய மேகத்திற் படுத்துள்ள மாயாவியாகிய விருத்திரனை இந்திரன் அடித்துக்கீழ்வீழ்த்தினான்.வ்ருஷனாகிய வவ்விந்திரன் தனது வச்சிரத்தினால் முழக்க மிட்டபோது பூமிவானங்கள் பயந்து நடுங்கின—(எ-று.) விருந்திரன். மெலித்தல் விகாரம் பெற்றது விருத்ரோ மேக: என்றும் பொருள் கூறுவர் ஸாயணர்.

## மண்டலம் 2 சூக்தம் 11.

பெருங்கடலென்றது ஈண்டு அந்தரத்திற் பாவியங்கு மிங்குமாகவோடும் மேகத்தை யென்பார் ஸாயனர்.

10. மானிட னல்லான் றன்னை மனிதருக் கிதத்தை செய்வோன்
முனிடர்ப் படுத்த காலைச் சோமத்தை நிறையப் பாத்தித்
தானவன் மாயை வல்லோன் மாயையை யழித்தபோது,
மேனிலை யொலித்த,திச்சை வருடிப்போன் பிடித்த சம்பம்.

(இ-ள்) மனிதருக்கிதத்தைச் செய்பவனாகிய இந்திரன் மனிதனல்லாதவனாகிய விருத்திரனுக்குத் துன்பமூட்டியபோதும், ஸோமபானத்தைப் பரிபூரணமாகச் செய்து மாயையில் வல்ல தானு வென்னும் தாய்க்குத் தோன்றிய புத்திரனாகிய அவ்விருத்திரனென்னுந் தானவனை வதைத்த போதும், இச்சைகளை வருஷிக்கும் அவ்விந்திரனது வச்சிராயுதம் மிகவும் சப்தித்தது—(எ-று.)

11. சூர, விந்திர, சோமத்தைக் குடிகுடி; களிப்பைத் தோய்த்தே
யாருமித் துளிக ளுன்னை யார்த்துக மதத்தில்; குக்கி
கூிரு விலாப் புடைக்கக் கூடுவ துனை வளர்க்க;
பூரகச் சோம மிஃது திருப்தி யிந்திரற் களிக்கல்.

(இ-ள்.) சூரனே! இந்திரனே! நீ சோமத்தைப் பலதாமும் குடிப்பாயாக. சந்தோஷத்தைத்தரு மித்துளிகள் உன்னை மதத்திலமைக்கட்டும். உன் வயிற்றி னிருபக்கமும் புடைக்குமாறு நீ குடிக்கும் சோமத்துளிகள் உன்னை மதத்தில் விருத்தியடைவிக்கட்டும். உதரத்தைப் பூரிக்கும் இச்சோமம் இந்திரனாகிய வுனக்குத் திருப்தியைத் தரட்டும்—(எ-று.) குக்கி, குட்சி, வயிறு.

12 விப்பிரர் யாங்கள் வேந்தே யுன்னவரானோம்; உன்னைச்
செப்பிய ரிதத்திற் கூடுங் கருமத்தோ டணைவோமாக;
ஒப்பிலுன் புகழ் நினைப்போ முன்றனை விரும்பியாங்கள்
தப்பற வுனது தானந் தாங்குவோ ராக வின்றே.

(இ-ள்.) இந்திரனே! மேதாவிகளாகிய யாங்கள் உனக்குச் சொந்தமானவர்களானோம். பலன் றரும் யாகத்தினிடத்து ஸ்தோத்திர முதலிய கர்மங்களோடு உன்னைக் கூடுவோமாக. உனது உதவியை விரும்புகிற யாங்கள் உனது ஒப்பற்ற கீர்த்தியை நினைக்கிறோம். இப்பொழுதே யாங்கள் உனது தான பாத்திரர்களாக வாகட்டும்—(எ-று.)

13. உதவி யுன்னதனை நாடி யுன்வலிவளர்ப் போம் யாங்க
ளுதவி யுன்னதனால், வேந்தே, யுன்னவரா வோம்: தேவ,
ரதிவிமைவோ டெக்கம்மா வாசிக்கப் பட்டிரத்தின்
வதிவது வீரர்க்குருந் தனத்தினை யெமக் களிக்கல்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 6.

(இ-ள்.) இந்திரனே! உனது பாதுகாப்பை விரும்பி யுனது பலத்தை வளர்ப்பவர்களாகிய யாங்கள் உன்னுடைய வுதவியினால்உனக்குச் சொந்தமானவர்களாவோம். தேவனே! எம்மால் மிகவும் விரும்பப்படுவதும் பலத்தோடு கூடியதும், வீரர்களாகிய புத்திரர்கள் நிறைந்துள்ளதுமான செல்வத்தை யெங்களுக்களிப்பாயாக—(எ-று)

14. இந்திர வில்ல மீகல்; ஈகவெலந் தமக்கு நண்பர்;
நந்துறு மெம்மோ டின்ப நாடுவோர் மருதர் சாத்தை
யந்தி லெந்தமக் களிக்கல்; முன்னுறுஞ் சோம மார்ந்து
மந்த மெய்துறும் வாயுக்க டம்மையு மருவு விக்கல்.

(இ-ள்) இந்திரனே! எங்களுக்கு இல்லத்தை யளிப்பாயாக. எங்களுக்குச் சகாயஞ்செய்யும் நண்பர்களை யளிப்பாயாக.எங்களோடு கூடக்களிக்கும் மருத்துக்கூட்டத்தை யெங்களுக்குத் தருவாயாக. முன்னாற் கொண்டுவந்தளிக்கப்பட்ட ஸோமத்தை நன்றாகக்குடித்து மதத்தை யெய்தும் வாயுவை எம்மாட்டு வரும்படி செய்வாயாக—(எ-று.) 'எம்மோடு கூடிக்களிப்பவர்களும், எமது யாகத்தை நோக்கிவந்து அங்கு முன்னாலமைக்கப்பட்டுள்ள ஸோமத்தைக்குடித்து மதத்தை யடைபவர்களுமான மருத்துக்களது கூட்டத்தையும் எமக்குத் தருவாயாக.' எனப்பொருளுரைப்பது மொன்று. அற்றேல் வாயவ: என்பதற்கு வாயுக்கள் என்றுதா யக்ஷமெனப்பொருள் கொள்ளுக. இச்சூக்தத்தின் 3ம் செய்யுளுரையை நோக்குக. மேனாட்டாசிரியர்,'மருத்துக்கூட்டத்தையும், எம்மோடுகூடக் களிப்போரையும், ஸோமத்தைக்குடிக்கும் வாயுக்களேயும் எமக்களிப்பாயாக.' எனப்பொருள்கூறுவர். வாயுக்கள் என்றது மரியாதைப்பன்மை.

15 எவர்வயி னீகளிப்பா யவர்மது வின்பத் தாழ்க;
தவவலி யெய்தி, யுன்னைத் திருத்திசெய் சோம மார்க;
தவலறப் போரி லெம்மைத் தாங்குவோய், வேந்தே, யுன்னை
நுவலும்பே ரர்க்கங் கொண்டு நூக்கினை யெம்மை விட்மே.

(இ-ள்.) இந்திரனே!எந்த மருத்துக்களிடத்து நீ ஸந்தோஷப்படுவாயோ,அந்த மருத்துக்கள் மதுவைக்குடித்துக் களிப்பை யடையட்டும். ஆத்மபலத்தை யதிகமாகப்பெற்று உன்னைத் திருப்திப்படுத்துகிற ஸோமத்தைக் குடிப்பாயாக.யுத்தத்தில்எங்களை நன்றாகக் காப்பவனே! எங்களுடைய ஸ்தோத்திர பூர்வமான அர்க்கங்களைக்கேட்டு எங்களை விண்ணுலகம் வரையில் உயர்த்தினாய்—(எ-று.)

### வருக்கம் 5.

16 பெரியவ ரவர், சுகத்திற் பிறங்குமுன்றனை யுக்தத்தாற்
பரிசரம் புரிந்தோ ரின்னே; பாலக, தருப்பை தன்னை
விரிவுற வமைத்தோருன்ற னுதவியால், வேந்தே, யில்ல
மருவிய வுணவைப் பெற்று வளர்ந்தனர் சிறக்க மன்னே.

(இ-ள்.) அபாயத்தினின்றுங் காத்துப் பரிபாலிப்பவனே! இந்திரனே! சுகத்தோடு விளங்கும் உன்னைத் தங்களது உக்தங்களால் இப்போதே

## மண்டலம் 2 சூக்தம் 11.

ட. ப்பவர்கள் பெரியவர்களே யாவர். நீ தங்குவதற்கெனத் தருப்பையை விரித்தவர்கள் உன்னுடைய வுதவிகளினால், கிரகத்தோடு கூடிய உணவுப் பொருள்களை யடைந்து சிறந்தோங்கினர்—(எ-று.)

17 சூர, விந்திர, சோமத்தைப் பெருந் துதியுடனே யோங்கு
மேருறு திகத்ருகத்தி லின்படைந் தார்க சோமம்;
சாரு முன்றாடி தங் தந் துளியினை யுதறிப் பூரிப்
பாரவே யரிகளோடுஞ் சுதை குடித்திட நீயெய்தல்.

(இ-ள்.) சூரனே! இந்திரனே! உக்தங்களுஞ் சஸ்திரங்களுங் கூடிய பெரிய துதிகள் நிலத்தோங்கிய, (சோதி, கௌரம், ஆயு வென்னும் முப் பேர் தாங்கிய) திரிகத்ருகமென்னும்(அபிப்லவத்தைச் சேர்ந்த)முதல் மூன்று யாக நாட்களிலும் இன்பத்தை யெய்திச் சோமத்தைக் குடிப்பாயாக. உனது தாடியிற் சிந்தியிருக்கும் அத்துளிகளை யுதறிக்கொண்டு, பிரீதியுற்றவனாய் உனது அரியென்னுங் குதிரைக ளிரண்டோடும் ஸோமத்தைப்பருக யாகத்தை நோக்கிவருவாயாக-(எ-று.)திகத்ருகம்,த்ரிகத்ருகம், என்பதன் தற்பவம்.இது அபிப்லவத்தின் முதன் மூன்று நாட்களாம். அவற்றிற்கு முறையே சோதி, கௌரம்,ஆயு, என்னும் பெயருண்டு. மண். 1 சூக் 32 செய். 3 பார்க்க. ஆண்டு இப்பதத்திற்கு மூன்று ஸோம பாத்திர விசேஷங்களிலுமெனப் பொருளுரைத்துள்ளார் மேனாட்டாசிரியர்.அவரது ஸாமவேதம் இரண்டாம் பதிப்பு 131வது பக்கக் குறிப்புரையையும் நோக்குக.

18 தானுவின் மகன் விருத்திரன்றனைச் சிலம்பி யென்னத்
தானிரு கூறாய்ச் சாரப் பிளந்தவுன் வலியைச், சூர,
வினமில் வகைக் கையேற்க; ஆரியற்காக வெல்லின்
மேனியைத்திறந்தாய்,வேந்தே,தாசனுன்னிடத்தின்வீழ்ந்தான்.

(இ-ள்.) சூரனே! தானுவென்னும் அசுரத் தாயின் புத்திரனாகிய விருத்திரனைச் சிலந்தியைப் பிளப்பதுபோல இரண்டாகப்பிளந்த உன் பலத்தை நீ கையேற்பாயாக. கர்மாநுஷ்டாதாவாகிய ஆரியனுக்கு வெளிச்சந்தருவதற்காக ஜ்யோதியை வெளிப்படுத்தினாய்.தாஸனாகிய விருத்திரன் உன்னுடைய இடப்பக்கத்தில் வீழ்ந்தான்—(எ-று.) ஔர்ணவாபம் என்னும் வடமொழிப் பதத்துக்கு ஊர்ணநாபி: அதாவது நூல நாபியிலுடைய ஒரு கீட விசேஷமென்பார் ஸாயணர். அது சிலம்பியாம்.மேனாட்டாசிரியர் ஊர்ணவாபன் மகன் ஔர்ணவாப னென்னு மசுரனென்பார்.

19 உன்றுணை கொண்டெம் மாந்தர் தம்மையும் வாட்டுந் தாசர்
கன்றிட வடக்கிச் செல்வங் காணுக யாங்கள்; அஃதைத்
துன்றிடு துவட்ட மைந்தன் விசுவ ரூபன்றனைக் கொன்
றின்றடைந் திட்டோஞ்சாரத்திரிதன்கேழைமையையெண்ணி.

(இ-ள்.) உனது துணையைக்கொண்டு எல்லாச் சனங்களையும் இம்சிக்கும் தாசர்களை யடக்கிச் செல்வத்தை யாங்கள் பெறுவேமாக. திரிதன் என்னும் மஹரிஷியினது தோழமையை யடைய வெண்ணித் துவட்டாவின்

புத்திரனாகிய விசுவரூபனென்னும் மூன்றுதலை யசுரனைக்கொன்று அச் செல்வத்தை யின்று பெற்றோம்—(எ-று.) திரிதன் மண். 1 சூக். 52 செய். 5 பார்க்க.

20 சோமத்தை யூட்டு மந்தத் திரிதனின் கொடை வளர்க்க
வீமத்தை யடைவித்தா னர்ப்புத னெனுமவனை; யென்றாழ்
நாமத்தி னேமிதன்னாற் பிளந்தனன் வலனை, வேந்தன்
சேமத்தி னங்கிராக்கள் சிறப்புறத் துணையா நிற்க.

(இ-ள்.) ஸோமத்தை யூட்டுகின்ற அந்தத் திரிதனென்னும் ரிஷியினது தானத்தை விருத்தி செய்வதற்காக அர்ப்புதன் என்னும் அசுரனைக்கொன்றான். அங்கிரா வம்சத்து ரிஷிகள் உதவி செய்தபோது, இந்திரன், சூரியனென்னுஞ் சக்கரத்தால் (அல்லது ஸூரியன்போற் சுற்றுகிற சக்கரத்தா லென்பதும் ஒன்று.) வலனென்னும் அசுரனைப் பிளந்தனன்—(எ-று.) அர்ப்புதன் என்பதற்கு மேகமென்று ஒரு பொருளுங் கூறுவர் ஸாயணர். அநுஸ்வாரத்திற்குப் பதிலாக ரகாரம் வருவது வேதமரபெனக் கூறி, அர்புஅம்புவெனமாற்றி அவ்வம்பு அல்லது நீரை முற்றிலுந் தருவது மேகமென்பார் அவர். வலன் விருத்திரனது தம்பி. மண். 1 சூக், 11 செய். 5 பார்க்க. முன்பு சூரியனுக்கு இரண்டு சக்கர மிருந்ததாகவும் ஒன்றை இந்திரன் பிடுங்கி யெறிந்து அசுரர்களைக் கொன்றதாகவும் ஒரு கதையுண்டு. அர்ப்புதனது கதையை மண். 1 சூக். 51 செய். 6ற் பார்க்க.

21 இன்றுனைத் துதிப்போனுக்குன்மகோனியாமவள்காணிக்கை
நன்றுறக் கறக்கல்,வேந்தே; தட்சிணை போற்று வோர்க்குத்
துன்று வித்திடல்; பகன்று னெம்பலன் குறையா தீகல்;
மன்றினில்,வீர ரோடு பெருந்துதி யாம் வழங்கல்.

(இ-ள்.) இந்திரனே! இன்று உன்னைத் துதிப்பவனுக்கு உனது (மகோனி) செல்வவதியாகிய அப்பசு தட்சிணையைச்சிரேஷ்டம்பெறக் கறந்தளிக்கட்டும். ஸ்தோத்திரஞ்செய்பவர்களுக்கு அத்தட்சிணையை நீ யளிப்பாயாக. பகன் எமது பலனைக் குறைத்துவிடாம லளிக்கட்டும். யாக சபையில் நல்ல வீரரோடு கூடி யாங்கள் உனக்குப் பெரிய ஸ்தோத்திரங்களைக் கூறுவோமாக—(எ-று,) பகன், துவாதச ஆதித்தியரில் ஒருவன்.

வருக்கம் 6.

## 203. (12) மண்டலம். 2. அநுவாகம். 2 சூக்தம். 1.

15 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச் சந்தம்: திருஷ்டுப்; தேவதை: இந்திரன்.

இச்சூக்தத்தைப்பற்றிய கதையைச் சௌனகர்காலமும் காத்தியாயனர் காலமும் என்னும் உபந்யாஸத்தின் பக்கம் 5ற் பார்க்க. அங்குகூறப் பட்டுள்ள ஸஜனாஸ இந்த்ர: என்னும் சூக்தம் இதுவே. இதற்கு இந்தி

ரஸ்ய இந்திரியம் என்றும் பெயருண்டு. 'ரிதத்தின் முடிவில் விராட்ஸ்தானமாகவுள்ள அவ்வொருவனே யிந்திரன் அவனைச்செட்க.' என்பது காத்தியாயனரது அநுக்கிரமணிகை. அபிப்லவத்தில் மூன்றுநாள் இச்சூக்தம் உபயோகிக்கப்பெறும்.

1. பிறந்தது முதன்மைபெற்று மனத்தினிற் சிறந்த தேவாய்ச்
சிறந்ததன் கன்மந் தன்னாற் றேவரைக் காப்போனாகித்
திறந் தெரி வலியாற் சேனைப் பலத்தினாற் பூமி வான
மதிர்ந்துறத் துளுக்கினைத்தோன் மனிதர்காளவனே வேந்தன்.

(இ-ள்.) மனிதர்களே! பிறந்தவுடனேயே முதன்மைத் தன்மையையடைந்து, தன்னுள்ளத்தில் சிறப்புப்பெற்றோங்கி யொளிபொருந்திய தேவனாய்த், தனது கர்மங்களினால் இதர தேவர்களைக் காப்பாற்றுவோனாய்த், தனது வலிமையினாலும் சேனைப் பலத்தினாலும் பூமி வானங்களை நடுங்குவிப்பவனெவன், அவனே இந்திரனாம்—(எ-று.) மனிதர்களே யென்று கூறினும் ஜனங்களே யென்பதுதான் மூலத்திலுள்ளது. அதற்கு அசுர ஜனங்களே! யென்று பொருளுரைப்பர் ஸாயணர். ஏன்? அசுரர்கள் கிருத்ஸமதனை யிந்திரனெனப் பற்றிக்கொண்ட கதையை யொட்டி யென்க. துஷ்ட மனிதர்களே! என்னலுந் தகும். பூமி வான மதிர்ந்ததை முன்புங் கூறினார். மண். 1 சூக். 80 செய். 11 பார்க்க. அவனே இந்திரனென்றதனால் நானல்லவென்பதைச் சுட்டியபடி.

2. சலித்திடு பூமி யாடா துறுதியா வுறத் தகைத்தோன்,
சலித்திடு மலை நிலைத்துச் சருவுவான் றயக்கினோன், விண்
ணிலைத்துறப் புரிந்தோ, னந்தரிட்சத்தை விரிவினோங்கி-
மலைப்புறப் பரவுவித்தோன் மனிதர்கா, ளவனே வேந்தன்.

(இ-ள்.) மனிதர்களே! சலித்துக்கொண்டிருந்த பூமி அசையாமலுறுதியாக நிற்கும்படி செய்தவனும், அங்கு மிங்குமாக ஆடிக்கொண்டிருந்த மலைகளை ஆடாவண்ணம் நிலைப்பித்தவனும், விண்ணை ஒரு நிலைப்படுத்தியவனும் உத்தம விரிவோடு கூடிய அந்தரிட்சத்தை யளந்து பரவுவித்தவனுமாகிய வவனே யிந்திரன் (யானல்ல)—(எ-று.) மலைக்குச் சிறகுகளிருந்தனவென்றும் அவை இடம்விட்டுப்பெயர்ந்துகொண்டிருந்தனவென்றும், இந்திரன் அவற்றின் சிறகுகளை வெட்டி யொரே யிடத்திற் கிடக்கும்படி செய்தனனென்றும் பின்னோரெழுதிய புராண கதையையங்கீகரித்து ஸாயணர் உரையெழுதியுள்ளார். மூலத்தில் அவ்வளவுக்கும் இடமில்லை. இம்மலைகள் எரிமலைகளா யிருந்திருக்கலாம், அவை முழங்குவதும் எரிகின்றகுழம்புகளை வீசுவதும், அங்கு பூமி கம்பிப்பதும்மலைகள்கோபிப்பதுபோல வுருவகப்படுத்தியுள்ளார். அவை சின்னாட்கெல்லாம் ஆறி யிருத்தலுங் கூடும். அது இந்திரனால் விளைந்த காரியமெனக்கவி விதந்து கூறியுள்ளார். ப்ரகுபிதாந் பர்வதாந் என்பதற்கு agitated mountains என்று மேனாட்டாசிரியர் மொழிபெயர்த்துள்ள வாய்மையை நோக்குக.

3. அகிபினைக் கொன்றே, யேழு நதி யவிழ்த்தவன், வலன்றன்
குகை திறந் தாக்கடம்மைத் தெரிந்தவ, னிரண்டு கற்க

## அஷ்டகம் 2 அத்தியாயம் 6.

ளிக்கமேரி பிறப்பித்தோன், போராடு மவ்விடத்துச் சூறை
வகைமிகப் பெறவதைப்போன், மனிதர்கா,ளவனேவேந்தன்.

(இ-ள்.) மனிதர்களே! அகியாகிய விருத்திரனை யல்லது மேகத்தை அழித்தவனும், ஸப்த நதிகளையும் ஓடவிட்டவனும், வலனென்று மசுரன டத்துவைத்த பசுக்களை யவனது குகையைத் திறந்து வெளியோட விட்டவனும், இரண்டு மேகங்களாகிய கற்களுக்கிடையே மின்னலாக வக்கினியைத் தோற்றுவித்தவனும், யுத்தகளத்துச் சூறைகளைப் பெறுமாறு சத்துருக்களைக் கொல்லுபவனுமான அவனே யிந்திரன்—(எ-று.) நதியேழு மண். 1 சூக். 32 செய். 12 பார்க்க. வலன். மண். 2 சூக். 11 செய். 20 பார்க்க.

4. அழியுமிப் புவனமுற்று நிலைபெற வமைத்தோன், றாசர்
குழுவினைக் கிழக்கே யார்ந்தகுகையினிற்றகைத்தோ, னட்பிற்
பழகுறுப் பகைவர் நின்று மவர்வளப் பொருளிலக்காய்
வழுவி லாவியரிற்கொண்டோன், மனிதர்கா,ளவனேவேந்தன்.

(இ-ள்.) மனிதர்களே! நசுவரமாகியஇப்புவனங்க ளெல்லாவற்றையும் நிலைபெற நிறுத்தியவனும், தாஸர்களுடைய கூட்டத்தைக் கீழ்ப்பக்கத்தில் (பாதலத்தில்) அமைந்துள்ள (நரகமாகிய) குகையிற்றள்ளி விட்டவனும், நாய்கொண்டு வேட்டைகளைப் பிடிக்கும் வேடர்களைப் போலச் சத்துருக்களது வளப்பம் பொருந்திய செல்வத்தை லட்சியம் வைத்துக் கைக்கொள்பவனுமாகிய வவனே யிந்திரன்—(எ-று.) ஆவியர், வேடர் வடமொழியில் ச்வக்நீ யென்றுளது. ச்வாபிர் ம்ருகான் ஹந்தி நாயை யேவிவிட்டு மிருகங்களைக் கொல்பவன், வியாத னென்பார் ஸாயணர். இவ்விருக்குக்கு மேனாட்டாசிரியர் வேறு வகையாகப் பொருள் கூறுவர். அது வருமாறு: 'இப்புவனங்களை நடுங்கச் செய்தவனும், கீழ்ப்படுத்தப்பட்ட அசுரர்களது கூட்டத்தைத் தூரவேட்டியவனும், தான் ஜயித்த பந்தயப் பொருளை யொன்றுசேர்த்த குஞ்சுதனைப் போலப் பகைவனது செல்வங்களைப் பற்றிக்கொண்டவனுமான வவனே யிந்திரன்.' என்பதாம். ச்வக்நீவ க்ருத்நுர் விஜஆமிநாநா மர்த்தஸ்யதே வீ ஜாயஞ்த்யாயு: என்பது மண். 1 சூக். 92 செய். 10ல் வந்துளது பார்க்க. விஜ என்னும் பதம் அடுத்த செய்யுளிலும் வருகிறது.

5. கோரனு மவனே யன்னுன் குலவுவ தியாண்டை யென்று
நேருற வினவா நின்றார்; உண்மையை நேடி னன்னுன்
யாருமே யிலனென்பாரால்; பகைவளம் வருத்துவோனுச்
சாருவா னன்பிற் சாரீர்; மனிதர்கா, ளவனே வேந்தன்.

(இ-ள்.) சத்துருக்களை வதைப்பவனாகிய அவ்விந்திரனைப் பற்றி யவனெங்கே யென்று அறியாத சனங்கள் கேட்பார்கள். உண்மையாக வவனையில்லை யென்று சொல்லுவார்கள். அவன் பகைவளர வருத்துவோனுச் சாருவான் அவனிடத்துச் சிரத்தையோடு சேர்வீர்களாக. மனிதர்களே! அவனே இந்திரன்—(எ-று.) உண்மையில் அவனில்லை யென்று சென்னவன் பார்க்கவ குலத்து வந்த நேமன் என்னும் ரிஷியாம். மண். 8 சூக். 89 செய். 3 பார்க்க. ஈண்டு விஜ: இவ என்பதற்கு ஸாயணர் உத்வேஜக வவஸ்

## மண்டலம் 2 சூக்தம் 12.

அன்புறுத்து பவனாக என்று உரை கூறியுள்ளார். மேனாட்டாசிரியர் வேடன் கையிலகப்பட்ட பட்சியைப் போலவெனப் பொருள் கூறுவர். இதரமே னாட்டுப் புலவர்கள் சூதாடிகளின் பந்தயத்தைப்போலவென்பர். மண். 1 சூக். 92 செய். 10ற் காண்க. இவ்விருக்கு நன்கு விளங்கவில்லை.

வருக்கம். 7

6. தரித்திரன் பொருள் யாசிப்போன்மறையினைச்சாற்றிக்கீர்த்தி
பொருக்குறவோனிவர்கள்செல்வம்பொருந்துறத்தொழின் மு
யக்கி,
யுருத்திகழ் கன்னத்தோங்கிச், சுதை பிழி கல்லுளானை
வருத்தமேவாது காப்போன், மனிதர்கா, ளவனே வேந்தன்.

(இ-ள்.) மனிதர்களே! தரித்திரனையும், பொருள் விரும்புவோனை யும், மந்திரங்களைச் சொல்லித் தன் கீர்த்தியைப் புகழ்வோனையும், செல்வம் பெறுமாறு தொழிற்கண் முயல்வித்து, நல்ல கன்னங்களோடு கூடி, ஸோமம் பிழியுங் கற்களைப் பூட்டுபவனைக் காத்து நிற்பவன் எவனோ வவனே இந்திரனும்—(எ-று.)

7, எவன தாணையிற் றுரகம் பசுவொடு கிராம மோங்கு
மெவன தாணையினைத்தேரு மியைந்திடு, மென்றாழ் வைக
லெவனிவை யிரண்டுந் தோற்றுவித்தனன், மேகநின்று
மெவன் மழைதன்னைப் பெய்விப்போன், மனிதர்கா, ளவனே
வேந்தன்.

(இ-ள்.) மனிதர்களே! எவனுடைய ஆக்ஞையினால் குதிரைகளும், பசுக்களும், ஜனபதங்களும் நிலவுகின்றனவோ, எவனுடைய சாஸனங்களி னால் எல்லாத்தேர்களு முருவகூடோடுகின்றனவோ, எவன் சூரியன், உஷஸ் (விடியலென்றபடி) இரண்டையும் உதிப்பிக்கிறானோ, எவன் (மேகத்தி னின்றும்) மழை நீரைப் பெய்விக்கும்நேதாவோ வவனே இந்திரனும்—(எ-று.) மேக நின்றும் என்னும் பதம் வடமொழி மூலத்திலில்லை.

8. எவனைக் கூக்குரலிற் சேனை யிரண்டுமே கூடிக் கூவுங்,
மெவனை வல்லவரு மற்ப வலியருமாம் பகைவர்
தவவுதவிடுக வென்று சாற்றியே யழைப்பா, ரோர்தேர்
குவவியோர் தனிக்குறிப்பார், மனிதர்கா, ளவனே வேந்தன்.

(இ-ள்.) மனிதர்களே! எவனைப் பெரிய சத்தத்தோடு தேவாசுர சேனைகளிரண்டுங் கூடிக்கொண்டு கூவுமோ, எவனைப் பலம் பொருந்திய பகைவர்களும், பலமற்ற சத்துருக்களுமாகிய விருவர்களு மழைப்பார்களோ, எவனை யொரு தேரிற் கூடியவீரன்சாரதியென்னுமிருவரும் தனித்தனியாகத் தங்கள்தங்களது ஆத்மரட்சணைத்துக்காகக் கூவியிரப்பார்களோ, வவனே யிந்திரன்—(எ-று.)

## அஷ்டகம் 2 அத்தியாம் 6.

9 எவன்றுணை யின்றி மாந்தர் வெற்றியை யெய்த லின்று,
மெவனது காப்பை யுன்னிப் பொருபவ ரழையா நிற்ப,
ரெவனுடை யுருநாட்டாக வெச்சகங்களு மியைந்த,
வெவன்றிடப்பொருளசைப்பான்மனிதர்கா,ளவனே வேந்தன்.

(இ-ள்.) மனிதர்களே! எவனுடைய உதவியில்லாமல் சனங்கள் வெற்றியை யடைவதில்லையோ, எவனுடைய பாதுகாப்புக்காக யுத்தஞ் செய்பவர்கள் கூப்பிடுவார்களோ, எவனுடைய பிரதிநிதியாக எல்லாச்சகங்களும் பொருந்தியுள்ளனவோ, எவன் அசையாதுள்ள மலையாதிகளையும் அசைப்பானோ அவனே யிந்திரன்—(எ-று.)

10 பாவிகள் பலரை யன்னார் தம் மபாயந் தேராமு
னுவியை யழித்தோன் வச்சிரத்தினை யோச்சிக், கோப
மேவுறத் தனைப்பகைத்தோர் தம்மைமன்னனைசெய்யாதோன்
வீவுறத் தாசர்க்கொல்வோன், மனிதர்கா, ளவனே வேந்தன்.

(இ-ள்.) மனிதர்களே! பல பாவிகளையும் அவர்களது அபாயங்களை யவர்களறிவதற்கு முன்பு வச்சிராயுதத்தை யெறிந்து கொல்பவனும், தனக்குக் கோப மூளுமாறு தன்னைப் பகைத்தவர்களை மன்னிக்காதவனும், தஸ்யுக்களைக் கொல்லுபவனுமான வவனே யிந்திரன்— எ-று.) மன்னனை, மன்னன, என்னும் தெலுங்குச் சொல்லின் சிதைவு.

### வருக்கம் 8.

11 மலைகளு ளொளிந்து வாழ்ந்த சம்பரன்றனை நான்கு
மலைதரு பத்தாங் கூதிர் புலப்பட வெளிப்படுத்தோன்,
வலியினைத் தோற்றி நின்ற வகியினைக் கிடக்கை யாக
நிலவு தானவனைக்கொன்றோன்,மனிதர்கா, ளவனேவேந்தன்.

(இ-ள்.) மனிதர்களே! பர்வதங்களுக் கிடையில் இந்திர பயத்தினால் ஒளிந்து வாழ்ந்துகொண்டிருந்த சம்பரனை நாற்பதாவது வருஷத்தில் (கூதிர் ஈண்டு இலக்கணையால் ஸம்வத்ஸரத்தைக் குறித்து நின்றது.) வெளிப்படுத்தினவனும், தனது பலத்தைக் காட்டிக் கொண்டிருந்த விருத்திரனையும், படுத்துக் கொண்டிருந்த தானவனாகிய சம்பரனையும் கொன்றவனுமான வவனே இந்திரனும்-(எ-று.) அகியையும், தானவனையும் என்றது படுத்துக் கொண்டிருந்த தானவனாகிய வகியினை யென்று மாட்டேற்றிக் கொள்வார் மேனாட்டாசிரியர்.

12 எழுகதி ருற்றோன், காளை, வலியுளோ, னேழு சிந்து
வொழுகிட விழ்த்து விட்டோன், வச்சிரமுறு காத்தோன்,
பழகுற வானிலேறும் பான்மையி னுரௌகினன்று
னழுகுறக் கொன்றோன்யாவன்,மனிதர்கா, ளவனேவேந்தன்

(இ-ள்.) மனிதர்களே! எழு கதிர்களோடு கூடியவனும், காளையும், பலமுள்ளவனும், ஏழு நதிகளு மோடுமாறு திறந்துவிட்டவனும், வச்சிரபா

## மண்டலம் 2 சூக்தம் 12.

குவும், விண்ணிலேறிக்கொண்டிருந்த ரௌஹிணனென்னும் அசுரன் கெடு மாறு வதைத்தவனும் யாவனோ வவனே யிந்திரன்—(எ-று.) எழுகதிர் என்றது எழு தீவுகளிலும் எழு மேகங்களை யுண்டுபண்ணி மழை பெய்விக்கும் எழு பர்ஜன்ய ரச்மிகளென்பார் ஸாயணர். தைத்திரீய ஆரண்யகத்தில் முதற்ப்ரபாடகத்தில் வராஹவ: ஸ்வதபஸோ வித்யுன்மஹஸோ தூபய:ச்வா பயோ க்ராஹமேதாச் சேத்யேதேயேசமேசிமிவிஷ்வீஷு: பர்ஜன்யா: ஸ்ப்தப் ருதிவீ மபிவர்ஷந்தி வ்ருஷ்டிபி: என்றுள்ளது. ரௌஹிணன். 1-103-2 பார்க்க. எழுகதிர்இந்திரனது எழுருவத்தைத் தோற்றும் எழுஒளிபொருந்தியகதிர்களைக் குறிக்குமென்பார் லுட்விக் என்பவர். எழுவகைப்பட்ட கடிவாளங்கள் என்பார் மேனாட்டாசிரியர்.

13 எவன் முனர் வானம் பூமி யிவைகளும் வணங்கா நிற்கு
மெவன் வலிக்காற்றா தெல்லா மலைகளு நடுங்கிச் சாரு,
மெவன் சுதைக்குடிய னென்று தெரிந்தவன், குலிசவாகு,
வெவன் குலிசக் கரத்தோன், மனிதர்காள், அவனே வேந்தன்.

(இ-ள்.) மனிதர்களே எவனுக்குமுன்பு வானம் பூமியிரண்டுங்கூட வணங்குமோ, எவனுடைய பலத்துக்காற்றாது மலைகள் நடுங்கிக்கிடக்குமோ எவன் ஸோமபானி யென்று எல்லாராலு மறியப்பெற்றவனோ, எவனது கை வச்சிரம் போன்றதோ, எவனதுகரத்தில் வச்சிராயுதமிருக்கிறதோ, அவனே இந்திரனும்—(எ-று.)

14 எவன் சுதை பிழிகுவோனையெவன்சமைத்திடுவோன்றன்னை
யெவன்புகழுரைப்போன்றன்னையெவன்றுதிப்போனைக்காப்
போ,
னெவன்றனைப் பிரமஞ், சோமத் தோடிவ ணோங்கா நிற்கு
மவிநிறை கொடை வளர்க்கு, மனிதர்காள், அவனே வேந்தன்.

(இ-ள்.) மனிதர்களே! ஸோமாபிஷவஞ் செய்பவனையும், அவியுணவைச் சமைத்துவைப்பவனையும்புகழுக்குரிய சஸ்திரங்களைக் கூறுபவனையும் ஸ்தோத்திரஞ் செய்பவனையுங் காப்பவனெவனோ, எவனைப்பிரஹ்மமும்,(மந்திரங்களுமென்றபடி.) ஸோமமும், எங்களது அவிச்செல்வக்கொடைகளும் வளர்க்கின்றனவோ அவனே இந்திரனும்—(எ-று.)

15. சுதைபிழிந் திடுவோனுக்குத் தூர்த்தர னாகி வன்மை
யதிவிரை வதனிற் கூட்டு முண்மைய னுவை கண்டாய்;
வதியும்யாம், வேந்தே யுன்ற னன்பராய் நின்றெந் நாளுந்
துதையுறு வீரரோடுன் புகழினை யவையிற் சொல்வோம்.

(இ-ள்.) இந்திரனே! ஸோமாபிஷவஞ் செய்பவனுக்கும், புரோடாசஞ் சமைப்பவனுக்கும், தாங்கமுடியாதவனாய் (தூர்த்தன் உக்கிரன் என்றபடி) அவர்களுக்கு வேண்டிய பலத்தையுதவு முண்மை வாய்ந்தவன் நீ.யக்ஞ ஸதவில் உள்ளயாம் உனது நண்பராகப் பொருந்தி, எமது புத்திர பௌத்திரர்களோடு உனது புகழைக் கூறுவோமாக—(எ-று.)

## அஷ்டகம் 2 அத்தியாயம் 6.

### வருக்கம் 9.

## 204. (13) மண்டலம். 2. அநுவாகம். 2. சூக்தம். 2.

### 13 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: 1-12, ஜகதி, 13 திருஷ்டுப்; தேவதை: இந்திரன்.

(வேறு.)

1. இருதுவதன் றாயாகு மதிலிருந்து
பிறந்தவுட னிறையிற் றன்னைப்
பெரிதும் வளர்த்திடு நீர்க்குட் சென்றதுவாற்;
புட்டியொடு பேசுஞ் சாரந்
திரிதரவே யபிடவத்துக் கானதொரு
தன்மையினிற் றிகழ்ந் தோங்கிற்று;
மருவுமதன் கொடிப்பாலே முக்கியமாம்,
போற்றுதற்கும் வாய்ந்த தாமே.

(இ-ள்.) இருது (ஈண்டு மழைக்காலத்தைக் குறித்து நின்றது) அதன் தாயாம். அவ்விருதுவிலிருந்து தோன்றியவுடன் தன்னை வளர்க்கும் நீருக்குள் விரைவாகச் சென்றது புஷ்டியோடுஸாரம் செடி முழுவதும் பரவவே அச்சோமம் பால் நிறைந்து அபிஷவஞ்செய்யத்தக்கவாறு வளர்ந்து நின்றது. அதன் கொடியில் அல்லது நடுத்தண்டிலிருந்து வரும் பால்போன்ற ஸாரமே ஸோமம் பிழிவதற்கு முக்கியமானதும், சஸ்திரங்களாற் போற்றத்தக்கதுமாம்—(எ-று.) அதன், ஸோமத்தின். அபிஷவஞ் செய்தல், கல்லில் நசுக்கிப் பிழிதல்.

2. உடனெழுது மிவையெங்கு நீரதனைச்
சுமந்ததனை யுணவாக் கொள்ளுங்
கடலினுக்குட் சேர்ந்திடவே யொழுகுவ;வோர்
சமவழியே கருதும் பள்ளத்
திடாறவே பின்றொடர்ந்திங் கோடுவதற்
கமைந்ததுவா லெவ்வாற் றிற்கும்;
புடவியினி லிவற்றையெலாங் கூட்டியநீ
முக்கியமாய்ப் புகழத் தக்காய்.

(இ-ள்.) சேர்ந்து செல்லுகின்ற இந்நீரோட்டங்கள் தண்ணீரைச் சுமந்துகொண்டும், அத்தண்ணீரை யுண்டு பெருக்கிற ஸமுத்திரத்தில் அதனைச் சேர்த்துக்கொண்டு மொழுகுவ. எல்லா நீரோட்டங்களுக்கும் பள்ளத்தை நோக்கி யோடுவதற்காக வேற்பட்ட வழி ஒன்றேயாம்(அல்லது ஒன்று போன்றதேயாம்,) இந்திரனே! இவ்வகை யாறுகளுக்கு அவ்வவற்றின் செ-

## மண்டலம் 2. சூக்தம் 13.

நிவை யேற்படுத்திய நீயே முதலிற் றுதிக்கப்படத்தக்கவனும்—(எ-று.) புடவியின் என்னுஞ் சொல் எதுகை நோக்கிச் சேர்த்ததென்க.

3. கொடுப்பதனை போரொருவன் முன்னெடுத்து
மொழிந்திடுவான்; கூறு செய்து
வடுப்பெற்ற வுருவதனைக் கருமமதி
லொருவன்பல் லிடத்தும் வைப்பான்;
அடுத்தொருவ னெவ்விடத்து மிமைபிழையைத்
திருத்துவனு ளார்தன்ட த்தின்;
தொடுத்ததொழி லிவற்றையெலாங் கூட்டியநீ
முக்கியமாய்த் துதிக்கத் தக்காய்.

(இ-ள்.) யாககர்த்தா தேவர்களுக்காக வெவ்வெவ் வவிப்பொருள்களைத் தருவானோ வவற்றையெல்லாம் ஹோதா முன்னெடுத்துக் கூறுவான். யாகப்பசுவைச் சேதித்து எடுத்து வைக்கும் உறுப்புக்களை ஒரு அத்வர்யு யக்ஞத்திற் பலவிடங்களிலும் தகுதிநோக்கி வைப்பதற்காக எங்குஞ் செல்வான். வேறொருவன் (பிரஹ்மா) ஸ்தோத்திரங்களிலும், கர்மங்களிலும் நேருந் தவறுகளைப் பிராயச் சித்தத்தோடு திருத்துவான். (இந்திரனே!) இவற்றை யெல்லாம் ஏற்படுத்திய நீ முதலிற் றுதிக்கப்படத் தக்கவன்—(எ-று) மேனாட்டாசிரியர் சற்றேறக்குறைய இவ்வகையே மொழிபெயர்ப்பா ராயினும் அவருரை இவ்வளவு தெள்ளிதின் விளக்குதலில்லை.

4. வளமதனைச் சனங்கட்குப் பங்கிட்டுக்
கொண்டுறைவர் வரும் விருந்துக்
குளநிறையப் பல்லோருஞ் சுமக்கரிய
பெருந்தனத்தை யுதவுவார்போல்;
உளமடங்கான் பாலகர்த்த முணவதனைப்
பற்களினு லுடைத்துத் தின்பான்;
கிளருறவே யிவற்றையெலாங் கூட்டியநீ
முக்கியமாய்க் கிளக்கத் தக்காய்.

(இ-ள்.) (இந்திரனே!) தமது வீட்டுக்குவரும் அதிதிக்குப் பலரும் சுமக்கமுடியாத பெரிய செல்வத்தைப் பங்கிட்டளிப்பவர்களைப் போலப் பிரஜைகளுக்கு வளப்ப நிறைந்த உணவுப் பொருள்களைத் தலைக் கிவ்வளவென்று பங்கிட்டுக் கொடுத்துக் கொண்டு தமது வீட்டிற் றங்குவர். அங்கே யக்கினியும் உள்ள மடங்காத வாவலோடு யஜமானர்கள் தரும் போஜன பதார்த்தங்களைத் தனது ஜ்வாலைகளாகிய பற்களினாற் கடித்துத் தின்பான். இவற்றை யெல்லாம் ஏற்படுத்திய நீமுதலிற் றுதிக்கப் படத்தக்கவன்—(எ-று) மூன்றாவ தடிக்கு ஸாயணர் வேறுவகைப் பொருளுங் கூறுவர். அதாவது "அவிர்வர், அணைசோறுதல் முதலிய கர்மங்களைச் செய்யும் உலகம், பிதுஃ பரிபாலிக்கும் ஆகாயத்திலிருந்து வரும், போஜநம் உதகம் அதன் கார்யமாகிய ஒஷதிகளை, தம்ஷ்ட்ரா:பற்களால், அத்தி பட்சிக்கிறது எனபர்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 6.

5. பின்னருநீ பிருவியினைத் திவமிமித்த
நற்றேற்றம் பெற வமைத்தாய்;
நன்னதிகள் செனுபார்ககத் தினையகியைக்
கொன்றுமிக நலப்படுத்தாய்;
யன்ன கடவுளனுனையு மறக்கொடுமா
வளர்ப்பதெனத் தோமந தன்னு
னன்னயமா யுறவளர்த்தார் தேவர்களு
மாதலினீ நவிலத் தக்காய்.

(இ-ள்.) (இந்திரனே!) மேலும் நீ பூமியை விண்ணின் பொருட்டுப் (சூரியனின் பொருட்டென்பார் ஸாயணர்.) பார்ப்பதற் கழகாக வமைத்தாய். அஹியாகிய விருத்திரனை (யல்லது மேகத்தை) க்கொன்று நதிகள் செல்லும் மார்க்கத்தைச் செவ்வைப்படுத்தினும். அத்தகைய கடவுளாகிய வுன்னைத் தேவர்கள் தண்ணீரைக்கொண்டு குதிரையை வளர்ப்பதுபோல் ஸ்தோமங்களால் விருத்தி யடைவித்தார்கள். (ஆதலால்) நீ ஸ்தோத்திரஞ் செய்யப்படத் தக்கவன்—(எ-று.)

வருக்கம். 10.

6. உணவினுட னூக்கமுநீ யளிக்கின்றாய்;
ஈரமொடு முறையுங் காண்டத்
துணவுதவுங் காய்ந்தமணி மதுரரசம்
வாய்ந்ததனை யுடன்கறப்பாய்;
பணிகர மணைவிப்பா யுனைப்போற்றி
வணக்கமொடு பணிவோனுக்கும்;
வணவிறைவ னீயுலக மெவற்றினுக்கு
மாதலினீ வழுத்தத் தக்காய்.

(இ-ள்.) (இந்திரனே!) நீ எங்களுக்கு உணவையும் ஒக்கத்தையுமளிக்கிறாய். ஈரத்தோடுள்ள பயிர்த்தண்டில் மாதுரியமான ரஸத்தோடு கூடியதும் காய்ந்ததுமான தானியமணியைக் கறக்குந் திறமையுள்ளவன் நீ. உன்னை வணங்கிப் பணிவோனுக்கு தனக்குவையைச் சேர்ப்பாய். எல்லா வுலகத்துக்கும் ஈசன் நீ. ஆதலினால் நீஸ்தோத்திரஞ் செய்யப்படத்தக்கவன்-(எ-று.)

7. பூவோடு காய்நிறைந்த செடிகளினைப்
பலவிதமாப் பொருந்தா நின்ற
நாவோடுந் தன்மமதை யவ்வவற்றிற்
குரியவிட நாட்டிப், பற்ப
லாவோடுநிவ மதனைப் பிறப்பித்து
மகத்துவத்தி னணைந்து பின்னர்
டீவோடுதுதை ளூழுவைத் தோற்றினைநீ
யாதலினல் வழுத்தத் தக்காய்.

## மண்டலம் 2 சூக்தம் 13.

(இ-ள்.) (இந்திரனே!) பூவோடுங் காயோடும் நிறையும், நானாவிதமாகச் சிறந்து பேசப்படுந் தர்மங்களைத் தோற்றுங் கர்மங்களையும் அவ்வவற்றின் ஸ்தானங்களில் நிலைபெறச்செய்து, பலவிதக் கதிர்க்கற்றைகளோடு சூரியன் அல்லது நட்சத்திரங்களை விண்ணிற்றோற்றுவித்து, மகத்துவம் பொருந்திப், பிராணிக்கூட்டங்களைப் பிறப்பித்தாய். ஆதலால் நீ துதிக்கப்படத் தக்கவன்—(எ-று.) ஆவோடு ஆக்களோடு, கதிர்க்கற்றைகளோடு. இப்பொருண்மையி லிச்சொல் மண். 1 சூக். 92 செய். ல் வந்துள்ளது காண்க. திவம், சூரியன், நட்சத்திரங்கள், விண் என்னும் 3பொருளிலுங் கொள்க. ஊர்வாந், ப்ராணி நிகாயாந் பர்வதாந்வா என்று பொருள் கூறுவர் ஸாயணர். செய்யுளிற் பிராணிக் கூட்டமென்ற பொருளிலேயே வந்துளது

8. பலகருமம் புரிபவனே, நார்மரனைச்
செல்வமொடு பயில்வான் றன்னைப்
பலமருவு மூர்ஜயந்திப் பிசாசின்கையி
னிர்மலமார் முகத்தைப் பற்றி
நலமருவு மன்னமதை யாம்பெறவுந்
தாசரெலா நசிக்கு மாறும்
வலிமருவி யிப்பொழுதே கொலக்கொணர்ந்தா
யாதலினீ வழுத்தத் தக்காய்.

(இ-ள்.) பலவித காரியங்களும் செய்யு மிந்திரனே! மனிதர்களைக் கொல்லும் நிருமா னென்றும் அசுரனது புத்திரனாகிய நார்மரனையும் செல்வத்தோடுகூடியவனாகிய ஸஹவஸு வென்னும் அசுரனையும் பலம்பொருந்திய ஊர்ஜயந்தி யென்னும் பெண்பிசாசின் கையினால் மலப்படுத்தப்படாத முகத்தைப் பிடித்துக்கொண்டுவந்து, யாங்கள் உணவுப்பொருள்களைப் பெறுமாறும், தஸ்யுக்கள் நாசமடையுமாறும், அவர்களை யிப்பொழுதே கொல்லக் கொண்டுவந்தாய். ஆதலால் நீ துதிக்கப்படத் தக்கவன்—(எ-று) செல்வமொடு பயில்பவனாகிய நார்மரனை வச்சிராயுதமோடிய வடுவற்ற முகத்தைப் பற்றிக் கொணர்ந்து என்னலும் ஒன்று. அற்றேல் வடமொழியிலுள்ள ஊர்ஜயந்த்யா: என்பதற்கு வச்சிரதா (Dn) ஈயா: என்ற பொருளைக்கொள்ளுக. நிருமான் மனிதரைக்கொல்லு மசுரனென்றும் அவன் மகன் நார்மரனென்றும் அவனை இந்திரன் கொன்றதாகவும் இச்செய்யுளாற் றெரிகிறது.

9. ஏகனாய்ச் சிறந்துளனுக் கோங்குசுகந்
தரப்பதிற்றோ டியைந்த நூறு
வேகமுள பரிகொள்வா, யஜமானன்
றனைக்காக்கு மேலாங் காலத்;
தோகைபெறத் தபீதிக்காத் தாசர்களைக்
கயிறின்றி யுடறகைந்தாய்;
வாகுறுநற் றுணைபுரனு யாவருக்கு
மாதலனீ வழுத்தத் தக்காய்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 6.

(இ-ள்) ஸ்தோதாக்களைப் பிரரேபிக்கும் யாககர்த்தாவைக் காக்கும் பொழுது ஒப்பற்ற ஒருவனுகச் சிறந்துள்ளவனுக்குச் சுகத்தை யளிப்பதற் காகப் பத்து முதல் நூறு குதிரைகளை வேண்டியவண்ணங் கொள்ளுவாய் தபீதியென்னும் இருடிக்காகத் தஸ்யுக்களைக் கயிறில்லாமலே கட்டி வீழ்த்தி ஞய். ஆதலால் நீ துதிக்கப்படத்தக்கவன்—(எ-று.) மேனுட்டாசிரியர் இவ் விருக்குப் பாடச்சிதைவுள்ளதெனக்கூறி, மண். 6 சூக் 47 செய். 283 உதாரணமாக ஸாயணர் காட்டியுள்ளதையும் கவனியாது, தாஸர்களுடைய நூறு பத்து என்னுங் கணக்குள்ள சிநேகிதர்களைக் கட்டுகிறு யெனமொழி பெயர்ப்பர். ஏகஸ்ய ச்ருஷ்டௌ என்பதற்கும் ஒருவனுடைய காதிற்படும். வண்ணமென்பர். ஆனல் ஸாயணர் ஏகஸ்ய வாயஸ்ய ச்ருஷ்டௌ எனக் கொண்டு ஒப்பற்ற ஒருவனது சுகநித்தமாக வெனப்பொருள் கூறுவர். கயி றில்லாமற் கட்டுவதாவது கொன்று குழியிற் புதைத்தலாம். தபீதி மண். 1 சூக். 112 செய். 23 பார்க்க. இம்மண்டலம் சூக். 15 செய். 4லும் இப் பெயர் வருகிறது.

10. எந்நதியு மவனுண்மைக் குள்ளடங்கி
யமைந்தனவா, மியலு கின்ற
வெந்நலமார் கருமமுஞ்செய வனுக்குத்
தனமதனை யேன்றளித்த;
மன்னும் விரிவமையாறை யமைத்தனைநீ;
பார்வை யினுக்கழகு வாய்ந்த
நன்னலமா ரைந்தை யென்றும் பாலித்தா
யாதலினீ நவிலத் தக்காய்.

(இ-ள்.) எல்லா ஆறுகளும் அவனுடைய (இந்திரனுடைய) ஆண் மைக்குளடங்கின. எல்லா நலம்பொருந்திய கர்மங்களையும் புரியும் அவ்விர் திரனுக்காகத் தங்களுடைய செல்வங்களை யளித்தன. இந்திரனே! விரிவ மைந்த வானம், பூமி, பகல், இரவு, நீர், செடிகொடிகள் ஆகிய ஆறினையும் நீ நியமித்தாய். பார்ப்பதற்கு அழகிய சாதுர் வர்ண்ய நிஷாத பஞ்ச சனங் களையும் பரிபாலித்தாய். ஆகைபால் நீ துதிக்கப்படத்தக்கவன்—(எ-று.) மே னுட்டாசிரியர் மேல், கீழ், முன், பின், வலம், இடம், என்னும் ஆறு திக் குக்களைக், கீழ்ப்பக்கத்திற்பூமியாதலி னதனுள் ஒன்றும் பார்க்க வியலாதாத லால் ஐந்தாகச் செய்தாய் எனப் பொருளுரைப்பார். ஆனல் ஆறு பொருள்க ளையும், ஐந்து மனிதக் குடிகளையும் என்பது ஸாயணருரை.

### வருக்கம் 11.

11. உனது தனிக் கருமத்தாற் சாதுஷ்டி
ரன்றனட லூரத்தைத் தோற்று
மனமாகுஞ் செல்வமதை யடைந்தவுன
தருவீர மழகே, வீர,
பனுமுரிமை வாய்ந்துவா,மிந்திரனே,
நீபுரியும் பண்பு வாய்ந்த

## மண்டமலம் 2 சூக்தம் 13.

தனியான்மைக் கருமங்க ளெவற்றினுக்கு
நீயென்றுஞ் சாற்றத் தக்காய்.

(இ-ள்.) வீரனே! இந்திரனே! உன்னுடைய ஒப்பற்ற கர்ம விசேஷத்தினால் ஜாதஷ்டிரனது வெற்றிபொருந்திய பலத்தைத் தோற்றுவிக்கும் அன்னமாகிய செல்வத்தை யடைந்த வுனது வீரமானது நன்றாகப் போற்றத்தக்கதாம். நீ புரியும் எல்லாக் கருமங்களுக்காகவும் துதிக்கப்படத் தக்கவனும்—(எ-று.) ஜாதஷ்டிரன், பிறந்தநாள் முதல் எப்போதும் ஸ்திரமாயுள்ளவன் என்பது பொருள் ஒருவனது பெயரென்பர் ஸாயணர்; யாகத்தை நிருமிப்பவனு யிருக்கலாமென்பர் மேனாட்டாசிரியர்.

12. துருவீதன் வய்யனெனு மிருடியர்கள்
நீரோட்டஞ் சுகம்ம தாண்ட
வருமையினந் நதிப்பெருக்கைத் தகைத்தனை நீ;
பராவிருஜ னாழ்ந்தான் றன்னைப்
பெருமையொடு மேற்றாக்கி விட்டனையாற்
புகழ்ச்சியினிற் பிறங்கச் சோணன்
குருடனிவர் தம்மையுநீ மேலெடுத்தா
யாதலினாற் கூறத் தக்காய்.

(இ-ள்.) (இந்திரனே!) தர்வீதி, வய்யன் என்னும் ராஜரிஷிகள் நீரோட்டங்களைச் சுகமாகத் தாண்மொறு அந்நதிகளின் வெள்ளத்தைத்தடை செய்தாய். பாபங்களைத்தகித்துகொள்ளு மாற்றல்வாய்ந்த பராவிருஜன் தண்ணீரி லமிழ்ந்துபோனபோது அவனை மேற்றாக்கிவிட்டாய் சுரோணனும், ரிஜ்ராச்வனும் முழுகியபோதுங்கூட அவர்கள் புகழ்பெறும்படி தூக்கினாய் —(எ-று.) தர்வீதி, வய்யனது மகன். இருவரும் நதி தாண்டிய கதையை மண். 1 சூக். 61 செய். 11 பார்க்க. பராவருஜன், சுரோணன் (ச்ரோணன், சுரோணன், ச்ரோணன் என்பது சிதைவு.) குருடனாகிய ரிஜ்ராச்வன் இவர்களை மண். 1. சூக் 112 செய். 8ற் பார்க்க. ஆங்கு அவர்களது அங்கவீனங்களை யசுவினியர் விலக்கியதாகக் கூறப்பெற்றுள்ளது.

(வேறு.)

13. வாசவ, வெங்களுக்குக் கொடுத்திடச் சுகிக்கச் செல்வ
மாசையி னளிக்கல்; மிக்க தனத்தினை யடைந்தோ னீயே;
வீசுபல் லழகார் செல்வ நாளுமே விழைக, வேந்தே;
பேசுவோம் பெருந் துதியி னவையி னல்வீர ரோடே.

(இ-ள்.) செல்வனே! எங்களுக்குத் தானநிமித்தமும், போகநிமித்தமும் செல்வத்தை விருப்பத்தோடு தருவாயாக. மிக்க செல்வத்தை யடைந்தவன் நீ. இந்திரனே பலவித அழகோடுங்கூடிய தனத்தை எங்களுக்குக் கொடுக்க விரும்புவாயாக. யக்ஞக்கூட்டத்தில் புத்திர பௌத்திரர்களோடு பெரிய துதிகளினால் உன்னைப் புகழுவோம்—(எ-று.)

வருக்கம். 12

## அஷ்டகம். 2. அத்தியாயம், 6.

## 205. (14) மண்டலம். 2 அநுவாகம். 2 சூக்தம். 3.

12 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்: வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை; இந்திரன்:

1. அத்துவர் யுக்காள் சோம மிந்திரற் கணைக்கல்; நன்கே
மத்தமார் துளியைச் சோமச் சமசங்க ளவற்றி லூற்றல்;
ஒத்தவிச் சுதையை யென்றும் விரனு முவந்தான் மாந்த;
நத்திய தருவோர்க் கஃதை நேருக; விழைந்தா னஃதே.

(இ-ள்.) அத்வர்யுக்களே! சோமத்தை இந்திரனுக்காக உத்தரவேதிக்கண் கொண்டு வருவீர்களாக. மதத்தைத்தரும் அச்சோமத்தைச் சமசங்களி லூற்றுவீர்களாக. இச்சோமத்தைக் குடிப்பதற்கு இந்திரன் விரும்பினான். இச்சைகளை யளிக்குங் காளையாகிய விந்திரனுக்குஅதனை ஆவுதியாகக் கொடுப்பீர்களாக. அதனையே யவனும் இச்சித்தான்—(எ-று.) சமஸம், மரப்பாத்திரம், பெரியஸோமி கலசத்தினின்றும் சோமத்தைமொள்ளுவதற்கு உபயோகப்படுவது.

2. அத்துவர் யுக்காணீரை வெளிவிடா தடக்கிச் சூழ்ந்த
வித்தி ரன்றனை, யிடியின் மரத்தினை வேக வைத்த
லொத்திடக், கொன்றோற்கன்னம் விரும்புவோற்குதவச் சேர்க்கல்;
அத்தகை யவந்தன் சோமம் பருகுதற் கருக னாமே.

(இ-ள்.) அத்வர்யுக்களே! மழையை வெளிவிடாமல் தகைத்துவைத்துள்ள விருத்திரனை, இடியினால்மரத்தைத்தகிப்பதுபோலக்கொன்றவனும், ஸோமத்தை விரும்புவோனுமாகிய விந்திரனுக்குச் சோமத்தை யுதவுமாறு (உத்தரவேதிக்கண்) கொண்டு வருவீர்களாக. அவ்விந்திரன் ஸோமத்தைப் பருகுதற்கு உரியவனும்.(எ-று.) வித்திரன் விருத்திரன் என்பதன் சிதைவு. அத்வர்யு: அத்வாயு: அத்வரம் யுநக்தி அத்வரஸ்யநேதா அத்வரம் காமயத இதி நிருக்தம். யாகமிழைப்பவன் என்பது பொருள்.

3. அத்துவர் யுக்கா ளாவை வெளியிட்டு வலனையாரு
முற்றறி விதத்திற் காட்டித் திபீகனைக் கொன்றோற்கந்த
ரத்தினிற் பரவும் வாத னென்னு மச்சுதை யளிக்கல்;
மெத்துடைபோர்த்தமுப்போனெனக்களினவனைப்போர்க்கல்.

(இ-ள்,) அத்வர்யுக்களே! குகைக்கண் அடைக்கப்பட்டிருந்த பசுக்களை வெளிவிட்டு எல்லார்க்குந்தெரியும் வண்ணம் வலன் என்னும் அசுரனை வெளிப்படுத்தினவனும், (பலரையுங்கிழித்துப் பயமுறுத்துபவனை) திருபீகனென்னுமசுரனைக்கொன்றவனுமான இந்திரனுக்காக, அந்தரத்தில் வியாபிக்கும்வாயுவைப்போலப்பரந்துசெல்லும் அச்சோமத்தைத்தருவீர்களாக. மிகவும் வயதான கிழவன் வஸ்திரத்தைப்போர்த்துக்கொள்வதுபோல அவ்விந்திரனை

## மண்டலம் 2 சூக்தம் 14.

ஸோமத்தினைப் போர்ப்பீர்களாக (எ-று.) த்ருபீகன், நிபீகனெனச் சிதைந்தது.

4. அத்துவர் யுக்கா டொன்னூற் றென்பது நகரத்தைத்தோற்று
மத்தகைய யுரனன் றன்னையடித்துக்கொன் றிட்டான், வேந்தன்,
செத்திடக் கீழே வீழ்த்தி யர்ப்புதன் றனைச் சிதைத்தோன்,
நத்தியிச் சோம மார நாடுக துதியின் மூட்டி.

(இ-ள்.) அத்வர்யுக்களே! தொண்ணூற்றொன்பது நகரங்களைத் தோற்றிக்கொண்டிருந்த உரணனென்னு மசுரனை யடித்துக்கொன்றவனும், அர்ப்புதன் என்னு மசுரனைச் சாகும்படி கீழே வீழ்த்திக்கொன்றவனுமான இந்திரன் இச்சோமத்தைக் குடிக்குமாறு அவனைத் துதித்து அவனுக்கு இன்பத்தை யூட்டுக—(எ-று.) ஊட்டி அவனை விரும்புக வெனவும் கூறலாம்.

5. அத்துவர் யுக்காள் யாவன் சுவசனைக் கொன்றோன், வற்றா
தொத்த சுட்டுணனை விட்டி, வியம்சனை நமுசி தன்னை
மெத்தொளிப் பிப்புருவை ருதிக்கிரன் றனை வதைத்தோ,
னத்தகை யிந்திரற் கென் றவியுணா வளித்திடீரே.

(இ-ள்.) அத்வர்யுக்களே! (நன்றாகப் பகைவர்களைப் பட்சித்துவிடும்) ஸ்வச்நனென்னும் அசுரனைக்கொன்றவனும், ஒருவராலும் வற்றடிக்க முடியாத சுஷ்ணனென்னும் அசுரனைத் தொலைத்தவனும், (தோளற்ற) வியம்ஸனென்னும் அசுரனையும் (நுரையினுற் றன்னை மூடிக்கொண்டு தண்ணீருக்குள் செல்லும் அசுரனாகிய) நமுசியையும், (தனது தேஜஸால் உலக முழுதும் வியாபித்துச் செல்லும்) பிப்புரு வென்னு மசுரனையும், ருதிக்கிரனென்னு மசுரனையுங் கொன்றவனுமான வவ் விந்திரனுக்காக அவியன்னத்தை யுதவுவீர்களாக—(எ-று.) ஸவச்நன், சுவசனெனவும், பிப்ரு பிப்புருவெனவும் சிதைந்து நின்றன. இவர்களெல்லாரும் அசுரர்கள். ருதிக்கிரன் என்பதற்கு மாத்திரம் பதப்பொருள் ஸாயணர் கூறவில்லை.

6. அத்துவர் யுக்கா னூறு சம்பரன் புரம் பழமை
யொத்தவை தமை யசனி யாயுதங் கொண்டழித்துப்
புத்திரர் நூறா யிரத்தவர் வருச்சன் பெற்றோ
ரொத்துக்கீழ் வீழச் சாடு மிந்திரற் கீக தேனே.

(இ-ள்.) அத்வர்யுக்களே! சம்பராசுரனது நூறு பழமையான கோட்டைகளையும் வச்சிராயுதத்தா லிடித்துக் கொன்றவனும், நூறாயிரக் கணக்கான வர்ச்சனது புத்திரர்களை அடியற்று ஒருமிக்க விழும்படி சாடினவனுமான இந்திரனுக்கு ஸோமத்தை யளிப்பீர்களாக—(எ-று,) வர்ச்சன் ஒளிபொருந்திய அசுரன், இந்திரனைப் பகைத்து அவனாற் புத்திரர்களோடு கொல்லப் பட்டவன்.

வருக்கம். 13

## அஷ்டகம். 2. அத்தியாயம் 6.

7. அத்துவர்யுக்காள், நூறோ டாயிர மசுரர் தம்மை
பித்தரை மடியில் வீழ்த்தோ னெருங்கினி, லாயு,குற்ச
னொத்ததி திக்குவர்க்கா வீரரா மசுரர் தம்மைக்
கொத்தொடுவதைத்தோனுக்குச்சோமத்தைக்கொடுத்திடரே.

(இ-ள்.) அத்வர்யுக்களே! நூறு ஆயிர மென்னுங் கணக்கினில் அசுரர்கள் பூமியின் மடியில் ஒருமிக்க விழுத்தியவனும், ஆயு,குத்ஸன் அதிதிக்குவ னிவர்களோடு போர் புரிந்த வீரர்களாகிய சுஷ்ணன், சம்பரன் முதலிய அசுரர்களை வதைத்தவனுமாகிய இந்திரனுக்குச் சோமத்தை யளிப்பீர்களாக—(எ-று.) மண். 1 சூக். 51 செய் 6ல் 'சுட்டுணனைக் கொல்லுகையிற் குற்சனைய மிரட்சித்தாய், தோய்ந்த வானி லட்டி யிலாப் படைக்கிரையாச்சம்பரனை யதிதிக்குவற்கா மாய்த்தாய்.' என்று வந்துளதைக் கவனிக்க. மேனாட்டாசிரியர், 'ஆயு, குத்ஸன், அதிதிக்வன் இவர்களது வீரர்களைத் தூர்வயாணனுக்குட் படுத்தினாய். என்பர். இதனை மண். 1 சூக். 53 செய் 10ன் உரையிற் காண்க.

8. நரர்களா மத்வர்யுக்காள், நாடிய வற்றை யெல்லாம்
விரைவினிற் பெறுக வேந்தற் களியினைச்சுமந்து நீங்கள்;
கரங்களாற் றூய்மையாகக் கண்டவச் சோமந் தன்னைப்
பரந்தசீ ரிந்திரற்குப், பரவுவீர், கொணர்ந்து பெய்யீர்.

(இ-ள்.) யக்ஞ நேதாக்களாகிய அத்வர்யுக்களே! இந்திரனுக்காகச் சோமத்தைச் சுமந்து நீங்கள் விரும்பியவற்றை யெல்லாம் உடனே பெறுவீர்களாக. யக்ஞத்தால் வணங்குபவர்களே! கைகளினால் நசுக்கி வடிக்கட்டிச் சுத்தஞ் செய்யப்பட்ட அச்சோமத்தை மிகவும் கீர்த்தி பொருந்திய இந்திரனுக்காகக் கொண்டுவந்து ஆவுதி செய்வீர்களாக—(எ-று.)

9. அத்துவர்யுக்காள், ளன்னூற் கமைத்திடல் சுகமளிக்க
வொத்த சோமத்தை; நீராற் கழுவித் தூய்ப்படுத்த வதனைப்
பத்தலிற் றாக்கல்; உங்கள் கரம்படு சோம மன்னூன்
மெத்தவும் விழைவான்; வேந்தற்கெனப்பெயீர்மதிரந்தன்னை.

(இ-ள்.) அத்துவர்யுக்களே! ஸுகசரமான அச்சோமத்தை அவ்விந்திரனுக்காகச் செய்வீர்களாக. நீரினாற் கழுவிச் சுத்தஞ் செய்யப்பட்ட அச்சோமத்தைச் சமஸங்களால் மொண்டெடுப்பீர்களாக. உங்களது கரங்களாற் பிழிந்து வடிக்கப்பட்ட ஸோமத்தை அவ்விந்திரன் மிகவும் விரும்புவான். இந்திரனுக்காக அம்மதந்தரும் ஸோமத்தை யாவுதி செய்வீர்களாக—(எ-று.) வடமொழி மூலத்தில் வநே என இரண்டு முறைவந்துளது.வநம், நீருக்கும் (காடு ஈண்டு இலக்கணையால்) மரப்பாத்திரத்திற்கும்பெயர்.நீரென்னுது மரப்பாத்திரமென்ற பொருளிலேயே உரைகூற நேர்ந்தால் பத்து மரப்பாத்திரங்களில் வடிக்கப்பட்ட கள்ளை மரச் சமஸங்களா லெடுப்பீர்களாகவெனப் பொருளுரைத்துக் கொள்ளுக.

## மண்டலம் 2 சூக்தம் 15.

10. அத்துவர்யுக்கா ளாவின் பானிறை மடியின், வண்மை
யொத்த விந்திரனைச் சோமத்தா னிறைத்திடல்; அன்னானை
மெத்தவு மறிவேன்; போற்றற் குரிய னவனுக் கியானு
மெத்தவு மளிப்பே னென்றே யவன்மிக வறிவானென்றோர்வேன்.

(இ-ள்.) அத்வர்யுக்களே! பசுவின் மடி பாலால் நிறைந்திருப்பது போலப் போஜனாகிய விந்திரனைச் சோமத்தால் நிறைப்பீர்களாக. அவனது தன்மையை நான் நன்கறிவேன். வணங்கத் தக்கவனாகிய வவனுக்கு யான் நிறைய ஸோமத்தை யளிப்பேனென்பதை யவன் அறிவானென்றும் விஷயமும் எனக்குத் தெரியும்—(எ-று.) போஜன் பலன் தருபவன்; ரக்ஷகன். வண்மை யொத்தவன் என்றார் செய்யுளில். வள்ளல் என்றபடி.

11. அத்துவர் யுக்காள், விண்ணின் செல்வத் துக்கரசன், பூமி
நத்திய பொருள்கட் கந்தரிட்சத்துத் தனத்துக் கீசன்
இத்தரை யவற்குச் சோமம் யவக் களஞ்சியமே யென்ன
மெத்தவு நிறைக்கல்; ஈ துங் கன்மமா மேவ மாதே.

(இ-ள்.) அத்வர்யுக்களே! விண்ணுலகச் செல்வத்துக்கு அரசனும், பூமியிலுள்ள பொருள்களுக்கும் (பிருதுவி விஸ்தீரணமானது என்பது பொருள்.] அந்தரிட்சத்திலுள்ள செல்வத்துக்கும் ஈசனுமாகிய இந்திரனுக்குக் களஞ்சியத்தை யவதானியத்தால் நிறைப்பதுபோலச் சோமத்தை நிறையத்தருவீர்களாக. இச்செய்கை யும்முடைய வேலையா யிருக்கட்டும்—(எ-று.)

12. வாசவ, வெங்களுக்குக் கொடுத்திடச் சுகிக்கச் செல்வ
மாசையி னளிக்கல், மிக்க தனத்தினை யடைந்தோனியே;
வீசு பல்லழகார் செல்வ நாளுமே விழைக, வேந்தே,
பேசுவோம் பெருந்துதியி னவையி னல்வீர ரோடே.

(இ-ள்) செல்வனே! எங்களுக்குத் தானநிமித்தமும் போக நிமித்தமும் செல்வத்தை விருப்பத்தோடு தருவாயாக. மிக்க செல்வத்தை யடைந்தவன் நீ. இந்திரனே! பலவித அழகோடுகூடிய தனத்தை எங்களுக்குக் கொடுக்க விரும்புவாயாக. யக்ஞக்கூட்டத்தில் புத்திர பௌத்திரர்களோடு பெரிய துதிகளினால் உன்னைப் புகழுவோம்—(எ-று.)

வருக்கம், 14.

## 206. (15) மண்டலம். 2. அநுவாகம். 2. சூக்தம். 4.

10. இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: இந்திரன். தசராத்திரத்தில் ஆறாவது நாளில் இதுவும் இதற்கு முந்திய சூக்தமும் இதன் அடுத்த சூக்தமும் உபயோகப்படுவனவாம்,

## அஷ்டகம் 2 அத்தியாயம் 6.

1. மகத்துவம் வாய்ந்தோ னுண்மை யுள்ளவன்றனதுமெய்ம்மை
மகத்துவச் செயல்க டம்மை வழங்குவ னன்கே; வேந்தன்
திகத்துக நாளிற் சோமந் திகழுறக் குடித்தான்; அன்ன
தகத்தினி லூட்டா நின்ற மதத்தின லகியைக் கொன்றான்.

(இ-ள்.) மகத்துவம் வாய்ந்தவனும், உண்மையுள்ளவனுமான விந்திரனுடைய மகத்துவம் வாய்ந்த உண்மைச்செயல்களை நன்றாக வெடுத்துரைப்பேன். இந்திரனனவன் த்ரிகத்ருகம் என்னும் நாட்களிற் சோமத்தை நிறையக் குடித்தான், அச்சோம மூட்டிய மதத்தினால் அகியை அல்லது விருத்திரனைக் கொன்றான்—(எ-று.) திகத்துகம், த்ரிகத்ருகம் என்பதன் சிதைவு.மண். 2 சூக். 11 செய். 17 நோக்குக.

2. ஆலம்ப மின்றி யாகாயத்தினின் விண்மணியை
மேலுற நிறுத்தினன்; பே ரந்தரம் பூமி வானைச்
சாலவு நிறைத்தான் றேசாற்; பூமியை விரித்தவ் வேந்த
னேலுறத் தரித்தான்; சோம மதத்தின லிவற்றைச்செய்தான்.

(இ-ள்.) ஒருவிதப் பற்றுக்கோடுமின்றி ஆகாயத்திற் சூரியனைமேலாக நிறுத்தினன். மகத்தாகிய அந்தரிட்சம், பூமி, வானம் இவைகளைத்தன து தேஜஸால் நிறைவித்தான். பூமியை விஸ்தீரண முள்ளதாகச் செய்து அந்த இந்திரன் அதனைத் தாங்கினன். இவற்றையெல்லாம் ஸோமத்தைத் குடித்த மதத்தினாற் செய்தான்—(எ-று.)

3. எக்கிய வறையைப் போல வளந்து கிழ்த்திசை யமைத்தான்;
உக்கிரப் படையா லாற்றி னூற்றினைத் திறந்து நீண்ட
முக்கிய நெறிகளூடு முடுகுவா னிழைத்தான் வேந்தன்
துக்கமே யின்றிச்; சோம மதத்தின லிவற்றைச் செய்தான்.

(இ-ள்.) யக்ஞ அறையை யளப்பதுபோல இந்திரன் கிழக்குத் திக்கை யளந்து நிருமித்தான். வச்சிராயுதத்தினால் ஆறுகளின் ஊற்றுக்கண்களைத் திறந்து வெகுகாலஞ் செல்லும் நீண்ட கால்வாய்களின் வழியாய்ச் செல்லுமாறு துன்பமின்றி (அநாயாசமாக வென்றபடி.) அவற்றை ஓடவிட்டான். இந்திரன் இவற்றை யெல்லாம் ஸோமத்தைக் குடித்த வெறியினாற் செய்தான்—(எ-று.) யக்ஞ அறையைக் கிழக்கு 36கால் வீச்சு என்று யஜமானர்கள் அளப்பதுபோல வென்பார் ஸாயணர்.

4. தபீதியைத் தூக்கிச் சென்ற வவர்களைச் சூழ்ந்து வேந்தன்
நபோ முகமாக மூட்டப் பெற்ற வக்கினியி லன்னார்
நிபிடிதப் படையைச் சுட்டு, நேடித் தே ரிவுளி யாவைத்
தபோபலத்தளித்தான்;சோமமதத்தினாலிவற்றைச்செய்தான்.

## மண்டலம் 2 சூக்தம் 15.

(இ-ள்) தபீதி யென்னும் ராஜரிஷியைத் தூக்கிச் சென்ற அவ்வசுரர்களைச் சூழ்ந்து, இந்திரன் அவர்களது ஆயுதங்களை யெல்லாம் மூட்டப்பட்ட அக்கினியிற் போட்டுச் சுட்டதுமன்றி அந்தத் தபீதிக்குத் தேர், குதிரை பசு வென்னும் செல்வங்களைக் கூட்டினான். ஸோமங் குடித்த வெறியினால் இவற்றைச் செய்தான்—(எ-று.) நபோ முகமாக ஆகாயத்தைப் பார்க்கும் வண்ணம்; நிபீடித, நன்றாக வருத்துகிற; தபோபலத்தா, தபவின்பலத்தினால் இம்மூன்று சொற்களும் எதுகை நோக்கிச் சேர்த்தன.

5. வெள்ளமார்நதியோட்டத்தைத்தடுத்தனன்பெருகாவண்ணம்;
மெள்ளவே பதனமாக நீரினில் நனைபார் தம்மைத்
தள்ளினான் மறு கரைக்கே; இந்திர, னவர்கள் தாண்ட,
உள்ளினான்றனத்தைச்; சோமமதத்தினாலிவற்றைச்செய்தான்.

(இ-ள்.) இந்திரன், பெரிய நீர்ப்பெருக்கு நிறைந்த பருஷ்ணி என்னும் ஆற்றினோட்டத்தை (இருடிகள் தண்டுமாறு) தடை செய்தான். தண்ணீரில் நனையாதபடி அவர்களைச் சாக்கிரதையாக அக்கரையில் சேர்த்தான். அவர்கள் அவ்வாற்றைக்கடந்து சென்றதும் மறுபடியும் ஆற்று வெள்ளமாகிய தனத்தைப் பெருகச்செய்தான். இவற்றை யெல்லாம் ஸோமங்குடித்த மதத்தினா லிந்திரன் செய்தான்—(எ-று.) அவ் வாறு பருஷ்ணி யென்னும் ஸப்த கங்கைகளி லொன்றென்பார் ஸாயணர். இவ்விருடிகளைப் பற்றி மண். 2 சூக். 13 செய். 12 பார்க்க.

### வருக்கம் 15.

6. மகிமையா னீரோட்டத்தை மேனோக்கி செல்வித்தான்; தன்
றகவுறு வச்சிரத்தாற் றாக்கியே பொடித்தான் வைகல்
மிகைபெறு தேரை,பன்னாள் வலியறு படையை வேந்த
னிகலினாற் பிளந்தே; சோம மதத்தினா லிவற்றை செய்தான்

(இ-ள்.) இந்திரன் தனது மகத்துவத்தினால் நீரோட்டத்தை மேல் நோக்கிச் செல்லுமாறு செய்தான். தனது பலத்தினால் உஷஸினது பலமற்ற சேனையைப் பிளந்தெறிந்து அவளுடைய தேரைத் தனது வச்சிராயுதத்தினாற் றாக்கிப் பொடியாக்கினான். இவற்றையெல்லாம் இந்திரன் சோமத்தைக் குடித்த மதத்தினாற் செய்தான்—(எ-று.) வைகல், உஷஸ். உஷஸின் தேரினை இந்திரன் நொறுக்கிய கதை மண். 4 சூக் 13 செய். 8ல் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது.

7. கன்னிய ரொளிந்திருந்த விடத்தினைக் கண்டு காலோ
டுன்னியவ் விடத்துச் சென்றே யவர்முனர்ப்பராவ்ருஜன்று
னின்றனன்; முடமகன்று நிமிர்ந்தனன், குருடன் பார்வை
துன்றினன்; வேந்தன்சோமமதத்தினாலிவற்றைச்செய்தான்.

(இ-ள்.) [முன்னொரு காலத்துச்சில கன்னிகைகள் குருடனையும் முடவனையு மிருந்த பராவ்ருஜன் என்னும் ரிஷியைக்கண்டு ஏளனம் புரிந்தார்கள். அவன் இந்திரனை வேண்டிக்கொள்ள அவ்விந்திரன் அவனது

முடத்தன்மையையும் குருட்டுத்தனத்தையும் நீக்கினன் என்பது கதை.] பராவ்ருஜன் என்னும் ரிஷி (இந்திரனது அநுக்கிரகத்தினல்) தன்னை யிகழ்வாக வெண்ணின கன்னிகைகள் ஒளித்திருந்த இடத்தைக் கண்டுபிடித்துத் தனது கால் சொஸ்தமானவனுய் அந்த சென்று அவர்களது முன்னிலையில் நின்ருன். தனது முடத்தன்மையும் நீங்கினன். குருடனுயிருந்த வவன் பார்வையையும் பெற்ருன். இவற்றையெல்லாம் இந்திரன் ஸோமத்தைக் குடித்த மதத்தினுற் செய்தான்—(எ-று.)

8. அங்கிரர் துதிக்க வேந்தன் வலன்றனை யழித்தான்; ஆக்கள்
தங்குநன் மலையின் மொய்ம்பு தயங்கிய வாயில் பேர்த்தான்;
மங்குரு வலியிற் கித்தி மத்தினி னிழைத்த காப்பை
வங்கையிற்பிளந்தான்;சோமமதத்தினுலிவற்றைச்செய்தான்.

(இ-ள்.) அங்கிரஸ வம்சத்து ரிஷிகள் துதிக்க இந்திரன் வலனென்னும் அசுரனைக்கொன்ருன். பசுக்கள் அடைக்கப்பட்டிருந்த மலையின் கல் வாயில்களைப் பேர்த்தெறிந்தான். மிக்க வலிமையோடு கிருத்திமமாகச் செய்யப்பட்டிருந்த அதன் அரண்களையும் பிளந்தான். ஸோமத்தைக்குடித்த மதத்தினுல் இவற்றையெல்லாம் செய்தான்—(எ-று.).

9. சுமுரியைத்துனியைத்தூக்கத்தாழ்த்தியேதசியுவைக்கொன்
றமர்பொரு தபீதி தன்னைக் காத்தனை; வேத்திரக்கை
நிமிர்தரு மவனுமாண்டை யசுரர்தம் பொன்னைக்கண்டான்;
தமனென வேந்தன் சோம மதத்தினு லிவற்றை செய்தான்.

(இ-ள்.) (இந்திரனே!) சுமுரி யென்னும் அசுரனையும், துனியென்னும் அசுரனையும் தீர்க்க நித்திரையில் வீழ்த்தி அவ்வசுரர்களை (தஸ்யுக்களை)க் கொன்ருய். அவர்களோடு யுத்தஞ்செய்த தபீதியைக் காப்பாற்றினுய். கையிற் பிரம்பு தாங்கிய அத் தபீதியின் துவாரபாலகனுங்கூட அவ்வசுரர்களது இரணியத்தை யடைந்தனன். இந்திரன் (இத்தபீதி தன்னவனென்று) ஸோமங்குடித்த மதத்தினுல் இவற்றையெல்லாம் செய்தான்—(எ-று.) சுமுரி, துனியென்னும் அசுரர்கள் தபீதியைத் தூக்கிகொண்டு ஓடினவர்கள். மண். 7 சூக். 19 செய். 4 பார்க்க. தமனென என்பது வடமொழி மூலத்திலில்லை.

10. இன்றுனைத் துதிப்போனுக் குன்மகோனியாமவள்காணிக்கை
நன்றுறக் கறக்கல், வேந்தே; தட்சிணை போற்று வோர்க்குத்
துன்று விக்திடல்; பகன்று னெம்பயன் குறையா தீகல்;
மன்றினில், வீரரோடு பெருந்துதி யாம் வழங்கல்.

(இ-ள்.) இந்திரனே! இன்று உன்னைத் துதிப்பவனுக்கு உனது (மகோனி) செல்வ வதியாகிய அப்பசு தட்சிணையைச் சிரேஷ்டம் பெறக் கறந்தளிக்கட்டும். ஸ்தோத்திரஞ் செய்பவர்களுக்கு அத்தட்சிணையை நீ யளிப்பாயாக. பகன் எமது பலனைக் குறைத்து விடாமல் அளிக்கட்டும். யாகக் கூட்டத்தில் நல்ல வீரரோடு கூடி யாங்கள் உனக்குப் பெரிய ஸ்தோத்திரங்

## மண்டலம் 2 சூக்தம் 16.

கவிதைக் கூறுவோமாக—(எ-று.) இச்செய்யுள் பதினோராம் சூக்தத்தின் கடைச்செய்யுளாகவும் வந்துளது மகோனி உஷஸாயிருக்கலா மென்பர் மேனாட்டாசிரியர். பகன் துவாதச ஆதித்தியர்களில் ஒருவன்.

வருக்கம். 16

## 207. (16) மண்டலம். 2. அநுவாகம். 2. சூக்தம் 5.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: 1–8 ஜகதி, 9 திருஷ்டுப்; தேவதை: இந்திரன்.

(வேறு)

1. சத்துக்க டமின் முதன்மை வாய்ந்தவனுக்
குங்களையே சார்ந்தோ னுக்குத்
தத்துந்தி நன்றாக மூட்டப் பெற்
றதனிலவி தபக்கல் போல
மெத்தும்பல் துதிகளினைத் தாங்குவேன்;
சரை பெய்தான் மிகவும் வேறு
வத்துக்கள் கிழமாக்கு நிதவிளமை
யுரவேந்தன் வருக வென்போம்.

(இ-ள்.) ஸத்துக்களாகிய தேவர்களில் முதன்மை பெற்றவனும் யஜமானர்களாகிய உங்களையே சார்ந்தவனுமான அவ்விந்திரனுக்காக, நன்றாய் மூட்டப் பெற்ற அக்கினியிற்சொரிவதற்கு அவியுணவுகளைத்தாங்குவதுபோலப் பலவித ஸ்தோத்திரங்களையும் தாங்குவேன். தான் கிழத்தன்மை யடையாது மற்ற வஸ்துக்களைக் கிழப்படுத்து வோனும் நித்திய தருணனும், ஸோமபானத்தால் வலிமை பெற்றவனுமான இந்திரன் துணை செய்வதற்காக எங்களிடம் வருமாறு அழைப்போம்—(எ-று.)

2. பெரியவனு மரியொழுங்கின் றியாதொன்றும்
ஈண்டிலை யாம்; பேசுமன்னாற்
குரியவையா பெவ்வித வீரியங்களுமே
யுறைகின்ற; வுவன் வயிற்றிற்
பெருகியுள துயர்சோமம்; அவனுடலம்
வலிமிகுந்து பிறங்கிற், றன்னன்
கரமதனில் வச்சிரத்தைத் தரிக்கின்றான்;
சிரத்துமதி காண லாமே,

(இ-ள்.) பெரியவனாகிய இந்திரனது ஒழுங்கைப்பெறாத ஒன்றும் இவ்வுலகத்தி லில்லையாம். எல்லா வீரியங்களும் அவனிடத்திலேயே பொருந்தியிருக்கின்றன. ஸோமம் அவன் வயிற்றில் நிறைந்திருக்கிறது. அவனது சரீரம் வலிமிகுந்து விளங்குகிறது. அவன் தனது கையில் வச்சிராயுதத்தைத் தரித்திருக்கிறான். அவனுடைய தலையில் விசேஷ ஞானத்தைத் தாங்குகிறான்—(எ-று.)

## அஷ்டகம் 2 அத்தியாயம் 6.

3. இந்திர, வு னைந்திரிய வலிபுவிவா
னிரண்டாலு மெய்தற் கொன்ணு.
தந்திறுன திருந்தேரைச் சமுத்திரமும்
பருவதமுந் தடுக்க லாகா;
நந்துமுன தருங்குலிசத் தருகெவனு
நெருங்காணு, ணுடும் வேகக்
கந்துகங்க ளோடுபல யோசனைக
ணீபாயுங் காலத் தீண்டே.

(இ-ள்.) இந்திரனே! உனது ஐந்திரிய (இந்திர சம்பந்தமான என்றபடி.) வலிமையைப் பூமிவானம் இரண்டும் அடைதல் முடியாது. உனது தேரின் செலவைச் சமுத்திரமும் பர்வதமும் தடைசெய்தல் முடியாது. வேகமாகச் செல்லுகின்ற குதிரைகளைப்பூட்டிப் பலயோசனை தூரம் நீ பாய்ந்து செல்லும்போது, உனது வச்சிராயுதத்திற்கருகே எவனும் வரமாட்டான்—(எ-று.)

4. எல்லாரும், வணங்குறுவோன் பகைவலிப்போ
னிச்சைகளை யியைப்போன் போற்றேற்
கெல்லாரும் கருமமதைப் புரிகின்றூர்
சுதைக்குடியின் வலியேய்ந் தோற்கே;
சொல்லாரு ஞானமெலாந் தோய்ந்தவர்கா
ளவியுதனைத் தோய்க்கல்; வேந்த,
மல்லாரும் வலிசெறிந்த வொளியோடு
சோமமதை மாந்துவாயே,

(இ-ள்.) பலராலும் வணங்கப்படுபவனும்; பகைவரை யடக்குபவனும், இச்சைகளை யளிக்கும் தாதாயும்; ஸ்தோத்திரங்களைப் பெறுபவனும், ஸோமத்தைக்குடிப்பதனுற் பலத்தை யடைபவனுமான இந்திரனுக்காக எல்லா யஜமானர்களும் யக்ஞ கர்மங்களைச் செய்கிறூர்கள். மிக்க ஞானத்தோடு கூடியவர்களே! அவனுக்கு அவிப்பொருள்களைக் கூட்டுவீர்களாக. இந்திரனே! வலிமைமிகுந்த தேஜஸோடு ஸோமத்தைக் குடிப்பாயாக—(எ. று.)

5. இச்சைகளை யளிப்பவன்றன் மதுவெள்ள
நிறைகோசு மெழிலார் வன்மை
நச்சுமுண வுட்கொள்ளு மிடபத்தின்
குடிக்காக நாடிச்செல்லும்;
பொச்சமின் மொய்ம்புள்ளோர்க ளத்துவர
ரிருவர்களும்; புகலுங் கற்க
ணிச்சலுமே வலிதோய்ந்த; சோமமதைக்
கானக்குப் பிழியா நிற்பர்,

## மண்டலம். 2 சூக்தம் 16.

(இ-ள்.) இச்சைகளை யளிக்கும் அவ்விந்திரனுடைய மதுநிறைந்த பாத்திரம், பலத்தை யூட்டும் ஆகாரங்களை யுட்கொள்ளுங் காளையாகிய அவ்விந்திரனது குடியை யுத்தேசித்துச் செல்லும். அத்வர்யு, பிரதிப் பிரஸ்தாதா என்னும் இருவரும் பல மிகுந்தவர்களாம். (அப்படியே) ஸோமலதையை நசுக்கும் கற்களும் வலிபொருந்தியன. அவ்வத்வர்யுக்க ளிருவரும் தேவர்களிற் சிரேஷ்டமான காளையாகிய இந்திரனுக்காக் ஸோமத்தைப் பிழிவார்கள்—(எ-று.)

### சூக்தம். 17

6. இடபமெனு மிந்திரனே யுனதசனிப்
 படையதுவு மிடபம்; உன்றே
ரிடப மெனலாகும்; உனதரி யிடபம்;
 ஆயுதமு மிடப மென்ப;
இடபமெனு மதகாரி சோமமதற்
 கிறைபாவாய்; இயைந்து நீயே,
யிடபமெனுஞ் சோமத்திற் றிருப்தியினை
 யடைந்திடுக வேற்ற யோடே.

(இ-ள்.) விருஷபமே! இந்திரனே! உனது வச்சிராயுதம் வலிமை மிகுந்த காளை போன்றதாம். உனது தேர் இச்சைகளை யளிக்கும் காளையாம். உனது குதிரைகளும் வலிமைபொருந்தியனவாம். உனது இதர ஆயுதங்களும் வலிமிகுந்தவை (யென்று சொல்லுவார்கள்.) விருஷபத்தைப் போன்றதும் மதத்தை தருவதுமான ஸோமத்திற்கு நீயாசனும். நீயே உரமிகுந்த ஸோமத்தினிடத்துத் திருப்தி யடைவாயாக—(எ-று) ஈண்டு இந்திர சம்பந்தமானவை எல்லாம் வலிமை மிகுந்தன வென்றும், இச்சைகளை வருஷிப்பவை யென்றும் கூறவதினிமித்தம், வ்ருஷா, வ்ருஷப:, வருஷ்ண: வ்ருஷஸு என்று ஒரே சொல்லின் பலவேறு பாடுகளையும் உபயோகித்துள்ளார்.

7. பகைபடக்கு நான்பெரிற் புகழ்விரும்பும்
 கப்பலெனப் பரவு முன்கண்
மிகவருகிற் சவனத்திற் பிரமமொடு
 மடைந்திடுவேன்; விளம்பு மெய்த
மகமலரு மொழிகளினை யவன்கேட்டுக்
 குறிக்கொள்வான்; ஆக்க மிக்க
தகையவனு மிந்திரனைக் கூபமெனச்
 சுவைதழுந்தித் ததும்புவோமே.

(இ-ள்.) (இந்திரனே! உனது பிரஸாதத்தினால்) சத்ருக்களை நாசக்கும் நான், யுத்தத்தில் ஸ்தோத்திரங்களை விரும்புபவனும், பெரிய நீர் நிலையைத் தண்ட வுதவும் கப்பல்போன்றவனுமான உனக்கருகில் யக்ஞத்தினிடத்து ஸ்தோத்திர மறைகளோடு வருவேன். அவ்விந்திரன் எங்களுடை

ய (அகமலர்ச்சியோடு கூடிய) மொழிகளைக்கேட்டு அவற்றைத்தனது இட்சியத்தில் வைத்துக்கொள்வான். செல்வமிகுந்தவனாகிய அவ்விந்திரனைக் குளத்தை வழியுமளவிற்கு நிறைப்பது போலச் சோமத்தால் நிறைப்போம் —(எ-று.) உத்ஸம்ந என்பதற்குக் 'கூபமென' என்னாது 'ஊற்றெனவே' என்றும் கூறலாம்.

8. சத்துருக்க ளிடரெம்மை யணுகாமு
னெமக்கருகே சார்க புல்லை
மெத்தவுமே யுண்டுதர நிரப்பியவாக்
கன்றினிட மேவல் போன்றே;
ஒத்தசதக் கன்மத்தோய்! சோபனமார்
துதிகளொடு முன்னை யாங்கள்
பத்தினிகள் வாய்க் காளைப் பருவமுள
புருடனெனப் பண்பிற் சேர்வோம்.

(இ-ள்.) சத்துருக்களினது துன்பங்கள் எங்களை நெருங்குவதற்கு முன்பு புல்லை நிறைய மேய்ந்த பசு கன்றினிடத்துப் பொருந்துவதுபோல எங்களுக்கருகே வருவாயாக. சதக்கிருதுவே! காளைப் பருவத்தோடு கூடிய புருஷர்கள் தங்களது பத்தினிகளை யடைந்து நிற்பதுபோல யாங்கள் உனக்கான நல்ல ஸ்தோத்திரங்களோடும் உன்னை நன்றாக வடைந்து நிற்போமாக —(எ-று.)

(வேறு.)

9. இன்றுனைத் துதிப்போனுக்கு மகோனியா மவள் காணிக்கை
நன்றுறக் கறக்கல், வேந்தே; தட்சிணை போற்றுவோர்க்குத்
துன்று வித்திடல்; பகன்றா னெம்பலன் குறையா திகல்;
மன்றினில் வீரரோடு பெருந்துதி யாம் வழங்கல்.

இதன் பொருளை மேல் பதினைந்தாவது சூக்தம் கடைச் செய்யுளிற் காண்க.

வருக்கம் 18.

## 208. (17) மண்டலம். 2. அநுவாகம். 2. சூக்தம். 6.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: 1—7 ஜகதி, 8. 9 திருஷ்டுப்; தேவதை: இந்திரன். அதிராத்திரத்தில் இரண்டாவது பர்யாயத்தில் இது அச்சாவாகனால் சொல்லப்படும் சஸ்திரமாம்.

(வேறு.)

1. அங்கிரசர் மானவவற் காற்றுக நூ
தனவருக்க, மவன்றன் வன்மை

## மண்டலம் 2 சூக்தம் 17.

தங்குறுதே சவை பழமை போற்றுன்றி
யொளிருவதாற், சார்ந்த மொய்ம்பி
னங்கமுற நன்றுக வடைபெற்ற
வானவையேவாஞ் சோம மார்ந்து
பொங்கியதன் வலியதனுற் புடைத்துவெளித்
திறந்துவிட்ட பொழுதின் மன்னே.

(இ-ள்.) (ஸ்தோதாக்களே!) மிகவும் உறுதியாக (விருத்திரனல் அடைக்கப்பட்டிருந்த பசுக்கூட்டங்களாகிய மேகங்களை யெல்லாம் ஸோமத்தைக் குடித்துப் பெருகிய தனது சம்பத்தினுல் அடித்துப் பெய்யுமாறு செய்தபொழுது அவனுடைய பலம் மிகுந்த தேஜஸ் முற்காலத்துப்போல மீண்டும் தோன்றுகிற காரணத்தால் அவ்விந்திரனுக்கு அங்கிரஸர்களைப் போலவே நீங்களும் புதியவையான அர்க்கங்களைக் கூறுவீர்களாக—(எ-று.) பணி யென்னும் அசுரனல் அடைக்கப்பட்ட குகைகளைச் சோமங் குடித்த மதத்தினுற் றிறந்துபசுக்கூட்டங்களை வெளிவிட்ட போது' எனப்பொருள் கூறலும் ஒன்று.

2. அவனுகல், முதற்குடியிற் றன்வலியே
யளவிட்டுத் தன்மேம் பாட்டை
நவமாக பெருக்கியவன், போதனிற்
கவசத்தா னுடி மெய்யைத்
தவமூடி விளங்கியவன், சூரன், வா
னதனைத்தற் சார்ந்து சுற்றுந்
தவலாத மகத்துவத்தாற் றலைமீது
தாங்கியவன் சாலத் தானே.

(இ-ள்.) முதற்றரம் ஸோமபானஞ் செய்தவுடனேயே தனது வலிமையினை யளந்து நேர்ந்துகொண்டு தனது மகிமையை விருத்தி செய்தவனும், யுத்தத்திற் றனது சரீரத்தைக் கவசத்தால் மூடிக் கொண்டு விளங்குபவனும், சூரனும், விண்ணைத் தனது கெடாத மகத்துவத்தாற் றலைக்கு மேற் றங்கியவனுமான அவனே (இந்திர னென்னும்) தேவனுகட்டும்—(எ-று.)

3. வீரமிகு முதற் கருமம் பெரியதனைப்
புரிந்தனை நீ விளம்பும் போற்றே
டாருமிவர் முனருனது வலிமையினைக்
காட்டுகையில்; அரிமாப் பூண்ட
தேரிலவ ருன்னுலே வாட்டப்பெற்
றிடமழிந்து தொகையாச் சேர்ந்தோ
ரோழிந்து பலவாறுப்த் தனித்தனியே
சிதறுண்டே யேகினுர்.

(இ-ள்.) (இந்திரனே!) மேலும் பிரஹ்மங்களாற் றுதிக்கும் இவர்களுக்கு முன் உனது வலியினைத் தோற்றியபோது வீரம் மிகுந்த உனது பெரிய முதற்கருமத்தினை வெளிப்படுத்தினை. ஒன்றாகக் கூடியிருந்த அசுரர்கள் அரீயென்னும் இரண்டு குதிரைகள் கட்டப்பெற்ற தேரின் மேலமர்ந்துள்ள வுன்னால் இம்சிக்கபட்டுத் தங்களது நிலையழிந்து பலதிக்குகளிலுஞ் சிதறுண்டு சீரழிந்து சென்றார்கள்—(எ-று.) அசுரர்களென்றது மேகங்களோடினை வென்பர் மேனாட்டாசிரியர்.

4. மேலுமெலாப் புவனத்துந் தன்வலியா
லீசான னாக மேவிக்
கோலவுண வுரமோங்கி யவற்றுக்கு
மேலானன்; குவலயத்தைச்
சாலவகிப்பவன் பூமி வானத்தைச்
சோதியினாற் றழைப்பித்தேன்ற
ஞால விருட் பிழம்பதனை தகைத்தாத்தான்
விரிந்துலகி னண்ணினனே.

(இ-ள்.) மேலும், அவ்விந்திரன் எல்லாப் புவனங்களுக்கும் தன் வலிமையினால் ஈசானனாகி, உணவுப் பொருள்களின் பெருக்கை யடைந்து எல்லாவற்றிற்கும் உயர்வாக விளங்கினான். குவலயத்தை மிகவும் தாங்கும் வஹ்நியாகிய வவ்விந்திரன் பூமி வானங்களைத் தனது வெளிச்சத்தால் நிறைவித்து, செருக்க மாயுள்ள இருட்பிழம்பை மூடித் தானே தன் சோதியால் உலகு முழுவதும் வியாபித்து நின்றான்—(எ-று.)

5. அசைவு பெறுமலைகளினைத் தன்வலியா
லுறுதியுற வமைத்தான்; மேகங்
கசிவுறவே மழைநீரைக் கீழ்நோக்கி
யொழுகு வித்தான்; காணு மெல்லா
உசிரினையும் பாலிக்கும் பூமியினைச்
தாங்கினனால்; ஓங்கு ஞான
குசலமதால் விண்ணைக் கீழ்வீழாது
பலமாகக் கூட்டினனே.

(இ-ள்.) ஆடிக்கொண்டிருந்த மலைகளைத் தனது பலத்தினால் உறுதியாக நிறுத்தினான். மேகத்தினின்றும் மழைநீரொழுகும் வண்ணம் ஆற்றினான். எல்லாச் சீவன்களையும் வளர்க்கும் பூமியைத் தன் பலத்தால் தாங்கினான். தனது ஞான குசலத்தால் விண்ணுலகம் கீழே விழுந்து விடாதபடி உறுதியாக நிறுத்தினான்—(எ-று.) உசிர் உயிரென்பதன் போலி.

வருக்கம் 19.

6. அவன்காத்தாற் பற்றுதற்குத் தகுந்ததுவாம்,
பாலகனு யவனி யோர்த

## மண்டலம் 2 சூக்தம் 17

றுவமையுறு ஞானமெலா மொருங்குகடந்
தவனிழைத்த வுயர்ந்தசப்ப,
மவனிதனிற் பெருமுழக்க மிடிமவனுங்
கிருவியினை யடித்து வீழ்த்திச்
சவநிலையிற் கிடைகொள்ள விழைத்திட்ட
பெருமைபெறுந் தனிவேறுனே.

(இ-ள்.) பிதா அல்லது பாலகனாய் எல்லா மனிதர்களது ஞானத்தையுங் கடந்த தனது புத்தியினால் அவ்விந்திரன் செய்ததும, பூமியிற் பெரிய முழக்கத்தோடு கூடிய வவன் கிருவியென்னும் அசுரனையடித்து வீழ்த்திப் பிணமாகக்கிடக்கும்படி செய்ததைப்பற்ற ஆயுதமுமாகிய வச்சிராயுதம் அவ்விந்திரனது கைகளாற் பிடிக்கத்தக்கதாம்—(எ-று.) க்ருவி, கிருவி, தோற்பை அல்லது மேகமென்ற பொருளுள்ளதென்பார் மேனாட்டாசிரியர். ஸாயனர் ஓரசுரனது பெயரென்பார்.

7. பெற்றாரோ டவரில்லிற் கிழமுற்ற
பெண் வீட்டிற் பிறரைப்போல
மற்றோர்பங் குற்றடையக் கேட்பதென
யானுன்னை வளமார் செல்வம்
பெற்றார யாசிப்பேன்; அதனைச்சீர்
பெறுவிக்கல்; பெரிது மளவை
யிற்றேயென் றளந்தெடுத்துப் பெருமகிழ்ச்சி
யெம்முடலுக் கீவதிகல்.

(இ-ள்.) பிதாமாதாக்களோடு பிறந்த வீட்டிலேயே அவருக்குச் சிச்ருஷை செய்துகொண்டு தன்வாணாளைக் கழித்த (கல்யாணமில்லாத) பெண் வீட்டிலுள்ள மற்றவர்களைப்போலத் தானும் சரிபங்கு பெற வேண்டுமெனக் கேட்பதுபோல யான் உன்னிடத்து வளப்பமிகுந்த செல்வத்தை யடையுமாறு யாசிப்பேன். அச்செல்வத்தை மிகவுங் கீர்த்தி பொருந்தியதாகச் செய்வாயாக. அதனை இவ்வளவு என்று அளந்துகட்டி இங்கு கொண்டுவந்து எங்களுடைய சரீரத்துக்குப் பெரிய மகிழ்ச்சியை யளிப்பதாகத் தருவாயாக—(எ-று.)

(வேறு.)

8. இந்திர, போஜனாக உன்னையா மழைப்போமாக;
இந்திர, கர்மத்தோடு மெனாமுனை வளிக்க நீயும்;
இந்திர, நானாவான வுதவியோ டெம்மைக்காக்க;
இந்திர, விடப, வெம்மைச் செல்வ மேய்ந்தவராச்செய்க.

(இ-ள்.) இந்திரனே! உன்னை யாங்கள் போகத்ரவ்வியங்களைத் தரும் வள்ளலாக மதித்து அழைப்போமாக. இந்திரனே! எங்களுக்கு நீ சத்கர்மங்களையும் உணவுப் பொருள்களையும் தருவாயாக. இந்திரனே! பலவிதமான

வுதவிகளை யளித்து எங்களைக் காப்பாற்றுவாயாக. இந்திரனே! இச்சைகளை யளிக்கும் காளையே! எம்மைச் செல்வவான்க ளாக்குவாயாக—(எ-று.) போஜன், வள்ளல்.

9. இன்றுனைத் துதிப்போனுக் குன்மகிகொளியாமவள் கர்ணிக்கை
நன்றுறக் கறக்கல், வேந்தே; தட்சிணை போற்று வோர்க்குத்
துன்று வித்திடல்; பகன்ரு னெம்பலன் குறையா தீகல்
மன்றினில் வீரரோடு பெருந்துதி யாம் வழங்கல்.

இதன் பொருளை இதற்கு முந்திய சூக்தத்திய கடைசிச் செய்யுளிற் காண்க.

வருக்கம். 20.

## 209. (18) மண்டலம் 2. அநுவாகம் 2. சூக்தம் 7.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: இந்திரன்.

1. தூய தேர் புதிது பூட்டப் பெற்றது காலை நான்கா
மேய நன்னுக முச்சாட்டி யேழுவாய்க் கயிறு பத்தாத்
தியவை யோட்டும் வீடு சேர்ந்தது, மாந்தர் சொர்க்கந்
தோய நிற்பது,போற் றிட்டி பொலிபெறத் தோய்ந்த தம்மா.

(இ-ள்.) பரிசுத்தமான யக்ஞமென்னும் நவதரமானதேர் காலையில் பூட்டப் பெற்றது. நான்கு ஜதைச் சோமம்பிழியும் கிராவங்களாகிய நான்கு நுகத்தடிகளையும், உதாத்த அநுதாத்த ஸ்வரிதமென்னுங் ஸ்வரங்கள் அல்லது மந்த்ர, மத்திம, உத்கிருஷ்டரூப வாக்குக்களாகிய மூன்று சாட்டைகளையும், காயத்திரி, உஷ்ணி அநுஷ்டுப், ப்ருஹதி, பங்தி த்ருஷ்டுப், ஜகதியென்னும்வேதவிசைகளாகியஎழு கடிவாளங்களையும், பாபங்களைப் போக்குங்காவல்களாகிய பத்து(சமஸாத்வர்யுக்களாகிய)கிரகங்களையும் உடையதும், மனிதர்கள் இதத்தை யடைந்து ஸ்வர்க்கத்திற் புகுமாறு செய்வதுமான அவ் யக்ஞம்ஸ்தோத்திரங்களும் இஷ்டிகளும் மிகுதிபாகச் சப்திக்குமாறு விளங்கிற்று—(எ-று.) யக்ஞத்தைத் தேராக வுருவகித்தார் வேதப்பண்ணெழின் எழுத்து மாத்திரைகளை முதல் மண்டல விறுதியிற் பக்கம் 256ற் காண்க.

2. ஈதவனென் றிரண்டு மூன்றெனுஞ் சவனந் தம்மிற்
போதுறலுற்ற, தெல்லா மாந்தர்க்கு மோதா வாகும்;
தீதிலாப்பிறர் மற்றென்றின் கருவினி லதனைத் தோற்ற
வோதுவர்; பலஞர் வெற்றி யுவந்தவீ தவற்றிற் சேரும்.

(இ-ள்.) இந்த யக்ஞம் (அல்லது ஸோமமென்பார் ஸாயணர்.) ஒன்று, இரண்டு, மூன்று ஸவனங்களிலும் கொண்டுவரப் பெற்றது. எல்லா மனிதர்களுக்கும் இவ்யக்ஞமே ஹோதாவாகும். பிறரித்விஜர்கள் வேறொருவிதகன்மத்தினிடத்து இதனை (யக்ஞத்தை அல்லது ஸோமத்தை)த்தோற்ற

## மண்டலம் 2. சூக்தம் 18.

லாமென்பர். ஆனல் பலனளிப்பதும் வெற்றி வாய்ந்துமான இந்த யக்ஞம் எல்லாவித யக்ஞங்களிலும் கலந்துகொள்ளும்-(எ-று) இவ்விருக்குக்கு மேனாட்டாசிரியர் பொருள் வேறு.

3. இந்திரன் றேரின் மாவைப் பூட்டினேன் விறையிற் சூக்த
நந்து நூதனத்த தன்னுன் றனைச் சுகமாக விங்கு
முந்துறக் கொணர்வான்; உன்னைப் பிற யஜமானர் தாம
தந்தர மதிக்கா தேய்க; விப்பிரர் பலரிங் குள்ளார்.

(இ-ள்.) நூதனமாகச் செய்யப் பெற்ற எங்களது சூக்தங்கள் அவனைச் சுகமாக இவ்விடத்திற்குக் கொண்டு வரும் வண்ணம் அவனது தேரில் அரியென்னுங் குதிரைகளிரண்டையும் பூட்டினேன். (இந்திரனே!) உன்னை இதர யாககர்த்தாக்கள் வழிமறிக்காதிருக்கட்டும். இவ்விடத்துப் பல மேதாவிகளாகிய பிராஹ்மணர்களுந் தங்கியிருக்கின்றனர்—(எ-று.)

4. இரண்டரி யோடும், வேந்தே, யிவணுறல்; அழைக்கப்பெற்றே
யிரண்டொடு மிரண்டி, னாறி, னெண்ணுறு மெட்டிற், பத்திற்,
றிரண்ட நற்றனத்தோ யேகல் சோமத்தைக் குடிக்க; ஈண்டு
திரண்டது சுதையு, மஃதை நிந்தனை புரியா தேய்க.

(இ-ள்.) இந்திரனே! உனது இரண்டு குதிரைகளோடும் வருவாயாக. நல்ல தனவானே உன்னை யழைத்த போது நான்கு குதிரைகளோடும், ஆறு, எட்டு, பத்து என்னும் எண்வாய்ந்த குதிரைகளோடும் ஸோமத்தைக் குடிக்க வருவாயாக. இங்கு ஸோமம் பிழியப் பெற்றுக் கூடிற்று. அதை வெறுக்காது அதனிடத்துப் பொருந்துவாயாக—(எ-று.)

5. இந்திர, இருபான் முப்பா னேய்ந்த நாற்பான் றுரக
முந்துற விரைவி னேடும் புரவிக ளைம்பான் மூட்டி
யிந்திர, வருக வாறு பத்துட னெண்ணு மேழு
நந்திய பதிற்று மாவிற் சோம யார்த்திடமே வநண்ணல்.

(இ-ள்.) இந்திரனே! இருபது, முப்பது, நாற்பது என்னும் எண் வாய்ந்த குதிரைகளோடு, வேகமாகச் செல்லும் ஐம்பது குதிரைகளையும் பூட்டி எங்களிடத்து வருவாயாக. இந்திரனே! அறுபது, எழுபது குதிரைகளோடும் ஸோமங் குடிக்க வருவாயாக—(எ-று.)

வருக்கம். 21

6. எங்களை நோக்கி, வேந்தே, யீண்டுற லெண்பான்; பத்து
மங்குறு நூறு மாவின், மகிழ்குறு சதஞ் சுமக்க;
துங்கவிச் சோமச்சாறு தூய்சுந கோத்திரத்தி
னுங்குறுக் களிப்பை யீய நுனக்கெனப் பிழிந்ததன்றே.

(இ-ள்.) இந்திரனே! எண்பது, தொண்ணூறு நூறு குதிரைகள் உன்னைச் சுமந்து செல்ல எங்களை நோக்கி நீயிங்கு வருவாயாக. இந்த ஸோம

ரஸம் உனக்கு மதத்தை யளிப்பதற்காகப் பிழியப் பெற்றுச் சுஹோத்ரங்க ளென்னும் பாத்திர விசேஷங்களில் ஊற்றப் பெற்றுள்ளன—(எ-று.) சுஹோத்ரா: என்னும் சொற்கு நற்பலனடையுமாறு ஆவுதிசெய்பவர்கள் என்பது பொருள். அது ஒருகுடிப் பெயராயிற்று. ஆனல் ஈண்டு ஸோம மூற்றும் ஒரு விதப் பாத்திரங்களுக்குப் பேராகக் கூறியுள்ளார் ஸாயணர்.

7. இந்திர, வெனதிப் போற்றை யெண்ணியிங் கடைக; உன்ற
னந்துறு மரியிரண்டைத் தேர்முக நாடிப் பூட்டல்;
அந்தில் பல்விடத்தும் போற்று லழைபட நிற்போனீயே;
சுந்தரச் சூர விந்தச் சவனத்தின் மதத்தைத் தோய்க.

(இ-ள்.) இந்திரனே! என்னுடைய இந்த ஸ்தோத்திரத்தைக் கருதி யிங்கு வருவாயாக. உனது இரண்டு அரியென்னும் குதிரைகளைத் தேர் முகத்திற் பூட்டுவாயாக. பலவிடத்துப் பலராலும் அழைக்கப்படுபவன் நீ. சூரனே, ஸோமம் பிழிந்தூற்றும் இந்த யக்ஞத்தில் மதங்கொள்வாயாக. —(எ-று.)

8. இந்திரன் மாட்டெ னன்பு பிரிந் தொருக்காலு மேயா
தந்தாக; அவனெமக்குத் தட்சிணை கறக்கல்; மேம்பா
டுந்திய வவன்காப் பேய்ந்த கரங்களி னுதவி கொண்டு
முந்து மொவ்வொரு யுத்தத்துமுதன்மையைப்பெறுகயாமே.

(இ-ள்.) இந்திரனிடத்து எங்களுக் கேற்பட்டுள்ள அன்பு ஒரு பொழுதும் குறையாம லிருக்கட்டும். அவன் எங்களுக்குத் தட்சிணையாகிய பசுவைக் கறந்தளிக்கட்டும். மேம்பாடுற்ற வவனது காவல் பொருந்திய கைகளின் ரட்சணையை யடைந்து ஒவ்வொரு யுத்தத்திலும் யாங்கள் வெற்றியை யடையட்டும்.—(எ-று.)

9. இன்றுனைத் துதிப்போனுக்கு மகோனியா மவள் காணிக்கை
நன்றுறக் கறக்கல், வேந்தே; தட்சிணை போற்று வோர்க்குத்
துன்று வித்திடல் பகன்று னெம்பலன் குறைபா டீகல்;
மன்றினில், வீரரோடு பெருந்துதி யாம் வழங்கல்.

இதன் பொருளை மண்டலம் 2 சூக்தம் 15 செய். 10ன் கீழ்க்காண்க.

வருக்கம். 22

## 210. (19) மண்டலம் 2 அநுவாகம் 2 சூக்தம் 8.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: இந்திரன்.

1. ஞானவான் பிழிந்தளித்த நல்லவி யாகுஞ் சோம
பீனமின் மதத்தை யன்று னெய்தியே குடிக்கப் பெற்ற;

## மண்டலம் 2 சூக்தம் 19.

மாளமார்ந் தோங்கி முன்னு விருத்திர னிதனைற் போற்று
மேனிலை நரரை யின்பச் சேவையை மேவினனே.

(இ-ள்.) ஞானவானுகிய யஜமானன் அபிஷவஞ் செய்தளித்த அவி யுணவாகிய ஸோமங்கள், அவ்விந்திரன் குற்றமற்ற மதத்தை யடையும் வண்ணம் அவனுற் குடிக்கப்பட்டன. அச்சோமத்தினுல் முன்னுளில் இந்திரன் வலிமை மிகுந்தோங்கித் தன்னை ஸ்தோத்திரஞ் செய்யும் யக்ஞ நேதாக்களாகிய மனிதரையும், தனக்கு இன்பத்தைத் தரும் ஸேவையையும் அடைந்தான்—(எ-று.) எதனுல் அடைந்தானே அந்த ஸோமங்களவனுல் குடிக்கப் பட்டன எனக்கூட்டுக.

2. மதத்துளி யிவற்ருல் மத்த மெய்தி வச்சிரத்தைக் கையி
லிதத்துட னெடுத்த வேந்த னிரினைத் தகை யகியைச்
சதித்தனன் பறவை தங்கள் கூட்டினைச் சார லொப்ப
நதிப்புன லின்ப மோங்க நாடியே பெருகு மாறே.

(இ-ள்.) வச்சிராயுதத்தைக் கையிற்றரித்த இந்திரன் ஸோமத்துளிகளால் மதத்தை யடைந்து தண்ணீரை யடைத்துவைத்துள்ள அகியை(விருத்திரனை யல்லது மேகத்தைச்) சேதித்துக் கொன்ருன், ஆறுகளின் நீர் இன்பத்தோடு பொங்கிக் கூடுகளை நோக்கிச் செல்லும் பட்சிகளைப் போலச் செல்லுமாறு—(எ-று.)

3. மகத்துவம் வாய்ந்த வேந்த னகியினை மடித்தோ,னீரின்
மகத்துவப் பெருக்கை முந்நீர் நோக்கியே வழங்கு வித்தான்;
இகத்தினி லென்றைத் தோற்றி யாவினை யெய்து வித்துச்
சுகத்துறத் தேசாற் பட்டப் பகலொளி தோய் வித்தானே.

(இ-ள்.) மகத்துவம் வாய்ந்தவனும், விருத்திரனை வதைத்தவனுமாகிய இந்திரன் தண்ணீரின் பெரு வெள்ளத்தைச் சமுத்திரத்தை நோக்கி யோடுமாறு செய்தான். இவ்வுலகத்துப் பிலத்துக்கு ளடைபட்டிருந்த அங்கிரஸர்களது பசுக்களை யவர்களடையுமாறு சூரியனை யுற்பத்தி செய்து, பணி யென்னு மசுரனுல் அடைக்கப் பட்டிருந்த பசுக்களை அவர்கள் அடைவித்தது மன்றித் தனது தேஜஸால் பகற்கண் டோன்றும் பிரகாசத்தையும் பிரஸாதித்தான்—(எ-று.) மேண்ட்டாசிரியர் இரவைத் தோற்றி நாட்களை முடித்தான் எனக்கூறுவர். அதாவது இரவை இளைப்பாறுவதற்காக ஏற்படுத்திப் பகல்களில் மனிதர்கள் தங்கள் தங்கள் வேலைகளைப்புரியுமாறுசெய்வித்தான் என்று வித்தாரம் கூறுவர். ஆனுல் ஸாயனர் அக்துநா என்பதற்குத் தேஜஸால் என்றே பொருள் கூறியுள்ளார்.

4. தாசுட மனிதற் கவ்வேள் தக்கபல் பொருளைத் தந்தான்;
விசினுன் விருத்திரன்ற னுடலினை,யீண்டிரவி
யாசினின் முதற்கணெய்த வரிதினின் முயன்ற மாந்தர்
பேசுறப் பரிதியோடு மித்தனும் பிறங்கினுனே.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 6.

(இ-ள்.) அவி பளிக்கும் தாசுதேனுகிய மனிதனுக்கு அவ்விந்திரன் உத்கிருஷ்டமான பல திரவியங்களைக் கொடுத்தான். இவ்விடத்து முதலில் சூரியனை யடைய வேண்டு மென்று மிகப்பிரயாசப் பட்டுக் கொண்டிருந்த யக்ஞ நேதாக்களாகிய மனிதர்களது கண்களுக் கெதிரில் அச்சூரியனேடு கலந்து உடனே பிரதிதினமும் தோன்றியவனுகிய இந்திரன் விருத்திரனைக் கொன்றுன்—(எ-று.) 'அவன் விருத்திரனைக் கொன்றுன். சூரியனை முதற்க ணடைய விரும்பும் மனிதர்கள் ஸ்தோத்திரங்களோடு உடனே யவ்விந்திரனைத் தேடுவது முறைமை;' எனமொழி பெயர்ப்பர் மேனுட்டாசிரியர்.

5. சோமத்தைப் பிழிந்தளிக்கு மர்த்தியற் கிரவி யீந்தான்,
வாமமார் தேவன் போற்றின் மருவியோ னுன வேந்தன்
சேமமார் தனத்தைச் சங்கடத்தினைத் தீர்ப்பதைத் த
ஸோமமார் பங்கே யென்ன வேதச னளித்த போதே.

(இ-ள்.) ஏதசன் என்னும் ரிஷி ஸங்கடத்தைத் தீர்க்கும் ஸோமமாகிய செல்வத்தைப் பிதா புத்திரனுக்குப் பங்கை யளிப்பதுபோல இந்திரனுக்குக் கொடுத்தபோது, ஸோமத்தைப் பிழிந்து ஆவுதிசெய்யும் மர்த்தியனுக்கு அழகிய தேவனும், ஏதசனுல் துதிக்கப்பட்டவனுமான இந்திரன் சூரியனைக் கொடுத்தான்—(எ-று) இரவி, சூரியனென்னும் ஸ்வச்வன் மகனுக்குப் பரியாய நாமமாகவந்தது. மண். 1 சூக். 61 செய். 15 நோக்குக.

### வருக்கம் 23.

6. ஒளியுள வவன்றன் றேரை யோட்டிய குற்சனுக்கா
விளிதராக் குயவன் சுட்டு ணன்னிவர் தம்மைக் கொன்றுன்;
அளிபொடு திவோதாசற் கென் றரியுஞ் சம்பரன் புரங்க
ளௌிதினிற் பொடித்தா னென்பா ஞேடு தொண்ணூற்றை
யென்னவ்,

(இ-ள்.) ஒளியோடு கூடியவனுகிய அவ்விந்திரன் தனக்கு ஸாரத்தியஞ் செய்த குற்சனுக்காக, ஒருவராலும் கொல்லமுடியாத குயவன் சுஷ்ணன் என்னும் அசுரர்களைக் கொன்றுன். திவோதாஸன் என்னும் அரசனுக்காகச் சம்பராசுரனது தொண்ணூற்றொன்பது கோட்டைகளையும் அழித்தான்—(எ-று.) குயவன், சுஷ்ணன் இவர் வறட்சிக்காதாரமான அசுரர்கள். குத்ஸன், திவோதாஸன் இவர்கள் இந்திரனுக் குகந்தவர்கள். இவர்களைப்பற்றி மண். 1 சூக். 112, 116 இவற்றிற் காண்க.

7. இந்திர, வுனக்கெமுள்ளத் தென்னிப்போற் றளிப்போம், கீர்த்தி
நந்துற வெமக்கு, வன்மை நாடியுன் றனக் கியைத்தே;
அந்துக வுனது நட்பை யடைகுவான் விரும்பும் யாங்கள்;
முந்துற வணக்கல் தெய்வ மில்லவர் படையை மொய்ம்பின்.

(இ-ள்.) இந்திரனே! உனக்குப் பலத்தையூட்டி யெங்களுக்குக் கீர்த்தியோங்குமாறு உன்வயின் ஸ்தோத்திரங்களைக்கொண்டு வருவோம். உன்

## மண்டலம் 2 சூக்தம் 20.

யையடைய விரும்பும் யாங்கள் எழடி செல்வதற்குள்கிடைக்கக்கூடியதாகிய உனது தோழமையை யடைவோம். தெய்வமில்லாதவர்களாகிய அசுரர்களின் இம்சைக்குரிய ஆயுதங்களை வணக்குவாயாக.(அல்லது அழிப்பாயாக)—(எ-று.) வடமொழி மூலத்தில் தோழமை என்பதற்கு ஸாப்தம் என்றுள்ளது. அதற்குப் பொருள் எழடி நடந்து செல்வதற்குள் அடையக்கூடியது அல்லது சிநேகம் என்பதாம்.

8. சூரவுன்றனைக் கிருற்சமதர் மகிழ்வுறுத் தப் போற்றை
நேருற வமைத்தார் மார்க்க நெறிப் படுத்தமைப்பா ரொப்ப;
வருறு மறை நவத்தி னிழைப்பவர், வேந்தே, யன்னஞ்
சாரு நல்விடு வன்மை சுக மிவற்றினிற் றழைக்கல்.

(இ-ள்.) சூரனே! உன்னைக் கிருத்ஸமதர்கள் ஸந்தோஷப்படுத்துமாறு, நடப்பதற்குப் பாதையைச் செப்பனிட்டமைப்பவர்களைப்போல ஸ்தோத்திரங்களை யமைத்தார்கள். இந்திரனே! புதிதாக வுனக்கு ஸ்தோத்திரத்தைச் செய்பவர்கள், உணவையும் அவ்வுணவு நிறைந்த நல்ல வீட்டையும், பலத்தையும் ஸுகத்தையும், அடைந்து சிறக்கட்டும்—(எ-று.) கிருத்ஸமதர் என்று ரிஷி தன்னைப் படர்க்கைப்படுத்திக் கொண்டதனுற் பன்மையிற் கூறினர் என்பர் ஸாயணர். 'க்ருணதே ஸ்துதிகர்மா, க்த்ருஸமதக:' என்பது நிருக்தம். புகழ்வதிற் களிகொள்பவனென்பது பொருள். சௌநகர் காலத்தில் V பக்கத்தைப் பார்க்க.

9. இன்றுனைத் துதிப்போனுக்கு மகோனியா மவள் காணிக்கை
நன்றுறக் கறக்கல், வேந்தே; தட்சிணை போற்று வோர்க்குத்
துன்று வித்திடல்; பகன்று னெய்பலன் குறையா தீகல்;
மன்றிவில் வீரரோடு பெருந்துதி யாம் வழங்கல்.

(இ-ள்.) இந்திரனே! இன்று உன்னைத் துதிப்பவனுக்கு உனது (மகோனி) செல்வவதியாகிய அப்பசு தட்சிணையைச் சிரேஷ்டம்பெறக் கறந்தளிக்கட்டும். ஸ்தோத்திரஞ் செய்பவர்களுக்கு அத்தட்சிணையை நீ யளிப்பாயாக. பகன் எமது பலனைக் குறைத்துவிடாமல் அளிக்கட்டும். யாகக்கூட்டத்தில் நல்ல வீரர்களோடு கூடிய யாங்கள் உனக்குப் பெரிய ஸ்தோத்திரங்களைக் கூறுவோம்—(எ-று.) இச்செய்யுள் முன்பும் வந்துளது. மண். 2 சூக். 15 கடைசிச்செய்யுளை நோக்குக.

வருக்கம் 24.

## 211. (20) மண்டலம் 2 அநுவாகம் 2 சூக்தம் 9.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை; இந்திரன்.

1. இந்திர, வறிக, வுன்பாட் டேந்தியே சேர்ம வன்னந்
தந்தன, முறைவு வேண்டிப் பெறுபவன் றேர்சப்பாதித்

## அஷ்டகம் 2 அத்தியாயம் 6.

தந்தலிற், போற்றிழைத்துப் புகழ்ச்சியி னொளிர்ந்து வீரர்
நந்து முன்னொத் தோர் மாட்டுச் சுகத்தினை நாடும் யாமே.

(இ-ள்.) இந்திரனே! உணவுப்பொருள்களை யடையுமாறு யுத்தஞ் செய்பவன் தேஸரச் சம்பாதித்து நெருங்குவதைப்போல, ஸ்தோத்திரங்களை யாற்றுபவர்களும் உன்னைப் புகழ்வதினாற் காந்தி பெற்று நிற்பவர்களும் உன்னொத்த வீரர்களாகிய அக்கினியாதியதேவர்களிடத்துச் சுகத்தினைப்பெற விரும்புவோருமாகிய யாங்கள் உன்னிடத்து ஸோமமாகிய அவியுணவை யேந்திக்கொண்டு வந்தளிக்கிறோம் என்றறிவாயாக—(எ-று.) தந்தனம் தருகிறோம் என்னும் பொருளில் வந்தது.

2. இந்திர, நீயும் பற்ப லுதவிகளோடு மெங்கள்
நந்துறு துணைவன்; உன்னை நாடுவோர்க் கரியை வாட்டுஞ்
சுந்தரனுவாய்; தாசுடன் றனக் கினனும்; துன்பம்
விந்தையி னவிப்பாய்; சேவிப்பவன் விழை கருமத்தோ னீ.

(இ-ள்.) இந்திரனே! உன்னுடைய பற்பல உதவிகளோடு நீ எங்களுக்குத் துணைவனுவாய், உன்னை யடைய விரும்புவோர்க்குப் பகைவர்களை வாட்டுபவன் நீ. அவியளிக்கும் யஜமானனுக்கு நீ (இனன்) ஸ்வாமியாம். அவனது துன்பத்தை நன்றாய் நீக்குவாய். உனக்கு அவியளித்து உன்னைச் சேவிப்பவன் விரும்பும் உபகார கர்மங்களோடு கூடியவன் நீ—(எ-று.)

3. இந்திரன், றருணன், யாரு மழைத்திட வேய்வோன், றோழன்
சுந்தரக் கவியாற் பாடித்துதித் தவியமைத் தவற்றை
முந்துறச் சமைத்துக் கீதமொழிந்து போற்றுபவன் றன்னை
நந் துதவிகளாற் றாக்கு மவன் சிவப் பாதா வாகல்.

(இ-ள்.) இந்திரனும்,நித்திய விளமை வாய்ந்தவனும், எல்லாராலும் அழைக்கப்படுபவனும், தோழனும், அழகிய கவிகளாற் றுதித்துப் பாடி அவிப்பொருள்களைச் சேகரித்து அவற்றைப் பக்குவப்படுத்திப்பின் ஸாமகீதங்களாற் புகழ்ந்து ஸ்தோத்திரம் செய்யும் யஜமானனுக்கு நல்ல வுதவிகளை யளித்து அவனது காரியங்களை விருத்திக்குக்கொண்டு வருபவனுமான அவன் நரர்களுக்கு மங்கலகரமான பரிபாலகனை வமையட்டும்—(எ-று.) பாதா வடமொழிப்பதம், பரிபாலகன் என்னும் பொருட்டு.சிவம் மங்கலப் பொருளது, நரர்க்கு என்னும் சொல் செய்யுளிலமைக்கவிடமின்றி விடுபெற்றது.உரையில் நோக்கிக்கொள்க.

4. முந்தையோ ரோக்க மெய்தி முனிவர்த் துடைப்பானின்ற
வந்த விந்திரனைப் போற்றி யழகுறப் புகழ்வேன்; அன்னோன்
சுந்தர மறையாற் றன்னைத் துதித் திரக்கும் புதிய
நந்து மாயுளவன் வேண்டும் பொரு ளபிலாசை நல்கல்.

(இ-ள்.) முற்காலத்தவர்கள் யாருடைய உதவியினுல் அபிவிருத்தியையடைந்து பகைவர்களை யடக்கும் வலிமையைப் பெற்றார்களோ அவ்

விற்பினை ஸ்தோத்திரஞ் செய்து புகழுவேன். அழகிய பிரஹ்மங்களால் தன்னைப்புகழும் நூதன மனிதன் விரும்புகின்ற செல்வவிச்சை வாய்ந்த ஸ்தோத்திரத்தின் பலனை யவனளிக்கட்டும்—(எ-று.) நர்தும் ஆயுன் அவன், தீர்க்க ஆயுள் உள்ளமனிதன். அவனே ஸ்தோதாவாம்.

5. அங்கிரர்த் துதியின் பூட்டு மவனவர் மறையை யோக்கம்
பொங்கவே வளர்த்தான்; வேந்தன், பொருந்தவர் நெறியைச்
செம்மை
தங்குற விளைத்தான்; எவ்ரு ஷுடையினைக்கவர்ந், தசுன
னங்கமார் பண்டைமொய்ம்பையழித்தனன் றுதிக்கப்பெற்றே.

(இ-ள்.) அங்கிரஸ கோத்திரத்தார்களது ஸ்தோத்திரங்களின் இன்பத்தை யடைந்தவன் அவர்களது பிரஹ்மங்கள்வலிபெறுமாறு அவற்றை வளர்த்தான். இந்திரன் அவ்வங்கிரஸர்கள செல்லும் நெறியைப் பணிகளது உபத்திரவத்தினின்று நீக்கிச் செம்மைப்படுத்தினன். சூரியனால் (அல்லது தனது ஆத்ம புத்தியினுலென்பார் ஸாயணர்.) உஷஸைக்கவர்ந்து, ஸ்தோதாக்களாற் புகழப்பெற்று அச்னன் என்னும் அசுரனது பழமையாகிய வலிமையைக் கவர்ந்தான்—(எ-று.) அச்னன் அசுனனெனச் செய்யுளில் நின்றது. எல்லாச்சகத்தையும் தனது தேஜஸால் அழிப்பவன் என்பது பொருள். இது ஒரு அசுரன் பெயர்.

வருக்கம் 25.

6.- கீர்த்திமான் வேந்தன் றேவன் கிளரதிசயத் தோற்றத்தோன்
சீர்த்தியின் மனிதர்க்காகச் சிறந்து மேனின்ருன் கண்டீர்;
போர்த்தபேர் வலிய னன்னம் பொருந்தியோ னுலகைவாட்டு
மார்த்தியன் ருச னன்பினடைந்துள சிரத்தைத் தாழ்த்தான்.

(இ-ள்.) கீர்த்தி பொருந்தியவனும், தேவனும், அதிசயத் தோற்றத்தோடு கூடியவனும் (பார்ப்பதற்கு அழகாயுள்ளவனு மென்றபடி.) ஆன இந்திரன் மனிதர்களுக்குத் தானஞ்செய்யும் கருத்தோடும் புகழோடும் சிறந்து வார்த்தவமுகமாக நின்ருன். மிகுந்த வலிமையோடு கூடியவனும், அன்னத்தோடு கூடியவனுமானவவன்உலகை வருத்தும் ஆசைமிக்க தாசன் என்னுந் துஷ்டவசுரனுக்குப் பிரியமான அவனது தலையைத்தாழும்படி செய்தான்—(எ-று.) தாசன் ஈண்டு சிறப்புப்பெயராகக் கொள்வர் ஸாயணர்.

7. விருத்திர வதத்தைச் செய்தோன் புரந்தரன் வேந்த னன்று
னுருக்கிக் கீழ்ச் சாதித்தாசிச்சேனையையொழித்தான்; மாந்தர்
திருத்தியி னுறைபப்பூமி நீரையுஞ் சிறக்கத் தோற்றி,
யருத்தியிற் கூறும் யக்ஞவான் புகழ்த்துதி நிறைத்தான்.

(இ-ள்.) விருத்திரவதஞ் செய்தவனும், சம்பரனது புரங்களைப் பொடித்தவனும், இந்திரனுமாகிய வவன் கீழ்சாதியிற்றோன்றிய தாஸிகள சேனைக்கூட்டத்தைக் கடிந்து கொன்ருன். மனிதர்கள் சுகப்படுமாறு

பூமியையும், தண்ணீரையும் சிருஷ்டித்தான். யஜமானன் ஆதாரத்தோடுகூறும் புகழ் ஸ்தோத்திரங்களைப் பலனுடனிறைந்து நிற்கும்படி செய்தான்—(எ-று.) இரண்டாமடியை'உருத்துக் கிட்டினன் றன்றுசிச் சேனையையொழித்தான்' என மாற்றிப் படித்தலும் தகும். அற்றேல் வடமொழி மூலத்திலுள்ள கிருஷ்ண சப்தத்துக்கு நிகிருஷ்டஜாதி எனப் பொருள் கொள்ளாது கிருஷ்ணனென்னும் அசுரனது பத்தினியினது கருப்பத்திலிருந்த தாஸச்சேனையைக் கொன்றானெனப்பொருள் கொள்ளுக, இப்பொருண்மைக்காதாரத்தை மண். 1 சூக். 101 செய். 1ற் காண்க.

8 தேவரா லற விலாப நிமித்த, மிந்திரன் றிறலை
மேவுமா, றவி நிதமு மொழுங்கினி னளிக்கப் பெற்ற,
தோவறுகுலிச மன்னுன் கரங்களி லுதவு காலை
வீவுறத் தாசர்க் கொன் றன்னு ரயப்புரம் பொடித்தான்.

(இ-ள்.) தண்ணீரை யடையும் ஹேதுவாகிய யக்ஞத்தில் தேவர்களாகிய யஜமானர்களால் ஒவ்வொரு ஸவனத்திலும் தவறாமல் ஒழுங்காக இந்திரன் வலிமையை யடையுமாறு அவியுணவானது அளிக்கப்பெற்றது. அவனது கரங்களில் வலிமைகெடாத வச்சிராயுதத்தை அவர்கள் (அசுரவதஞ்சனையாக) வைத்தபோது அவ்விந்திரன் தஸ்யுக்களைக் கொன்றதுமன்றி அவர்களது இரும்பாலான கோட்டைகளையும் தூள்படுத்தினன்.—(எ-று.)

9. இன்றுனைத் துதிப்போனுக்கு மகோனியா மவள் காணிக்கை
நன்றுறக் கறக்கல், வேந்தே; தட்சிணை போற்றுவோர்க்குத்
துன்று வித்திடல்; பகன்று னெம்பலன் குறையா தீகல்;
மன்றினில் வீரரோடு பெருந்துதி யாம் வழங்கல்.

(இ-ள்.) இந்திரனே! இன்று உன்னைத் துதிப்பவனுக்கு உன்னு (மகோனி)செல்வவதியாகிய அப்பசு தட்சிணையைச் சிரேஷ்டம் பெறக்கறந்தளிக்கட்டும். ஸ்தோத்திரஞ் செய்பவர்களுக்கு அத்தட்சிணையை நீ யளிப்பாயாக. பகன் எமது பலனைக் குறைத்துவிடாமல் அளிக்கட்டும். யாகக்கூட்டத்தில் நல்ல வீரர்களோடு கூடிய யாங்கள் உனக்குப்பெரிய ஸ்தோத்திரங்களைக் கூறுவோம்—(எ-று.) இச்செய்யுள் முன்பும் வந்துளது. மண். 2 சூக். 15 கடைசிச்செய்யுளை நோக்குக.

வருக்கம் 26.

## 212. (21) மண்டலம் 2 அநுவாகம் 2 சூக்தம் 10.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி:கிருத்ஸமதன்;வடமொழிச்சந்தம் 1-5, ஜகதி, 6 திருஷ்டுப்; தேவதை: இந்திரன்.

1. விசுவபதி, தனப்பதி,நற் றுறக்கபதி,
யெக்காலும் வெற்றி யோங்கு

## மண்டலம் 2 சூக்தம் 21.

மசுவபதி, நரப்பதி, வேளாண்மையினற்
பதி, நிரை யடையு நாயன்,
பசுவை யுறுபதி, பேவரும் வணங்குறுமிந்
திரற்காகப் பரிந்து மிக்க
விசையுறு சோமம் பலரும் விழைவதனைக்
கொடுவருக மிகவு மன்னே.

(இ-ள்.) (அத்வர்யுக்களே!) விசுவத்துக்கும் நாயகனும், தனத்துக்கு ஸ்வாமியும், ஸ்வர்க்கபதியும், எப்பொழுதும் வெற்றியோடு கூடியவனும், அசுவபதியும், ஸஸ்யாதி பயிர்களுக்கு நாயகனும், ஜலத்தைப்பெறும் செல்வவானும், பசுக்களுக்கு எஜமானனும், எல்லாரும் வணங்கத்தக்கவனுமான இந்திரனுக்காகக், கமனீயமான ஸோமத்தைக் கொண்டுவந்து உதவுவீர்களாக.—(எ-று.) நாயன், நாயகன் ஸ்வாமி என்றபடி. விசையுறு சோமம் வேகத்தோடு கூடிய ஸோமமென்க. அவ்வடைஎதுகை நோக்கிச் சேர்த்தது.

2. யாவரையு மடக்குபவ, னானமுறுத்
துவன், பொருளை யெய்து வோ, னிப்
பூவதனி லெவராலுஞ் சயிக்கரியன்,
விதி, வன்னி, பொருந்தி மற்றோர்
மேவரியன், பெருங்குரல, னெக்காலும்
வலிமைகொடு வெற்றி யேய்வோன்,
பாவுபுக ழிந்திரற்கு நமவென்னும்
போற்றதனைப் பகர னன்கே.

(இ-ள்.) எல்லாரையும் அடக்குபவனும், அவர்களைப்பங்கப் படுத்துபவனும், பகைவரது பொருளை யடைபவனும், உலகில் எவராலும் ஜயிக்க முடியாதவனும், எல்லாவற்றையும் கர்மபலன்களை யுண்ணுவிக்கும் விதியும், எவற்றையும் தாங்கும் வஹ்நியும், (இறுமாப்புள்ள)பிறரால் அடைய முடியாதவனும், பெருங் குரலோடு கூடியவனும், எப்பொழுதும் தனது பலத்தினாற் சயத்தை யடைபவனுமான கீர்த்தி பரந்த இந்திரனுக்கு நமவென்னும் சுத்ரோடு கூடிய ஸ்தோத்திரங்களை (ஸ்தோதாக்களே!) கூறுவீர்களாக—(எ-று.) விதி, ஊழ், கடவுள் என்பன ஒருபொருளன. வஹ்நி எல்லாவற்றையும் சுமப்பவன் என்பது பொருள். பூவதனில், பாவு புகழ், இவை எதுகைநோக்கிச் சேர்த்தன. ஸாயணர் துவிக்ரயே என்பதற்குப் பூரணமான கழுத்தோடு கூடியவனே அல்லது பலராலும் துதிக்கப் படுபவனே யெனப் பொருள் கூறுவர்.

3. எக்காலும் வலிமையுள, னரர்விரும்புங்
குணத்த, னரர்க்கிறைவ, னென்னு
ருக்கால வோட்டுபவன், பொருநன், மது
வொடுபூரிப் புற்றோ, னென்பின்
மிக்காரைச் சேர்ப்பவன், தன்வலிமைகொடு
பகைவதைப்போன் வேண்டு வோர்க்கு

## அஷ்டகம் 2 அத்தியாயம் 6.

திக்காரஞ் செயாதிறைஞ்சு மரிவீரக்
கிருத்தியத்தைச் செப்புவேனே.

(இ-ள்.) எல்லாக் காலங்களிலும் வலி மிகுந்தவனும் ஜனங்களால் விரும்பப்படுந் தன்மையனும், ஜனங்களை யடக்கியாளும் பதியும், பகைவர்ப யந்து நடுங்கும் வண்ணம் அவர்களை இடம்விட் டோடச் செய்பவனும் மதுவினால் நிறைக்கப் பட்டவனும், வீரதம் புரிவாரைப் பலனளித்துத் திரட்டுபவனும், தன்பலத்தினால் பகைவர்களைக் கொல்லுபவனும்,ஸ்தோதாக்களாற் கொண்டாடி யழைக்கப் படுபவனுமான இந்திரனது விருத்திர வதமாதிய வீரச் செயல்களைக் கூறுவேன்—(எ-று.) உக்கு ஆல எனப்பிரித்துப் பொருள் கொள்ளுக. திக்காரஞ்செயாது என்றசொற்றொடர் எதுகை நோக்கிச் சேர்த்தது.

4. எதிரில்லாக் கொடையாள, னிடப, மிடர்
புரிவோரை வதைப்போ, னாழ்ந்தோ,
னதிகாந்தி யுள்ளமகா, னெவராலு
மடைவரிய வறிவின் மிக்கோன்,
வதிபூன்ற பொருடருவோன், பகைவதைப்போன்,
திடம்வாய்ந்தோன், வளர்ந் தகன்றோன்,
விதிபூண்ட நன்மகத்தோ, னிந்திரனும்
வைகலெல்லை விழைந் தமைத்தான்;

(இ-ள்.) தனக்கு ஸமானமில்லாத தாதாவும், இச்சைகளை யளிக்கும் காளையும், இடைஞ்சல் செய்பவரைக் கெடுப்பவனும், காம்பீரியமுள்ளவனும், மிக்க காந்தியுள்ள மஹானும், ஒருவராலு மடையமுடியாத ஞானத்தோடு கூடியவனும், பூரணமான வஸ்துக்களை யளிப்பவனும், சத்துருக்களை வதைப்பவனும், திடவானும், விஸ்தாரமாகத் தனது தேஜஸால் விரிந்தவனும், ஒழுங்காய் நடத்தப்பெறும் நல்ல யக்ஞங்களோடு கூடியவனுமான இந்திரன் உஷஸையும் சூரியனையும் பிறப்பித்தான்-(எ-று.) அநநுதோவிருஷப: எனக்கூட்டி ஒருவருக்குமடங்காத காளையெனப் பொருளுரைப்பர் மேனாட்டாசிரியர். அவ்வகையே வைகலையும் எல்லையுமென்றாது வைகலினது எல்லையெனக் கொள்ளுவார் அவர்.

5. மறைதூண்டுமவ, ரரிவை விரும்புயவர்,
தெள்ளறிவின் மன்னி நின்றோ,
ரறறாண்டு மவனிடத்தே யருநெறியை
யடைந்தனரா லருந் தவத்தால்;
முறையாக வவன்காவல் விழைந்தவவ
ரிந்திரன்கண் மொழியும் போற்றோ
டறைகாம வழிபாடு மாற்றிமிகு
நிதிபசுவு மடைந்தா ரன்றே.

(இ-ள்.) ஸ்தோத்திரங்களை இந்திரனுக்காகச் சொல்லுவோரும், இந்திரனை விரும்புவோரும், மேதாவிகளுமான ஆங்கிரஸர், வெள்ளப்பெ

## மண்டலம் 2 சூக்தம் 22.

ருக்கைத் தூண்டிவிடும் இந்திரனிடத்திலிருந்து யக்ஞநெறிகளால் அல்லது தவத்தினால் (பசுவைப்பெறும்) அரியமார்க்கத்தை யடைந்தார்கள். அவனது ரட்சணைகளை விழைந்த அவ்வாங்கிரஸர், ஸ்தோத்திரங்களையும் வழிபாடுகளையும் செய்து இந்திரனிடத்திலிருந்து மிக்க செல்வத்தையும் பசுக்களையும் பெற்றார்கள்—(எ-று.)

6. உத்தமச் செல்வம், வேந்தே, யுதவுக, கருமச்சித்த
நத்துநற் பாக்கியத்தோ, டருந்தன நிறைவு, மெய்கட்
கொத்தமெய்ப் புதல்வர் கேட்டி னுடைவுறாத்தன்மை,வாக்கு,
மெத்தவுஞ் சுகத்தை யூட்டு நற்றினச் செறிவு மின்னே.

(இ-ள்.) இந்திரனே! சிரேஷ்டமான செல்வத்தையும், கருமகுசலதையோடு கூடிய மனத்தையும், சௌபாக்கியத்தையும், தனஸமிருத்தியையும், எமது சரீரத்துத் தோன்றிய புத்திர பௌத்திரர்களுக்குக் கேடுறாததன்மையையும், நல்ல வாக்கையும், சுகதரமான பகல்களோடு கூடிய நன்னாட்களையும் எங்களுக்குத் தருவாயாக—(எ-று.)

### வருக்கம் 27.

## 213. (22) மண்டலம் 2 அநுவாகம் 2 சூக்தம் 11.

4 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: 1 அஷ்டி, 2, 3 அதிசக்வரி, 4 அதிசக்வரி அல்லது அஷ்டி;தேவதை: இந்திரன்.

இச்சூக்தம் அசுவமேதத்தில் மத்தியநாளிற் சொல்லப்படுவது. மஹாவிரதத்திலும் மாத்தியந்தின ஸவனத்தில் பிராஹ்மணாச்சாம்ஸியினால் ஸ்தோத்தரிக்கப்படும்.

(வேறு.)

1. திகத்துகந்தனிற் பெரியன் மொய்ம்பு மீச்
சேர்ந்தவன் சுதை தன்னை யின்புட
னகத் தடைந்தனன், விண்டுவோடு கள்
ளார்ந்தனன் யவச் சத்தினைக் கலந்
திகத்து முன்புபோ லாசை பெய்தியே;
யேய் விசாலன் மான் கன்ம மாற்றவே
யுகப்பளித்ததஃ, தொளியு ளோனவ
னுண்மை யிந்துமெய் வேந்தனைப் பெறல்.

(இ-ள்.) அபிப்லவ மென்னும் கர்மத்தின் முதல் மூன்று நாட்களாகிய சோதி, கௌ, ஆயுஎன்னும் தினங்களில், மகிமை பொருந்தியவனும், மிகுந்த பலவானுமாகிய இந்திரன் ஸோமச்சுதையி னிடத்துத் திருப்தி ய

டைந்தான். யவப்பொரிமஃவோடு கலந்த அச்சோமத்தை முன்பு போலவே விஷ்ணுவோடு ஆசையுடன் வயிறு நிறையக் குடித்தான். தனது தேஜஸால் விரிந்தவனும், மஹானுமான அவ்விந்திரன் கர்மங்களை நன்ருகப்புரியுமாறு அச்சோமம் அவனுக்கு மதத்தை யளித்தது. திவ்விய ஒளிபொருந்தியவனும் ஸத்தியனுமான அவ்விந்து (ஸோமாபிமானி தேவதை) ஸத்தியவானுகிய இந்திரனை யடையட்டும்—(எ-று.) மான், மஹான் என்பதன்சிதைவு.

(வேறு.)

2. பின்னர்நல் லொளிவீ சவன்றனது மொய்ம்பாற்
பெரிதுபோர் செய்து கிருவி
நன்னரி னடங்குற நலித்துவின் ணெடுபுவிக
ளுட்பினின் முற்று வித்துத்
துன்னரிய தன்வலியி னுன்மிக வளர்ந்துபின்
ருேய்த்தான் வயிற்றி லொருபங்,
கன்னவொளி யிந்துவாஞ் சத்தியனு மிந்திரத்
தேவன் மெய்யவனை யெய்தல்.

(இ-ள்.) பிற்பாடு நல்ல காந்தியை வீசும் அவ்விந்திரன் தனது பலத்திஞற் பொருது கிருவியென்னும் அசுரனை வாட்டிப் புவிவானங்கள் வலிமையிஞல் நிறையுமாறு செய்வித்துத் தனது வன்மையிஞல் மிகவும் வளர்ந்து, தனது வயிற்றில் ஸோமத்தின் ஒருபங்கை யூற்றிஞன். அப்பேர்ப்பட்ட ஒளிவாய்ந்த ஸோமாபிமானி தேவதையாகிய இந்து வென்னும் ஸத்திய புருஷனும், மெய்ம்மை யோடுகூடிய இந்திரன் என்னும் தேவனை யடையட்டும்—(எ-று.) ஒருபங்கை வயிற்றிலூற்றிஞ னென்னவே மற்றப் பங்கை இதர தேவர்களுக்காக விட்டு வைத்தான் என்ருயிற்று. க்ருவி, கிருவி மண் 2 சூக். 17 செய். 6 பார்க்க.

3. கன்மமொ டுதித்தநீ வலிமையொ டெவற்றையுங்
கடிது தாங்கிட விழைந்தாய்;
வன்மமுள வீரியத் தோடுநன் கோங்கிஞய்;
வன்மரைப் பொரு தடக்கித்
தன்மரை யறிந்துனைப் புகழுவோர்க் கோங்குவாழ்
வரும்பொரு ளிவற்றை யீந்தாய்;
அன்னவொளி யிந்துவாஞ் சத்தியனு மிந்திரத்
தேவன்மெய் யவனை யெய்தல்.

(இ-ள்.) (இந்திரனே!) யக்ஞ கர்மங்களோடு கூடப் பிறந்த நீ உன்னுடைய வலிமை யோடுகூட எல்லாவற்றையுந் தாங்க விச்சித்தாய். வன்மம் பொருந்திய பராக்கிரமத்தோடு நன்ருக வளர்ந்தாய். உன்ஞேடு யுத்தஞ் செய்பவரோடு சண்டை செய்து அவர்களை யடக்கித், தர்மாதர்மங்களைப் பகுத்தறிந்து, உன்னைத் துதிப்பவர்களுக்கு மிகுந்த வாழ்வையும் இனிய செல்வத்

## மண்டலம் 2 சூக்தம் 23.

தையும் அளித்தாய். அந்தத் தேவனும், ஸத்தியனுமாகிய இந்துவும் உண்மை வாய்ந்த தேவனாகிய இந்திரனை யடையட்டும்—(எ-று.) இந்து ஸோமாபிமானி தேவதை.

4. நர்த்தனஞ் செய்பவ, வேந்த,வுன் பூருவக்
கன்ம நீ முதலிழைத்த
தார்த்தமுள்ளது, விண் ணுறைந்திடத்தக்கதா
மருங் கடவுளன் றிறத்தின்
விர்த்திகொண் டுயிரழித் தறலோட விட்டபோ;
தவன்றெய்வ மில்லெவரையுஞ்
சர்த்த மொடடக்கிடல்; சதமகன் வன்மையைச்
சாருவதோ டன்ன மெய்தல்.

(இ-ள்) யுத்தத்தில் உற்சாகத்தோடு கூத்தாடுபவனே! இந்திரனே! அரிய கடவுட்டன்மை வாய்ந்த பலத்தை நீயடைந்து அசுரனது உயிரை வாட்டித் தண்ணீரை ஓடச் செய்தபோது. நீ பூர்வகாலத்தில் முதன் முதற் செய்த செய்கை பொருட் சிறப்போடு தேவர்களிடத்துப் புகலத்தக்கதாம். அவ்விந்திரன் தெய்வநம்பிக்கையில்லாத எல்லாரையும் தனது பலத்தினு லடக்கட்டும். சதக்கிருதுவாகிய விந்திரன் பலத்வைத யடையட்டும். உணவுப் பொருள்களையும் பெறட்டும்—(எ-று.) சர்த்த (Dh) ம், பலம், வடமொழிப்பதம். 'சர்த்தோமாருதமுச்சம்ஸ,' என்னும் மண். 5 சூக் 52 செய். 8 நோக்குக. இச்செய்யுள் அதிசக்வரிச்சந்தஸாகவே தமிழில் பாடப் பெற்றுள்ளது. இதற்கு வ்யூஹேந அஷ்டித்வம் ச்ருதிதர்சனுத்விகல்ப: என்பார் ஷட்குருசிஷ்யர்.

### வருக்கம் 28.

## 214. (23) மண்டலம் 2 அநுவாகம் 3 சூக்தம் 1.

### 19 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: 1—14 ஜகதி, 15 திருஷ்டுப், 16–18 ஜகதி, 19 திருஷ்டுப்; தேவதை: 1, 5, 9, 11, 17, 19 இவற்றிற்குப் பிரஹ்மணஸ்பதி, 2, 3, 4, 6, 7, 8, 10, 12, 13, 14, 15, 16, 18 பிரஹஸ்பதி.

(வேறு)

1. கணங்களுக்குக் கணபதியாய்க் கவிகளுக்குட்
கவியாகக் கவின்று கீர்த்தி
யனைவுமன வுத்தமனுய் மறைகளுக்குன்
முதன்மை பெறு மரசனுகித்
தனைவரிய பிரமணா நற்பதியாகு
முன்றனையா மழைப்பொஞ் சாற்றி;
வணவுதவி கொண்டமொழி செவிபெறக்கல்;
சதனமதின் மருவித் தங்கல்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 6.

(இ-ள்.) தேவதா கணங்களுக்குக் கணநாயகனுகவும், தூரதிருஷ்டியுள்ள கவிகளுக்குள் கவியாகவும், கீர்த்தி வாய்ந்த வுணவுப் பொருள்களோடு கூடிய வுத்தமனுகவும், மந்திரங்களுக்குள் முதன்மை வாய்ந்த ஸ்வாமியாகவுமுள்ள பிரஹ்மணஸ்பதியாகிய வுன்னை யாங்கள் போற்றிக் கூவுகிறோம். நல்ல உதவிகளோடு எமது ஸ்தோத்திரங்களைக் காதில் ஏற்றுக் கொள்ளுக. எங்களது யக்ஞக்கிரஹத்துள் நுழைந்து அமருக—(எ-று.) பிரஹ்மணஸ்பதி என்னும் சொல்லுக்கு அன்னப் பொருள்களைப்படைத்தவனுக்குப் பதியென்பது பொருள். இச்சூக்தத்தில் பிரஹஸ்பதியோடு கலந்து போற்றப்படும் தேவதை. மேனாட்டாசிரியர் க்ஷத்திரிய தேவதையாகிய இந்திரனது அதிகாரத்தை மெல்லக் கவர்ந்து கொண்ட பிற்கால தேவதையென்பார். 'கணாநாம்த்வா.......ஸிதஸாதநம்,' என்னும் இந்த மந்திரம் ஸந்த்யோபாஸனத்தில் தற்காலம் எல்லா வேதிகளாலும் உபயோகப் படுத்தப்படுவது. ஆண்டு அதற்குக் கணபதிர் தேவதாஎன்று வழங்கி விக்நேசுவர மறையாக மாற்றியுள்ளார்கள். அதற்கும் பிரமாணம் யாண்டுளதோ அறியக் கிடந்ததில்லை.

2. அசுரவதஞ் செயும்விருகற் பதியேநன்
மதிவாயு னருளாற் றேவ
ரிசையுமகப் பாகமதையெய் தினர்காண்;
பெருஞ்சோதி யேய்ந்த சூரன்
றிசையளவிற் றனது கதிர்களை விரிக்குங்
கணக்கெனவே, சேர்ந்த வெல்லா
விசை நிறைந்த மறைகளுக்கு முற்பவகா
ரணனுவா யீண்டு மன்னே.

(இ-ள்.) அசுரவதஞ் செய்பவனே! பிரஹஸ்பதியே! நல்ல ஞானத்தோடு கூடிய வுனதருளாற் றேவர்களும் யக்ஞத்தினிடத்துப் பாகத்தைப் பெற்றார்கள். மகத்தான ஜோதியோடு கூடிய சூரியன் தனது கிரணங்களைத் (திக்குக்களி னெல்லை வரையும்) விரிப்பது போலச் சேர்ந்த வெல்லா பிரஹ்மங்களையும் உற்பவிக்கச் செய்தவன் நீயே—(எ-று.) விரிந்த கிரணங்களுக்கு ஸூர்யன் ஆதாரமானது போலப் பரந்த மறைகளுக்கு நீ காரண பூதனுகிறாய் என்பது பொருள். திசையளவில், இசை நிறைந்த என்பன எதுகை நிரப்ப வந்தன. சூரன், சூரியன்.

3. நிந்தை சொலுவோரை யிருளதனைவிரு
கற்பதியே நேடி யோட்டி,
நந்துமொளி வாய்ந்துமகங் கூட்டுவித்துப்
பயங்கரமாய் நன்னார் தம்மைச்
சிந்துவதோ டரக்கரினைச் சேதித்து
முகிற்பசுவைப் பிளந்து காந்தி
முந்துறுநற் றறக் கமதை யடைவிக்குந்
தேர்மீதி லேறு நின்றாய்.

## மண்டலம் 2 சூக்தம் 23.

(இ-ள்.) பிரஹஸ்பதியே! நிந்தை கூறு வோரையும் இருட்டினையும் உனது தேஜஸாலோட்டி, ஒளிவாய்ந்ததும், யக்ஞத்தைச் சேர்ப்பதும், பயங்கரமானதும், பகைவர்களை வதைப்பதும், ராட்சஸர்களைக் கொல்லுவதும், மேகமாகிய பசுவைப் பேதிப்பதும், காந்தி பொருந்திய ஸ்வர்க்கத்தையெய்துவிப்பதுமான உன்தேரின்மேலேறுகிறாய்—(எ-று.)

4. நன்னெறிக்கண் மனிதர்களை நடத்திடுவா
யிடர்நீக்கிக் காப்பாய் நன்கே;
உன்னிடத் திங் கவியளிக்கு மவன் பாபத்
துயரமதை யுறுவதின்றும்;
பன்னுமறை வெறுப்பவனைத் தபுத்துவிரு
கற்பதியே பண்பில் கோபந்
துன்னுவதைக் கெடுத்தொழிப்பா, யிதுவுன்றன்
பெருமகிமை யெனச் சொல்வாரே.

(இ-ள்) பிரஹஸ்பதியே! மனிதர்கள் நன்னெறியிற் பலனை யடையுமாறு அவர்களை நடத்தி, அவர்களது துன்பங்களை நீக்கி,யவர்களை நன்றாகக் காப்பாற்றுவாய். உனக்கு அவியளிக்கும் தாசுஷன் பாபச் செய்கைகளால் வருந் துன்பங்களை யடைவதில்லை. பிரஹ்மத்துவேஷியைக் கெடுத்து அவனது கோபத்தை யறவொழிப்பாய். இது உனது பெரிய மஹிமையாம்—(எ-று.) பிரஹ்மத் வேஷி, பிரஹ்மம், மந்திரம், த்வேஷி வெறுப்பவன்.

5. பாபமொடு துக்கமு மெத்திசைநின்று
மணுகாவாம், பகைவர் சேரார்,
தாபமுற நடையுளமும் வேறுனர்
தாக்கலுறார், சார்ந்த வெல்லாக்
கோபமுறு குழுவினரு மவனையுரு
வகையவர்க்குக் கொடுமை யூட்டிச்
சோபமுற வழிப்பாய், பம்மணப் பதியுன்
னற்காவ லேய்ந்து ளோற்கே.

(இ-ள்.) பிரஹ்மணஸ்பதியே! உனது நல்ல காவலைத்தந்து யாரைக் காக்கின்றாயோ அவனைப் பாபமும் துக்கமும் எப்பக்கத்தினின்றும் அணுக மாட்டா. அவனிடத்துப் பகைவர்கள் நெருங்க மாட்டார்கள். மனம் வேறு தொழில் வேறு பட்ட இரு நடையாளர்கள் அவனை எதிர்க்க மாட்டார்கள். கோபத்தோடு அவனை இம்சிக்கும் எல்லாக் கூட்டத்தாருக்கும் துன்பத்தைத் தந்து அவர்களை வாதைப் படுத்துவாய்—(எ-று.) பிரஹ்மணஸ்பதி, பம்மணப்பதி யெனச் சிதைந்து நின்றது.

### வருக்கம் 29.

6. எங்களது கோபன்விரு கற்பதிமுற்
றுணர்வாய் நீ,யெமது மார்க்கஞ்

## அஷ்டகம் 2 அத்தியாயம் 6.

சங்கையற வாற்றுகிறு, யுன்விரதந்
தனைக்காக்கச் சார்ந்த போற்றுற்
றுங்கமுறத் துதிக்கின்றேம்; வஞ்சனையா
லெமைக் கெடுக்குந் துட்டபுத்தி
தங்கியவன் மரணமுற வவன்மதியே
விரைந்தவனைச் சார்ந்து வாட்டல்.

(இ-ள்.) பிரஹஸ்பதியே! நீ எங்களைப் பரிபாலிப்பவன். ஸர்வக்ஞனை நீ எங்களது மார்க்கத்தைச் செம்மையுற வகிக்கிறுய். உன் விரதங்களைக் காப்பாற்றுமாறு உன்னைத் துதிக்கின்றேம். தங்களது குடிலங்களால் எமக்கு இடரைத் தேடுபவன் சாகுமாறு அவனுடைய துஷ்டபுத்தியே அவனுக்குத் தீங்குகளை வருவித்து அவனை வருத்தட்டும்—(எ-று.)

7. இடரொன்றும் புரியாத வெமக்கிடைஞ்சல்
செயும்விருகங், கெடுக்குமெண்ண
முடன்கொண்ட மர்த்தியன்,மேட் டிமைபடைத்தோ,
னெந்நெறியி லுறுது தூரக்
கடந்திடுமா றெழிக்கல், விருகற்பதியே,
யாமாற்றுங் கடிக்கட் டேவ
ரடைந்திடுமா றெம்மகத்தி னெறியெளிதா
யடைகுவதா யமைப்பா யன்றே.

(இ-ள்.) பிரஹஸ்பதியே! ஒரு தீங்கும் இழைக்காத வெங்களுக்கு இடைஞ்சல் செய்யும் ஓநாய்போன்றவனும், எங்களைக் கெடுக்குமெண்ணங் கொண்ட மர்த்தியனும், அகந்தையுள்ளவனுமான வவனை எமது நெறியிற் படாமல் தூர ஓடும்படி தள்ளிவிடுவாயாக.யாங்கள் ஸோமம்பிழிந்தூட்டும் விழாவிற் றேவர்கள் வருமாறு எங்களது யக்ஞபாதைகளை இலகுவாய் வரக்கூடியனவாகச் செய்வாயாக—(எ-று.) கடி=ஈண்டு யக்ஞமாம்.

8. உதவிகொடு துயரொழிவி ருகற்பதியே
யெஞ்சார்வி னூரக்கப் பேசிப்
புதல்வரொனு மெந்தனுவைக் காப்பாற்று
மெம்மவனு முன்னைப் போற்று
லதிவிரைவின் வரவழைப்போம்; தேவர்களைப்
பழிப்பவரை யடையக் கொல்க;
மதியதனிற் கேடுபடைத் தோருயர்ந்த
சுகத்தமத்தை மருவா தேய்க.

(இ-ள்.) உன்னுடைய உதவிகளினுல் பக்தர்களது துன்பத்தையொழிக்கும் பிரஹஸ்பதியே! எங்கள்பக்கமாகப்பரிந்து பேசுபவனும்,புத்திர பௌத்திர ரூபமாயுள்ள எமது தனு அல்லது சரீரத்தைக் காப்பாற்றுபவனும் எம்முடைய வனுமான வுன்னை ஸ்தோத்திரங்களால் கூவி அழைப்போம்.

## மண்டலம் 2 சூக்தம் 23.

தேவ நிந்தர்களை முற்றிலும் அழிப்பாயாக. துஷ்டபுத்தி படைத்தவர்கள் உத்கிருஷ்டதரமான சுகத்தை யடையாமலிருக்கட்டும்—(எ-று.)

9. நன்கெதையும் வளர்ப்பவபம் மனைப்பதியே
மனங்கவரு மாந்த ராக்க
முன்கருணை யாலடைவோம்; செய்மையினன்
மையினேனு மூளைய வெம்மைத்
துன்புறுத்த வெமைநெருங்கும் பகைவரெலா
மெத்தொழிலுங் கீதாயா ராகிப்
புன்மையொடு கேடதனைப் புணர்ந்துநசிக்
கும்முறையிற் புடைப்பாய் நீயே.

(இ-ன்.) பிரஹ்மணஸ்பதியே! நன்ருக எவற்றையும் விருத்திக்குக் கொண்டுவருபவனே! உனது அநுக்கிரகத்தினுல் மனிதர்களது (அல்லது தாதாக்களது)ஸ்பிருஹணீயமான செல்வத்தை யாங்கள் அடைவோமாக. தூரதேசத்திலிருந்தாவது சமீபத்திலிருந்தாவது எங்களது மனம் வருந்த எம்மை இம்சிப்பதற்கு எம்மாட்டு வரும் சத்துருக்கள் கன்மவீனர்களாயழியுமாறு அவர்களை நசக்குவாயாக—(எ-று.) ப்ரஹ்மணஸ்பதி, பிரமணப்பதி பம்மணப்பதி யெனச் சிதைந்தது.

10. காமமதைப் பூரிக்குந் தூய்துணையி
னுத்தமமாக் கழறு மன்ன
மேமுற வெய்துகயாம்; தியர்விரு
கற்பதியே யெமை யடக்கிச்
சேமமுறு மிச்சையுளோ ரெமக்கிறைவ
ராகாராய்ச் சேர்க; யாமுந்
தோமமுன தருஞ்சீரைத் தோற்றுபவை
தமிற்றுதித்துத் தோய்க வாழ்வே.

(இ-ன்.) பிரஹஸ்பதியே! இச்சைகளை நிறைவேற்றும் உனது பரிசுத்தமான வுதவிகளால் உத்தமமான அன்னத்தை (அல்லது ஜீவ சக்தியை யென்பார் மேனுட்டாசிரியர்) யடைவோமாக. எம்மை யடக்கிச் சுகத்தை யடையவெண்ணும் துஷ்டபுத்திகள் எமக்கு நாயகர்களாக வராதொழியட்டும். யாங்களும் உனது பெருமையைத் தோற்றும் ஸ்தோத்திரங்களாலுன்னைப் புகழ்ந்து வாழ்வை யடைவோமாக—(எ-று.) வய: அன்னம், ஜீவாதாரம், ஜீவசக்தி, என்னும் பொருளன.

### வருக்கம் 30.

11. எதிரில்லாக் கொடைக்காளை, யாகவத்து
விரைந்துறுவோ, னேயார் தங்கட்
கதிதுன்ப மிழைப்பவன், போர்தனிற் சயிப்போ,

## அஷ்டகம் 2 அத்தியாயம் 6.

னுண்மைவலி யடைந்தோ னுவாய்;
மதிகொண்டு கடனதனைத் தீர்ப்பவன், பம்
மணப்பதியே; வன்மை யோங்கி
வதிகின்ற வுக்கிரனே யென்னினும்பேர்
காமுகனை வசக்கு வாயே.

(இ-ள்.) பிராஹ்மணஸ்பதியே! வள்ளன்மையிற் சமானமில்லாத விருஷபனும், யுத்தத்தில் வேகமாகவந்து நிற்பவனும், பகைவர்களுக்கு அதிக துன்பத்தைத் தருபவனும், யுத்தத்தில் ஜயிப்பவனுமான நீ உண்மையான பராக்கிரமசாலியாம். எங்களது கடன்களைத் (ருணம் என்பதற்கு கடனென்றது பாவமென்பார் மேனுட்டாசிரியர்.) தீர்க்கின்றாய். உக்கிரம் வாய்ந்தவனை லும் திடம்பொருந்திய பெரியகாமுகனையும்சாந்தப்படுத்துகிறாய்—(எ-று.) எதிரில்லாக் கொடைக்காளை யென்றது ஒருவருக்கு மடங்காத காளையேயென்பார் மேனுட்டாசிரியர் மண். 2 சூக் 21 செய், 4 நோக்குக.

12\. தெய்வமுள தெனப்புகழு மெம்மை, விரு
கற்பதியே, செம்மை சாராத்
தெய்வமிலா மனத்தோடு தான்பெரிய
னெனவென் னுஞ் சிறில் வெய்யோ
னெய்யு மொருபடையு மெமை யடையற்க;
பொல்லாங்கை யடைந்து தீமை
செய்யுமவன் பலம்வாய்ந்தோன் கோபமதை
நிராகரித்துச் சேர்க யாமே.

(இ-ள்.) பிரஹஸ்பதியே! ஆஸ்திகர்களாய் உன்னைப் புகழும் எம்மைத், தெய்வநம்பிக்கையில்லாத மனத்தோடு தன்னைப் பெரியவனாக மதிக்கும் துஷ்டன் விடும் ஒரு கொலைப்படையாவது எம்மை அணுகாமலிருக்கட்டும். துஷ்டச் செய்கைகளோடு பலம் வாய்ந்தவனான வனது கோபத்தை யாங்கள் நிராகரிப்போமாக—(எ-று.)

13\. போரதனி லழைபடுவோன்; வணக்கமொடு
தொழப்படுவோன், போர்க்குச் செல்வோ
னேருறவெல் லாத்தனமுஞ் சேகரிப்போன்
பகற்பதியா மெழிலா ரர்யன்
சீறவெங் கனையடக்கி யிடுக்கணிழைத்
திடநினைக்குஞ் சேரார் தம்மைத்
தேரதனைச் சிதைப்பதென யாவரையு
நன்றாகச் சிதைத் திட்டானே.

(இ-ள்.) யுத்தத்திற் பொருநர்களா லழைக்கப்படுபவனும்; நமஸ்கார பூர்வமாக வணங்கப்படுபவனும், யுத்தத்திற் பக்தர்களைக் காக்கச் செல்பவனும், எல்லாச் செல்வங்களையும தானத்தினிமித்தம் சேகரிப்பவனும், பிர

# மண்டலம் 2 சூக்தம் 23.

ஹஸ்பதியுமாகிய (அர்யன்) ஸ்வாமி, எங்களை யடக்கி எங்களுக்கு இச்சையைத் தரவெண்ணும் பகைவர்களெல்லாரையும், போரிற் றேர்களை னொருக்குவதுபோல நன்றாகக் கொன்றழித்தான்——(எ-று.) பிராஹஸ்பதி, பகற்பதியெனச் சிதைந்து நின்றது.

14. இகலதனிற் றோன்றுகின்ற விரியத்தோ
டுறுமுன்னை யிகழ்வாய்ச் சொல்வோர்,
பகற்பதியே, யொளிசிறந்த கொள்ளியினு
லரக்கர்தமைப் பார்த்துச் சூடல்;
மிகவெவருந் துதித்துரைக்கும் விரியமா
மதனையின்று மேற்கொள் வாபால்;
துகளுறவே வதைக்கவுனைப் பழிபேசி
நிந்திக்கு மவரைச் சூழ்ந்தே.

(இ-ள்.) பிராஹஸ்பதியே! யுத்தத்திலிடத்துக் காணப்படுகின்ற வீரியத்தோடு கூடிய வுன்னை யிகழ்ந்து பேசும் ராட்சஸர்களை யொளிவிட்டெரியுங் கொள்ளியினுற் சுடுவாயாக. எல்லாரும் உயர்வாகப் புகழ்ந்து பேசும் உனது அவ்வீரியத்தை இப்பொழுதும் ஆவிர்ப்பவிப்பாயாக. உன்னை நிந்திக்கும் அவர்களை நன்ருகக் கொல்லுவாயாக—(எ-று.)

15. ரிதந்தினி லுதித்தா யார்யர் மற்றவை தமக்கு மேலாய்
விதந்தவன் விழைவ, தார்ந்த காந்தியின் மிளிர்வ, தெக்கு
மிதத்தினிற் புரியுமாந்தர் தமவயின் வலியி னேய்ந்து
கதிர்ப்படு வியப்பார் செல்வம், பகற்பதி யெமக்குக் காண்க.

(இ-ள்.) ரிதத்தில் (யக்ஞகர்மங்களில் அல்லது ஒழுங்கிலென்றபடி) உதித்தவனே! பிராஹஸ்பதியே! இவ்வுலகத்து மற்றவற்றிற் சிறந்ததாக வாரியர்கள் மதித்து விரும்புவதும், மிக்க காந்தியோடு கூடியதும், யக்ஞமாற்று மனிதர்களிடத்துத் தனது வலிதோன்றுமாறு தங்கி யவர்களிடத்துப்பேரழகோடு விளங்குவதுமான பிரஹ்மவர்ச்சஸாகிய செல்வத்தைத் தருவாயாக—(எ-று.) அதியசர்யோ அர்ஹாத் என்பதற்குப் பகைவன் அடைதற்கரியதுமெனப் பொருளுரைப்பர் மேனுட்டாசிரியர். விதத்து வலித்தல் விகாரம் பெற்றது.

16. பகற்பதியே, பதுக்கிடத்தி லொளிந்தென்றும்
பயிருடர், படரிழைப் பேர்
சுகத்தமரும் பிறர்தனத்தைக் கவருவதற்
காவலுளோர், தோயுந் தங்க
ளகத்தினிற் றேவுள்ளானென் றவ்வெண்ணம்
விடுத்தவர்க, ளவர்தம் மாட்டிங்
கிகத்தெம்மை யளித்துவிடல்; பிறசுகமு
மவர்களொரு நாளு மெய்தல்.

(இ-ள்.) பிரஹஸ்பதியே! மறைவான விடங்களிற் றுரோஹ சிந்தையோடு ஒளிந்து பயிலுகின்ற திருடர்களும், தன்ப மிழைப்பவர்களும், சுகமாக வசிக்கும் பிறஜனங்களுடைய சொத்துக்களைக் கவருவதற்கு ஆவலுள்ளவர்களும், தங்களது உள்ளத்திற் றெய்வமுண்டென்ற சிந்தனையை விட்டுவிட்டவர்களுமான வவர்களிடத்து எங்களைத் தந்துவிடாதே. அவர்களும் அந்யதரமான சுகங்களை யடையாமலிருக்கட்டும்—(எ-று.)

17. எப்புவனங் களுக்குமே லாகுமுனைத்
துவட்டா, வெம்மறையு மேத்துந்
துப்புரவன், மறைப்பொரு ளாலுனைப்பகம
ணப்பதியே தோற்று வித்தான்;
இப்புவியிற் பாவமொழிப் பவனிரணந்
தீர்ப்பவன் கே டிழைபந்த வுள்ள
மொப்பினரைக் கொல்லுபவன் ரிதம்பரிக்கு
மகத்துவனென் றவனைச் சொல்வார்.

(இ-ள்.) பிரஹ்மணஸ்பதியே! எல்லாப் பூதஜாதங்களுக்கும் மேலான வுன்னை எல்லா மந்திரங்களையும் உச்சரிக்க வல்ல தூயனான துவஷ்டா மந்திரங்களின் ஸாரத்தினால் பிறப்பித்தான். அப்பிரஹ்மணஸ்பதி பாபத்தை நீக்குபவன்; ருணம் (கடனென்க.) தீர்ப்பவன்; துரோஹ சிந்தையுள்ளவரை வதைப்பவன்; யக்ஞத்தைக்காக்கு மகத்துவனுமாவான்—(எ-று.) கவியென்னும் வடமொழிப் பதத்துக்குப் பாடகன், க்ராந்ததர்சி, சப்தோச்சாரணங்களை நன்குசெய்பவன் என்னும் மூன்று பொருளுண்டு. ஈண்டு இறுதியிற் கூறிய பொருளில் வந்தது, குசப்தே அ(ச்)ச இரிதி இப்ரத்யய: எனச் சப்தோற்பத்தி கூறுவர் ஸாயணர்.

18. அங்கிரஸ நீ பசுத்தொழுவந் தனைத்திறந்த
காலையினி னழகி னுன்கட்
டங்குமுரன் வெளிக்காட்டப் பருப்பதமும்
பிளப்போங்கித் தயங்கிற் றன்றே;
அங்கமுற விந்திரனோ டேய்ந்துவிரு
கற்பதியே யறல் வெள்ளத்தைப்
பொங்குமிருள் மூடியுள வதனையதோ
முகத்தொழுகப் பொருத்தினையே.

(இ-ள்.) அங்கிரஸனே! நீ பசுத்தொழுவத்தைத் திறந்த காலத்து உனது வல்லமையைப் பலர்க்குமெடுத்து காட்டுமாறு பர்வதம் பிளந்து காட்டி நின்றது. பிரஹஸ்பதியே! நீ இந்திரனோடு கூடி இருண்ட மேகத்தாற் சூழப் பட்டிருந்த மழைநீர்ப்பெருக்கைக் கீழ்நோக்கி யோடுவித்தாய்—(எ-று.) மண். 1 சூக்தம். 1 செய். 6ல் அங்கிரஸனை யக்கினியோடு அபேதப்படுத்திக் கூறினதுபோல ஈண்டு பிரஹஸ்பதியோடு அபேதப்படுத்தியதென்க. பிரஹஸ்பதி அங்கிரஸ புத்திரனென்று பாகவத புராணம் கூறும்.

## மண்டலம் 2 சூக்தம் 24.

(வேறு.)

19. பிரமணப்பதி யுலகைப் பிறக்குவா யிச் சூக்தத்தை
வரமுற வுணர்க; யெங்கள் மக்களை வாழ்வித்தாள்க;
அருஞ்சிறப் பான்ற, தேவர் காத்திடு மவைதாம்; வீரம்
பொருந்திய நல்லாரோடியா மவையினின் மிகப்புகழ்க.

(இ-ள்.) பிரஹ்மணஸ்பதியே! இவ்வுலகங்களை யொழுங்கி னியமிப் பவனே! இந்த ஸூக்தத்தை யறிவாயாக. எமது புத்திர பௌத்திரர்களை வாழ்விப்பாயாக. தேவர்கள் காக்கு மவைகள் மிகவும் கல்யாணகரமானவை. வீரம்பொருந்திய நல்ல புத்திரர்களோடு யாங்கள் யக்ஞக்கூட்டத்தில் உங்களையொன்றாகப் புகழட்டும்—(எ-று.)

வருக்கம் 32.

ஆகச்செய்யுள். 870.

ஆறுவது அத்தியாயம் முற்றும்.

---

## ஏழாவது அத்தியாயம்.

இவ்வத்தியாயத்தில் 25 வருக்கமும் 13 சூக்தங்களும் 137 இருக்குக் களு முள்ளன.

## 215. (24) மண்டலம் 2 அநுவாகம் 3 சூக்தம் 2.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: 1-11 ஜகதி, 12 திருஷ்டுப், 13-15 ஜகதி, 16 திருஷ்டுப்; தேவதை; பிரஹஸ்பதி, 2-9 பிரஹ்மணஸ்பதி, 10 பிரஹஸ்பதி, 11, 13, 14, 15, 16 பிரஹ்மணஸ்பதி, 12 இந்திரனும் பிரஹ்மணஸ்பதியுமாம்.

1. எவற்றிற்கு மிறையாகும் பகற்பதியே
யிவ்வெமது போற்றை யெய்தல்;
நவத்துதிநன் மகத்துவ மார்ந்ததுகொண்டே
யாமுன்னை வணங்க னன்கே;
தவக்கொடைய னெமதுமக னுன்றேழ
னுனைப்போற்றுஞ் சமயத்தெங்கட்
குவப்புடனெம் முளம்விழையு மிச்சை தமைச்
சாதித்திங் குதவுவாயே.

இ-ள்.) எல்லாச் சகத்துக்கும் ஸ்வாமியாகிய பிரஹஸ்பதியே! இந்த வெங்களது ஸ்தோத்திரத்தை யடைவாயாக. புதியதும் மகத்துவம் பொ

ருந்தியதுமான ஸ்தோத்திரத்தினல் யாங்கள் உன்னை வணங்குவோமாக. மிகுந்த தான கர்த்தாவாகிய எங்களது மகவான் (யாககர்த்தா) உனதுதோழனுய் உன்னைப்போற்றும்போது எங்களது மனம் விரும்புமாசைகளையெங்களுக்குத் தருவாயாக—(எ-று.) மகன் மகத்துக்கு நாதன் என்க.

2. வலிமையினுட்படுத்தத் தக்கவரை யெலா
மாட்படுத்தி மருவுங்கோபத்
தலைவில்லாச் சம்பரன்றன் புரங்களினைப்
பேதித்தோ னசையா வற்றைத்
தலமகன்றிங் கிசைந்தாட வாற்றுவோன்,பம்
மணப்பதிதான் செல்வமோங்கி
நிலவுபருப் பதமதனு ணன்ருக
வுட்புகுந்து நிலவினனே.

(இ-ள்.) தனது வலிமையினல் அடக்கியாளப்படத்தக்கவராகியராட்சஸாதிகளையெல்லாம் அடக்கியவனும், தன்னிடத்தெழுந்த கோபத்தினுற் சம்பராசுரனது கோட்டைகளாகிய காள முகில்களைப் பிளந்தவனும், அசையாதுநிலைத்துள்ள பொருள்களை இடம்விட்டுப் பெயருமாறு அசைப்பவனுமான பிரஹ்மணஸ்பதி பசுவாகியசெல்வம் நிலைத்திருந்த பர்வதத்துக்குள் அதன்வாயிலைப் பிளந்துகொண்டு நன்ருக உள்நுழைந்தான் (உள்நுழைந்து அங்குள்ளபசுவாகிய செல்வத்தைப் பெற்ருன் என்றபடி)—(எ-று.) பசு ஈண்டு மேகமென்க.

3. தேவர்களி லுத்தமனுந் தேவன்வலி
சேர்ந்தவற்றைச் சிதைத்து வன்மை
மேவுபொருள் களினைமெது வாக்குமருஞ்
செயல்மிகவு மேன்மைத் தாகும்;
ஆவை வெளிவிடுத்து வலன்றனை மறையாற்
பிளந்திருளை யடைய வார்த்துப்
பாவுமொளி யதனையெலா ருங்கான
வின்னா தனிற் பரப்பினனே.

(இ-ள்.) தேவர்களில் உத்தமத்தேவனுகிய பிரஹ்மணஸ்பதி வலிமை பொருந்தியவற்றைக்கெடுத்துத் திடப்பொருள்களை மெதுவாக்கினஅவ்வரிய செய்கை மிகவும் மேன்மையுடையதாகும், பசுவை வெளிவிட்டுமந்திர சக்தியினல் வலனென்னுமசுரனைப்பிளந்து இருளை முழுவது மோரிடத்திற் றங்குமாறு அடைத்துவைத்துப் பரந்த வெளிச்சத்தை உலகமெல்லாம் பரவுமாறு செய்தான்—(எ-று.)

4. மதுவொழுக்குஞ் சுனையசும வாயுளது
விரிந்ததனை வலிமை தன்னல்

## மண்டலம் 2 சூக்தம் 24.

விதிதமுறப் பிரமனைநற் பதிபிளந்து
விட்டதனின் விரும்பியெல்லா
வநியொளியார் கிரணமுந்தம் மனநிறையக்
குடிக்கின்ற; அவற்றினோடு
மூதகநிறை யூற்றதனைப் பன்மடங்கி
னொருமிக்கவொழுக்கு கின்ற.

(இ-ள்.) மாதுரியமான நீரை யொழுக்குவதும், கல்லாலான வா யோடு கூடியதும், விரிந்துள்ளதுமான மேக ஊற்றைப் பிரஹ்மணஸ்பதி பிளந்துவிடவே யதனின்றும் வழிகின்ற நீரையே ஒளிநிறைந்த எல்லா ஸூர்ய கிரணங்களும் (வெய்யிற்காலத்தில்) தங்களாசைதீரக் குடிக்கின்றன. அவ்வகைத் தாங் குடித்தவற்றோடு கூடி நீர்நிறைந்த ஊற்றாகிய மேகத்தைப் பின்பு மழைக்காலத்தில் ஒருமிக்க ஊற்றுமாறு செய்கின்றன—(எ-று.) அசமம், கல்.

5. எவையேனு முமக்காக வவையிண்டு
சநாதனமா யியையும்; நீராற்
புவிதோன்று மவற்றினது வாயில்கள்
மாதமொடு பொருந்து மாண்டாய்
நவையறவே விரிவுறும்; பம்மணப்பதியி
னாணைகொடு நடக்கு மன்ன
இவ்புவியி னிடந்தோறுந் தம்முயல்வில்
லாதொழுகுஞ் சிறக்கத் தானே.

(இ-ள்.) ரித்விக் யஜமானர்களே! (பிரஹ்மணஸ்பதியின் ஆணைவழி யொழுகுபவை) எவையாயினும் அவையிங்கு உங்களுக்காகச் சநாதனமாகப் பொருந்தும். நண்ணீரின் செயலாற் பூமியிற்றோன்றும் அவற்றின் துவாரங் கள் மாதங்களாகவும் சரத்கால ரூபந்தரித்த வருஷங்களாகவும் உமக்காக வி ரிந்து தோன்றும். பிரஹ்மணஸ்பதியின் ஆக்ஞையினால் நடக்கும் அவை வா னம் பூமிகளில் எல்லாவிடங்களிலும் ஓரிடம்மாறி மற்றோரிடமாகஒருவிதப் பிரயத்னமுமில்லாமல்-சென்று பலனளிக்கும்—(எ-று.) வானிடத்து நீ ராகவும், புவியிடத்து அன்னமாகவும் பலன்தருமென்பார் ஸாயனர்.

### வருக்கம் 1.

6. சுற்று முலாவிச்சென்று தேடியவர்
பரமதனம் பணிகள் சூழ்ந்து
முற்றுமறைவாக் குகையிலொளித்துவைத்த
நிதியதனை முன்னே பெற்றார்;
கற்றவரா மவரநிர்தங் கண்டறிந்தா,
ரசுரர்வழிந் காலேயோர்ந்து
நற்றிறவி னவரைவெளி யோட்டிப்பின்
னுதனமைய நாடினரே.

## அஷ்டகம்2 அத்தியாயம் 7.

(இ-ள்.) எல்லாப்பக்கத்திலுஞ் சூழ்ந்து தேடிச் சென்றவர்களாகிய அங்கிரஸர்கள் பணியென்னு மசுரர்களாற் பத்திரமாகக் குகையிலொளித்து வைக்கப்பட்ட உத்கிருஷ்ட செல்வமாகிய நிதியைக்கண் டடைந்தார்கள். வித்வாம்ஸர்களர்களாகிய அவ்வங்கிரஸர் அசுரர்களது மாயையாகிய பொய்களைக்கண்டறிந்து அவ்வசுரர்கள் வெளிவந்த இடத்தைத்தெரிந்து, தங்கள் திறமையாலவர்களை வெளியில் விரட்டி மறுபடியுந் தாங்கள் நுழையப் பிரயாசைப்பட்டார்கள்—(எ-று.) ஈண்டும் இதனடுத்த செய்யுளிலும் சொல்லப்படும் கதையை மண். 1 சூக். 62 செய். 3ற் காண்க.

7\. ரிதவாண ராங்கவிக ளநிர்தக்க
ளவைகண்டவ் விடத்தி னின்றும்
பதமாக வவர்தம்மை யோட்டித்தாம்
பெருநெறிக்கட் பண்பிற் றேய்ந்தார்;
இதமாகக் கடைந்தெடுத்த வக்கினியைக்
கரங்களினு லெடுத்துப்பாறை
யதமாகப் போட்டனரவ் வெரிதாழ்ந்து
காணுமலழிய மீண்டும்.

(இ-ள்.) ஸத்தியவந்தர்(அல்லது யக்ஞத்தோடு கூடியவரென்னலுந் தகும்) களாகிய கவிகள் அவ்வசுரர்களது பொய்களைக்கண்டுபிடித்து அவ்விடத்தினின்றும் அவர்களை யோட்டியபின்னர்த் தாம் மகத்தாகிய நெறிகளைக் கைக்கொண்டொழுகினர். தாங்கள் கடைந்தெடுத்துப் பாறையழியுமாறு இருகரங்களாலும் எடுத்துப் போட்டிருந்த அக்கினி தனது தாகசாந்திக்குவேண்டிய எரிதுரும்பு கிடைக்காத துக்கத்துடன் அழிந்துபோனதைக்கண்டு அதனைத்தமது சாமர்த்தியத்தினுல் மீண்டும் உற்பத்தி செய்து அங்கே போட்டார்கள்—(எ-று.) இதன்பொருள் பூகோக்தியாம். வடமொழி மூலத்தின் பின்னிரண்டடிகளுக்கு மேனுட்டாசிரியர் ஒருவாறு பொருள்கூறி ஸாயணர் கூறும் உரை திருப்திகரமானதல்லவென்பார். ரிதவாணர், ஸத்தியவான்கள் அல்லது யாகாநுஷ்டாதாக்கள்.

8\. குறிதவரு திறையளவிற் றனுவிடத்தே
யம்புகளைக் கூட்டி யெய்து
திறலொடு தான்விழைந்த வடைகின்றுன்பம்
மணப்பதியுஞ் செம்மையாக;
அறவு மனிதரை நோக்கு மவனறியக்
காதிடமா வணைந்து தோன்றும்
விறல்சரங்க ளவன்றான்டு மவைபூண்ட
தொழிலமைக்கு மேன்மைசார்ந்த.

(இ-ன்.) பிரஹ்மணஸ்பதி தனது வில்லிற் குறிதவறுமல் வேகமாகச்செல்லும் அம்புகளைப்பூட்டி யெய்து தான் கருதியவற்றையெல்லாம் அடைகிறுன். மனிதர்களின் குணங்களை யறியும் ஸர்வக்ஞனுகிய அப்பிரஹ்மணஸ்பதி யறியும் வண்ணம் காதுவரையிலிழுக்கப்பட்ட விற்குதையினின்

## மண்டலம் 2 சூக்தம் 24.

லும் பிறக்கும் அவனது அம்புகள் தாம் மேற்கொண்ட தொழிலைச்செய்து முடிக்குந் திறமைவாய்ந்தவை—(எ-று.) பிராஹ்மணஸ்பதியினது மறையைச் காதிற் படுமாறு ஓதி ஸந்தானம் செய்யப்படும் அம்புகள் நினைத்த தொழிலை முடிக்குமாற்றலுற்றன என்பதும் ஒன்று.

9. புரோகிதனு மவன்கூட்டு விப்பவன், பிற்
பிரிப்பவனும்; போற்று வோரால்
வரோதயமாப் போற்றுறுவான் போரிற்பம்
மணப்பதியும்; மருவுஞ் சாந்தப்
பராபரனு மவனுணவைக் கீர்த்தியுள
தனங்களினைப் பரித்த பின்பே,
குரோத முடனனல் வீசுஞ் சூரியனுந்
துயரின்றிக் கொழுந்து கின்றான்.

(இ-ள்.) புரோஹிதனாகிய அவன் பிரிந்தவர்களைக் கூட்டுபவன் அவ்வகையே யுத்தத்திற் கூடியவர்களையும் பிரித்து விடுபவன். பிராஹ்மணஸ்பதியாகிய வவன் ஸ்தோதாக்களால் யுத்தத்தில் விசேஷமாகத் துதிக்கப்படுவான். சாந்த முள்ளவனாகிய வவன் (விருஷ்டித் துவாரா) உணவுப் பொருள்களையும், பிரசஸ்த தனங்களையும் தாங்கின பிற்பாடே, மிக்க சூட்டோடு தபிக்கும் சூரியனும் அனாயாஸமாக வெயில் விட்டெரிக்கிறான்—(எ-று.)

10. விபுத்துவமும் பெருமையொடு முதன்மையுமே
வாய்ந்தனவாம், மேக மேய்ந்தோன்
சுபத்துவமார் பகற்பதியின் கொடைசிறந்த
செல்வங்கள்; தோயும் வன்மை
நிபத்தினுறுபவன் பலரும் விழைதருவோன்
றருமந்த நிதியின் கோவை
உபத்துவநற் சனங்களுக்கு மாந்தருக்கும்
போகமதை யுதவு மன்றே.

(இ-ள்.) மேகத்தால் மழைபொழிவிக்கும் பிரஹஸ்பதியின் வண்மையைத் தோற்றும் நன்மை பொருந்திய செல்வங்கள் விபுத்துவம் அல்லது வியாபிக்குந் தன்மையும், பிரபுத்வம் அல்லது பெருமையும், சிரேஷ்டதையும் வாய்ந்தனவாம். மிக்க வலிமை பொருந்தியவனும், பலராலும் விரும்பப்படுபவனுமான அப்பிரஹஸ்பதி தரும் செல்வக்குவை, (தேவமானுஷ அல்லது யஜமானன் ஸ்தோதாக்கள்) என்னும் இருவகை ஜனங்களுக்கும், இதரப் பிரஜைகளுக்கும் போகத்தை யளிக்கும்—(எ-று.)

வருக்கம். 2

11 எவ்விதத்தும்விபு, பம்மணப்பதி, போற்
றுபவன் தாழ்வேய்ந்த வன்மை

## அஷ்டகம் 2 அத்தியாயம் 7.

யொவ்வுமவன் மிகமொய்ம்ப னிவர்களைத்தன்
னெறும்கொடுகாத் தோம்பு மென்றும்;
இவ்வியருமவன் மற்றைத் தேவர்களுக்
கெதிராக விரிந்து சேர்ந்தான்;
இவ்வுலகி னுளவெல்லாப் பொருளையுஞ்சூழ்ந்
துள்ளடக்கி யியைகின்றனே.

(இ-ள்.) எல்லா வகையாலும் வியாபித்துள்ளவனும், ஸ்தோத்திரங்களாற் புகழப்படுபவனுமான பிரஹ்மணஸ்பதி, தூர்ப்பலம் வாய்ந்த ஸ்தோதா வலிமிகுந்த போற்றுளன் என்னும் இருவகை ஸ்தோதாக்களையும் எப்பொழுதும் தனது ஸாமர்த்தியத்தாற் பரிபாலிப்பான். தேவனாகிய வவன் இதர தேவர்களுக்கெதிராகத் தான் விஸ்தாரமாக வியாபித்து நின்றான். இவ்வுலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையுஞ் சூழ்ந்து அவற்றைத் தனக்குள்ளடக்கி வர்த்திக்கின்றான்—(எ-று.)

(வேறு.)

12. தனத்தினையுடைய நும்மைச்சார்ந்த தேயெலா, மீதுண்மை;
கனத்தவும் மாணைதன்னைக் கடந்திடா தறனும்; எங்க
ளனத்தினை யவியைப், பம்பணைப்பதி யிந்திரர்காள்,
மனத்தொடு தேர்பூண் மாவி னுண்ணுவான் வருக வல்லே.

(இ-ள்.) இந்திர பிரஹ்மணஸ்பதிகளே! மகவாணர்களே! (செல்வமுள்ளவர்களே யென்றபடி.) தண்ணீரும் (இனத்தால் இதர பூதங்களையுங் கொள்ளுக வென்பார் ஸாயணர்.) உமது ஆக்ஞைகளை அல்லது விரதங்களைத் தாண்டி நடவாது. யாங்கள் தரும் அவியையும் அன்னத்தையும், தேரிற் பூண்ட குதிரைகள் தீனியுண்ண வருவது போலப் புசிக்கும் ஆசையோடு வருவீர்களாக—(எ-று.) இந்திர பிரஹ்மணஸ்பதிகள் இணைத் தெய்வங்கள்.

(வேறு.)

13. மேலுமவன் வாகனங்கள் விரைவாக
வுரைகேட்கும்; விப்பிரன்றான்;
சாலவவை தழைப்பிப்போன், போற்றுரைத்துக்
கைக்கொள்வான் றனத்தை நன்கே;
தாலமதிற் றிடநிறைந்த வயிரிகளை
வசப்படுத்தித் தன்மனத்தி
னேனுமுறைக் கடனீந்து கூடுவன்,பம்
மணப்பதிகா ணுணவேய்ந் தோனே.

(இ-ள்) மேலும் அவனைச் சுமந்து செல்லும் வஹ்நிகள் (அவனுடைய உத்தரவுகளை அல்லது) ஸ்தோதாக்கள் கூவுவதை விரைவிற் காது கொடுத்துக் கேட்கும். (அவை அவனை விரைவிற் கொண்டுவரட்டுமெனக் கூட்டுக வென்பார் ஸாயணர்.) யக்ஞஸபையினிடத்துச் சிறந்த விப்பிரன் ஸ்தோத்

## மண்டலம் 2 சூக்தம் 24.

திரங்களைக் கூறிச் செல்வத்தை யடைவான். இடம்பொருந்திய ராட்சஸாதி பகைவர்களை யடக்கி வசப்படுத்தி, யஜமானர்களுக்குச் செய்யும் பிரதி பலன்களைத் தன்னிஷ்டம் போலச் செய்து திரிபவன் காண், உணவு படைத்தவனாகிய அப்பிரஹ்மணஸ்பதி—(எ-று)

14. மகத்தான கன்மமதைச் செய்யுங்காற்
பமணபதி மருவுகோப
மிகத்தோர்த மிச்சையினை யளியுண்மைப்
பலனோடு மியைந்து நின்ற,
துகப்போடு வெளிக்கொணர்ந்து விண்ணுலகிற்
பரவுவித்த வயராக் கூட்டஞ்
சகத்தோடும் பெருவெள்ள மெனத்திசைக்கட்
டனித்தனியே சார்ந்தோ டிற்றே.

(இ-ள்.) பெரிய கர்மங்களைச் செய்யும் போது பிரஹ்மணஸ்பதி யடைந்த கோபமானது இவ்வுலகத்திலுள்ள அவனது ஸ்தோதாக்களுக்கு ஸத்திய பலன்களைக் கொடுப்பதாயிற்று. அவன் பிலத்தினின்று வெளிப்படுத்தி விண்ணிற் பரவவிட்ட பசுக்கூட்டம், பூமியில் ஓடும் பெரு வெள்ளத்தைப் போலப் பலதிக்கிலும் தனித்தனி யாகக் கலந்து ஓடின—(எ-று.) கூட்டம் ஓடிற்றென்பது சரிபோலத் தோன்றினும் தனித்தனியாகப் பிரிந்து போகும்போது பன்மையையே சுட்டிநிற்பது காண்க. பமணபதி, பிரஹ்மணஸ்பதியின் சிதைவு.

15. எப்பகலு நன்னெறிக்கட் டோய்தனம்பம்
மணப்பதியே யன்ன மேய்ந்த
தொப்புறுதே ருளதனை யடைந்திடல் யாம்;
வீரரிடை யுயர்ந்தவீரர்
தப்பறவே யெங்களுக்குக் கூட்டுக நீ
யீசான னாகச் சார்ந்து
செப்புமவி யொடுகூவு மென்னழைப்பை
விருப்பமொடு சேரும் போதே.

(இ-ள்.) பிரஹ்மணஸ்பதியே! எல்லா நாட்களிலும் நல்ல நியமங்களோடு கூடியதும், அன்னம் (அல்லது ஜீவசக்தி யென்பார் மேனாட்டாசிரியர்.) நிறைந்துள்ளதும், தேரோடு கூடியதுமான செல்வத்தை யாங்கள் அடைக. பிரஹ்மத்தோடு யான் கூவு மழைப்பினை விரும்புங் காலத்து நீ ஸர்வத்துக்கும் ஈசுவரனாய் வீரர்களுக்குட் சிறந்த வீரர்களாகிய புத்திரர்களை யெங்களுக்குத் தோற்றுவிப்பாயாக—(எ-று.) செய்யுளில் அவியொடு கூவு மென்னழைப்பை யென்று ரேனும் வடமொழி மூலத்துப் பிரஹ்மணா என்றுள்ளதுபற்றி உரையில் அச்சொல்லையே வைத்துளது, பிரஹ்ம சப்தத்துக்கு ஸ்தோத்திரங்க ளென்ற ஒருபொருளு முண்மை பற்றியென்க.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 7.

(வேறு.)

16. துன்றுமிவ் வெஞ்சூக்தத்தைச், செம்மையி னடத்து வோனீ
கன்றலில் புதல்வர் தம்மைக் கருதல் பிரமணப்பதியே;
நன்றுறத் தேவர் காக்குஞ் சிறப்பின வெவையுங் கூட்டல்;
மன்றினில், வீரரோடு பெருந்துதி யாம் வழங்கல்.

(இ-ள்.) எல்லாவற்றையுஞ் செம்மையுற நடத்து வோனாகிய பிரஹ்ம
மணஸ்பதியே! இவ்வெமது ஸூக்தத்தையும் எமது புதல்வர்களையுங் காக்க
வெண்ணுவாயாக. தேவர் நன்றாகக் காப்பாற்றும் கல்யாணகரமான வெ
வற்றையும் கூட்டுவிப்பாயாக. யக்ஞக் கூட்டத்தினில் வீரர்களாகிய வெ
மது புத்திர பௌத்திரர்களோடு யாங்கள் உனக்குப் பெரிய ஸ்தோத்திரங்க
ளைக் கூறுவோமாக—(எ-று.) இச்செய்யுளின் கடையடி முன் பல சூக்தங்
களின் கடையடியாக வந்துள்ளது காண்க.

வருக்கம் 3.

## 216. (25) மண்டலம் 2 அநுவாகம் 3 சூக்தம் 3.

5 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: ஜகதி; தேவதை: பிரஹ்ம
ணஸ்பதி.

(வேறு.)

1. அக்கினியை மூட்டிவள ரவன் பகையை
வதைப்பவனும்; ஆர்ந்த போற்றின்
முக்கியமா மவிகளினை யுதவுபவன்
விருத்தியொடு முயங்குவான்; மற்
றொக்கமகரோடு மவர்தந் தநயரையு
நோக்கி யுலகதிற் சீவிப்பான்,
தக்கபிர மணப்பதிதா னன்பனெனக்
கூட்டியுள தகைமை யோனே.

(இ-ள்.) பிரஹ்மணஸ்பதிக்காக அக்கினியைக் கடைந்தெடுத்துக்
காத்தோம்புபவன் தனக்கு இம்சை செய்யும் சத்துருக்களைக் கொல்வான்.
பிரஹ்மத்தைச் செய்பவனும், அவிச் செல்வத்தை யாவுதிக்காக வளிப்பவனு
மாகிய அவன் விருத்தி யடைந்து வாழ்வான். மற்றும் பிரஹ்மணஸ்பதி எ
வனை அவியேற்றுக் கொள்ளுமாறு நண்பனாகச் சேர்த்துக் கொள்ளுகிரு
னோ அவ் யஜமானன் தனது புத்திரரையும், அவர்களது புத்திரர்களாகிய த
னது பேரர்களையும் பார்த்துக் கொண்டு நெடுங்காலம் ஜீவிப்பான்—(எ-று.)
ஈண்டு பிரஹ்மம் ஸ்தோத்திரம் என்னும் பொருளில் வந்துள்ளது காண்க.
மேல் 34ம் சூக்தம் 15வது செய்யுளில் அவியன்ன மென்னும் பொருளில்
ந்துவளது.

## மண்டலம் 2 சூக்தம் 25.

2. மிக்கதமதரும் வீரராற் பகைவர்
வீரரினை விட்டி, யாக்க
ளொக்கவுறுந் தனமதனைப் பரப்புவதோ
டாத்துமத்தா லனைத்து ணேர்வா;
மக்களொடு மவன்பெற்ற பேரருமே
வளர்நீடி வளரு கின்றார்;
தக்கபிர மணப்பதிதா னன்பனெனக்
கூட்டியுள தகைமை யோனே.

(இ-ள்.) பிரஹ்மணஸ்பதி எவ் யஜமானனது ஸ்தோத்திரங்களையும் அவியுணவையும் ஏற்றுக்கொள்ள வெண்ணித் தனக்கு நண்பனாக கூட்டிக் கொள்ளுகின்றானோ அவ் யஜமானன் தனது அரிய வீரமக்களினுதவியால் பகைவரது வீர மக்களைக் கெடுக்கிறான்; பசுக்கள் நிறைந்த செல்வத்தை விஸ்தாரமாக்கிக் கொள்கிறான்; தனது ஆத்ம ஞானத்தால் எல்லாவற்றையும் அறிகிறான். அவன் பெற்ற பிள்ளைகளும் அப்பிள்ளைகளுக்குப் பிள்ளைகளும் செல்வமோங்கி வாழ்கிறார்கள்—(எ-று.)

3. பக்கமுள கரைகளினை மோதுமறல்
வெள்ளமெனப் பகருங் கன்ம
மிக்கவுளோன், வத்திரியை யடித்தோட்டுங்
காளையினின், மேவார் தம்மை
யொக்கமுரண் கொடுசயிப்ப, னக்கினியின்
சுவாலையென் பொடுக்கற் கொண்ணான்,
தக்கபிர மணப்பதிதா னன்பனெனக்
கூட்டியுள தகைமை யோனே.

(இ-ள்.) தான் ஓடும் காலினிருகரைகளையும் மோதிக்கொண்டு செல்லும் ஆற்று வெள்ளத்தைப்போலப் பிரஹ்மணஸ்பதியைப் போற்றுங் கன்மத்தோடு கூடியவனும், அப்பிரஹ்மணஸ்பதியினால் அவிகொள்ளும் ஆசையோடு சிநேகனாகச் சேர்த்துக்கொள்ளப் பெற்றவனுமான யஜமானன், வீரியமற்ற ஷண்டனை வீரிய மிகுந்த விருஷபம் போன்றவன் அடித்து ஓட்டுவதுபோலப் (அல்லது பொலிகாளை காயமடைந்த மாடுகளை யடக்குவது போல வென்பார் மேனாட்டாசிரியர்.) பகைவர்களைத் தனது பலத்தினாற் சயிப்பான். அவனே, அக்கினியினது சுவாலையை ஒருவரும் தடுக்க முடியாததுபோலத் தனது பலத்தைப் பிறரால் அடக்க முடியாதவனாவான்—(எ-று.)

4. மிக்கவொளி விண்ணதிக டடையறவன்
னவற்காக்கி ழிழிந்திங் கோடும்,
தக்கபல மேய்ந்தவரோ டவன்முன்னர்ப்
பசுக்களினைச் சார்வான், யாருந்
திக்கரித்துத்தாழ்த் தரியபலத்தோன், றன்
வலிமைகொடு செருக்கா நின்றான்,

## அஷ்டகம் 2 அத்தியாயம் 7.

தக்கபிர மணப்பதிதா னன்பனெனக்
கூட்டியுள தகைமை யோனே.

(இ-ள்.) பிரஹ்மணஸ்பதி அவிகொள்ளுமாசையோடு நண்பனுகத் தன்னேடு சேர்த்துக் கொண்டுள்ள அவ் யஜமான னுக்காக ஆகாச கங்கை கள் ஓயாமற் கீழ்நோக்கி விழுந்து ஓடும். நல்ல பலசாலிகளான வேலைக்கா ர்களோடு அவன் மற்ற யஜமானர்களுக்கு முன்பாகச் செல்வத்தைப் பெறு வான். எவராலும் அடக்க முடியாத பலத்தோடு கூடிய அவ் யஜமானன் தன து பலத்தினுற் பகைவரைக் கொல்லுகிருன்—(எ-று.)

5. ஒக்கவெல்லா நதிகளு மன்னவற்கெனவே
யொழுகுவவாம்; குறையொன் றில்லா
மிக்கசுக வுறையுள்பல வவற்குற்ற;
தேவர்தரு மீ யின்பத்திற்
சொக்கி, யவன் சோபனமார் செல்வமொடு
வாழ்வதனிற் றேயா நின்றுன்;
தக்கபிர மணப்பதிதா னன்பனெனக்
கூட்டியுள தகைமை யோனே.

(இ-ள்.) பிரஹ்மணஸ்பதி அவியேற்கு மாசையோடு சிநேகிதனைச் சேர்த்துக் கொண்டுள்ள யஜமானனுக்காகவே எல்லா நீரோட்டங்களும் ஓ டுகின்றன. ஒருகுறையு மில்லாமற் சுகமிகுந்த கிரகங்கள் பல அவ் யஜமான னுக்காகப் பொருந்தின. தேவர்களளிக்கும் மிகுந்த சுகத்தி லீடுபட்டு அவன் அழகு வாய்ந்த செல்வத்தோடு கூடி யபிவிருத்தி யடைகிருன்—(எ-று.)

வருக்கம் 4.

## 127. (26) மண்டலம் 2 அநுவாகம் 3 சூக்தம் 4.

4 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: ஜகதி; தேவதை: பிரஹ்ம ணஸ்பதி.

1. நேரியனும் போற்றுளன் பகைவர்தமை
மேற்கொள்க; நெறியிற் றேவைச்
சாரவிழைபவன் றெய்வ மில்லவனைத்
தனக்குள்ளே யடக்கிச் சார்க;
ஏரினுனக் கின்பூட்டு மவனேவெல்
லரியவனைச் செருவில் வெல்க;
ஆருமவி பகுத்தவனே மகமில்லான்
போனகத்தை யார்க நன்கே.

## மண்டலம் 2 சூக்தம் 26.

(இ-ள்.) ஸத்திய நெறியில் நடக்கும் ஸ்தோதா சத்துருக்களைச் சயிக்கட்டும். தெய்வமாகிய உன்னை (பிரஹ்மணஸ்பதியை) வணங்க இச்சிப்பவன் நாஸ்திகனாகிய பகைவனைத் தனக்குள்ளடக்கட்டும். உனக்கு இன்பத்தை யூட்டும் பக்தன் வெல்லுதற்கரிய சத்துருவை யுத்தத்திற் சயிக்கட்டும். அவியளித்து யாகஞ்செய்பவன், யாகஞ் செய்யாதவனுடைய உணவுப் பொருள்களின் பெரும்பகுதியை அநுபவிக்கட்டும்—(எ-று.)

2. வீர, போற்றுக; மனத்தின் விரைபவரை,
போட்டுகநன்; மீகாங்கி மேவார்
சாரும்பேரி னிற்றிடத்தின் மருவுமுளங்
கொள்க; அவி சார் விப்பாய்நீ
யாருமித் தனவானை யழகினுறு
முறையினிலே; அழைப்போம் யாமுஞ்
சிறற்காத்திடும் வகைப் பம் மணப்பதியை
யெக்காலுஞ் சிறக்கத் தானே.

(இ-ள்.) [இச்செய்யுள் கவிதன்னையே முன்னிலைப் படுத்திக் கூறிக்கொண்டது] விசேஷமாய்த்துதி கூறும் வீரனே! போற்றுவாயாக. மனத்திலும் வேகமாகச் செல்லும் பகைவரை நன்றாய் ஓட்டுவாயாக. சத்துருக்கள் பொருந்திய யுத்தத்திற் றிடம் பொருந்திய மனத்தை யெய்துவாயாக. ரோபன செல்வனுப் விளங்கும்வண்ணம் சருபுரோடாசாதி யவி யுணவுகளைச் சேகரித்தளிப்பாயாக. யாங்களும் பிரஹ்மணஸ்பதியை யெங்களை ரட்சிக்குமாறு இரந்தழைப்போம்—(எ-று.)

3. அவியதனைச் சிரத்தையுள மனத்தோடுந்
தேவர்களி னரும் பிதாவுக்
கெவன்பிரம ணப்பதிக்கென் றளித் தவனைச்
சேவித்திங் கொழுகுவா, னன்
னவன்சனத்தோ டவனில்லோ டவன் குடும்பத்
தொடுபுதல்வ ரார்க்கா ரோடு
மவன்றனக்கென் றருநிதியை யன்னமதை
வீரரோடு மடைவான் மன்னே.

(இ-ன்.) எவ்யஜமானன் தேவர்களைப் பரிபாலிப்பவனாகிய பிரஹ்மணஸ்பதிக்குச் சிரத்தையோடு சரு புரோடசாதி அவிப்பொருள்களை யளித்து அவனை வணங்குவானோ அவ்யஜமானன் தனது பரிஜனங்களோடும் கிரகத்தோடும், பந்துக்களோடும், புத்திரர்களோடும் தனக்கென்று உணவுப் பொருளையும் செல்வத்தையும் வீரர்களோடு பெறுவான்—(எ-று.) அவன் எனப் பலமுறையும் ஒருவனையே வற்புறுத்திக் கூறியபடி.

4. நெய்க்கவச மிட்டவவிதனை யளித்துச்
சேவிக்கு நெடியான் றன்னை

## அஷ்டகம் 2 அத்தியாயம் 7.

மெய்க்கவச நெறிகளினூ டெடுப்பான், பம்
மனப்பதியும்; மிடையுந் துன்ப
முய்க்குமவர் செல்லலினைக் காத்திடுவான்
றுன்பொழித்துத் துயரைக் கூடப்
பொய்க்கடிப்பா னற்புதமா யவன்றன்னைப்
பகைநின்றும் போற்று வானே.

(இ-ள்.) நெய்யினால் உபஸ்தரண அபிகாரங்கள் செய்த அவியுணவுகளைத் தந்து ஸேவிக்கின்ற யஜமானனைப் பிரஹ்மணஸ்பதி உண்மையான நெறிகளினூடு நடத்துவான். துன்ப மூட்டுவோரின் இம்சைகளை விலக்கிக் காப்பான். துன்பத்தை யோட்டித் துயரத்தையு மில்லாமற் செய்வான். அற்புதமாய் யஜமானனைச் சத்துருக்களினின்றும் காப்பாற்றுவான்—(எ-று.)

வருக்கம் 5.

## 218. (27) மண்டலம் 2 அநுவாகம் 3 சூக்தம் 5.

### 17 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமனது புத்திரன் கூர்மன்; (இஷ்டம்போல் கிருத்ஸமதனையும் சொல்வதுண்டு.) வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: ஆதித்தியர்கள்.

. (வேறு)

1. நெய்யினை யொழுக்கு மிந்தத் துதிகளைத் துடுப்பா லீசர்
செய்பரா மதிதி மக்கட் கூற்று வேவ னென்றும்; மித்ர
னையனும் பக னரிய மானெடு பலசார்த் தோன்றுந்
தூய்யவன் வருண னம்சன் றிறலுற்றோ னெம்மைக் கேட்க.

(இ-ள்.) நெய்யை யொழுகவிடும் இந்த ஸ்தோத்திரங்களைக் கூறித் துடுப்போடு ஈசர்களாகிய ஆதித்யர்களை யெண்ணி எப்போதும் ஆவுதி செய்வேன். மித்திரனும், பகனும், அர்யமாவும், பலவிடங்களி லநுக்கிரகார்த்தம் உற்பவிக்கும் வருணனும், ஸாமர்த்தியம் வாய்ந்த அம்சனும், (அல்லது அம்சனும், தட்சனு மெனவிரண்டு சிறப்புப் பெயர்களாகக் கொள்ளுவர் மேனாட்டாசிரியர்.) எம் துதிகளுக்குச் செவிதரட்டும்—(எ-று) அம்சனைப்பற்றி மண். 2 சூக். 1 செய். 4 பார்க்க. மித்திரன், வருணனிவர்களைப்பற்றி மண். 1 சூக். 89 செய். 3ற் பார்க்க. "ஆதித்தியர்கள்: இவர்கள் விண்ணி னுன்னதப் பிரதேசத்தி லுறைபவர்கள். நித்தியர், கடக்கரியர், அழிக்கரியர். இவரைத் தாங்குபவள் சநாதனமாயுள்ள அதிதியாம். இவர்களை இதா விண்ணொளிகளோடு தகைப்பது பொருந்தாது, ஆனால் சூரியன், சந்திரன், நாட்கள் முதலிய ஒளிகளுக்கு ஆதாரமானவர்கள். பிற்காலத்தார் இவர்களைப் பன்னிருவ ராக்கித் துவாதச ஆதித்தியர்களென்று கூறினாரேனும் அது வேதத்திற் காணப்படும் ஆதித்யர்களின் தன்மை முற்று முணர்த்தியதாகாது." என்பது மூர் என்பவரது மதம்.

## மண்டலம் 2 சூக்தம் 27.

2. ஒருமனத்தோ ரித்சோம மென்னதை யொப்பலின்றே
அரியமா வருணன் மித்ர ஞதி யாதித்தி யர்கள்
பெரிய சோதியினே டாற்றுப் பெருக்கெனத் தூய்மையுற்ருேர்
துரிதமிலவர் வஞ்சமற்றோ ரருளொடெக்காலுந்தோய்ந்தோர்.

(இ-ள்.) பெரிய ஒளியோடு கூடியவரும், ஆற்றுப் பெருக்கைப் போலச் சுத்தமானவரும், பாபமற்றவரும், துன்பமில்லாதவரும், எக்காலத்தும் நீங்காத வருளோடு கூடியவரும், ஒரு மனத்தோடுள்ளவருமான அரியமா வருணன் மித்திரன் முதலிய வாதித்தியர்கள் எனது இந்த ஸ்தோமத்தை இன்றைக்கே யொப்புக்கொள்ளட்டும்—(எ-று)

3. விரிவுளோ ரிவ்வாதித்த ராழ்ந்தவ ரிடுக்க ணற்ருே
ரரிகளை வதைப்போர் பற்பல்கண் ணுளோ ருள்ள மூடு
பரிவொடு சென்று பாவப் புண்ணியச் செயல்பார்க் கின்ருர்;
பரமதூரத்தி னுள்ள யாவையு மிருபர்க்கண் ணும்.

(இ-ள்.) விஸ்தாரமாகப் பரந்துள்ளவர்களும், ஆழ்ந்த புத்தியுள்ளவர்களும், பகைவரா லிம்சிக்க முடியாதவர்களும், சத்துருக்களைக் கொல்லுபவர்களும், பலகண்களோடும் கூடியவர்களுமான இவ்வாதித்தியர்கள் மக்கள் மனதுக்குட் புகுந்து பாப புண்யங்களைப் பார்க்கிருர்கள். அதி தூரத்தினுள்ள எல்லாவஸ்துக்களும் ராஜாக்களாகிய இவர்களது அருகிலே வந்து தங்குகின்றன—(எ-று.)

4. தாவர சங்க மத்தைத் தாங்குவோர், தேவ, ரெல்லா
வோவரு முலகு மோம்புந் தீர்க்க கன்மத்தோர், செல்வின்
மேவிய நீரைக் காலத் தூற்றியே காப்போர் பாபஞ்
சாவுறப் புடைக்கு மாதித்தியர், மகவுண்மை வாய்ந்தோர்.

(இ-ள்.) தாவர ஜங்கமங்களைத் தாங்குபவர்களும், தேவர்களும், எல்லாப்புவனங்களையும் பரிபாலிப்பவர்களும், தீர்க்க யோசனையோடு கூடியகன்மங்களைச் செய்பவர்களும், மேகநீரைக் காலமழையாகப்பெய்வித்து ரட்சணை புரிபவர்களும், பாபத்தை யறவொழிப்பவர்களும், ஸத்திய யக்ஞத்தோடு கூடியவர்களுமான ஆதித்தியர்கள்—(எ-று.) எம்மதினர்களாகட்டு மெனக் கூட்டிமுடிக்க வென்பார் ஸாயணர்.

5. நடுக்கத்து மரியமா னற் சுகத்தினை நாட்டு மிந்த
விடுக்கரு முந்துணை மேவல்யா னதிந மக்காள்;
இடுக்க ணற்றிடநீர் காட்டு நெறியின், மித்திர வருணீர்,
ஒடுக்கல்யான்பாபந்தன்னைச்செலாநெறியொழித்தல்போன்றே

(இ-ள்.) ஆதித்தியர்களே! ராட்சஸாதிகள் வருவார்களென்று பயப்படுங்காலத்தும் அரியமா சுகத்தை நாட்டுகின்ற உம்முடைய காவல்களை யானடையட்டும். மித்திராவருணர்களே! துன்பற நீங்கள் வழிகாட்டயான் செல்

லத்தகா. நெறிகளை விலக்குவது போலப் யாபங்களை யொழிக்கட்டும்—(எ-று.) அ. பமானவையும் விளியாகக் கொள்ளுவர் ஸாயணர்.

வருக்கம் 6.

6. அரியமான் மித்திரர்கா, ளுந்நெறி சுகப் போக்கோடு
வருணனே. முட்களி ன்றிச் சுகதரமாக வேய்க;
பெரியவந் நெறியி லாதித்திப ரெமைப் பரிந்து பேசல்;
அருஞ்சுக மியைக்குந் தஞ்ச மழிவில தெமக் களிக்கல்.

(இ-ள்.) அரியமானே! மித்திரனே! வருணனே! உங்களது மார்க்கங்கள் சுகமாகப் போகக் கூடியவையாயும், முட்களற்றவையாயும், சுகதரமானவையாயும் பொருந்துக. ஆதித்தியர்களே! அந்நெறியி லெங்களுக்காகப் பரிந்து பேசுவீர்களாக. எங்களுக்குச் சுகத்தைத்தரும் அழிவில்லாத சரணிடத்தைத் தருவீர்களாக—(எ-று.)

7. மன்னவராகு மக்கள் மருவிய வதிதி யெங்க
ளொன்னலர் தம்மைத் தூர வோட்டுக; அரியமானு
நன்னய நெறிக ளூடு நடத்த; பல்வீர ரெய்தி
யின்னலற் றெய்த, மித்ரா வருணரி னுயர்ந்த காப்பே.

(இ-ள்.) ராஜாக்களாகிய புத்திரர்களைப் பெற்ற அதிதி எங்களை யிம்சிக்கும் பகைவர்களைத் தூர வோட்டுக. அரியமான் எங்களை நல்ல மார்க்கங்களில் நடத்துக. வீரியம் வாய்ந்த பலபுத்திரர்களையும் யாங்கள்பெற்றுத் துன்ப ரஹிதராய் மித்ராவருணர்களின் பாதுகாப்பினை யடைவோமாக—(எ-று.)

8. பூமிமூன் றெடுப்பர் மேலு மொளியுள மூன்று மேந்தி
யோமென யக்ஞ நோன்பி னுளுற்றுவர் மூன்று கன்மம்;
காமுறு மும் மகிமை, யாதித் தியவர்காள், மகத்தா லோங்கும்;
வாமமா மது, வருண மித்திர வரிய மானே.

(இ-ள்.) அவ்வாதித்தியர்கள் ஸ்வர்க்கம் பூமி அந்தரம் என்னும் மூன்று பூமிகளையுந் தாங்குவர். மேலும் அம்மூன்றிடங்களிலும் சூரியன், அக்கினி, வாயு என்னும் மூவர் ஒளியுள்ளவர்களையும் நிறுத்துவர். யக்ஞ விரதங்களில் (ரஸ ஆதான, தாரண, விஸர்ஜனம்) என்னும் மூன்று கர்மங்களையும் புரிவர். ஆதித்தியர்களே! உம்மகிமை யக்ஞத்தினால் ஒக்கமடைகிறது. அர்யமாவே, மித்திரனே, வருணனே, அம்மகிமை அழகுவாய்ந்ததாம்.(எ-று.) ரஸஆதான, தாரண, விஸர்ஜனம் என்பது மழைநீரை இழுத்தலும் அடக்குதலும், பினவெளி விடுதலுமா மென்பர் மேனாட்டாசிரியர்.

9. பொன்மய, ரொளியோ, ராற்றுப்பெருக்கெனத் தூயோர் தூங்கா
வன்மைய, ரிமையார், யாரும் வலித்திட வடங்கார், நேர்மை
துன்னிய மர்த்தியற்காத் தூக்கினர் மூன்று திவ்ய
நன்னய வொளிக டம்மை, நலம்பெறப் யலர் யோற்றுற்றோர்

## மண்டலம் 2 சூக்தம் 27.

(இ-ள்.) பொன்னாபரணங்களை யுடல் முழுது மணிந்து பொன்மய மாகத் தோற்றபவர்களும், காந்தியுள்ளவர்களும், ஆற்றுப் பெருக்கைப் போலச் சுத்தமானவர்களும், ஸ்வப்ன நிலையாகிய தூக்கத்தை யடையாதவர்களும், இமைகொட்டாதவர்களும், எவராலும் இம்சிக்க முடியாதவர்களும், பலராலும் நன்றாகத் துதிக்கப் படுபவர்களுமாகிய ஆதித்தியர்கள், நேர்மையாக நடக்கும் மர்த்தியனாகிய யஜமானனுக்காக, விண்ணிற் பிறந்த அக்நி, மின்னல், சூரிய னென்னும் மூன்று ஜோதிகளையும் தூக்கிப் பிடித்தார்கள்—(எ-று.) ஸாயணர், தாரபூ(p)தா:என்பதற்கு ஆற்றுப் பெருக்கெனத் தூயோர் என்றது, நீரோட்டத்திற் கழுவிவிட்டது போல நிர்மலமானவர்களு மென்பார். மேல் மண். 2 சூக். 27 செய். 3லும் இச்சொற்றொடர் வந்துளது காண்க.

10. வருணா அசுர, தேவர் மர்த்திய ரேனு மெல்லாச்
சரணர் தங்கட்கு மன்னாய்ச் சார்கின்றாய்; நன்கு காணத்
தருதுவாய் சரற்காலங்க ளூறெமக்; கிதத்தைச் செய்யும்
பெருந்துறு வானோர் முன்னோர் பெற்றன பெறுவே மாக.

(இ-ள்.) வருணனே! (அஸுரனே!) பகைவர்களை யடக்குவோனே! தேவராயினும், மனுஷ்யராயினும் எல்லாப் பக்தர்களுக்கும் நீ அரசனாகின்றாய். யாங்கள் நன்றாய்க் காணும் வண்ணம் எங்களுக்கு நூறு மாரிக்காலங்கள் அல்லது வருஷங்களை யளிப்பாயாக. எங்கள் முன்னோர் பெற்றிருந்த இதஞ் செய்யும் நீண்டவாயுளை யாங்களும் பெறுவோமாக—(எ-று.) அஸுரன் மண். 1 சூக். 24 செய். 14 பார்க்க.

வருக்கம். 7.

11. வலமிட மறியே னன்றிக் கிழக்குமேற் கேனுங் காணேன்;
நலமுள வசுக்கா, ளாதித் தியவர்காள், பக்குவத்தின்
மலியினுங் குழப்பம் வாய்ந்த வதியினும் வழிநீர்காட்டச்
சலன மில்லாது சோதி தன்னை யானடைக நன்கே.

(இ-ள்.) செல்வவான்களாகிய வஸுக்களே! எனக்கு வலப்பக்கமுந் தெரியாது; இடப்பக்கமும் தெரியாது. அன்றியும் கிழக்கையும் மேற்கையு மறியும் சக்தியு மெனக்கில்லை. யான் பக்குவப்பட்ட புத்தியோடிருப்பினும், மனக்குழப்பத்தோ டிருப்பினும், நீங்கள் வழிகாட்டப் பயமில்லாது யான் அடைய வேண்டிய ஜோதியை யடைவேனாக—(எ-று.) பயத்தைத் தராத ஸூரிய தேஜஸை யடைவேனாக வென்பதும் ஒன்று. அற்றேல், 'சலனமில்லாத சூரன் சோதியைச் சார்க யானே' எனக்கடை யடியை மாற்றிப் படிக்க. உன்செயலே யன்றி யென் செயலென்று முலகிலில்லை! என்றபடி.

12. உண்மையை நடத்து மன்னர்க் குதவுறு மவியோ, னென்றுந்
திண்மையார் காப்பாலன்னோர் திறம்பெற வளர்க்க லுற்றோன்,
வண்மையோ னாகிச் செல்வ முதன்மையிற் றேறி னோங்கி
யோண்மையார் கீர்த்தி மானா யொளிருவான் மகக்கூட்டத்தே.

(இ-ள்.) உண்மையை நடத்தும் மன்னவர்களாகிய ஆதித்தியர்களுக்கு அவியளிப்பவனும், எக்காலத்தும் அவர்களது வலிமை பொருந்திய பாதுகாப்பை யடைந்து அவர்களால் வளர்க்கப் பெற்றவனுமான யஜமானன் தாதாவாய்ச் செல்வத்திலுங் கௌரவத்திலும் முதன்மையை யடைந்து, யக்ஞக் கூட்டத்திலும் பிரசஸ்தி வாய்ந்து, தேரில் விளங்குவான்—(எ-று.)

13. சுத்த, னொருதுக்க மில்லான், றேய்ந்த பேருணவன், வீர
ரொத்திடு நல்லோன், பச்சைப் பயிர்செறி புதுகச் சாரி
னத்தியே யுறைவான்; ஆதித்தியர்தங் காவலினைக் நன்னு
முத்தமன் றன்னைச் சேய்மையணிமையி னுவறுவோர்கொல்லார்.

(இ-ள்.) சுத்தனும், ஒருதுன்பமு மில்லாதவனும், பிரபூதமான உணவுப் பொருள்களோடு கூடியவனும், வீரர்களோடு கூடிய நல்லவனுமாகிய யஜமானன் ஸஸ்யாதிகள் நிறைந்து தண்ணீர் குலவிய விடங்களில் விரும்பி வசிப்பான். ஆதித்தியர்களுடைய காவலினை யடைந்த அவ்வுத்தமன் தூரத்திலேனும் சமீபத்திலேனுமுள்ள பகைவரால் வருத்தப்பட மாட்டான்—(எ-று.)

14. அதிதி மித்திர வருண வெம்பிழை வேறுவேறு
பதிவுற நினக்கிழைத்த வற்றை மன்னிக்கல்; வேந்தே,
வதிபுறு பயமொழிந்த பெருஞ்சுடர் மருவல் யானே;
அதிநெடு மிருளு மெய்மை யன்முறு தொழிக நன்கே.

(இ-ள்.) அதிதியே! மித்திரனே! வருணனே! உங்களுள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக யான் புரிந்த வபராதங்களைத் தனித்தனியாக ஒவ்வொருவரும் மன்னிப்பீர்களாக. (சூரியாம்சமாகத் தோற்றும்) இந்திரனே! பயமொழிந்த உனது பெருஞ்ஜோதியை யானடையட்டும். நீண்ட இருட்காலமானது எங்களைக் கவ்விக்கொள்ளாமலிருக்கட்டும்—(எ-று.) அர்ச்சிராதி மார்க்கத்தை யெனக்களித்துத் தூமாதி மார்க்கங்கள் என்னை விட்டொழியுமாறு செய்க வெனக் கவிவேண்டிக் கொண்டவாறு.

15. இருவரு மிசைந்தன் றுலுக் கியைவுற விவ் மழையைத்
தருகுவர்; சோபனத்த செல்வயார்ந் தடைவன் சீரை;
இருவகைத் தலமுங் கைக்கொண் டேகுவன் போருக், கன்னாற்
கிருவகைப் பாதியுந் தந் நன்மைக ளியைக்கு மன்றே.

(இ-ள்.) பூமி வானங்களாகிய இருவரும் ஒன்றுகூடி அவ் யஜமானனுக்கு ஆகாசத்திலிருந்து மழைநீரை நிறைய வளிக்கின்றனர். சோபன செல்வத்தைப்பெற்று அவன் கீர்த்தியை யடைவான்: தனது நிவாஸஸ்தலத்தைக் காப்பாற்றிக்கொண்டும், பகைவனது நிவாஸஸ்தலத்தைத் தன் வசப்படுத்திக்கொண்டும் அவன் யுத்தத்திற்குச் செல்லுகிறான். அவனுக்குப் பூமியாகிய பாதியும், விண்ணாகிய பாதியுந் தங்கள் தங்கள் நன்மைகளை யளிக்கின்றன—(எ-று.)

16. வணங்கிடத் தக்கி ராதித் தியவர்கா ளுந்தமாயை
யணங்குறுத்தும் பகையை யடக்குவ, வொன்னார்மிக்க

## மண்டலம் 2 சூக்தம் 28.

வணங்குற விரித்த பாச மிவற்றை யான், குதிரைவீர
னிணங்கவே தாண்டல்;தஞ்சந்துன்பின்றிப்பெரிதா யெய்தல்.

(இ-ள்.) வணங்குதற் குரியவர்களே! ஆதித்தியர்களே! துரோகமி ழைக்கும் பகைவர்களை யடக்கும் உமது மாயைகளையும், பகைவர் துன்புறு மாறு விரித்த பாசக்கயிறுகளையும் யான் குதிரைவீரனைப்போலத் தாண் டிச் செல்லுக. ஒருவிதக் கஷ்டமுமில்லாமற் பெரிய பற்றுக்கோடாகிய உனது சரணிடத்தை யாங்களடையட்டும்—(எ-று.)

17\. துன்று மென்னன்பன் செல்வவான்மிகப் பொருளளிப்போன்
கன்று மின்மையினைத் தோய, வருண,யான்காணு தேய்க;
நன்றுற விபலுஞ் செல்வ, மன்ன, வெற்கோங்கி நிற்க;
மன்றினின் வீரரோடும் பெருந்துதி யாம் வழங்க.

(இ-ள்.) வருணனே! எனக்கு ஆப்தனும், செல்வவானும், மிகவும் அவிப்பொருள்களைத் தருபவனுமான யாககர்த்தா தரித்திரத்தை யடைந்து கஷ்டப்படுவதை யாமென்றும் பாராதிருக்கட்டும். அரசனே! நல்ல நியமங் களோடு கூடிய செல்வம் எனக்கு எப்போதும் குறைவில்லாம லோங்கிநிற் கட்டும். யக்ஞக்கூட்டத்தில் வீரர்களாகிய புத்திரர்களோடு யாங்கள் உனக் குச் சிறந்த துதிகளைக் கூறட்டும்—(எ-று.)

வருக்கம் 8.

## 219. (28) மண்டலம் 2 அநுவாகம் 3 சூக்தம் 6.

11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷெ கூர்மன்; (கிருத்ஸமதனையுஞ் சொல்லுவர்.) வடமொழிச் சந்தம்: திருஷ்டுப்; தேவதை: வருணன்.

இச்சூக்தமும் வருணனைச் சேர்ந்ததே. பயத்தையும் பாபத்தையும், ருணத்தையும், தரித்திரத்தையும், துஸ்வப்நத்தையும் இது போக்குமென்பர்.

1\. சுயப்பிர பையின னதித் தியன்கவி யுடைய விப்போற்
றயற்பொரு ளெவற்றின் மேலு மகிமையிற் சிறந்து நிற்க;
வயப்பெரும் வருணன் யாகம் வயக்குவோ னிடத்து மிக்க
நயப்பொடு களிப்போன் மாட்டுக் கீர்த்தியை யாசிப்பேனே.

(இ-ள்.) ஸ்வயம்பிரகாசனும், அதிதி புத்திரனும், மேதாவியுமா கிய வருணனுக் குகந்த இந்த ஸ்தோத்திரம் எல்லாப் பொருள்களையும் தன து மகிமையால் அடக்கிக்கொள்ளட்டும். வெற்றி பொருந்திய பெரியவனும் யக்ஞ கர்த்தாவினிடத்து மிகவும் ஸந்தோஷிப்பவனுமாகிய வருணனிடத்து யான் நல்ல கீர்த்தியை யாசிப்பேன்—(எ-று.)

2\. நன்குற வோதி யுன்னைத் துதிக்கும்யாம் வருண, வுன்பா
லின்புற விளக்குஞ் செல்வ முனைப்பனி நோன்பி லெய்தல,

## அஷ்டகம் 2 அத்தியாயம் 7.

பொன்பெறு பசுக்க ளார்ந்த வைகலைத் தினமும் பின்சென்
றன்புறு மெரியி னுன்னைத் துதிகொடு போற்று வேமே.

(இ-ள்.) வருணனே! நன்றாக அத்தியயனஞ்செய்து உன்னைத் து திப்பவர்களும், அழகு மிக்க பசுக்களோடு (ஈண்டு கதிர்க் கற்றைகளோடு என்னும் பொருளதென்பார் ஸாயணர்.) நிறைந்த விடியற்காலம் தோற்றிய வுடனே கடைந்தெடுத்து மூட்டப்படும் அக்கினியைப்போலத் தினந்தோ றும் உன்னைப் போற்றுபவர்களுமான யாம் உன்னைச் சேவித்துக்கொண் டே நல்ல செல்வங்களைப்பெறட்டும் – (எ-று.)

3. நன்னய நேதா வாகும் வருண பல் வீர ரோடு
மின்னவப் பலர்ப்போற்று நமரு யுன்சர ணெய்தல் யாமும்;
இன்னலற்றிடு தெய்வங்கா ளதிதி புத்திரரா வேய்ந்தீர்,
மன்னனை புரிவீ ரெந்தம் பிழைகளை நட்புக் கொண்டே.

(இ-ள்.) நன்றாக நடத்துவிப்பவனாகிய வருணனே! பல வீரர்களை யும், பலருந் துதிக்கும் புகழ் வசனங்களையு மடைந்தவனே! யாங்கள் உனது தஞ்சத்தை யடைவோமாக. துன்பமற்ற தேவர்களாகிய அதிதி புத்திரர் களே! எமது தோழமையை யெண்ணி எங்களது அபராதங்களைப் பொறுப் பீர்களாக—(எ-று.) மன்னனை, மன்னன, திசைச்சொல், பொறுத்தல் என்பது பொருள்.

4. தாங்குவோ னான வாதித்திய னறவினை யெச்சாரும்
வீங்கிட விடுத்தான்; வெள்ளம் வருணனாணையிற் செல்கின்ற;
பாங்கினி லிளைப்பாறுமே யிடையறு திவை நன்கோடும்;
ஈங்கு வல்விரைவின் வீழும்,புள்ளென வெம்மைச் சூழ்ந்தே.

(இ-ள்.) நீரை யணை தாங்குவதுபோலத் தாங்கும் ஆதித்தியனாகிய வருணன், தண்ணீரை எல்லாப்பக்கத்தும் பெருகுமாறு விடுத்தான். வெள்ளங்கள் வருணனது ஆக்ஞையினாலே ஓடுகின்றன. இவ்வெள்ளங்கள் இளைப்பாறுவதுமில்லை; இடைமுறிந்து நின்றுபோவதுமில்லை. பட்சியைப் போல வெம்மைச் சூழ்ந்து வேகமாகக் கீழே விழுகின்றன—(எ-று.) ஆதித் தியன், அதிதி புத்திரன்.

5. கயிற்றினை யவிழ்த்த லென்னக் கலுடத்தினின்று மென்னை
யயிர்ப்பறத் தளர்த்தாய்; உன்றன் ரிதநிறை நதியை யாங்கள்
சயத்தொடும் வருண வெய்தல், துதியிழை தந்து சேதம்
பயிற்றிடல்; முடியு முன்னென் கன்ம மெய்பழிவையெய்தல்.

(இ-ள்.) என்னைக் கட்டியிருக்குங் கயிற்றை யவிழ்த்துவிடுதல்போல வெனது பாபங்களைச் சந்தேகமற நீக்குவாயாக. வருணனே, உன்னுடைய ரிதம் (தண்ணீர் அல்லது ஒழுங்கென்பார் மேனாட்டாசிரியர்.) நிறைந்த நீ ரோட்டங்களை யாங்களடையட்டும். ஸ்தோத்திரங்களாகிய படத்தை யுருப்ப

தெத்தயா முபயோகிக்குஞ் சொற்களாகிய (தந்து) நூல் அறுந்து போகாமலிருக்கட்டும். எனது கன்மம் முடிவதற்கு முன் அதன் அங்கங்கள் அழிந்துபோகாமலிருக்கட்டும்—(எ-று.) படம், வஸ்திரம் பயின்றிடல், பயிற்றிடலென வெதுகை நோக்கி வலித்தது. தந்து, நூல்.

வருக்கம் 9.

6. வருணா,வென் பயத்தைத் தூர வோட்டுக; மகமார் மன்ன,
வருமையி னென்னை யேற்க; கன்றுக் கும்பினைத் தெறித்தல்
பொருவ வென் றுயரைப் போக்கல்; பொருந்துநீ தூரப் போகின்
மருவுமென் கண்ணிமைக்கு மன்ன னானல்லன் கண்டாய்.

(இ-ள்.) வருணனே! எனது பயத்தைத் தூர வோட்டுவாயாக. யக்ஞவானுன அரசனே! என்னை அன்போடு ஏற்றுக்கொள்வாயாக. இடையன் கன்றுக்குட்டியின் தும்பினைத்தெறித்துவிடுதல்போல எனது துயரங்களைப் போக்குவாயாக. நீ என்னைவிட்டுத் தூர விலகிப்போனால், என் கண்ணிமைகளை யசைப்பதற்குக்கூட வெனக்குத் திறமை கிடையாது—(எ-று.) எனது கண்ணிமைக்குக்கூட நான் அரசனல்ல வென்றது, எனது கண்ணிமையைக்கூட என்னால் கையாள முடியாது என்றபடி.

7. இட்டிக்க வினை மாற்று மவனை யிம்சிக்கு மந்தத்
தட்டவெம் படைகள் கொண்டு,வருணனே,யசுர,வெம்மைக்
கட்ட மார்த்திட வதைக்கல; லொளிவிடுத் தெங்கு மேகல்;
இட்டம்போல்யாங்கள்வாழ்வாறினைமைப்பகைப்பவரையோட்
டல்.

(இ-ள்.) வருணனே, அஸுரனே! யக்ஞத்தினிடத்துப் பாபம் புரிபவனை வதைக்கும் அந்தக் கொடிய ஆயுதங்களால் எங்களை யடித்துவிடாதே. ஒளிநிறைந்த விடத்தைவிட்டு வேறு எங்கும் யாங்கள் செல்லாதிருக்கட்டும். எங்கள் இஷ்டம்போல யாங்கள் சுகப்படுமாறு, எங்களைப் பகைத்து வெறுப்பவரைத் தூர வோட்டுவாயாக—(எ-று.) அஸுரன், தேவன் என்னும் பொருளில் வந்தது. மண். 1 சூக். 23 செய். 14 பார்க்க.

8. பல்லிடத் துற்பவிக்கும் வருணனே! பண்டு போலச்
சொல்லுவ மின்றும் பின்னு நமத்தொடு தோயுன் போற்றை;
ஒல்லுறு பெவரும் வெல்ல, வுனதழி வெய்தா நோன்பு,
கல்லகமிநிற் போலக், கனக்க வுன்னிட நிலைத்த.

(இ-ள்.) பலவிடங்களிலும் தோன்றும் வருணனே! முற்காலத்திற் போலவே இப்பொழுதும், இனிவருங்காலத்தும், நம வென்னும் வாக்கோடு கூடிய உனது ஸ்தோத்திரங்களைக் கூறுவோம். எவராலும் ஜயிக்க முடியாதவனே! கெடுக்க முடியாத வுனது விரதங்கள், மலையின்மேல் பதித்தவற்றைப்போல என்னிடத்தில் நன்றாக நிலைத்துள்ளன—(எ-று.)

## அஷ்டகம் 2 அத்தியாயம் 7.

9. கடன்களைத் தூர வோட்டி யின்றும் யான்செய்த தீர்க்கல்;
திடனுறப் பிறவரிட்டும் செல்வத்தின் யான் புசிக்கல்;
அடலுறு மரசே யின்னு மளவிலா வைக லெங்கட்
படருறும்; வருண, வன்ன பகல்களி லெமைவாழ் விக்கல்.

(இ-ள்.) என் பிதாவின் கடன்களையெல்லாம் தவிர்ப்பதோடு இப்பொழுதும் என்னுடைய கடன்களையும் நீக்குவாயாக. மற்றவர்களது செல்வத்தி னுதவியால் யான் என்றும் போகங்களை யநுபவியாமலிருக்கட்டும். வலிமை பொருந்திய அரசனே! வருணனே! இன்னும் கணக்கில்லாத பகல்களை யாங்கள் பார்க்க நேரும். அப்பகல்களில் யாங்கள் எப்போதும் வாழ்ந்திருக்குமாறு செய்வாயாக—(எ-று.) வைகல், ஈண்டு இலக்கணையாற் பகலைக்குறித்தது. மேனாட்டாசிரியர் இவ்விருக்குக்கு வேறுமாதிரி உரை கூறுவர். 'நான்செய்த பாபங்களையெல்லாம் என்னின்றுந் தூரவோட்டுக. அரசனே! பிறருடைய குற்றங்களுக்காக யான் அவஸ்தைப்படாமலிருக்கட்டும். அநேக வைகல்கள் இன்னும் எங்களுக்கு வரவிருக்கின்றன. வருணனே, இவ்வைகல்களில் யாங்கள் ஜீவிக்கும்போது எங்களை நடத்துவாயாக.' ருணம் கடனென்னாது பாபமென உரைகூறுவார் இவர். என் பிதாவின் கடன்களையும் என்று உரை கூறியது ஸாயணருரையைப்பின்பற்றியதாம்.

10. அரசனே நண்பனன்றிச் சுற்றமே யெனினு மென்னை
விரசுறு கனவிற் பீதி பெய்துறப் பய முறுத்திற்,
றிருடனே யன்றிக் கோநா யேனு மெங்களைத் துன்பூட்டின்
வருணனே, யவற்றை நீக்கி மகிழ்வொடு காக்க நீயே.

(இ-ள்.) அரசனே! வருணனே! சிநேகிதனாயினும், சுற்றத்தானாயினும் என்னைத் தூக்கத்திலும் நடுங்கும் வண்ணம் பயமுறுத்துவானேனும், திருடன் அல்லது காட்டுநாய் எங்களுக்குத் துன்பத்தை விளைப்பினும், அவற்றை விலக்கி நீ எங்களைக் காப்பாயாக—(எ-று.)

11. துன்று மென்னன்பன் செல்வவான் மிகப் பொருளளிப்போன்
கன்று மின்மையினைத் தோய, வருண, யான் காணா தெய்க;
நன்றுற வியலுஞ் செல்வ, மன்ன, வெப் கோங்கி நிற்க;
மன்றினில் வீரரோடும் பொருந்தி யாம் வழங்க.

(இ-ள்.) வருணனே! எனக்கு ஆப்தனும், செல்வவானும் மிகவும் அவிப்பொருள்களைத் தருபவனுமான யாககர்த்தா தாரித்திரத்தை யடைந்து கஷ்டப்படுவதை யானென்றும் பாராதிருக்கட்டும். அரசனே நல்ல நியமங்களோடு கூடிய செல்வம் எனக்கு எப்போதும் குறைவில்லாமலோங்கி நிற்கட்டும் யக்ஞக்கூட்டத்தில் வீரர்களாகிய புத்திரர்களோடு யாங்கள் உனக்குச் சிறந்த துதிகளைக் கூறட்டும்—(எ-று.)

வருக்கம் 10.

## மண்டலம் 2 சூக்தம் 29.

### 2 0 (29) மண்டலம் 2 அநுவாகம் 3 சூக்தம் 7.

7 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி ஷெ கூர்மன் (கிருத்ஸமதனென்றும் சொல்லலாம்); வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: விசுவதேவர்கள்.

1. திடவிரதத்தி ராதித்தியர் வணக்குரியீ ரென்றன்
செய்பிழைத தூரவோட்டல் மறைவினிற் பெற்றா ளென்னக்;
கடவுளிர், வருண மித்திரர், காது கந்திடுவீ ருந்தந்
திடநய மோர்ந்தே யும்மைத் துணைக்கெனக் கூவுகின்றேன்.

(இ-ள்.) திடம்பொருந்திய நோன்புகளோடு கூடியவர்களும், வணங்கத் தக்கவர்களுமான ஆதித்தியர்களே! மணமின்றி மறைவாகக் குழந்தையைப் பெற்றவள் அக்குழந்தையை யெறிந்துவிடுவதுபோல எனது பாபங்களைத் தூர வோட்டுவீர்களாக. வருண மித்திரர்களே! தேவர்களே! எல்லாருடைய ஸ்தோத்திரங்களுக்கும் காதுகொடுப்பவர்களே! உம்முடைய உறுதியான நன்மைக் குணத்தை யறிந்தே யுங்களைத் துணைக்கழைக்கின்றேன்—(எ-று.)

2. தேவர்கா ணீரென் பூர்வ சிந்தையும் வலியு மாவீர்;
யாவ ரெங்களைப் பகைப்போ ரவர்களைப் பிரித்து நீக்கல்;
மேவலர் தம்மை வாட்டும் வெகுளியி ரெமைப் பொறுக்கல்;
ஆவலி னெனக்கு நன்மை யளிக்க வின்றும் பின்னாளும்.

(இ-ள்.) தேவர்களே! நீங்களே எனது முன்யோசனையாம். நீங்களே எனது பலமுமாவீர். எங்களை வெறுப்பவர்களைத் தூர விலக்குவீர்களாக. சத்துருக்களை வாட்டும் கோபமுள்ளவர்களே! எங்கள் பிழைகளைப் பொறுத்துக்கொள்வீர்களாக. எனக்கு இன்றைக்கும், பின்வரும் நாட்களிலும் நன்மையைச் செய்வீர்களாக—(எ-று.)

3. இன்றும் பின்னரு நும்பாழுங்கட் கென்செயக்கடவோ, மென்றுந்
துன்றிய நட்புக்கொண்டு, வசுக்களே, யாது செய் வோம்?
கன்றலில் சுகத்தை, யாதித்தியர்காள், வருண மித்ரீ,
ரின்றெமக் களிக்க நீங்க, ளிந்திர மருத்து மேவாரே.

(இ-ள்.) இன்றைக்கும் பிற்காலத்தும் யாங்கள் உங்களுக்காக என்ன செய்யக் கடவோம்? எக்காலத்திலும் சநாதனமாகப் பொருந்திய சிநேகத்தைக் கொண்டு, வசுக்களே, யாங்கள் என்செயச் சக்தியுள்ளவர்களாவோம்? ஆதித்தியர்களே! மித்திராவருணர்களே! இந்திர மருத்துக்களே! அழிவில்லாத சுகத்தை யின்று எங்கட் களிப்பீர்களாக—(எ-று.) இந்திர மருத்துக்களும், மித்திரா வருணர்களும் இணைத் தெய்வங்களென்க.

4. தேவர்காணீரே யெங்களுற வினர்; தமித்திரக்கு
மாவலோ னெனக்கு நன்மை யளித்திடீர்; உந்தேர் மந்த

## அஷ்டகம் 2 அத்தியாயம் 7.

மேவியகதியின் யாகக்கடை வராதொழிக; உம்போற்
ருவரு சுற்றத்தார்க்கட் சலிப்பென்று மடையா தேய்க.

(இ-ள்.) தேவர்களே! நீங்களே எங்களுக்குச் செல்வந்தரும் பந்துக்களாவீர்கள். ஸ்தோத்திரங்களைக் கூறி யாசிக்கும் எனக்கு நன்மையைத் தருவீர்களாக. உங்களது தேர் எங்கள் யக்ஞத்தினிடத்து மெதுவாக வராமலிருக்கட்டும். உங்களைப் போலொத்த நல்ல பந்துக்களிடத்தில் யாங்கள் சலிப்புக் கொள்ளாம லிருக்கட்டும்—(எ-று.) வேகமாக வரட்டும் மென்றபடி.

5. ஒருவன் யா னுங்கண்மாட்டுப் பெருந்தவ றுளுற்றியுள்ளேன்;
அருநெறியொழிந்தான் றன்னைப்பிதாவெனவெனைக்கண்டித்தீர்
பெரிதுஞ் சேய்த்தாகல் பாசம்; தேவர்காள் பாவம் போகல்;
கருதுறுங் குஞ்சுத்தாயை வேடனி, லெனைக்கைக்கொள்ளல்.

(இ-ள்.) யான் ஒருவனே யுங்களிடத்துப் பெரிய குற்றத்தைச் செய்துள்ளவன். நெறிபிசகி யொழுகும் புத்திரனைப் பிதாகண்டிப்பதுபோல என்னைக் கண்டித்தீர்கள். தேவர்களே! என்னை மோசஞ்செய்யும் பாசங்கள் என்னின் றூரவிலகட்டும். அவ்வகையேபாபங்களும் என்னை விட்டுத் தூரச் செல்லட்டும். குஞ்சைக்கருத்தொடு நோக்கிக் கொண்டிருக்கும் பட்சியை வேடன் கைக்கொள்ளுவதுபோல என்னைக் கைக்கொண்டு விடாதீர்கள்-(எ-று.) வேடனின் என்ற சொல் ஸாயணருரையிற் கண்டது. அச்சொலின்றிப் பொருள் சிறப்பதில்லை. மேனாட்டாசிரியர் அருநெறி யொழிந்தான் றன்னை யென்பதற்குப் பதிலாகச் சூதாடியை யென்பார். ஆனால் ஸாயணர் அபத (Th) ப்ரவருத்தம் புத்ரே என்றே உரை கூறியுள்ளார்.

6. வணங்குதற்குரியீ ரொம்மை நோக்கி யின்றணைக, வும்மை
யிணங்குறு மனத்தின் யானும் பயத்தொடு மெய்து மாறே;
அணங்கறக் காக்க வோநா யழித்திடா துய்க்க வெம்மை;
வணங்குதற் குரிய தேவீ ரவகடச் செயலைக் காப்பீர்.

(இ-ள்.) வணங்குதற்குரியவர்களே! பயத்தோடும், உங்களைச் சேரவேண்டு மென்னுங் கருத்தோடு மடையுமாறு நீங்கள் எங்களை நோக்கி வருவீர்களாக. வணங்குதற் குரியவர்களே! தேவர்களே! எங்களுக்குத் துன்பநேராத வண்ணம் காப்பீர்களாக. எங்களை ஓநாய் பேன்ற திருடர்கள் அழிக்கா வண்ணம் பாதுகாப்பீர்களாக. எங்களது அவகேடான செய்கைகளையும் நேராதபடி தடுப்பீர்களாக—(எ-று.)

7. நன்று மென்னன்பன் செல்வவான்மிகப் பொருளளிப்போன்
கன்று மின்மையினைத் தோய, வருண, யான் காணு தேய்க;
நன்றுற வியலுஞ் செல்வ மன்ன,வெற் றோங்க நிற்க;
மன்றினில் வீரரோடும் பெருந்துதி யாம் வழங்க.

(இ-ள்.) வருணனே! எனக்கு ஆப்தனும், செல்வவானும், மிகவும் அவிப்பொருள்களைத் தருபவனுமான யாகர்த்தா தரித்திரத்தை யடைந்து

கஷ்டப்படுவதை யானென்றும் பாராதிருக்கட்டும். அரசனே நல்ல நியமங்களோடு கூடிய செல்வம் எனக்கு எப்போதும் குறைவில்லாம லோங்கி நிற்கட்டும். யக்ஞக்கூட்டத்தில் வீரர்களாகிய புத்திரர்களோடு யாங்கள் உனக்குச் சிறந்த துதிகளைக் கூறட்டும்—(எ-று.)

வருக்கம் 11.

## 221. (30) மண்டலம் 2 அநுவாகம் 3 சூக்தம் 8.

### 11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: 1—10 திருஷ்டுப், 11, ஜகதி; தேவதை: 1—5 இந்திரன், 6 இந்திர ஸோமர்கள், 7 இந்திரன், 8 ஸரஸ்வதி, 9 பிருஹஸ்பதி, 10 இந்திரன், 11 மருத்துக்கள்.

1. ரிதத்தினைக் கூட்டுந் தேவ னிந்திர னகியைக் கொன்றோ
னிதத்தொடு மியக்குங் காந்தி யேய்ந்தவ னாகத் தண்ணீ
ரதர்ப்படு மிடையறாதே; பகலெலா நீரி னோங்கும்;
முதற்கணந் நீரி னோட்டந் தொடங்கிய காலம் யாதே?

(இ-ள்.) யக்ஞத்தை (அல்லது தண்ணீரை யென்பார் ஸாயணர்.)க் கூட்டுவிக்குந் தேவனும், அகியைக் கொன்றவனும், எல்லாவற்றையு நடத்துவிக்கும் ஸவிதாவுமாகிய இந்திரனுக்காகத் தண்ணீர் இடையறாது ஓடும். எல்லா நாட்களும் நீரோட்டங்களோடு நிறைந்து விளங்கின. முதன் முதல் அந்நீரோட்ட மானது ஓட ஆரம்பித்த காலத்தை யாரறிவார்கள்?—(எ-று.) இந்நீரோட்டம் என்றும் உள்ளது என்பது கருத்து.

2. விருத்திரற் காக வுண்டி வேண்டியே கொண்ட காலை,
யதிதியி னவன்றா யன்ன தறிந்தவற் கெடுத்துரைத்தாள்;
கருத்தொடு பாதை மேகாவி, பவன்மிகக் களிக்க நாளுந்
திருத்தியி னதிகடங்கள் முடிவிட நாடிச் சேரும்.

(இ-ள்.) (இந்திரன்) விருத்திரனுக்காக உணவைக் கைக்கொண்டபோது, அவ்விந்திரனைப் பெற்ற தாயாகிய (அதிதி) அவ்விஷயத்தை யறிந்து அவனுக்கு (அவ்விருத்திரனைக் கொல்லுமாறு) நன்குரைத்தாள். அவ்விந்திரனுக்கு ஸந்தோஷத்தை யுண்டுபண்ணும் விதமாக நாடோறும் ஆறுகள் தாங்கள்போய்ச் சேரவேண்டிய விடமாகிய ஸமுத்திரத்தை யடைகின்றன—(எ-று.) உணவை இந்திரன் ஸம்பாதித்தபோது என்னும் வாக்கியம் நன்குவிளங்கவில்லை. விருத்திரவதத்துக்காக யஜமானர்கள் தரும் அவியுணவைக் கைக்கொண்டபோது என விரித்துரைப்பின் உரை பொருத்தமாயிருக்கும். எனினும் ஸாயணர் இவ்விதமாக ஒன்றும் விரித்து எழுதவில்லை. மேனாட்டாசிரியர் மூலத்தைமாற்றி லுட்விக்கைப் பின்பற்றியுள்ளார்.

3. விருத்திர னந்தரத்தி லுன்னதமாக நிற்க [றுன்
வருத்துக்கொல் படையைநன் கேயேச்சினனவன்மேல்; அன்

## அஷ்டகம் 2 அத்தியாயம் 7.

கருக்கொளுமுகிலைப்போர்த்துக்கடுகினன்கண்டாய்;வேந்தன்
கருக்குள வாயுதத்தாற் கருதலன்றனைச் சயித்தான்.

(இ-ள்) அந்தரிட்சத்தில் மேகநீரைத் தகைத்துக்கொண்டு விருத்திராசுரன் உன்னதமாக நிற்க, அவன்மேல் இந்திரன் கொலைப்படையை நன்ருக வீசினன். அவ்விருத்திரன் கருமுற்றிய மேகத்தை உடையாகப் போர்த்துக்கொண்டு (இந்திரன்மேல்) எதிர்த்து வந்தான். இந்திரனே கூரான வாயுதத்தால் சத்துருவைச் சயித்தான்—(எ-று.)

4. அசனிபோற்,பெரியார்மன்ன,பெருஞ்சுடர்ப்படையின்வாயில்
விசியுறு மில்லோனுன வசுரன்றன் வீரர் தமமை
யொசிவுற முன்னுட் கொன்ற வரங்கொடி,வேந்தே, யெந்தங்
கசிவிலாப் பகைவர் தம்மைக் காதுக வின்று நன்கே.

(இ-ள்.) பெரிய பொருள் படைத்தவர்களுக்கு நாயகனே! இந்திரனே! எப்பொழுதுங் கதவடைத்துக்கிடக்கும் வீட்டை யுடையவனுன அசுரனுடைய வீரபுத்திரர்களை,இடியைப்போன்று பெருஞ் சுடர்விட்டெரியும் வச்சிராயுதத்தினுல் முற்காலத்திற் கொன்றிட்ட உனது வல்லமையினுலேயே, இன்றும் எங்களுடைய பகைவர்களை நன்கு கொல்லுவாயாக—(எ-று.) பெரியார் மன்னவென்பது பிரஹஸ்பதி யென்பதன் மொழிபெயர்ப்பு. அச்சொல் ஈண்டு இந்திரனைக் குறிப்பதனுலும், ஸாயணர் ப்ருஹதாம்பரிவ்ருடாநாம்பாலயிதா ரிந்த்ர வெனப் பொருள்கூறியுள்ளதனுலும் அவ்வகை மொழிபெயர்த்தார். வ்ருகத்வரஸ: என்பதற்கு வாயில விசியுறு மில்லோரென்றது, யாருடைய துவாரங்கள்நன்ருக மூட்டப்பட்டிருக்குமோ அவ்வசுரன் ஸாயணர் என்று உரைகூறியுள்ளதாலென்க. லுட்விக்என்பவர் சண்டிகர்களின் அரசன் பெயர் விருகத்வரன் என்று கூறவதனுல் மேனுட்டாசிரியர் அதனைச் சிறப்புப்பெயராகக் கொள்வார். அற்றேல் அசுரன் என்னும் சொற்கு அரசனெனப் பொருள்கொள்ளுகவென்பார். இச்சூக்தம் 8 ம்செய்யுள் நோக்குக.

5. கிழுற வெறிக கேட்டைக் கிட்டலாடையக் கற்போற்
காழுறு படையைப்போற்றிற் களித்துவிண்முகட்டினின்றும்;
கேழுறு புதல்வரோடு பேமருங் குழுவி யாங்கள்
வாழுறப் பசுச் செல்வத்தின் வளர்ச்சியைப் புரிக வேந்தே.

(இ-ள்.) ஸ்தோதாக்களினது புகழினைப்பெற்று விண்ணினது உச்சியினின்றும் நீ யெறிகின்றதும் கற்போல் வலிமை பொருந்தியதுமான படையாகிய அவ்வச்சிராயுதத்தைப் பகைவர்கள் துன்பப்படுமாறு கீழே வீசுவாயாக. இந்திரனே நல்ல புத்திரர்களோடும், போர்களோடும் யாங்கள் சுகமாக ஜீவிக்குமாறு பசுநிறைந்த செல்வத்தை விருத்திபண்ணுவாயாக—(எ-று.)

6. திங்கிழைப் போனை வேரோடழிக்கிறீர் நன்கே; செல்வ
மோங்குறு பகத்தோற்காகப் பகைவரை வதைப்பீர்;எம்மைத்

## மண்டலம் 2 சூக்தம் 30.

தாங்குவீர்; எமக்குப் போரிற் பயமொழித் துயர்ந்த காவல்
விங்கிய தலத்தை மீயப்பீ ரிந்திர சோமீ ரீண்டே.

(இ-ள்.) இந்திர ஸோமர்களே! எங்களுக்குத் தீங்குபுரிபவனை வேரோடு நாசஞ்செய்கிறீர்கள். செல்வமிகுந்த யஜமானனைக் காப்பாற்ற வவனது சத்துருக்களை வதைப்பீர்கள். எம்மை இரட்சிப்பீர்களாக. எமக்குப் பயத்தை யூட்டும் போரை யொழித்துப் பயரஹிதமானவிடத்தை எங்களுக்குத் தருவீர்களாக—(எ-று.) மேனுட்டாசிரியர் வடமொழி மூலத்தின் முதற் பாகத்துக்கு, 'நீங்கள் விரும்புமவனுடைய பலத்தை உங்க ளுதவியால் உரப்படுத்துகிறீர்கள்.' என்று மொழிபெயர்ப்பார்.

7. அலட்டுறல்; களைப்பை யீகல்; ஆலச முற்றேநு ணுக்கல்;
கலத்த சோமத்தை யென்றும் பிழியன்மி னென்று நாங்க
ளலைப்புறல்; எமைப்பாலித்துப்பயனளித்தெந்தம்போற்றை
நலக்கவோர்ந் தாவிற் சோமம் பிழிபுபெய்பா னடப்போன்.

(இ-ள்.) எங்களைப் பரிபாலித்து, எங்களுக்கு அபீஷ்ட பலன்களைத்தந்து, எங்களது ஸ்தோத்திரங்களையும் அவிக்கொடைகளையு மறிந்து, ஸோமம்பிழியு மெங்கள் மாட்டுப் பசுச்செல்வத்தோடு வருபவனாகிய இந்திரன் எங்களை வருத்தாதிருக்கட்டும். எங்களுக்குச் சோர்வை யளிக்காமலிருக்கட்டும்; எங்களைச் சோம்பேறிகளாக்காமலிருக்கட்டும். யாங்கள் ஸோமத்தை யவனுக்காகப் பிழியாதேயுங்கள் என்ற வீண் சொல்லைக்கூறுதிருக்கட்டும்—(எ-று.) ஆவின் ஆவோடு என்க.

8. ஸரஸ்வதி யெம்மைக் காக்க; மருத்துவ ரிடையே சார்ந்தா
ளாரமொடு பகைவர் தம்மை யொடுக்குக. மனத்துணிவின்
றாமுறு பொய்ம்மைத் தோற்றிச்சண்டிகரிடை யேயோங்கும்
வரமுறு காளை தன்னை யிந்திரன் வதைக்குங் காலே.

(இ-ள்.) ஸரஸ்வதியே நீ எங்களைக் காப்பாற்றுவாயாக. மனத்துணிவோடு தனது பலத்தை வெளிக்காட்டிக்கொண்டு சண்டிகர்களுக்கிடையே விளங்குகின்ற காளைபோல்வானுகிய தலைவனை இந்திரன் கொல்லும்போது மருத்துவர்களுக்கிடையே சார்ந்தவளாகிய அவள், பலம் மிகுந்தவளாய்ச் சத்துருக்களை ஜயிக்கட்டும்—(எ-று.) இக்காளையின் பெயர்தான் வ்ருகத்வாவென்று இச்சூக்தம் நான்காவது செய்யுளில் லுட்விக் என்பவர் கூறினதாகச் சொன்னார். சண்ட வம்சத்தவர்களில் முக்கியமானவன் என்று கூறிச் சண்டாமர்க்கர்கள் அசுர புரோஹிதரிருவ ரென்பர் ஸாயணர். தேவ புரோஹிதர்களாகிய நாங்கள் அசுர புரோஹிதர்களை வாதில் வெல்லுகவென வேண்டிக் கொள்வது போலும் இச்செய்யுள்.

9. எங்களை வழிமறிக்கு மவனையுங், கொல்லப் பார்க்குந்
துங்கமில்லோனையும்பார்த் தவரைக் கூர்ம்படையாற் கொல்க;
பங்க மெய்தச் சயிக்க, பகற்பதி, யரியை வேலால்;
மங்குவோர் மறுபவர் [illegible] வோச்சுக, மன்ன வெஃகே.

(இ-ள்.) எங்களை வழிமறிக்குந் திருடனையும், கொல்லவெண்ணும் துன்மார்க்கனையும் நோக்கி யவர்களைக் கூரிய வாயுதத்தாற் கொல்லுக. பிரஹஸ்பதியே! எங்களது சத்துருக்களை உனது ஆயுதத்தாற் சயிப்பாயாக. அரசனே! மறுக்கத்தை யடைபவர்களாகிய பகைவர்கள் சாகும்வண்ணம் அவர்களைச் சுற்றி யடிக்குமாறு கொலைப்படைகளை வீசுவாயாக—(எ-று) பகற்பதி, பிரஹஸ்பதியின் சிதைவு.

10. சூரவெஞ் சூரர்வன்மை தோய்ந்தவ ரோடு நீயும்
வீரிய கன்மஞ் செய்து முடிப்பன வற்றை யாற்றல்;
சாருவர் நெடுநாளாகச் செருக்குட, னவரைக் கொன்றே
யாரு மன்னவர் செல்வத்தை யெம்வயிற் சுமந் தளிக்கல்.

(இ-ள்.) சூரனே, எமது வலிமைவாய்ந்த சூரர்களைத் துணைக்கொண்டு நீ செய்துமுடிக்கவேண்டிய வீரிய கர்மங்களை யாற்றுவாயாக. அச்சத்துருக்கள் வெகுகாலமாகக் கர்வங்கொண்ட மனத்தோடும் திரிந்துகொண்டிருக்கிறார்கள். அவர்களது செல்வங்களை யெம்மாட்டுச் சேர்ப்பாயாக—(எ-று.)

11. மருத்துவர்தந் தெய்வச்சாத் தியைந்துள்ள
சனப்பலத்தை வணக்கத் தோடும்
பெருத்துதுதிக் கவிகளொடுஞ் சுகம்விழையும்
யான்றுதிப்பேன், பிறங்க நாளு
மருத்த, மிவட் புகழோங்கிச் செறிவது, வீ
ரம்பொருந்து மவரை யெல்லாம்
பொருத்துவது, வழிவழிப் புத்திரர்களைச் சேர்த்
துயர்த்துவதைப் பொருந்து மாறே.

(இ-ள்.) ஒவ்வொருநாளும் புகழோங்கி நிற்பதும், வீரம் பொருந்தியவர்களை யெல்லாம் கூட்டுவதும், வம்சபாரம்பரியமாகப் புத்திராபிவிருத்திசெய்வதுமான செல்வத்தை யாங்கள் பெறுமாறு, மருத்துக் கூட்டத்தைச் சேர்ந்து தெய்வத்தன்மை வாய்ந்த ஜனங்களின் பலத்தை நமங்களோடும், (அவியோடுமென்றும் கூறுவர் ஸாயணர்) ஸ்தோத்திர கீதங்களோடும் சுகத்தையிச்சிக்கும் யான் துதிப்போன்—(எ-று.)

வருக்கம் 13.

## 222. (31) மண்டலம் 2 அநுவாகம் 3 சூக்தம் 9.

7 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: 1—6 ஜகதி, 7 திருஷ்டுப்; தேவதை: விசுவ தேவர்கள்.

1. வசுக்களுநத் திரா திதி மக்களொடு
முடனெழுகும் வருண் மித்ரீர்,

## மண்டலம் 2 சூக்தம் 31.

விசித்திவெம தருந்தேரைக் காத்திடுக,
பறவைகளு மேக்கு நோக்கி
வசிக்குமிடம் விடுத்தகன்று வனத்தினிடை
மனக்கிளர்ச்சி மேவி யன்னப்
புசிப்படைய விரைவாகச் செல்வதென
வெந்தேர்முற் போகு மாறே.

(இ-ள்.) வஸுக்களோடும், உருத்திரர்களோடும், ஆதித்தியர்களோ டுங் கூடச்செல்லும் மித்திராவருணர்களே! பட்சிகள் தாங்கள் வசிக்கும் கூட்டை விட்டகன்று மேல்நோக்கிக் காட்டில் விரைவாகச் சந்தோஷம னத்தோடு உணவுப் பொருள்களை விரும்பிச் செல்வதுபோல எங்கள் தேர்க ளும் முன்னுற் செல்லும்படி குதிரைகள் கட்டிய வெங்கள் தேர்களைக் காப் பாற்றுவாயாக—(எ-று.) விசித்த என்னும் அடை எதுகை நோக்கிச் சேர்த் தது. தேருக்கும் பட்சிகட்கும் செம்மொழிப் பதங்களாற் சிலேடை கூறி ஞர். எந்தேர் முற்போகுமாறே என்றது, எம்பரி முன்போகுமாறே என் பர் மேனுட்டாசிரியர். அதுவும் பொருத்த முடையதே. விண்டிஷ் என் பவர் தேர் ஸ்தோத்திரமாலையைக் குறிக்கு மென்பார்.

2. எந்தேரை, யொருமனத்தோ டுறைகின்ற
தேவர்களே, பெருமைக் காட்ட
முந்தோடும் பொழுது சனபதத் திடைமுன்
னுறத்தான்மர், முடுகோ டாசின்
மைந்தோடுங் குளப்படியிற் கால்களினுற்
புவிமேட்டை மதித்துழக்கிச்
சந்தோடந் தருநெறியின் விரைவாகப்
படபடெனத் தாவுங் காலே.

(இ-ள்.) ஒருமனத்தோ டொழுகும் தேவர்களே! வேகத்தோடு ப லம் பொருந்திய குளம்படியோடு கூடிய கால்களினுற் பூமியினது மேட்டுப பாங்கான விடங்களை வேகமாகத் துகைத்துக் கொண்டு, சந்தோஷத்தைத் தரும் மார்க்கத்தில் வேகமாகச் சத்தப்படுத்திக் கொண்டு குதிரைகள் தாவிச் செல்லும் போதும், தமது பலத்தைக் காட்டக் கிராமங்களுக்குமத்தியில் எங்களது தேர் முன்னுற வோடும்போதும், அத்தேரை எவற்றிற்கும் முன் னுக வோடும்படி தூண்டுவீர்களாக—(எ-று.)

3. மேலுமெமதம் பார்ப்பவ னெம்மிந்திர; னன்
னுனத்தோன், விண்ணி னின்று
மேலுபவன், மருத்துவர் தம்பலம் வாய்ந்தோ,
னிடுக்கணுறு வுதவி பெய்திச்
சாலவுறும் பொருளதனை வலியூட்டு
முன்படியினைச் சாரும் வன்மைங்
கோலமுட னெந்தேரி னின்றேறி
யுடன்றெடர்வான் குலவி நிற்க.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 7.

(இ-ள்.) மேலும் எல்லாரையும் பார்த்துக் கடாட்சிப்பவனும், ஞான நிறைந்தவனும், விண்ணிலிருந்து வருபவனும், மருத்துக்களது பலத்தை யுடையவனுமாகிய எமது இந்திரன், பகைவரால் வருத்த முடியாத உதவிகளோடு, மிகுந்த செல்வத்தையும் வலிமையை யூட்டும் உணவினையும் யாங்கள் எய்துமாறு, இன்றைக்கு அழகாக எம்மைப் பின்றொடரு நோக்கத்தோடு எமது தேரின் மேலேறி நிற்கட்டும்—(எ-று.)

4. அன்றியுமித் தேவனுந் துவட்டாவெப்
புவியையுந்தன் பலத்தா லாள்வோன்
றன்றுகட வுளர்மனைவி மாரொடொரு
மனத்தவனுய்த் தேரைத் தூண்டல்;
ஒன்றுமிளைப், பகன்பெரிய வொளியுள்ளோ,
னுரோதசிக, ளோங்கும் பூடன்
பொன்றலில் பன்ஞானத்தோ, னசுவினிக
ளாம்பதிகள் பொருந்தித் தூண்டல்.

(இ-ள்.) மேலும், தேவனும், (அல்லது தானுதி குணங்களோடு கூடியவனு மென்பார் ஸாயணர்.) தனது வல்லமையினுற் புவனங்களை யடக்கியாளுபவனுமாகிய துவட்டா, தேவ பத்தினிகளோடு ஒருமனமாக வொத்து எங்களது தேரைத் தூண்டட்டும். (இளை, ஸரஸ்வதி, பாரதி என்னும் மூவரில் முதன்மை பெற்ற) இளையும், பெரிய பிரகாசத்தோடு கூடிய பகனும், பூமிவானங்களும், கெடாத புலவகைய ஞானத்தோடு கூடிய பூஷனும், அசுவினிகளாகிய லோக பாலகர்களும் (அத்தேரைத்) தூண்டட்டும்—(எ-று.) வடமொழி மூலத்திற் றூண்டல் எனவிறுதியிற் கூறப்படவில்லை அது ஸாயணருரை நோக்கிச் சேர்த்தது.

5. அலதிங்க ளொருவரொரு வரைப் பார்த்துப்
பயில்கின்று, ரழகார் செல்வங்
குலவிடுநற் றேவிகளாம் பகலிரவு,
சகத்தறிவு கொளுத்து வோர்க,
ளிலவுபுதுத் துதிகொண்டு, பூதலமே,
யும்மிருவர் தமையு மேத்தி
யிலகுறுதா வரவுணவும் மூவ்வலியு
நெய்யுடன்யா னீயுங் காலே.

(இ-ள்.) அல்லாமலும், பூமியே! (வானமே என்றுங் கூட்டிக்கொள்க.) உங்களிருவரையும் நவமான வசனங்களாலான ஸ்தோத்திரங்களால் நான் போற்றி, ஸ்தாவரங்களிலிருந்து தோன்றும் சருபுரோடாசாதி யுணவையும், பொதுவாக வெண்ணப்படும், (ஓஷதி, பசு, ஸோமம் என்னும்) மூன்று வகையாக பலிகளையும் நெய்யினுல் அபிகார உபஸ்தரணஞ் செய்து உங்களுக் களிக்கும்போது, ஒருவரொருவரைப்பார்த்துக் கொண்டு செல்ப

## மண்டலம் 2 சூக்தம் 31.

வர்களும், சோபன செல்வத்தோடு கூடிய தேவிகளும், ஜகத்திலுள்ள பிராணிகளுக்கு அறிவை யூட்டி யவற்றை நடத்துவிப்பவர்களுமான பகலிரவுகள் (எமது தேரைத் தூண்டட்டும்)—(எ-று) அபிகாரம் உணவுபோடுவதற்கு முன்னும். உபஸ்தரணம் உணவைப் போட்டபின் கவசம் போலும் நெய்யை யூற்றுவதாம்.

6. அன்றியுநற் றுதிவிழையு முமைப்போற்றி
யருள்பெறவே விரும்பு வோம்யாம்;
துன்றுமிடை வெளியார்க்கு மகி,பொருகா
லசன்.திரிதன் ரிபுக்க டோன்றல்
கன்றவிலாச் சவிதாவு மெமக்கன்ன
மளித்திடுக; கடிதி னேகு
மின்பமுறு புனற்பேர னெந்துதியிற்
கன்மமதி னின்பங் கொள்க.

(இ-ள்.) மேலும் நல்ல ஸ்தோத்திரங்களை விரும்புகின்ற உம்மைத் துதித்து உமதநுக்கிரகத்தைப் பெற யாங்கள் ஆசைப்படுவோம். அந்தரிட்சசாவலனாகிய அஹி யென்னும் தேவனும், ஏகபாதத்தோடு கூடிய ஒரேபிறப்புள்ள (அல்லது மறுபடியும் ஜன்ம மெடுக்காத வெனவுங்கொள்ளலாம்:) அஜனாகிய ஸூர்யனும், த்ரிதன் என்னும் தேவனும், ரிபுக்களுக்கு நாயகனாகிய இந்திரனும், ஒளி கெடுதலில்லாத ஸவிதாவும், எங்களுக்கு உணவுப்பொருள்களைத் தரட்டும். வேகமாகச் செல்பவனும், தண்ணீருக்குப் பௌத்திர ஸ்தானத்திலுள்ளவனுமான அக்கினி எங்களுடைய ஸ்தோத்திரங்களிலும் யக்ஞகர்மங்களிலும் ஸந்தோஷப் படட்டும்—(எ-று.) அஹிர் புத்ந்ய: என்ற பதத்தைப் பற்றி மண். 2 சூக், 85 செய். 5ற் பார்க்க. அஜஏகபாதன் என்னும் சொற்றொடர் மண். 6 சூக். 50 செய். 14லும் வருகிறது. த்ரிதனைப்பற்றி மண். 1 சூக். 163 செய். 2ற்பார்க்க. ரிபுக்ஷாவை மண். 1 சூக் 162 செய். 1ற் பார்க்க. நீரால் வனஸ்பதி தோன்ற அவ்வனஸ்பதித்த்வாரா அக்கினி வெளிப்படுவதால் அக்கினியைத் தண்ணீருக்குப் பேரனென்றார்.

7. வணங்குதற்குரியிர் யானும் வழங்கினே னுமதிப் போற்றை;
இணங்குறு கீர்த்தி யோடு மனம் விழைபவ ரெம்மாந்தர்
வணங்குறு நவினப் போற்றை வயக்கினர்; தேரிற் பூண்டே
குணம்பெறு குதிரையென்னக் கூடுக கரும மன்னர்.

(இ-ள்.) வணக்குதற்குரிய விசுவதேவர்களே! உங்களுக்குரிய இந்த ஸ்தோத்திரத்தை யான் சொல்லுகிறேன். கீர்த்தியையும், உணவுப்பொருள்களையும் விரும்புவோராகிய எமது ஜனங்கள் வணங்குதற்கான புதிய ஸ்தோத்திரத்தை உங்களுக்காகச் சிருஷ்டித்தார்கள். தேரிற்பூண்டு வேகம் வாய்ந்த குதிரை முடிவிடத்தை விரைவிலடைவதுபோல அவர்களும் எங்கது கர்மங்களில்வந்து சேர்க—(எ-று.)

## அஷ்டகம் 2 அத்தியாயம் 7.

## 223 (32) மண்டலம் 2 அநுவாகம் 3 சூக்தம் 10.

8 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸ்மதன்; வடமொழிச்சந்தம்: 1-5 ஜகதி, 6-8 அநுஷ்டுப்; தேவதை: தியாவாப்பிருதுவிகள், 2, 3 இந்திரன் (துவஷ்டாவெனவும் சொல்வர்), 4, 5 ராகா, 6, 7, ஸிநீவாலி, 8 குங்கூ, ஸிநீவாலி, ராகா, ஸரஸ்வதி, இந்திராணி, வாருணி என்னும் அறுவருமாம்.

இச்சூக்தத்துக்கு வேறுவகையாகத் தேவதை கூறலுமுண்டு. அதாவது: 1 மித்திராவருணர்கள். 2, 4, 5 விசுவ தேவர்கள் 3 உஷாஸாநக்தா 6 தியாவாப்பிருதுவிகள், 7 இந்திரன் 8 முன்போலவேபோலும்.

(வேறு.)

1. மகமியற்ற விச்சிப்பேன் யான், பூமி
வானங்காள் மருவி யும்மை
யகங்களிக்கச் செய்து, வெகு சிறப்பமையு
மன்னமதை யடைய வெண்ணுந்
தகவினென திப்போற்றைக் காப்பவரா
யமைக; வசு சாரு முள்ள
மிகுமெனதிப் பெருந்துதியாற் பலரும்போற்
றுறுமும்மை முனர்வைப்பேனே.

(இ-ள்.) பூமி வானங்களே! யக்ஞம்புரிய விச்சிக்கும் யான் உம்மை யடைந்து உமக்குத் திருப்தியை யூட்டி, மிகவுஞ் சிறப்பு வாய்ந்த அன்னப்பொருள்களையடைய விரும்பும் எனது இந்த ஸ்தோத்திரத்தைக் காப்பீர்களாக. செல்வம்பெறு மாசைமிகுந்த எனது இந்த மஹத்தான ஸ்தோத்திரத்தால், பலவிடங்களிற் பலராலும் போற்றப்படு மும்மை எல்லாத் தேவர்களுக்கு முதன்மையான இடத்தில் அமைப்பேன்—(எ-று.)

2. மனிதன்ற னிராசிய வஞ்சனைகளெமைப்
பகலிரவும் வருத்தா தெய்க;
துனியினெமைத் துட்டரது வசத்திடுக்க
ணுறுமாறு தோய்த்திடற்க;
கனிதருநின் னன்பெம்மிற் பிரித்திடற்க;
சுகமிழைக்குங் கருத்தினோடு
முனியுணர்க; இதைச்செயுமா றுனையாங்கள்
யாசித்து வணங்கு வோமே.

(இ-ள்.) (இந்திரனே! அல்லது துவட்டாவே!) மனிதனுடைய ரகஸ்ய வஞ்சனைகள் எம்மைப்பகற்காலத்திலும் இராக்காலத்திலும் வருத்தாமலிருக்கட்டும். துஷ்டர்களது இம்சையால் யாங்கள் துன்பப்படுமாறு எங்

களைப் பகைவர்களிடத்துக் கொடுத்துவிடாதிருப்பாயாக. உன்னுடைய சிநேகம் எங்களைப் பிரியாமலிருக்கட்டும். அச்சிநேகத்தை, யெங்களுக்குச் சுகத்தையளிக்கும் மனத்தோடு கருதுவாயாக. இதனைச் செய்யும் வண்ணம் யாங்கள் உங்களை யாசிப்போம்—(எ-று.) மேனாட்டாசிரியர் சுகத்தையடைய விரும்பும் மனத்தோடு உன்னை யாசிப்போமெனக் கூட்டிப் பொருள் கூறுவர்.

3. சினமற்ற மனத்தோடு மின்பகாரணக்
கறவைத் தேனு,பாலிற்
கனமுற்ற மடிதோய்ந்து வற்றரிதைக்
கொடுவருக; கரைந்து பல்லோர்
மனமுற்ற துதியுரைக்கும் பெருமையினேய்,
நடைகதிக்க மருவு முன்னை
இனமுற்ற வசனங்களா லெல்லாப்
பகல்களினு மேத்து வேனே.

(இ-ள்.) (இந்திரனே அல்லது துவஷ்டாவே!) கோபமொழிந்த மனத்தோடு இன்பகாரணமானதும், பால்நிறைந்த மடியோடு கூடியதும், என்றும் வற்றுததுமான கறவைப்பசுவை இங்கு கொண்டுவருவாயாக. பலராலும் துதித்தழைக்கப்படுபவனே! நடை விரைவோடு பொருந்திய வுன்னை எல்லா நாட்களிலும் எனது ஸ்தோத்திர வசனங்களாற் புகழுகின்றேன்—(எ-று.)

4. நற்றுதியின் யான்விரைவிற் கேட்பவளாம்
ராகாவை நலத்தழைப்பேன்;
பொற்புறு செல்வத் தவளு மெம்மழைப்பிற்
செவிசாய்க்க; பொருந்து முள்ளத்
தெற்படவே யுணர்க; வொரு பொழுதுமுறி
யாவூசி சேர்த்துக் கன்ம
முற்றுறவே தைத்திடுக; சததனச்சீர்
வீரசுதன் முதத்தினிக.

(இ-ள்.) [பூரணசந்திரனுள்ள பௌர்ணமி தினத்ந்த் தேவிக்கு ராகா வென்ற பெயர். இவள் புத்திரோற்பத்திக்கு காரணதேவதையாம்] விரைவாக ஆஹ்வானங்களைக்கேட்கும் ராகாவென்னும்தேவியையான் நல்ல துதிகளாலழைக்கிறேன். சோபன செல்வத்தோடு கூடிய அவள் எமது அழைப்பைக் காதுகொடுத்துக் கேட்கட்டும். தன் மனத்தை அவ்வழைப்பினிடத்துச் செலுத்தி யதனை யறியட்டும். ஒருபொழுதும் ஒடிந்துபோகாத வூசியைக் கொண்டு வஸ்திரத்தைத் தைப்பதுபோல அவளது கர்மங்கேட்டை யடையாதபடி யதனைச் செய்து முடிக்கட்டும். பலவித செல்வங்களோடும், கீர்த்தியோடுங்கூடி வீரியம்வாய்ந்த புத்திரனைத்தரட்டும்—(எ-று.) கர்மமென்றது ஈண்டு புத்திரோற்பாதன கர்மத்தைக்குறிக்கும். தைக்கப்பட்ட வஸ்திரம் நெடுநா

ளிருப்பதுபோல இக்கருமத்தை நெடுநாளிருக்குமாறு புரிக வென்பது கருத்து.

5\. நல்லுருவோ டாருகின்ற நன்மதிக,
ளவிபளிப்போ னுடுஞ்செல்வ
மொல்லுறவே கூட்டுவிக்கு மவற்றோடு
ராகாவே யொண்மனத்திற்
புல்லுகவின் றிங்கெமை நீ; ஆயிரத்த
வளமூட்டும் போனகத்தைத்
துல்லியநற் கனம்வாய்ந்த சோபனத்தோ
யெமக்கெனவே தோய்விப்பாயே.

(இ-ள்.) ராகாவென்னும் பௌர்ணமித்தேவியே! ஆயிரக்கணக்கான வளங்களை யெங்களுக்குத் தருபவளும், நல்ல செல்வத்தாற் சிறந்தவளு மான சோபனத்தேவியே! நல்ல ரூபத்தோடு கூடியவைகளும், அவிவளிக்கும் தாசுஷன் விரும்பும் செல்வங்களை யளிப்பவைகளுமாகிய உனது நல்ல புத்தித்திறங்களோடு இன்றைக்கு இங்குவந்து நல்ல சித்தத்தோடு எங்களைச் கூடுவாயாக—(எ-று.)

(வேறு.)

6\. பரந்த நற்சுருட் கேசத்துச் சினீவலி நீயுந்
தரந்தெரிந்த சோதரியெனச் சார்குவாய்; தேவர்க்,
குரந்தர விவணுதவிய வவிகளி லுவக்கல்;
திரம்பெற வெமக்குதவுக தேவி சந்ததியே.

(இ-ள்.) பரந்த கேசச்சுருளோடு கூடிய ஸினீவாலீ யென்னும் தேவியே! நீ தேவர்களுக்கு உடன்பிறப்பா யமர்வாய். யாங்கள் இங்கு உன்னைக் கருதி அக்கினியில் ஆவுதிசெய்யும் அவிப்பொருள்களை யுவப்போடும் ஏற்றுக்கொள்வாயாக. எங்களுக்குப் புத்திர பௌத்திரர்களைத் தருவாயாக —(எ-று.) சினீவாலீ இடை குறுகியது. இவளும் சந்திர ஸம்பந்தமான தேவதைகளில் ஒருத்தியாம், புத்திரோற்பாதன காரண தேவியாம். த்ருஷ்ட சந்த்ராமாவாஸ்யா ஸினீவாலீ யென்பார் ஸாயணர். ப்ருதுஸ்துகே என்பதற்குப் பரந்த ஜகனங்களோடு கூடியவளென்றும் பொருளுண்டு.

7\. அணிமிகுத்ததோ ளங்குலி சிறந்தவள், பலரை
யணிபெறப் பெறுஞ் சந்ததிச் சிறப்பினள், நன்மை
திணியுறச் சனம் பாலிப்பாள், சினீவலி யவட்குப்
பணிவொடு மவிப்பொருள்களைப் பரிந் துதவுகவே.

(இ-ள்.) அழகிய தோள்களுள்ளவளும், அழகிய விரல்களோடு கூடியவளும், பலபுத்திரர்களைப்பெறும் புத்திரபாக்கியவதியும், ஜனங்களுக்கு நன்மையைச்செய்து அவர்களைப் பரிபாலிப்பவளும், ஸினீவாலீயுமாகிய அவளுக்கு அவிப்பொருள்களை உதவுவீர்களாக—(எ-று.)

## மண்டலம் 2 சூக்தம் 33.

8. குங்குவைச் சினீவாலியைக் கூவுவென்,ராகா
அங்கமார் கலைவாணியை யிந்திரா ணியையுந்
துங்கமார் வருணான்மனைத் தூயவருடனே
யிங்கெனக்கு வாழ்வளித்தென்னைக் காத்திடுமாறே.

(இ-ள்.) குங்கூவென்னும் குஹூதேவியையும், ஸினீவாலியையும், ராகாவையும், ஸரஸ்வதியையும், இந்திராணியையும், வாருணியையும், எனக்கு வாழ்வளித்து என்னை ரட்சிக்குமாறு கூவி யழைப்பேன்—(எ-று.) ராகா பூர்ணசந்திர னாளி னதிதேவதையென்றும், சந்திரன் கடைசியாகத் தோன்றும் அமாவாஸ்யை முதலாவாகிய சதுர்த்தசிக்கதிதேவதை ஸினீவாலி யென்றும், சந்திரனது பிறை தெரியாத பிரதமை நாளுக் கதிதேவதை குங்கூ அல்லது குஹூவென்றுந் தெரிகிறது. குங்கூ, (Gungoo) குங்குவெனக் கடை குறுகிற்று.

### வருக்கம் 15.

## 224 (33) மண்டலம் 2 அநுவாகம் 4 சூக்தம் 1.

### 15 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: ருத்திரன்.

(வேறு.)

1. மருத்துவர் பிதாவே,யுன் றனருட்சுக மருவ வெம்மை;
கருத்துடனென்றைநோக்காதெமைத்தனிப்பிரிக்கவெண்ணல்;
உருத்தவெம் பகைவர் தம்மை யடக்குற லெமது வீரர்;
உருத்திர, பிரசை நன்கே போக்கியாம் வாழ்வை யெய்தல்.

(இ-ள்.) மருத்துக்களுக்குப் பிதாவே! ருத்திரனே! நீ எங்களுக்குத் தரும் உனது சுகம் எங்களை யடைந்து நிற்கட்டும். யாங்கள் சூரியனை நோக்காதபடி எங்களைச் சூரிய வொளியினின்றுந் தனியாகப் பிரித்துவிட நினைக்காதே. எமது வீரியத்திற் றோன்றிய வீர புத்திரர்கள் எங்கள்மேற் கோபித்து எழுஞ் சத்துருக்களை யடக்குவார்களாக. நாங்கள் புத்திர பௌத்திராதி பிரஜைகளுடனே வாழ்வுசிறந்து விளங்குக—(எ-று.) ருத்திரன் மருத்துக்களுக்குப் பிதாவான முறைமை மண்.1சூக்.114 செய்.6ற் காண்க. ஷட்குரு சிஷ்யர் தமது வேதார்த்த தீபிகையில் அக்கதையைக் கூறுவதோடு வேறொரு இதிஹாஸமு முரைப்பர். பிருச்நி பசுரூபமெடுத்த அப்பொழுது மஹேசனாகிய ருத்திரன் விருஷபரூபத்தைத் தரித்துக் கூட மருத்துக்கள் பிறந்தார்களென்பது.தைத்திரீய ஸம்ஹிதையிற் சிறப்பித்துக் கூறப்படும் ருத்திரனாகிய பரமசிவஸ்ருபத்துக்கு இச்சூக்தம் ஆதியாரம்பமென்பர் மேனாட்டாசிரியர். இவ்விருக்வேதகாலத்துச் சிவன் ஒப்பற்ற முழுமுதற் கடவுளாக வெண்ணப்படவில்லை யென்று வில்ஸன் என்பவரும் கூறுவார். ருத்திர சப்தத்தின் பொருளை மண். 1 சூக். 114 செய். 1 உரையிற் காண்க.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 7.

2. உருத்திர வுனு ளளிக்கப் பட்டவை, யுயர் சுகத்தைப்
பொருத்து நன்மருந்தை யுண்டுபொருந்துக பனிக னூறு;
வருத்துவோர் பகையை யெம்மிற் றுரத்துக; அழிக்கவேணம்,
வருத்துறு மனைக்கு, தேகம் பரவுநோ, யிவற்றை வேறே.

(இ-ள்.) உருத்திரனே! உன்னாற் றரப்பெற்றவையும் நல்ல சுகத்தை யளிப்பவையுமான பேஷஜங்களை யுண்டு நூறு பனிக்காலங்கள் யாங்கள் வாழ்ந்திருக்கட்டும். எங்களைத் துவேஷிப்போரது பகைமையை யெங்களி னின்றும் ஒட்டுக. எங்களது பாபங்களையும், துன்பங்களையும், எங்கள் துடலிற் பரவும் நோயையும் வேறுவேறாக வழிப்பாயாக—(எ-று.)

3. கீர்த்தியிற்பிறந்தோர்நாப்பட்சிரேட்டனுய்க்கிளராநின்றாய்;
ஆர்த்தியிற் குலிச மேந்துங் கரத்தினுப், வலிமையோர்க்கட்
சீர்த்த வுத்தமனு, மெங்க, ளுருத்திர, துன்பத் தீரத்
தார்த்துக சுகத்தையெம்மை யடை யகமெலாந் தொலைக்கல்,

(இ-ள்.) வச்சிர பாஹுவே! உருத்திரனே! கீர்த்தியோடு பிறந்தவர்களில் நீ சிரேஷ்டனாகிறாய். வலியவர்களுக்கிடையே நீ உத்தமப் பலவானாகிறாய். எங்களது துன்பங்களினிறுதியிற் சுகத்தை யமைப்பாயாக. எங்களை மேற்கொளவெண்ணும் பாப துக்கங்களையெல்லாம் தூர வோட்டுவாயாக—(எ-று.)

4. நமத்தினு லுன்னைக்கோப மூட்டிடல் யாமும் பொல்லாச்
சமத்திலாத் துதியாற் கூடப் பிறவரை யழைத்தலாலும்;
நிமிர்ப்புறு மிடபவெங்க, ளுருத்திர, வீரர் தம்மைத்
திமிர்த்துக மருந்தாற்; கேட்டேன் மருத்துவோத்தமனீ
யென்றே.

(இ-ள்.) விருஷபமே! உருத்திரனே! அறைகுறையான வணக்கங்களினால் யாங்கள் உனக்கு கோபமூட்டாதிருக்கட்டும். அங்ஙனமே கெட்ட ஸ்தோத்திரங்களினாலும், தகாதவரைக்கூட வரவழைப்பதனாலும் உனக்குக் கோபத்தை யுண்டுபண்ணாமலிருக்கட்டும். எங்களது வீரர்களாகிய புத்திரர்களைப் பேஷஜங்களாற் றிமிருள்ளுவர்களாகச் செய்க. வைத்தியர்களுக்குள் உத்தம வைத்தியன் நீ யென்று யான் கேள்விப்பட்டிருக்கிறேன்—(எ-று.)

5. அவிபொடும் போற்றினேடு மழைபெறு முருத்திரன்னைக்
குவிபெறு தோமந் தம்மாற் றனிப்படுத்துவல்யான்; மென்மை
நிவமுறும் வயிற்றே, னன்றாய்க் கேட்பவன், பழுப்புவன்னத்
திவனுறு நற்கன்னத் தோன் கேட்டினு லெமைச் செலுத்தல்.

(இ-ள்.) சருபுரோடாசாதி அவிப்பொருள்களோடும் ஸ்தோத்திரங்களோடும் அழைக்கப்படுபவனாகிய வுருத்திரனை ஸ்தோமங்களாற் றனியாக வென்னிடத்து வருமாறு செய்வேன், மெல்லிய உதரம் வாய்ந்தவனும், வி

## மண்டலம் 2 சூக்தம் 33.

ஸர்வாகக் காதுகொடுப்பவனும், பழுப்புநிறம் வாய்ந்தவனும், நல்ல கன்னத்தோடு கூடியவனுமான அவ்வுருத்திரன் எம்மைத் தீமைக்குள்ளாக்காமலிருக்கட்டும்—(எ-று.)

6. மருத்துவப் புதல்வர்ப் பெற்ற விடபமுந், துதித்திரக்கு
மருத்திப னெனக்கிங் கூக்க மளித்திடு மன்ன மீகல்;
வருத்தமோ டேகுவா னோர் நிழலை மருவ லொப்ப
வுருத்திரன் சுகத்தைப் பாப மறுவனக்கத்தே னெய்தல்.

(இ-ள்.) மருத்துக்களாகிய புதல்வரை யடைந்த காளையாகிய வுருத்திரன், ஸ்தோத்திரங்களைக் கூறி யாசிக்குமெனக்கு ஊக்கத்தைத்தரும் உணவை யளிக்கட்டும். வெயிலிற் கஷ்டப்பட்டுச் செல்பவன்ஒரு மரநிழலை யடைவதுபோலப் பாபமற்ற பரிசானாகிய யான் உருத்திர சுகத்தை யடையட்டும்—(எ-று.)

7. உருத்திர, தேவர் மூட்டும் பாபங்க ணீக்குவோ யுன்
மருத்துறு கர மெவர்க்குஞ் சுகத்தினை மருவுவித்துப்
பொருத்துறு மருள தெங்கே? பிழைபுரி யெம்மைப்பூண்ட
வருத்தமெல்லா மிறையிற் பொறுத்தருள் வழங்குவாயே.

(இ-ள்.) உருத்திரனே! தேவர்கள் அனுப்புவிக்கும் பாபங்களை யெல்லாம் அற வொழிப்பவனே! மருந்துள்ளதும், எல்லார்க்கும் சுகத்தைத்தருவதும் அருளோடு கூடியதுமான உனது கை எங்குள்ளது? அபராத கிருத்துக்களாயுள்ள வெமது வருத்தங்களை யெல்லாம் நீக்கி யருள்புரிவாயாக—(எ-று.)

8. பழுப்புறு காளை வெண்மை பரவிய பெரியன் றன்னை
வழுத்துவேன் பெருமைமிக்க நற்றுதி தம்மாற் சோதி
யழுத்திய வவனைப்போற்றல் வணங்குக; வுருத்திரன்றன்
வழுத்துறு நாமஞ் சோதி வாய்ந்ததைப் பாடுவோமே.

(இ-ள்.) பழுப்புநிறத்துக் காளையும்,வெண்மைநிறம் வாய்ந்த பெரியவனுமான உருத்திரனைப் பெருமை மிகுந்த நல்ல துதிகளாற் கூறுவேன். சோதிவாய்ந்த வவனை நமஸ்கார பூர்வமான வலிகளோடு வணங்குவோமாக. உருத்திரனது காந்திவாய்ந்த நாமத்தை யாங்கள் ஸங்கீர்த்தனம் செய்வோம்-(எ-று.) வெண்மைநிறம் வாய்ந்தவன் என்ற இந்த விசேஷணந்தான், சிவனைப்பற்றி ரிக்வேதத்திற்கூடச் சொல்லப்பட்டிருக்கின்ற தென்பாருக்கு ஆதாரமாக நிற்கிறது என்பார் வில்ஸன் என்பவர்.

9. உக்கிரன் றிடவங்கத்தன் பழுப்பினன் பலரூபத்துச்
சுக்கிர நிறத்துப் பொன்னுபரணத்தால் விளங்கலுற்றான்;
இக்கடலவனி யோம்பு மீசனு முருத்திரன்னைத்
திக்கரித் திட்டு நீங்கா தவனது கடவுள் வன்மை.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 7.

(இ-ள்.) உக்கிரனும், திடம்பொருந்திய வங்கங்களோடு கூடியவனும், பழுப்புநிறம் வாய்ந்தவனும், பலவித ரூபங்களோடு கூடியவனுமான உருத்திரன் வெண்ஜோதியோடு கூடிய பொன்னாபரணங்களா லலங்கரிக்கப்பட்ட அவயவங்களோடுவிளங்குகின்றான். இப்புவனத்தைத்தாங்கு மீசனாகியவவ்வுருத்திரனிடத்தினின்றும் கடவுட்டன்மைவாய்ந்த பலம்ஒருநாளும் நீங்காது —(எ-று.)

10. தகுந்தவ, வில்லு மம்புந்தாங்குவாய்; போற்றுரித்தாம்,
தகுந்தவ, பல்லுருவின் மாலையைத் தரிப்பாய்; அன்றித்
தகுந்தவ,பெருமையோடு பரவு மிச்சகத்தைக் காப்பாய்;
மிகுந்த நற்பலத்தோ னுன்னின் வேறில னுருத்திரன்னே.

(இ-ள்.) தக்க யோக்கிதையுள்ளவனே! வில்லையும் அம்புகளையும் நீ தாங்குகிறாய். தக்க யோக்கிதையுள்ளவனே! பூஜிக்கத்தகுந்த பல ரூபங்களோடுங் கூடிய மாலையைத் தரிக்கிறாய். தக்கயோக்கிதை யுள்ளவனே! பெருமைவாய்ந்து விஸ்தாரமாக விரிந்துள்ள இச்சகத்தை ரட்சிக்கிறாய். உருத்திரனே! உன்னிலும் மிகுந்த பலவானொருவனுமில்லை—(எ-று.)

வருக்கம் 17.

11. கீர்த்திமான்,தேரி னூர்வோன்,கிளரும்யௌவனத்தன் மாவி
னார்த்திடு பீம,னுக்கிரத்தவன், கொல்லு வோனைச்
சீர்த்துறத் துதிப்பீர்; போற்றுற் றுரைப்பவன்றனைச் சுகத்தி
னார்த்தல்; ருத்திரவுன் சேனை யெம்மலாப் பிறரைக் கொல்க.

(இ-ள்.) ஸ்தோதாக்களே! கீர்த்தி வாய்ந்தவனும், தேரூர்பவனும், நித்திய தருணனும், சிங்கவேற்றைப்போலக் கர்ச்சிக்கும் பயங்கரமானவனும் உக்கிரனும் பகைவரைக் கொல்லுவோனுமாகிய உருத்திரனைத் துதிப்பீர்களாக. உருத்திரனே! எங்களாற்றுதிக்கப்பட்டவனாய்ஸ்தோதாக்களாகிய வெங்களைச் சுகத்தி லமர்த்துவாயாக. உனது சேனை யெங்களை யல்லாத பிறமனிதர்களைக் கொல்லட்டும்—(எ-று.) இச்செய்யுள் வழிப்பயத்தை நீக்குவது. பிரயாணத்துக்கு முன் ஜபிக்கத்தக்கது.

12. வாழ்த்திக் கொண்டருகினை குந்தந்தையைமகனேபென்னத்
தாழ்த்திய சிரத்தினுன்னை யுருத்திர வணங்கு வேன்யான்;
காழ்த்த பேர்செல்வ மீயுஞ் சற்பதியுனைத் துதித்தேன்;
வாழ்த்துறு வோய்நீ பேடசங்களை யெமக் களிக்கல்.

(இ-ள்.) ‘தீர்க்காயுஷ்மான்பவ, ஸௌம்ய.’ என வாழ்த்திக்கொண்டே வருந் தந்தையைப் புத்திரன் தலைவணக்கத்தோடு மடைவதுபோல, எம்மை யாசீர்வதித்துக்கொண்டே வரும் உன்னை, உருத்திரனே, யான் நமஸ்கார பூர்வமாய் வணங்குவேன். மிகப் பெரிய செல்வத்தைத் தருபவனே! ஸத்துக்களுக்குப் பதியே! உன்னையான் துதிக்கிறேன். எங்களாற் போற்றப்படும் நீ எங்களுக்குப் பேஷஜங்களைத் தருவாயாக—(எ-று.)

## மண்டலம் 2 சூக்தம் 34.

13. வள்ளல் காள்,மருத்துவர்காள், தூய்மையின் வாய்ந்த,வெங்க
ளெள்ளருஞ் சுகத்தை யீவ, வுடலினுக்கான, தந்தை
யுள்ளுறு மனு வுடன்கொண் டோங்கிய, பயமெந் நோயைத்
தள்ளுவ, வுருத்திரற்குச் சார்ந்தன வவை விழைவல்.

(இ-ள்.) இச்சைகளை யளிப்பவர்களே! மருத்துக்களே! பரிசுத்த மானவையும், எங்களுக்கு உத்தம ஸுகத்தைத் தருபவையும் எங்களுடைய சரீரங்களுக்கொத்தவையும், தந்தையாகக் கருதப்படும் மனு தன்னோடு எடுத்துக்கொண்டுபோனவையும், எங்களது பயத்தையும் நோயையும் ஒழிப்பவையும்,உருத்திரனுக்குச் சொந்தமானவையுமான பேஷஜங்களை யான் விரும்புகிறேன்—(எ-று.) பிரளயகாலத்தில் மனு தன்னைக் காப்பாற்றிக்கொள்ளப் படகிற் சென்றபோது தனக்குவேண்டிய ஸஸ்யவித்துக்களை யெடுத்துக்கொண்டுபோகுமாறு ஆக்ஞாபிக்கப்பட அவ்வாறு அவன்எடுத்துச்சென்றானென்ற மஹாபாரதக்கதையை இது சுட்டாநிற்குமென்பார் வில்ஸனென்பவர்.

14. உருத்திரன் படைக ளெம்மி னீங்குறல்; சோதியுள்ளோ
னுருத்திடும் பெரிய கோப மெம்மை யொன்றுது செல்க;
பெருத்த வள்ளன்மை பூண்டோய், மகத்தவர் மீது வில்லை
வருத்துறச் செலுத்தல்; எங்கள் மகவழிச் சுகப்படுத்தல்.

(இ-ள்.) ருத்திரனது ஆயுதங்கள் எம்மேற்படாதொழியட்டும்.சோதியுள்ள வனது கோபம் எம்மை யெய்தா திருக்கட்டும். வள்ளலே! யாகத்துக்குதவும் யஜமானர்கள்மீது உனது வில்லைச்செலுத்தாதொழிக.எங்களது புத்திர பௌத்திரர்களுக்குச் சுகத்தைத்தருக—(எ-று.)

15. நன்குற வெவையு மோர்ந்து, தேவனே, யிடப, மங்க
லொன்றியநிறத்தோ.யெம்மைச்சினக்கல்,கொல்லுறல்;உருத்ர,
துன்றியாமழைக்கும்போற்றைத்தோய்ந்திவட்செவியினேற்கல்
மன்றினில் வீரரோடும் பொருந்துதி யாம் வழங்கல்.

(இ-ள்.) தேவனே! காளையே! பழுப்புநிற முள்ளவனே! எல்லாவற்றையும் நன்கறிந்து எங்களைக் கோபிக்காதிருப்பாயாக; சொல்லாமலுமிருப்பாயாக. எங்களது ஹவங்களுக்குச் செவிகொடுத்து அவற்றை யுணருவாயாக. யக்ஞக்கூட்டத்தில் வீரர்களாகிய புத்திரர்களோடு யாங்களுனக்குப் பெரிய ஸ்தோத்திரங்களைக் கூறுவோமாக—(எ-று.)

வருக்கம் 18.

## 225 (34) மண்டலம் 2 அநுவாகம் 4 சூக்தம் 2.

15 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: 1-14 ஜகதி, 15 திருஷ்டுப்; தேவதை: மருத்துக்கள்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 7.

(வேறு.)

1. தடுக்கரிய வலியுடையோர், தாரைகளைத்
தாங்குபவர், சார்ந்த மொய்ம்பி
னடுக்கரிய மிருகமெனப் பயங்கரத்தர்,
மாருதர்க,ளருச்சித் தியாரும்
விடுக்கரிய, ரக்கினியி னொளிவாய்ந்தோர்,
சாரமில்சொல் விளம்பி கொள்வோ,
ரடக்கரிய மழைமுகிலை யியக்குபவர்,
பசுக்களினை யவிழ்த்திட்டாரே.

(இ-ள்.) பிறராற் றடுக்கமுடியாத வலிமையை யுடையவரும், மழைத்தாரைகளைத் தாங்குபவரும், பலமிகுந்தவர்களாய் நெருங்கமுடியாத காட்டுமிருகமாகிய சிங்கத்தைப்போலப் பயங்கரமானவர்களும், எல்லாராலும் அருச்சிக்கப்படுபவர்களும்,அக்கினியைப்போலப் பிரகாசம் மிகுந்தவர்களும், இரண்டு ஸவனங்களிலும் ஆவுதிசெய்து மிகுந்துள்ளஸாரமற்ற ஸோமத்தைக் கைக்கொள்பவரும், மழை நிறைந்தகரிய மேகங்களை அங்குமிங்குமாக ஓடச்செய்பவர்களுமான மருத்துக்கள் பசுக்களாகிய மழைத் தண்ணீரை யவிழ்த்துவிட்டு ஓடுமாறு செய்தார்கள்—(எ-று.) மூன்றாம் ஸவனத்தில் மருதர்கள் போற்றப்படுகிறார்களென்றும், அப்பொழுது முதலிரண்டு ஸவனங்களிலும் ஆவுதிசெய்யப்பட்டு மிகுந்து ஸாரம்போன ஸோமத்தையே ஆவுதிசெய்வதென்றும் ஸாயணர் கூறுவர்.

2. நாட்களினே டொளிரும் விண் ணெனக்கடகத்
தொடு மொளிர்வர்; நாடு மேகத்
தாட்படு மின்னெனப் பெய்யு மாரியின
ருலகொளியி னார்த்து வாரால்;
கோட்படுபொன் னணியுரத்திர், மாருதர்கா,
ளுருத்திரனுக் குலவுங் காலை
கீட்படுமெப் பிருச்சினியின் வெண்மடியி
லுமைத்தோற்றிக் கிளர்ந்ததாலே.

(இ-ள்.) நட்சத்திரங்களால் விளங்கும் விண்ணைப்போல மருத்துக்கள் பொற்கடகங்களோடு ஜ்வலிப்பர். மேகத்திற்றோன்றும்மின்னலைப்போல விருஷ்டியோடு கூடியவர்கள் உலகத்தைப்பிரகாசிப்பிப்பர். ஸ்வர்ணபரணங்களோடு கூடிய மார்பையுடைய மருத்துக்களே! உருத்திரனுகிய காளை பிருச்நியாகிய வரிப்பசுவின் மடியில் உம்மைத் தோற்றிய காரணத்தினுல்—(எ-று.) இச்செய்யுளில் முன்னிரண்டடி படர்க்கையிலும் பின்னிரண்டடி முன்னிலையிலுமாக வைத்துள்ளார். மாருதர்களே! ருத்திரன் உங்களைத் தோற்றினதால் நீங்களே மஹாநுபாவர்கள் எனத் தனிவினைகொண்டும் முடிக்கலாம். இன்றேல் மாருதர்காள்,ருத்திரன் உங்களைத் தோற்றியதால் நீங்கள் ஒளிர்வீர்கள் ஆர்த்துவீர்கள் என அம்முதலிரண்டடியிலுமுள்ள படர்க்

## மண்டலம் 2 சூக்தம் 34.

கைவினைமுற்றுக்களை முன்னிலையாகவும் மாற்றிக்கொள்ளலா மென்பர் ஸாயணர். ஈண்டு பிருச்னி (பன்னிறமுள்ள பூமி) பசுவாக நிற்க உருத்திரன் காளையாகி யதனிடத்தில் மருத்துக்களைப் பெற்றானென்ற கதை குறிக்கப்படுகிறது. மண். 2 சூக். 33 செய். 1 பார்க்க.

3. விரைகதிப் போர்க் குதிரைகளின் பந்தயத்திற்
றுரகமென விருஷ்டி தன்னைத்
தரைதனிலே யொழுக்குவரால்; முழங்குமுகி
லருகசுவந் தம்மிலேறி
விரைகுவர்; பொற்றலைக் கவச மருத்துவர்கா,
ளெவற்றையுங் கம்பிக்கச் செய்வீ,
ரொருமனத்தி னெம்முணவின் கடைவருக
பொறிப்பரியி னேங்கி யின்றே.

(இ-ள்.) வேகமாகச்செல்லும் போர்க்குதிரைகளின் பந்தயத்திற் குதிரைகள் வியர்வை நீரைக்கொட்டுவதுபோல மருத்துக்கள் மழைநீரை யொழுக்குவார்கள். அம்மருத்துக்கள் சப்திக்கின்ற மழைமேகங்களுக் கருகே தங்கள் பரிகளில் விரைவாகச் செல்லுவார்கள்- பொன்னாலான தலைக் கவசங்களோடு கூடிய மருத்துக்களே! எல்லாவற்றையும் கம்பிக்கச் செய்பவர்களே! ஒருமனத்தோடு புள்ளிமான்களாகிய வாகனங்களிலோங்கி எமது உணவுப்பொருள்களை உண்ண வருவீர்களாக.

4. அவியளிப்போற் கப்புவன நீரையெலா,
மித்திரனுக் களித்த லொப்பத்,
திவதிவமுஞ் சுமந்தளிப்பர் விரைவாருந்
தானத்தோர், செறிந்தபுள்ளி
நிவர்தவுழைப் பரியாள ரழியாத
தனமிகுத்தோர், நேரா யோடு
மிவுளிரதம் பூண்டதென மேகவா
கனமதன்மே லேறி நிற்போர்.

(இ-ள்.) வேகமாகத் தருந் தானத்தோடு கூடியவர்களும், புள்ளி நிறைந்த மான்களாகிய குதிரைகளை யுடையவர்களும், அழியாத செல்வத்தைப் படைத்தவர்களும், நேராக வோடும் குதிரைகள் தேர்நுகத்திற் பூண்டு நிற்பதுபோல மேகமாகிய வாகனத்தின்மே லேறி நிற்பவர்களுமான மருத்துக்கள், சிநேகிதனுக் குதவுவதுபோல அவியளிக்கும் யஜமானனுக்கு எல்லாப் புவனங்களிலுமுள்ள நீரையெல்லாம் எந்நாளும் சுமந்துகொண்டுவந் தளிப்பர்—(எ-று.) முதலிரண்டடியின் பொருள் விளங்கவில்லையென்று கூறி மேனாட்டாசிரியர் வேறுவகையாகமொழிபெயர்ப்பார். அதன் சிறப்பின்மைபற்றி ஈண்டு குறிக்கப்படவில்லையென்க.

5. முழுமடியார் முலைகளுள தேனுக்க
ளெரிமுண்டு மொய்த்த வற்றோ

டழிவடையா நெறிகளினின் மின்னுகின்ற
படைகளொடு, மன்னந் தங்கூட்
டழகினுறச் செல்வதென, மாருதர்கா,
ளொருமனத்தோ டடைந்துநிற்பீர்,
பழகுறுசோ மச்சுதையைக் குடித்துமனங்
களிக்கவிவண் வருகுவீரே.

(இ-ள்.) ஒரு மனத்தோடு வருபவர்களே! மருத்துக்களே! பால் நி றைந்த மடியோடுகூடிய மூலைக்கண்களுள்ளவையும், மூட்டப்பட்டொளிரும் சுவாலைகளோடு கூடியவையுமான பசுக்களோடு (மேகங்களோடென்க) அழிக்கமுடியாத நெறிகளில் மின்னுகின்ற உமது சுடர்ப் படைகளோடும், அன்னங்கள் தங்கள் கூட்டை நோக்கி மகிழ்வோடுஞ் செல்வதுபோல,எங்களது ஸோமத்தைக் குடித்து மகிழ் வெய்துமாறு ஈண்டு வருவீர்களாக—(எ-று.) எரிமூண்டு மொய்த்தவை யென்ற வடையால் பசுக்கள் ஈண்டு மேகங்களைக் குறித்தன. அன்னம், ஹம்ஸபக்ஷி.

வருக்கம் 19.

6. ஒருமனத்தீர், மாருதர்கா ளெம்மறைக
டமைக்கேட்க வருக; மாந்த
ரருமையுறுபுகழ்ச்சி யென வெஞ்சவனத்
தினிலடைக; அசுவ மென்னப்
பெருமடியிற் பசுவென்ன முகினிறைக்க;
தோத்திரத்தைப் பிறக்குவோனுக்
குருநிறைந்து வலுச்சிறந்த துதிக்கன்மந்
தனைநன்கே யுளுற்ற வின்றே.

(இ-ள்.) ஸமான மனத்தோடு கூடிய மருத்துக்களே! எங்களது பிரஹ்மங்களைக் கேட்க வருவீர்களாக. (எங்களது அன்னத்தை யேற்றுக்கொள்ளவருவீர்களாக வென்று கூறுவர் ஸாயணர்) மனிதர்களது புகழ் ஸ்தோத்திரங்கள் அவரைப் பின்பற்றிவருவதுபோல எங்களுடைய ஸோமாபிஷவ ஸவனங்களை யடைவீர்களாக. குதிரைகள் தண்ணீரைக் குடித்து உடல் வீங்குதுபோல மேகங்கள் வருடிப்பதற்காக நீரைக்குடித்துப் பசுக்களின்மடிகளைப்போல நிறைந்து நிற்கட்டும். ஸ்தோத்திரங்களைக் கூறுமவனுக்காக வருவும் வலிமையும் சிறந்த ஸ்தோத்திர கர்மங்களை நன்குகஉருப்படுத்துவீர்களாக—(எ-று.)

7. மருத்துவர்கா, ளெங்களுக்குத் தேர்பூண்டு
வலிசிறந்த மாவை யீகல்;
அருத்தியொடு முங்குணத்தை நாடோறு
மறிவிக்கு மறை யணைக்கல்;
பெருத்தபுகழ் கூறுபவர்க் கனமளிக்கல்;

## மண்டலம் 2 சூக்தம் 34.

போரதனிற் பிறங்கும் போற்றை
யுரைப்பவனுக் கிகைபொடு மேதையுங்கே
டில்வலியு முரத்திற் சேர்க்கல்.

(இ-ள்.) மருத்துவர்களே! தேரிற் பூண்டு வலிமை சிறந்த குதிரையை எங்களுக்குத் தருவீர்களாக. தினந்தோறும் உமது குணத்தைத் தெரிவிக்கும் மந்திரங்களைக் கூட்டுவீர்களாக. உம்மை ஸ்தோத்திரஞ் செய்பவர்களுக்கு அன்னப் பொருள்களை யளிப்பீர்களாக. யுத்தத்தில் உம்மைப் புகழும் கவிக்கு ஈகைக்குணமும், மேதைத் தன்மையும், அழிவடையாது பகைவராற் றண்டமுடியாத வலிமையையும் தருவீர்களாக—(எ-று.) இச் செய்யுளின் முதலடி மேனுட்டாசிரியரது உரையைப் பின்பற்றியது.ஸாயணர் தம் என்னும் பதத்திற்குப் புத்திரனை யென்று உரை கூறுவார். அதன் பொருத்தம் விளங்கவில்லை.

8. ஒளிகிளர்பூ ணணிமார்பர் நற்கொடைபோர்
மாருதர்தே ருறு நுகத்திற்
றளைதர மாக்களைப் பூட்டுங் காலமதிற்
றேனு,கனைச் சாருங்கன்றுக்
களிதருபா லளிப்பதென வவிபளிக்கும்
யஜமான னழகின் வாழ
வளவுபடாப் பெருமுணவை யவரகத்தே
யூற்றெடுக்க வமைக்கின் றாரே.

(இ-ள்.) காந்தி பொருந்திய ஆபரண நிறைந்த மார்பை யுடையவர்களும், நல்ல தானத்தோடு கூடியவர்களுமான மருத்துக்கள் தங்களது தேர் நுகத்தில் அசுவங்களைப் பூட்டும் போது, தன்னை யடையுங் கன்றுக்குச் சேதாவானது பாலை விருப்பினளிப்பது போல, அவிப்பொருள்களைத் தரும் யஜமானனுக்கு அளவற்ற பெரிய உணவுப் பொருள்களை (உணவுப் பொருள்களுக் காதாரமான நீரை யென்பார் ஸாயணர்) அவர்களது கிரகங்களில் ஊற்றெடுத் தோடுமாறு பொழிகிறார்கள்—(எ-று.)

9. மாருதராம் வசுபடைத்தீர் விருகமென
வெம்மெதிரே மருவி யெந்தச்
சிரறுமர்த்தியன் பகைமை பாராட்டு
வானவனிற் பரிந்து காக்க;
தேருருள்க டிச்சுடர்கள் கதுவியவை
யோடவனைச் சிறந்து சூழ்க;
நேரு மவையுறும் பகைவன் படைகளினை
யுருத்திரர்கா ணேடித் தேய்க்க.

(இ-ள்.) மருத்துக்களே! செல்வவான்களே! எங்களுக்கெதிரில் தாக்ஷையைப்போலத்தோன்றும் அம்மர்த்தியனுகிய பகைவன் எம்மையிம்சிக்க ஒ

படி காப்பாற்றுவீர்களாக. எரிசுற்றிக் கொண்டுள்ள உருளைகளுள்ள தேரோடு அப்பகைவனைச் சூழ்ந்து கொள்ளுவீர்களாக. எதிர்ப்பட்டவைகளைப் பட்சிக்கு மப்பகைவனது ஆயுதங்களைக் கீழ் வீழ்த்தி யழிப்பீர்களாக—(எ-று.)

10. மாருதர்கா, ளுமபோக்கின் சித்ரமபல்
லாரறிவார், மருவு மன்னார்
கூரவரு சேய்க்கின்ற பிருச்நியின்
மடிகறந்து கூருப் போதா;
நேருமுமைத் துதிப்பவனை நிந்திப்போன்
றனையழித்து நேரார் தம்மைப்
பேரற வீட்டிடத் திரிதற் குருத்திரராய்த்
தடைபடா றுற்ற போதே.

(இ-ள்) மாருதர்களே! அம்மருத்துக்களாகிய வவர்கள் (பொருள் பொருந்துமாறு நீங்களெனக் கொள்ளுக.) சமீபத்திற் சேர்க்கின்ற பிருச்நியின் (ஈண்டு இச்சொல் அந்தரிட்சத்தைக் குறித்த தென்பார் மேனாட்டாசிரியர்.) மடியாகிய மேகத்தைக் கறந்த போதாவது, அல்லது உமது ஸ்தோதாவை நிந்திக்கும் பகைவனை யழித்துச் சத்துருக்களை நாசஞ் செய்வதற்காக திரிதன் என்னும் ரிஷிக்கெதிரே ருத்திர புத்திரர்களாக ஒருவராலும் இம் சிக்கமுடியாதவர்களாய் வந்த காலத்திலாவது உமது ஆச்சரியகரமான யாமனம் எல்லாராலு மறியக்கிடந்ததாம்—(எ-று.) உம் என்றும், அன்னார் என்றும்,மீண்டும் உம்என்றும் இச்செய்யுளில் முன்னிலைப் படர்க்கைகள் அடிக்கடி மாறி வந்திருக்கின்றன. மேனாட்டாசிரியர் பின்னிரண்டடிக்கு வேறு வகைப் பொருள் கூறுவர். அது வருமாறு: ‘அல்லது ஸ்தோத்திரஞ் செய்த கவியை யவமானப்படுத்த, ருத்திர புத்திரர்களே, தவறற்ற நீர் திரிதனை நாசம் செய்த போதாவது.’ என்பர்; லுட்விக்கென்பவர் த்ரிதன் ஸோமனது பெயரெனக் கூறுவதாகவும் செல்லுவர். செய்யுளில் ஸாயணருரையைப் பின்பற்றியுள்ளார்: எல்லாருமறிவர் என உம்மைவிரிக்க. யாமனம், கதி நடை, வரவு என்க.

வருக்கம். 20

11. பயிலுற்ற நெறிபொழுகு மத்தகைய
மருத்துவர்காள், பண்பி னோங்கிக்
குயிலுற்ற மகத்துவர்காள் விட்டுணுவாம்
போற்றுளற்குக் கொடுத்த வுண்டிக்
கியலுற்று வரவழைப்போம்; பொன்னிறத்துச்
சிரேட்டர்களா மிவர்மாட் டுச்சீர்ச்
செயலுற்ற செல்வமதைச் சுருக்கேந்தி
மறையோதித் தேர்குவோமே.

(இ-ள்.) வழக்கமான நெறிகளிலேயே செல்லும் அத்தன்மை வாய்ந்தமருத்துவர்களே! மகத்துவம் வாய்ந்தவர்களே! வியாபக ஸ்வரூபியும்

## மண்டலம் 2 சூக்தம் 34.

பிரார்த்திக்கத் தக்கவனுமான ஸோமனுக்குக் கொடுத்த வவியுணவைத் தேடி வருமாறு உம்மை யழைப்போம். நெய்த்துடுப்பைக் கையிலேந்தியவர்களா யும் பிரஹ்மங்களை யோதிக் கொண்டவர்களாயுமுள்ள பொன்னிறம் வாய்ந் தவர்களும் சிரேஷ்டர்களுமான அம்மருத்துக்களை யாங்கள் கீர்த்திவாய்ந்த செல்வத்தைத்தரும் வண்ணம் யாசிப்போம்.—(எ-று.) விஷ்ணு, வியாபகஸ் வரூபி என்னும் பொருட்டு. போற்றுளன், போற்றத்தக்கவனுகிய ஸோமன் என்க.

12. தசக்குவரா யவர்கள் முதன் முதன்மகத்தைச்
கொணர்ந்தார்கள்; தழைக்க வன்னூர்
நிசிக்கலையும் விடியலினி லெமக்கூக்க
மளித்திடுக; நிசியை வன்னத்
துசிதமுறு செங்கரத்தால் வைகறிறந்
திடுதலென வோங்குந் தேசின்
சசியுருபே ரொளிவெள்ளக் கடல்கொடுல
கதனிலொளி தோய்க்கின்றூரே.

(இ-ள்.) அம்மருத்துக்கள், தசக்குவர்களாகிய ஆங்கிரஸர்களாய் முதன் முதல் யாகத்தைக் கொண்டுவந்தார்கள். அவர்கள் உதய காலத்தில் எங்களுக்கு ஊக்கத்தைத் தரட்டும். உஷஸ் தனது சிவந்த கரங்களால் இருள் நிறைந்த இரவை வெளிச்சப் படுத்துவதுபோல,மகத்தாகிய சோதியாலும், ஒளி காலுகின்ற சூரியகிரணங்களாகியசமுத்திரத்தினுலும் ஜகத்தைப் பிரகாசிப் பிக்கிறார்கள்—(எ-று.) தசக்குவர், ஆங்கிரஸரென்பதை மண். 1 சூக். 62 செய். 4ற் பார்க்க. இச்செய்யுளின் பின்னடிக்கு மேனுட்டாசிரியர் கூறும் உரைபொருந்தாது. ந என்னும் உபமாவாசகத்தை விடுத்து மருத்துவர்ப் புகழ்ச்சியாகிய இச்சூக்த நிலையையும் கருதாத வுரையாகுமது.

13. உருத்திரா மவர்வீணு நாதங்க
ளொடுசிவந்த வணிகளோடு
பெருத்தகத்தே மகிழ்ந்தனரால் மகக்கூட்டந்
தனிலன்னூர் பெருகும் வேகத்
திருத்தவலி யோடென்று மழைபொழிவோர்
மனக்கினிய வொளி யினேடும்
திருத்தமுள வுருவோடுங் கூடியுள
நன்னிறத்தைச் சேர்ந்திட்டாரே.

(இ-ள்.) ருத்திர புத்திரர்களாகிய வம்மருத்துக்கள் வீணு விசேஷங்களோடும் செந்நிறமான காந்தியை வீசும் அலங்காரங்களோடும் யக்ஞஸதனத்தில் பெருமகிழ்ச்சியை யடைந்தனர். அம்மருத்துக்கள் மிகுந்த வேகத்தோடு கூடிய வன்மைபொருந்தியவர்களாய் எக்காலத்தும் மேகத்தினின்றும் மழை பெய்விப்பவர்களாய் மனதுக் கினிமையைத்தரும் காந்தி வாய்ந்த நல்ல ரூபத்தோடு கூடிய நிறத்தை யடைந்துள்ளார்கள்—(எ-று.)

## அஷ்டகம் 2 அத்தியாயம் 7.

14. மகத்தான வவர்தனத்தை யுதவிக்கென்
றியாசித்து மருவும் யாங்க
ளுகப்பான விப்போற்று லவர்தம்மைப்
புகழ்கின்றே, மோங்கு மைந்து
மகத்தாள ரெனத்திரித னெமதுகருத்
தீடேற மதித்துத் தேரி
னிகத்தூதி புரியவென முக்கியராய்க்
கொண்டுவந்தா னிவரைத் தானே.

(இ-ள்.) அம்மருத்துக்களது பெரிய செல்வத்தை எங்களது உதவிக்காக யாசிக்கும் யாங்கள் மனதுக்குகந்த விந்த ஸ்தோத்திரத்தால் அவர்களைப புகழ்கின்றேம். அவர்களையே திரிதன், தன்தேரில் இவ்வுலகத்து உதவி புரிவதற்காக முக்கியமான ஐந்து ஹோதாக்களைப்போல எங்கள் அபீஷ்டங்கள் நிறைவேறும் வண்ணம் கொண்டுவந்தான்—(எ-று) இச்செய்யுள் மேனுட்டாசிரியர் உரையைத் தழுவியது. ஸாயணருரை அத்துணை தெளிவாயில்லை. யாரைக்கொண்டுவந்தானே வவரையே புகழ்கின்றேம் எனக் கூட்டுக. ஊதி, உதவி.

(வேறு.)

15. மகத்தவன் பாவந்தன்னை மருவுறு கோட்டிப் போற்றிப்
புகழ்பவர் தமை நிந்திக்கு மவரினின் றெடுக்குமுந்த
மகிழ்வுறு முதவியோடு நன்மதி, மாருதீர்காள்,
இகத்துற லெம்மை நோக்கி, யிரங்குறுங் கற்றுவொத்தே.

(இ-ள்.) மருத்துக்களே! யக்ஞகர்த்தாவின் பாபத்தை,நெருங்காதபடி தூர வோட்டி,ஸ்தோதாக்களை நிந்திப்பவர்களதுகையி லகப்படாதபடி காப்பாற்றும் உங்களது உதவிகளோடும்,அநுக்கிரஹ புத்தியோடும்,கன்றையுடைய பசு கதறிக்கொண்டு தனது கன்றினிடத்துச் செல்வதுபோல நீங்கள் எங்களை நோக்கி வருவீர்களாக—(எ-று.)

வருக்கம் 21.

## 226. (35) மண்டலம் 2 அநுவாகம் 4 சூக்தம் 3.

15 இருக்குக்கள் கொண்டது.

*ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: அபாம்நபாத்து.*

அபாம் நபாத் தென்பது அக்கினியின் ஒருபெயர். மேக நீரில் மின்னலாகிய அக்கினியாகத் தோன்றுவதால் அப்பெயர்அக்கினிக்கு வந்த தென்க. அன்றியும் நபாத் என்பதற்கு பௌத்திர னெனப்பொருள் கொண்டு நீரினால் ஓஷதி வனஸ்பதிகள் தோன்ற அவ்வோஷதி வனஸ்பதிகளிலிருந்து அக்கினி உற்பத்தியாவதால் நீருக்குப் பேரனுன அக்கினி யென்பதும் ஒன்று.

## மண்டலம் 2 சூக்தம் 35.

1. உணவினை விரும்பும் யானிவ்வாக்கினு லுவந்து போற்றை
யனைவுறப் படைப்பன்; நாதப்புனலினி லணைந்ததோன்றல்
வனைமுறவிரைவோன் போற்றினெனக்கவம்வழங்கலன் றன்
குணமுறு மணியோ ராகக் குயிற்றி யெம்மிடங் களிப்பான்.

(இ-ள்.) உணவுப் பொருள்களை விரும்புகின்றயான் இத்தன்மை வாய்ந்த வாக்கினுல் ஸ்தோத்திரங்களைச் சிருஷ்டிப்பேன். சப்திக்கின்ற வெள்ளத்திற் பிறந்தவனும், விரைவாகச் செல்பவனுமாகிய அபாம் நபாத் தென்ற அக்கினி ஸ்தோதாவாகிய எனக்கு மிகுந்த உணவைத் தரட்டும். அவனே எங்களை நல்ல அலங்காரங்களோடு கூடியவர்களாகச் செய்து எங்களிடத்துக் களிக்கின்றான்—(எ-று.) அபாம் நபாத், அபாங்நபாத்து, தண்ணீரிற் பிறந்தவன், அக்கினி. குவித் என்னும் மூலபதத்துக்கு பஹுலம் எனப்பொருள் கூறுவர் ஸாயணர். அதனைக்கேள்வியாகக் கொள்வர் மேனாட்டாசிரியர்.

2. இதயத்துநன்கினுற்ற வியைந்த விம்மறையை யன்னாற்
கிதமுறப் புகல்வோ, மஃதையேற்றமோ டவனுணர்வான்;
நதமுறும் புன லபாத்து நாடுந்த னசுரப்பண்பாற்
சதமுறப் படைத்தான் சாமி சருவபூதக் கூட்டத்தை.

(இ-ள்.) இதயத்து நன்றாகச் செய்வதற் கமைந்த இம்மந்திரத்தை அவ்வபாம் நபாத்தாகிய அக்கினிக்குக் கூறுவோம். அவன் அதனை நன்றாக வறிவான். ஓடுகின்ற நீரிற் பிறந்த அவ்வக்கினியாகிய ஸ்வாமி தனது அஸுர பலத்தினுல் எல்லாப் புவனங்களையும் சிருஷ்டித்தான்—(எ-று.) அஸுர சப்தம் தேவப் பொருளில் வந்தது. சத்துருக்களை யடக்கும் பல மென்பதும் ஒன்று.

3. சில புவி யெய்துகின்ற; சில வுடன் கூடுகின்ற;
சல நிதி நாப்ப ணெல்லா நதிகளு மோடித் தூய்மை
நலமுள வபாங்நபாத்து மகிழ்வுற நடக்கும்; சோதி
வலி மிகு தூய நீர்க ளவனைச்சூழ்ந் தணைந்து நின்ற.

(இ-ள்.) சில மழை யோட்டங்கள் பூமியை வந்தடைகின்றன. வேறு சில அவற்றோடு வந்து கூடுகின்றன. எல்லா நதிகளும் சமுத்திர மத்தியை நோக்கி ஓடிப் பரிசுத்தமான அபாம் நபாத்தாகிய வடவைத்தீயைச் சந்தோஷப்படுத்தும். சுத்தமானவையும், பேரொளியோடு கூடியவையுமான அந்நீர்கள் அவ்வக்கினியைச் சூழ்ந்து நின்றன—(எ-று.)

4. சினமிலா நீரா மங்கைப் பருவத்த ரிளமை சேர்ந்த
கனலெனு மவனைக்கோலப் படுத்திச் சூழ்ந்துறுகின்றாரால்;
தனுமொளிக் கதிர்நீரா டன்னான் மூட்டுத றேய்வுறாது
வனமிடை யிழுதொளிர்ந்து வளத்தொடு துலங்காநின்றான்.

(இ-ள்.) வேலை செய்வதற்கு மனஞ்சலித்துக் கொள்ளாத தண்ணீர்களாகிய யுவதிகள், இளமை வாய்ந்த அபாம் நபாத்தாகிய அவ்வக்கினியை

யலங்காரஞ் செய்து கொண்டு அவனைச் சூழ்ந்து செல்லுகிறார்கள். அவ்வக்கினி மூட்டப் பெறுதவனாய்த் தண்ணீரினிடையே, நெய்யோடு கூடியசோதியோ டொளிர்ந்து, ஜ்வலிக்கும் வெண்மையான கிரணங்களோடும், வளத்தோடும் பிரகாசிக்கிறான்—(எ-று.) வனம், நீர்.

5. இடரிலாத் தேவ னன்னாற் கனத்தினை நாரி மாரங்
கடவுளர் மூவர் தாங்கா நின்றனர்; அறற்கட் செய்த
திடமுறுபொருளேயென்னச்செறிகின்ற; அவன்முன்றோன்று
படலுறு ஸார பான மணைந்து மாந்திடு கின்றானே.

(இ-ள்.) இடுக்கண் பெறாத தேவனாகிய அவனுக்கு நாரிகளாகிய இளா, ஸரஸ்வதி, பாரதி என்னும் மூன்று தேவிகளும் உணவுப் பொருளினைத் தாங்குகின்றார்கள். நீரிற் செய்யப் பெற்ற பொருள்களைப்போல் அங்கே அவ்வுணவுப் பொருள்கள் விளங்குகின்றன. அவ்வக்கினி முதற்கண் தோன்றும் ஸாரம் நிறைந்த பானமாகிய ஸோமநீரைக் குடிக்கிறான்—(எ-று.) மேனாட்டாசிரியர் பின்னிரண்டடிக்கு வேறுவகைப் பொருள் கூறுவர்.

வருக்கம் 22.

6. குதிரையின் பிறப்பு மீண்டே; குவலய வொளியு மீண்டே;
சதியுளோன் றாக்கா தெங்கள் சூரிக டம்மைக் காக்க;
விதிபெறப் பாக மெய்தாப் புரங்களிற் பரத்து மேவு
நிதியனைப் பொய்ய ரீகை யில்லவர் தாமு மெய்தார்.

(இ-ள்.) (ஸமுத்திரத்திலிருந்து உச்சைச் சிரவம் என்னுங் குதிரை தோன்றுவதால்) குதிரை உற்பவிக்கும் இடமும் இதுவே. பூமியைத் தோற்றுவிக்கும் ஸூர்ய ஒளி பிறக்கும் இடமும் இதுவே. மோசக்கார னெதிர்க்காதபடி எங்களது யஜமானர்களைக் காப்பாற்றுவாயாக. பக்குவப் படாத கோட்டைகளாகிய மேகங்களிற் றூரத்திற் பொருந்தியுள்ள செல்வவானாகிய அக்கினியைப் பொய்யரும் லோபிகளும் அடைவதில்லை—(எ-று.) நிதியனை எகுவை நோக்கிச் சேர்த்தது.

7. நன்மையிற்கறக்குந் தேனு நண்ணியோன் சொந்தவில்லின்
மன்னுவோ னமுதநீரை வளர்க்கின்றான்; நன்மை சார்ந்த
அன்னம துண்பான்; நீருள் வன்மைகொ ளபாங் நபாத்து
நன்னய வசுவை யாக மகற் களித்திட வொளிர்வான்.

(இ-ள்.) நன்றாகக் கறக்கும் பசுவைப்பெற்றவனும், தனது சொந்த வீட்டிற் பொருந்துபவனுமாகிய அக்கினி அமிர்தமாகிய நீரை விருத்தி செய்கிறான். அந்நீரிலிருந்து தோன்றிய உணவுப்பொருள்களை அவிரூபமாக உண்பான். வலிமை பொருந்திய அபாங்நபாத்தாகிய அக்கினி யஜமானனுக்கு நல்ல செல்வத்தை யளிப்பதற்காகத் தண்ணீருக்குள் பிரகாசிப்பான்—(எ-று.)

8. நீரினுட் டுய்மையோடு நேர்மையிற் றெய்வத் தன்மை
யேபெறப் பாந்து நித்த னாகவே யொளிர்வோ னன்னான்

## மண்டலம் 2 சூக்தம் 35.

பேருறு சாகையாகப் புவன மற்றவை பிறங்கும்;
பூரணப் பயனெ டோடதிக்குழு வலனிற் றேன்றும்.

(இ-ள்.) தண்ணிருக்குள் பரிசுத்தத்தோடும், நேர்மையோடும் தெய்வத் தன்மையோடும் விஸ்தாரமாய்ப் பார்த்து நித்தியனுய்ப் பிரகாசிக்கும் அவ்வபாம்பாத்தாகிய அக்கினியின் சாகைகளாக இதர புவனங்கள் விளக்குகின்றன. ஒஷதிக்கூட்டங்கள் புஷ்ப பலாதி பூரணபலன்களோடு, அவனிடத்திலேயே உற்பவிக்கின்றன—(எ-று.)

9. நீரினிற் பிறந்தோ னிரின் மடியினி லேறினன்கான்;
ஏருற மின்ன லாடை யசைத்து வக்கிரநீர் நாப்பண்
நேருற மேலெழுந்தான்; அவன துத்தமச் சிறப்பைச்
சீருறச் சுமக்கும் பொன்வண்ணத்தறல் சூழ்ந்து செல்லும்.

(இ-ள்.) தண்ணீரிற் பிறந்தவனுகிய அபாம்பாத்தென்னு மக்கினி தண்ணீரின் மடியாகிய அந்தரிட்சத்திலேறினன். மின்னலாகிய ஆடையை உடுத்திக்கொண்டு வக்கிரமாகச்செல்லும் மேகநீருக்கிடையேநேராகச் சுடர் விட்டு மேலெழுந்தான். அவனது உத்தமமான மஹிமைகளைத் தாங்கும் பொன்னிறமுள்ள நீரோட்டங்கள் அவனைச் சூழ்ந்து செல்லும்—(எ-று.)

10. இரணிய வுருவ னன்னு னிரணியம் போலக் காண்பான்;
இரணிய மொத்த வன்ன மெய்தியோ னபாம்பாத்து;
இரணியத் தோற்றுவாயி னெழுந்தவ னமர்ந்தகாலை
இரணிய மளிப்போ ரன்னுற் கவியன மளிக்கின்றூரே.

(இ-ள்.) அவ்வபாம்பாத்தாகிய அக்கினி பொன்மயமான ரூபத்தோடு கூடியவன்; பொன்னைப்போலவே காணப்படுகிறுன்; பொன்மயமான பிறப்பிடத்திலிருந்து தோன்றியவன். மேலே யமர்ந்து பிரகாசிக்கும்போது பொன்னுகிய தட்சிணையைத்தரும் யஜமானர்கள் அவனுக்கு அவியுணவுகளைத் தந்தூட்டுகிறூர்கள்—(எ-று.)

வருக்கம் 23.

11. நீரினிற் பிறந்தோ னன்னு னின்மல வுடலைப் பேரைச்
சீருற மறைவே நின்று செழிப்பிப்பான்; யுவதிமாரின்
பேருற மூட்டுகின்ற விவ னெளி விசாநின்றுன்;
தாருறு மவன்ற னுண்டி பொன்னிறக் கிருதந்தானே.

(இ-ள்.) அபாம் நபாத்தாகிய அக்கினி, மேகநீர்களுக்கிடையிற் றேன்றும் அவனது பரிசுத்தமான தேஜோ சரீரத்தையும், பெயரையும் தான் மறைவாக நின்று ஓங்குவிப்பான். யுவதிமார்கள் இங்கு மூட்டும் அக்கினியும் நன்றுகப் பிரகாசிக்கிறுன். இவனுக்கு உணவு பொன்னிறமான நெய்யாம்—(எ-று.) யுவதிமார் பத்து விரல்களும் என்பார் மேனுட்டாசிரியர். ஸாயணர் நீரென்பார். ஈண்டுவித்யுத்தாகிய அக்கினியையும், அரணி கடைந்தெடுக்கும் அக்கினியையும் பேதப்படுத்தியது. ஒன்றன் வளர்ச்சி மறைவாக நடக்க, மற்றதின் பிறப்பு வளர்ப்பு உணவுமுதல் அறியக்கிடக்கின்றன என்றபடி.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 7.

12. பலர்வயி னெருங்கு நண்பற் கவியொடு மகமளித்துத்
தலைவனைக் கொடுஞ்சேவிப்போம்; சாறுவையலங் கரிப்பேன்;
உலர்தரு காட்ட மீவேன்; உண்டியை யளிப்பதோடு
பலபலவிருக்காற்போற்றிப் பரிந்துநான் புகழுவேனே.

(இ-ள்.) பலரிடத்தும் சமீபத்துச் செல்லும் நண்பனாகிய அபாங்நபாத்துக்குச் சருபுரோடாசாதி அவிப்பொருள்களோடு கூடிய யாகத்தைச் செய்து நமஸ்காரங்களோடும் அவனை வணங்குவோம். அவனுடைய முதுகை யலங்காரஞ்செய்வேன். அவனுக்குக் காய்ந்த மரத்துண்டுகளை யளிப்பேன். அவியுணவைத்தருவதோடு பல இருக்குக்களால் ஸ்தோத்திரமுஞ் செய்து அவனைப் புகழ்வேன்—(எ-று.)

13. அவற்றிடைக் காளைநன்கே கருவினை யளித்தான்; சேயா
யவற்றினைக் குடியாநின்றான்; அவையவன் றன்னை நக்கும்;
சுவற்றரு மொளியோ டன்னான் றேயத்திற் பிறந்த வங்கி
யிவற் றுடறனி னுழைந்தா னேதிலன் றநுவிற் போன்றே.

(இ-ள்.) அத்தண்ணீர்களுக்கிடையே காளையாகிய வவ்வக்கினி தனது கருப்பத்தைப் பிறப்பித்தான். தானே குழந்தை வடிவாக விருந்து அவற்றைக் குடிக்கிறான். அவை யவனைத் தடவிக்கொடுக்கும். மங்காத நிறத்தோடு அபாங்நபாத்தாகிய அவ்வக்கினி அந்நியன் சரீரத்தில் நுழைவது போல இவ்வரணிக் கட்டைகளின் சரீரங்களுக்குள் நுழைந்தான்—(எ-று.)

14. பரமமாம் பதத்தி னீண்டு பகலெலா மழியாச்சோதி
மருவியே யமருங்காலை, மகவினை வளர்க்கு நெய்யிற்
றெரிதரு முணவு தாங்கித் தெள்ளற விளமை வாய்ந்தோர்
திரிதரு தன்மை யுற்றோர் செல்லுவ ரவனைச் சூழ்ந்தே.

(இ-ள்.) அவ் வபாம் நபாத்தாகிய அக்கினி பரமபதத்தில் (உன்னதமான ஸ்தானத்திலென்றபடி) ஒருநாளும் கெடாத ஜோதியோடு நிற்கும்போது, இளமை வாய்ந்தவர்களும், சலனஸ்வபாவமுள்ளவர்களுமான தெள்ளிய தண்ணீர்கள், புத்திரனை வளர்க்கும் கிருதத்தோடு கூடிய உணவைத் தாங்கிக்கொண்டு அவனைச் சூழ்ந்து செல்லுவார்கள்—(எ-று.)

15. கூட்டினே னல்லிலத்தை, அங்கியே, மக்கட்காகக்;
கூட்டினேன் சீரை யாகங் கூட்டிய யஜமானர்க்கா;
ஈட்டு மங்கலத்த, தேவரெண்ணியே காப்ப வெல்லாம்;
நாட்டுவோம் பெரியபோற்றை மன்றினல் வீரரோடே.

(இ-ள்.) அக்கினியே! மக்கள் பிறப்பதற்காக நல்ல கிரகத்தைச் சேர்த்தேன். யக்ஞம் கூட்டுவிக்கும் யஜமானர்களுக்காக நல்ல புகழ் ஸ்தோத்திரங்களைச் சேர்த்தேன். தேவர்களாற் கருத்தோடு காக்கப்பெறு மவையெல்லாம் மங்கலகரமானவை. யக்ஞக்கூட்டத்தில் வீரியம் வாய்ந்த புத்திர

## மண்டலம் 2 சூக்தம் 36.

பௌத்திரர்களோடு நாங்கள் பெரிய ஸ்தோத்திரங்களைக் கூறுவோமாக—(எ-து.)

வருக்கம் 24.

## 227. (36) மண்டலம் 2 அநுவாகம் 4. சூக்தம். 4,

### 6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: ஜகதி; தேவதை; 1 இந்திரன் (மதுவுமாம்.) 2 மருத்துக்கள் (மாதவமுமாம்), 3 துவஷ்டா (சுக்கிரனுமாம்), 4 அக்கினி (சசியுமாம்), 5 இந்திரன் (நபமுமாம்), 6 மித்திராவருணர்கள் (நபங்களுமாம்).

இந்திரன், மருத்துக்கள், துவஷ்டா, அக்கினி, இந்திரன், மித்திராவருணர்கள் இவர்கள் ரிது தேவதைகள் என்மார் ஷட்குரு சிஷ்யர். ஆறு ரிதுக்களுக்கு அறுவர் என்க.

(வேறு.)

1. உனக்கென்னப் பசுப்பொருளுந் தண்ணீருங்
   கூட்டினரால்; ஓங்குந் தட்டிற்
கனக்கல்லிற் பிழிந்துவடித் தெடுத்திட்டார்
   நரர்களதைக் கருதி வேந்தே
நினக்கென்ன வஷட்டோடு சுவாகாவென்
   றாவுதிசெய் நெய்யார் சோமந்
தனைக்கொள்க வள்ளத்தோ, டீசனொடு
   முதன்மையனுஞ் சாற்றி னீயே,

(இ-ள்.) இந்திரனே! உனக்காகச் சோமத்தோடு கவ்வியமாகிய ததிக்ஷீரங்களையும் ஜலத்தையும் கலந்தார்கள். மயிர்க்கம்பலமாகிய தட்டிலும் கல்லிலும் பிழிந்து வடித்து மனிதர்கள் அச்சோமத்தைத் தயார் செய்தனர். உனக்காக 'வஷட்' காரஞ்செய்து ஸ்வாஹா என்னும் மறை ஈற்றோடு ஆவுதிசெய்த வளம்நிறைந்த அச்சோமத்தை நீ குடிப்பாயாக. நீயே ஸ்வர்க்கத்துக்கு ஈசுவரனும் எல்லாத் தேவர்களுக்கும் முதன்மையானவனுமாம்—(எ-து.) வஷட், மண். 1 சூக். 120 செய். 4 பார்க்க. ஸ்வாஹா மந்திரங்களின் இறுதியிற் கூட்டிச் சொல்லும் சொல்; அக்நயேஸ்வாஹா என்பதுபோல.

2. மகத்தினொடு கலந்துள்ளீர், புள்ளிமான்
   பரிகளொடு மண்டாவோடு
முகத்தநெறி தனில்விளங்கு மணிப்பிரியர்
   காள், பரத னேங்கு மக்காள்,
வகுத்த தருப்பையி னமர்ந்து வானிடத்தி
   னராவிர் மருவும் போதன்
பகுத்தவளப் பாத்திரத்திற் சோமமதை
   யெக்காலும் பருகுவீரே.

(இ-ள்.) மககாரியங்களோடு கலந்துள்ளவர்களே! புள்ளிமான்களாகிய வாகனங்களோடும், ஈட்டிகளோடும் செல்லும் நெறியிற் பிரகாசிப்பவர்களே! ஆபரணங்களணிவதிற் பிரியமுள்ளவர்களே! உலகத்தைத் தாங்கும் பரதனாகிய ருத்திரனுடைய புத்திரர்களே! (மருத்துக்களே யென்றபடி) வானாகிய அந்தரிட்சத்தில் நேதாக்களாகத் திரிபவர்களே! இங்கு பரப்பிய தருப்பையில் அமர்ந்து போதாவினது பாத்திரத்திலிருந்து சோமத்தை யெப்போதும் குடிப்பீர்களாக—(எ-று.) போதா மண். 2 சூக். 1 செய். 2 பார்க்க. மண்டா, ஈட்டி.

3. செவிவிரைவீ ரெம்மாட்டு வருகவுடன்
றருப்பையினிற் சிறக்கக் கூர்வீர்;
தவவுள்ளக் களிகொள்வீர்;துவட்டாவுந்,
தேவரோடுஞ் சார்ந்த தேவர்க்
குவகைதரு பத்தினிமார் தம்மோடு
நற்கணங்க ளுவந்து சூழ
நவமதுவுந் தனைச்சூழ்ந்து சேவிக்கத்
திருத்தியினை நாடிக் கொள்க.

(இ-ள்.) விரைவிற் கேட்பவர்களாகிய துவஷ்டாமுதலியவர்களே! எங்களிடத்துச் சேர்ந்து வருவீர்களாக. இங்குவிரித்துள்ள தருப்பையினில் அமர்வீர்களாக. அமர்ந்து மனக்களி கொள்வீர்களாக. துவஷ்டாவாகிய தேவனும், இதரதேவர்களோடும், தேவ பத்தினிகளோடும், சற்கணங்கள் தன்னைச்சூழவும், ஸோமத்துளிகள் தன்னை ஸேவிக்கவும், அச்சோமத்தினிடத்து திருப்தியடைந்திருக்கட்டும்—(எ-று.)

4. தேவர்களை யிவட்டருக, விப்பிரனே,
மகமாற்ற; செய்ய வோதா
வாவலொடு மூவிடத்தும் விரும்பியமர்ந்
திடுக;கொணர்ந் தமைக்கப் பெற்றுப்
பாவுமதுத் துளிகளினி லிச்சையுறல்;
அக்கினியைப் பரிந்து மூட்டுந்
தூவியலன் யாகமதி லுன்பாகத்
துளிபருகி யுள்ள மார்க.

(இ-ள்.) விப்பிரனே! தேவர்களை இங்கு கூட்டிக்கொண்டு வருவாயாக. அவர்களை வணங்கிப் பூஜிப்பாயாக. ஹோதாவாகிய அக்கினியே! ஆகவனீயம், காருஹபத்தியம், தட்சிணாக்கினி, என்னும் மூன்றிடங்களிலும் விரும்பி யமர்வாயாக. உத்தராவேதியிலிருந்து ஹோமத்தினிமித்தம் கொண்டுவந்து வைக்கப்பட்ட ஸோமத்தினிடத்து விருப்பம் கொள்ளுவாயாக. ஆக்நீத்ரனது யாக பாத்திரத்திலிருந்து உனது பாகமாகிய ஸோமத்துளியைக்குடித்துத் திருப்தி யடைவாயாக-(எ-று.) ஆக்நீத்ரன், ஹோதா இவர்களைப்பற்றி மண். 2 சூக். 1 செய். 2ற் பார்க்க.

## மண்டலம் 2 சூக்தம் 36.

5. இவ்வதுவுன் றனுவதனின் வலிமையினை
வளர்ப்பதுவாம்; இதனை லென்றுந்
தெவ்வரினை யடக்குமெறு முன்கரங்கட்
கியைந்தனவாற்; செல்வ மேய்ந்தோய்,
ஒவ்வுமுனக் கெனப்பிழிந்த மதுத்துளிகள்
கொண்டுவர லாற்று நின்ற;
செவ்வையின் பிராமணன்றன் யாகமதிற்
குடித்திடுக திருத்தி சேர்ந்தே.

(இ-ள்.) இந்த தோன்றும் அந்த ஸோமமானது உனது சரீரத்தின் பலத்தினை வளர்ப்பதாம். இச்சோமத்தினால் பகைவர்களை யடக்கும் வலிமை உனது காங்களுக்கியைந்தன. மகவானே! உனக்காகப் பிழியப்பெற்ற மதுத்துளிகள் உத்தரவேதியிலிருந்து கொண்டுவரப்பட்டுள்ளன. பிராஹ்மணாச்சாம்வியின் யாகபாத்திரத்திலிருந்து ஸோமத்தைக் குடித்துத் திருப்தியடைவாயாக—(எ-று.) பிராஹ்மணாச்சாம்வி, மண். 2 சூக். 1 செய். 2ற் பார்க்க.

6. மகமதனை யேற்றிடுக; மருவுமென
தழைப்பறிக; வசனம் பூர்வத்
திகவயினுற் றலைகொண்டே யோதாவு
மமர்ந்திட்டான்; இறைவராகுந்
தகவுடையோ ரிருத்துவிகர் சூழிருவர்
பாலெனமஞ் சாராநின்ற,
துகவிரெனுடு பிரசாத்தா தருஞ்சோம
மதுவதனை யுண்பீர் நீரே.

(இ-ள்.) (மித்திரா வருணர்களே!) எனது யக்ஞத்தை யொப்புக்கொள்வீர்களாக. பூர்வகாலத்து ஏற்பட்ட சஸ்திரவசனப்பிரகாரம் ஹோதா வேதியருகி லமர்ந்தனன். ராஜாக்களும், இருத்துவிக்குக்களாற் சூழப்பட்டவருமான மித்திராவருணாிருவர்களிடத்திலும் எனதுநமம் (ஸ்தோத்திரம் அல்லது அவியன்னம் என்னும் இரண்டு பொருள்களி லெதையேனுங் கொள்க.) சார்கின்றது. மித்திராவருணர்களாகிய நீங்கள் பிரசாஸ்தா தரும் யாகப் பாத்திரத்திலிருந்து ஸோமமதுவைக் குடிப்பீர்களாக—(எ-று.)

வருக்கம் 25.
ஆகச் செய்யுள் 1007.

### ஏழாவது அத்தியாயம் முற்றும்.

---

## எட்டாவது அத்தியாயம்,

இவ்வத்தியாயத்தில் 27 வருக்கமும் 13 சூக்தங்களும். 40 இருக்குக்1 களுமுள்ளன.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8.

### 228 (37) மண்டலம் 2 அநுவாகம் 4 சூக்தம் 5, 6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: ஜகதி; தேவதை: 1-4 திரவிணோதா அல்லது செல்வகாரணனான அக்கினி, 5 அசுவினிகளிருவர், 6, ஆக்கிநேயி.

1. ஓதாவின் வள்ளமதிற் றருஞ்சோமந்
தனைப்பருகி யுவந்து நிற்க;
ஆதாரமாய்ப் பூன்ற வாவுதியை
யத்துவரி ரவன் விரும்பும்;
தீதாற வதனையவற் காக்கொணர்க;
அதைவிரும்பிச் சிறப்பி னீவான்
ஓதாவின் யாகமதிற் றனக்கொடையோன்
ரிதுக்களொடு சோம முண்ணல்.

(இ-ள்.) செல்வ காரணனாகிய அக்கினியே! ஹோதாவினது யக்ஞபாத்திரத்திலிருந்து தருகின்ற சோமத்தைப் பருகிக்களிகொள்வாயாக. அவ்வக்கினி பூரணமாய் ஊற்றித்தரும் ஆவுதியை விரும்புகிறான். அச்சோம விழைவினாற் றானஞ் செய்கிறான். திரவிணோதாவாகிய அக்கினியே! காலாபிமானி தேவதைகளாகிய ரிதுக்களோடும் ஹோதாவினது யாகபாத்திரத்திலிருந்து ஸோமத்தைக் குடிப்பாயாக—(எ-று.) திரவிணோதாவாகிய அக்கினி உண்ணட்டும் என்றும் கடையடிக்குப் பொருள்கூறலாம்.

2. முற்காலந் தனிலழைத்த வவன்றனையே
யிப்பொழுது முன ரழைப்பேன்;
எக்காலு மவனேயிங் கழைபடுவோன்;
வள்ளலெனு மிரும்பேர் வாய்ந்தோன்;
நற்காருஞ் சோமமது வத்துவர
ராலமைக்க நண்ணிற் றீண்டே;
மிக்காருந் தனக்கொடையோன் ரிதுக்களொடும்
போதனிடை வேரி யுண்ணல்.

(இ-ள்.) முற்காலத்தில் யாக கர்த்தாக்கள் அழைத்த அத் திரவிணோதாவாகிய வக்கினியையே இப்பொழுதும்யானழைக்கிறேன். எல்லாக்காலத்திலும் அவனே இங்கு அழைக்கப்படுபவன். அவனுக்கே தாதாவென்ற பேர் ஏற்பட்டுள்ளது. அத்துவர்யுக்களால் நன்கே நிறைந்துள்ள அச்சோமங் கொண்டுவரப்பட்டது. திரவிணோதாவாகிய அக்கினி ரிதுக்களோடு போதனது யாகபாத்திரத்தில் ஸோமத்தைக் குடிக்கட்டும்—(எ-று.) போதா, மண். 2 சூக். 1 செய். 2 பார்க்க. நற்கு ஆரும் சோமம் மது எனப்பிரிக்க.

3. ஈண்டடையு முன்பரிக ளவை பருத்து
வளர்ந்திடுக; இடுக்க ணற்றுப்
பூண்ட வனநாயகனே, திடம்பெறுக;

## மண்டலம் 2 சூக்தம் 37.

பகை வதைக்கும் பூட்கை யுள்ளோய்,
ஈண்டடைந்து கிளர்ச்சியுடன் மேலெழுந்து,
தனக்கொடையோ டெய்தி நின்றோய்,
மாண்டமது தன்னை ரிதுக்க ளொடுநேட்டா
மகத்தினிடை மாந்து வாயே.

(இ-ள்.) நீ இங்குவரும்போது ஏறிவரும் உனது வாகனங்கள் பருத்து வளரட்டும். வனஸ்பதியே! துன்பமற்று நீ திடம்பெறுவாயாக. சத்துருக்களை வதைக்கும் கொள்கையுடையவனே! திரவிணோதாவே! இவ்விடத்துக்கு வந்து மனக்கிளர்ச்சியோடு மேலோங்கி ஸோமத்தை ரிதுக்களோடுநேஷ்டாதரும் யக்ஞ பாத்திரத்திலிருந்து குடிப்பாயாக-(எ-று.) நேஷ்டா, மண். 2 சூக்.1 செய்.2 பார்க்க. திரவிணோதா, தனக்கொடையோனாகிய அக்கினி.

4 ஓதாவி னெக்கியத்திற் குடித்தனனால்;
மத்தமதை யுற்று நிற்றான்
போதாவின் மகமதனில்; நேட்டாசெ
யெக்கியத்திற் போதவுண்டான்
மாதேவர்க் கிதந்தருமவ் வவியுணவைக்;
கெடாதிறப்பை மதித்தளிக்கா
வாதேயத் துரியவளத் தாருகசெல்
வக்கொடையோ,னவியோர்க் கன்பன்.

(இ-ள்.) (அச்சாவாகனுக்குரிய இந்தத்திரவிணோதா என்னும் அக்கினி) ஹோதாவினது யாகபாத்திரத்திலிருந்து தேவர்களுக்குப் பிரியமான வவியுணவை நிறையவுண்டு களித்தான். அவிச்செல்வத்தைத்தரும் ரித்விஜர்களுக்கு அன்பனும் செல்வத்தைத்தருபவனுமான திரவிணோதாவென்னும் அக்கினி கெடாமலும், மரணத்தை தராமலுமிருக்கும் நான்காவது பாத்திரத்திலுள்ள ஸோமத்தைக் குடிக்கட்டும்—(எ-று.) ஹோதா, போதா, நேஷ்டா, அச்சாவாகன், இவர்களைப்பற்றி மண்.2 சூக். 1 செய். 2ற் காண்க. அச்சாவாகனுக்குரிய என்ற சொற்றொடர் ஸாயணருரையிற் கண்டது. த்ரவிணோதஸ: என்பதற்கு நிருக்தக்காரர் மதப்படி ஸாயணர் அவியாகிய செல்வத்தையளிக்கும் ரித்விஜர்கள் எனப் பொருளுரைப்பார். துரியவளம், துரீயவன்னம், நான்காவது பாத்திரமென்க.

5. வீரர்களைச் சுமப்பதுவாந்தேரதனை
யீண்டருகின் விரையாநின்றே
பேருளதை யிங்காவிற் பூட்டுகநீர்;
அவிழ்த்துவிடு மிடமு மீண்டே;
சாருமவி தன்னக்கூட்டல் மாதவிணொடும்;
பினரிங்கன் சாரல்; மொய்ம்போ
டாரும் வசுதன்னைப் படைத்திர், சோமமதை
நன்றாக வார்த்தி டீரே.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8.

(இ-ள்.) (அசுவினிகளே!) வீரர்களைச் சுமந்து செல்வதும், யக்ஞ தலமாகிய விவ்விடத்துக்கு விரைந்து வருவதுமான தேரைப் பூட்டுவீர்களாக. அதனை யவிழ்த்துவிடும் இடம் இவ்விடத்தேதானுள்ளதாம். மதுரமான ரஸத்தோடு கூடியவாய் அவிப்பொருள்களைச் செய்வீர்களாக. பின்பு இங்கு வருவீர்களாக. பலம் நிறைந்த செல்வத்தோடு கூடிய வாஜிநீ வஸுக்களே! ஸோமத்தை நன்ருகக் குடிப்பீர்களாக-(எ-று) வாஜிநீ வஸு என்பதற்குப் பலமே செல்வமாக வுடையவர்கள் என்பது பொருள். அசுவினிகளே யென்பது மேல் சூக்த தேவதை கூறியவிடத்துக் கண்டது.

6. சமித்தினை நீ யக்கினியே யேற்றிடுக;
ஆவுதியைத் தாங்கிக்கொள்க;
இமைப்பினரர்க் கிதந்தருமப் பிரமமதை
யேற்றிடுக; எழில்வாய் போற்றைச்
சமித்திடுக விழைவுரிய பெரியரெலாத்
தேவரையுந் தழுவுவோய் நீ,
யமைத்தவவி தனைரிதுவோ டியாவரொடு
முண்டிடுவா னழுகி னூட்டல்.

(இ-ள்.) அக்கினியே! நீ ஸமித்தை யேற்றுக்கொள்வாயாக. ஆவுதியையும் எற்றுக்கொள்ளுக. மனிதர்களுக் கிதத்தைத் தரும் அம்மந்திரத்தை யேற்றுக்கொள்வாயாக. அழகிய நல்ல ஸ்தோத்திரங்களையும் ஒப்புக்கொள்ளுக. விரும்பத்தக்க பெரியவர்களாகிய எல்லாத் தேவர்களையும் விரும்புகிற நீ இங்கு வைக்கப்பட்ட அவிப்பொருள்களைக் காலாபிமானி தேவதையாகிய ரிதுவோடும், மற்றெல்லாத் தேவர்களோடும் உண்ணும்படி யவர்களுக்கு அழகாக ஊட்டுவாயாக—(எ-று.)

வருக்கம் 1.

## 229 (38.) மண்டலம் 2 அநுவாகம் 4 சூக்தம் 6.

### 11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை:ஸவிதா.

(வேறு.)

1. இக்கடவுளன் சவிதா வெழுந்தனன் வன்னி யென்று
மக்கருமத்தைச் செய்வோ னுயிர்ப்புற வணைந் தெழுந்தான்;
அக்கடவுளர்க்கு மெய்யே யரதன மளிக்கின்ருன்காண்;
தக்க வெக்கியத்தோன் வாழ்வைச் சாருறவருள்செய்வானே.

(இ-ள்.) இந்தத்தேவனும், உலகத்தைத் தாங்கும் வஹ்நியும், உலகத்தைத் தோற்றும் கர்மத்தை நிரந்தரமாகச் செய்பவனுமான ஸவிதா, பிராணிகள் உயிர்ப்பை யடைந்து ஒழுகுமாறு மேலெழுந்து நின்ருன். அத்தேவர்களுக்கு ரத்நங்களைத் தருகிருன். நல்ல யக்ஞ ஆவுதிகளைச்செய்யும்

யஜமானனுக்கு வாழ்வு உண்டாகும் வண்ணம் அவனை ஆசீர்வதிக்கிறான்—(எ-று.) வீதிஹோத்ரம் என்பதற்கு ஆவுதியால் தேவர்களை விருந்துண்ண அழைப்பவன் என்பது பொருள்.

2. விரிகரத் தேவன் யாவுஞ் சுகத்தினை மேவ மேக்குப்
பரிவொடு கரங்களிட்டிப் படர்ந்தனன்; தண்ணீர்கூட
வரிய வன்னவன்ற னோன்பை யநுசரித் தொழுகுகின்ற;
திருதரு மிந்தக் காற்றுஞ் சூழ்ந்து சென்றுவக்குமாதோ.

(இ-ள்.) விஸ்தாரமான பெரிய கரங்களோடு கூடிய தேவனாகிய ஸவிதா எல்லா ஜனங்களும் சுகத்தை யடையுமாறு தனது கிரணங்களை விரித்துக் கொண்டு மேல்நோக்கி உன்னதமாக வெழுந்தான். கங்கை முதலிய நீரோட்டங்களுங்கூட உலகத்தை வளர்க்கும் அவனது விரதத்தை யனுஸரித்து ஒழுகுகின்றன. இங்கு திரியும் இந்த வாதனும் சூழ்ந்து சென்றுலவி மனங் களிக்கிறான்—(எ-று.) வாதன், வாயு.

3. வேகமார்ந்தன வென்றாலும் விடுப்பனு லவற்றை; என்று
மேகுவாரெனினும் வானத் தவர்களைத் தடை செய்விப்பான்;
சேகுறப் பகைவதைப்போர் தம் விரைவினையு மாற்றும்;
ஓகையிற் சவிதா னோன்பை யநுசரித் திரவோடிற்றே.

(இ-ள்.) வேகமாகச் செல்லுபவையாயினும் தனது கிரணங்களால் அவற்றை விமோசனஞ் செய்துவிடுகிறான். எப்பொழுதுஞ் செல்லுபவர்களாயினும் ஆகாயத்திற் செல்லும் ஜனங்களைத் தடுத்து விடுகிறான். நன்றாகச் சத்ருக்களை வதைப்பவர்களையும் அவர்களது வேகத்தைமாற்றிவிடுகிறான். ஸவிதாவினது விரதத்தை யநுஸரித்து இரவானது ஒழுகிற்று—(எ-று.) இவ்விருக்குக்கு மேனாட்டாசிரியர் உரை வருமாறு: 'வேகமாகச் செல்லும் குதிரைகளாற் சுமக்கப்படினும் அவற்றை யவன் அவிழ்த்துவிடுவான். வேகமாகச் செல்லும் தேரையும் அவன் போகாதபடி நிறுத்திவிட்டான். அஹின் அல்லது பாம்புகளைப்போல நெளிந்து செல்லும் அவற்றின் அவசரத்தையுங்கூடத் தடைசெய்துவிட்டான்.' இரவு ஸவிதாவினது அதிகாரத்தைப் பின்றொடர்ந்து வந்தது.' என்பதாம்.

4. மீண்டுமே போர்த்தா, ளாடை வனைபவளென, விரிந்த,
நீண்டி திரனுங் கன்மத்தை யியற்ற வல்லவ னிடைக்கண்
பூண்டதைப் போட்டான்; யாவுமெழுகின்ற, சவிதாத்தேவன்
மீண்டெழு கின்ற காலக் களைப்பிலான் ரிதுக்க ளாற்றி.

(இ-ள்.) வஸ்திரத்தைச் செய்யும் ஸ்திரீயைப்போல விரிந்து நின்ற உலகத்தை மறுபடியும் (இரவானவள்) போர்த்தாள். கர்மத்தைச் செய்யக்கூடியவனாகிய தீரன் (வேலையிற் சமர்த்தன் என்றபடி.) தன்வேலை முடிவதற்கு முன் இடையிற் றான் செய்துகொண்டிருந்த தொழிலை நிறுத்திவைத்தான். களைப்பில்லாமற் பிரகாசிப்பவனும், தேவனும், ரிதுகாலங்களை யுண்டுபண்ணுபவனுமான ஸவிதா மறுபடியும் மேலே தோன்றும்போது ஜகத்தெல்

லாம் உயிர்ப்புப் பெற்று எழுகின்றன—(எ-று.) இச்செய்யுள் ஸாயணருரையைத்தழுவியது.

5. பேரொரித் தேசு வீட்டிற் பிறந்தது நானு வில்லத்
தேருறு முனவுமுற்றும் விரிந்துமே லோங்கிநின்ற,
தாரொளிச் சவிதாதன்னைத் தூண்டி யன்னவன்றன்கேது
நேரு முன்னவனுக் கன்னை மகனுக்கு நேர்வாள்பங்கே.

(இ-ள்.) வீடுகடோறும் பிறந்ததும், பெரியதுமான அக்கினியின் தேஜஸ், நானுவீடுகடோறும், உலகத்திலுள்ள எல்லா வுணவுப்பொருள்களினூடும் பரந்து மேலோங்கி நின்றது. அன்னையாகிய உஷஸ், ஒளிநிறைந்த ஸவிதாவைத் தூண்டிவிட்டு அவனை ஞாபகப்படுத்தும்கொடிபோன்ற முதல்வனும், அக்கினியுமாகிய புத்திரனுக்கு அவிர்ப்பாகத்தை யளிப்பாள்—(எ-று.) அன்னை உஷஸைக்குறித்தது முன்னவனுக்கு மகனுக்கு முன்னவனுகிய மகனுக்கெனப்பொருள் கூட்டி யுரைக்க. ஸவிதாவென்னுஞ்சொல் விண்ணவர்களைச் சுட்டிக்காட்டப் பூமியிலுள்ளவர்களும் தேவர்களும் அக்கினிஹோத்திரமாகிய கர்மத்தை விடியற்காலத்திற் செய்கிறார்களென்பது கருத்தென்பார் மேனுட்டாசிரியர்.

வருக்கம் 2.

6. வெற்றியைப் பெறுவா னேங்கி விரிந்துறுவானன் கின்டே;
நற்றிணைச் சங்கமத்தி னுயிரில மெலாம் விழைந்தான்;
நித்தியம் வேலையாளன் றொழி லிடைவிடுத்துச் சென்றான்;
இத்துணைச் செயனு மேலுந் திப்பியச் சவிதா நோன்பின்.

(இ-ள்.) வெற்றியை யடையவிரும்பி இவ்வுலகத்து நன்றாக விரிந்து (அக்கினி) விளங்குகிறான். ஜங்கம உயிர்களது வீடுகள்தோறும் விரும்பிச்சென்றிருந்தான். தொழிலாளியும் தினமும் தன்வேலையின் பாதியில் அதனை விடுத்து வீட்டுக்குச் சென்றான். இவ்வளவு காரியங்களும் ஒளிபொருந்திய ஸவிதாவாகிய ஸூர்யனின் விரதத்தைப் பின்பற்றி நடைபெறுகின்றன—(எ-று.) மேனுட்டாசிரியர் அக்கினி மறுபடியும் மூட்டப்பட்டு விளங்குகிறான் என உரைப்பர். இவ்வளவு காரியங்களும் ஸவிதாவின் அஸ்தமயமாகிய கர்மத்தின்பின் நிகழ்கின்றனவென்பார் ஸாயணர்.

7. உன்றனு லந்தரத்தி லமைக்கப்பட் டோங்கு நீரை
நன்றுற விழைந்து காட்டி னுடியே மிருக மோங்கும்;
சென்றுபுள் வனத்தின் மேவும்; தேவனச் சவிதாவானை
பொன்றுற வவற்றை யாரு மீறியே புரிவ தின்றே:

(இ-ள்.) (ஸவிதாவே!) உன்னு லந்தரிட்சத்தி லமைக்கப்பட்டுப் பரந்த தண்ணீரை விரும்பிக்கொண்டு நிர்ஜலப்பிரதேசமாகிய அரணியத்தில் மிருகங்கள் பரந்துவிளங்கும். வனவிருட்சங்களில் பட்சிகளுக்கிட மமைந்துள்ளன. அந்தத்தேவனுகிய ஸவிதாவின் அவ்வாணைகளை எவரும் கடந்து நடப்பதில்லை—(எ-று.)

## மண்டலம் 2 சூக்தம் 38.

8. கூடிய வேகத்தோடும் விரைவுடன் வருண னென்றூழ்
தேடியே சாயுங்காலத் தனது நீருறையுள் சேர்வான்;
கூடரு செய்து மெல்லாப் புட்களும்; கூடுங் கோட்ட
நாடிமாச்; சவிதா விந்தா னல்லிடஞ் சன்மந் தோறும்.

(இ-ள்.) வருணன் கூடிய வேகத்தோடு சூரியாஸ்தமயமான வுடனே தனது தண்ணீராகிய கிரகத்துக்குள் விரைந்து சேர்வான். எல்லாப் பட்சிகளும் அக்காலத்தில் கூட்டிலடையும். மிருகங்களும் தத்தம் படுக்கையிடம் சேர்கின்றன. ஸவிதா வொவ்வொரு பிராணிக்கும் அதற்குத் தக்க இடம் அமைத்தான்—(எ-று.) ஜன்மம் என்றது ஈண்டு பிறப்புவகையாகிய பிராணிகளை யுணர்த்திற்று. 'நேடியே சாயுங்கால யுயிர்க்கெலா மாற்றி சேர்ப்பான்.' என இரண்டாமடியை மாற்றி 'வருணன் பிராணிகட்கெலாம் சிரமபரிகாரமாக ஒய்வை யளிப்பான்.' என்று ஸாயணர் பொருள் கூறுவர். வருணன் ராத்திரி தேவதை யென்பதுணர்க.

9. எவன் விரதத்தை வேந்தன், வருணன், மித்திர, னுருத்ரன்,
றவலறு மரியமாவுந் தவிளலர், தீய கன்மந்
தவியற்றுபவர் தாண்டார், சாருமச் சவிதாத் தேவை
யவமொடு நமத்தினோடு மழைப்பனுன் வாழ்வு தேர்ந்தே.

(இ-ள்.) எவனது விரதங்களை இந்திரனும், வருணனும், மித்திரனும், உருத்திரனும், அரியமாவும் கடக்கமாட்டார்களோ, எவனது விரதங்களைத் திய கர்மங்களைச் செய்யும் அசுரர்கள் கடந்துசெல்ல முடியாதோ அந்த ஸவிதாவாகிய தேவனை ஹவங்களோடும் நமத்தோடும், எனது க்ஷேமத்தைக் கருதிக் கூவி யழைப்பேன்—(எ-று.) நமம், அன்னம் வணக்கம் என்னும் இருபொருட்டு.அவம், ஹவம் என்பதன் சிதைவு.

10. பகத்தினைத் தியத்தை பற்ப லறிவினைப் பலக்கச் செய்வோ,
ரிகத்தவர் போற்று நிற்போன், றேவபத்தினிக ளேந்தல்,
சுகத்தெமைக் காக்க; வாமத்தோடு பசுச் செல்வந் தோய
வுகப்பொடு சவிதாத் தேவ னுள்ளன்பி னுறுக யாமே.

(இ-ள்.) பகம் அல்லது செல்வத்தையும், தியம் அல்லது மனத்தையும், பற்பல வித ஞானத்தையும் வளர்ப்பவர்களாகிய தேவர்களும், இவ்வுலகத்துள்ளாரர்களாற் புகழப்படும் நராசம்ஸனும், தேவ பத்தினிகளால் ஸேவிக்கப்படும் துவஷ்டாவும் ஆகிய இவர்கள் எங்களைச் சுகமாகக் காப்பாற்றுவர்களாகட்டும். நன்மையைத் தரும் செல்வமும், பசுக்களாகிய தனமும் எங்களைச் சேரும் வண்ணம், யாங்கள் ஸவிதாவாகிய தேவனுடைய உள்ளன்பிற் பொருந்தவேர்மாக—(எ-று.) பகம், செல்வம் அல்லது இன்பத்தின் பெயர்; தியம், மனம் அல்லது புத்திக்கும் பெயர்; வாமம், அழகு நன்மை செல்வம் என்னும் முப்பொருட்டு.

11. எம்பொருட் டுன்னலியப் பெற்றதா மெழிலார் செல்வங்
கம்மொடு பிதுவி யந்தரிட்சத்திற் கடுகித் தோன்றல்,

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8.

வம்சமொ டேத்துவோர்க்குச் சுகத்தினை மருவுவித்துச்
சம்ஸனை மிகவுமாற்றும் போற்றினேன்,ஸவிதா, வெற்கே,

(இ-ள்.) ஸவிதாவே! எங்க ளுபயோகத்துக்காக வுன்னாலளிக்கப் பட்டதும், பலரும் ஆசைப்படும் அழகுவாய்ந்ததுமான செல்வமானது, ஸ்தோத்திரஞ் செய்பவர்களுக்கு அவர்களுடைய (மித்திர) பந்துக்களையும் சேர்த்துச் சுகத்தைத்தந்து,புகழ் மொழிகளை மிகவும் கூறும் போற்றுளனாகிய எனக்காக வானம், பூமி, நீர்நிலையாகிய அந்தரிட்சம் என்னும் மூன்றிடங்களினின்றும் வரட்டும்—(எ-று.) சம்ஸனை, புகழ்.கம், வானம். போற்றினேனாகிய வெற்கெனக் கூட்டிப் பொருளுரைக்க.

வருக்கம் 3.

### 230 (39) மண்டலம் 2 அநுவாகம் 4 சூக்தம் 7.

8 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: அசுவினிகள்.

1. அதற்கென முழங் கிரண்டு கல்லெனவறைவீர்; காய்ப்புப்
பொதிந்துள தருவிற் சாருங் கழுகென, மகவான் பக்க
லெதிர்ந்துற,வுக்தமேத்து மன்றினின் மறையோ ரென்ன,
விதப்பெறப் பலரு நாட்டிற் கூவுறுந் தூத ரென்ன.

(இ-ள்.) (அசுவினிகளே!) (அசுரர்களிடத்திலிருந்து செல்வத்தைப் பறிக்கும்) அதற்காகச் சப்திக்கின்ற இரண்டு (ஸோமம் பிழியும்) கற்களைப் போலக் (காதுக்கினிமையாகத்) துதித்துப் பாடுவீர்களாக. (பழம்நிறைந்த) மரத்திற் கழுகிரண்டுவந்து தங்குவதுபோலவும், உக்தங்களைக் கூறிப்புகழும் யக்ஞ சபையில் பிராஹ்மணர்களிருவர் வருவதுபோலவும், நாட்டிற் பல ஜநங்களாலும் தங்கள் காரியார்த்தமாய் அழைக்கப்படும் (ராஜாவினது) தூதர்களிருவரைப்போலவும்,செல்வவானாகிய யஜமானனிடத்து நேர்முகமாக வருவீர்களாக—(எ-று.) மேனாட்டாசிரியர் க்ருத்ரம் என்னும் சொற்கு லோபிகள் எனப் பொருள்கூறி நிதிமந்தம் என்ற விசேஷணத்தை விருட்சத்தோடேற்றிச் செல்வத்தை புதைத்துவைத்திருந்த மரத்தடியில் இரண்டு லோபிகள் வருவதுபோலவும் எனப்பொருள்கூறுவர். உபமேயமாகிய அசுவினிகள் இருவராதலால் இச்சூக்தத்தில்வரும் உபமானங்களை யெல்லாம் இருமைவாசகமாகவேகொள்க.

2. தேருறுவீர ரென்னக் காலையிற் சேர்வீர், சாக
நேருற விணைந்து தேர நெருங்குவீர்,நாரி மாரி
னேருற வுடலைப் பூணுற் சோடிப்பீர், எய்துங் கன்மந்
தேருறு சதிபதியை மாந்தருட் சிறக்க வெல்வீர்.

## மண்டலம் 2 சூக்தம் 39.

(இ-ள்) (அசுவினிகளே!) தேரில்வரும் காரிய துரந்தரர்களான வீரர்களைப்போல அதிகாலையில் வருவீர்கள். இரண்டு ஆடுகளைப்போல ஜோடியாய் உத்தமமான அவி புனவுகளைத் தேர்வதற்காக வருவீர்கள். இரண்டு ஸ்திரீகளைப்போல உடலெல்லாம் ஆபரணங்களால் அலங்கரித்துக் கொள்ளுவீர்கள். மனிதர்களுக்குள் தங்களது கர்மங்களை நன்குணர்ந்தறியும் ஜாயாபதிகளை யொத்திருப்பீர்கள் (எ-று.) சேர்பவர்களும் அலங்கரிக்கப்படுபவர்களும், ஒத்திருப்பவர்களும், இணையாடுகளைப்போல வருபவர்களுமாகிய நீங்கள் உத்தமமான அவியைத்தேடிவருகிறீர்கள் என முடித்தலும் ஒன்று. சாகம், (Chhaga) ஆடு.

3 கொம்பிணை பென்ன முன்னர்க் கூடுவீர். குரமே பென்னப்
பற்பல மொழியின் வேகமுற விரைபடர்வீர், காலை
யிம்பரிற் கூடுஞ்சக்ர வாகத்தி னுறுவீர், மொய்ம்பீர்,
வெம்புறு பகைவதைப்பீ,ருறுக தேர்வாய்ந்தோன் வெல்ல.

(இ-ள்.) முன்னர் வரும் இரண்டு கொம்புகளைப்போலத் தேவர்களுக்கு முன்வந்து சேர்பவர்களும், குதிரைக் குளம்புபோலச் சப்தித்துக் கொண்டு இவ்விடத்து எங்களை நோக்கி வேகமாக வருபவர்களும், பலமுள்ளவர்களும், சத்ருக்களை யடக்குபவர்களுமான அசுவினிகளே! தேர் படைத்தவனைப்போல எங்களிடத்து வருவீர்களாக—(எ-று.) சக்கரவாகப் பட்சிகள் இரவில் ஒரு ஆற்றின் இருகரையிலும் தனித்திருக்குமாறு சாபம் பெற்றவையென்றும், பொழுது விடிந்ததும் அவையிரண்டும் ஒன்றுகூடிக்கொள்ளுமாறு விடப்படுமென்றும் மேனாட்டாசிரியர் கூறுவர். அவை இணைபிரியா அன்புக்குப் பேர்போந்த புட்களாம். குரம், (Khura.) குளம்பு.

4. கடத்துக கல மிரண்டி னெங்களைக், கடி நுகத்தின்
றிடத்துறு மச்சி னாரக் குடங்களின் வட்டைக் கட்டின்;
உடற்குறு தீங்கைபோட்டீர் சுநகங்க ளிரண்டின், விழா
தெடுத்துறுங் கட்க தண்டமென வெமைத்தாங்கிக் காக்க.

(இ-ள்.) (அசுவினிகளே!) இரண்டு கப்பல்களைப்போலவும் தேரினது இரு நுகங்களைப்போலவும், அச்சுக் கட்டைகளைப்போலவும் ஆரங்களைப் போலவும், குடங்களைப்போலவும், வட்டைகளினது கட்டுக்களைப்போலவும், எங்களைக்காத்துக் கடக்கமுடியாத இடங்களைக் கடந்துசெல்லுமாறு செய்வீர்களாக. இரண்டு சுவானங்களைப்போல எங்களது சரீரங்களுக்கு வரும் தீங்குகளை வாராதபடி யோட்டுவீர்களாக. சரீரம் கீழ்விழாதபடி காக்கும் இரண்டு கஷ்கதண்டங்களைப்போல எங்களைத்தாங்கிக் காப்பீர்களாக—(எ-று.) பன்மைகளையெல்லாம் இருமை வாசகங்களாகக் கொள்க.

5. வாயுவிற் சரையுறுதீர், நதி யிரண் டனைத்து செல்வீர்,
ஆயுங்கண்ணிரண்டினெம்முன்பார்வையோடணைவீர், மெய்யிற்
கேயும்பல் லுதவி யாற்று மிருகரம் பாதமென்னத்
தோய்விப்பீர் சுகத்தமத்தைத் தோய்க்கவுத்தயச்செல்வத்தை.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8.

(இ-ள்.) வாயுக்களிரண்டைப்போலக் கிழத்தன்மையுறாதவர்களும், ஒன்றோடொன்று இணைந்து செல்லும் இரண்டு ஆறுகளைப்போலக் கூடிச் செல்பவர்களும் நெறியை ஆராய்ந்துகொண்டு செல்லும் இரண்டு கண்களைப் போல எம்மை நோக்கிய பார்வையோடு வருபவர்களும், சரீரத்துக்கு வேண்டிய உதவிகளைச்செய்யும் இருகைகளையும் பாதங்களையும் போலவும் உத்தம ஸுகத்தையெங்களுக் கணைவிப்பவர்களுமான அசுவினிகளே! சிரேஷ்டமான செல்வத்தை யெங்களுக்குக் கூட்டுவிப்பீர்களாக—(எ-று.)

6. ஒட்டங்க ளென்னவாயா லொழுகு தீஞ்சொல் லுரைப்பீர்,
வாட்டமில் வகையா முப்பவூட்டு நற்றனங்கள் மானக்
கூட்டுவீ ருணவை,நாசியிரண்டெனத் தனுவைக்காப்பீர்,
நாட்டுவீ ருமையெமக்காச் செவியென நன்கு கேட்பீர்.

(இ-ள்.) இரண்டு உதடுகளைப்போல வாயினால் மதுநிறைந்த வார்த்தைகளைப் பேசுபவர்களே! யாங்கள் நன்றாய்ச் சீவிக்குமாறு எங்களுக்குப் பாலூட்டும்ஸ்தனங்களிரண்டைப்போலஎங்களுக்கு உணவைத்தருபவர்களே! இரண்டு நாசித்துவாரங்களைப்போல எங்களது சரீரத்தைக் காப்பவர்களே! இரண்டு செவிகளையும் போல நன்றாகக் காதுகொடுத்துக் கேட்பவர்களே! நீங்கள் எங்களுடையவர்களாகவே யிருப்பீர்களாக—(எ-று.)

7. கரமிரண் டென்னச் சத்தி யோங்குறக் கடி தினிவீர்,
நரமெமக் குரோதசியை ரஜ நவிக்குற நடத்தீர்;
தர முறவும்மைச் சாரத் தபிக்குமிக் கிதந் தம்மைக்
கருக்குறுத்துக, சாணைக்க ணவியத்தி, னசுவினீமிர.

(இ-ள்.) அசுவினிகளே! இரண்டு கைகளைப்போல எங்களுக்குப் பலம் விருத்தியடையும் வண்ணம் புரிவீர்களாக. (நரர்களாகிய) எங்கள் பொருட்டுப் பூமி வானங்கள் தமக்கிடையிலுள்ள ரஜோலோகமாகிய அந்தரிட்சத்தை நெருக்கி மழைபெய்விக்கும்படி அவற்றை நடத்துவீர்களாக. உம்மையடையும் ஆதரத்தோடிருக்கும் இந்த ஸ்தோத்திர கீதங்களைச்சாணையிற் கோடாலியைத் தீட்டுவதுபோலக் கூர்மைப் படுத்துவீர்களாக—(எ-று.)

8. இப்பிரமங்க ளும்மை வளர்ப்பவை, யசுவினீர்காள்,
நப்பெருந் தோமமாக நடைபெறக் கிருத்சமத்தோர்
செப்பினர்; அவற்றை யொப்பிச் சேருக வினாவி னீண்டே;
செப்புக பெரியபோற்றை மன்றில்யாம் வீர ரோடே.

(இ-ள்.) அசுவினிகளே! உங்களை விருத்தியடையச் செய்யும் இம்மந்திரங்களைப் பெருமைபெறும் ஸ்தோமமாகும் வண்ணம் கிருத்ஸமதர்கள் செய்தார்கள். அவற்றை யங்கீகரித்து விரைவில் நீங்க ளிங்கு வருவீர்களாக. யாங்கள் வீரர்களாகிய புத்திரர்களோடு யக்ஞக்கூட்டத்தில் உங்களுக்காகப் பெரிய ஸ்துதிகளைப் பேசுவோமாக—(எ-று.)

வருக்கம் 5.

## மண்டலம் 2 சூக்தம் 40.

## 231 (40.) மண்டலம் 2 அநுவாகம் 4 சூக்தம் 8.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: 1-5 ஸோமாபூஷர்கள், 6 ஸோமனும், பூஷனும், அதிதியும்.

ஸோமன் ஸோமலதைக்கு அதி தேவதை; பூஷன், பிராணிகளை வளர்க்கும் ஸூர்யாபிமானி தேவதை: அதிதி, அகண்டநீயாம் தேவ மாதரம் இயற்கையெல்லாம் ஒருருவாகக் கொண்டவள், தேவத்தாய்.

1. சோமபூடனர்காள் செல்வந் தோற்றுவிர் விண்ணைத்தோற்றி
வாம பூமியும் படைப்பீர், மலிவுறப் பிறந்த ஞான்றே
தாமுறு புவன மெல்லாந் தாங்குவீ,ரும்மைத் தேவர்
காமுறு மரிப்பி றன்மைக் காரண மாக்கினரே.

(இ-ள்.) ஸோம பூஷணர்களே! செல்வத்தைச் சிருஷ்டிப்பவர்களே! விண்ணைப் பிறப்பிப்பவர்களே! பிருதுவியையும் சிருஷ்டிப்பவர்களே! பிறந்தவுடனேயே யெல்லாச்சகத்தையும் பரிபாலிப்பவர்களே! உங்களைத் தேவர்கள் மரணமில்லாத் தன்மைக்குக் காரணபூதமாக (நாபியாக வென்பது வடமொழிப்பதம்) அமைத்தார்கள்—(எ-று.)

2. இவ்விரு தேவர் தோன்றத் தேவரெல்லாரு மின்பம்
வவ்வினர்; இன்பமீயாத் தமத்தினை மடித்தா ரின்னர்;
ஒவ்வுறக் கறவையாவின் மடியினிற் சமைந்தபாலைத்
துவ்வுற வமைத்தான் வேந்தன் சோமபூடனர்களோடே.

(இ-ள்.) இந்த ஸோம பூஷர்களாகிய இரண்டு தேவர்களும் பிறந்தவுடனே,எல்லாத் தேவரும் இன்பத்தை யடைந்தார்கள். இன்பத்தைத்தராத இருளை இச்சோமபூஷர்கள் நாசஞ் செய்தார்கள். இச்சோம பூஷர்களோடு சேர்ந்து இந்திரன் கறவைப்பசுவின் மடியிற் பக்குவப்பட்ட பாலை (உணவாகவாகும்படி) வைத்தான்—(எ-று.)

3. சோம பூடனர்கா, ளிச்சை தோய்க்குவிர், ரஜமளந்து,
நேமிக ளேழுபூண்டே யெவற்றையுந் தூண்டுறுது,
பூமியின் றிக்கெலாஞ் சென், றுளத்தினாற் பூண்டுகொண்டு,
தாம மைந்தோடு சாருஞ் சையத்தை யீண்டு சேர்க்கல்,

(இ-ள்.) ஸோம பூஷர்களே! இச்சைகளை யளிக்கும் காளைகளே! பூமிக்கும் வானத்துக்கு மடையிலுள்ள ரஜோ லோகத்தை யளப்பதும், ஸப்த ரிதுக்களாகிய சக்கரங்களைப் பூண்டதும், எல்லாவற்றையும் பிரேரியாததும், உலகத்தின் எல்லாத்திசைகளுக்கும் செல்வதும்,மனோமாத்திரத்தினாற் பூண்டுகொள்வதும், ஐந்தருதுக்களாகிய கடிவாளக் கயிறுகளுள்ளதுமான தேரை இங்கு எம்மிடத்துக் கொண்டுவந்து சேர்ப்பீர்களாக—(எ-று.) அதிக

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8.

மாஸ முண்மையாற் பதின்மூன்றும் மாதத்தை ஸப்தமரிதுவென்று தைத்திரீய ஸம்ஹிதை 6-5-3 கூறும் என்பார் ஸாயணர். அவ்வகையே ஐந்து ரிதுக்களாகிய கடிவாளங்களென்ற விடத்து, ஹேமந்த சிசிர ரிதுக்களை ஒன்று சேர்த்துக்கூறும் ஐதரேய பிராஹ்மணம் 1. 1. என்பார் அவரே. எல்லாவற்றையும் பிரேரியாதது என்றது, உயர்ந்தபொருள்களைமட்டும் ஆட்டிநடத்துமேயன்றித் தாழ்ந்தபொருள்களைத்தொடாது என்பது தோற்றவென்பார் மேனாட்டாசிரியர் (Griffith.)

4. ஒருவன் விண்முகட்டி னில்லமோங்குறவிடுத்தான்; மற்றோன்
றரணியி னந்தரத்தின் றலையினி லமைத்தான்; இன்னோர்,
பெருகுறப் பலரும் வேண்டும் பெருந்தனம், பற்பல் கீர்த்தி
மருவிய, தெங்க ளின்ப வேதுவா மதை விடுக்க.

(இ-ள்.) இவர்களுள் ஒருவனாகிய பூஷன் வானத்துச்சியிற் சூரியனிடத்துத் தனது ஸதனத்தை யமைத்துக்கொண்டான். மற்றொருவனாகிய ஸோமம் பூமியில் ஸோமலதையிலும், அந்தரத்தின் றலையிற் சந்திரனிடத்தும் தனது நிலையை யேற்படுத்திக்கொண்டான். பலரும் விரும்புகின்றதும், பற்பல வகையான கீர்த்தி வாய்ந்ததும், எங்களுடைய வின்பத்துக்குக் காரணமானதுமான (பசுமுதலியவை பொருந்திய) பெரிய தனத்தை இவர்களிருவரும் எங்களுக்குத் தரட்டும்—(எ-று.)

5. ஒருவனிங் கெல்லாப் பூதக் குழுவையும் படைத்தான்; மற்றை
யொருவனிங்கெல்லாம் பார்த்த வண்ணமா யேகுகின்றான்;
கரும மென்னதுவைக் காக்க, சோம பூடணர்காள்; உம்மோ
டருகுறுஞ் செரு வெவற்றும் வெற்றியை யடைக யாமே.

(இ-ள்.) ஸோம பூஷர்களில் ஒருவனான ஸோமன் எல்லாப் புவனங்களையும் சிருஷ்டித்தான். மற்றவனான பூஷன் ஆதித்திய ரூபமாய் விசுவத்தையும் பார்த்தவண்ணமே செல்லுகிறான். ஸோம பூஷர்களே! எனது கர்மத்தைக்(புத்தியை என்பார் மேனாட்டாசிரியர், தியம் என்பது மூலபதமாகவின்) காப்பீர்களாக. உமது துணையினால் யாங்கள்நேரும் யுத்தங்களிலெல்லாம் ஜயிப்போமாக.—(எ-று.) 'ஸோமயாகத்தினால் மழையும், மழையினால் எல்லாப் புவனங்களும் விருத்தி யடைவதால் ஸோமன் பூதக்குழுவினைப்படைத்தானென்றார்' என்பார் மேனாட்டாசிரியர். அடுத்த செய்யுளில் அத் தியம்என்றசொல்லையே உபயோகித்திருப்பது காண்க.

9. எவற்றுக்கு மின்ப மூட்டும் பூடனெந் தியத்தை யூக்கல்;
உவப்புறச் சோமன் செல்வ நாயக னுதவல் செல்வம்;
சவட்டறியாத தேவி யதிதி தன்னளியிற் காத்தல்;
நிவப்புற மிகுத் துரைப்போ மன்றினல் வீர ரோடே.

(இ-ள்.) எல்லாவற்றிற்கும் இன்பத்தை யளிக்கும் பூஷன் எங்களுடைய கர்மத்தை அல்லது புத்தியைத் தூண்டி விடட்டும். செல்வபதியாகிய ஸோமன் எங்களுக்குச் செல்வத்தை யுவந்தளிக்கட்டும். ஒருவராலும் வாட்ட

முடியாத அதிதியாகிய தேவி எங்களைக் காப்பாற்றட்டும். யாங்களும் யக்ஞ ஸபையில் நல்லவீரர்களாகிய புத்திரர்களோடு அவர்களது ஸ்துதிகளை அதிக மாக எடுத்துக்கூறுவோம்—(எ-று.)

வருக்கம் 6.

## 232 (41) மண்டலம் 2 அநுவாகம் 4 சூக்தம் 9.

### 11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: 1-15 காயத்திரி, 16, 17 அநுஷ்டுப், 18 பிருஹதி, 19-21 காயத்திரி; தேவதை: 1, 2 வாயு, 3 இந்திர வாயுக்கள், 5-6 மித்திராவருணர்கள், 7-9 அசுவினிகள், 10-12 இந்திரன். 13-15 விசுவதேவர்கள், 16-18 ஸரஸ்வதி, 19-21 தியாவாப் பிருதிவிகள் (அல்லது ஹவிர்த்தானமென்னும் ஒருதேவதையெனவும் சொல்லுவர்.) வாயுமுதல் ஸரஸ்வதி இறுவாயுள்ள எழுதேவதைகளுக்கும், ப்ரஉக தேவதை யென்று பெயர். மண்டலம் 1 சூக்தம் 2ம் 3ம்சேர்ந்து ப்ரஉக சஸ்த்ரமாக வாயு, வாயுக்கள், மித்திரா வருணர்கள், அசுவினிகள், இந்திரன், விசுவதேவர்கள், ஸரஸ்வதி என்னும் எழுவரையும் முறையே துதிப்பதைக் காண்க. ப்ரஉக நாம ஹோது: ப்ராதஸ்ஸவநீயம் த்விதீயம் சஸ்த்ரம்.' என்பது ஷட்குரு சிஷ்யருரை, அதாவது,காலையிற் செய்யும் ஸவநத்தில் இரண்டாவதாக ஹோதா உபயோகிக்கும் சஸ்திரம் அல்லது உக்தத் (அதாவது ரிக்வேத மந்திரத்துக்கு) துக்கு ப்ரஉகம் என்று பெயர்.

(வேறு.)

1. வாயு வாயிரந் தேர்பரி பூண்டவை
எயு முன்னவை யாவையி னோடிவண்
டோயுஞ் சோமத் துளியினை மாந்தவே
நீயு மேயுக நின்பல் விபூதியின்.

(இ-ள்.) வாயுவே! உன்னுடைய பரிபூண்ட தேர்க ளாயிரத்தினோடும் இங்குள்ள ஸோமத்தைக் குடிப்பான் உனது எல்லா ஐசுரியவங்களையுங் கொண்டு வருவாயாக—(எ-று.) விபூதியென்ற சொல் ஸாயணருரைநோக்கிச்சேர்த்தது. பரிபூண்டவையென் றரேனும் வடமொழியிலுள்ள நியுக்வான் என்னும் பதம் ஒவ்வொரு தேர்க்கும் நூறு (பல) குதிரைகள் கட்டியுள்ளதைக் குறிப்பிக்கும்.

2. பரிகள் பல்ல பரித்திடும் வாயுவே,
வருக விங்கு; வளம்பெறு சுக்கிரத்
திருவுறுங் கள் ளுனக்கெனச் சேர்த்ததே;
மருவுவாய் நீ யபிடவ னில்லினே.

(இ-ள்.) பல குதிரைகளாலிழுக்கப்படும் வாயுவே! இங்கு வருவாயாக; இவ்வளப்பம் பொருந்தியவெண்மையா ரழகுநிறைந்த ஸோமம் உனக்காகக் கொண்வேரப்பெற்றனது.ஸோமம் பிழியும் யஜமானனது கிரகத்திற்குப் போவது உன் வழக்கம்—(எ-று.)

## அஷ்டகம் 2 அத்தியாயம். 8

௩. நரர்க ளிந்திர வாயு விருவர்காள்,
வருக வின்று பரிகள் வலித்திட;
உருவின் வெள்ளிய சோம முவப்பொடும்
பருகல் பாலைக் கலந்த பொழுதினே.

(இ-ள்.) நேதாக்களாகிய இந்திர வாயுக்களே! பரிக்கூட்டங்கள் உம்மை யிழுத்துவர நீங்களிருவரும் வருவீர்களாக. வெண்மை நிறத்தோடு கூடிய சோமத்தைப் பாலொடு கலந்தபொழுது அதனைக்குடிப்பீர்களாக-(எ-று.) நரர், நேதாக்கள்.

4. சோம மின்னதை மித்ரா, வருணர்காள்,
வாமமாகப் பிழிந்தன ருங்கட்கென்,
ரேம நன்னெறி யோங்கு விப்பீ, ரென
தேமமா ரவந் தன்னையே கேட்டிடல்,

(இ-ள்.) மித்திரா வருணர்களே! இந்த ஸோமம் உங்கட்காகவே பிழியப்பெற்றுள்ளது. ரிதத்தை (ஸத்தியத்தை அல்லதுயக்ஞநெறியை யென்க) யோங்குவிப்பவர்களே! என்னுடைய (காவல் பொருந்திய) அழைப்புக்கே காது கொடுப்பீர்களாக—(எ-று.) அவம்,ஹவம் என்னும் வடசொல்லின் சிதைவு,அழைத்தல் என்பது பொருள்.

5. மன்ன ராகு மிருவ,ரெவற்றிற்குஞ்
துன்னுமா றிடுக்கண்களைத் தோய்க்கலார்,
உன்னு மாயிரந் தூணொ டுறுதியின்
மன்னு முத்தம மன்ற மருவவே.

(இ-ள்.) எவற்றிற்கும் துன்பத்தைத்தாத ராஜாக்களாகிய மித்திராவருணர்களிருவரும், ஆயிரந் தூணோடு உறுதியாயிருக்கும் உத்தமமான ஸதஸில் (யக்ஞ கிரஹத்தில்) வந்துசேரட்டும்—(எ-று.)

6. நெய்யி னூட்ட நிலைக்கு நன்மன்னர்க
ளெய்யி லாதித்தியர்க ளிருவர்கள்
செய்ய தானஞ் சிறந்திடு நாயகர்
மையிலாதவன் மாட்டுப் பணிசெய்வார்,

(இ-ள்.) நெய்யாவுதியினால் நிலைபெறு மன்னர்களும், அதிதி புத்திரர்களிருவர்களும், தானபதிகளுமான மித்திராவருணர்கள் குடிலமற்று நேர்மையாயொழுகும் யஜமானனிடத்து வந்து அவனது காரியங்களைச் செய்வார்கள்—(எ-று.) மை, குற்றம், ஈண்டு வஞ்சவொழுக்கத்தைக் குறித்து நின்றது.

7. ஆவினோடு மசுவத்தி னோடுநாத்
தோமுறுத வருத்திர ரச்சுவ

## மண்டலம் 2 சூக்தம் 41.

மேவுவீர் நெறியூடு நரரையூட்
டோவுறுததை நாடி யுறுவிரே.

(இ-ள்.) நாஸத்தியர்களே! (பொய்மை பேசாதவர்களே யென்றபடி) உருத்திரர்களே! அசுவினிகளே! பசுக்களோடும் குதிரைகளோடும் நரர்களாகிய தேவர்களை யூட்டுவதைக் கிறுத்தாத ஸோமத்தை யெண்ணி நெறியூடு வருவீர்களாக(-எ-று.) அசுவினிகள்என்னும் சொல்லுக்கு அசுவவந்தௌ என்பதுபொருளானதுபற்றி அச்சுவமேவுவீர் என்றார் செய்யுளில். மேனுட்டாசிரியர் பின்னிரண்டடிக்குத் 'தனதுவீரர்களைக் காப்பாற்றும் யக்ஞ கிரகத்தை நோக்கி வருவீர்களாக' என்று பொருளுரைப்பர். ஆவினேடு தோமுறுத என்னும் எதுகையைக் கடையாசெதுகைக் குதாரணங்கூறுவர் யாப்பருங்கலஉரை யாசிரியர்.

8. செல்வநற் கொடைச் சீரியர்காள், பிறர்
சொல்ல யோக்கிய மற்ற மரணத்த
ரொல்லு மண்மையிற் றூரத்திலும் மூளோர்
புல்லலார் கொளும் புன்மை யுறுதததே.

(இ-ள்.) தனத்தைத்தரும் வள்ளல்களாகிய அசுவினிகளிருவர்களே! புகழ்வதற்கு யோக்கிய மில்லாதவர்களும், மரண தர்மம் வாய்ந்த மர்த்தியர்களுமான பகைவர்களாகிய பிறர், தூரத்திலுள்ளவர்களாயினும் சமீபத்திலுள்ளவர்களாயினும் அவர்களால் அபகரிக்கமுடியாத செல்வம்—(எ-று.) அதனைத் தாங்கிக்கொண்டு வந்து தருவீர்களாக என ஒரு வாக்கியம் கூட்டி முடிக்க.

9. அறிவின் வன்மை யடைந்த வசுவினிர்!
பரிவிற் பற்பல் லுருவொடும் பாரித்துத்
திருவெலா முறச்செய்யுந் தனத்தினைத்
தருக நீங்க ளெமக்கெனத் தாங்கியே.

(இ-ள்.) ஞான மிக்க அசுவினிகளே! நானு ரூபத்தோடு கூடியதும் சகலவித சுகத்தையும் இடம்பாடுகளையும் தருவதுமான செல்வத்தை (பசுத்தனத்தை யென்பார் ஸாயணர்)யெங்களுக்குக் கொண்டுவந்து தருவீர்களாக—(எ-று.)

10. மிக்க யாரையும் வெற்றிகொ ளிந்திரன்,
றக்க பீதியின் காரணஞ் சாடுவான்
எக்கணும் பொருள் கண்டெனு மன்னவன்,
பொக்க மற்ற திறத்துப் பொலிதலின்.

(இ-ள்.) எல்லாரையும் அடக்கி வெற்றிக்கொள்ளுபவனும், யாவற்றையும் பரிசீலிக்கும் திவ்விய திருஷ்டியுள்ளவனுமான இந்திரன் உண்மையிற் சலனமற்றவனாதலின், பயகாரணமான வேதனையும் நீக்குவான்—(எ-று.)

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8.

11. இந்திரனு மெமைச் சுகத் தேய்ப்பன்;பி
னெந்தம் பாபங்க ளெங்களை யன்முரு;
அந்த மார்ந்திடு மங்கல நன்மைக
ளெந்த மக்குள பின்னரு மிங்ஙனே.

(இ-ள்.) பரம ஐசுவரியவானுகிய இந்திரனும் எங்களைச் சுகத்தில் அமர்த்துவான். பின்னர் எங்களைப் பாபங்கள் அணுகமாட்டா. எதிர்கலத்து எங்களுக்கு இவ்வுலகத்தில் கல்யாணகரமான நன்மைகளுண்டாகும்—(எ-று.)

12. எக்கணும் பொருள் கண்டெனு மிந்திர,
ஞெக்கலார் வயின் வெற்றி யுறுபவன்
றிக்கெலா வற்றி னின்று'மபயத்தைத்
தக்கவா றெமக் கிங்ஙன் றயக்கவே.

(இ-ள்.) எல்லாவிடத்திலுமுள்ள விஷயங்களையும் நன்குய்ப்பார்த்து யோசித்தறிபவனும், பகைவர்களை யடக்கி வெற்றிகொள்பவனுமான இந்திரன், எல்லாத் திக்குக்களினின்றும் எங்களுக்குப் பயமின்மையை அல்லது பத்திரதையைக்கொண்டுவந்து சேர்க்கட்டும்—(எ-று.)

13. விசுவதேவரே மன்னுக விவ்விடங்;
கசிவி னேடுமென் னிந்த வவத்தினை
யுசிதமாகச் செவிக் கொள்க; வோங்குமிவ்
விசத நற்குசை மீது விளங்குக.

(இ-ள்.) விசுவதேவர்களே! இங்கு வருவீர்களாக. என்னுடைய இந்த ஹவங்களை (அழைப்புக்களை)க் கேட்பீர்களாக. இந்தத் தர்ப்பைமீது அமர்வீர்களாக—(எ-று.) அவம், ஹவம், ஆஹ்வாநம், போற்றினழைத்தல் என்றபடி.

14. தாகமோடு விரும்பப் படுந் தகைத்
தோகை யூட்டுவ துங்களுக் காகவே
வாகுறச் சுநகோத்திரம் வாய்ந்தது
வேக மார்ந்த மதுவினை மாந்துக.

(இ-ள்.) (விசுவதேவர்களே!) எல்லாராலும் ஆசைப்படத்தக்கதும் மதகாரியும், உங்களுக்காகச் (சுநஹோத்திர வம்சத்துக் கிருத்ஸமதர்களாகிய எங்களால்) சுந ஹோத்திரங்களென்னும் பாத்திரவிசேஷங்களில் ஊற்றப்பெற்றுள்ளதும், தீவிரமிக்கதும், மதுர ரஸம் வாய்ந்ததுமான ஸோமத்தைக் குடிப்பீர்களாக—(எ-று.) சுநஹோத்ரேஷு என்னும் பதத்தின் பொருளை மண். 2 சூக். 18 செய், 6இன் உரையிற்காண்க.

15. முன்ன ரிந்திர னுற்றவர் மொய் குழுத்
துன்னு தேவர்மருத்துவர் பூடனைச்

## மண்டலம் 2 சூக்தம் 41.

.சான்ன வன்மையிற் றேய்ப்பீ ரெலீர்களு
மென்னவங்க ளெலாஞ் செவிக் கொள்கவே.

(இ-ள்.) இந்திரன் முன்னடக்கப் பின்செல்பவர்களும், தேவர்களும், கூட்டமாகச்செல்பவர்களும், பூஷனைச் சுவர்ன தாதாவாகச் செய்பவர்களுமாகிய மருத்துக்களே! நீங்களெல்லாரும் என்னுடைய ஹவங்களை (அழைப்புக்களை)க் காதுகொடுத்துக் கேட்பீர்களாக—(எ-று.) அவம் மேல் 12ம் செய்யுளுரை பார்க்க. இந்திரஜ்யேஷ்டா: பூஷராதய: என்பவற்றிற்கு முறையே இந்திரனுக்கு ஜேஷ்டத்துவம் தருபவர்கள், பூஷனுக்குத் தானகர்த்திருத்துவம் கொடுப்பவர்கள் என்பது பொருள். பின்பதத்துக்கு எவர்களுக்குள் பூஷன் முதன்மையான தானஞ் செய்பவனாக வுள்ளானோ அவர்கள் என்றும் பொருளுண்டு என்பார்மேனாட்டாசிரியர்.

(வேறு.)

16. தள்ளே மார்களி லுத்தமி, நதிக்களுந் தமியே,
கொள் சரச்சுதி தேவிமார் தமிற் சிறந்தவளே,
எள்ளுங் கீர்த்தி யற்றவர்களி னுள்ளன, மம்மே,
தள்ளரும் புகழாளராத் தயக்குக வெமையே.

(இ-ள்.) உத்தமத் தாயே, உத்தமநதியே! ஸரஸ்வதியே, உத்தமதேவியே, யாங்கள் கீர்த்தியற்றவர்களைப்போல விருக்கிறோம். அம்மையே யெங்களுக்குக் கீர்த்தியைத் தருவாயாக—(எ-று.) ஸரஸ்வதி, சரச்சுதி யென மருவியது.

17. தேவத்தன்மையா ருன்னிடத் தெவ்வுயிர்ப் பொருளு
மேவியுள்ளன; விழைவொடு சௌந கோத்திரரின்
பாவுசோமத்தின் மதங்கொளல்; சரச்சுதி, பிரசை,
தேவி யெங்களுக் களித்திடாய் சிறப்பொடு முவந்தே.

(இ-ள்.) ஸரஸ்வதியே! தெய்வத்தன்மை நிறைந்த உன்னிடத்து உயிர்க்காதாரமான வெல்லாப் பொருள்களும் இடங்கொண்டிருக்கின்றன. சுநஹோத்திர வம்சத்தவர்களாகிய கிருத்ஸமதர்களின் ஸோமத்தைக் குடித்துத் திருப்தி யடைவாயாக. தேவீ! எங்களுக்குப் புத்திரர்களை யளிப்பாயாக—(எ-று.)

(வேறு.)

18. இந்தப்பிரமஞ் சரச்சுதியே பெண்ணி யன்பிற்கிருற்சமதர்
சந்தத் தேவரிடையுன்னைச் சார விடுத்த வவைதம்மை
யந்த மாக வேற்றிடுக, வறவி னிடையே வதிபவளே,
சந்தும்வலிமையாரணத்தைநாடிப்படைத்தபெருமையுளோய்.

(இ-ள்.) தண்ணீரில் வசிப்பவளே! வலிமைமிகுந்த அன்னப்பொ

ருள்களைப் படைத்தவளே! ஸரஸ்வதியே! தேவர்களுக்கிடையே உன்னையே சாரும்படி கிருத்ஸமதர் எண்ணி ஆவுதிபண்ணின இப்பிரஹ்மங்களை (உணவுகளை அல்லது மந்திரங்களை யென்க) அழகாக வேற்றுக்கொள்வாயாக —(எ-று.)

(வேறு.)

19. எக்கியத்தைச் சுகத்தி னியைத்திடுந்
தக்கவர்க ளிருவருஞ் செல்லுக;
ஒக்க வுங்க ளிருவரைத் தேர்ந்தன
மக்கினியை யவிவகிப் போனையே.

(இ-ள்.) யக்ஞத்தை சுகமுற நடத்தும் தியாவாப் பிருதிவிகளாகிய விருவரும் (உத்தரவேதியின் மேற்குப்பக்கத்திற் செல்லட்டும்.) உங்களிரு வரையும் தேர்ந்தோம். அவிசுமப்பவனுகிய அக்கினியையும் தேர்ந்தெடுக்கிறோம்—(எ-று.) ஈண்டுஸோமமாகிய அவியுணவுகளைத் தாங்கிச் செல்லுஞ் சகடங்களைக்குறித்தது முதலடியென்றும் அச்சகடங்கள் தியாவாப் பிருதுவிகளைக் குறிக்கு மென்றும் கூறுவர் ஸாயணர். முன்னிலைப் படர்க்கை மாற்று. அக்கினியையும் இந்தரிக்கில் அழைப்பதால் அக்கினியும் ஒரு தேவதையாகும் என்பார் ஸாயணர். ஹுட்விக்கென்பவர், 'அக்நிஞ்ச ஹவ்யவாஹநம்' என்றிருப்பதால் இச்செய்யுள் அக்கினியையும், அவியளிக்கும் யஜமானனையுமே குறித்ததென்பர்.

20. மெய்ப்பலனை யளிப்பது வானிடை
யுய்ப்பதிந்த மகத்தினை யுப்பக
லெய்ப்பில் விண்ண ரிடை யிப் பிதுவியும்
நப்பெரும் விணு நாடி யளிக்கவே.

(இ-ள்.) உண்மையான ஸ்வர்க்க பலனை யளிப்பதும், அவியுணவுகளை வானிடத்திற் சஞ்சரிக்கின்ற தேவரிடத்துக் கொண்டு சேர்ப்பதுமான இந்த யக்ஞத்தை இன்றைத்தினத்தில் தியாவாப்பிருதுவிகள் தேவர்களிடத்துத் தருவார்களாக—(எ-று.)

21. வஞ்சமில் லும் மடியின், மகத்தினிற்
கெஞ்ச லின்றி யுரிமை யியைந்தவர்,
செஞ்செவே யிவண், டேவ ரமருக
விஞ்சு சோமங் குடிக்க விழைந்தின் ற.

(இ-ள்.) தியாவாப்பிருதுவிகளே! வஞ்சனையில்லாத உம்மிருவர்களுடைய மடியிலும், யக்ஞார்கர்களாகிய தேவர்கள் இன்று ஸோமபானம் செய்வதற்காக வந்து இவ்விடத்து அமரட்டும்—(எ-று.)

வருக்கம் 10.

## 233. (42) மண்டலம் 2 அநுவாகம் 4 சூக்தம் 10.

3இருக்குக்கள் கொண்டது.

## மண்டலம் 2 சூக்தம் 42.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை:கபிஞ்சலப் பட்சிரூபமான இந்திரன்.

இந்திரனுக்கு மறுபடியும் ஸ்துதிகேட்கவேண்டுமென்று ஆசையுண்டாகவே கபிஞ்சலப் பட்சிரூபமாக வலதுபக்கத்திற் சென்று நின்றான். அப்போது இச்சூக்தரிஷி யவனைக்கண்டு இதனாலும் பின்வரும் சூக்தத்தாலும் புகழ்ந்து பாடினனென்று பிருஹத்தேவதை என்னும் நூலிற் சொல்லப்படுகிறது. சகுனம் பார்க்கும்போது பட்சிகளினது நிக்குரல்கேட்கின் இவ்விரண்டு சூக்தங்களையும் ஜபித்துச் சென்றால் கார்யாநுகூலமாகுமென்று ஆச்வலாயன கிருஹ்ய ஸூத்திரம் கூறும்.

(வேறு.)

1. சனித்திடும் பொருளைத் தோற்றி யடிக்கடி குரல்கொடுத்தே
தொனித்திடத் தூண்டு,மீகா னவ்வியைத் தூண்டலென்ன;
நனிச்சுக கரனைச்சார்க, சகுனமே; நாடி யுன்னைப்
பனிப்பினி லெவையு மேய்க்கல் பகருமெத்திக்கி னின்றும்.

(இ-ள்.) (இக்கபிஞ்சலப்பட்சி) தனது குரலாற்றோன்றும் சகுனப் பொருள்களைத் தோற்றிக்கொண்டு (அல்லது தனது ஜாதி இன்னதென்று தோற்றிக்கொண்டு என்பார் மேனாட்டாசிரியர்.) மீகாமன் தனது கப்பலைத் தூண்டுவதுபோலத் தன் குரல் முன்னோக்கிச் செல்லுமாறு கூவும். பட்சியே! நீ மிகவும் நன்மையைத் தருபவனைப் பொருந்துவாயாக. உன்னை எந்தத் திக்கினின்றும் எதுவும் வருத்தாதிருக்கட்டும்—(எ-று.) கபிஞ்சலம் என்றது ஸாயணருரை. நவ்வி.கப்பல்.

2. சேனமு முன்னைக் கொல்லா தொழிக; நற்சிறைக்கருட
னானமுன் றனக்குறுத்தா தொழிக;அத்திரமோச்சப்பொன்
றூணுமுன்றனை யண்மற்க; பிதிர்த்திசைச் சுமங்கலன்னாய்
மேனிலைச் சுபம் பலுக்கி யடிக்கடி நன்மை கூறல்.

(இ-ள்.) (கபிஞ்சலமே!) சேனம் (கழுகு அல்லது வல்லூறு) உன்னைக் கொல்லாதிருக்கட்டும். ஸுபர்ணனெனசருடன் உன்னை யிம்சிக்காதிருக்கட்டும். அம்புகளை யேவும் வேடன் உன்னை யணுகாமலிருக்கட்டும் நீ பிதிர்களது திக்காகிய தெற்குப்பக்கத்திலிருந்து கொண்டு ஸுமங்கலனாய்ச் சுபத்தைத் தோற்றி அடிக்கடி சோபன சகுனங்களைச் சூசிப்பித்துக் கூறுவாயாக—(எ-று.) பலுக்கி, பேசி, பலக்குதல் பேசுதல், திசைச்சொல்

3. சுமங்கலந் தோற்றுவோனாயில்லத்தின் றெற்கமர்ந்து
சுமங்கலச் சகுனமே நீ நன்மைகோய் குரல் கொடுப்பாய்

அமங்கலப் பாவியோடு கள்வனு மெமை யலேக்கல்;
சுமங்கலவீர ரோடியாம் பெருந்துதி மன்றிற் சொல்க.

(இ-ள்.) நல்ல சகுனந்தரும் கபிஞ்சலப் பட்சியே! வீட்டில் தட்சிணபாகத்திலமர்ந்து மங்கலகாரனய் நன்மைநிறைந்த குரலாற் கரைவாயாக. பாவியும், திருடனும் எங்களை இம்சிக்காமலிருக்கட்டும். யாங்கள் நன்மை பொருந்திய வீரர்களோடயக்ஞஸபையிற்பெரிய துதிகளைக் கூறுவோமாக.—(எ-று.)

வருக்கம் 11.

## 234. (43) மண்டலம் 2 அநுவாகம் 4. சூக்தம். 11,

3 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கிருத்ஸமதன்; வடமொழிச்சந்தம்: 1, 3 ஜகதி, 2 அதிசக்வரி (அஷ்டியென்றும் கூறுவர்.); தேவதை: கபிஞ்சலரூபமான இந்திரன்.

கபிஞ்சலம் என்பது Francoline Partridge (சகுந்திகை) என்பர் மேனாட்டாசிரியர்.

(வேறு.)

1. போற்றுளர் போற்சகுந்திப் பட்சிகளும்
வலமிருந்து பொருந்து முண்டி
தோற்றுநின் றறைந்திடுக பொழுது தொறும்;
இருவகையாத் தோற்றும் வாக்கை
வீற்றுகத் திருட்டுப்பின் காயத்ரிச்
சந்தமதின் விதங்க ளோரும்
போற்றுளர் சாமகரிற் செவிக்கினிமை
யுறுமாறு புகலு மாலோ.

(இ-ள்.) ஸ்தோதாக்களைப்போலச் சகுந்திகைகளாகிய கபிஞ்சலப்பட்சிகள் தட்சிணபாரிசத்திலிருந்துகொண்டு உணவுப்பொருள்களின் வரவினைச் சூசிப்பித்துக்கொண்டு காலந்தோறும் கரையட்டும். (கரைகின்றன என்பார் மேனாட்டாசிரியர்.) திருஷ்டுப், காயத்திரி என்னும் சந்தஸ்களின் பேதங்களை யுணர்ந்து போற்றுகின்ற ஸாமகனைப்போல கானம், சுரௌதம் என்னும் இரண்டுவித ஸ்வரங்களையும் காதுக்கினிமைதோன்றும் விதமாக அப்பட்சி கானஞ் செய்யும்—(எ-று.)

(வேறு.)

2. சகுனமே நீசாம மறைபாடு முத்காத
சதிர்சமாப் பாடு கின்றாய்
தகுதியிற் சவனத்து மறையின்மக
னெனச் சுருதிச் சாற்று கின்றாய்;
உகுதுளிப்பரி வடவை சென்றேளி முழக்கலிற்
சகுன மே நன்மை யெங்கட்

## மண்டலம் 2 சூக்தம் 43.

டகவுறக் கூவுவாய்; சாற்ற வெத்திசையு நீ
சகுனமே புண்ணியத்தை.

(இ-ள்.) கபிஞ்சலப்பட்சியே! ஸாமகானத்தைச்செய்யும் உத்காதாவைப்போல நீ பாடுகின்றாய். ஸவனத்திற் பிராஹ்மணச் சாம்ஸியைப்போலச் சுருதிகளை யுரைக்கின்றாய். சகுனமே! தாதுவையுநிர்க்கும் குதிரைபெட்டைக்குதிரையினருகிற்சென்று கனைப்பதுபோல எங்களருகில்வந்துஎப்பக்கத்திலும் நன்மையெங்கட்குறும்படி கூவுவாயாக, எல்லாப்பக்கத்திலும் புண்ணியகாரண நன்மை யெங்களுக்கு நேரட்டுமென்று சாற்றுவாயாக—(எ-று.) சகுனம், பட்சி. பிரஹ்ம புத்திரன், பிராஹ்மணச் சாம்ஸி யென்றும், அவன் சஸ்திரமாகிய உக்த மந்திரங்களை உரைப்பவனென்றும் மேனாட்டாசிரியர் கூறுவர்.

(வேறு.)

3. பாடுகையிற், கபிஞ்சலமே, நன்மையெமக்
குறுகென நீ பாடுவாயால்;
பீடுபெற மவுனமா யமர்ந்திருக்கும்
போதுமனப் பெருமை யோடிராஞ்
சேடுபெற வுள்ளுக;மேற் பறக்குங்காற்
பாடுகையிற் கிர்சால் யாழிற்
கேடுறவே யிசைக்கின்றாய்; வீரரொடு
பெருந்துதியா மியம்பல் மன்றின்.

(இ-ள்.) கபிஞ்சலமென்னுஞ் சகுனமே! நீ பாடும்போது எங்களுக்கு நன்மையுற வேண்டுமென்று பாடுவாயாக. பாடாதிருக்கும்போதும் எமக்கு நன்மையுற வெண்ணுவாயாக. நீ மேற் பறக்கும்போது பாடுவது கர்க்கரியென்னும் யாழிற் பாடுவதுபோலிருக்கிறது. நாங்கள் யக்ஞ ஸபையில் நல்ல புத்திரர்களோடு பெரிய ஸ்துதிகளைக் கூறுவோமாக. —(எ-று.)

வருக்கம். 12.

இரண்டாவது மண்டலம் இதனோடு முடிந்தது. இம்மண்டல அட்டவணை பின்வருமாறு:

| அநுவாகம். | சூக்தம். | ரிக்குக்கள். | தமிழ்ச் செய்யுட்கள். |
|---|---|---|---|
| 1 | 11 | 110 | 110 |
| 2 | 11 | 105 | 105 |
| 3 | 10 | 105 | 105 |
| 4 | 11 | 109 | 109 |

ஆக அநுவாகம் 4க்குச் சூக்தம் 43, ரிக் 429 தமிழ்ச்செய்யுள் 429. இரண்டு மண்டலங்களுஞ் சேர்ந்து அநுவாகம் 28, சூக்தம் 234, ரிக். 441, தமிழ்ச்செய்யுள் 2411.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8.

இவ்விரண்டாவது மண்டலத்தின் சூக்தங்களைக் கண்ட ரிஷிகளின் சரித்திரம் வருமாறு:

1. கிருத்ஸமதன் —இவ்விருடியின் பெயராலேயே இம்மண்டலம் வழங்கும். இவன் பாரத்வாஜ கோத்திரத்துச் சுநஹோத்திரனுக முதல் சன்மத்திலிருந்தவன். ஸஜநாஸ இந்த்ர: என்னும் 12ம் சூக்தத்தைக்கண்டவன். இவனே கிருத்ஸமதனென்று இந்திரனுற் பெயரிடப்பட்டவன். பிருகு வம்சத்திற் சௌகனென்னும் பெயரோடு விளங்கியவன். சதாநீகனுக்கு விஷ்ணு தர்மங்களை யுபதேசித்தவன். ரிக்வேத அநுக்கிரமணியாகக் கல்பஸூத்திரங்களை யெழுதியவன். இம்மண்டலம் 1—3, 8—25, 30—43 இச்சூக்தங்களைக்கண்டவன்.

2. ஸோமாஹுதி:— 4—7 சூக்தங்களைக்கண்டவன். பிருகு கோத்திரத்தான்.

3. கூர்மன்:— இவன் கிருத்ஸமதனது புத்திரன். 26—29 சூக்தங்களைக்கண்டவன். இச்சூக்தங்களையும் கிருத்ஸமதனே கண்டதாகவும் சொல்வதுண்டு.

ஆங்கிலத்துக் கோபநகர ஸம்ஸ்கிருத ஆசிரியராகிய மாக்டாநல் என்பவர் காட்டும் சந்தஸநுக்கிரமணி வருமாறு:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | காயத்திரி | (24) | ரிக்குக்கள் | 37. | |
| 2 | அநுஷ்டுப் | (32) | ரிக்குக்கள் | 14. | இவற்றுள் விராட் ஸ்தானமும், விராட்ரூபமுமடங்கும். |
| 3 | பிரஹதி | (36) | ரிக்கு | 1. | |
| 4 | திருஷ்டுப் | (44) | ரிக்குக்கள் | 230. | |
| 5 | ஜகதி | (48) | ரிக்குக்கள் | 142. | |
| 6 | அதிசக்வரி | (60) | ரிக்குக்கள் | 4. | |
| 7 | அஷ்டி | (64) | ரிக்குக்கள் | 1. | |
| | | | | 429. | |

## இரண்டாவது மண்டலம் முற்றிற்று.

---

## மூன்றாவது மண்டலம்.

மூன்றாவது மண்டலத்துக்கு விசுவாமித்திர மண்டலம் என்றுபெயர். இம்மண்டலத்தில் 5 அநுவாகமும் 62 சூக்தங்களு முண்டென்று இவ்வஷ்டகத் தொடக்கத்திற் சொல்லப்பட்டது. முன்போலவே இம்மண்டலத்துப் பெரும்பான்மையான சூக்தங்களைக் கண்டவன் விசுவாமித்திரன் என்க. அதனுல் இம்மண்டலத்துக்கு அவன் பெயரிடப்பட்டது.

## மண்டலம் 3 சூக்தம் 1.

## 235 (1) மண்டலம் 3 அநுவாகம் 1 சூக்தம் 1.

23 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: மண்டல திருஷ்டாவாகிய விசுவாமித்திரன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: அக்கினி.

ஒவ்வொரு மண்டலத்துக்கும் முதல் சூக்தத்துக்கு அக்கினி தேவதையாக வருவது முறைமை யென்றறிக.

இஷீரத ஸூதனான குசிகன் இந்திரஸமான புத்திரன் வேண்டுமென்று தபஸ்செய்ய இந்திரனே குசிகபுத்திரனாகிய காதியாகப் பிறந்தானென்றும், அக்காதியின் புத்திரனே விசுவாமித்திரனென்றும், அவன் தனது தபோபலத்தினால் ரிஷியாகிஇம்மண்டலத்தைக் கண்டானென்றும் வேதார்த்த தீபிகை கூறும்.

(வேறு.)

1. அங்கியுன் னெக்கியத்தை யாற்றுவான் சோமந் தாங்குந்
துங்கனு பென்னை யமைத்தாய்; வலிமையோ னென்னைவிரும்பாய்;
அங்கமாய்த் தேவர் முன்பு சுடர்கின்றாய்; கல்லைப்பூட்டிப்
பொங்குவேன் போற்றி, னங்கி, மெய்புரந் தருளுவாயே.

(இ-ள்.) அக்கினியே! உனது எக்கியத்தைப் புரியுமாறு என்னைச் சோமத்தைத் தாங்கி யாவுதிசெய்பவனாக வமைத்தாய். தபோபலம் பொருந்திய என்னை விரும்புவாயாக. தேவர்களுக்கு நீ நன்றாய் ஒளிவிட்டெரிகின்றாய். நான்ஸோமம்பிழியும் கற்களைப்பூட்டி ஸ்தோத்திரங்களைக் கூறி மகிழ்வேன். அக்கினியே எனது சரீரத்தைக் காப்பாற்றி யருள்வாயாக-(எ-று.)

2. சிந்திசா லெக்கியத்தை யாற்றினஞ் சிறக்கக்; கீத
மோத்ததை வளர்க்கல்; எம்மோ ரோம்புக வெரியைத்தங்கள்
துத்தியஞ் சமித்திவற்றால்; கவிகளின் ஞானம் விண்ணின்
றுத்தன; புகழத்தக்கோ னேங்க நாடுவர் துதியும்.

(இ-ள்.) அநுகூலம் வாய்ந்த யக்ஞத்தை யாங்கள் நன்றாகச் செய்தோம். எங்களுடைய கீதங்கள் அதனை விருத்திக்குக் கொண்டுவரட்டும். எங்களது ஜனங்கள் அக்கினியைத் தங்கள் நமங்களினாலும் சமித்துக்களினாலும் வளர்க்கட்டும். மேதாவிகளாகிய ஸ்தோதாக்களின் பலவகைப்பட்ட ஞானங்களும் விண்ணிற் றேவர்களிடமிருந்தே வந்தவையாம். ஸ்தோத்திரஞ் செய்யத்தக்கவனான அக்கினி முன்னேறுங்குமாறு அவர்கள் ஸ்தோத்திரஞ் செய்யவு மிச்சிப்பார்கள்—(எ-று) மேனுட்டாசிரியர், ப்ராஞ்சம் கிழக்கெனப் பொருள்கொண்டு,யக்ஞத்தைக்கிழக்குப்பக்கமாகத் தேவர்களது முகமாகத் திருப்பினோம் என்பர். அவ்வகையே க்ருத்ஸாயசித் தவஸே காதும நஸ: என்ற வாக்கியத்தை 'வேகமாய்ச்செல்பவனுக்கும் பலவானுக்கும் கூட அவர்கள் அபிவிருத்தியை நாவோர்கள்.' என்று மொழிபெயர்ப்பர், வேக

மாய்ச் செல்பவன், ஹோதாவென்றும், யாகநடத்துவிக்கும் ஸூரியென்றும் லுட்விக் சொல்லுவதாகச் சொல்லுவர். பாட்டில் ஸாயனருரையைப் பின்பற்றியுள்ளார்.

3 மேதிரன், பூத தட்சன், பிறந்ததும் விண்புவிக்குத்
தீதறுபந்து வாவான், சேர்த்தனன் சுகத்தைத்; தேவ,
ரோதுறு மங்கி காணற் கினியவன் றன்னை, யோடு
மோதையார் நீரினுள்ளே கருமத்தை யுனிக் கண்டாரே.

(இ-ள்.) புத்திசாலியும், பரிசுத்தமான வலிமையோடு கூடியவனும் பிறந்ததும் பூமி வானங்களுக்குப் பந்துவானவனுமாகிய அக்கினி (தேவர்களுக்கும் மனிதர்களுக்கும்) சுகத்தை யுண்டுபண்ணினன். காட்சிக்கினியவனை அவ்வக்கினியைத்தேவர்கள் தங்கள் யக்ஞ கார்யங்களுக்காக ஓடுகின்ற ஆறுகளின் தண்ணீருக்குள் கண்டடைந்தார்கள்—(எ-று.) ஸாயணர் ஸ்வஸ்ருணும் என்பதற்கு ஸரணசீலாநாம் நதீநாம் எனப் பொருள்கூறி அச்சொல்லை அப்ஸு என்னும் சொல்லோடு சேர்த்து அழகாகப் பொருள்கூறியிருக்க மேனாட்டாசிரியர் ஸ்வஸ்ருணும் என்பதற்கு ஸஹோதரிகள் எனப் பொருள் கொள்வர். அதனை அபஸி என்னும் பதத்தோடு கூட்டி அச்சொற்குக் கருமங்களுக்கு என ஸாயணர் பொருள் கூறுவதை மதியாது அவ்வார்த்தையையே உபஸியெனமாற்றவேண்டுமெனப் பேசுவர் லுட்விக்கென்பவர்.

4. மகத்துவத்தோடும் வாரி, வெண்மையிற் பிறந்து செங்கேழ்
மகத்துவத் தணைவோ னல்ல நிதியனை வளர்த்த; தோற்ற
மிகத்துறச் சிசுவை நோக்கி வடவை யெய்துதவி னேய்ந்து
தகப்புரிந் தோம்பினர்க ளங்கியின் றநுவைத் தேவர்.

(இ-ள்.) அபரிமிதமான வெள்ளத்தோடு ஓடுகின்ற ஆறுகள், பிறக்கும்போது வெண்மையாக விருந்து பெரிதானதும் செம்மை நிறத்தையுடையவனும் நல்ல நிதியோடு கூடியவனுமான அக்கினியை வளரச்செய்தன. அவ்வக்கினி பிறந்தவுடன் தேவர்கள், குட்டியை நோக்கியோடும் தாய்க் குதிரைகளைப்போல வோடி, அவ்வக்கினியின்சரீரம் ஓங்குமாறு அதனை வளர்த்தார்கள்—(எ-று.) வாரி, ஆறுகள். வடவை, பெட்டைக்குதிரை. ஸப்தயஹ்வீ: என்பதற்கு எழு நதிகளென்பர் மேனாட்டாசிரியர். ஆனால்ஸப்த, ஸபர்ணசீலா: என்பது ஸாயணருரை.

5. வெண்மையா ருறுப்போ டந்தரிட்சத்தின் விரிந்து நின்றே
யுண்மையார் கிருதுவோனைப் புகழ்தரு தூய்தாற் சோதித்
தொன்மையாருடையைப்போர்த்துக்கன்மத்தையுற்றோருக்குத்
திண்மையார் பெரியவுண்டி யூன்ற சீர்த்திருவுஞ் சேர்ப்பான்.

(இ-ள்.) வெண்மையான அங்கங்களோடு அந்தரிட்சத்திற் பரந்து நின்று, யக்ஞகர்மங்களைச் செய்யும் யஜமானனைப் புகழத் தக்க தூய்மை வாய்ந்த தேசுக்களாற் பரிசுத்தப்படுத்தி, ஒளிபொருந்திய உடையை மேலே போர்த்துக், கன்மங்களைச் செய்வோருக்கு அளவுகடந்த உணவுப்பொருள்க

ளையும், பரிபூரணமான செல்வத்தையும் அக்கினி கூட்டுகிறான்—(எ-று.) மேனாட்டாசிரியர் ஆயுர் அபாம் எனச் சேர்த்து தண்ணீர்களின் ஜீவனென்பர்.

வருக்கம். 13.

6. உடையிலா ரந்தரத்தின் மகத்து வருடையு முற்றோர்
கடையிலா துறுவோர் யாரு மழிக்கலார் தபமுட் சென்றான்;
உடனுறை வோர்கள், சப்த வாணிகள், யுவதியார், பின்,
நிடனுற வென்று முள்ளோர் சேர்த்தன ரொருகர்ப்பத்தை.

(இ-ள்.) தங்களுக்கென ஒரு உடையுமில்லாதவர்களும், எனினும் நீரே உடையாகத்தரித்தவர்களும், அந்தரிட்சத்திற்பெருமைவாய்ந்துள்ளவர்களும், இக்கணற்றவர்களும், ஒருவராலு மழிக்கமுடியாதவர்களுமான ஏழு நதிகளுந்தன்னும் அக்கினி சென்றான். பின்னர், அந்தரிட்சமாகிய ஒரேயிடத்திற் குடியிருப்பவர்களும், மங்கைப்பருவத்து ஸ்திரீகளும், நித்தியமாயுள்ளவர்களுமானஏழு சப்திக்கும் நதிகளும் இவ்வக்கினியாகிய ஒரு கர்ப்பத்தைத் தமக்குட் டாங்கின —(எ-று.) வாணிகள் என்றது அந்நதிகள் சப்தித்துச் செல்வதாவெனக்க. ஸப்தவாணி: என்பதற்கு வேகமாய் ஒலித்துச் செல்லும் நதிகள் எனப்பொருள் கூறினும் தகும்.

7. செய்யுறு மிடத்துக்கூடி நிமிர்ந்தவை, விவித ரூபத்
தெய்பற விரிந்த, திந்த ணொழுகுற வியைந்துநின்ற;
மெய்யுறு மடிபா ராக்க ளெனவிவை யாகப் பக்கல்
வய்பமும் வானுங் காட்சிக் கினியவன் ரூபா ரானர்.

(இ-ள்.) வளமிகுந்த தண்ணீருறு மந்தரிட்சத்திற் கூடிக் குவைப் பவள்ளவையும், நானா ரூபத்தோடு இளைப்பற வெல்லாவிடத்தும் விரிந்து நின்றவையுமான அக்கினியினது கிரணங்கள், (மேகக் குவைகளென்பார் மேனாட்டாசிரியர்) மதுரமான தண்ணீரொழுகுமாறு அங்கேதோன்றின. மடிநிறைந்தன்ன பசுக்களைப்போல் இவ்வக்கினியும் ஆபங்களும்தோன்றி நிற்க, அவற்றினருகே தியாவாப்பிருதிவிகளிருவரும் பார்ப்பதற்கினிமையான வக்கினியின் தாய்மாராக விருந்தார்கள்—(எ-று.) மேனாட்டாசிரியர்.' அவனது குவைகள், (மேகக்குவைக ளென்றபடி) செய்யூற்றுகிமதுரமான மழைத்தாரைகள் விழுதற்குக் காரணமாகிய விடத்தே பலவிதபேதத்தோடும் செறிக்கிடக்கின்றன. மடிநிறைந்த பாற்பசுக்களும் (காளமுகில்களெனக்க.) தர்சநியனான அக்கினியினிரு தாய்மாரான தியாவாப் பிருதிவிகளும் அங்கே நின்றார்கள்.' என்று மொழிபெயர்ப்பர்.

8. வலிமையின் மேறான்று, னன் கேவளர்க்கப்பெற்றென் றுமோங்குந்
தலைமையார் வெள்ளொளி யிற் சார்ந்தன கிரண மோங்கி;
வலிமையார் காளைபோற்றால் வளர்ந்த வவ்விடத்து நெய்ப்புத்
துளிதரு மதுரந் தாரை தோய்ந்துமி ழொழுகு மாலோ.

(இ-ள்.) பலத்தின் புத்திரனே! நன்றாக வளர்க்கப்பெற்று எக்காலத மழியாத சிறந்த வெண்மைச் சோதியோடு உனது கிரணங்களாகியத்

உடல் பெருத்து வளர்ந்து விளங்கினாய். வலிமைபொருந்திய காளையாகிய அவ்வக்கினிஎங்கே யஜமானர்களது ஸ்தோத்திரங்களால் விருத்தியடைகிறானோ அங்கே வளமிகுந்த தீர்தண்ணீரோடு கூடிய மழைத்தாரைகள் ஒழுகுகின்றன—(எ-று.) அக்கினிஅரணி கடைந்து தோன்றுவதால் வலிமையின் புதல்வனென்பது மரபு. வேள்வி நடக்குமிடத்து மழை பெய்கிறது என்பது பொருள்.

9. தந்தையின் மடியு மன்னான் பிறப்பினின் றுணர்ந்தான்; தாரை
நந்துறு மொலியுங் கூட நடைபெற விடுத்தான்; நன்மை
பொருந்துறு விக்குந் தோழி மார்கள் வானிடத்து வல்லோர்
தந்தொடக் கொடுமறைவிற் சார,வங் குளரு மெய்தார்.

(இ-ள்.) அவ்வக்கினி பிறந்ததுமே தந்தையாகிய அந்தரிட்சத்தின் நீர் நிறைந்த பிரதேசத்தை யறிந்து கொண்டான். அங்குள்ள மழைத்தாரைகளும், ஒளிகளும் நடை பெறுமாறு விடுத்தான். நன்மைகளைச் செய்யும் தோழிளாகிய வாயுக்களோடும், வானிடத்து (ஈண்டு அந்தரத் தென்க) மகத்துவம் பெற்றவர்களாகிய மழை நீர்களோடும் மறைவாகச் செல்லும்போது அவ்வக்கினியை அம்மறை விடங்களி விருப்பவர்களும் அடையமுடியாது —(எ-று.) அந்தரத்தை யக்கினியின் பிதாவெனக் கூறும் முறை வேதத்தி லில்லாததால் பிதாவென்னும் சொல் துவட்டாவைக் குறிக்கவேண்டு மெனக் கூறி இம்மறையைத் துவட்ட பரமாக உரை கூறுவர் மேனாட்டாசிரியர். பிது: என்பதற்குப் பாலக னென்பது பொருள். அச்சொல் மேகபாலகனென்னும் பொருளில் அந்தரத்தைக் குறித்து நின்றது. ஆகவே மேனாட்டாசிரியர் ஹிட்விக் கென்பவர் சூசிப்பிக்கிற உரையை மேற்கொண்டெழுதிய குறிப்புரை தகுதியின்றாம். ஒருமொழிக்கு அம்மொழி பேசுவோரது வாக்கே பிரமாண மாவதன்றி ஏனைய மொழியாளர்களது சொல் பிரமாணமாகாதென்பதை ஹிட்விக் என்பவர் மறந்தவர், வேதப் பதங்களையே திருத்த முல்லவர். அவர் மொழி அத்துணை கொள்ளத் தக்கதன்று.

10. தந்தையின் கருவுஞ் சிட்டி கர்த்தனி னுலகு மோம்பி
நந்கினான்; தனியனாய்ப் பல் மார்பினை யுரிஞ்சினானால்;
பந்துவானார் சபன்னிமார் நரர்க்கினிமை நோய்ப்போர்;
முந்துற வென்றுங் காக்க மொழியு மவ் விருவர் தம்மை.

(இ-ள்.) அவ்வக்கினி பிதாவாகிய அந்தரத்தின் கருப்பமாகிய மழையையும். ஸர்வலோக சிருஷ்டி கர்த்தாவாகிய மறைபவனின் (பிரமனின்) உலகத்தையும் பாதுகாத்தான். ஒருவனாகவே யிருந்து பலவித மாகப் பயன்றரும் ஒஷதிகளையும் பட்சிக்கிறான். ஸூர்யனைத் தனக்கு ஸமான நாயகனாக உள்ள ஸபத்நிமார்களும், மனிதர்களுக்கு ஹிதம் செய்வோரு மான தியாவாப் பிருதுவிகள் அவனுக்கு நல்ல பந்துவானார்கள். அவன் அப்பூமி வானங்களாகிய இருவரையும் எப்பொழுதும் காக்கட்டும்—(எ-று.) மேற் செய்யுளைப் பின்பற்றி மேனாட்டாசிரியர் அவன் என்பது பிதாவாகிய துவஷ்டாவைக் குறிக்கு மென்பார். அது கொள்ளத் தக்கதன்று ஸபத்நீ, இருமைவாசகம், சபன்னிமா, ரென்றார் செய்யுளில்.

## மண்டலம் 3 சூக்தம் 1.

11. கட்டினி லடங்கா னந்த மகத்துவன் வளர்ந்தான், பல்ல
மட்டறுக் கீர்த்தி வாய்ந்த வாபங்கள் வளர்த்த நன்கே;
ஒட்டிய பகினிமார்க ளோட்டத்திற் சிறந்தோர்க் கேது
வட்ட நல்லறல் ரிதத்தி னமைவிலிற் சயனித்தானே.

(இ-ள்.) அந்த மகத்துவனாகிய அக்கினி கட்டுக் கடங்கானாய் விஸ்தீரணமாக வந்தரிட்சத்தில் வளர்ந்தான். பல கீர்த்திவாய்ந்த ஆபங்கள் (தண்ணீர்கள்) அவனை நன்றாக வளர்த்தன. ஸஹோதர ஸ்தானத்திலுள்ளவைகளும் ஓட்டத்திற் சிறந்தவைகளுமான நதிகளுக்கு ஆதார பூதமான ஆபங்களில், அவ்வக்கினி ரிதஸ்தானததில் (மழை தோற்ற மந்தரத்தில் என்பார் ஸாயணர்) தாந்தனாய்ச் சயனித்தான்—(எ-று.) ரிதஸ்தானம், ஒழுங்கு நிறைந்தஸ்தலம், அல்லது ஒழுக்கின் மடியென்பார் மேனாட்டாசிரியர். அவரே தமூநா: என்பதற்குத் தவத்தினா லுண்டாகுங் கஷ்டங்களை சகிக்கும் ஆற்றலுள்ளவனாய் அல்லது தாந்தனாய் என்னாது இல்லின் நண்பனாய் எனப்பொருள் கூறுவர்.

12. படைப்பவ, னீரின்கர்ப்பம், பகர்நரோத்தமன், மகான், தீ,
இடுக்குறான், பெருந்தன் சேனை யெய்துபோ ரதனிற்கொண்டு
நடத்துவோன், கட்சிக்கின்பன், சுயம்பிர காசத்தோ, னெய்
படுத்த பல்லவி யளிப்பேற் கறலைமேற் றேற்றினானே.

(இ-ள்.) எல்லா உலகங்களையும் பிறப்பிப்பவனும், தண்ணீரின் கர்ப்பஸ்தான மாகவுள்ளவனும், நேதாக்களிலுத்தமனும், மஹானும், ஒருவராலும் தன்புறுத்த முடியாதவனும், யுத்தத்திற்றனது பெரிய சேனையை நாடத்திச் செல்பவனும், எல்லாரும் பார்ப்பதற் கழகு வாய்ந்தவனும், தன்னொளியினாற் பிரகாசிப்பவனுமாகிய வக்கினி, அவிப்பொருளைத் தரும் யஜமானனுக்காகத் தண்ணீரை மேற் றேற்றினான்—(எ-று.) இவ்விருக்குக்கு மேனாட்டாசிரியர் பொருள் வேறு.

13. நற்றிரு சார்ந்த கட்டை, பார்ப்பதற் கினியனைப், பல்
குற்ற வோடதிக்க ணீரிற் கருவினை, விரூபத்தோனைப்
பெற்றது; பிறந்ததும் மொய்ம் புற்ற துத்தியனைத் தேவர்
சுற்றவுஞ் சூழ்ந்து தங்கள் மனத்தொடு சேவித்தாரே.

(இ-ள்.) தர்சநியனும், ஒஷதிகளுக்குள்ளும் தண்ணீருக்குள்ளுங் கர்ப்பமாக நின்றவனும், பலவித வுருவோடு கூடியவனுமான அக்கினியை நல்ல பாக்கியத்தோடு கூடிய அரணிக் கட்டை பெற்றது. பிறந்தவுடனே யேபலம் பெறுபவனும், ஸ்துத்தியனுமான அவனைத் தேவர்களும் நன்றாகச சூழ்ந்து மனமார்ந்த ஸ்தோத்திரங்களாற் சேவித்தார்கள்—(எ-று.)

14. இடமக லகாதந் தன்னி லமுதத்தை யொழுக்குகின்ற
தடமுறு வெண்கதிர்கள் பெருமையிற் றடித்தை யேய்ப்ப
தடையறக் குகையிலென்னத் தன்சதனத்தி லோங்கிப்
புடைதொறுஞ் சுபப்பிரபை பொருந்தெரி சார்ந்து நிற்கும்,

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8.

(இ-ள்.) விசாலமாய்க் கரையற்ற சமுத்திரமாகிய அந்தரிட்சத்தில் அமிர்தமாகிய மழைத்தாரைகளை யொழுக்குவனவும், பரந்து வெண்சுட ரேய்ந்தனவும், பெருமை வாய்ந்தனவும், மின்னலைப் போன்றவையுமான கதிர்கள், குகையில் மறைவாக வளர்வது போலத் தனது அந்தரிட்சத்தில் விருத்தியடைந்த சுயம்பிரபையோடு வீசும் அக்கினியை யடைந்து நிற்கும் —(எ-று.)புடைதொறும் என்பது எதுகை நோக்கிச் சேர்த்தது.

15. அவியொடும் யஜமானன் யான் போற்றினேன்; சுமதி யாசை
தவவுள னென்று முன்றன் சகித்துவம் விழைந்தேன்; தேவ
ரவரொடும் போற்று மெம்மை யருளொடுங் காத்து நிற்க;
பவன மோங்குற வமைக்குந் தேசினு லெமைப் பாலிக்க.

(இ-ள்.) யஜமானனுகிய யான் அவியுணவுகளோடு உன்னை வணங்குகிறேன்.எக்காலத்தும் உனது நல்ல மதியை யடையும் ஆசை மிகவுமுள்ளவனுகிய நான் உனது தோழமையை யாசித்தேன். தேவர்களோடு நீ ஸ்தோதாக்களாகிய எங்களைக் காப்பாற்றுவாயாக. கிரஹத்தை நன்மைப்படுத்துகிற உனது தேஜஸ்களோடு எங்களை இரட்சிப்பாயாக—(எ-று.)

வருக்கம் 15.

16. அங்கியே, நன்மையாக நடத்துவோ, யுனைப்பின் பற்றித்
தங்கு மெத்தனமுந் தாங்குஞ் சதுரர்பா மவியளிப்போர்
துங்கமார் வீரியத்தாற் புகழினைத்தோ யுன்றுப்பா
லங்கமெல்லாம் வதைக்குந் தேவரை யடக்குவோமே.

(இ-ள்.) அக்கினியே! நன்முக வெவற்றினையும் நடத்துபவனே! உன்னைப் பின் பற்றினவர்களும், எல்லாச் செல்வங்களையும் தாங்குகின்றவர்களும், அவியளிப்பவர்களுமாகிய யாம், நல்ல வீரியத்தினுலும் (வீரியம் பொருந்திய புத்திரர்களாலும் எனவும் கொள்க.) உனது கீர்த்தி வாய்ந்த உணவுப் பொருள்களினுலும் யுத்தத்தில் எங்களது சரீரமுழுவதும் உபத்திரவப் படுத்தும் தெய்வமில்லாத பகைவர்களை யடக்குவோமாக.

17. உளமகிழ்ந் தங்கி தேவ கேதுவா யுற்முய்; எல்லா
வளமிகுகவியு மோர்ந்து பொறையொடு வயங்கி மாந்த
ரிலமெலா மோங்கா நின்முய்; தேரினை யூர்ந்து தேவ
ருளமிகக்களிக்குஞ்செய்கை யுஞற்றியன்னவர்பின்செல்வாய்.

(இ-ள்.) அக்கினியே! உள்ள மகிழ்ச்சி கொண்டு தேவர்களை நினைப்பூட்டும் கொடியாகவானுய். எல்லா வளப்பம் பொருந்திய ஸ்தோத்திரங்களையும் (அல்லது கன்மங்களையு மென்பார் ஸாயணர்) அறிந்தவனுய், பொறுமை வாய்ந்த மனத்தனுய், மர்த்தியர்களுடைய வீடுகடோறும் நிவசிக்கிருய். தேரிற் சென்று தேவர்களுக்கிதமான காரியங்களைச் செய்து அவர்களுக்குப் பின் செல்லுகிருய்—(எ-று.)

## மண்டலம் 3 சூக்தம் 1.

18. மரணமற்றவ னொளியின் விளங்குவோன் மகஞ்சாதித்து
மரணமுற்றவ ரிலத்தின் மருவினுன்; காவ்ய மெல்லாந்
தாமுற வுணர்ந்தோன், நெய்யாற் றயங்கிய வுறுப்பினேடும்
பரவுறு மங்கி நன்கே பாவொளி விரிக்கின் ருனே.

(இ-ள்.) அமிர்தத் தன்மை வாய்ந்தவனும், ஒளியொடு பிரகாசிப்பவனுமான வக்கினி யக்ஞகார்யங்களை நடத்திக்கொண்டு மர்த்தியர்களது கிரகத்தில் தங்கினுன். எல்லா ஸ்தோத்திர கர்மங்களையும் அறிந்தவனும் நெய் விளங்கு முறுப்போடு கூடியவனும், விஸ்தாரமாகப் பரந்துள்ளவனுமான அக்கினி நன்ருக வொளி வீசுகிருன்—(எ-று.) ராஜா என்னும் பதத்திற்குராஜமாந:என்று ஸாயனர் உரைகூறுவதால் ஒளியின் விளங்குவோன் என்ருர் செய்யுளில்.

19. மகத்துவ வேக மார்ந்து மங்கல நட்பு மிக்க
மகத்துவத் துணைகளோடு மருவுக வெங்கண்; தீங்கி
லுகப்புறக் காப்ப தியாரு முவப்புறுஞ் சிர்மிகுத்து
மிகப்பெருகுற்ற தெம்பா னன்மொழித்தனத்தைச் சேர்க்க.

(இ-ள்.) மகானே! எல்லாவிடத்தும் வேகமாகச்செல்லும் இச்சை வாய்ந்த, மங்கலகாரியங்களைச் செய்பவையும், ஸ்நேஹ பாவத்தோடு கூடியவையும், மிக்க மகத்துவம் வாய்ந்தவையுமான உதவிகளோடு எம்மாட்டு வருவாயாக. கேடு நேராமற் காப்பதும், எல்லாராலும் பெற விரும்பப்படும் சீர்த்தியுற்றதும், மிகவும் பாஹுன்யமாகப் பரந்ததும், நல்ல வார்த்தைகளோடு கூடியதுமான செல்வத்தை யெங்களிடத்துச் சேர்ப்பாயாக-(எ-று.)

20. பழைமையா ரங்கியே, யிப்போற்றுக்கள், பழைமை வாய்ந்த,
தழுவு நூதனத்த தம்மைச் சாற்றி னேனுக்கே; தோற்ற
முழுமையுமுணர்ந்தோன்சன்மந்தோறுமிங்கமைக்கப் பெற்ருேன்
பழகுறும் வண்மையோற்குப் பரியவிச் சவன மேய்ந்த.

(இ-ள்.) புராதனமாயுள்ள அக்கினியே! பழைமைவாய்ந்தவையும், நவீனமானவையுமான இப்போற்றுக்களை உனக்காகச் சாற்றினேன், ஜாதவேதஸனும் பிறப்புக்கடோறு மமைக்கப்பெற்றவனும், வள்ளன்மையோடு கூடியவனுமான அக்கினிக்கு இப்பெரிய ஸவனங்களமைக்கப்பெற்றன— (எ-று.) போற்றுக்கள் என்பதற்கு வடமொழி மூலத்தில் ஜநிம என்றுள்ளது. அச்சொற்கு ஸாயணர் ஜன்மாநி, கர்மாணி, ஸ்தோத்ராணிவா என்று பொருளுரைப்பர், ஜாதவேதஸன், தோற்ற முழுமையு முணர்ந்தோன், என்ருர் செய்யுளில்; மண். 1 சூ. 44 செய். 1 பார்க்க. ஜந்மந் என்பதற்கு மனிதரது பிறப்புக்கடோறு மென்பார் ஸாயணர். ஒவ்வொரு பிறப்பிலும் தேவர்களோடு மனிதரைச் சேர்க்கும் புரோஹிதன் அக்கினியே யென்பார் மேனுட்டாசிரியர்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8.

21, சன்மங்க டொறு மமைக்கப் பெற்றவன் சாதவேதன்
கன்மத்தி னென்றும் விச்வாமித்திரர் மூட்ட நின்றான்;
கன்மத்து வணங்கத்தக்கோ னன்மையன் றனைக்கருதி
நன்மனத் தருளும்வண்ண நன்மதியோர் யாமேத்தல்.

(இ-ள்.) மக்களது பிறப்புக்கடோறும் அமைக்கப்பெற்றவனும் ஜா தவேதஸனுமான அக்கினி, விசுவாமித்திரர்களால் (பன்மை மரியாதைப் பன்மையென்பார் ஸாயணர்) மூட்டப்பட்டு ஒளிர்கிறான். யக்ஞ கர்மத்தில் வணங்கத்தக்கவனும், நன்மைகளைத் தருபவனுமான அக்கினியைக் கருதி அவன் எங்களுக்கு நன்மனத்தோடருளும் வண்ணம் நன்மதியோர்களாகிய யாங்கள் பிரார்த்திப்போமாக—(எ-று.)

22. வலிமையோய்,சற்கன்மத்தோய்,மருவுறுமகிழ்ச்சியோய்,நீ
பொலியுமிவ்வெம்மகத்தைத்தேவர்பாற்பொருத்தல்;ஓதா,
மலிவுறு மனத்திரளைக் கூட்டுக வெமக்கிங், கங்கீ,
தலைமைசார் பசுச்செல்வத்தைத் சார்த்துக பரிந்தெமக்கே.

(இ-ள்.) வலிமை பொருந்தியவனே! சற்கன்மத்தோடு கூடியவனே! உள்ளமகிழ்ச்சி வாய்ந்தவனே!(அக்கினியேயென்றபடி ) எமது இந்த யக்ஞத்தைத் தேவர்களிடத்துச் சேர்ப்பாயாக. ஹோதாவே! எங்களுக்கு ஏராளமான உணவுப்பொருள்களைத் தருவாயாக. அக்கினியே! உத்தமமான பசுக்கள் நிறைந்த செல்வத்தையெங்களுக்களிப்பாயாக—(எ-று.) ரராண: என்பதற்கு மருவுறு மகிழ்ச்சி யோய் என்னாது மருவொலி யென்று முள்ளோய் என்றும் பொருள் கூறலாம்.

23. அங்கியே, பலகன்மத்தள், பசுவினை யளிப்பாள்,பூமி
யென்குறு மிளையைப் போற்றுேற் கிங்கிடா யென்றுமோங்க;
பொங்குறு தனயர்பேரரெங்கட்குப் பொருந்தத் தோன்ற,
அங்கியே, யுனது நன்மை யருண்மதி யெம்மைச் சார்க,

(இ-ள்.) அக்கினியே!பலவித கர்மங்களோடு கூடியவளும், பசுச்செல்வத்தைத் தருபவளும், இளையுமாகிய பூமியை ஸ்தோத்திரங்களைக் கூறியவழைப்பவனுக்கு என்றும் நிலைத்திருக்கும்படி யருள்வாயாக. எங்களுக்கு வம்சவிருத்தியைச் செய்கின்ற புத்திர பௌத்திரர்கள் பிறக்கட்டும். அக்கினியே! உன்னுடைய அநுக்கிரக புத்திகள் எம்மைச் சாரட்டும்—(எ-று.)

வருக்கம் 16.

## 236 (2) மண்டலம் 3 அநுவாகம் 1 சூக்தம் 2.

15 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: விசுவாமித்திரன்; வடமொழிச்சந்தம்: ஜகதி; தேவதை; வைச்வாநர அக்கினி,

## மண்டலம் 3 சூக்தம் 2.

(வேறு.)

1. மகம் வளர்க்கும் வைச்சுவா நரனுகு
மக்கினிக்கா மருவப் போற்றைத்
தகவினெடு தூய்தான விழுதெனவே
பிறப்பித்துத் தருவோம்; மாந்த
ரிகவயினி ரிடத்துமுள வோதாவை
வாகதரோ டியைந்து, தேரை
மிகவழகின் வாய்ச்சிகொடு நிருமித்த
லென, நன்கே மிளிர்விப்பாரே.

(இ-ள்.) யக்ஞத்தை விருத்தி செய்யும் வைச்வாநரனுகிய அக்கினிக்காகப் பொருந்தும்படி, பரிசுத்தப் படுத்தப்பட்ட நெய்யைப் போல, ஸ்தோத்திரங்களைச் சிருஷ்டித் தளிப்போம். இங்கு காருஹ பத்தியம், ஆஹவநீயம் என்று மிரிடங்களிலுமுள்ள ஹோதாவாகிய அக்கினியை, வாய்ச்சி கொண்டு தேரை அழகாக நிருமிப்பது போல, மனிதர்களும் ரித்விஜர்களும் நன்ருக விளங்கும்படி செய்வார்கள்—(எ-று.) வாகதர், ரித்விஜர்கள்.

2. தன்பிறப்பி னவன்பூமி வானிரண்டு
மொளி பெறவே தயக்குகின்ருன்;
மன்பிறப்பிற் புத்திரனுத் துதிபெறுதற்
கேற்றவனுப் மாதர்க் கானன்,
கோன்பிறப்பிற் சுடர்த்தனத்தோ னவிசுமபபோ
னன்னமதைக் கூட்டு மங்கி,
தன்பிறப்பிற் சரையறியான், றடுக்கரிய,
னதிதியென மாந்தர்ச் சார்ந்தான்.

(இ-ள்.) தான் பிறந்ததும் அவ்வக்கினி பூமிவானம் இரண்டும் ஒளி பெறுமாறு அவற்றைப் பிரகாசிப்பிக்கிருன். அழகாகப் பிறந்த பிரபையே தனக்குத் தனமாக வுடையவனும், ஹவ்யவாஹநனும், யஜமானர்களுக்கு அன்னப் பொருளைச் சேர்ப்பவனும், அஜரனும், ஒருவராலும் இம்சிக்க முடியாதவனும், மனிதர்களிடத்து அதிதியாவானுமாகிய அக்கினி, தியாவாப் பிருதிவிகளாகிய இருதாய்மார்க்கும் பூஜிக்கத்தக்க புத்திரனுனன்—(எ-று.)

3. சித்தமதி னுனியேரிபைத் தேவர்களுந்
அயர்க்குந் திறற் கன்மத்தான்
மெத்துமகந் தனிற் பிறப்பித்தார்; பானு
வொளியினெடும் விளங்குகின்ற
வுத்தமமார் சோதியொடு மோங்குமகத்
துவனவனை யுரத்தோ டன்ன
நத்துமியான் றுதிக்கின்றேன் சுமைபொறுக்கு
மச்சுவத்தை நவில லொத்தே,

(இ-ள்.) தேவர்களும் தங்களுடைய மனத்தினுல் யோசனை செய்து பயத்தினின்று காக்கும் திறமை வாய்ந்த கன்மங்கள் பொருந்திய யக்ஞத்தினிடத்து அக்கினியைப் பிறப்பித்தார்கள். சூரியவொளிபோன்ற வொளியினேடும், மிகுந்த சோதியோடும் பிரகாசிக்கும் மகானுகிய அவனை பலமு மன்னமும் விரும்பும் யான், (பாரத்தை வஹிக்கும்) அசுவத்தைப் புகழ்வது போலத் துதித்துக் கூறுவேன்—(எ-று.) பாரஸஹம் என்பது ஸாயணருரை நோக்கிச் சேர்த்தது.

4. புகழ்த்தகையோ னுண்டியினைச் சிறப்போடு
கூடியதைப் போற்று லேத்திப்
புகழ்த்தகைய தறுதியமைந் துள்ளதனை
யாம்விருப்பிற் புகன் றிரப்போ,
முனைந்தெவரும் விரும்புறுவோன், பிருகுக்க
டனபாவா னேங்குங் கன்ம
மகிழ்ந்தகவிப் பிரக்கினைய னக்கினியை
விண்ணொளியின் மலர்குவோனை.

(இ-ள்.) புகழத்தக்கவனுகிய வைச்வாநரன் உணவுப் பொருளைச், சிறப்புப் பொருந்தியதை, இருக்குக்களாற் புகழ்ந்தேத்தத் தக்கதை, யுறுதியுள்ளதைத் தருமாறு, எல்லாராலும் விரும்பப் படுபவனும், பிருகுக்கள் மாதரிச்வானிடத்திலிருந்து பெற்றுப் பிறர்க்கு மளித்த செல்வ மாவானும், கர்மகுசலனுகிய கவி அல்லது மேதாவியினது அறிவோடு கூடியவனும், விண்ணிலிருந்து வரும்ஒளியினுற் சுடர்விட்டொளிர்பவனுமான அக்கினியை ஆசையோடு யாசிப்போம்—(எ-று.) மாதரிச்வான் பிருகுவுக்கு அக்கினியைக் கொணர்ந்த விஷயத்தை மண். 1 சூ. 60. செய். 1ற் பார்க்க.

5. அக்கினியை, வலிமைச்சீர் சிறந்தவனை,
நன்கொளிவிட் டணைகு வானை,
மிக்கவெலாத் தேவர்களும் விழைவோனை,
யுருத்திரனை மிகு கன்மத்தோ
டொக்கவுறு மெக்கியருக் கிட்டியினை
நிறைவேற்று பவனை, யீண்டு
தக்கசுகம் பெறமாந்தர் குசைவிரித்துச்
சுருக்கெடுத்துத் தாங்கி னூர்முன்.

(இ-ள்.) வலிமைக்குப் பேர் போனவனும், நல்ல வொளியோடு கூடியவனும், எல்லாத் தேவர்களுக்கு மிதஞ் செய்பவனும், துக்கத்தை யோட்டும்உருத்திரனும்,பலவித கன்மங்களோடுறும் யஜமானர்களுக்கு அவர்களது இஷ்டிகளைச் சாதித்துத் தருபவனுமான அக்கினியை, இவ்விடத்து ஸ்தோதாக்களாகிய ஜனங்கள் தங்களது சுகத்தை யடையுமாறு, தருப்பைகளை விரித்து, எந்திய சுருக்கோடு கூடியவர்களாய் முன்னமைத்து வளர்த்தார்கள்—(எ-று.) வாஜச்ரவஸம் என்பதற்கு மனிதருக்கு உணவுப் பொருள்களைத் தருபவனும் என்பார் ஸாயணர். ருத்ரன் துக்கத்தை நீக்குவோன் ஈண்டு அக்

## மண்டலம் 3 சூக்தம் 2.

னிக்கு விசேஷணமாக வந்தது. மண். 1 சூக். 27 செய். 10லும் இப்படியே வந்துளது காண்க. அப்பதப் பொருளை மண். 1 சூக். 114 செய். 1ற் பார்க்க.

வருக்கம் 17.

6. தூய்மையுறு மொளி வாய்ந்தோ,ஹோதாவே,
யெக்கியத்திற் சூழ்ந்து நின்றோர்,
வாய்மையொடு முனைப்பணிய விரும்புபவ
ருன்னட்பை மருவ வெண்ணி
வேய்தறூஉ முன்கிரகத், தக்கினியே,
தருப்பையினை விரித்து மாந்தர்
தோய்தறூஉற வுண் ணுழைந்தா, ரவர்களுக்குச்
செல்வமதை தோய்த்தி டாயே.

(இ-ள்.) பாவகமான தீப்தியோடு கூடியவனே! ஹோதாவே! அக்கினியே, யக்ஞத்தைச் சூழ்ந்து நின்றவர்களும், உன்னை யுண்மையோடு ஸேவிக்க விரும்புபவர்களும், உனது சிநேகத்தை யடைய விச்சிப்பவர்களுமான நேதாக்களாகிய யஜமானர்கள், அலங்கரிக்கப் பெற்ற வுனது கிரகத்தில் தருப்பைகளை விரித்துப் பொருந்த வுண்ணுழைந்தார்கள். அவர்களுக்குச் செல்வத்தைத் தருவாயாக—(எ-று.)

7. தரோதயமா யவனுறவே கருமமுளோ
ரவன்றன்னைத் தாங்குங்காலை
யுரோதசியில் மகத்தான வந்தரத்திற்
பூரணமா யொளியை யேய்த்தான்;
வரோதயமா வெனக், கவி யூண்கூட்டுபவ
னவன்கீர்த்தி மருவுவிக்கப்
புரோகிதரா லத்துவரத் துக்காக
முன்னயக்கப் பொருந்துவானே.

(இ-ள்.) யக்ஞ கர்மங்களோடு கூடியவர்கள் அக்கினி பூமியிலுதித்ததும் அவனைத் தாங்கும்போது அவன் பூமி, வானம், விசாலமான அந்தரம் என்னு மூன்றிடங்களையும் தனது ஒளியினு னிறைத்தான். ஞானவானும்,பிரஜைகளுக்கு உணவுப்பொருள்களைத் தருபவனுமான வவ்வக்கினி, யஜமானர்களுக்குக் கீர்த்தியைத் தோய்க்கவும், யாக கார்யங்கள் நடை பெறவும், சிறந்த குதிரையை முன்னடத்திக் கொண்டு போவது போல முன்னுற் கொண்டு போகப் பட்டுப் பொருந்துவான்—(எ-று.) வரோதய, புரோகித வென்பவை எதுகை நிறைக்க வந்தன.

8. வணங்குறுவி ரவிக்கொடையோன் றனைநல்ல
வத்துவரம் வாய்ந்தான் றன்னை;
பிணங்குறவே சேவிப்பி ரிலக்கின்ப
மிபைப்பானைப் பிறப்போர்ந்தானை;

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8.

வணங்கு மகந்தனைக் காண்பான் றேருளவன்
பெரியனவன் மகிழ்ந்து நன்கே
கணங்குழுவுந் தேவர்புரோ கிதனுக
வக்கினியும் கடிதா னுனே.

(இ-ள்.) தேவர்களுக்கு அவியைச் சுமந்தளிப்பவனும், நல்ல யக்ஞம் வாய்த்தவனுமான வவனை நமஸ்கரிப்பீர்களாக. யக்ஞக் கிரகத்தில் இன்பத்தைத் தருபவனும், ஜாதவேதஸனுமான வவனைச் சேவிப்பீர்களாக. தேர் வாய்ந்தவனும், பெரியவனுமான வவன் ரிதத்தைத் தோற்றும் மககார்யங்களை நன்ருகக் காண்பான். தேவர்களுக்குப் புரோஹிதனுக வவ் வக்கினி யானுன்—(எ-று) கணங்குழுவும், எதுகை நோக்கியும், கடிது மோனை நோக்கியும் சேர்க்கப் பெற்றன.

9. அமரர், விரும்புற் றவர்கள், மகத்துவஞ்சா
ரக்கினியி னூர்ந்த மூன்று
திமிர மகற்றிடுஞ் சுடர்கள் சூழ்ந்துசெலு
மியல்பினவைச் செம்மை யாக
வமலமுறுத்திய வன்னு ரெவற்றினையுந்
தாங்குமிய லவற்றி னென்றை
நிமிர்தர மர்த்யர்க் களித்தார் மற்றிரண்டுந்
துணையுலகை நேடிச் சென்ற.

(இ-ள்.) மரண மற்றவர்களும், (அக்கினியை) விரும்புபவர்களும், மகத்துவம் வாய்ந்த அக்கினியினது (பார்த்திவ, வைத்யுத, ஸூர்ய ரூபர்களான) மூன்று சூழ்ந்துசெல்லு மியல்பினையுடைய சுடர்களைப் பரிசுத்தப் படுத்தியவர்களுமான தேவர்கள், எல்லாவற்றையும் பாலிக்குந் தன்மை வாய்ந்த அச்சுடர்களுள் ஒன்ருகிய அக்கினியைப் பூமியிலுள்ள மர்த்தியர்களிடத்துத் தந்தார்கள். மற்றைய மின்னலும், ஸூர்யனுமான சுடர்களிரண்டும், பூமியினுடன் பிறந்த உலகங்களாகிய அந்தரிட்சம், வானம் என்னு மிடங்களுக்குச் சென்றன—(எ-று.) மேனுட்டாசிரியர் புஜம் என்பதற்கு எல்லாவற்றையும் பாலிக்கு மெனச் சுடர்களினது விசேஷணமாகச் சேர்க்காது, புசிப்புக்காக அல்லது அநுபவத்துக்காக எனப்பொருள் கொண்டு மர்த்தியர்களுக்குத் தந்தார்களெனக் கூட்டுவர். திமிர மகற்றுமே் எதுகை நோக்கிச் சேர்த்தது.

10. தனம் விரும்பு மானிடர்கள் சனங்களுககுட்
கவியாகச் சாரன் னுனைச்
சனங்களது நாயகனை வாளினைப்போற்
கூராகச் சமைத்தார் நன்கே;
கனவியவன் மேலெழுந்து கிட்டலத்தும்
பரவுறவே கடிதிற் செல்வான்;
அனலவனிப் புவனத்திற் கருப்பமதாய்த்
தனைத்தாங்கி யமைத்தானன்றே.

## மண்டலம் 3 சூக்தம் 2.

(இ-ள்.) ஜநங்களுக்குள் கவியாக விருப்பவனும், சனப்பதியுமான அக்கினியைச் செல்வம் விரும்பு மனிதர்கள் வாளைப் போலத்திட்சண்யமா யிருக்கும்படி நன்றாகச் சமைத்தார்கள். அவ்வக்கினி மேல் நோக்கியெழு வதுமன்றிக் கீழ்ப்புறத்திலேயு வியாபிக்குமாறு செல்லுவான், அவன் எல் லாப் புவனங்களிலும் கருப்ப ரூபமாகத் தானே யமைந்து நின்றான்—(எ-று.)

வருக்கம். 18.

11. அவன் வளர்வான் சடரங்கடனிற் றோன்றுங்
காளை; பல வழகார் காட்டத்
தவனொளியின் முழங்கினனால் வைச்சுவா
நர,னரியி, னமரத் தன்மை
யிவனறியாநெடுந்தூரம் விரிதேசோன்
றூசுடன்ற னென்னாம் போலத்
தவவினைப்போ னாதனங்க ளொடுசேர்ந்த
வசுவதனைத் தயையி னோடே.

(இ-ள்.) பிராணிகளின் வயிறுகடோறும் தோன்றும் காளையாகிய வவ்வக்கினி அங்கே வளர்கிறான். வைச்வாநரனும், மரண மற்றவனும், வெகு தூரம் பரவும் தேஜஸ்களோடு கூடியவனும், அவியளிக்கும் யஜமானனுக்கு ஆதநங்கள் நிறைந்த செல்வத்தை விசேஷமாகக் கொடுப்பவனுமான அக்கினி சிங்கத்தைப் போலச் சித்திரவர்ணங்களுள்ள அரணிக்கட்டைகளிற் சப்தித்தான்—(எ-று.) முழங்கினன் எனமுற்றுவினையாகக் கொள்ளாது சப்தித்த வவன் வளர்கிறான் எனவே முதனூலில் உள்ளது.

12. நன்மறையோர் தாம்போற்ற வைச்சுவா
நரன்பழமை நாடி நாகத்
தெண்ணுதிவப் பிருட்டமதி லேறினனால்;
அவன்முன்போ லிறைஞ்சிப் போற்றைச்
சொன்னாருக் கெனத்தனங்க டமைத்தோற்றிச்
சாக்கிரத்துத் தோய்ந்தேக் கானு
முன்னுபொது நெறியாகு மாகாய
மார்க்கமதி னுருள்கின் றானே.

(இ-ள்.) நல்ல மந்திரங்களோடு கூடியவர்களால் ஸ்தோத்திரஞ் செய்யப் பெற்றவனும் வைச்வா நரனாகிய அக்கினி பழைமை போல நாகத்தில் விண்ணின் அடிப்பக்கத்தில் ஏறினான். அவ்வக்கினியே முன்போல ஸ்தோதாக்களாகிய மனிதர்களுக்குச் செல்வத்தைச் சிருஷ்டித்து, ஜாகரூகனாய்த் தேவர்களுக் கெல்லாம் பொதுவான நெறியாகிய ஆகாச மார்க்கத்தில் ஸூரிய ரூபமாக உருண்டு செல்கிறான்—(எ-று.) வைச்வா நரன், எல்லா நரர்களுக்கும் பிரியமானவன். நாகம் என்பதற்கு கம், சுகம், அகம், (எதிர் மறை) துக்கம், நஅகம், துக்கமற்ற விடம், விண்ணெனப் பதப்பொருள் கூறுவர் ஸாயணர். திவப்பிருட்டம் என்றது பூமியும் வானும் கூடுவதாகத் தோன்று மிடத்தை. அதனை அந்தரிட்சத்தின் மேல் விரிந்துள்ள விடம் என்று ஸாயணர் கூறினார்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8.

13. எக்கியனை, ரிதத்தவனை, விப்பிரனை,
யுரையுளனை, யென்னும் வானிற்
புக்குறைவோன்றனை, மாதரிச்சுவான்
றந்தவனைப். புகலுங் காந்தி.
மிக்க வழகான கமனத்தவனைப்,
பொன்கேச மொளிர்ந்தோன் றன்னைத்,
தக்கவொளி யக்கினியை, நூதனவாழ்
வெய்துறயாஞ் சாற்று மோமே.

(இ-ள்.) யக்ஞார்ஹனும், ரிதம் (பலம், அல்லது நியதி) வாய்ந்தவனும், மேதாவியும், உக்தங்களாற் புகழ்ப்படுபவனும், வானில் உறைபவனும், மாதரிச்வானல் பூமியின்கணுள்ள மனிதர்க்காகக் கொண்டுவந்து தரப்பட்டவனும், பலவித அழகோடு கூடிய கமனங்களுள்ளவனும், ஸ்வர்ணமயமான கேசமாகிய சுடர்களோடு கூடியவனுமான சோபன வொளியொடு கூடிய அக்கினியை நூதனமாகிய வாழ்வைப் பெறுமாறு யாங்கள் துதித்து இரப்போம்—(எ-று.)

14. தூய்மையனை, மகம்விரும்பி விரைபவனை
யெவற்றினையுந் தோற்று வானை,
வாய்மையுறத் திவக்கேது வாவானை,
யொளியோன்கண் மருவு வானை
யெய்வுறவே வைகறையில் விழிப்பானை,
யக்கினியை, யிரும்வானத்துத்
தோய்தலைவன் றனைத், தோற்காப் பெரியவனை,
நமங்களினாற் றுதிப்போம் யாமே.

(இ-ள்.) பரிசுத்தமானவனும், யாகத்தை விரும்பி விரைவாக வருபவனும், எல்லாவற்றையும் கண்ணுக்குத் தோற்றுபவனும், விண்ணின் கொடிபோல்பவனும், சூரியனிடத்துத் தங்குபவனும், வைகறை யாமத்து விழிப்பவனும், வானிடத்திற் றலையானவனும், ஒருவராலும் முறியடிக்க முடியாத பெரியவனுமான அக்கினியை நாங்கள் நமங்களோடு துதித்திரப்போம்—(எ-று.)

15. மலர்ச்சியுளவோதாவைத், தூய்மையனைக்,
கொடைசிறந்த மனத்தோன் றன்னை,
நலிக்குமிருங் குடிலமிலாப் புகழோனை,
யெவர்தமையு நாடிக் காணும்
நிலைத்தகுணத் தவனைச், சித் திரத்தமைந்த
தேரெனவே பொலிவி னின்று
தலத்தவருக் கெக்காலு மிதம்புரிவோன்
றனை, யிரப்போந் தனத்தை யின்றே.

## மண்டலம் 3 சூக்தம் 3.

(இ-ள்.) முகமலர்ச்சி யோடு கூடிய ஹோதாவும், பரிசுத்தனும், தான மனத்தனும், வஞ்சனை யில்லாதவனும், உத்தங்களாற் புகழப் படுபவனும், எல்லாரையும் பார்க்குந் தன்மையனும், நாலு வர்ணங்களோடு கூடிய தேரைப்போல உடற்பொலிவோடு விளங்குபவனும், பூதலத்துள்ள மனிதர்களுக்கு எல்லாக் காலத்திலும் ஹிதஞ் செய்பவனுமாகிய வக்கினியைத் தனங்களைத் தருமாறு யாசிப்போம்—(எ-று.)

### வருக்கம் 19.

## 237. (3) மண்டலம் 3 அநுவாகம் 1 சூக்தம் 3.

### 11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: விசுவாமித்திரன்; வடமொழிச்சந்தம்: ஜகதி; தேவதை: வைச்வா அக்கினி.

1. நெடுந்தூர மொளிர் சுடரோன் வைச்சுவா
நரனுக்கு நிறை ஞானத்தர்
கடம்பாடி னுறுநெறியி னவன்கடுக
மகமதனிற் காசில் பொன்னை
யிடம்பாடு பெறத்தந்து சேவிப்பார்;
மரணமிலா வெரியுந் தேவர்க்
குடம்பாடி னுழைப்ப,னதாற், சநாதவறங்
களைநிந்தித் துரையார் யாரும்.

(இ-ள்.) நெடுந்தூரந் தனது கிரணங்களைச் செலுத்திப் பிரகாசிப்பவனாகிய வைச்வநாரக்கினிக்கு நிறைந்த ஞானத்தோடு கூடிய மேதாவிகள் அவன் கட்டாயமாக யக்ஞநெறியை நோக்கிக்கடுகிவருமாறு, யக்ஞத்தின் ரமணீயமான ஸ்தோத்திரங்களாகிய செல்வத்தை நிறைய வளித்து அவனைச் சேவிப்பார்கள். மரண மற்றவனாகிய வக்கினியும் தேவர்களுக்கு உவப்பாகும் வண்ணம் அவர்களுக்குப் பணிசெய்வான். அதனால், ஸநாதனமாகவுள்ள யக்ஞ கர்மங்களாகிய தர்மங்களை ஒருவரும் தூஷிப்பதில்லை—(எ-று.) மேனாட்டாசிரியர் கடைவாக்கியத்தை அக்கினிக் கேற்றிக் கூறுவர்.

2. கட்கினிய வோதாபூ வானிடையே
தூதாகக் கடிதிற் செல்வான்;
மட்கினிய மாந்தர்களின் புரோகிதனுய்
நன்கமர்ந்து, மகத்தா யோங்கித்
திட்பமுறு மகவிலத்தைச் சுடர்களினு
லலங்கரிப்பான், தேவர் தாண்ட
வொட்பமுறு மக்கினி,போற்றிடுதனது
செல்வமென வுற்றேன் ருனே.

(இ-ள்.) காட்சிக்கினியனும், ஹோதாவுமான அக்கினி பூமிவானங்களுக்கிடையில் தேவ தூதனைச் செல்லுகிறான். தேவர்களேவிவிட வந்தவனும், ஸ்தோத்திரங்களைச் செல்வமாக யுடையவனுமான அக்கினி மனிதர்களுக்குப் புரோஹிதனாய் நன்றாக வமர்ந்து, பெரிய யக்ஞக் கிரஹத்தைத் தனது சுடர்களால் அழகு படுத்துகிறான்—(எ-று.) மட்கினிய, ஒட்பமுறு என்பனஎதுகைநோக்கிவந்தன.

3. எக்கியத்தின் கேதுவினை, மன்றநிறை
விணக்குயிற்று மேது தன்னை,
அக்கினியை, விப்பிரர்தாம் மனமார
வணங்குகிறார்; அணியார் போற்றோர்
தக்கதம தருங்கன்ம மெவற்றினையுந்
தாம்பெருமை சாரன் ஞன்பா
லெக்கியஞ்செய் யஜமானன் சுகங்களினைப்
பெறுவானிங் கிச்சிக் கின்றான்.

(இ-ள்.) யக்ஞத்தின் துவசனும், யாக சபையில் மாந்தர் நிறைந்திருப்பதற்குக் காரண மானவனுமான அக்கினியை விப்பிரர்கள் மனப்பூர்வமாக வணங்குகிறார்கள். அழகிய ஸ்தோத்திரங்களைப் பாடுவோர் தமது கர்மங்களையெல்லாம் ஒரு மிக்கக் கூட்டி யளிக்கு மவ்வக்கினியினிடத்து, யஜமானன் சுகங்களைப் பெற விரும்புகிறான்—(எ-று.)

4. எக்கியத்தைப் பாலிப்போன், ஞானமொழி
யோர்க்குரத்தை யியைப்போன், ரித்து
விக்கரது ஞானமதைச் சாதிப்போ
னவர்கரும விறைவிற் கேது,
புக்கனனாற் பல்லுருவி னுரோதசிக்குள்;
மாந்தரிடைப் பொருந்து மன்பு
மிக்கவனாற் கவிதனது தேசுவலி
தனைப்புகழ்ந்து விளம்ப நின்றான்

(இ-ள்.) யக்ஞத்தின் பிதாவும், ஞானம் வாய்ந்த ஸ்தோத்திரங்களைச் செய்பவர்களுக்குப் பலத்தை யளிக்கும் அஸுரனும், ரித்விக்குக்களின் ஞானசாதனமும், அவர்களுடைய கர்ம ஸாதனமுமாகிய அக்கினி பலவித ரூபத்தோடு பூமிவானங்களுக்குள் நுழைந்தான். மனிதர்களிடத்து அன்பு மிகுந்தவனும், கவியுமான அவ்வக்கினி தனது தேஜோபலத்தை யஜமானர்கள் புகழ்ந்து கூறுமாறு அமைந்து நின்றான்—(எ-று.)

5. இன்பமியை யக்கினியை, யிரணியத்தே
ருடையவனை யென்னு நீரி
லன்புடனே யுறைவானைப், பிங்கலத்தோ
லுள்ளவனை யனைத்து மோர்ந்து

## மண்டலம் 3 சூக்தம் 3.

வன்புபெறு நற்கீர்த்தி வைச்சுவா
நரனவனை மதிக்கும் வேக
மொன்றுறப் பல்லிடந் தோறும் பரவுவனைத்
தேவரிவ ணுறுவித்தாரே.

(இ-ள்.) ஆஹ்லாதத்தைத் தருபவனும், பொன் மயமான தேரோடு கூடியவனும், தண்ணீர்களுக்கு ணுறைபவனும், பிங்கல வர்ணத்தோடுள்ளவனும், ஸர்வக்ஞனும், சத்துருக்களை வதைக்கும் வலிமை பெற்றவனும், நல்ல கீர்த்தி அல்லது ஒளியுள்ளவனும், வைச்வாநரனும், வேகத்தோடு எல்லாவிடங்களிலும் வியாபிப்பவனுமாகிய அக்கினியைத் தேவர்கள் இவ்வுலகத்துக் கொண்டுவந்தமைத்தார்கள்—(எ-று.) ஹரிவ்ரதம் என்பதற்கு பிங்க நிறமுள்ளவனென்று ஸாயணருரை கூறுவர். பசுமையான விடங்களுக்கு நாதனென மோனுட்டாசிரியர் கூறிப் புதர்களும், மரங்களும் நிறைந்த இடங்களுக்கு நாயகனென்பது கருத்தென்பார். ஹரித்வ (ச்) சம் என்பது சா கார்தா மென ஸாயணர் கூறுவதாற் செய்யுளில் பிங்கலத் தோலுள்ளவனை யெனக் கூறினர்.

வருக்கம். 20

6. தேவரோடு மகமுடிக்கும் வாகதர்க
ளோடுந், தொழிலார் செய்யோ னுற்றும்
பாவுபல வுருவுடைய வெக்கியங்க
ளுருப்படுத்திப் பரிவின் வேக
மேவுபவ னகித்தேர் படைத்தோனுய்த்
தானவுள மேவி யோனு
யோவுறவே யவதூற்றை யொழிப்பவனு
யக்கினியுள் ளுறுகின் றனே.

(இ-ள்.) தேவர்களோடும், மகங்களைச் சாதித்து முடிக்கும் வல்லமையுள்ள ரித்விஜர்களோடும் பொருந்தி, கர்ம நிறைவுள்ள மனிதன் செய்கின்ற பலவுருவத்தோடு கூடிய வெக்கியங்களை யுருப்படுத்தி, வேககாரியாய்த், தேர் படைத்த நேதாவாய், வண்மை பூண்ட மனத்தனுய், அவதூறுகளை யொழிப்பவனுய் அக்கினி பூமிவானங்களுக் குள்ளே அங்கு மிங்குமாகத்திரிகிறன்—(எ-று.) பலவுரு என்றது, புரோடாசம், பசு, ஸோமம் என்னும் அவிப்பொருள்களைக் கருதியும், ஏகாஹம் முதல் ஸத்ரயாக மீருகவுள்ள பல்வகைகளைக் கருதியு மென்பார் ஸாயணர். வாகதர், ரித்விஜர்கள்.

7. அக்கினியே, வாழ்நாளு மேன்மையுறு
புத்திரரு மணையப் பாடாய்;
தொக்கவளம் பொருந்துவதோ டெங்களுக்கிங்
குண்டியுறச் சோதி வீசாய்;
மிக்கமகத் துவம்வாய்ந்தோன் வயமதனை,
விழிப்புளவ, மேவு விப்பாய்;
தக்கமகத் தொழிலோயன் பொடுமேதைத்
தேவர்களைச் சார்வோ னியே.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8.

(இ-ள்.) அக்கினியே! நீண்ட ஆயுட்காலமும், நல்ல சந்ததியு முண்டாகுமாறு தேவர்களைக் குறித்துப் பாடுவாயாக. மிகுந்த வளங்களைச் சேர்ப்பதோடு எங்களுக்கு உணவுப் பொருள்கள் உண்டாகும் வண்ணம் (மழை பெய்யுமாறு) சோதியை வீசுவாயாக. மிகப் பெரியவனான யஜமானன் வெற்றியைத் தரும் அன்னத்தை யடையுமாறு, சாக்கிர நிலையிலுள்ளவனே, செய்விப்பாயாக. யக்ஞகர்மத்தோடு கூடியவனே! மேதாவிகளான தேவர்களை யன்போடு அடைய விரும்புபவன் நீ—(எ-று.)

8\. மகத்துவனை, யதிதியினை, நரப்பதியை,
யொழுங்காக மதிக்கன் மங்க
ளிகத்துறவே நடத்துவனை, வாகதர்கள்
விழைபவனை, யாகந் தம்மை
யகத்துகினைப் பூட்டுவனைச், சாதவே
தசனவனை, யணையும் மாந்தர்
மிகத்துதிப்ப ரெக்காலு நமத்தோடு
வாழ்வவர்க்கு விரையு மாறே.

(இ-ள்.) மகத்துவம் வாய்ந்தவனும், அதிதியும், நரர்களுக்குப் பதியும், புத்தியோடு புனையப்படும் கர்மங்களுக்கு நியந்தாவும், ரித்விஜர்கள் விரும்புபவனும், யாகங்களை ஞாபகப் படுத்துவோனும், ஜாத வேஸனுமாகிய வக்கினியை நரர்கள் தங்களுக்கு வாழ்வு விரைவாக வுறுமாறு, நமங்களோடு எக்காலும் துதித்துப் புகழ்வார்—(எ-று.)

9\. ஒளியுள்ளோன், றேவ,னனி யின்பளிப்போ,
னற்றேரை யுற்றோ, னங்கி,
வளமுள்ள புவிகளினைத் தன்பலத்தாற்
சூழ்ந்தடர்ந்தான்; வளத்தி னரைப்
பலவரையும் பாலிப்போன், றமமதனி
லுவந்திருப்போன் பழகு நோன்பை
யொளிபெறவே யலங்கரிப்போ மெக்காலுந்
தோத்திரங்க ளுரைத்து யாமே.

(இ-ள்.) சாந்தி வாய்ந்தவனும், தேவனும், நல்ல இன்பத்தை யளிப்பவனும், தேரோடு கூடியவனுமாகிய வக்கினி, எல்லா வளம் பொருந்திய பூமிகளையும்தனது பலத்தாற் சூழ்ந்து அவ்விடத்தில் நிறைந்துநின்றான். ஏராளத்தோடுறுமாறு அநேகரையும் போஷிப்பவனும்யக்ஞக்கிரஹத் திலுவப்போடு தங்குபவனுமான அவ்வக்கினியின் விரதங்களை யாங்கள் ஸ்தோத்திரங்களைக் கூறி எக்காலத்தும் நன்றாக அலங்கரிப்போம்—(எ-று.)

10\. திறமையுளோய், வைச்சுவா நர,வுனது
தேசுக்கள் செவ்வே யாவு
மறவுணரு மவற்றினையான் றுதிக்கின்றேன்;
பிறந்ததுமே யார்த்தா நின்றாய்

## மண்டலம் 3 சூக்தம் 4.

நறைபொடுவா னிரண்டோடு புவனங்க
டமை;யங்கி, சாற்று மெல்லா
முறைவாய்ந்த வவற்றினையு மனமார
நீசூழ்ந்து மொய்த்திட் டாயே.

(இ-ள்.) சாமர்த்தியமுள்ளவனே! வைச்வாநரனே! அக்கினியே! எல்லாவற்றையு மறியக்கூடிய உனது தேஜஸ்களை யான் போற்றுகின்றேன். பூமி வானங்களையும் பூதக்கூட்டங்களையும் நீ பிறந்தவுடனேயே நிறைக்கின்றாய். எல்லாவற்றையும் மனமார நீயே சூழ்ந்து மொய்த்திருக்கிறாய்—(எ-று.)

11. ஈதுண்மை, வைச்சுவா நரன்செயல்கள்
பெரியவையாம்; ஏகன் ஞானி
திதில்லாக் கன்மநசை யானளிக்கின்
றான்பொன்னைச்; செய்ய வங்கி
தாதுண்மை மிகப்படைத்த தாய்தந்தை
யிருவரெனுந் தரணி வான
மோதுண்மைப் பெருமையுட னுறப்புரிந்து
பிறந்திட்டா னுலகிற் றானே.

(இ-ள்.) வைச்வாநரனது செய்கைகள் மிகப்பெரியவை யென்பதுண்மை. கவியாகிய அக்கினி ஏகனாய் சற்கர்ம விச்சையால் செல்வங்களைத் தானஞ்செய்கிறான்; அக்கினியானவன், ரேதஸ் மிகுந்த தாய் தந்தையர்களாகிய பூமிவானங்கள் பெருமைபொருந்தும்படி உலகிற் பிறந்தான்—(எ-று.) மேனாட்டாசிரியர் உரை வேறு.

வருக்கம் 21.

## 238 (4) மண்டலம் 3 அநுவாகம் 1 சூக்தம் 4.

### 11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: விசுவாமித்திரன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: ஆப்ரிக்கள்.

இவ்வாப்ரீ சூக்தம் இவ்வஷ்டகத்து வந்துள்ள நான்காவதென வறிக. ஆப்ரீ தேவதைகளைப்பற்றி மண். 1 சூக். 142 இன்தலைப்பிற் பார்க்க. இது நராசம்ஸ சூக்தமாம்.

(வேறு.)

1. நன்மனத்தோடு மோர்க சமித்துக்க டம்மை; எங்கண்
நன்மனத்தோடு செல்வ நல்குக சோதி தோறும்;
பொன்மனத் தேவர்தம்மைப் பொருத்துகவணங்கத்தேவே;
நன்மனத்தோடு மங்கி நண்பரைப் பணிக நண்பாய்.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8

(இ-ள்.) ஒவ்வொரு ஸமித்தினையும் நல்ல மனத்தோடு உணர்ந்து கைக்கொள்வாயாக. உனது சுடர்கள் ஒளிவிட ஒளிவிட எம்மிடத்து நல்ல மனத்தோடு செல்வத்தைத் தருவாயாக. தேவனே! வணங்குவதற்காகத் தேவர்களை இங்கு கொண்டு வருவாயாக. அக்கினியே! நல்ல மனத்தோடுசிநேகிகளை சிநேகிதனைப் பணிவாயாக—(எ-று.)

2. மித்திரன், வருண, னங்கி யென்னு மித்தேவர் நாளு
நத்தியே மூன்று போதும் வணங்குற நிற்போம் யாரவ்
வுத்தமத் தநூநபாத்தே போங்குசீ ரிழு திடங்கொ
ளித்தரை யெம்மகத்தை யினிய நீர்த்தாக்க நீயே.

(இ-ள்.) மித்திரன், வருணன், அக்கினி என்னும் தேவர்கள் நாள்தோறும் காலை மாலை உச்சியென்னும் முக்காலங்களிலும் வணங்குமாறுநிற்கும் பெருமை வாய்ந்த தநூநபாத்தென்னும் தேவனே! நெய்க் (வளம் என்றபடி)கு இடமாக அல்லது காரணபூதமாகச் சீர்பெற எங்களால் அமைக்கப்பட்ட இவ்யக்கியத்தை மதுர நீர்மையோடு கூடியதாகச் செய்வாயாக—(எ-று.) தநூநபாத் அக்கினியின் ஒரு அவஸரம். தன்னுடலினின்றுமே பிறந்தவன் என்பது அச்சொல்லின் பொருள், தநூநபாத்தும் அக்கினியும் வஸ்துவில் ஒருவரே யெனினும் அவஸர பேதத்தினால் வேறு பிரித்துக்காட்டினார். மேனாட்டாசிரியர், 'மித்திரனும் வருணனும் வணங்கும் அக்கினியும் தநூநபாத்துமாகிய நீ எமது யக்ஞத்தை இனிமையுள்ளதாகச் செய்க'. என்று பொருள் கூறுவர் அதன் சிறப்பின்மையறிக.

3. எவ்வித வரனு மேய்க்கு மேத்து நாம்நமத்தினோடு
மொவ்வுறு மவியூ ணோடு மொரு முகமாக நேரே
செவ்வையின் முதற்கட் போற்றக் காளையோ தானவச் சேரல்;
திவ்வியர் போற்றக்காரைச் சேவிக்க லவன் யாந் தூண்ட.

(இ-ள்.) எல்லாவித நன்மைகளையுஞ் சேர்க்கின்ற எமது ஸ்துதியும், நமஸ்காரங்களோடும் அவியுணவுகளோடும்யாம் நேர்முகமாக நின்று முதலில் வணங்குறுமாறு ஸம்பத்தை வருஷிக்கும் காளையும் ஹோதாவுமாகிய வக்கினியை யடையட்டும். எங்களால் தூண்டப்பட்டவனாய் அவனும் வணங்கத்தக்க தேவர்களைப் பூஜிக்கட்டும்—(எ-று.) போற்றக்கார்: போற்றத்தக்கார். ஒதா, ஹோதா.

4. மகத்துநீர் செல்லுமார்க்க மூர்த்துவமாக மன்னிற்
றுகப்புடன் சோதிக்கற்றை யோங்கின ரஜத்தின் மேக்கே;
தகப்பயின் றமர்ந்தான் ஹோதன் றிவத்துறு நாபிக் கண்ணே;
மிகப்பரப்பினந் தருப்பை தேவரு மேவு மாறே.

(இ-ள்.) யக்ஞத்தினிடத்து (அக்கினியும் பர்ஹியுமாகிய) நீங்களிருவரும் செல்லும் மார்க்கம் உன்னதமாகச் செய்யப் பெற்றது. உமது சுடர்க்கற்றைகள் அந்தரத்தில் மேலோங்கின. தேவர்களை யழைப்பவனாகிய ஹோதா விண்ணைப் போல ஒளி வீசி நிற்கும் இந்த யக்ஞக்ருஹத்தின் நாய

## மண்டலம் 3 சூக்தம் 4

அல்லது மத்திய ஸ்தானத்தில் நன்றாய் உட்கார்ந்திருக்கிறான். தேவர்கள் வந்து பொருந்து மாறு தருப்பையை நன்றாக விரித்தோம்—(எ-று.) பர்ஹீ தருப்பை.

5\. மனத்தினை லுவப்போர் நீரா லெவற்றையுமகிழ்விப்போர்கள்,
இனத்தெழுமாந்தர் பெய்யு மவியின்பாற் றேவர் செல்வார்;
மனித்தரி னுருவையுற்றோர் மகமதிற் பிறந்த பல்லோர்
மனத்தெணி யிவ்வே மெக்கி யத்தினை மருவி நிற்க.

(இ-ள்.) மனதினால் ஸந்தோஷப்படுபவர்களும், விசுவத்தையும் (ரி தத்தினால்) உதகத்தினால் மகிழ்விப்பவர்களுமாகிய தேவர்கள், ஏழு ஹோதாக்கள் வஷட்காரஞ் செய்து பெய்யும் அவியை நோக்கிச் செல்வார்கள். மனித ரூபத்தோடு கூடியவர்களும், யக்ஞத்துப் பிறந்தவர்களும், பலருமான துவாராபிமானி தேவதைகள் இந்த எங்களது எக்கியத்தை நோக்கிவருக—(எ-று.)

வருக்கம். 22

6\. நீடிய நகையிற், றத்த முருவு வேறான மெய்யிற்,
கூடிய பகலு மல்லுங் கூப்பப் பெற்றவராய்ச் சார்க,
வாடிய வெமக்கின் பத்தை வருண மித்திரர்க ளூட்ட
நேடிய புகழ்கொள்வே ந்தன்மருத்துவ ரியைந்தோ னேடே.

(இ-ள்.) புன்னகையோடும், தங்கள் தங்கள் உருவம் ஒருவரொருவரின் மாறின சரீரங்களோடும் ஒன்று கூடிய உஷாஸா நக்தாக்கள் (பகலிரவுகள்) ஸ்தோத்திரஞ் செய்யப் பெற்றவர்களாய், மருத்துவர்களோடு கூடிப் பெரும் புகழ் வாய்ந்த இந்திரனோடு வருண மித்திரர்கள் எங்களுக்கு இன்பத்தை யுதவுமாறு, வரட்டும்—(எ-று.)

7\. தெய்வவோ தாவிருவர் முக்கியர் தமைப் புகழ்ந்தேன்;
பெய்யுறு மவியெழுவர் ரிதத்தினைப் புகழ்ந்து சோம
மெய்யுணவதின் மகிழ்வர்; மெய்யினைப் புகல்வார், நோன்பின்
மெய்ம்மையார் நெறியி னூன்பைக்காப்பவர்,மிளிர்குவோரே.

(இ-ள்.) முக்கியர்களான தெய்வ ஹோதாக்களிருவரையும் நான் புகழ்ந்து கூறினேன். அவிசொரியும் ஏழு ரித்விஜர்களும் ரிதத்தை யல்லது யக்ஞத்தைப் புகழ்ந்து ஸோமாஹுதியிற் களிகொள்வர். விரதங்களைப் பரிபாலிப்பவர்களும், ஒளிவிட்டு விளங்குவோருமாகிய ரித்விஜர்கள், விரதாநுஷ்டான நெறியை யநுஸரித்து உண்மையைப் புகழ்ந்து கூறுவார்கள்—(எ-று.)

8\. பாரதி பரதிமா ரோடிணைந்திவண் வருக; தேவர்
சாருமா னிடர்களோடு மிளையிவட் சார்க; அங்கி
சாரசு வதிகளோடுஞ் சரச்சுதி மேவ; மூவ
ரேருறு தேவிமாரின் டியைந்துள குசையி லேய்க,

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8.

(இ-ள்.) பாரதிகளோடு சேர்ந்து பாரதியாகிய வாக்கு இங்கு வரட்டும். தேவர்களோடும், மனிதர்களோடும் சேர்ந்து, இளையாகிய பூமி இங்கு வரட்டும். அக்கினியும், ஸரஸ்வதிகளோடு சேர்ந்த ஸரஸ்வதியும் இங்குவரட்டும். பாரதி, இளை, ஸரஸ்வதி என்னும் மூன்று தேவிமாரும் இங்கு பொருந்திய தருப்பையி லமரட்டும்—(எ-று.) பரதிமார், பாரதிமார்.

9. தேவனே துவட்டாமிக்கு மகிழ்பவ பின்ன ரெம்மை
யோவறத் தாங்குங் கீர்த்தியுற்ற தாதுவை யுதிர்க்க,
மேவிய கன்மத்தோர் நற்பலமுளோர் பிழிகல்லுற்றோர்
தேவரை விரும்புவோராம் வீரர்கள் சேரு மாறே.

(இ-ள்) தேவனே! துவஷ்டாவே! மிகவும் மகிழ்பவனே! பின்னர் எங்களைத் தாங்குங்கீர்த்தி வாய்ந்த ரேதஸை எங்கள்பால்மகிழ்ந்தளிப்பாயாக. யாங்கள் அதுகொண்டு கர்மத்தோடு கூடியவர்களும், பலமுள்ளவர்களும், ஸோமம் பிழியுங்கல்லைப் பிடித்தவர்களும், தேவர்களை விரும்புபவர்களுமான வீரிய புத்திரர்களைப் பெறுமாறு—(எ-று.)

10. வனப்பதீ தேவர் பக்க லவியினை மருவு விக்க;
பினர்ச் சமிதா வதனை யங்கியே பிறங்கு விக்க;
முனர்ச் சனனங்க டேவர்தம்மவை யறியு மன்ன
னுனத்தகு மோதா வுண்மை மிகுத்தவன் மகமிழைக்க.

(இ-ள்.) வனஸ்பதியே! அவியுணவைத்தேவாது சமீபத்திற் சேர்ப்பாயாக. அக்கினியே! யாகப் பசுவைக் கொல்பவனாகிய சமிதா அவ்வவியுணவைக் கீறியெடுத்துப் பக்குவத்திலமைக்கட்டும். தேவர்களுடைய ஜன்மங்களை யெல்லாம் அறியும் அவ்வக்கினியே சிறந்த ஹோதாவாம். ஸத்தியதானன அவனே தேவர்களுக்கு யக்ஞஞ் செய்யட்டும்—(எ-று.)

11. அங்கியே நன்கு மூண்டிங் கணைகவல் விரைவிற் றேவர்
தங்களோ டிந்தி ரன்னோ டெம்வயின்; தருப்பை மீதே
யங்கமார் புதல்வர்ப் பெற்ற வதிதியு மமர்க; சாவே
யிங்குறுத் தேவர் சுவாகா யாஞ்சொல வின்ப மெய்த.

(இ-ள்.)அக்கினியே! நன்றாக மூட்டப் பெற்றவனும் விரைந்துவரும் தேவர்களோடும் இந்திரனோடும் நீ யொரு தேவனா யெம்மாட்டு வருக. அழகிய புத்திரர்களைப் பெற்றவளாகிய அதிதி இந்தத் தருப்பை மீது அமரட்டும். அமரராகிய தேவர்கள் எங்களுடைய ஸ்வாஹா காரத்தோடு கூடியவர்களாய்க் களிப்படைக—(எ-று.)

வருக்கம் 23.

## 239 (5) மண்டலம் 3 அநுவாகம் 1 சூக்தம் 5.

### 11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: விசுவாமித்திரன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: அக்கினி

## மண்டலம் 3 சூக்தம் 5

1. வைகல்க டோறும் விளங்கு மக்கினி கவிகள் மார்க்கத்
தைகுறச் செல்லும் விப்பிரன் விழிப்படைந்தான்; தூரம்
வைகுறச் செலுஞ் சுடரின் றேவகா மிகளான் மூட்ட
நைகுறும் வன்னி வாயி ரமத்தினன்னின விரித்தான்.

(இ-ள்.) உஷத்காலங்கடோறும் பிரகாசிப்பவனும், கவிகளது மார்க்கத்திற் செல்பவனும் விப்பிரனுமாகிய அக்கினி மூட்டப்பெற்றொளிர்ந்தான்; வெகுதூரம் விரிந்து செல்லும் சுடர்களோடு தேவகாமிகளாகிய ரித்விஜர்களான் மூட்டப்பெற்றுக் கனியும் அக்கினியாகிய புரோஹிதன் இருள் நிறைந்த வாயில்களிரண்டையும் திறந்து விட்டான்—(எ-று.)

2. வணங்குதற் குரிய னங்கி புகழ்பவர் தோமந் தம்மி
னணங்குற வுரைக்கு முக்தங் கிதங்க ளவற்றி னேக்கம்
புணர்ந்தனன்; தூதனுகிப் பற்பல ரிதத்தின் காந்தி
யிணங்குற விரும்பி வைக லெழுந்தது மொளிர்கின் றனே.

(இ-ள்.) பூஜ்யனுகிய அக்கினி, புகழ்பவரது ஸ்தோமங்களாலும், அழகாக வுரைக்கும் உக்தங்களாலும், கிதங்களாலும் விருத்தி யடைந்து நின்றான். அவ்வக்கினி தேவர்களை யழைக்கும் தூதனுய்ப் பலவித ரிதத்தின் (ஸூரியனின் என்பார் ஸாயணர்) ஒளியைப் பெறவிரும்பி உஷஸ்காலம் எழுந்ததும் பிரகாசிக்கின்றான்—(எ-று.)

3. நீரினுட் கருப்ப மங்கி மித்திரன் மானுடத்தி
னேருள மாக்தர் காப்ப னிருக்தப் பெற்றான் ரிதத்தாற்
சாருவ பெறுவோன்; அன்பிற்கேத்தினுக்குரியோன்போற்று
வோரினல் லவியன் விப்பி ரன்னுயர் சார்மீ துற்றான்.

(இ-ள்.) நீரினுட் கருப்பமாகத் தங்கினவனும், யஜமானர்களுக்கு நண்பனும், ஸத்திய நெறிகளால் தான் விரும்பியவற்றைப் பெறுபவனுமான அக்கினி மானுஷிகமான பிரஜைகளுக்கு மத்தியி லமைக்கப்பெற்றான். பலராலும் விரும்பப் பெறுபவனும், பலராலும் புகழப் பெறுபவனும், ஸ்தோதாக்களினது அவியை யேற்பவனும், விப்பிரனுமான அவ்வக்கினி உன்னதமானவாகிய உத்தர வேதியின்மே லேறியமர்ந்தான்—(எ-று.)

4. மூட்டிடப்பெற்றோனங்கி மித்திரன் முழுதுமானன்;
வாட்டமில் மித்திரன் றன் வருணனேதாவுமானன்;
நாட்ட முற்றவன் பிறப்பின், மித்திரன், அத்துவர்யு
கோட்டொடு நதிக்கு நண்பன்கொடையுளோன்வாயுவானன்.

(இ-ள்.) மூட்டப் பெற்றவனுகிய அக்கினி மித்திரன் அல்லது ஸூர்யன் ஆகிறான். மித்திரனானவன் வருணனும் ஹோதாவுமாகிறான். ஜாதவேதஸனுகிய அம்மித்திரன் அத்துவர்யுவும், மலைகளுக்கும் ஆறுகளுக்கும் நண்பனும், தானமனத்தோடு கூடியவனும், வஸ்துக்களைப் பிரேரேயிக்

கும்வாயுவுமாக ஆகிறான்—(எ-று.) செய்யுளில் இறந்தகாலம் துணிவு பற்றி வந்தது. இஷிர: என்பதற்கு ப்ரேரகோவாயு: என்பது ஸாயணருரை. இச் செய்யுள் அக்கினியை ஸர்வாத்மகமாகத் துதித்தது.

5. கண்ணினுக் கினிய னங்கி கரையற விரிந்த பூமிக்
கென்னுறு மன்பினுற்ற முக்கிய பதத்தைக் காப்பான்;
விண்மணி யாமகானின் சரணத்தைக் காப்பான்; நாபி
யுண்மரு வெழுவர்க்காப்பான்; தேவர்தம்விழாக்காப்பானே.

(இ-ள்.) காட்சிக்கினியனாகிய அக்கினி எல்லையற விரிந்துள்ள பூமிக்குப் பிரியம் வாய்ந்த முக்கிய பதமாகிய யாகதலத்தைக் காப்பாற்றுகிறான், மகத்துவம் வாய்ந்த ஸூரியனது சரணம் படுமிடமாகிய அந்தரிட்சத்தை இரட்சிக்கிறான். நாபிஸ்தானமாகவுள்ள அவ்வந்தரிட்சத்திற் பொருந்தை எழு மருத்துக் கூட்டத்தையும் காக்கிறான் தேவர்களது விழாவாகிய யக்ஞத்தையும் இரட்சிக்கிறான்—(எ-று.) ஸாயணர் வே: ரிப: எனச் சேர்த்துப் பொருள் கூறியுள்ளார். மேனுட்டாசிரியர் வே: பட்சி யென்று பொருள் கூறி அச்சொல் சூரியனைக் குறிக்குமென்பர்.

வருக்கம். 24.

6. பொருளெலா முணர்ந்ததேவன் ரிபு தனக்கென்னப்போற்றற்
குரியவோரணி நாமத்தை யாற்றினன்; பரந்து தூங்குஞ்
சருமமு நெய்பி னேங்கும்; சாரு மவ்வெரி யதற்கிங்
கொருபழுதும் முறும லுப்பதங் காக்கின் றனே.

(இ-ள்.) எல்லாவித ஞானங்களையு மறிந்ததேவனும், ரிபுவு (வேலையிற்றிறமை வாய்ந்தவ னென்பது பொருள்) மான வக்கினி வணங்கத்தக்க ஒரு அழகிய நாமத்தைத் (ரூபத்தை யென்பார் மேனுட்டாசிரியர் ஜலத்தை யென்பார் ஸாயணர்) தனக்காக ஏற்படுத்திக் கொண்டான். விஸ்தாரமாக நின்று, தூங்குவதுபோலச் சாந்தஜ்வாலையோடு கூடியிருப்பினும், அவனது சருமம் அல்லது ரூபம், நெய்யூற்றி யொளிரும் நெருப்புப் போலவே விளங்கும். அவ்வக்கினி அவ்வுருவத்துக்கு ஒருபழுதும் நேராதபடி அந்தஸ்தானத்தைச் சாக்கிரதையாகக் காப்பாற்றுகிறான்—(எ-று.) ரிபு, வேலையில் திறமை வாய்ந்தவன் என்பது பொருள்; மஹான் என்பர் ஸாயணர்.

7. விரும்புறு மங்கி, நெய்யோ டுற்றது விரிந்த கீர்த்தி
யரும்பிய, தெவருமாசைப் படுமிடம தனிற் சார்ந்தான்;
பெருஞ்சுட ருள்ளோன்சுத்தன்பாவகன்மகிமைவாய்ந்தோ
னரும்பெற லிருதாய் மாரை யடிக்கடி புதுப்பிக்கின்றான்.

(இ-ள்.) பலராலும் விரும்பப்படும் அக்கினி, நெய்யோடு கூடியதும், பரந்த புகழ்க் கீதங்களோடு கூடியதும், எவருமாசைப் படத்தக்கதுமான விடத்திற் போயமர்ந்தான். பேரொளியோடு கூடியவனும், சுத்தனும், பொருள்களைத் தூய்மைப் படுத்துபவனும், மகத்துவனுமான அவ்வக்கினி தியாவாப்பிருதிவிகளாகிய இரண்டு தாய்மார்களையும் அடிக்கடி புதிப்பிக்கிறான்—(எ-று.)

## மண்டலம் 3 சூக்தம் 5.

8. தற்பொழு தகித்தோன், கீழ்நோக் கோடுறுநீரிற்,சோபை
முற்படப் பலன் றரப்பக்கும்புல் நெய்யினால் வளர்த்தகாலை
பொற்பொடு கனன்று ளேடதிக்களால்; இருபிதாக்க
ளற்பகட்டினிற் றங்குற்ற வக்கினி யெம்மைக் காக்க.

(இ-ள்.) ஸத்யோஜாதனாகிய அக்கினி, கீழ்நோக்கிச் செல்லும் தண்ணீரைப்போல அழகு தோன்றுமாறு, ஸத்திய பலனைத்தரும் தருப்பையானது நெய்யைச் சொரிந்துத் தன்னை வளர்த்தபோது, ஓஷதிகளாகிய ஸமித்துக்களால் நன்றாக வொளிவிட்டு வளர்ந்தான். இருபிதாமார்களாகியதியாவாப்பிருதிவிகளின் அன்பு வாய்ந்த மடியிலுள்ள அக்கினி எங்களைக் காக்கட்டும்—(எ-று.)

9. துதியுற்றுச் சமித்தாலோங்கி மகத்துவந் தோய்ந்தோன்,பூமி
வதியுற்ற நாபி தன்னில் வதிந்து பின் னந்தரத்தி
னுதியுச்சத்தொளிர்ந்தான்;அங்கி,தேவரை,நண்பன்போற்
றுேன்
விதியுற்ற தூதன் மாதரிச்சுவான் மகத்திற் சேர்க்க.

(இ-ள்.) எங்களாற் றுதிக்கப்பெற்றவனும் ஸமித்துக்களால் மகத்துவத்தை யடைந்தவனுன அக்கினி, பூமியின் மீது உத்தர வேதியாகிய மத்தியஸ்தானத்தில் தங்கிப்,பின் ஆகாய வுச்சிவரையில் மேனோக்கிப் பிரகாசித்தான். எல்லாருக்கும் நண்பனும், எல்லாராலும் துதிக்கப்பட்டவனும், தேவதூதனும், மாதரிச் வானும் ஆகிய அக்கினி தேவர்களை யக்ஞதலத்துக்குக் கொண்டுவரட்டும்—(எ-று,) மாதரிச்வான் அந்தரிட்சத்தில் வசிக்கும் ஸூர்யன், அல்லது அரணிக் கட்டைகளில் தோன்று மக்கினி எனஇரு பொருள்படுமென்பார் ஸாயணர். ஈண்டு மாதரிச்வான் என்ற சொல்லை அக்கினியென்ற பொருளிலேயே உபயோகித்துள்ளார். இச்சொற்கு வாயு முதலிய வேறு பொருள்களுமுண்டெனவறிக. மண். 1. சூக். 31. செய். 3பார்க்க.

10. மகத்துவ னங்கி சோதிதம்மி லுத்தம னுகத்தை
வகித்துளதேசாற்றம்பித துயர்ந்துறத் தாங்கினுனல்,
குகைக்கனுற் றிட்ட வவ்ய வாகனைப் பிருகு நின்று
முகப்புற மாதரிச்சு வானு மூட்டிட்ட போதே.

(இ-ள்.) பிருகுக்களாகிய ஆதித்யரச்மிகளி னின்றும்,மறைவாக வசித்திருந்த ஹவ்ய வாஹனனாகிய அக்கினியை மாதரிச்வானாகியவாயு வெளிப்படுத்தி மூட்டிவிட்டபோது, மகத்துவனும், சோதிகளி லுத்தமனுமான அக்கினி தனது தேஜஸ்களால் ஸ்வர்க்கத்தை மேலே ஸ்தம்பாகாரமாக நிற்கும்படி தாங்கினன்—(எ-று.)

11. அங்கியே, பலகன்மத்தன், பசுவினை யளிப்பாள், பூமி
யென்குறு மிளையைப் போற்றேற் கீந்திடாயென்றுமோங்க;
பொங்குறு தனயர்பேரரெங்கட்குப் பொருந்தத் தோன்ற;
அங்கியே, யுனது நன்மை யருண்மதி யெம்மைச்சார்க.

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8.

(இ-ள்.) அக்கினியே! பலவித கர்மங்களோடு கூடியவளும், பசுச்செல்வத்தைத் தருபவளும், இளையுமாகிய பூமியை ஸ்தோத்திரங்களைக் கூறியழைப்பவனுக்கு என்றும் நிலைத்திருக்கும்படி யருள்வாயாக. எங்களுக்கு வம்சவிருத்தியைச் செய்கின்ற புத்திர பௌத்திரர்கள் பிறக்கட்டும். அக்கினியே! உன்னுடைய அநுக்கிரக புத்திகள் எம்மைச் சாரட்டும்—(எ-று.)

வருக்கம் 25.

## 240 (6.) மண்டலம் 3 அநுவாகம் 1 சூக்தம் 6.

11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: விசுவாமித்திரன்; வடமொழிச்சந்தம்: திருஷ்டுப்; தேவதை: அக்கினி.

1. வினையுளீர், தேவ பத்தி மிகுந்துளீர் மறைகள் தூண்டப்
புனைவுறு சுருக்குத்தேவர் வயிற் பொருந்துவதைச்சேர்த்தீர்;
அனமுளவது தென்பக்க லணைந்துபின் கிழக்கே செல்லும்
நனர்நெயி னோங்கி யங்கிக் கவியினைத் தாங்கிக் கொண்டே.

(இ-ள்.) யக்ஞகர்மத்தோடு கூடியவர்களே! தெய்வபக்தி மிகுந்தவர்களே! மந்திரங்களாற் பிரேரேபிக்கப் பட்டவர்களாய்த் தேவர்களிடத்து விரும்பிச் செல்லுஞ் சுருக்கைக் கொண்டு வருவீர்களாக. அன்ன பலமுள்ளதும், நெய்யோடோங்கி அக்கினிக்கு அவியைத் தாங்கிச் செல்வதுமான அச்சுருக்கு ஆஹவநீயத்தின் தட்சிணபாரிசத்துக்கு வந்து அங்கிருந்து கிழக்கு நோக்கிச் செல்லும்—(எ-று.)

2. பிறந்தது மங்கி வேகத் துசோதசி தமைப் பூரித்தாய்;
சிறந்த வற்றிற்கு மேலாய்ச் செறிந்தனை வணங்கத் தக்காய்;
திறந்தெரி மகிமையாலுன் வன்னிக ளெழுநா வுள்ள
சிறந்து செல்லுக வான்றன்னிற் பூமியிற் பின்னர் நன்கே.

(இ-ள்.) அக்கினியே! பிறந்தவுடனே நீ தியாவாப்பிருதிவிகளை உனது ஒளியினால் நிறைத்தாய். மேலும், பூஜிக்கத் தக்க உத்தமனே! நீ யவற்றிற்கு மேலாகவும் விளங்கினாய்; உனது மகிமையினால் உன்னுடைய எழு நாக்குக்களோடு கூடிய வஹ்நிகள் வானத்திலும் பூமியிலும் நன்றாகச் செல்லட்டும்—(எ-று.) வஹ்நிகள், சுடர்கள்.

3. விண்ணொடு புவியும் யக்ஞத்தேவரும் விழைந்தோ தாவாய்
மண்ணினா ருன்னை யாக மனைதொறும், தேவகாம
நண்ணிய மனிதர்நாடி யவிபெறுங் குடும்பத் தோர்கள்
வெண்ணில வொளிரு முன்றனொளியினைப் புகழ்ந்த வேளை.

(இ-ள்.) தேவகாமிகளும், மநுஷ்ய சம்பந்த முள்ளவர்களும், அவிப்பொருள்களோடு கூடியவர்களுமான பிரஜைகள் வெண்மையான தேஜஸோ

## மண்டலம் 3 சூக்தம் 6.

டு விளங்கும் உன்சோதியைப் புகழ்ந்தபோது,பூமி வானங்களும், யக்ஞார்ஹ ரான தேவர்களும் யாகவீடுகள் தோறும் உன்னை ஹோதாவாக அமைத்தார்கள்—(எ-று.)

4. பாந்து நிற்பவர் சமானப் பன்னியர் துன்ப மற்றோர்
நிரந்தர மடிவிசாலச் சரையிலாற் கமுகந் தன்னை
வரம்பெறக் கறந்தளிக்கு மாக்களாம் புவிவானப்பட்
டிரம்பெற நிலைத்தா னன்பன் மகத்துவன் பெருந்தலத்தே.

(இ-ள்.) விசாலமாக விரிந்து நிற்பவர்களும், ஸூர்யனுக்கு ஒத்த இரண்டு பத்தினிகளைப் போலுள்ளவர்களும்,பிறரால் இடுக்கண் படுத்த முடியாதவர்களும், பேரடியோடு கூடி மூப்பிலானாகிய அக்கினிக்கு நிரந்தரமாக அமிர்தத்தை யல்லது உதகத்தைக் கறந்தளிக்கும் உபயபசுக்களுமாகிய தியாவாப்பிருதிவிகளின் மத்தியில் மகிமை வாய்ந்த தனது ஸ்தானத்தில், யஜமனர்களால் விரும்பப்படுபவனும், மஹானுமாகிய, அக்கினி உறுதியாக நிலைத்தமர்ந்தான்— எ-று.)

5. விரத முன்னவை மகத்வ மேவிய வாகு, மங்கி;
சரதமார் மகத்து வத்தோய், வலிமைபா லுமோதசீயைப்
பரவுற விரித்தாய்; தோற்ற மெய்தவுந் தூத னானாய்;
விரவினுப் நேதாவாக மாந்தர்பாற் காளை நீ,ய.

(இ-ள்.) அக்கினியே! உனது விரதங்கள் (அல்லது செய்கைகளென்பார் மேனாட்டாசிரியர்) மகத்துவம் பொருந்தியவையாம். மஹானே! உனது வலிமையினால் தியாவாப்பிருதிவிகளை விசாலமாக விரியச் செய்தாய். பிறந்ததும் தூதனாக வானாய்.காளையே! மாந்தர்களுக்கு நேதாவாகப் பொருந்தினாய்—(எ-று) மாந்தர் யஜமானர்களென்றும், நேதா பலப்பிராபகனென்றும் ஸாயணர் உரை கூறுவர்.

### வருக்கம். 26.

6. நெய்துளிப்பன சிவந்த நீளுளைப் பரி யிரண்டை
மெய்புறு மகக்கயிற்று னுகத்தினிற் புணைக்க;பின்னர்
மொய்புறு மெல்லாத் தேவர்தம்மையுந் தேரிற் சேர்க்கல்;
கையறு பூசை யேய்க்க, தேவனே, பிறப்புணர்ந்தோய்!

(இ-ள்.) நெய்யைச் சிந்துவவும், சிவந்த நிறமுள்ளனவும், நீண்ட பிடர்மயிரோடு கூடியவுமான இரண்டு குதிரைகளையும், ஸத்திய பலனோடு கூடிய யாகமாகிய கயிற்றினுல் தேர் நுகத்திற் கட்டுவாயாக.தேவனே! ஜாதவேதஸனே! பிற்பாடு மொய்த்துள்ள எல்லாத் தேவர்களையும் அத்தேரிற் கூட்டிக் கொண்டுவருவாயாக. அவர்களுக்கு நல்ல வழிபாடுகளை யமைப்பாயாக—(எ று.) கையறவஞ்சனையற்ற.

7. திவத்தினினின்று முன்றன் றேசுக்க ளொளிர்ந்த வின்டே;
நிவப்புடன் கழிந்தவைக ளேற்றமொளி நிமிர்ந்து நின்றாய்;

## அஷ்டகம் 2 அத்தியாயம் 8.

உவப்புடன் றங்க ளோதா, வங்கியே, வனத்தை யுற்றுக்
குவிப்புடன் விருப்பினோடு மெரிப்பதைப் புகழ்ந்தார் தேவர்.

(இ-ள்.) திவமாகிய சூரிய னினின்றுங்கூட உனது சுடர்களீண்டு வந்து ஒளிவீசின. புராதனமாகப்போன விடியற்காலங்களி லெல்லாம் நீ யுனது சுடர்களை வீசி நின்றாய். அக்கினியே! தங்களுடைய ஹோதாவாகிய நீ ஆரண்யத்திற் புகுந்து விருப்பத்தோடு அவ்வனத்தை எரிக்கும்போது தேவர்கள் உன்னைப் புகழ்ந்தார்கள்—(எ-று.)

8. பரந்த வந்தரத்தி லின்பம்பல்குவோர், விண்ணிற் காந்தி
விரிந்த சாரிற் களிப்போர், வணங்குதற் குரியர், நன்கே
தெரிந்தழைகாலைச் சார்வோர், தேருளோர், தந்தையன்னார்,
புரிந்த வக்கினியே யுன்ற னசுவங்கள் பூண்ட தேவர்.

(இ-ள்.) அக்கினியே! விசாலமான அந்தரிட்சத்திற் களிகொள்பவரும், விண்ணில் ஒளிபரந்த விடத்தி லின்படைந்து நிற்பவர்களும், வணங்கத் தக்கவர்களும், நன்றாக அழைக்கப் பெறும்போது வருபவர்களும், தேரோடு கூடியவர்களும், பிதாக்களைப் போன்றவர்களும் உனது குதிரைகளை யடைந்தவர்களுமான தேவர்கள்—(எ-று.) அவர்களது கூட்டத் தோடுவருவாயாக என அடுத்த செய்யுளிற் கொண்டு முடிக்க.

9. இவர்களோ டங்கி யோர்தே ரேறியன் றேற்பல் றேரி
விவர்தர நின்றே யெம்பா லேகுக, உனது மாக்கள்
தவவலி யுடைய; முப்பான் மூவராந் தேவர் தம்மை
யவர்மனைவியரோ டுன்டையணைக்க,வார்த்துக வன்மைக்கே.

(இ-ள்.) மேற்செய்யுளிற் குறிக்கப்பட்ட குண விசேஷணங்களோடு கூடிய இத்தேவர்களோடு ஒரு தேரி லேறியாவது அல்லது பலதேர்களிலே றியாவது எம்மை நோக்கி வருவாயாக. எவ்வகையாக வருவதற்கும் உனது குதிரைகள் மிக்க வலிமை யுடையனவாம். முப்பத்து மூன்று தேவர்களையும் அவர்களது பத்தினி மார்களோடும் பலம் பெறுமாறு இங்கு கூட்டிக்கொண்டுவந்து சோமங் குடிக்கச் செய்வாயாக—(எ-று.) தேவர் முப்பத்து மூவராவார், வசுக்கள் எண்மர், ருத்திரர் ஏகாதசர், ஆதித்தியர் துவாதசர், அசுவினியர் இருவர், ஆக முப்பத்துமூவராம். அசுவினியர்க்குப்பதில் பிரஜாபதி 1 வஷட்காரம். 1 என்பார் வில்ஸன் என்பவர். மண். 1சூக்.34 செய். 11 பார்க்க

10. எவனது யக்ஞந்தோறு மிடமக லுரோதசிக்க
ணிவமுறு மபிவிருத்தி நேடியே யிசையா நிற்கு,
மவனிவ ஹோதாவாவான்; ரிதத்துதித்தோன், ரிதத்தோ
னுவனுறு மழகன் மெய்யன் மகத்தின் முன்னணையா நின்

(இ-ள்.) எவனது யக்ஞங்களி லெல்லாம் விசாலமாகப் பரந்த பூமி வானங்களும் அபிவிருத்தியைக் கருதி ஸ்தோத்திர கீதங்களைப் பாடுமோ அவனே (அவ்வக்கினியே யென்க.) ஹோதாவாம். ரிதத்திற்றோன்றியவனும்,

## மண்டலம் 3 சூக்தம் 6.

ரிதத்தோடு கூடியவனும், நல்ல ரூபத்தோடு கூடியவனும், உண்மை பேசுபவனுமாகிய வவ்வக்கினியினது யாகத்தில் முன்வந்து அநுகூல காரிகளாகத் தேவர்கள் நின்றனகள்—(எ-று.) ரிதம், யாகம், ஸத்தியம், ஒழுங்கு, நீர். சூரியன் இவற்றுள் எதனை யேனுங் கொள்க.

11. அக்கியே, பலகன்மத்தள், பசுவினை யளிப்பாள், பூமி
யென்குறு மினையைப் போற்றேற் கிந்திடா யென்றுமோங்க;
பொங்குறு தனயர் பேர ரெங்கட்குப் பொருந்தத் தோன்ற;
அங்கியே, யுனது நன்மை யருண்மதி யெம்மைச் சார்க.

(இ-ள்.) அக்கினியே! காமங்களோடு கூடியவளும், பசுச் செல்வத்தைத் தருபவளும், இளையுமாகிய பூமியை, ஸ்தோத்திரங்களைக் கூறியழைப்பவனுக்கு என்றும் நிலைத்திருக்கும்படி யருள்வாயாக. எங்களுக்கு வம்சவிருத்தியைச் செய்கின்ற புத்திரபௌத்திரர்கள் பிறக்கட்டும். அக்கினியே! உன்னுடைய அநுக்கிரக புத்திகள்எம்மைச் சாரட்டும் —(எ-று.)

வருக்கம் .27.

ஆகச்செய்யுள் 1147

இவ்விரண்டு அஷ்டகங்களுக்கு மாகச் சேர்ந்து மொத்தம் செய்யுள் 2480.

### எட்டாவது அத்தியாயம் முற்றும்.

---

## இரண்டாவது அஷ்டகம் முற்றிற்று.

---

இடையூறெல் லாமொழிந்தே னின்பம் புணர்ந்தேன்
றடையாவு மன்றே தவிர்ந்தேன் — கடைபோகுஞ்
சீர்விழைவார் செந்நெறியே செம்மையுறக் கைக்கொண்டேன்
யார்விழையா ரிப்பேற் றினை.

வேதங் கதியென்னு மென்னுணர்வைப் பல்லுரையாம்
போதந் தருதாழி பூட்டிநவ —— நீத மெனுங்
கட்டுரையோ டிந்நூலைக் கண்டே னருளாளர்
தொட்டுணருந் தூய்மை சுவைக்க.

## வேத புருஷாய மங்களம்.

---

# பரிசிஷ்டங்கள்.

அதாவது

## விட்டுப்போனவை.

இரண்டாவது அஷ்டகம், ஐந்தாவது அத்தியாயம், 15வது வருக்கத்தின் பின் 8 இருக்குக்கள் பரிசிஷ்டமாம் அல்லது விட்டுப் போயினவாம். அதாவது முதன் மண்டல முடிவில் 8 இருக்குக்கள் அநுக்கிரமணிகைக்காரர் ஒவ்வாதவையாய்ச் சேர்ந்துள்ளன என்க. அவ்விருக்குக்கள் நவீனமாக இடைப்புகுத்தியன வென்பதை அவ்விருக்குக்களின் நடையே காட்டும். அவற்றைக் கவிப்படுத்தலிற் பயனின்றாம். அவற்றின் பொழிப்புரை மாத்திரம் ஈண்டு காட்டப்படுகிறது:

"விருச்சிகத்தை இருப்புத்தடியாலும், வருகிற பாம்பைத் தண்டத்தினாலும் அடித்துக் கொல்லுகிறேன். எல்லாப் பக்கத்திலும் பார்த்துச் செல்கிற என்னைக் அவைகொல்லுகிறதில்லை பாம்புகளே! சூரியனது ரதவேகத்தினாலும் விஷ்ணுவினது பாகு பலத்தினாலும் கருடனது வீழ்வினாலும்பயந்து பூமிக்குள் போய்விடுங்கள். கருடனுடைய பிறப்பினாலேயே மூன்று லோகங்களும்நடுங்கின; பெரிய மலைகளும், வனங்களும், சோலைகளும் நடுங்கின. சூரியனும், சந்திரனும் நட்சத்திரங்களு மில்லாத வானம் பிரகாசிப்பதில்லை; தேவதைகளுடைய பயத்தினால் காற்றுங் கடந்து செல்வதில்லை. ஸர்ப்பமே! ஜாக்கிரதை, ஜாக்கிரதை, தூரப்போவாயாக. ஜநமேஜயனது யாகமுடிவிலே சொல்லப்பட்ட ஆஸ்திக வசனத்தை நினைத்துக் கொள்ளுவாயாக. அவ்வாஸ்திகவசனத்தைக் கேட்ட பின்னும் எந்த ஸர்ப்பமானது விலகிப்போவ தில்லையோ அதன் தலையானது சிம்சவிருட்சத்தினது பழத்தைப்போல நூறாக வெடித்துப் போகிறது. காலையில் நர்மதைக்கு நமஸ்காரம்; நிசியிலும் நர்மதைக்கு நமஸ்காரம். நர்மதையே! உனக்கு நமஸ்காரம்; விஷ ஸர்ப்பக்கடியிலிருந்து என்னைக் காப்பாயாக. ஜரத்காருவுக்குப் பிறந்த ஜாத்கன்னிகையான பாம்புகளாயிருக்கினும் தூரப் போகட்டும்."

ஈண்டு ஜநமேஜயனது ஸர்ப்பயாகம் சூசிப்பிக்கப்படுகிறது. ஜாத்காரு வென்பது ஸர்ப்பதேவதை யெனத் தெரிகிறது.

இரண்டாவது அஷ்டகம், 8வது அத்தியாயம் 12வது வருக்கத்துக்குப் பின் அதாவது 2வது மண்டல விறுதியில் 5இருக்குக்கள் பரிசிஷ்டம் அதாவது விடுபட்டுப் போயின. இவ்விருக்குக்கள் முதல் மண்டலவிறுதியில்விட்டுப் போனதாகச் சொல்லப்பட்ட இருக்குக்களைக் காட்டிலும் நடைச் சிறப்புள்ளன. இவற்றிற்குப் பொழிப்பு வருமாறு:

"கபிஞ்சலமே! தெற்கில் வந்து மங்கலமான குரல்தருவாயாக. வடக்கிலும் வந்து அப்படியே செய்க. கிழக்கிலும் மேற்கிலும் எங்களுக்காக அவ்வகைக்குரல்தருவாயாகக. புத்திரர்களிடத்தும் வீட்டிலும் மங்கலமாகக் குரல் கொடுப்பாயாக. எங்களுக்குக் காவலான நன்மொழியையும், அபயக்குரலையும் தருவாயாக. எல்லா விடத்தும் எங்களுக்கு நற்சகுனமாகக் கூவுவாயாக. எங்களைப் பகைவரற்றவர்களாகவும் மங்கல முள்ளவர்களாகவும் கிழக்கிலும்தெற்கிலும்செய்வாயாக. எப்பொழுதும் பயமற்றவர்களாய்மேற்கிலும் வடக்கிலும், கிரகத்திலும் செய்வாயாக. ஜயதுந்துபியைப்போலச் சகுந்தமாகிய கபிஞ்சலமே! சதபத்ரத்திற் றெற்காக விருந்து எங்கள் பட்சமாகப் பேசுவாயாக."

## ரிக்வேத ஸம்ஹிதை.

காத்தியாயனர் இவ்விருக்குக்களை யெல்லாம் வேதரிக்குக்களாகக் கணிக்காமல் அவற்றைத் தனியே எட்டாவது அஷ்டகத்திற் சேர்த்துள்ளார். இம்மாதிரியே ஏறக்குறைய எல்லா அஷ்டகங்களிலும் பரிசிஷ்டங்களுண்டு. வாலகில்யசூக்தங்கள் பதினொன்றும் பரிசிஷ்டங்களைச் சேர்ந்தவையே. அவை ஆறாவது அஷ்டகத்திலுள்ளன.

---

இவ்வஷ்டகத்திலுள்ள சூக்தங்களைக் கக்ஷீவான் முதல் 12 ரிஷிகள் கண்டுள்ளார். இதனிடத்துத் திருஷ்டுப் முதல் 19 சந்தஸ்களும் 117 சூக்தங்களும் உண்டு. இவ்வஷ்டகத்திற் பாடல்பெற்ற தேவதைகள் விசுவதேவர்கள் முதல் முப்பத்து நான்கு தேவதைகளாம். இவருள் இணைத்தேவர்கள் இந்திராபர்வதர்கள் முதல் பதின்மராம்.

| அத்தியாயம். | வருக்கம். | சூக்தம். | வடமொழிரிக் | தமிழ்ச்செய்யுள் |
|---|---|---|---|---|
| 1-வது | 26 | 15 | 137 | 137 |
| 2-வது | 27 | 21 | 143 | 143 |
| 3-வது | 26 | 6 | 132 | 132 |
| 4-வது | 29 | 18 | 142 | 142 |
| 5-வது | 29 | 16 | 159 | 159 |
| 6-வது | 32 | 15 | 157 | 157 |
| 7-வது | 25 | 13 | 137 | 137 |
| 8-வது | 27 | 13 | 140 | 140 |
| ஆக அத் 8க்கு | 221 | 117 | 1147 | 1147 |
| ஆக அஷ்டகம் 2க்கும் அத். 16 | 486 | 938 | 2510 | 2480 |

## 2வது அஷ்டகத்தின் சூக்த அட்டவணை.

| சூக்தம். | | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்ச்செய். |
|---|---|---|---|---|---|
| | | | **அத்தியாயம் 1.** | | |
| எண். | மண். 1 | | | | |
| 122 | 122 | கக்ஷீவான். | விசவதேவர்கள் | திருஷ்டுப், விராட் ரூபம். | அறுசீர்க்கழி நெடில். |
| 123 | 123 | ஷை | உஷஸ். | திருஷ்டுப். | ஷை |
| 124 | 124 | ஷை | ஷை | ,, | ,, |
| 125 | 125 | ஷை | ஸ்வநயன். | திருஷ்டுப், ஜகதி. | ஷை ஷை 4 காய்ச்சீருள்ளது. |
| 126 | 126 | கக்ஷீவான், பாவயவ்யன். | பாவயவ்யன், ரோமசா. ரோமசா. | திருஷ்டுப் அநுஷ்டுப். | ஷை கலிநிலைத்துறை. |
| 127 | 127 | பருச்சேபன். | அக்கினி | அத்யஷ்டி அதிதிருதி. | எண்சீர்க்கழி நெடிலில் இரண்டுவகை. |

## இரண்டாவது அஷ்டக அட்டவணை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 128 | 128 | ,, | ,, | அத்யஷ்டி. | எண்சீர்க்கழி நெடில். |
| 129 | 129 | ,, | இந்திரன், இந்து. | அத்யஷ்டி, அதிசக்வரி, அஷ்டி. | எண்சீர்,எழுசீர்.எண்சீர். |
| 130 | 130 | ,, | இந்திரன். | அத்யஷ்டி, திருஷ்டுப். | 8 சீர், 6 சீர். |
| 131 | 131 | ,, | ,, | அத்யஷ்டி. | எண்சீர். |
| 132 | 132 | ,, | இந்திரன், இந்திரனும் பர்வதனும். | ,, | ,, |
| 133 | 133 | ,, | இந்திரன். | திருஷ்டுப் அநுஷ்டுப், காயத்திரி, த்ருதி, அத்யஷ்டி. | 6சீர், கலிநிலைத்துறை, கலிவிருத்தம். 8சீர், எண்சீர். |
| 134 | 134 | ,, | வாயு. | அத்யஷ்டி, அஷ்டி. | எண்சீர் இருவகை. |
| 135 | 135 | ,, | வாய, வாயுவீந்திரர், | ,, | ,, |
| 136 | 136 | ,, | மித்திரா வருணர். | அத்யஷ்டி, அஷ்டி. | 8 சீர், 6 சீர். |

## இரண்டாவது அத்தியாயம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 137 | 137 | ,, | ,, | அதிசக்வரி. | எழுசீரின் ஒருவகை. |
| 138 | 138 | ,, | பூஷன். | அத்யஷ்டி, அஷ்டி. | 8 சீரின் ஒருவகை. |
| 139 | 139 | ,, | விசுவதேவர்கள், மித்திராவருணர், அசுவினிகள், இந்திரன், அக்கினி,மருத்துக்கள், இந்திராக்கினி, பிரஹஸ்பதி. | அத்யஷ்டி, பிரஹதி, திருஷ்டுப். | 8 சீர் ஒருவகை, 6 சீர் ஒருவகை 6 சீர்க்கழி நெடில் |
| 140 | 140 | தீர்க்கதமஸன். | அக்கினி. | ஜகதி, திருஷ்டுப், | 6சீரின் இருபேதம். |
| 141 | 141 | ,, | ,, | ,, | ,, |
| 142 | 142 | ,, | ஆப்ரீக்கள், இந்திரன், அக்கினி, | அநுஷ்டுப் | கலிநிலைத்துறை. |
| 143 | 143 | ,, | அக்கினி. | ஜகதி, திருஷ்டுப். | 6 சீரின் இருபேதம். |
| 144 | 144 | ,, | ,, | ஜகதி. | 6 சீர் ஒருவகை. |
| 145 | 145 | ,, | ,, | ஜகதி, திருஷ்டுப். | 6சீர் இருபேதம். |

